உ

கணபதி துணை.

சங்கமருவிய எட்டுத்தொகை நூல்களுள்

ஆறவதாகிய

# கலித்தொகை

(பாலைக்கலி, குறிஞ்சிக்கலி.)

## மூலமும்

மதுரையாசிரியர்

பாரத்துவாசி

நச்சினார்க்கினியருரையும்

இவை

இடையாற்று மங்கலம்

வைத்தீச்சுவரையரவர்கள் குமாரரும்

சென்னை,

பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய

**அனந்தராமையரால்,**

நன்கு பரிசோதித்து,

தாம் புதிதாக எழுதிய ஆராய்ச்சிக் குறிப்புடன்

சென்னை

நோபில் அச்சுக்கூடத்தில்,

பதிப்பிக்கப்பெற்றன.

1925

உ

கணபதி துணை

# முகவுரை.

சீரார் கலித்தோகைக்குச் சேவ்வன் குறிப்பெழுதி
நீரார் கலிசூழ் நிலத்தவர்க்குப்—பேரார்வ
முற்றளிக்க வேண்டுளமே * யோர்மருப்பன் றாண்முதலைப்
பற்றளிக்கு மக்கற் பகம்.

கலித் தொகை யென்பது, சங்கச் செய்யுட்களென்று தமிழ்மக்க ளால் நன்குமதித்துக் கொண்டாடப்பெறும் கடைச்சங்ககாலத்துப் பனுவல்களுள் ஒரு பிரிவாகிய எட்டுத்தொகையில் ஆறாவதென்பர்.

"நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் † போற்றுங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை"

என்னும் வெண்பாவின் வைப்பு முறை இதற்குக் காரணமாகும்.

இதனை மேற்கணக்கினுள் ஒன்றென்பர் பன்னிரு பாட்டிய லுடையார்; இசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்த தென்பர் நச்சினார்க்கினியர்.

இது சொற்சுவை பொருட்சுவைகளில் மிகச் சிறந்தது.

"கற்றறிந்தார் போற்றுங் கலி"—என்றும்

‡"திருத்தகு மாமுனிசிந் தாமணி கம்பன்
விருத்தக் கவிவளமும் வேண்டேம்—திருக்குறளோ

---

*ஓர் மருப்பனென்றது, திருவல்லிக்கேணிப் பெரியதெருவில் எழுந் தருளியிருக்கும் கற்பக விநாயக மூர்த்தியை.

(பி-ம்) † ஏத்துங் கலியே யகம், கூறுங் கலியோடு, சொல்லுங் கலியோடு.

‡ முகவுரையில் இக்குறியிடப்பெற்ற வெண்பாக்கள், சில ஏட்டுப் பிரதி களின் முன் உள்ளன. இவை வித்தியாபானு செந்தமிழென்னும் பத்திரிகை களிலும் சிலவேறுபாட்டோடு முன்பு வெளிவந்துள்ளன. இவ்வெண்பா வொன்றும் சீவகசிந்தாமணியினிறுதியில் "திருத்தக்க மாமுனிசிந் தாமணி கம்பர் விருத்தக் கவித்திறமும் வேண்டே—முருத்தக்க, கொங்குவேண் மாக் கதையைக் கூறேங் குறளணுகே, மெங்கெழிலென் ஞாயிறெமக்கு" என மிக்க வேறுபாட்டோடு காணப்படுகிறது.

கொங்குவேண் மாக்கதையோ கொள்ளேம் நனியார்வேம்
பொங்குகலி யின்பப் பொருள்"—என்றும்

அறிஞர்கள் பாராட்டுவாரானது இச்சிறப்புப் பற்றியன்றே!

இது முதலிற் கடவுள் வாழ்த்தையும், பின்பு பாலை முதலிய ஐந்திணைப் பெயர்களாலமைந்த ஐந்து பகுதிகளையுமுடையது.

இவற்றுள், முதலிலுள்ளது கடவுள் வாழ்த்துச் செய்யுளொன்று. அது மதுரையாசிரியர் நல்லந்துவனாரால் இயற்றப் பெற்றது. பின்புள்ள ஐந்து பகுதிகளுள்;

முதலாவதாகிய பாலைக்கலி ௩௫ செய்யுட்களை யுடையது. இதனை இயற்றியருளியவர் சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோனென்பார்.

இரண்டாவதாகிய குறிஞ்சிக்கலி ௨௯ செய்யுட்களையுடையது, இதனை இயற்றியருளியவர் கபிலனார்.

மூன்றாவதாகிய மருதக்கலி ௩௫ செய்யுட்களை யுடையது. இதனை இயற்றியருளியவர் மதுரை மருதனிள நாகனார்.

நான்காவதாகிய முல்லைக் கலி ௧௭ செய்யுட்களை யுடையது. இதனை இயற்றியருளியவர் சோழ னல்லுருத்திர னென்பார்.

ஐந்தாவதாகிய நெய்தற்கலி ௩௩ செய்யுட்களை யுடையது. இதனை இயற்றியருளியவர் கடவுள்வாழ்த்துச் செய்யுளை இயற்றிய நல்லந்துவனாரே.*

இவர்கள் வரலாறுகளும் இதன் உரையாசிரியர் வரலாறும் முழுப்புத்தகத்துடன் பின்னர் வெளிவரும்.

இது தொல்காப்பிய முதலிய நூல்களின் அகப்பொருட்பகுதிக்கு இலக்கியமாகஅமைந்துள்ளது; இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் முதலிய தொல்காப்பிய உரையாசிரியர்களாலும், இறையனா

* மேற்கூறிய கடவுள்வாழ்த்தும் பாலை முதலிய ஐந்து திணைகளும் இவ்வளவு இவ்வளவு செய்யுட்களையுடையன என்பது, "இறைவாழ்த்தொன் றேழைந்து பாலைநாலேழொன், றிறைகுறிஞ்சியின்மருத மேழைந்[து]-துறை முல்லை, யீரெட்டொன் றுநெய்த லெண்ணான்கொன்றைங்கலியாச், சேரெண்ணே மூவைம்பதே" என வித்தியாபானு பத்திரிகையில் வெளி வந்திருக்கும் வெண்பாவிலும் குறிக்கப் பெற்றுள்ளது.

நகப்பொரு ளுரையாசிரியராலும், பரிமேலழகராலும், நாற்கவி ராச நம்பியாலும், இலக்கணவிளக்க வுரைகாரராலும், அகப்பொருட் பகுதிக்கும்; இவர்களாலும் சேனாவரையராலும், கல்லாடராலும் சிலப்பதிகாரம் நேமிநாதம் நன்னூல் யாப்பருங்கலவிருத்தி யாப்பருங் கலக் காரிகை வீரசோழியம் மாறனலங்காரம் ஆகிய இவற்றினுரையா சிரியர்களாலும், பிரயோக விவேகநூலாராலும் மயிலேறும்பெருமாள் பிள்ளையாலும், சொக்கப்ப நாவலராலும், பிறராலும் சொற்பொரு ளாராய்ச்சிகளுக்கும் யாப்புக்கும் தத்த முரைகளில் பற்பல விடங் களில் மேற்கோளாகக் காட்டப்பெற்ற சிறப்பு வாய்ந்துள்ளது. அவற்றை அறிந்துகோடற்கு இந்நூலின் பலபக்கத்துமுள்ள அடிக் குறிப்புக்கள் உதவி செய்வனவாம்.

இக்கலித்தொகையில் ஒவ்வொருதிணையும் முதற்பொருள், கருப் பொருள், உரிப் பொருள் கொண்டு புணர்ந்துரைக்கப் பெற் றிருக்கும் அழகு தமிழறிஞர்களுக்கு மிக்கஇன்பத்தைத் தருவதாம். அன்றியும், இதன் முல்லைத்திணையிலுள்ள கலிப்பாக்கள் அசுரமண த்தின் ஒரு பகுதியாகிய ஏறுகோடற் செய்தியையும் குடிகளுக்குத் தம் அரசன்மாட்டிருந்த அன்பினிலையையும் அறிந்துகோடற்குச் சிறந்த கருவியாகும்.

இது பாவின் பெயரால் தொகுக்கப்பெற்ற நூலுக்கு, தண்டியலங் காரவுரையிலும் (சூ. ௪) இலக்கணவிளக்கவுரையிலும் (சூ. ௬௨௫) மேற்கோளாகக் காட்டப்பெற்றிருக்கிறது. இப்பாவின் இலக்கணம், 'அகத்தியமும் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூல்' என்று தொல்காப்பியம் புறத்திணையியல் ௩௫-ஆம் சூத்திரவுரையில் நச்சி னார்க்கினியர் எழுதியிருப்பதால் இவ்விரு நூலிலும் கூறப்பெற்றுள்ள தென்று அறியப்படுமாயினும் முன்னதிற் சில சூத்திரங்களேயன்றி மற்றவை இறந்தமையின், பின்னதாகியதொல்காப்பிய நூல்கொண்டே அறியத்தக்கதா யிருக்கிறது. அதிற் பெரும்பாலன இந்நூல் ௨௩-ஆம் பக்கத்திலுள்ள உரையில் வந்துள்ளன.

இதிலுள்ள செய்யுட்கள் ௧௫௦. இறையனாரகப்பொருளுரை யிலும், தொல்காப்பியவுரைகளிலும், இந்நூலுரையிலும் இத் தொகை இவ்வளவு தொகை யுடையதென்றேகூறப்பெற்றிருக்கிறது. இந்த ௧௫௦ செய்யுட்களும் கலியின்வகைகளே. இவற்றுள், ஒத்தா ழிசைக்கலி ௬௮; கொச்சகம் ௪௬, கொச்சக வொருபோகு௯;

+ கலிவெண்பாட்டு ௬ச; உறழ்கலி ௫. என்று, இக்கலித்தொகையின் ஒவ்வொரு பாடலின் உரையிறுதியிலுமுள்ள குறிப்பால் அறியப் படுகிறது. இவ்வகையின் கணக்கு இதற்கு மாறாகவும் வேறு சில நூலுரைகளிற் காணப்படும்.

இது சிருங்கார ரசமாகிய இன்பச்சுவையைத் தலைமையாகக் கொண்டதொரு தொகை நிலைச் செய்யுள். அஃதாவது ஒத்த அன்புடையரான தலைவனும் தலைவியுமாகிய இருவரும் தங்களுள் ஒருவர் பாலொருவர் அன்புசெய்த இயல்பைப் பண்டை நூல் வழக்கிற்கு அமையக் கூறுவது. தொல்லாசிரியர் கருத்து இக்கலிப்பா இச்செய்தி கூறுதற்கே உரித்தென்பதும் துன்பச் செய்தி கூறுதற்கு உரித்தன் றென்பதுமாம்; இவை:—

"இருவயி னொத்து மொவ்வா வியலினுந்
தெரியிழை மகளிரொடு மைந்தரிடை வருஉம்
கலப்பே யாயினும் புலப்பே யாயினு
மைந்திணை மரபி னறிவுவரத் தோன்றிப்
பொலிவொடு புணர்ந்த பொருட்டிற முடையது
கலியெனப் படூஉங் காட்சித் தாகும்"—என்றும்
"கலியே வஞ்சியிற் கையற வுரையார்"—என்றும்

முறையே* அகத்தியனாரும் பன்னிருபாட்டியலுடையாருங்கூறுதலால் அறியலாகும். ஆதலால் இத்தொகையில் அகப்பொருட்செய்திகள் மிக அழகுறப் பாராட்டப்பட்டிருக்குமென்பது கூறாமலே விளங்கும்.

அன்றியும், இஃது உவமை முதலியனவும் பிற செய்திகளுங்கூறு முகத்தால், அந்தணர், அரசர், அமைச்சர், வணிகர், வேளாளர்களும் பிறருமாகிய ஆடவரும்மகளிரும், இளமையிலும்முதுமையிலும்அறிந் தொழுக வேண்டிய பற்பல நீதிகளைக் கற்பித்து, தன்னைப் படித்த வரை நன்னெறிச் செலுத்தத் தக்க மேம்பாடுடையது. இதில் அறம் பொருள் முதலியவற்றின் சிறப்புக்களும், நல்லவர் தீயவர் பண்பு களும், விலங்கு, பறவை, மரம், செடி, கொடிகளினியல்புகளும், பல நூற் செய்திகளும், காலத்தின் தன்மையும் கூறப்பெற்றிருக்கின்றன. அன்றியும் இது தமிழ் நாட்டின் பண்டைக் கால ஒழுக்க வழக்கங் களையும், அக்காலத்து நிகழ்ச்சிகள் பலவற்றையும் அறிதற்கும் உய்த் துணர்தற்கும் பெருந்துணையாக உள்ளது.

---

* தொல். செய். சூ. ௧௨௧ 'ஒத்தாழிசைக்கலி' இளம். மேற்கோள்.

+ எட்டென்பர்; தொல். செய். 153, பேர்; ந

சில தொகை நிலைச் செய்யுட்களினிறுதியிற் கூறப் பெற்றிருத்தல் போல, இதனிறுதியில் இதனைத் தொகுத்தாரிவர், தொகுப்பித்தாரிவர் என்ற குறிப்பு இன்றேனும்,

‡"நாடும் பொருள்சான்ற நவ்வந் துவனுசான்
சூடுபிறைச் சொக்கன் றுணைப்புலவோர் — * தேடுவார்
கூட்டுணவே வாழ்த்தோடு கொங்காங் கலியினையே
†கூட்டினன் ஞாலத்தோர்க் கு"

என்பதனால், ஆசிரியர் நவ்வந்துவனார் கடவுள் வாழ்த்தையும் பாடிச்சேர்த்து இதனைத்தொகுத்தாரென்று தெரிகின்றது. முற்கூறியபடி பெருங்கடுங்கோன் முதலியவர்கள் பாலைத்திணை முதலியவற்றைப் பாடினாராயின் நவ்வந்துவனார் தொகுத்தாரென்று இங்கே கூறுவதிற் சிறப்பென்னை? சிறப்புறப் பொருந்துமாறு யாது? எனின் இவர், அவர்களும் தாமும் பாடிய பலதிணைக்குமுரிய கலிப்பாக்களில் ஒவ்வொருவர் பாடல்களையே ஒவ்வொரு திணைக்கு எடுத்துக்கொண்டு அத்திணைக்கண் அமைக்கத் தக்கவற்றையெல்லாம் அவரவர் பாடலிலிருந்தே நுணுகி ஆராய்ந்து சேர்த்தமைத்து ஐந்திணையையும் தொகுத்தார் என்னும் அருமை பற்றிப் போலுமென்க.

இங்ஙனம் தொகுத்ததில் ஐந்திணையும் விரவிக் கோக்கப் பெற்ற நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு போலாது, விரவாது கோக்கப் பெற்ற ஐங்குறுநூறு, அகப்பொருள் பற்றிய கீழ்க்கணக்கு நூல்கள் இலக்கண நூல்கள், இவற்றுள் ஒன்றிலேனும் || முதலிடம் பெறாத பாலைத்திணையை இவர் முதலில் நிறுவியதற்குக் காரணம், யாவரும் இத்திணையை முதலில் வைக்காமையால், இது முதலில் வருமோ வாராதோவென்று ஐயுற்றுமயங்கி வாராதென்று திரியவுணர்வார்க்கு அத்திரிபுணர்ச்சியை நீக்கல் கருதிப்போலும்; அன்றி, பாலை நானிலப் பொதுவாதலின், பொதுவை முற்கூறிச் சிறப்பைப் பிற்கூறுவதும் மரபென்பது பற்றி எனினுமாம்; வேறு பொருந்துவன உளவேனும் கொள்க. முதலில் இடம்பெறாது குறையுற்ற இத்திணை முதலில் இடம் பெற்றதற்கு முதல், இவருடைய கல்வி யறி வாற்றலே யாம். வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு வழக்குக் கிழுக்குமுண்டோ!

(பி-ம்) * தேடுபோர்ந்து கூட்டு, தேடிப் போந்து கூட்டு, தேடுவோர் கூட்டு.
(பி-ம்) † ஊட்டினன் ஞாலத் தவர்க்கு.
|| இந்நூல் ௯உ-ஆவது பக்கம் பார்க்க.

இவர் தொகுத்துக் கோத்தமுறை முற்கூறியமுறையேயென்பது நச்சினார்க்கினியர்† இந் நூலுரையில் எழுதியிருக்கும் வாக்கியத்தாலும்

‡“ போக்கெல்லாம் பாலை புணர்த னறுங்குறிஞ்சி
||யாக்கமளி யூட லணிமருத—நோக்கொன்றி
யில்லிருத்தன் முல்லை யிரங்கிய+போக் கோர்நெய்தல்
புல்லுங் ×கலிமுறை கோப்பு”

என்னும் வெண்பாவாலும் அறியப்படுகின்றது.

இங்ஙனம் தொகுத்தாரிவரென்பதை யடுத்துத் தொகுப்பித்தாரின்னவரென்பது கூறப்படாமையால் இவர் இதைப் பிறர் வேண்டத் தொகுக்காது தாமாகவேதொகுத்திருக்கலாமென்று தோற்றுகிறது.

சில தொகைகள் தொகுத்தவருடைய பாடலில்லாதனவாயும் ஒன்றிரண்டே யுடையனவாயும் இராநிற்க, இத்தொகை தொகுத்தவருடைய பாடல் ௩௪ உடையதாய்ச் சிறந்து விளங்குகின்றது.

இந் நூல்முழுவதுக்கும்பேருரையாளராகிய நச்சினார்க்கினியரால் உள்ளுறைப்பொருள் முதலிய நயங்களும் மெய்ப்பாடும் பயனும் பாவகையும் விளங்கச் சிறந்த உரை எழுதப்பெற்றிருப்பதனால் இது பலரும் பொருளறிந்து இன்புறுதற்குத் தக்கதாயிருக்கின்றது.

இத்தொகை காலம்நீட்டித்ததனால் ஏனைத்தொகைகள் அடைந்த சில சிதைவுகளை மூலம் உரை இரண்டினும் ஒரு சிறிதும் அடையாது, இன்னும் பல சுவடிகள் வடிவாய்க் காணும்படி யிருப்பதற்குக் காரணம். ‘இது குறையுறாது நின்று நிலவ.வேண்டும்’என்னும் இறைவன் திருவுளமாம்; தமிழ்மக்கள் செய்த தவப்பேறுமாம். இந் நிலைமையால் இது கற்றறிந்தார் போற்றுங் கலியாயுள்ளது.

இதனை மேற்கூறிய உரையுடன் ஸ்ரீமான் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள், ௧௮௮௭-ம் வருடத்திற் பதிப்பித்தார்கள். அதில், இது“நல்லந்துவனார் கலித்தொகை”என்று குறிக்கப்பெற்றிருந்தாலும்

---

† இந் நூல் ௧௨-ஆவது பக்கம் பார்க்க.

(பி-ம்) || “ஆக்கஞ்சே ரூட லணிமருதம்-நோக்குங்கா, லில்லிருத்தன் முல்லை யிரங்க னறுநெய்தல், சொல் விரிந்த நூலின் றொகை” என்பது நாற்கவிராச நம்பி அகப்பொருள்விளக்கஇறுதியில் உள்ளது. ஆக்கமணி யூட லமர்மருதம்.

(பி-ம்) + போக்கோ நெய்தல்.

(பி-ம்) × கலித்தொகை கோப்பு.

தொகை யென்பதற்குத் தொகுக்கப்பட்டதென்பது பொருளாத லாலும், எட்டுத்தொகையுள் இஃதொழிந்த மற்றவைகள் யாவும் பல புலவர்களாலேயே யாக்கப்பெற்றிருப்பதாலும், இதுவும் மேற்கூறிய படி ஐந்து புலவர்களாலேயே யாக்கப்பெற்று, பின்பு அவர்களுள் ஒருவராகிய நவ்வந்துவனாராலே தொகுக்கப்பட்டதென்றுகொள்ளுத லே தகுதியாம். இதனை,

‡ "பெருங்கடுங்கோன் பாலை || கபிலன் குறிஞ்சி
மருதனிள நாகன் மருத—மருஞ்சோழ
னல்லுத் திரன்முல்லை + நவ்வந் துவனெய்தல்
கல்விவலார் கண்ட கலி"

என்ற வெண்பா வலியுறுத்தும்.

இதனைத் தொகுத்தவரது இயற் பெயர் "அந்துவன்" என்பது. இவர் கல்வி கேள்வியில் வல்லுநரான பிறகு, நக்கீரனார் நப்பூதனார் நத்தத்தனார் என்றாற்போல, இவர் பெயருக்கு முதலில் 'ந' என்னும் சிறப்புப் பொருளை யுணர்த்தும் இடைச்சொல்லையும் ஈற்றில் உயர்வு குறித்துவரும் 'ஆர்' என்னும் இடைச்சொல்லையும் சேர்த்து, அப் பெயர்ச்சொல்லை இவற்றின் இடைச்சொல்லாக்கி "நவ்வந்துவனார்" என வழங்கப்பெற்றாரென்றும், அது நாளடைவில் பல ஏடுகளில் லகர வகரங்களின் வேற்றுமை விளங்க எழுதப்பெறாமையால் வகரத்தை லகரமெனமயங்கி, "நல்லந்துவனார்" என்று பதிப்பிக்கப்பெற்று அவ்வாறே வழங்கலாயிற்றென்றும் தோற்றுகின்றன. 'நற்கீரன்' என்று சிலகாலத்துக்குமுன் வழங்கிய பெயரை உண்மையறிந்த பிறகு உலகம் 'நக்கீரன்' என்று வழங்குவதுபோல இதனையும் இனி நவ்வந்துவனென்று வழங்குமென்பது என்கருத்து. நல்லுருத்திரன் என்பதுபோல நல்லந்துவனெனக் கொள்ளின் ஒருவாறு பொருள் படுமேனும் அஃது இத்துணைச் சிறப்புடையதாகாது. இது நிற்க,

நான், மேற்கூறப்பட்ட ஸ்ரீமான் சி. வை. தாமோதரம்பிள்ளை யவர்கள் பதிப்பித்த கலித்தொகையை ஊன்றிப் படிக்குங்காலத்தில், பலவிடத்து மூலமும் உரையும் செய்திகளும் பொருந்தாமை கண்டு, பல்வேறு வழிகளில் மிகமுயன்று அவற்றின் உண்மைகளை யறிந்து அமைத்துக்கொண்டேன். அவற்றுட் சிற்சில, பிரஹ்மஸ்ரீ மஹா மஹோபாத்தியாயர் உ. வே. சாமிநாதையரவர்களுடன் நான் வேறுநூ லாராய்ச்சி செய்யுங்காலத்தில், அவர்களிடம் சொல்லும்படிநேர்ந்தன. அவற்றைக்கேட்டபொழுது, அவர்கள், 'இவ்வரிய விஷயங்கள் விளங் கும்படி குறிப்புக்களெழுதி நீங்கள் இந்நூலைப் பதிப்பிக்கவேண்டும்'

(பி - ம்.) || குறிஞ்சி கபிலன் + நல்லந்துவனெய்தல்.

என்று சொன்னார்கள். பின்பு சென்னைப் பிரஸிடென்ஸிகாலேஜ் ஸம்ஸ்கிருதம், கம்பாரெடிவ் பைலாலஜி இவற்றின் புரொபெஸரும் வெர்னகுலர் ஸுபரின்டென்டென்டுமாகிய பிரஹ்மஸ்ரீ எஸ். குப்பு ஸ்வாமி சாஸ்திரிகளவர்கள் எம். ஏ. ஐ. இ. எஸ், 'உங்களுக்கு அவகாசங்கிடைக்கும்போது பழைய தமிழ் நூல்களை ஆராய்ச்சிசெய்து லோகோபகாரமாகப் பதிப்பிக்கவேண்டும்' என்று சொன்னார்கள். பின்பு வேறு சில அன்பர்களும், 'கலித்தொகை கிடைக்கவில்லை; அதனை நீங்கள் திருத்தமாகவும் விளக்கமாகவும் பதிப்பிக்கவேண்டும்' என்று என்னைத் தூண்டி வந்தார்கள். அதனால் இத்தொகையைப் பற்றி நான் குறித்திருந்த குறிப்புக்களை ஒன்றுசேர்க்க வேண்டுமென்ற எண்ணமுண்டாயிற்று. அவ்வெண்ணத்தால் நான் முன்பு பல நூல்களைப் படித்தபோது இதில் எனக்குள்ள ஈடுபாட்டினால் அவற்றில் இக்கலிப்பா மேற்கோளாவது, இதன் சொற்றொடராவது, இதற்கொத்த பொருளாவது கண்டவிடத்து எழுதிவைத்திருந்த குறிப்புக்கள் யாவற்றையும் எடுத்துச் சேர்த்துவந்தேன். அவ்வாறு செய்கையில் மறதிஅயர்ச்சிமுதலியவற்றால் சில விடுபட்டன. அவை போக எஞ்சியவற்றைத் தொகுத்தெழுதி மூலம் அல்லது உரையில் ஆங்காங்கு அடிக்குறிப்பாக அமைத்து இதனை ஒருவாறு பதிப்பிக்கலானேன்.

## இப்பதிப்பிலுள்ள விசேடம்.

க. பல ஏட்டுச்சுவடிகளோடு ஒப்பிட்டதனாலும் வேறு நூல்களை ஆராய்ச்சி செய்ததனாலும், ஐயமுற்றவிடத்து அறிவால் நெடிது சூழ்ந்து துணிந்ததனாலும் மூலமும் உரையும் பல திருத்தமடைந்திருத்தல்.

உ. உரையாசிரியர், பாடல்களைப் பகுத்துக்கொண்டு உரையெழுதியிருக்கும் இடங்களில் அவ்வுரைகளுக்குமுன் அவற்றுக்கு மூலமான பாடற்பகுதிகளை மீட்டும் பதிப்பித்திருத்தல்.

ங. பிரதி பேதங்களுள் சிறந்தவற்றைப் பாடமாகக் கொண்டு மற்றவற்றையும், பலவும் சிறந்தனவென்று தோற்றின் ஒன்றைப் பாடமாகக்கொண்டு மற்றவற்றையும் பிரதிபேதமென்று பக்கத்தினிறுதியிற் குறித்துக் காட்டியிருத்தல்.

ச. இப்பாட்டு, அல்லது இப்பகுதி, இன்ன நூலில் இன்ன பகுதியில் இன்னாருரையில் இன்ன செய்திக்கு மேற்கோளென்பதையும், அங்கே குறிப்பு வேறுபட்டிருந்தால் அவ்விவரத்தையும், பிறர் கருத்தை மறுப்பதாகத் தோன்றின் அதனையும், முன்பின் முரணுவதாகத்தோன்றின்அதனையும்ஆங்காங்குஎண்களிட்டுக் குறித்திருத்தல்.

ரு. பண்டைக்காலத்து இலக்கியங்களிலும் பிற்காலத்து இலக்கியங்களிலும், சொல்லினும், பொருளினும், சொற்பொருளினும், இதற்கொத்த பகுதிகளையும் இதிலிருந்து கிளைத்த பகுதிகளையும், பல சமயத்தவர்க்கும் தமிழின்கண் அன்பு மிகுமாறு பல மதநூற் பாடல்களிலுமிருந்து எடுத்து ஒப்புநோக்கும்படி பாட்டு அல்லது உரையில் எண்களிட்டு அவ்வப்பக்கத்தின் அடியில் அவ்வெண்களைக் கொடுத்துச் சேர்த்திருத்தல்.

சு. விளக்கவும் சேர்க்கவும் வேண்டியவை விடுபட்ட இடங்களில் மேற்கோள்களின்முன், பின் அவை குறிப்பதற்குக் கருவியாக அ, ஆ, முதலிய எழுத்து வரிசைகளை அமைத்திருத்தல்.

எ. உள்ளவற்றிற் பொருந்தா வென்று தோற்றியவற்றை [ ] இருதலைப் பகரத்துள்ளும், பொருந்துமென்று தோற்றியவற்றை ( ) நகவளைவினுள்ளும் இசைத்திருத்தல்.

அ. உரையாசிரியர் கூறிய பொருளன்றி வேறு பொருளும் இயையுமாயின் அதனையும் ஆங்காங்கு எண்களிட்டுக்குறித்திருத்தல்.

கூ. நூலாசிரியர் உரையாசிரியர் வரலாறுகளும் அரும்பத முதலியவற்றின் அகராதியும் எழுதிச் சேர்த்தல் முதலியவையாம்.

இந்நூலை நாளிது ககூஉச-ஆம் வருடம் டிசம்பர்மாத முடிவுக்குள் முழுதும் பதிப்பித்து வெளியிடக்கருதி முயன்றுவந்தும் பல இடையூறுகளால் அவ்வாறுசெய்ய இயலவில்லை. என் நண்பர்கள், இப்போது முழுப்புத்தகமும் கிடைக்குமென்று எதிர்பார்க்கும் தமிழபிமானிகட்குச் சிலபாகமாவது கிடைக்கும்படி அச்சானமட்டில் வெளியிடுவது நன்றென்று வற்புறுத்தினமையால், இப்போது நிறைவேறியிருக்கும் கடவுள்வாழ்த்து முதலாகக் குறிஞ்சிக்கலி இறுதியாகவுள்ள பகுதிகளை முதற்சம்புடமாக வெளியிடலானேன். பிழைதிருத்தமும் அரும்பத முதலியவற்றின் அகராதியும் பிறவும் புத்தக முடிந்தபின் வெளிவரும். இதுவும் நிற்க,

இக்கலித்தொகையைப் பதிப்பிக்க என் அகத்தே துணிவைத் தந்தது, புறத்தின் ஓரடியாகிய, "பெரிதே யுலகம் பேணுநர் பலரே" என்பது.

நற்றிணையிற் பிறந்து தமிழறிவுடையரான செல்வர்கள், இதிற் பதிப்பித்திருக்கும் குறிப்புக்களை ஒருவன் சேர்த்தற்கும் பலபிரதிகளோடு கண்ணூன்றி ஒப்புநோக்குதற்கும் எவ்வளவுகாலம் உழந்திருக்க வேண்டுமென்பதை மனத்தால் நோக்கி, இதன் விலையைக் குறுந்தொகையாக மதித்து, தத்தம் தகுதிக்கேற்ப இதனில் ஐந்து பத்துப்பிரதிகளைப் பெறத்துணிந்து, ஐங்குறுநூறும் பதிற்றுப்பத்து

மாகிய ரூபாய்களை முன்பணமாக வுதவி, இதனைக்கைக்கொண்டு பரி பாடல் (பரிபு+ஆடல்=பரிந்தாளுதல்) செய்வதைத் தமது கடமை களுள் ஒன்றென்று கொள்வராயின், அஃது இக்கலித்தொகை முழு தும் விரைவில் வெளிவருவதற்குப் பெரிதும் உதவிசெய்வதாகும். இதுபோலவே இன்னும் சில நூல்களை வெளியிடுவதற்கு ஊக்கத்தை அளிப்பதுமாகும்.

முற்கூறிய பிரஹ்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாயர் உ. வே. சாமி நாதையரவர்கள் முதலில் இதனைப் பதிப்பித்தற்குச் செலவு செய்து கொள்ளும்படி தாமே ரூ. கநிo வலிந்தளித்து, கலித்தொகை அச் சுப்பிரதியொன்றும், ஒப்புநோக்கிக்கோடற்குத் துணையாக ஏட்டுப் பிரதிகள் இரண்டும், அவ்வப்போது நான் பார்த்துக்கொள்ளுதற்கு இதுகாறும் அச்சிடப்பெறுதனவும் அச்சிடப்பெற்றிருந்தும் கிடைத் தற்கு அரியனவுமாகிய புத்தகங்கள் சிலவும் தந்துதவி, சந்தித்த காலங்களில் எதுவரை நடந்திருக்கிறது என்று வினவியும் அச்சிட்டு வரும் பகுதியைப் பார்த்தபோது, 'இக்குறிப்புக்களை நோக்க இவை நெடுங்காலமாகச் சேர்த்து வைத்திருந்தவை என்று தோற்றுகிறது' என்று சொல்லியும் இன்புறுத்தி வந்தார்கள். தமிழினருமையை யறிந்து இன்புறுபவர்களும் பல பண்டைத் தமிழ்நூல்களை ஆராய்ந்து பலவகைக்குறிப்புக்களுடன் அரும்பத முதலியவற்றின் அகராதியும் புதிதாக எழுதிச் சேர்த்து அச்சிட்டு இறவாதிருத்தித் தமிழ்நாட் டிற்குப் பேருதவிபுரிந்து புகழ்பொருள் பெற்றிருப்பவர்களுமாகிய அவர்கள் இவ்வாறுதவிசெய்து எனக்கு ஊக்கத்தை யுண்டாக்கியதற் காக அவர்கட்கு என் நன்றியறிதலோடு வந்தனத்தையும் மனநிறை வாகச் சேர்ப்பிக்கிறேன். அவர்கள் அளித்த ரூபாய்த் தொகை யானது இத்தொகையிலுள்ள செய்யுளொவ்வொன்றையும் தாம் பாராட்டுவதற்கு அறிகுறியாகவும் தோற்றுகிறது.

ஏடுகள் தேடிவைக்கத்தக்க தமிழபிமானிகளிடம் கேட்பது போல மேரிராணிக் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான், கா. நமச் சிவாய முதலியாரவர்களிடத்தும், கொழும்பு யூனிவர்ஸிடி காலேஜ் லெக்சரர் ஸ்ரீமான், எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை எம். ஏ., எல். டி. அவர்களிடத்தும் நான் கலித்தொகையைப் பதிப்பிக்கக் கருதி யிருப்பதைத் தெரிவித்து அவ்வேட்டுச் சுவடிகள் உங்களிடமிருந் தாலும் உங்கள் அன்பர்களிட மிருந்தாலும் சில மாதம்வரை என் பார்வைக்கு உதவவேண்டுமென்று கேட்டபொழுது இந்நாள்காறும் என்னால் ஒருபயனையும் அடையாத அவர்கள் தாங்கள் வேறு ஏட்டுப் பிரதிகளோடுஒப்பிட்டுப் பிரதிபேதங்கள்குறித்துவைத்திருந்த அச்சுப்

புத்தகங்களை நிறைமனத்தோடு நான் பார்த்துக்கோடற்கு உதவி, இக்கலித்தொகை திருத்தமாக வெளிவர வேண்டுமென்பதே தங்கள் கருத்தென்று தங்கள் தமிழபிமானத்தைக் காட்டி நான் அச்சிடத் தொடங்குவதில் தங்களுக்கு மகிழ்ச்சியென்று கூறி எனக்கு ஊக்க மளித்தார்கள். இதற்காக அவர்கள்பால் மிக்க நன்றியறிவுடையேன். அன்றியும் அவர்களுள் முதலியார் அவர்கள் தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையில் அச்சிடப்பெறாத பகுதியை இப்போது நான் விரும்பியதற்குச் சிறிதும் தடையின்றி உவந்துகொடுத்திருப்பது பேருதவியாக இருக்கிறது. காலத்தாற்செய்த உதவி பெரிதன்றோ!

இதனைப் பதிப்பித்தலில் ஊக்கம் குன்றுவாறு என்னைத் தூண்டி வருஞ் சில தமிழபிமானிகளின் அன்புடைமையை நினைக்குந்தோறும் மிக்க மகிழ்ச்சி உண்டாகிறது.

நான், இந்நூல் முழுதுக்கும் தெளிவாக விளங்கக்கூடிய உ000 குறிப்புக்களையே சேர்க்க முன்பு எண்ணியிருந்தும் பின்பு ஆராய்ச்சியாளர்க்கு ஒருவாறு தொடர்புடையவற்றையும் சேர்ப்பது உதவியாமென்று கருதி உய்த்துணரத்தக்க குறிப்புக்களையும் சேர்த்திருக்கிறேன். அதனால் இப்பகுதியின்கண்ணே குறிப்புக்கள் நாலாயிரத்துக்கு மேலாயின. அவற்றுட் சிலவற்றுக்கு ஆகாரம் குறிக்கப்பெறவில்லை; கூடுமானால் பின்பு குறிக்கப்பெறும்.

இப்பதிப்பில் எனது மறதி அயர்ச்சி அறியாமை முதலியவற்றாலும், எனக்கு வேண்டியகாலத்து இதுகாறும் அச்சிடப்படாத நூல்கள் சில கிடைக்காமையாலும், ஐயுற்றவற்றைத் தெளிவிக்கத் தக்க புலமையுடையாரை நான் பெறாமையாலும் சில பிழைகள் நேர்ந்திருக்கக்கூடும். அவற்றைப் பொறுத்தருளவும், எனக்கு அறிவிக்கவும் அறிஞர்களை வேண்டுகிறேன்.

**உள்ளமே யுன்ற னுழப்பை யுணரவல்லர்**
**வெள்ளமே யில்லை மிகச்சிலரே - கள்ளமே**
**அன்னார் புரியா ரகமகிழ்ச்சி காட்டுவரேன்**
**றின்னுமை நீங்கி யிரு.**

'இந்நூல், விரைவில் இனிது நிறைவேற அருள்செய்யவேண்டும்' என்று தமிழ்த் தெய்வத்தை வணங்குகிறேன்.

திருவேட்டீச்வரன்பேட்டை
ரக்தாக்ஷி ஹூ
மார்கழிமாதம் கௌ

இங்ஙனம்:
**இ. வை. அனந்தராமையன்.**

உ

கணபதி துணை.

# இப்பகுதியில் எடுத்துக்காட்டப் பெற்றிருக்கும் நூற்பெயர் முதலியவற்றின் அகராதி

(முதற்குறிப்பால் இடம்நோக்கி உய்த்துணர்க.)

---



* இக்குறியிடப்பெற்றவற்றின் முன்'திரு' என்பது சேர்ந்தும் வரும்.

திருநகரப்படலம்.
திருநாட்டுப்படலம்.
திருவிளையாட்டுப்படலம்.
துணைவர்வருபடலம்.
நகர்புகுபடலம். (யுத்தகாண்டம்)
மாயைப்படலம்.
மார்க்கண்டேயப்படலம். [படலம்.
முதனாட் பானுகோபன் யுத்தப்
மேருப்படலம்.
மோனநீங்குபடலம்.
வள்ளியம்மை திருமணப்படலம்.
வில்வலன் வாதாபிவதைப்படலம்.

கந்தரந்தாதி.

கம்பரந்தாதி.

கம்பராமாயணம் :

அகத்தியப்படலம்.
அகலிகைப்படலம்.
அங்கதன் றூதுப்படலம்.
அதிகாயன்வதைப்படலம்.
அயோத்தியாகாண்டம்.
அரசியற்படலம்.
ஆற்றுப்படலம்.
இரணியன்வதைப்படலம்.
இராவணவதைப்படலம்.
இலங்கைகாண்படலம்.
இலங்கைகேள்விப்படலம்.
உண்டாட்டுப்படலம்.
ஊர்தேடுபடலம்.
கடல்காண் படலம்.
கரன்வதைப்படலம்.
களியாட்டுப்படலம்.
காட்சிப்படலம்.
கார்காலப்படலம்.
கார்முகப்படலம்.
கிங்கரர்வதைப்படலம்.
கிட்கிந்தைப்படலம்.
கும்பகருணப்படலம்.
குலமுறை கிளத்துபடலம்.
கையடைப்படலம்.
கோலங்காண்படலம்.
சம்புமாலிவதைப்படலம்.
சித்திரகூடப்படலம்.
சூர்ப்பநகைப்படலம்.
தாடகைவதைப்படலம்.
திருவபிடேகப்படலம்.
நகரப்படலம்.
நாகபாசப்படலம்.
நாட்டுப்படலம்.
நிகும்பலைப்படலம்.
நீர்விளையாட்டுப்படலம்.
பள்ளியடைப்படலம்.

பாயிரம்.

பாலகாண்டம்.
பிலநீங்குபடலம்.
பூக்கொய்படலம்.
மந்தரைசூழ்ச்சிப்படலம்.
மந்திரப்படலம்.
மாயாசனகப்படலம்.
மிதிலைக்காட்சிப்படலம்.
மீட்சிப்படலம்.
முதற்போர்ப்படலம்.
மூலபலவதைப்படலம்.
வருணனை வழிவேண்டுபடலம்.
வரைக்காட்சிப்படலம்;
வனம்புகுபடலம்.
விடைகொடுத்தபடலம்.
வீபீடணனடைக்கலப்படலம்.
வேள்விப்படலம்.

கல்லாடம்.
கலிங்கத்துப்பரணி.
கலித்தொகை.
கனூல்.
காசிகண்டம் :

கங்காள கேதுவதை.
கடோற்காதித்தன் கதையும் கருடேசன்கதையும்.
கற்பிலக்கணங்கூறியது.
காசிப்படங்கண்டது.
காசியின்சிறப்பு.
கேதாரவிலிங்கத்தின் கதை.
சாம்பாதித்தன்கதை.
தேவர்கள் பிரமலோகமடைந்தது.
தேவிதக்கன்வேள்விச்சாலையடைந்தது. [ந்தது
விஷ்ணுகாசியையடைந்தது.

காஞ்சிப்புராணம் :

அந்தகேசப்படலம்.
கடவுள்வாழ்த்து.
கழுவாய்ப்படலம்.
தக்கீசப்படலம்.

இராமாநுசகவிராயர்.
இராமாநுசகவிராயர் காண்டிகை.
உரிச்சொல்லியல் (உரியியல்.)
சிறப்புப்பாயிரம்.
பதவியல்.
பாயிரம்.
பெயரியல்.
பொதுவியல்.
மயிலைநாதர்.
மயிலைநாதருரை.
மெய்யீற்றுப்புணரியல்.
விருத்தியுரை.
விருத்தியுரைகாரர்.
வினையியல்.

நாலடியார்.
நாலாயிரதிவ்வியப்பிரபந்தம்:

சிறியதிருமடல்.
திருவாய்மொழி.
திருவிருத்தம்.
நாச்சியார்திருமொழி.
பெரியதிருமடல்.
பெரியதிருமொழி.

நாற்கவிராசநம்பியகப்பொருள்விளக்க [வுரை.
நான்மணிக்கடிகை.
நியாயப்பிரகாசம்.
நீதிநெறிவிளக்கம்.
நீலகேசி:

தருமவுரைச்சருக்கம்.

நெடுநெல்வாடை.
நேமிநாதவுரை:

சொல்லதிகாரம்.

நைடதம்:

அன்னத்தைத்தூதுவிட்டபடலம்.
இளவேனிற்படலம்.
கான்புகுபடலம்.
சுயம்வரப்படலம்.
சூதாடுபடலம்.
தேவியைக்கண்ணுற்றபடலம்.
நளன்றூதுப்படலம்.
நாட்டுப்படலம்.
பிரிவுறுபடலம்.
புனல்விளையாட்டுப்படலம்.
போர்புரிபடலம்.
மணம்புரிபடலம்.

பட்டினப்பாலை.

பதிற்றுப்பத்து.
பதிற்றுப்பத்துரைகாரர்.
பதினொராந்திருமுறை:
பொன்வண்ணத்தந்தாதி.
பரிபாடல்.
பழமொழி.
பாகவதம். (கO) ஆம்கந்தம்:

அக்குரூரன்வந்தவத்தியாயம்.
அக்குரூரனையத்தினபுரத்துவிடுத்தவத்தியாயம்.
அரவின்மேலாடியவத்தியாயம்.
உத்தவனைக்கோகுலத்தில்விடுத்தவத்தியாயம். [வத்தியாயம்.
உருக்குமிணி மணத்திறமுரைத்த
கஞ்சனைக்கொன்றவத்தியாயம்.
கோவியர் துகில்கவரத்தியாயம்.
கோவியரைமணந்தவத்தியாயம்.
சததன்னுவாவைக் கொன்றவத்தியாயம்.

சாம்பன்மணம்புரியத்தியாயம்.
சிசுபாலனைக்கொன்றவத்தியாயம்.
பத்திரையைமணம்புரியத்தியாயம்.
புனல்விளையாட்டத்தியாயம்.
மதுரைகண்டவத்தியாயம் [யாயம்.
மலரவன் சிறார்கன் றுகவர்ந்தவத்தி
வேய்ங்குழலிசைத்தவத்தியாயம்.

பாரதம். (பெருந்தேவனார்)
பிரபுலிங்கலீலை:

மாயைபூசைகதி.

பிரமோத்தரகண்டம் [வத்தியாயம்.
உமாமகேசுவர பூசாபல முரைத்த
உமாமகேசுவரபூசைமகிமையுரைத்தவத்தியாயம். [தியாயம்
உருத்திராக்க மகிமையுரைத்த வத்
சிவதானமகிமையுரைத்த வத்தியாயம். [யம்.
சிவயோகிமகிமையுரைத்தவத்தியா
சீமந்தனிபாவனைபெற்ற வத்தியாயம்.
சோமவாரவிரதமான்மிய வத்தியாயம். [யாயம்.
பத்திராயுவின் கதையுரைத்தவத்தி
பிரதோஷபூசைமகிமையத்தியாயம்

ஆக நூல்கள் ௧௪௫; இன்னும் சில.

---

## பாலைக்கலி, குறிஞ்சிக்கலிகளின் செய்யுள் முதற்குறிப்பகராதி.

| செய்யுள் | பக்கம். | செய்யுள் | பக்கம். | செய்யுள் | பக்கம். |
|---|---|---|---|---|---|
| அகவினம்பாடு | ௨௨௮ | கடும்புனல்கால் | ௧௬௭ | பாடின்றிப்பசந்த | ௯ |
| அணிமுகமதி | ௩௮௪ | கதிர்விரிகனை | ௨௬௬ | பாடுகம்வாவாழி | ௨௩௮ |
| அணைமருளின் | ௮௯ | கயமலருண்கண் | ௨௦௧ | பான்மருண் மரு | ௧௧௯ |
| அரிதாய வறன் | ௬௮ | காமர்கடும்புனல் | ௨௧௫ | மடியிலான்செல்வம் | ௧௯௦ |
| அரிமானிடித்தன்ன | ௯௩ | கோடியவுங்கோ | ௩௨௪ | மரையா மரல் | ௪௨ |
| அருந்தவமாற்றி | ௧௬௨ | கொடுமிடனுஞ் | ௧௯௫ | மறங்கொளிரும் | ௨௪௮ |
| அரும்பொருள் | ௧௦௮ | கொடுவரிதாக்கி | ௨௯௬ | மன்னுயிரேமுற | ௧௮௪ |
| அறனின்றி | ௨௪ | சுடர்த்தொடீஇ | ௩௦௯ | மீன்றெளிரவி | ௩௨௯ |
| ஆமிழியணிமலை | ௨௯௫ | சுணங்கணிவன | ௩௬௨ | முறஞ்செவி மறை | ௩௧௨ |
| ஆறறியந்தணர் | ௧ | செருமிகுசின | ௮௨ | வயக்குறு | ௧௩௪ |
| இடுமுணெடுவேலி | ௭௯ | செவ்வியதீவிய | ௧௧௨ | வலிமுன்பின் | ௨௯ |
| இமையவில் | ௨௦௭ | தளைநெகிழ்பிணி | ௩௫௬ | வறனுறலறியாத | ௩௧௯ |
| இலங்கொளி | ௧௨௭ | திருந்திழாய்கே | ௩௯௧ | வறியவனிளமை | ௬௨ |
| ஈதலிற்குறை | ௧௪௮ | தோடங்கற்கட் | ௧௩ | வாங்குகோனெல் | ௩௦௨ |
| உண்கடன்வழி | ௧௨௨ | தொல்லெழில் | ௧௫௭ | வாருறுவணரைம் | ௩௫௨ |
| ஊர்க்கானிவந்த | ௩௩௪ | நடுவிகந்தொரீஇ | ௫௦ | விடியல்வெங் | ௨௭௧ |
| எஃகிடைதொட்ட | ௧௭௨ | நெஞ்சுநடுக்குற | ௧௩௨ | வீயகம்புலம்ப | ௨௭௮ |
| எல்லாவிஃதொ | ௩௬௯ | நோக்குங்கா | ௩௮௧ | வீறுசான் ஞால | ௧௭௭ |
| எறித்தருகதிர் | ௫௬ | படைபண்ணிப் | ௧௦௫ | வேங்கைதொலை | ௨௫௭ |
| எளியிஃதொத்த | ௩௭௬ | பல்வளம்பகர் | ௧௧௫ | வேயெனத்திரண் | ௩௪௭ |
| ஒருகுழை | ௧௪௧ | பாஅலஞ்செவி | ௩௬ | வேனிலுழந்த | ௪௫ |
| ஒன்றி, இரப்பான் | ௨௮௬ | பாடல்சால் | ௧௫௩ | ஆக செய்யுள் | ௬௫ |

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

எட்டுத் தொகையுள்

ஆறுவதாகிய

# கலித்தொகை

## மூலமும்,

## நச்சினார்க்கினியருரையும்.

### கடவுள் வாழ்த்து.

(க) (க) ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து
தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந் தீமடுத்துக்
கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி
மாறாப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி;

ரு. படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ
கொடுகொட்டி யாடுங்காற் கோடுய ரகலல்குற்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ;

அ. மண்டமர் பலகடந்து மதுகையா னீறணிந்து
பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள்
வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ ;

---

க. இச்செய்யுள், கலிப்பாவான் வாழ்த்துவந்தது; (தொல். செய். சூ. கஅக. நச்) மூன்றடியாற் சுரிதகம் வந்தது; (தொல் செய். சூ. கருக 'போக்கியல்' இளம்) தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகமென்னும் நான் குறுப்புடையதும் கொச்சகவொருபோகு; (தொல். செய். சூ. கசக. பே. நச்) என்பவற்றிற்கு மேற்கோள்.

கக. கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவற்புரளத்
தலையங்கை கொண்டுநீ காபால மாடுங்கால்
முலையணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ ;

எனவாங்கு;

கரு. பாணியுந் தூக்குஞ் சீரு மென்றிவை
மாணிழை யரிவை காப்ப
வாணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி.

என்பது. "வாழ்த் தியல் வகையே * நாற் பாக்கு முரித்தே" (க) என்றதின்கண் வகையென்றதனுற் கொண்ட (௨) அறுமுறைவாழ்த்தன்றித் (௩) தனக்குப் பயன்படும்படி முன்னிலையாகக் கடவுளை வாழ்த்துதலிற் கடவுள்வாழ்த்து எனப் பெயர் பெற்றது.

இதன் பொருள்.

(௪) ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து
தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந் தீமடுத்துக்

---

க. தொல். செய். சூ. ௧௦௯.

௨. அறுமுறை வாழ்த்து:—முனிவரும் பசுவும் பார்ப்பாரும் அரசரும் மழையும் நாடுமென்பவற்றை வாழ்த்துதல்.

௩. உலகிற்குப் பயன்படும்படியாகவும் பட்ர்க்கையாகவும் கடவுளை வாழ்த்துதலுமுண்டு.

௪. (அ) "ஆறறிமுனிவரன்" கந்த. அசுரர் தோற்று. கரு. (ஆ) "ஆறறி முனிவன்" பிரமோத். உமாமகேசுவர பூசாபல. ௨௭. (இ) "ஆறறி முனி வீர்காள்" வாயுசங். சிவானுக்கிரக. க. (ஈ) "ஆறறி முனிவர்க்கெல்லா மருமறை தெரித்தபின்னர்" † என்பவை ஈண்டு ஒப்புநோக்கற் பாலன. (உ) "வகையறிமுனிவிர்" விநாயக. நைமிச. ௨௫ என்பதும் கருதத்தக்கது.

(ஊ) "ஆறறி . . . கூளி" என்னும் பகுதி வருக்கவெதுகைக்கு மேற்கோள். தொல். செய். சூ. அ௬ 'ஆயிரு' இளம். மதுரைத் தமிழ்ச் சங்கப்.

---

† இவ்விடத்தும் பிறவிடத்தும் குறிக்கப்படாத ஆகரமும் ஆங்காங்கு இடமின்மை முதலிய காரணங்களாற் சேர்க்காது விடுபவையும் பின்பு இடைவிடுபட்டவை யென்னும் தலைப்புப்பெயரிட்டு இயன்ற அளவு விளக்கப்பெறும்.

(பிரதிபேதம்) * நாற்பாற்கும்.

(க) கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி
மாறாப்போர் ÷ மணிமிடற் (உ) றெண்கையாய் கேளினி

என்பது: ஆறங்கத்தையும் அறியும் அந்தணர்க்கு (ங) அரியவாகிய வேதங்கள் பலவற்றையும் அருளிச்செய்து, (ச)பகையென்று தெளிகின்ற (ரு) கங்கையின் வேகத்தைச் சடையில் ஒரு கூற்றிலே அடக்கி, முப்புரத்திலே தீயைச்செலுத்தி, வாக்காற் கூறப்படாமல் மனத்தாற் குறித்த அப்பொருட்கும் எட்டாமல் நிற்கும், கடிதாகிய கூளியினது முதுகிடாத போரினையும் நீலமணிபோலுந் திருமிடற்றினையும் எட்டுக்கையினையும் உடையாய், இங்ஙனங் கட்புலனாய் நின்று இப்பொழுது யான் கூறுகின்றதொன்றைக் கேள்; என்றவாறு.

பகர்ந்து கரந்து மடுத்து என்னுஞ் செய்தெனெச்சங்கள் (சூ) செல்லு

---

பதிப்பில் ஓரடி குறைந்தும் வேறொரு கையெழுத்துப் பிரதியில் ஓரடி மிகுந்து முள்ளது.

க. (அ) கூற்றெச்சம் குறிப்பெச்சமெனவும் (ஆ) "கூறியிட்டிடாமற் குறிப்பினுலுரைப்ப" எனவும் கூறுதலும் குறித்தலும் இணைந்து வருதல் காண்க.

(இ) "கூறாமற் குறித்ததன் மேற்செல்லும்" என்னும்பகுதி மல்லீறுவினையெச்சமாய் வந்ததற்கு மேற்கோள். இதனைச் சிலர் அல்லீறென்றும் கொள்வர். தோல். வினை. சூ. ஙஉ. சே; ஙரு. பே; ஙக. நச்; நன். வினை சூ. உச. மயிலை. விருத்தி. இரா. இ - வி. சூ. உசசூ.

உ. "எண்டோள் வீசிநின் றாடும் பிரான்றனை" தே. திருவங்கமாலை.

ங. அருங்கேடன் (குறள் உகo) என்புழிப்போல அருமை இன்மைப் பொருளில் வந்ததாகக் கொள்ளின் அருமறையென்பதற்கு இந்நிலவுலகத்திலில்லாத வேதங்கள் என்று பொருள்கொள்ளுதலுமாம். 'எஞ்சிய பொருள்களை யேமுற நாடித், திங்கள்போலத் திசைவிளக்கும்மே' என முருகற்குக் கூறியிருத்தலுங் காண்க.

ச. கங்கை சினந்துவந்தமைபற்றித் தேறுநீரென்பதற்குப் பகையென்று தெளிகின்ற கங்கையென்று பொருள் கூறினர் போலும்.

ரு. கங்கையைச் சடையில் ஒருகூற்றிலே அடக்கியதை, "உந்தியம்புயத் துதித்தவ னுறைதரு முலகு மிந்திராதிய ருலகமு நடுக்குறவிரைந்து, வந்துதோன்றினள் வருநதி மலைமகள் கொழுநன், சிந்திடாதொரு சடையினிற் கரந்தனன்சேர" என்பதனால் உணர்க. கம்ப. அகலிகை. ருரு.

சூ. "காலநெற்றியி னகிலமுஞ்சுடு கனலி குறைபட விறைவர்கம், மேலை நெற்றி விழிக்கவந்து பணிந்து நின்றனன் வீரனே" என்னுந் தாழிசை (பிரதிபேதம்) ÷ மணிமிடற்ற வெண்கையாய் கேளினி.

மென்னும் பெயரெச்சத்தோடு முடிந்து, * அஃது எண்கையாய் என்னுங் (க) குறிப்புப் பெயரோடு முடிந்தது.

இது திருமேனிகொண்டு நின்ருயாயினும் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டா யென்றது.

அவ்வேதந்தனைக் கொண்டே ஆறங்கங்களையும் (உ) அறிய வல்லாரென்பது தோன்ற ஆறறியந்தணர் என்ருர். (௩) அந்தத்தை அணவுவார் அந்தணர்: என்றது, வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பாரென்றவாறு.

ஆறு என்னும் வரையறைப் பண்புப்பெயர் அப்பண்பினையுடைய ‡ அங்கத்தை உணர்த்திநின்ற ஆகுபெயர். அது "கிளந்தவல்ல" (௪) என்பதனுட் கூறினும்.

---

யுரையில் செல்லுமென்னும் பெயரெச்சம் கூளி யென்னும் பெயரைக் கொண்டு முடிந்ததென்று கருதும்படி "கூருமற்...... .....கேளினி" என்பதை மேற்கோள் காட்டுவர். தக்கயாகப்பரணி யுரையாசிரியர். **தக்க.** தாழிசை. ௩௩௦.

க. குறிப்புப் பெயரென்பதற்குக் குறிப்பு வினையாலணையும் பெயரெனப் பொருள் கொள்ளலாமாயினும் எண்கையாயென்பது வினையா லணையும் பெயராகாமலே பெயரடியாகப்பிறந்த பெயராமாதலால், இஃது உறுப்புப் பெயரென்று இருக்கவேண்டியதுபோலும்; உறுப்புப்பெயர் - [கையென்னும்] சினையடியாகப்பிறந்த பெயர்.

உ. 'உரைகோளாளர்க்குரைப்பது நூலே' என்பது இங்கேகருதத்தக்கது.

௩. அந்தணரென்பதற்கு மற்றெவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகுபவரென்று பொருளெழுதாது இங்கெழுதியிருக்கும் பொருளும் இதற்கிணங்க **மது** ௪எ௪-ல் வேதாந்தத்தை எக்காலமும் பார்ப்பாரென எழுதியிருக்கும் பொருளும் "அந்தண்மைபூண்ட வருமறையந்தத்துச் சிந்தைசெயந்தணர்"[**திருமந்.** அந்தணரொழுக்கம்] என்பதிற் பிற்பகுதியின் அரியபொருளை வெளிப்படுத்தல் கருதிப்போலும். அழகிய தட்பத்தினையுடையாரென • எதுப் பெயராம் என்பர்; பரிமேலழகர். **குறள்.** ௩௦.

௪. (அ)**தொல்.** வேற்-மய. சூ ௩௫. இச்சூத்திரவுரையில் ஆறறியந்தணரென்பதனை மேற்கோள்காட்டி இக்குறிப்பை எழுதியிருத்தலுமன்றி, (ஆ)**சிந்தாமணி**யிலும் உஎ௩௪ நூற்றுலாமண்டபமென்பதற்கு நூறடியுலாவு தலையுடையமண்டபமென்று பொருளும் எண்ணுப்பெயர்எண்ணுடைப் பொருண்மேல் ஆகுபெயராய் நின்றதென்று இலக்கணமுமெழுதி இப்பகுதியையே மேற்கோள்காட்டினர், இவ்வுரையாசிரியர்; **கல்லாட**

(பிரதிபேதம்) * அது, ‡ ஆறங்கத்தை யுணர்த்திநின்ற.

(க) ஆறுஅங்கமாவன:—உலகியற்சொல்லை ஒழித்து வைதிகச் சொல்லை ஆராயும் நிருத்தமும், அவ்விரண்டையும் உடனாராய்ந்த * ஐந்திரத்தொடக்கத்து வியாகரணமும், போதாயனீயம் பாரத்துவாசம் ÷பரமார்த்தம் பரமாத்திரையம் முதலிய கற்பங்களும், நாராயணீயம் வராகம் முதலிய கணிதமும், எழுத்தாராய்ச்சியாகிய பிரமமும், செய்யுளிலக்கணமாகிய சந்தமுமாம்.

(உ) மறையாவன ‡தைத்திரியமும் (ங) பவுழியமுந் தலவகாரமுஞ் சாம

---

வுரையாசிரியரும் (இ) "இறுதியிற்சலியாதிருத்தலானு, மறுமைதந்துதவு மிருமையானும், பெண்ணிடங்கலந்த புண்ணியனாகியும்" என்புழி அறுமையென்று பதம்பிரித்து அதற்கு ஆறென்று பொருள் கூறி இஃது அங்கத்தையுணர்த்தலின் வரையறைக் குணப் பண்புடைப் பொருண்மே னின்றவாகு பெயரென்று இலக்கணமெழுதி அதற்கும் கல். கங: கஅ-கூ; (ஈ) "நாற்படை" என்பதற்கு நான்கு குணத்தினையுடைய படையெனினுமாமென்று பின்னுரையெழுதி அதற்கும் கல். ஙங: கூ. இப்பகுதியையே மேற்கோள் காட்டினர்.

க. (அ) அங்கம்—அவயவம்; வேதாங்கத்தைக் குறிப்பாக அங்கமென்றார். (ஆ) நிருத்த முதலிய ஆறும் வேதபுருடற்கு இன்ன இன்ன அங்கமென்பதனை, "கற்பங்கை சந்தங்கா லெண்கண், டெற்றெனிருத்தஞ்செவி சிக்கைமூக், குற்ற வியாகரண முகம்பெற்றுச், சார்பிற்றோன்று வாரணவேதக்கு" என மணி. உஎ.ஆம் காதையிற்காணப்படும் கOO-கOங ஆம் அடிகளால் உணர்க. (இ) தொல் புறத்திணை உOஆம் சூத்திரை வுரையில் இவ்வுரைகாரரே இவ்வாறங்கங்களையும் இடையாய ஓத்துவகையுள் ஒன்றென்று கூறி விளக்குமிடத்து, கற்பப் பெயர்களுள் பரமார்த்தம் பரமாத்திரைய மென்னும் பெயர்களின்றி ஆபத்தம்பம் ஆத்திரைய மென்னும் பெயர்கள் காணப்படுகின்றன. (ஈ) இவ்வாறங்கங்களின் பெயர்களும் மந்திரஞ் சந்தோபிசித நிருத்தஞ் சோதிட நிகண்டு வியாகரணமெனச் சில வேறுபட்டும் சில இடத்திற் காணப்படுகின்றன.

உ. இங்கே மறையென்றது உபநிடத்தை யென்று சிலர் கூறுவர். அவை விளங்கவில்லை. தலவகாரமென்னுஞ் சொல்லுக்குப் பிரதியாகச் சந்தோகமென்னும் பெயரமைந்து "சந்தோகா பௌழியா தைத்திரியா சாமவேதியனே" என ஒருமுறை நாலாயிர. பெரிய திருமொழி எ: எ: உ. இலும் காணப்படுகின்றது.

ங. பவுழியமென்பது, இருக்குவேதத்தையுணர்த்தும் ஒருவடமொழியின் மரூஉவென்ப.

(பிரதிபேதம்) *ஐந்திரியத்தொடக்கத்து, ÷பரமாத்தம். ‡இருக்கும் பௌடியமும்.

வேதமுமாம். (க) இனி வேதவியாதர் * வரையறைப்படுத்திய காலத்து ஓது கின்ற நான்கு வேதமுமாம்.

இனியென்றது, "இனிநினைந் திரக்க மாகின்று" (உ) என்றாற்போல இப்பொழுது என்னும் பொருள் தந்தது.

இது தரவு.

௩. படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ
கொடுகொட்டி யாடுங்காற் கோடுய ரகலல்குற்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ

என்பது: நின்கையில் ஒலிக்கின்ற (௩) பறை பலவாச்சியங்களையும் ஒலியா நிற்கக் ÷ கட்புலனாய்ப் (௪) பல வடிவுகளையும் மீண்டு நின்னிடத்தே ஒடுக்கிக்

---

க. தொல். பாயிரத்து நான்மறை யென்பதற்குப் பொருள் கூறுமிடத்து "நான்கு கூறுமாய் மறைந்த பொருளு முடைமையால் 'நான்மறை' என்றார்; அவை: தைத்திரியமும் பௌடியமும் தலவகாரமும் சாம வேதமுமாம். இனி, இருக்கும் யசுவும் சாமமும் அதர்வணமுமென் பாருமுளர்; அது பொருந்தாது; இவர் இந்நூல் செய்த பின்னர் வேதவியாதர் * சில்வாழ்நாட் சிற்றறிவினோ ருணர்தற்கு நான்கு கூறு செய்தாராகலின்" என இவ்வுரைகாரரே எழுதி யிருத்தலால் இங்கு மறையைக் குறித்தெழுதப் பெற்றிருக்கும் பின் வாக்கியம் பிறரால் இடைச் செருகப் பெற்றதோவென ஐயுறும்படி இருக்கிறது. (பிரதிபேதம்) * சின்னாட்பல்பிணிச் சிற்றறிவினோர்.

உ. புறம். உ௫௩.

௩. இங்கே பறையென்றது தமருகத்தை. கொடுகொட்டியைக் கூறு மிடத்து, 'பரிதரு செங்கையிற் படுபறையார்ப்பவும்' என சில. உ அ: ௬அ இலும் பறை கூறப்பெற்றிருத்தலை ஒப்பு நோக்குக.

௪. (அ) 'பல வடிவங்களையும் மீண்டு நின்னிடத்தேயொடுக்கிக்கொண்டு' என்றது, உலகம் இறைவன்பாலிருந்து தோன்றி அவன்பாலே யொடுங்குமென்னும் வழக்குப்பற்றி. (ஆ) "நீலமேனி வாலிழைபாகத், தொருவ னிருதாணிழற்கீழ், மூவகை யுலகு முகிழ்த்தன முறையே" ஐங். கடவுள். (இ) "மணிமிடற் றந்தணன், றாவி றாணிழ றவிர்ந்தன்று லுலகே" அகம். கடவுள். (ஈ) "போற்றியெல் லாவுயிர்க்குந் தோற்ற மாம் பொற்பாதம் .....போற்றியெல் லாவுயிர்க்கு மீறா மிணையடிகள்" **திருவாசகம்.** திருவெம். உ௦. (உ) 'நாதனுருத்திர னாதியினித்திரு ஞாலம்விதித்ததுவும்; **பிரமோத்தர.** சிவயோகிமகிமை. உ. (ஊ) "அருள் சிவத்தினின் றெழவெழுந்தகிலமு மதுபின், மருவி யொன் றறக் காத்தலு மடியுமாபோல" **திருவானைக்காப்.** கவுதமப். உஉ. (எ) 'அயனாகி நின்று படைத்தமுதல்வன்' கலி. கஉ௩:க-உ. உரை. என்பன காண்க.

(பிரதிபேதம்) * வரையறைப்படுத்த இக்காலத்து. ÷ கட்புலனாகிய பலவடிவு.

கொண்டு, கொடிதாகிய கொட்டியென்னுங் (க) கூத்தை ஆடுகின்ற காலத்து, பக்கம் உயர்ந்த அகன்ற அல்குலினையுடைய கொடியையொத்த இடையினையுடையாளோ தாளமுடிந்துவிடுங் காலத்தினைத் தன்னிடத்தே கொண்ட சீரைத் தருவாள்? ஆண்டுப் பிறரில்லையே; என்றவாறு.

* கொடுங்கொட்டி கொடுகொட்டி என விகாரமாயிற்று. கொடுங்கொட்டி யென்றார் (உ) எல்லாவற்றையும் அழித்துநின்று ஆடுதலின்.

---

க. வீரர் தம் வெற்றிக்காலத்துக் களித்து ஆடுதல் மரபாதலான் வெற்றிக்கு ஆடல் ஆடு எனப்பெயரும் வழங்கும். இவ்வாறு ஆடுதல் மரபென்பதனை. (அ) "கோடியர் முழவின் முன்ன ராடல், வல்லா னல்லன் வாழ்கவவன் கண்ணி,...மடம்பெருமையி னுடன்றுமேல்வந்த,வேந்து மெய்ம் மறந்த வாழ்ச்சி, வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே" பதிற். ருசு. (ஆ) "ஆளுகு களத்து வாள்பல வீசி யொன்னு மன்னரு மாடினர்"பாரதம். (இ)"வென்றாடு துணங்கை" பதிற். என (ஈ) "நீர்த்திரை யரங்கத்து நிகர்த்து முன்னின்ற, சூர்த்திறங் கடந்தோனுடிய துடியும்" சில. சு: ௫௦-௫௧.(உ)"ஆடலமர்ந்தா னமர்வெய்யோன்" பு-வெ. தும்பை. கரு. (ஊ) "அடையா, ராளமர் வென்றி யடுகளத்துத், தோள்பெயராக், காய்ந்தடு துப்பிற் கழன்மறவ ராடினர், வேந்தோடு" பு-வெ. தும்பை. உக (எ) "ஆளுங் குரிசி லுவகைக் களவென்னுங், கேளன்றிக் கொன்றாரே கேளாகி - வாள்வீசி யாடினர்" தொல். புறத். சூ. கஎ. நச். மேற். (ஏ) "சூடிய பொன்முடியும் பூணு மொளிதுளங்க, வாடிய கூத்தரின்வேந் தாடினன் - வீடிக், குறையாடல் கண்டுவந்து கொற்றப்போர் வாய்த்த, விறையாட வாடாதார் யார்" தொல். புறத். சூ. உக. நச். மேற் (ஐ) "வயிரவன் மனத்தான்றன்னைப் பொருதுவண் சூலத்தேந்தி, வயிரவன் களிப்புமிக்கு வாகையினடனஞ் செய்தான்." காஞ்சி. அந்தகேச - உகூ. என்பவைகளும் விளக்கும். இம்மரபாற் சிவபெருமான் ஆடிய மூன்றாடல்கள் இங்கே கூறப் பெற்றுள்ளன. (ஒ) "கொடுகொட்டி பாண்டரங்கங் காபால மெனு மிறைவன் கூத்து மூன்றும்" என்பதும் ஈண்டறிதற் பாலது. இவற்றுள் (ஓ) கொடுகொட்டியும் பாண்டரங்கமும் பதினோராடலினுட்பட்டவையென்று சிலப்பதிகாரத்தால் (ரு: கச உரை சு: ருகூ-சுசு) தெரிகின்றது. அதில் கொடுகொட்டி யாவையுமொழித்தகாலத் திருக்கூத்தெனப்படாது மூவெயி லழித்தகாலத் திருக்கூத்தெனப்பட்டிருத்தல் சமய நூன்மலைவுபோலும். (ஔ) இவ்விரண்டும் 'வடவனத்தொருநாள்' என்னுங் கல்லாடத்துங் கூறப்பட்டிருக்கின்றன.

உ. பலவென்பதற்கு எல்லாமென்று பொருள்கூறுதலை "பலர் புகழ் ஞாயிறு"(முருகு. உ.)"பலர் புகழ்புலவர்"(பு-வெ. கொளு உசுக) என்பவற்றுக் கெழுதியிருக்கும் உரையும் வற்புறுத்தும்.

(பிரதிபேதம்) *'கொடுகு கொட்டி' என ஒருபிரதியில் ஊகிக்கும்படி பேரே ஒட்டி எழுதப்பட்டுள்ளது; இது சிறந்ததென்ப மரூஉ மரபறிவார்.)

* "கொட்டி யாடற் றோற்ற மொட்டிய, வுமையவ ளொருபாலாக ‡ வொருபா, லிமையா நாட்டத் திறைவ னாகி, யமையா வுட்கும் வியப்பும் விழைவும், பொலிவும்......பொருந்த நோக்கிய, தொக்க ∴ வவுண ரின்னுயி ரிழப்ப, வக்களம் பொலிய வாடின னென்ப, மற்றதன், ÷ விருத்தங் காத்தற் பொருளொடு கூடிப், பொருத்த வரூஉம் || பொருந்திய பாட, றிருத்தகுமரபிற் றெய்வத் துதிப்பே." இதனான் உணர்க.

அ. (க) மண்டமர் பலகடந்து மதுகையா னீறணிந்து
(உ) பண்டரங்க மாடுங்காற் பணையெழி [] லணைமென்றோள்
வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ

என்பது: மிக்குச்செல்கின்ற போர்களிற்(ங)பலவாகிய**முப்புரங்களைவென்று அந்த வலியாலே அவர்கள் வெந்தவிந்தநீற்றை அணிகையினாலே பாண்டரங்கமென்னும் பெயர்பெற்ற கூத்தை நீ ஆடுகின்ற காலத்து (சு) மூங்கிலினது ‡‡ அழகையுடைய அணைபோன் மெல்லியவாகிய தோள்களையுடைய (ரு)வண்டுகள் ஒலிக்குங் கூந்தலையுடையாளோ ()தாளத்தினிடை நிகழுங்காலத்தினையுடைய தூக்கைத் தருவாள்? ஆண்டுப் பிறரில்லையே; என்றவாறு.

---

க. (அ) "மண்டமர் கடந்தநின்" புறநா. உஎஉ. (ஆ) "மண்டமர் கடந்த வேன் மன்னர் மன்னனை" (இ) "மண்டமர் கடந்தவே னளன்", (ஈ) "மண்டமர் கடந்த வொள்வேன் மன்னவற்கு" நைடதம். நளன் றூது. க0, சுஅ; போர்புரி. ரு.

உ. (அ) "பாண்டரங்கம தியற்றுவான்" கந்த. இரண்டாநாட் சூர. உகங. (ஆ) "பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள்" என்னும் பகுதி கட்டளையடிக்கு மேற்கோள். தொல். செய். சூ. உகூ. பே. நச்.

ங. புரம் மூன்றாதலிற் பலவாகிய முப்புரங்கள் ' என்றார்; "மற்றுமெம் பிரான்பல் வேறு வகையினாற் புரங்கள் செற்றல், சற்றல வெழுபானாலு தரமெனச் சாற்றுநூல்கள்" (திருப்பாதூர். மாயாபுரி எ) என்றும் புராணமுண்டாகலின், முப்புரங்களே பலவிருந்தன வென்றலுமாம்.

ச. "அளவே வடிவொப்ப தன்றியே மற்றை, யிளவேய் நிறத்தானு மேய்க் குந்—துளவேய், கலைக்குமரியேறுகைப்பாள் காரவுணர் வீரந். தொலைக்குமரி யேறுகைப்பாடோள்'' என்பது ஈண்டுக் கருதத்தக்கது.

ரு. மகளிர் கூந்தலில் வண்டொலிப்பதாகக் கூறல் கவிமரபு; ஞானப் பூங்கோதை முதலிய பெயரான் உமையாள் கூந்தற்கு இயற்கை மணங்கூறி இயைப்பாரு முளர்; முன் பின் மரபுநோக்கின் அது பொருந்தாமை விளங்கும்.

(பிரதிபேதம்) * கொட்டியாடிய தோற்றம், கொட்டியாடற் கேற்றம், ‡ ஒருபாலிற் கிமையாநாட்டத்து, ∴ அவுணரினல்லுயிர், ÷ விருத்திகாத்தல், || பொருந்தியவாடல், [] இணை மென்றோள், **முப்புரங்களைவென்ற அந்நகைவலியாலே அவர்கள் வெந்திட வீழ்ந்தநீற்றை, ‡‡ அழகையுடைத்தாகிய அணைபோன்ற மெல்லிய, () அதனிடை.

(க) பாண்டரங்கம், பண்டரங்கமென விகாரமாயிற்று.

"ஏறமர் கடவுண் மூவெயி லெய்வுழிக், கூறுகூறாகக் கொடியொடும் படையொடும், வேறுவே றுருவின் விண்மிசைப் * பரந்தன, ரவ்வழி யொளி யொடு முருவொடுந் தோன்றித், தேர்மு னின்று திசைதலை பணிப்பச், சுவை யுங் குறிப்பு மொழிவில தோன்றி, யவையவை யவ்வழி யாடினனாட, மைந் தரு மகளிருந் † தந்தநிலை யழிய, மெய்ப்படு சுவையொடு கைப்படை மறப்பக், கடிய காலக் காற்றென வேற்றவன், படிநிலை திரியாப் பாண்டரங் கம்மே" இதனான் உணர்க.

கக. (உ) கொலையுழுவைத்தோலசைஇக்கொன்றைத்தார்சுவற்புரளத்
தலையங்கை கொண்டு நீ காபால மாடுங்கால்
முலையணிந்த (௩) முறுவலாண் முற்பாணி தருவாளோ

என்பது: கொலைத்தொழிலை யுடைய புலியைக் கொன்று அதன்றோலை உடுத்துக் கொன்றைப்பூவாற் செய்த மாலை தோளிலே அசைய (௪) அயன் றலையை அகங்கையிலே ஏந்துகையினாலே காபாலமென்று பெயர்பெற்ற கூத்தை நீ ஆடுங்காலத்து, முல்லையையொத்த எயிற்றினையுடையாளோ ஒரு தாளத்தின் முதலெடுக்குங் காலத்தினையுடைய பாணியைத் தருவாள்? ஆண்டுப் ‡ பிறரில்லையே; என்றவாறு.

முல்லை, முலையெனவிகாரமாயிற்று. அணி, உவமவுருபு. ஓகார மூன்றும் எதிர்மறை.

ஒருதாளத்திற்குப் பாணி தூக்குச் சீரென்னும் மூன்றும் உளவேனும் ‖ ஒவ் வொன்று ஒவ்வோராடற்கு மிகுதிவகையாற் சிறந்தமைபற்றி ஒரோவொன் றையே கூறினர். தாழிசைகளிற் சீர் தூக்குப் பாணியென நின்றனவேனும், அவை நிகழும் அடைவுபற்றிச் சுரிதகத்துப் பாணியுந்தூக்குஞ்சீருமென அடைவு கூறினர்.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு

என்பது: என்று சொல்லும்படியாக; என்றவாறு.
ஆங்கு, அசை; அவர் கூத்தாடுகின்ற காலங்களை யெனினுமாம்.
இது தனிச்சொல்.

---

க. "பண்டரங்கன் வந்து பலிதா வென்றான்" பொன்வண்ணத். ௩௩. என்பதனால், இச்சொல் பண்டங்கமெனச் சிதைந்தும் வரும்போலும்.

உ. "புலித்தோலை யரைக்கசைத்து, மின்னார் செஞ்சடைமேன் மிளிர் கொன்றை யணிந்தவனே" தே.

௩. முறுவல் - சிரிப்பு; பல்லுக்கு ஆகுபெயர். குறள். ௧௧௧௩.

௪. "அயன்றலைகொண்டு செண்டாடல்பாடி" என்பது ஈண்டு ஆராயத் தக்கது.

பிரதிபேதம் * பாத்தனரவ்வழி, பரந்தனவவ்வழி. † தந்நிலையொழிய, ‡ (தாழிசைமூன்ற னிறுதியுரையினும்) பிறரில்லையே யென்ச, ‖ ஒருவோராடன் மிகுதி.

கரு. (க) பாணியுந் தூக்குஞ் சீருமென்றிவை
மாணிழை யரிவை காப்ப
(உ) வாணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி

என்பது: அழித்தற்றொழிலை நிகழ்த்துகின்ற காலங்களிலே, பாணியுந் தூக்குஞ் சீருமென்று சொல்லப்பட்ட இவையிற்றை மாட்சிமைப்பட்ட அணியினையுடைய (ங) உமாதேவி (ச) காப்ப ஆடிக், காத்தற்றொழிலை நிகழ்த்துகின்ற இக்காலத்தே ஒரு வடிவைக்கொண்டு, நேயமில்லாத பொருளாகிய * எமக்குப் பொருந்தினாய், இதற்குக் காரணங் கூறுவாயாக; என்றவாறு.

இது சுரிதகம்.

இப்பாட்டுப் பலமெய்ப்பாடுகளுந் தோற்றுவித்து நின்றதேனும், அவை உரைப்பிற் பெருகு மாதலின், முடிந்த பொருளாற் பிறந்த மெய்ப்பாடே கூறுதும்; அது தன்கட் டோன்றிய ஆக்கம்பற்றிய மருட்கையாம்.

இது நான்கு உறுப்பான் வந்ததேனும், தேவபாணியான் வருதலின், முதனிலை யொத்தாழிசை † யாகாது. "ஏனையொன்றே, தேவர்ப் ‡ பராஅ முன்னிலைக் கண்ணே" (ரு) என்பதனால், தேவர்ப் பராயிற்றேனும் வண்ணகமு

க. (அ) "சீருடை நன்மொழி நீரொடு சிதறி" (பொருந. உச.) என்பதன் விசேடவுரையில் 'சீரெனவே பாணியுந்தூக்கு முளவாயின' என நச்சினார்க் கினியரும் (ஆ) "உமையவ ளொருதிறனாக வோங்கிய, விமையவனாடிய கொடுகொட்டியாடலும்" (சிலப். ௬: ௪௨-௩.) என்புழி, உமையவ ளொருதிறனாக வென்பதற்கு 'உமையவ ளொருகூற்றினளாய் நின்று பாணி தூக்குச் சீரென்னுந் தாளங்களைச்செலுத்த' என அடியார்க்கு நல்லாரும் இவ்வடியை உட்கொண்டு எழுதியிருப்பவை ஈண்டறிதற்பாலன.

உ. 'ஆணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி' என்பது அகப்பாட்டு வண்ணத்திற்கு மேற்கோள். தொல். செய் சூ உஉ௪. பேர். நச்.

ங. (அ) உமாதேவி சிவபெருமானுடனைக் காணுகிறாளென்பதுபெருவழக்கு; அன்றியும் (ஆ) அதனருமைகளை அறிந்து மகிழ்ந்து பாடுகிறாளென்றுங்கூறுப. இவற்றொடு அவ்வாடலுக்கிசையத் (இ) தாள மொத்துகிறாளென்றும் கூறுவதை "கடையுகந்தன்னி லெல்லா வுலகமுங் கடவுட் டீயா, னடலைசெய் தமலை தாள மறைதர நடிக்கு மீசன்" என்பதனானும் அறிக.

ச. 'காப்ப' என்றது ஒத்துதலாற் காப்ப என்றபடி 'திதத் தத்தத் தித்தத் திதி தாதை' (கந்தரந். ருச.) என்பதற்கு, 'திதத் தத்தத் தித்த' என்னுந் தாளமானங்களைத் திருநடனத்தாற் காக்கின்ற (தகப்பன்) பரமசிவனுமென உரை எழுதியிருத்தலுங் காண்க.

ரு. தொல். செய். சூ. கஙௌ.

(பிரதிபேதம்) *எம்மிடத்தேபொருந்தினாய், †ஆகாது. என்னை? 'ஏனையொன்றே' ‡பராஅய, பராவுதன் முன்னிலை.

மாகாது; எண்ணுஞ்சின்னமுமிழத்தலின். ஆகலின், * இஃது எண்ணிடையிட்டுச் சின்னங்குன்றிய (க) கொச்சகவொருபோகாயிற்று.

சீர்வகைக் கலிக்கு, "விராய தளைபு மொரூஉநிலை யின்றே." (உ) என்பதனால் தளைவிரவிவரப்பெறும் என்றலின், செல்லுமென நேரீற்றியற்சீர் வந்தது; "கலித்தளை யடிவயி னேரீற் றியற்சீர், நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே." (ந) என்ற விதி † கட்டளைக்கலிக்காம். ‡ (க)

கடவுள் வாழ்த்து முற்றிற்று.

—o:✻:o—

## முதலாவது பாலை.

"நடுவ ணைந்திணை நடுவண தொழியப், படுதிரை வையம் பாத்திய பண்பே." (ச) என்றும், "மாயோன் மேய காடுறை யுலகமுஞ், || சேயோன் மேய மைவரை யுலகமும், வேந்தன் மேய தீம்புன லுலகமும், வருணன் மேய பெருமண லுலகமு, முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச், சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே." (ரு) என்றும், நிலம் நான்கேயாகக் கூறலிற் பாலைக்கு நிலமின்றெனின், அற்றன்று; "புணர்தல் பிரித லிருத்த லிரங்க, லூட லிவற்றி னிமித்த மென்றிவை, தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே."(சு) என நால்வகை ÷ நிலத்திற்குங் கொண்ட உரிப்பொருட்கிடையே பிரிதலும் உரிப்பொருளாக ஆசிரியர் கொண்டார்; அப்பிரிவு நான்கு நிலத்திடையும் பொதுவாய் மயங்கிவருமென்று கருதி. ஆதலான் ஈண்டுப் பாலைத் திணையையும் திணையாக ஆசிரியர் ∴ நல்லந்துவனார் கோத்தாரென்று கூறுக.

---

க. கடவுள் வாழ்த்து முத்தமிழ்க்கும் பொதுவென்றும், இயற்றமிழில் வருங்காற் கொச்சக வொருபோகாய் வருமென்றும் கூறுவர், அடியார்க்கு நல்லார். சிலப். சு: ருடு.

உ, ந. தொல். செய். சூ. சுக, உஎடு.

ச, ரு, சு. தொல். அகத். சூ. உ, ரு, கச.

(பிரதிபேதம்) * இது எண்ணிடை. † கட்டளைக்கலிக்காதலின். ‡ மதுரையாசிரியர் நல்லந்துவனா ரியற்றிய கடவுள் வாழ்த்து முற்றும். || செய்யோன். ÷ நிலத்துங்கொண்ட ∴ நல்லந்துவனார் கோத்தார்.

ஆயின், "கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய், முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப" (௧) என்றலிற் கைக்கிளையும் பெருந்திணையுங் கோத்தல்வேண்டுமெனின், அஃது "உரிப்பொருளல்லன மயங்கவும் பெறுமே" (௨)என்பதனால், அவை உரிப்பொருளன்மையின் நால்வகை நிலத்தினும் மயங்கிவரப் பெறுமென்றார். ஆகலின் இத்தொகைக் கண்ணும் அவை மயங்கிவரக் * கோத்தாரென்று கூறி விடுக்க. அவை விரவிய பாட்டுகள் வந்துழி அவற்றைக் காட்டுதும்.

இனி, "சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" (௩) என்றவழிச் சொல்லாத முறையாற் சொல்லவும்படுமென்று † பொருள்கொண்டு அது பற்றிப் பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தலெனவுங் கோத்தார். (௪)‡ ஐங்குறுநூற்றினும் பிறவற்றினும் வேறுபடக் கோத்தவாறுங் காண்க.

௧, ௨, ௩. தொல். அகத். சூ. ௧, ௧௩, ௫.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ௪. ஐங்குறுநூறு | மரு | நெய் | குறிஞ் | பா | முல் |
| ஐந்திணையைம்பது | முல் | குறிஞ் | மரு | பா | நெய் |
| ஐந்திணை யெழுபது | குறிஞ் | முல் | பா | மரு | நெய் |
| திணைமாலைநூற்றைம்பது | குறிஞ் | நெய் | பா | முல் | மரு |
| திணைமொழி யைம்பது | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| கைந்நிலை | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| மதுரைக்காஞ்சி | மரு | முல் | குறிஞ் | பா | நெய் |
| பதிற்றுப்பத்து ௩௦ | நெய் | பா | மரு | குறிஞ் | முல் |
| பெருங்கதை | மரு | முல் | குறிஞ் | பா | ... |
| தொல்காப்பியம் | முல் | குறிஞ் | மரு | நெய் | ... |
| இறையனாரகப்பொருள் | குறிஞ் | நெய் | பா | முல் | மரு |
| நாற்கவிராயநம்பியகப்பொருள் | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| வீரசோழியம் | முல் | குறிஞ் | மரு | பா | நெய் |
| மாறனகப்பொருள் | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| இலக்கணவிளக்கம் | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |

கம்பர் முதலியோர் குறிஞ்சியை முதலாகக் கொள்வர்.

(பிரதிபேதம்) * கோத்தார் அவை வரவரப் பாட்டுக்கள் வந்துழி அவற்றுட்காட்டுதும், † பொருள் கொண்டமை பற்றி. ‡ ஐங்குறுநூற்றின் வேறுபடக் கோத்தவாறு காண்க.

உ

கணபதிதுணை.

# கலித்தொகை.

## முதலாவது பாலைக்கலி.

(உ.) தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக
வடங்காதார் மிடல்சாய வமரர்வந் திரத்தலின்
மடங்கல்போற் சினைஇ மாயஞ்செ யவுணரைக்
கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலு

ரு. முடன்றக்கான் முகம்போல வொண்கதிர் தெறுதலிற்
சீறருங் கணிச்சியோன் சினவலி னவ்வெயி
லேறுபெற் றுதிர் வனபோல் வரைபிளந் தியங்குந
ராறுகெட விலங்கிய வழலவி ராரிடை
மறப்பருங் காத லிவளீண் டொழிய
விறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் றைஇய;

கக. தொலைவாகி யிரந்தோர்க்கொன் றீயாமை யிழிவென
மலையிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
நிலைஇய கற்பினா ணீநீப்பின் வாழாதாண்
முலையாகம் பிரியாமை பொருளாயி னல்லதை;

கரு. இல்லென விரந்தோர்க்கொன் றீயாமை யிழிவெனக்
கல்லிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
தொல்லியல் வழாஅமைத் துணையெனப் புணர்ந்தவள்
புல்லாகம் பிரியாமை பொருளாயி னல்லதை;

கசு. இடனின்றி யிரந்தோர்க்கொன் றீயாமை யிழிவெனக்
கடனிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
வடமீன்போற் றொழுதேத்த வயங்கிய கற்பினா
டடமென்றோள் பிரியாமை பொருளாயி னல்லதை;

எனவிவள்;

௨௪. புன்கண்கொண் டினையவும் பொருள்வயி னகற
லன்பன் றென்றியான் கூற வன்புற்றுக்
காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்
யாழ்வரைத் தங்கி யாங்குத் தாழ்புநின்
றொல்கவின் றொலைத லஞ்சியென்
சொல்வரைத் தங்கினர் காத லோரே.

இஃது "ஒன்றாத் தமரினும்" என்னுஞ் சூத்திரத்து "நாளது சின்மையு மிளமைய தருமையுந், தாளாண் பக்கமுந் தகுதிய தமைதியு, மின்மைய திழிவு முடைமைய துயர்ச்சியு, மன்பின தகலமு மகற்சிய தருமையு, மொன்றாப் பொருள்வயி னூக்கிய பாலினும்" (க) * என்பதனான், இன்மையது இழிவு கூறி இல்வாழ்க்கைநெறி ஆற்றுதற்குப் பொருள்வயிற் பிரிவேனென்ற தலைமகற்குத், தலைமகளது இயல்பு கூறி, இப்பெற்றி யாளைப் பிரியாமையே பொருளாவதெனச் சொல்லிச் செலவழுங்கு வித்தமை தோழி தலைமகட்கு வந்து சொல்லியது.

இதன் பொருள்.

(௨) தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக
(௩) வடங்காதார் மிடல்சாய (௪) வமரர்வந் திரத்தலின்
மடங்கல்போற் சினைஇ மாயஞ்செ ய்வுணரைக்
கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலு

க. தொல். அகத். சூ. ௪௧.

௨. "முந்தி வந்துல கீன்ற முதற்பெய, ரந்தணன் படைவாங்கி" கம்ப. இராவணவதை ௧௧௨.

"தொடங்கற்கட் ........ மற்றைஇய" இது மைவரையுலகத்துப் பாலை வந்தது; தொல். அகத், சூ. ௧௩. நச்.

௩. "அடங்காதார் மிடல்சாய வமரர்வந் திரத்தலின்" என்பது இணை யெதுகைக்கு மேற்கோள். தொல். செய். சூ. ௯௩. நச்.

௪. சிவபிரான்தேவர்வேண்டத் திரிபுரம் எரித்தமை: (அ) "ஓங்குமலைப் பெரு விற் பாம்புஞாண்கொளீஇ, யொருகணை கொண்டு மூவெயி லுடற்றிப், பெருவிற லமரர்க்கு வென்றி தந்த, கறைமிடற் றண்ணல்" புறம். ௫௫. (ஆ) "திரிபுர மெரியத் தேவர் வேண்ட, வெரிமுகப் பேரம் பேவல் கேட்ப, வுமையவ ளொருதிற னாக வோங்கிய, விமையவ னாடிய கொடுகொட்டி யாடலும்" சில சூ: ௪௦-௪௩. என்பவற்றானுமறிய லாகும்.

(பிரதிபேதம்) * என்பதனுள்.

முடன்றக்கான் (க) முகம்போல வொண்கதிர் தெறுதலிற்
(உ) சீறருங் கணிச்சியோன் (ங) சினவலி னவ்வெயி
லேறுபெற்றுதிர் வனபோல் வரைபிளந் தியங்குந
ராறுகெட விலங்கிய வழலவி ராரிடை
(ச) மறப்பருங் * காதலி னிவளீண் டொழிய
(ரு) விறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் † றைஇய

எ - து: இறைவன் உலகுகளைப் படைக்கக் கருதிய இடத்தே, அப்படைத்தற் றொழிலைச் செய்தற்குரியனாய்த் தோன்றிய முதியவனாகிய அயன் முதலாகத் தேவர் வந்து ‡ தம்மெல்லைகொள்ளாத அவுணருடைய வலியைக் || கெடுத்தற்கு இரக்கையினாலே, (சூ) கூற்றினைப்போலச் சினந்து வஞ்சனையைச் செய்கின்ற அவுணரை, வஞ்சியாது எதிர்நின்று அடுகின்ற வலியுடனே, மூன்று கண்ணையுடைய இறைவன் மூன்றெயிலையுங் கோபிக்க, அவன்முகம் தெறுமாறுபோல, ஒள்ளியஞாயிறு சுடுகையினாலே, வரைபிளந்து பிறராற் சீறுதற்

க. "குழவிஞாயிற் றெழிலிகந்தெள்ளுந், திருமுகமருங்கிற் செருமீக்கூரி" பெருங். (க) ருரு: ச-ரு. எனவும், "ஊழியிற்சினவும், பருதிமண்டில மெனப் பொலி முகத்தினன்" கம்ப. வருணனைவழி. கரு. எனவும் சினக் குறிப்பையுடைய உதயனன் முகத்திற்கும் இராமன்முகத்திற்கும் ஞாயிற்றை உவமைகூறியிருத்தல் இங்கே அறிதற்பாலது.

உ. "சீறருங்......ஆரிடை" என்பது, குறிஞ்சி முறைமை திரிந்து பாலையாதலுக்கு மேற்கோள். சிலப். (கக) சூO-சுஎ

ங. கோபித்தலுக்குச் சினத்தலென்னும் பெயரன்றியும் சினவலென்றும் பெயருண்மையை, "சினவ லோம்புமின்" எனவருதலாலுமறிக.

ச. "மறப்பருங்காதலிவ ளீண்டொழிய, விறப்பத்துணிந்தனிர் கேண்மின் மற்றைஇய' என்பது முன்னிலை சுட்டியவொருமைக்கிளவி ஆற்றுப்படையல்லாதவழியும் பலரில்வழியும் போற்றுமற் பன்மையொடு கூறப்படுதற்கு மேற்கோள். தொல். எச்ச. சூ. சுங. 'முன்னிலை' தெய்வ.

ரு. "இறப்பத் துணிந்தனிர் கேண்மின் மற்றைஇய" என்பது பால் வழு வமைதிக்கு மேற்கோள். தொல். எச்ச. சூ. சுரு நச்; நேமி. சொல். எO. இ - வி சூ. ஙOO.

சூ. (அ) "கூற்றுவெகுண்டு வரினு மாற்றுமாற்றலையே" (ஆ) "காலனனைய கடுஞ்சின முன்ப" பதிற் கச; ஙக. (இ) "கூற்றொத்தீயே மாற்றருஞ் சீற்றம்" "புறம். ருசு. (ஈ) "காலன் கிளர்ந்தாலும் போல்வார்" பு-வெ. கரந்தை. உ. (உ) "மாற்றருஞ் சீற்றத்திற்

(பிரதிபேதம்) * காதலிவள், † ஐய, ‡ இரக்கையினாலே தம்மேவலை, || கெடுத்தற்குச் சினத்துக் கூற்றனைப்போலும் வஞ்சனையை,

கரிய (க) மழுவையுடையோன் சினக்கையினாலே அந்த முப்புரம் அழித்தலைப் பெற்று உதிர்வனபோல, போவார்க்கு வழியில்லையாக வீழ்ந்து குறுக் கிட்டுக் கிடந்த வெம்மை விளங்குந் தொலையாத வழியிடையே, நின்னை மறத்தலரிதாகிய வேட்கையையுடைய இவள் இவ்விடத்தே இறந்துபடும்படி யாக, ஐயனே! பொருள்வயிற் பிரியத் துணிந்தீர்; அங்ஙனந் துணிந்த நீர் யான் கூறுகின்றதனைக் கேட்பீராக; எ - று.

கண், காலத்தின்கண்வந்தது. கணிச்சியோன், சுட்டுப்பெயராய் நின்றது. அமரர் இரக்கையினாலே முக்கணன் மூவெயிலையும் உடல (உ) அவன்முகந் தெறுமாறுபோல, கதிர்தெறுகையினாலே வரைபிளந்து, அவன்சினக்கையி னாலே அவ் வெயில் எறுபெற்று உதிர்வனபோல உதிர்ந்து விலங்கிய ஆரிடை யென்க.

(ங) கேண்மின் ஐய என்றது, ஒருமைப்பன்மை மயக்கம்.

(ச) கதிர் தெறுதலின் மலைவெம்பிய சுரம் என்றதனான், (ரு) நடுவுநிலைத் திணைக்குரிய நண்பகலும் வேனிலும் குறிஞ்சியைச் சார்ந்து தோன்றினமை கூறினார். "சுரமென மொழிதலும் வரைநிலை யின்றே" (சா) என்பதனால், வழி யருமை கூறினார். இவ்விதிகள் மேல்வருவனவற்றிற்குங் கொள்க.

இது தரவு.

---

கூற்றுவனே" கனநூல். கரு. (ஊ) "தென் புலத்தவன் போற் செய்த சீற்றமும்" திருக்கழுக்குன்ற. நாராயண. கஉ.

(எ) 'மடங்கல்போற் சினைஇ' என்பதற்கு, 'சிங்கம்போலச் சினந்து' என்றலுமாம்; புறம். எக. உரை பார்க்க.

க. (அ) கணிச்சி, மழுவின்வேறான படைக்கலமுமாம்; "கையது கணிச்சியொடு மழுவே மூவாய், வேலுமுண்டத் தோலாதோற்கே" அகம் கடவுள் எனவருதல் காண்க. (ஆ) "எறிதரு கணிச்சிச் செங்கையீசன்" கந்த. காமதகன. அஅ.

உ. சிவபெருமான் சினந்து (அ) திரிபுரத்தைத் தெய்வக்கணையால் எரித் தாரென்பது பயின்ற பெருவழக்கு; அன்றியும் (ஆ) சிரித்தெரித்தா ரென்பதும் பெருவழக்கே; (இ) விழித்தெரித்தா ரென்றுங் கூறுப. இவற்றால் முகத்திற்குத்தெறுதல் கூறினார். இம்மூன்றிற்கும் வட மொழிதென்மொழி இரண்டினும் ஆதாரமுண்டு.

ங. (அ) "இறத்திரா லையமற் றிவணிலைமை கேட்டீமின்" கலி. உரு. (ஆ) "வரையிடை வாரன்மினைய" திணைமொழியைம் ரு. (இ) "ஐயா விளம்பழமே யென்கின்றீர்" சீவக. கருருங.

ச. இதற்கேற்ற சொற்றொடர், எட்டாவது கலியில் உள்ளது.

ரு. தொல். அகத். சூ. கூ. சா. தொல். பொருளியல் சூ. உஉ.

கக. (க) தொலைவாகி யிரந்தோர்க்கொன் றீயாமை * யிழிவெனம்
மலையிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
நிலைஇய கற்பினா ணீநீப்பின் வாழாதாண்
முலையாகம் பிரியாமை பொருளாயி னல்லதை

எ - து: முன்பு உண்டானபொருள்களெல்லாம் கொடுத்துத்தொலைந்து. பின்பு இல்லையாய், வந்து இரந்தவர்களுக்குச் சிறிதுங் கொடாதிருத்தல் இழிவாமென்று கூறி, மலையைக் கடந்துபோய்த் தேடுதலைக் கருதின (உ) பொருள் நன்கு மதிக்கும் பொருளாயினும், யான் வருந்துணையும் ஆற்றியிருவென்று ஆற்றுவித்த கூற்றிலே நிலைபெற்ற கற்பினையை முன்பு உடையவள் நீ நீப்பின் இளமைச்செவ்வி முதிர்வினாலே உயிர் வாழாதாளாயினள்; இனி அவளுடைய, நிரம்பிய முயக்கத்தை விரும்புகின்ற முலையினையுடைய மார்பைப் பிரியாதிருத்தல் நின் மனத்திற்குப் பொருளாயிருக்குமாயின், அதுவே பொருளாவதல்லது பிரிகின்றது பொருளாகுமோ? எ - று.

தொலைவு, முன்பு உண்டாய்ப் பின்பு † இல்லையாதலாம்.

கரு. (ங) இல்லென விரந்தோர்க்கொன் றீயாமை யிழிவெனக்
கல்லிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ

---

க. 'ஈதா கொடுவென' என்னுஞ் சூத்திரவுரையில் இவ்வுரையாசிரியர், "இவைமூன்றும் (ஈ, தா, கொடு என்பவை) இல்லென இரப்போர்க்கும் இடனின்றி இரப்போர்க்கும் தொலைவாகி இரப்போர்க்கும் உரியவென்று உணர்க" என இத்தாழிசை முதலடிகளிலுள்ளசொற்களை அமைத்திருத்தல் ஈண்டு அறிதற்பாலது. தொல். எச்ச. சூ. சஅ.

உ. கலி. கச. இன் கo. ஆம் அடிக்குறிப்பில் ஈண்டைக்கு இயைவன ஒப்புநோக்குக.

ங. (அ) "இல்லெனமறுக்குஞ் சிறுமையுமிலனே" (ஆ) "ஈயெனவிரத்தலிழிந்தன் றதனெதிர்,ஈயேனென்ற லதனினு மிழிந்தன்று" புறம். கஅo; உoச. (இ) "அன்னவை பிறவு, மடம்பட வந்த தோழிக் கண்ணும்" என்புழி, கற்பின்கட் டோழிகூற்று நிகழ்ந்ததற்கு "இல்லென......பொருளாகுமோ" என்பதனை மேற்கோள் காட்டி, "தோழி இந்நிகரன கூறிய வழித் தலைவன்கூற்று நிகழும்; இவ்வழிக் கூறுங் கூற்றுக் காமமாகத் தோன்றாது பொருளாகத் தோன்றும்; காமத்திற்கு மாறாகக் கூறவேண்டுதலின்" என்பர். இளம். தொல். கற். சூ. ௯. (ஈ) தலைவன், தலைவிமுன்னர்த் தன்னைப் புகழுங்கூற்றிற்கு "இல்லென விரந்தோர்க் கொன்றீயாமை யிழிவு" என்பதை மேற்கோள் காட்டி, "இவ்வாறு கூறவே, அவன் 'யான் செய்யேன்' எனத் தன்னைப் புகழ்ந்த வாறாம்" என விளக்குவர், இளம். இதனைப் பின்பற்றுவர், நச். தொல். கற். சூ. சo. (உ) "ஈதலாவது இல்லென விரந்தோர்க்குக் கொடுத்தல்" தொல். புறத். சூ. கரு. இளம்.

(பிரதிபேதம்) * இளிவு, (இச்செய்யுளின் மூலமுறை முழுவதினும்), † இல்லையாதல்,

தொல்லியல் * வழி அணைத் துணையெனப் புணர்ந்தவள்
புல்லாகம் பிரியாமை பொருளாயி னல்லதை

எ - து: எக்காலமும், எமக்குப் பொருளில்லையென்று கூறி வந்து இரந்தவர்களுக்குச் சிறிதுங் கொடாதிருத்தல் இழிவாமென்று கூறி, மலையைக் கடந்துபோய்த் தேடுதலைக் கருதின பொருள் நன்கு மதிக்கும் பொருளாயினும், நமக்குப் (க) பழைய உழுவலன்பு வழுவாமை வருமென்ற கூற்றை உட்கொண்டதனாலே நீ பிரியாயென்றே கூடினவளுடைய, தான் புல்லுதலையே விரும்பின இளமைச் செவ்வியையுடைய மார்பைப் பிரியாதிருத்தல் நின் மனத்திற்குப் பொருளாயிருக்குமாயின், அதுவே பொருளாவதல்லது பிரிகின்றது பொருளாகுமோ? எ - று.

கக. (உ) இடனின்றி யிரந்தோர்க்கொன் றீயாமை யிழிவெனக்
கடனிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
(ங) வடமீன்போற் றொழுதேத்த வயங்கிய கற்பினா
டடமென்றோள் பிரியாமை பொருளாயி னல்லதை

எ - து: தம்முடைய இல்வாழ்க்கைக்கு வேண்டும் பொருளில்லையென்று கூறி வந்து இரந்தவர்க்குச் சிறிதுங் கொடாதிருத்தல் இழிவாமென்று கூறி,

---

க. (அ) "நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉம், மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம், பண்டும் பண்டும் பல்பிறப் புளவாற், கண்ட பிறவியே யல்ல காரிகை" மணி. உக : உக-ஙஉ. (ஆ) "கிழவன் கிழத்தியெனவே பல பிறப்பினும் ஒருவர்க்குஒருவர் உரிமையெய்திற்று" தொல். களவியல். சூ. உ. நச். (இ) "இருவரும் எதிர்ப்பட்ட ஞான்று தொடங்கி உழுவலன்பால் உரிமை செய் தொழுகலிற் கிழவனுங் கிழத்தியுமென்றார்" தொல். கற். சூ. க. நச். என்பன காண்க.

உ. இடனென்பது செல்வமென்னும் பொருளில்வருதற்கு "இடனின்றி யிரந்தோர்க்கு" என்பது மேற்கோள்; குறள். ககo. பரி.
(அ) "பிரிவாற்றாமை யென்பது, களவிற் பிரிவாற்றுதல் வேண்டுமாறு போலக் கற்பினுட் பிரிவாற்றுதல் வேண்டப்படாது; என்னை? புறத்தார்க்குப் புலனாகாமை மறைத்தல் கற்பிற்கு வேண்டுவதன்றாகலின்" என்று கூறி, "இடனின்றி......மென்றோள் பிரியாமை பொருளாயினல்லதை" என்பதனை மேற்கோள்காட்டி, "இனைய கற்பினாளைப் பிரியாமை பொருளாயினன்றி நும்மால் தரப்படும் பொருள் பொருளாகுமோ என்றதன் கருத்தாவது, பிரிவாற்றாமையின் இவள் இறந்துபடுவள், பின்னை அப்பொருள்கொண்டு ஆற்றும் இல்லறம் யாண்டையதெனத் தலைமகள் பிரிவாற்றாமை கூறியவாறாயிற்று" என்பர் பேர். தொல். மெய்ப். சூ. உச. (ஆ) இதனையே பின்பற்றிச் சுருக்கி எழுதுவர் இ-வி. உரைகாரர் இ-வி. சூ. ருஅo.

ங. அருந்ததி, (அ) அனசூயையின் திருமகள்; (ஆ) வசிட்டமுனிவரின் பத்தினி; (இ) வானிடத்தே வடதிசைக்கண் துருவநட்சத்திரத்தி

(பிரதிபேதம்) * வழாஅமை.

காட்டைக் கடந்துபோய்த் தேடுதலைக் கருதின பொருள் நன்கு மதிக்கும்

னருகிலுள்ள எழுமுனிவர் குழுவிடையே கொழுநனொடு செழுமி ஒரு சிறுவிண்மீன் வடிவமாகத் தோற்றுபவள்; (௯) கலங்காத தெய்வக் கற்புடையவள்; (உ) வாழ்நாளற்றவர்க்குத் தோன்று தொளிப்பவள்; (ஊ) வதுவைக்காலத்துக் கணவரால் மகளிர்க்குக் காட்டப்படுபவள்; (எ) அம்மகளிரால் அக்காலத்துத் தம் வாழ் நாளை அறிதற்கு நோக்கப்படுபவள்; (ஏ) கற்புடைமகளிரால் அந்திக் காலத்துத் தொழப்படுபவள்; (ஐ) தன்னைத் தரிசித்தோர்க்கு மாசு நீக்குபவள்; (ஒ) புகழ்மிக்கவள்; (ஓ) ௧: வடமீனவள், உ: வட மீன், ௩: வடக்குமீன், ௪: உத்தரமீன், ௫: தெய்வம், ௬: அணங்கு, எ: கடவுள், அ: கடவுண்மீன், ௯: சிறுமீன், ௧௦: அந்திமீன், ௧௧: செம்மீன், ௧உ: சாலினி, ௧௩: சாலி, முதலிய பெயருடையவள்; (ஔ) கற்பிற் சிறந்தார்க்கு எடுத்துக்காட்டாகக் கூறப்படுபவள்; (ஃ) ௧: "பெருநல் வானத்து வடவயின் விளங்குஞ், சிறுமீன் புரையுங் கற்பி னறுநுதல், வளைக்கை மகடூஉ" பெரும்பா ணாறு ௩௦உ-௪. உ: "அருந்ததி யனைய கற்பிற்..........புதல்வன்றாயே" ஐங். ௪௪உ. ௩: "வடமீன் புரையுங் கற்பின் மடமொழி யரிவை" புறம். ௧உஉ. ௪: "அருந்ததிக் கற்பினார் தோளும்" கடுகம். ௧. ௫: "பொருந்திய வுலகினுட் புகழ்கண் கூடிய, வருந்ததி யகற்றிய வாசில் கற்பினாய்" ௬: "அருந்ததிக் கற்பி னாளை யடிபணிந் தவனுங் கண்டான்" எ: "தொழுதகு தெய்வ மன்னாள்" சீவக. ௩உஎ; ௧எஉ௬; ௧௬௧உ. அ: "தீதிலா வடமீனின் றிறமிவ டிறமென்றும்" "வடமீன் கற்பின் மனையுறைமகளிர்" சில. (௧) உஎ; (௫) உஉ௬. ௯: "கடவுண்மீன் கற்புமாதர்" ௧௦: "வடபுலத்து வயங்கு மருந்ததிக், கடவுட் கற்பினர்" காசி. தேவர்கள் பிரமலோகம். உஅ; கற்பிலக்கணம் ௩௪. ௧௧: "வடபுலத்தினி னேக்குநர் மாசற விளங்குங், கடவுண் மீனினுந் தொழுதகு கற்பினர்க் கரசாங், கொடிமருங்குலை" நைடதம். தேவி யைக்கண்ணுற்ற உ௫. ௧உ: "தொழத்தகு வடமீனென்ன, நடையறி புலவரேத்தி நவிறம யந்தியென்பாள்" பிரமோ. சோமவார விரத ௪௦. ௧௩: "கற்பா லந்திவா யருந்ததி" ௧௪: "கற்பி லந்திமீ னனையவள்" ௧௫: "வடமீனிகர் கற்பினாளை" ௧௬: விண்ணலங் கருகித் தோன்று மேதகு வடமீனன்றி, மண்ணலங் குவமை சொல்ல மடந்தையர் யாரு மில்லாப், பண்ணலங் கடந்த மென்சொற் பாவையை" வில்லி. சம்பவ. உ௫, வாரணாவத. உஅ, திரௌபதி. ௬௬, சூது. உ௦உ. ௧எ: "மறுவி லாவட மீன்புரை கற்பினாள்" திருவிளை. மாணிக். ௪. என்பவை கண்டு அறிதற்பாலன. பிறவும் விரிப்பிற் பெருகும்.

பொருளாயினும்,(க)*அருந்துதிபோலே(உ)எல்லாருந்தொழுது வாழ்த்தும்படி விளங்கிய கற்பினையை முன்புடையவளுடைய, காமச் செவ்வியாற் பெருமையையுடையவாய, மெல்லியவாகிய தோள்களைப் பிரியாதிருத்தல் நின் மனத்திற்குப் பொருளாயிருக்குமாயின், அதுவே பொருளாவதல்லது பிரிகின்றது பொருளாகுமோ? எ - று.

பிரியாமை யென்றது பின்பு பிரிகின்றதனைத் தோற்றுவித்து நின்றது. கற்பு, கற்பினையாதல் (ங) கற்பியலான் உணர்க.

(ச) பழியொடு வருவன செய்யலாகாதெனத் தோழி விலக்கலின் அசை வென்னும் மெய்ப்பாடு தோன்றிற்று.

இவை மூன்றும், தாழிசை.

உங எனவிவள்

---

க. அருந்ததியென்பது, அருந்துதியென்றும் தமிழில் வழங்குமென்பதை, செம்மீனென்பதற்கு அருந்துதியென்று (பதிற். ங௧.) உரை எழுதப் பெற்றிருத்தலாலும் "சூளையருந்துதி......யென்றெண்ணி" கம்பராந். ஙச.) "கற்பினல, மருந்துதியானம் புவிக்களித்தார்" (திருமுல்லை. அரு.) எனச் சிவஞானமுனிவரும், "அருந்துதிக்குக் கற்பணியா ரருந்துதிக்குக் கற்பணியார்" திருவானைக்கா. கோச் செங்கணர் சு.) எனக் கச்சியப்பமுனிவரும் மாற்றவொண்ணாதபடி அமைத்திருத்தலாலும் அறிக.

உ. கற்புடைமகளிரை எல்லாருந்தொழுதேத்தல்: (அ) "உரைசால் பத்தினிக்குயர்ந்தோ ரேத்தலும்" - 'புகழமைந்த கற்புடை மகளை மக்களேயன்றித் தேவரு முனிவரு முதலாயுள்ளோர் சென்றேத்துதல் இயல்பாகலும்' சிலப். பதிகம். ருசு. அடியார். (ஆ) "தெய்வந்தொழா அள் கொழுநற் றொழுவாளைத், தெய்வந் தொழுந்தகைமை திண்ணிதால்" சில. உங. இறுதிவெண்பா. (இ) "நாடு மூரு நனிபுகழ்ந் தேத்தலும்,... பாடு சான் மிகு பத்தினிக் காவதே" வளையாபதி. (ஈ) "படியேழுந் தலைமேற் கொண்ட கற்பினள்" கம்ப. கடல்காண். எ. (உ) "தொழுதகு கற்பினளை" நைடத.மணம்புரி சுo. என்பவை முதலியவற்றால் அறியலாகும். (ஊ) "அருந்ததியும் வந்தனைசெ யஞ்சொலிள வஞ்சி" என்பதும் ஈண்டறிதற்பாலது.

ங. கற்பியல் முதற் சூத்திரத்து, 'கற்பியல் - கற்பினது இயலெனவிரிக்க. இயல், இலக்கணம்......அது கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்றெனவும் அவனை இன்னவாறே வழிபடுக வெனவும் இருமுதுகுரவர் கற்பித்தலானும் அந்தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்தும் ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும் ஒழுகும் ஒழுக்கம் தலை மகன் கற்பித்தலானுங் கற்பாயிற்று' என எழுதிய பகுதி ஈண்டறிதற்பாலது.

ச. (அ) "கழியக் காதல ராயினுஞ் சான்றோர், பழியொடு வரூஉ மின்பம் வெஃகார்" அகம். ௧௧உ. (ஆ) "பாவமு மேனைப் பழியும் படவருவ, சாவினுஞ் சான்றவர் செய்கலார்" நாலடி. உகரு.

(பிரதிபேதம்) * அருந்ததி.

க. சிற். 300, அருந்துதி

புன்கண்கொண் டினையவும் பொருள்வயி னகற
லன்பன் றென்றியான் கூற வன்புற்றுக்
(க) காழ்வரை நில்லாக் கடுங் (உ) களிற் றொருத்தல்

---

க. யானையை அடக்கி நல்வழியில் நடத்துதற்கும் வேண்டுவன செய்து அதனைப் பாதுகாத்தற்கும் மேலே பாகரிருப்பதுபோலக் கீழே பரிக் கோற்காரரு முண்டென்பது, (அ) "கீழுமேலுங் காப்போர்நீத்த, வறுந்தலைப் பெருங்களிறு போலத், தமியன்வந்தோன்" நற். கஅஉ. (ஆ) "சினஞ்சிறந்து, கோலோர்க் கொன்று மேலோர் வீசி ..உழிதரும் கடாஅ யானையும்" மது. ௬அ௦-அ௬. (இ) "எதிர் பரிக்காரரோட" (ஈ) "பரிக்காரர் தாமூ, மீதங்கு கடாவுவாரும்" (உ) "தாடத்திற் பரிக்காரர்தலையிடறி" பெரிய. எறிபத்த கஉ; சக. திருநாவுக்கரசு. கக௦. (ஊ) "நெடுவேயும் பாகுஞ், சுளிந்துவரு கடகளிற்றுச் சுவேதவாகனன்" (எ) "பாகுபரிக்கோல் யாவுந்தூரத்தே, காணினு நின்று கொதிப்பது... அவ்வேழம்" (ஏ) "வேயொடுபாகடர் கம்பநிகளமதாசலம்" வில்லி. வசந்த கக. பதினூரும். க௦. பதினேழாம். சுசு. (ஐ) "காழோர் கடுங்களிறு கவளங் கைப்ப" மது. சு௫அ-கூ. (ஒ) "காழிற்குத்திக் கசிந்தவரலைப்பக், கையிடை வைத்து மெய்யிடைத் திமிரு; முனியுடைக் கவளம்போல" நற். ௬சு௦ (ஓ) "வெலற்கருங் குஞ்சரம் வேட்டம் பட்டெனத், தலைத்தலை யவர் கதந் தவிர்ப்ப" சீவக. சக. என்பவற்றால் விளங்கும். இப்பரிக்கோல்: குத்துக்கோல், தாறு, கவைமுட்கருவி, கழை, வேய் முதலிய பெயர்களால் வழங்கப்படும். 'களிறுகொளவையிற் காழ்வரைநிற்கில கழிவ' பாகவ (க௦) மதுரை கூ. என்பது இங்கு ஒப்புநோக்கற்பாலது.

உ. (அ) "வயக்களிற் றொருத்தல்" (ஆ) "பெருங்களிற் றொருத்தலின்" அகம். எஅ, ௬௦அ. (இ) "இருங்களிற் றொருத்தல்" புறம். கசு௦. (ஈ) "வன்களிற் றொருத்தல் யாவும்" கந்த. தாரக. சச.

(உ) வேழக்குரித்தே விதந் துகளிறென்றல் என்புழி 'விதந்தென்ற விதப்பினுற் களிறென்பது சாதிப்பெயர் போலவும் நிற்குமென்பது; அஃதாவது யானையென்னும் சாதிப்பெயரினைக் களிறென்னும் பெயர் வந்து [சிற] (குறி)ப்பித்தாற் "[கடுங்]களிற் றொருத்தல்" என்றும் ஆகுமென்பது; என்று (தோல். மர. சூ. ௬ச) பேராசிரியரும் (ஊ) களிற் றொருத்தல் என்புழி, களிறென்பது எருமையினொருத்தல் முதலாயினவற்றை நீக்குதலாற் பொருள் வேறுபாடுடைமையின் ஒரு பொருட் பன்மொழியாகாது; பண்புத்தொகையு ளடங்குமென்று (நன். பொது. சூ. சஎ.) மயிலைநாதரும் கூறுவர்.

(க) யாழ்வரைத் தங்கி யாங்குத் தாழ்புநின்
றொல்கவின் றொலைத லஞ்சியென்
சொல்வரைத் தங்கினர் காத லோரே

எ - து: என்று யான் நினக்குக் கூறும்படியாக, இவள் பொலிவழி வினைத் தன்னிடத்தே கொண்டு வருந்தவும், நீ பொருள் தேடப்பிரிகின்றது உனக்கு அன்பு அல்லவென்று யான் சொல்ல, அச்சொல்வரைத் தங்காத காதலோர், பின்னர் நினது இயற்கைநலந் தொலைதலைக் கூற, அச்சொற்கு அஞ்சி, பரிக்கோலாற் குத்தவுந் தன்னெறியில் நில்லாத செலவுகடியகளிற் றொருத்தல் மெல்லிய யாழோசையின் எல்லையிலே தங்கினாற்போல, அன்புற்றுத் தாழ்ந்து, குற்றேவன் மகளாகிய என் கூற்றின் எல்லையிலே தங்கிப் போகாதொழிந்தார்காண்; எ - று.

தோழி தான் செலவழுங்குவித்தமை கூறலின் கூறவென்பதனைத் தொலைதலோடுங் கூட்டுக.

தங்கினர் என்பதனால் தங்காமையும் வந்தது.

---

க. யானை யாழோசையி னெல்லையிலே தங்குமென்பதனை (அ) "அணியிழை மகளிரும் யானையும் வணக்கு, மணியொலி வீணை" (க) ௩௫: ௧௦௦-௧௦௧. (ஆ) "வார்கவுள்யானை வணக்குதற்கியைந்த, வீணைவிச்சையொடு விழுக்குடிப் பிறவரிது" (௨) ௬. ௧௧௪-௫. என்னும் பெருங்கதையும் அந்நூல் (௪) ௩. யாழ்பெறறதில் (இ) அருஞ்சுகன் செய்தியிலுள்ள வீணைவரலாற்றைக்கூறும் ௬௬-௧௦௭. ஆம் அடிகளும் (ஈ) "மகரயாழ் வல்லமைந்த னொருவனைக் கண்டமதத்ப், புகர்முகக் களிற்றின் மன்னன் முனிவனை வணங்கி" மேரு. அ. வச்சிராயுதனுத்தரம் புக்க. ௩௧. (உ) "ஐம்புலவேழத்தின் வெந்தொழி லவியக், கருணை வீணை காமுறத் தழீஇ" ஞானாமிர்தம். ௪: (ஊ) "ஆடகத் தியன் மேனிலை மிசையணங் கனையார், மாடகத்தனி யாழிசைக் குவந்துறும் வான, நாடகத்து வெண்களிற்றினை நளினமென் மலர்ப்பூம், பாடகத்தடி நடையினாற் பருவர லுறுப்பார்" காஞ்சிப். திருநகரப். ௮௦. (எ) "நிலவுவெண்கரி வணக்கிய நிகரில் யாழ்தழுவி, மலருமின்னிசை யெழுப்புவர் மேனிலமகளிர்" தணிகை. திருநகரப். ௧௨௫. என்பவைகளும். (ஏ) "இசையினி லிவட்குத்தோற்றும் யானையால் வேறுமென்னி, னிசைவதொன்றன்று கண்டீர்" சீவக. ௭௪௮ என்பதன் விசேடவுரையில் 'யானைநாதத்திற் றோற்றுதலின் அதற்கு வணங்குத லியல்பு' என்று நச். எழுதியிருத்தலும் வற்புறுத்தும். (ஐ) யாழென்பது வீணைக்கும், வேறோரிசைக்கருவிக்கும் பெயராம்.

தங்கினாற் போலவென்னும் தொழிலுவமத்திற்கு [அன்பன்றென்றதும் தொல்கவின் றொலைதலென்றதும்?]......பொருளாயினவாறு காண்க.

யாழ் தோழியும் அவள் கூறியது யாழிசையுமாகக் கொள்க.

எனவிவள், தனிச்சொல். எஞ்சியது சுரிதகம்.

இச்சுரிதகத்தாற் றலைவற்கு உண்டாகிய அருளென்னும் மெய்ப்பாட்டால், தலைவிக்குப் புணர்வென்னும் உவகை பிறந்தது.

செலவழுங்கலின் முல்லையாமெனின், ஆகாது; "செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே, வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்" (க)என்றுராகலின். இவ்விதி மேற் செலவழுங்குவனவற்றிற் கெல்லாங் கொள்க.

"ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே, கொச்சக முறழொடு கலி *நால்வகைத்தே." (உ) "அவற்றுள், ஒத்தா ழிசைக்கலி யிருவகைத் தாகும்." (ங) "இடைநிலைப் பாட்டுத் தரவுபோக் கடையென, †நடைநவின் றொழுகு மொன்றென மொழிப." (ச)" தரவே தானு நாலடி யிழிபா, யாறிரண் டுயர் பென்றறையவும் படுமே." (ரு)"இடைநிலைப் பாட்டே, தரவகப் பட்ட மரபின வென்ப."(சு)"அடைநிலைக்கிளவி தாழிசைப் பின்னர்,நடைநவின் றொழுகுமா ங்கென் கிளவி"(எ)"போக்கியல் வகையே வைப்பெனப் படுமே." (அ)"தரவிய லொத்து மதனகப் படுமே,புரைதீ ரிறுதி நிலையுரைத் தன்றே."(கூ)என்று அகநிலையாகியகட்டளை ‡யொத்தாழிசைக்குக்கூறிய இலக்கணம் சீர்வகை ||யொத்தாழிசைக்கும் ஒத்தலில் இவ்விலக்கணங்கொண்டு இத்தொகையில் ஒத்தாழிசை செய்தாரென் றுணர்க.

அவற்றுள், இது மிகத்துள்ளிவந்த பத்தடித்தரவும், "ஒத்தாழிசையு மண்டில யாப்புங், குட்டமு நேரடிக் கொட்டின வென்ப." (கO) என்பதனால் ஒத்ததாழ்த்த ஓசைபெற்றுத், தரவகப்பட்ட ÷மரபினவாய் "ஒத்து மூன்றாகு மொத்தா ழிசையே"(கக)என்பதனான் ஒத்துமூன்றாய்வந்த தாழிசையும்,நடைநவின்றொழுகு மென்றதனால் "எனவிவள்" என்று பொருள் பெற்றுவந்த அடைநிலைக் கிளவியும், இடைநிலைப்பாட்டின் பொருண்முடிவு காட்டித் தரவிற் சுருங்கிவந்த சுரிதகமும் பெற்றுத், தரவினுந் தாழிசையினும் நேரீற்றியற்சீரும் பெற்றுத், தரவின்கண் ஏறுபெற்றுதிரென நேர்புநேர்நிரையாகிய வஞ்சியுரிச்சீரும் பெற்றுவந்த முதனிலையொத்தாழிசைக் கலிப்பா.

* "எழுசீ ரிறுதி யாசிரியங் கலியே." (கஉ) என்பதனால் ஈற்றடி நாற்சீரும் அயலடி முச்சீருமாக எழுசீரான் இற்றது சுரிதகம். இவ்விதி மேல்வருவனவற்றிற்குங் கொள்க. (க)

---

க. தொல். கற். சூ. சச. உ-கூ. தொல். செய். சூ. கஙO-கஙஎ.
கO, கக, கஉ. தொல். செய். சூ. ககரு, கசஉ, எசு.

(பிரதிபேதம்) * "நால்வகைத்தே" † "நடைபயின்றொழுகு" ‡ "ஒத்தாழிசைகட்கு"
|| ஒத்தாழிசைகட்கு, ÷ மரபினனவாய்,

(ெ) (க) அறனின்றி யயர்த்தாற்று மம்பலை நாணியும்
வறனீந்தி நீசெல்லு நீளிடை நினைப்பவு
மிறைநில்லா வளையோட விதழ்சோர்பு பனிமல்கப்
பொறைநில்லா நோயோடு புல்லென்ற நுதலிவள்
விறனல னிழப்பவும் வினைவேட்டாய் கேளினி;
சு உடையிவ ளுயிர்வாழா ணீநீப்பி னெனப்பல
விடைகொண்டியா மிரப்பவு மெமகொள்ளா யாயினை
கடைஇய வாற்றிடை நீர்நீத்த வறுஞ்சுனை
யடையொடு வாடிய வணிமலர் தகைப்பன;
க0 வல்லைநீ துறப்பாயேல் வகைவாடு மிவளென
வொல்லாங்கியா மிரப்பவு முணர்ந்தீயா யாயினை
செல்லுநீ ளாற்றிடைச் சேர்ந்தெழுந்த மரம்வாடப்
புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பன;
கச பிணிபுநீ விடல்சூழிற் பிறழ்தரு மிவளெனப்
பணிபுவந் திரப்பவும் பலசூழ்வா யாயினை
துணிபுநீ செலக்கண்ட வாற்றிடை யம்மரத்
தணிசெல வாடிய வந்தளிர் தகைப்பன;
எனவாங்கு;
கஅ யாநிற் கூறவு மெமகொள்ளா யாயினை
யானு திவள்போ லருள்வந் தவைகாட்டி
மேனின்று மெய்கூறுங் கேளிர்போ னீசெல்லுங்
கானந் தகைப்ப செலவு.

இது தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி, தலைமகட்கு அஃது உரைத்து, அவளது ஆற்றமையின்வகை தலைமகற்கு உணர்த்தவும், பின்னும் பிரிவின்மேற்சென்ற உள்ளத்தனாயினானை, நீர்செல்லுங்கானமே நும்மை இடிக்குங் கேளிர்போல விலக்குமென, அவன் செலவழுங்கும் வகை அவள் கூறியது.

---

க. (அ) "பிரியுங்காலை யெதிர்நின்று சாற்றிய மரபுடை யெதிரும்" என்புழி, கற்பினுள் தலைமகன் சேயிடைப் பிரியுங்காலத்துத் தோழி கூற்று அவன்மாட்டும் தலைமகள்மாட்டும் ஆமென்று கூறித் தலைமகன் மாட்டு ஆனதற்கும், தொல். கற். சூ. க. (ஆ) சுரிதகம் வெண்பா வியலான் இற்றதற்கும் தொல். செய். சூ. எஉ. இச்செய்யுளை மேற்கோள் காட்டினர்; இளம்.

### இதன்பொருள்

அறனின்றி * யயறூற்று மம்பலை நாணியும்
(க) வறனீந்தி நீசெல்லு நீளிடை நினைப்பவு
மிறைநில்லா வளையோட விதழ்சோர்பு பனிமல்கப்
(உ) பொறைநில்லா நோயோடு புல்லென்ற நுதலிவள்
(ந) விறனல † ணிழப்பவும் வினைவேட்டாய் ‡ கேளினி

எ - து: யான் நின்பிரிவை உணர்த்துகையினாலே முன்கையிற் கிடவா வாய் வளைகழலக், கண்ணீர் இமையினின்று முன்னர்ப் || பெருகி வீழ்ந்து, பின்னர் இமை நிறையும்படி நிற்க, பொறுக்கும் அளவில் நில்லாக் காமநோயாலே பொலிவழிந்த நுதலினையுடைய இவள் பின்பு அயலிலுள்ளார் தந் (சு) நெஞ்சில் அறமின்றாய் (ரு) வெளியாகக்கூறும் (சூ) அம்பலைக் கூசுதலானும், நீ அரிதாகக் கடந்துசெல்லும் நீண்டவழியில் வற்கடமான காலத்தை நினைக்கையினாலும், தனது வெற்றியையுடைய நலத்தை இழவாநிற்கவும், வினைமேற்சேறலை விரும்பினவனே, இப்பொழுது யான் கூறுகின்றதனைக் கேள்; எ - று.

இது தரவு.

சூ உடையிவ ளுயிர்வாழா ணீநீப்பி னெனப்பல
(எ) விடைகொண்டியா மிரப்பவு மெமகொள்ளா யாயினை

---

க. (அ) செய்தெனெச்சம் நிகழ்காலத்திற்குமுரித்தாய்வருதற்கு "வறனீந்தி நீ செல்லு நீளிடை நினைப்பவும்" என்பதை மேற்கோள் காட்டினர்; நச். தொல். வினை. சூ. சஉ. (ஆ) இதனை, துணைவினை ஒருகாலத்தெய்தியதற்கு மேற்கோள் காட்டினர்; பிரயோக விவேக நூலார். திங். ரு. (இ) இருள் பருகி யென்பதற்கு இருளை விழுங்கா நின்றென்று பொருளும் செய்தெனெச்சம் நிகழ்காலம் உணர்த்திற்றென்று இலக்கணமும் எழுதி யிருத்தல் பெரும்பா. க. இங்கே அறிதற்பாலது.

உ. பொறைநில்லா நோய்கூரப் புல்லென்ற நுதலிவள், என்பது (நன் உரிச். சூ. கரு.) மயிலைநாதருரையிற் காணப்படுகின்றது.

ந. விறனல னிழத்தல் கலி. கஉச. கரு. "விறன்மேனி" குறிஞ்சி. உ-ந.

ச. "அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும், புன்மையாற் காணப்படும்" குறள். கஅரு.

ரு. தூற்றல் - வெளிப்படையாகச் சொல்லுதல்; "பிறர்பிறர் சீரெல்லாந் தூற்றி" நீதிநெறி. உ௦.

சூ. 'அம்பலு மலருங்களவு' இறை. சூ. உஉ. என்பதனுரை ஈண்டு நோக்கற்பாலது.

எ. "உடையோர்போல விடையின்று குறுகி" புறம். ருச. "நம்பன் சிறிதே யிடைதந்திது கேட்க" சீவக. ககஎரு என்பவற்றைநோக்கின், இங்கு இடையென்பதற்குச் சமயமென்று பொருள்கொள்ளலுமாம்.

(பிரதிபேதம்) * அயற்றூற்று மம்பலர், † விளர்ப்பவும், ‡ கேளினி, || பெருக வீழ்ந்து.

கடைஇய வாற்றிடை நீர்நீத்த வறுஞ்சுனை
(க) யடையொடு வாடிய வணிமலர் தகைப்பன

எ - து: நின்போக்கைத் தடுத்தல்கொண்டு, நின்னை உயிராகவுடைய இவள் நீ பிரிவையாயின் உயிர்கொண்டிராளென்று பலவற்றைக் கூறி யாங்கள் இரந்துகொள்ளவும், எம்முடைய வார்த்தைகளைக் (உ) காரியமென்று கருதாயாயினும். இனி நின்னைப் போகாமற் றடுப்பன, நின் னெஞ்சைச் செலுத்தின வழியிடத்து, நீர் நீக்கப்பட்ட வறுவிய சுனைகளிடத்து இலைக ளோடே * கூட வாடிய, அழகிய மலர்கள்; எ - று.

என்றதனுன், இவளேயன்றிச் சுற்றத்தாருங் கெடுவரென்முள்.

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளு, மந்நிலம் பொழுதொடு வாரா வாயினும், வந்த நிலத்தின் பயத்த வாகும்" (ந) என்பதனுன் மருதத்துப்பூப் பாலைக்கண் வந்தது.

க0 † வல்லைநீ துறப்பாயேல் வகைவாடு மிவளென
(ச) வொல்லாங்கியா ‡ மிரப்பவு முணர்ந்தீயா யாயினை
செல்லுநீ ளாற்றிடைச் சேர்ந்தெழுந்த || மரம்வாடப்
(ரு) புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பன

---

க. "அடையென்பது: தாமரை ஆம்பல் நெய்தற்ருெடக்கத்து நீர்நிலை ஓரறிவுயிர்கட்கும் தாம்பூலத்திற்கு முரித்து" (நன். பொது சூ. ௩௭.) என்பர் மயிலைநாதர்; சிறுபான்மை வேறு ஓரறிவுயிர்க்கும்வரும்.

உ. காரியம் - செய்யத்தக்கது.

ந. தொல். அகத். சூ. கக. (அ) இதில் இச்செய்திக்கே நச்சினார்க் கினியரும் (ஆ) காமநிலை யுரைத்த லென்பதற்கு நீ பிரியின் இவள் காமமிகுமென்று கூறுத லென்று பொருள்கூறி, (தொல். கற். சூ. ௩உ. "காமநிலை") அதற்கு இளம் பூரணரும் "உடையிவ ளுயிர் வாழாள் ...அணிமலர் தகைப்பன" என்னும் பகுதியை மேற்கோள் காட்டினர்.

ச. 'ஒல்லாங்கு' என்பதில் ஆங்கென்பதன் பொருளை (அ) "பட்டாங்கு கூறல்" (ஆ) "நின்றாங்கிசைத்தல்" (இ) "வல்லாங்குப்பாடி" (ஈ) "வல்லாங்கு வாழ்தும்" (உ) "வாழ்வாங்கு வாழ்பவன்" (ஊ) "கற்றாங் கெரியோம்பி" என்பவற்றோடு சேர்த்து ஆராய்க.

ரு. "புல்லுவிட்டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பனவென்றாற்போல்வன தலைவி கூற்றாய் வருவன உளவாயின் இதன்கண் (தலைவன் எடுத் துக்கொண்ட காரியத்திற்கு 'முடித்தலாற்றான் கொல்' என்று அஞ் சும் அச்சத்தின்கண்) அடக்குக" என்பர், நச்; தொல். கற். சூ எ.

(பிரதிபேதம்) * கூடி, † வல்லையிற், ‡ உரைப்பவும், || வாய்வாட,

எ - து: நீ கடுகத் துறப்பையாயின் இவள் (க) வகுப்பையுடைய உறுப்புக்கள் கெடுமென்று நினக்குப்பொருந்தும் வழியாலே யாங்கள் இரந்துகொள்ளவும், இவள் வருத்தத்தை அறியா யாயினாய். இனி நின்னைப் போகாமற் றடுப்பன, நீ போம் நீண்டவழியிடத்து, நமக்குப் பற்றுக் கோடென்று சேர்ந்து படரப்பட்ட மரம் வாட, அதனைச் சேருதலைக் கைவிட்டு வீழ்ந்து கிடந்த பூங்கொடிகள் ; எ - று.

மரந் தலைவியும், கொடி சுற்றமுமாகக் கூறினாள். மரத்தினது நிழலில் நிற்றலின், கொடி மரம் வாடுமளவும் நின்றது.

கச பிணிபுநீ விடல்சூழிற் * பிறழ்தரு மிவளெனப்
பணிபுவந் திரப்பவும் பலசூழ்வா யாயினை
துணிபுநீ செலக்கண்ட வாற்றிடை யம்மரத்
தணிசெல வாடிய வந்தளிர் தகைப்பன

எ - து: நீ சில நாட் பிணித்துக்கொண்டு பின்னைக் கைவிடுதலைக் கருதுவா யாயின் இவள் இறந்துபடுவளென்று தாழ்ந்து வந்து இரந்து கொள்ளவும், † வினைவயிற் செல்லுமாறு பலவற்றையுஞ் சூழ்வாயாயினாய். இனி நின்னைத்தடுப்பன, நீ போதற்கு நெஞ்சாற் றுணிந்து கண்டு வைத்த வழியிடத்தில், முற்கூறிய மரத்தின் அழகு போக, வாடிக்கிடந்த அழகிய ‡ தளிர்கள் ; எ - று.

முற்படக் கூறிய நீரும்மலரும் மரமுங்கொடியும் போலப் பற்றுக் கோடாதலன்றி இவளுஞ்சுற்றமும் முதலுஞ்சினையுமாயிருப்பர் || என்றாள்.

இவை மூன்றும், தாழிசை.

இத்தாழிசைகளிற் கூறிய இறைச்சிப் பொருள்கள் திணைப்பொருட்கு உபகாரப்பட்டு நின்றவாறு காண்க.

எனவாங்கு

எ - து: என்று; எ - று.
ஆங்கு, அசை.
இது தனிச்சொல்.

கரு யாநிற் கூறவு மெமகொள்ளா யாயினை
யானா திவள்போ லருள்வந் தவைகாட்டி

---

க. "ஸமவிபக்தாங்க:" என்பதற்கும், 'வகைமாலை' என்பதற்கும் எழுதப் பெற்றுள்ள பொருள்கள் இங்கே அறிதற்பாலன.

பிரதிபேதம்: * பிறழாகும், † வினையிற் செல்லுமாறு, ‡ தளிர், || என்றதாயிற்று.

(க) மேனின்று மெய்கூறுங் கேளிர்போ னீசெல்லுங்
(உ) கானந் தகைப்ப செலவு.

எ - து: யாம் நினக்குக் காரியஞ் சொல்லவும், எம்முடைய கூற்றுக் களை நெஞ்சாற் கொள்ளாயாயினும். இனி இவளைப்போலே, (ங) கண்டார்க்கு அருள் வருதற்குக் காரணமானவையிற்றை மேன்மேலே காட்டி, உனக்கு (ச) மேலாய்நின்று உண்மைகூறிக்கழறுங் கேளிரைப்போல நின்போக்கைத் தடுப்பன நீ செல்லுங் காடு; எ - று.

இது சுரிதகம்.

எம கொள்ளாயாயினையெனத் தலைவற்கு நிகழ்ந்த விரைவு கண்டு தோழிக்கு அச்சம் பிறந்தது. இதனால், தலைவற்கு இழிபு பிறந்தது.

(ரு) தகைப்ப என்றது * அன்சாரியை பெறாது நின்ற அகரவீற்றுப் பல வறிசொல்.

---

க. தாய்போற்கழறி யென்பதற்கு 'மேல்நின்று மெய்கூறுங்கேளிர்' ஆகிய தாயரைப்போலக் கழறியென்று இங்குள்ள சொற்களை முதற்பெய்து பொருளெழுதி யிருத்தல் ஈண்டு அறியத்தக்கது. தொல். கற். சூ. ௩உ. நச்.

உ. "வேறு பல்லருஞ்சுரம்" ஐங். ௩அ௫. "கடுமையகாடு" கலி. சு.

ங. அருளென்பதற்கு 'ஒன்றின் துயர்கண்டாற் காரணமின்றித் தோன் றும் இரக்கம்' என்று புறநானூற்றுரை யாசிரியரும், 'வருத்தமுற்றார் மேற்செல்வது' என்று பரிமேலழகரும் எழுதியிருக்கும் விளக்கம் ஈண்டு அறிதற்பாலன.

ச. கழறுதல் கேளிர்மரபு; (அ) "இடிக்குங் கேளிர்" குறுந். ௫அ. (ஆ) "நட்டல் மிகுதிக்கண், மேற்சென் றிடித்தற் பொருட்டு" (இ) "இடிப்பாரையில்லாத வேமராமன்னன்,...கெடும் குறள். எஅச,சசஅ. (ஈ) "களிக்கின்றேயை, அடுக்குமீ தடாதென் றுன்ற வேதுவோ டறிவு காட்டி, இடிக்குநரில்லை".....என்பவையும் (உ) "நட்டாரைக் கழறுவார்க்கு, தாம் செம்மையுடைய ராதல் வேண்டுமென்னும்" பரிமேலழகர் கருத்தும். இங்கு அறிதற்பாலன.

ரு. (அ) "கானந்தகைப்ப செலவு" என்பது அன்பெறாது எதிர்காலத்துப் பகர மூர்ந்துநின்ற அகரவீற்று வினைச்சொல்லுக்கு மேற்கோள்; தொல். கிளவி. சூ. க. சே. ந. (ஆ) இதனை, பகர விறுதி அஃறிணைக் கண்ணும் வந்ததென்று சிலர் எடுத்துக் காட்டியது தவறென்று மறுத்து, தாழிசை மூன்றனுள்ளும் தகைப்பன என ஓதியவண்ணம் சுரிதகத்துக் கண்ணும் ஓதின் வண்ணங் கெடுமென்று அதனைக் குறைக்கும் வழிக் குறைத்துத் தகைப்பவென ஓதினரென்பர் தெய்; தொல். கிளவி. சூ. எ. (இ) "பன்மர பரந்த புலம்" என்புழி, 'பரந்தன வென்பது பரந்தவென நின்றது' பதிற். அச: க. என, அதன் உரைகாரர் எழுதியிருப்பதும் இங்கே நோக்கத்தக்கது.

(பிரதிபேதம்) * அன்பெறாது.

"தோழியுள் ளுறுத்த வாயில் புகுப்பினு, மாவயி னிகழு மென்ம ஞர் புலவர்" (க) என்பதனுல், தலைவி செலவழுங்குவித்தற்குப் போக விட்டமையாற் றன்னுடன் ஏனைவாயில்களுங் கூறினமைதோன்ற, யாம் நிற்கூறவுமென்றும் எமகொள்ளாயாயினையென்றும், தாழிசைகளினும், யாமிரப்பவும் எமகொள்ளாயாயினையென்றும் (உ) யாமுரைப்பவுமென்றும் கூறியவாறு காண்க.

யானிற் கூறவு மென்றும் பாடம்.

இஃது ஐந்தடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்றுவந்த ஒத்தாழிசைக்கலி. (உ)

(௪) வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கிற்
சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தைய
ரற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங்
கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்
௫ துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற்
புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை
வெள்வேல் வலத்திற் பொருடரல் வேட்கையி
னுள்ளினி ரென்ப தறிந்தன ளென்றோழி;

கூ காழ்விரி கவையார மீவரு மிளமுலை
போழ்திடைப் படாஅமன் முயங்கியு மமையாரென்
றாழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர்
சூழ்வதை யெவன்கொ லறியே னென்னும்;

கங முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக்
கள்ளினு மகிழ்செயு மெனவுரைத்து மமையாரென்
னொள்ளிழை திருத்துவர் காதலர் மற்றவ
ருள்ளுவ தெவன்கொ லறியே னென்னும்;

கஎ நுண்ணெழின் மாமைச் சுணங்கணி யாகந்தங்
கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையாரென்
னொண்ணுத னீவுவர் காதலர் மற்றவ
ரெண்ணுவ தெவன்கொ லறியே னென்னும்;

எனவாங்கு ;

உஉ கழிபெரு நல்கலொன் றுடைத்தென வென்றோழி
யழிவொடு கலங்கிய வெவ்வத்த ளொருநாணீர்

---

க. தொல். கற். சூ. அ. இதனுரையில் இச்செய்தி சிறிதுவேறு யுள்ளது.

உ. இப்பாடம் இரண்டாந் தாழிசையிற் காணப்படுகின்றது. அதன் உரை இரப்பவுமென்பதற்கே பொருந்துகிறது.

பொழுதிடைப் படாஅமைப் வாழ்வாளோ
வொழிகினிப் பெருமநின் பொருட்பிணிச் செலவே.

இது பொருள்வயிற் பிரிவேனென்ற தலைமகற்குத், தோழி, தலைவி செலவுக் குறிப்பு அறிந்தவாறும், அவளது ஆற்றாமையும் உணர்த்திச், செலவு ஒழிவாயாகவெனக் கூறியது.

இதன் பொருள்.

(க) வலிமுன்பின் (உ) வல்லென்ற யாக்கைப் (௩) புலிநோக்கிற்
(௪) சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தைய
(௫) அற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங்
(௬) கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்

---

க. "வலிமுன்பின்......ளென்றோழி" என்பது தாழ்ந்த ஓசைத்தன்றி ஒத்தாழிசைக் கலியுள் தரவு வந்ததற்கு மேற்கோள். தொல். செய். சூ. க௩0.

உ. (அ) 'வல்லென்ற தென்னெஞ்சம்' (ஆ) 'கல்லினும் வல்லெனு நெஞ்சு'

௩. "துணைவிளக் கெரியு நிலைவிழிப் பேழ்வாய்த், தோகைமண் புடைக்குங் காய்புலி"

௪. (அ) சுற்றமை வில்லன் நற். ௩எ௬.
(ஆ) "சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தைய, அற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்" இவை வினையெச்சப் படர்க்கை வினைக்குறிப்பு முற்றென்பர், நச். தொல். எச்ச. சூ. ௬௧.
(இ) "சுற்றமைவில்லர் சுரிவளர் பித்தையர்" என்பது கலிப்பாவில் அளவடி சீர்வகையடியாய்ப் பன்னீரெழுத்தான் வந்ததற்குமேற் கோள். தொல். செய். சூ. ௫௬. நச்.

௫. அற்றம்பார்த்தல்குதல். மறவர் மரபென்பதை, "பார்வ லிருக்கைக் கவிகண் ணோக்கிற், செந்தொடை பிழையா வன்க ணாடவர்" (புறம். ௩.) என்பதனாலும், 'வம்பலரை நலியச் செய்மைக்கண்ணே பார்த்திருக்கும் இருப்பினையும் கையாற் கவிக்கப்பட்ட கண்ணாற் குறித்துப் பார்க்கும் பார்வையினையும் செவ்விய தொடை பிழையாத தறுகண்மையையு முடைய மறவர்' என்னும் அதனுரையாலும், "கடிகை வெள்ளிலுங் கள்ளி வற்றலும் வாடிய வுவலொடு நீடதர் பரப்பி, யுழைவயிற் றிரியாது மூழைவயி னொடுங்கிய, வாறலை யிளையரை யாண்மை யெள்ளி" பெருங். (க) ௫௫: அ௩-௬. "மற்றிங்கிவள் செயல்யாவையும் வரலாற்றொடு காணுத், தெற்றென்றவண் மீள்கின்றுழிச் செவ்வேயெதிர் போந்து, குற்றந்தனக் கிசையுந்திற முடிப்பேனெனக் கொலைசெய், விற்றங்கிய புயவேடரில் வேறோரிடை நின்றான்." கந்த. அசமுகிப். க௫. என்பவைகளாலும் அறிக.

௬. "வழங்குநர் மடிந்த வத்த மிறந்தோர், கைப்பொரு ளில்லை யாயினு மெய்க்கொண், டின்னுயிர் செகாஅர் விட்டதன் றப்பற்கு" "அம்புதொடை யமைதி காண்மார் வம்பலர், கலனில ராயினுங் கொன்றுபுள் ளூட்டுங், கல்லா விளையர் கலித்த கவலை" அகம். ௧0௬. ௩எ௫. "கொள்ளும், பொருளில ராயினும் பொங்கெனப் போந் தெய்யு, மருளின் மறவ ரதர்" திணைமாலை. அ௪.

(க) துன்னுநர்க் காண்மார் தொடர்ந் (உ) துயிர் வௌவலிற்
(ங) புள்ளும் வழங்காப் (ச) புலம்புகொ ளாரிடை
(ரு) வெள்வேல் வலத்திர் பொருடரல் வேட்கையி
னுள்ளினி ரென்ப தறிந்தன ளென்றோழி

எ - து: சுற்றுதலமைந்த வில்லினையுமுடையராய்க் கடைகுழன்ற வளர்ந்த மயிரினையும் உடையராய்ப் பிறர்க்குக் குற்றஞ் செய்தலைப் பார்த்திருக்கும் மெய்வலியுடைத்தாகிய வலியினையும் (சு) வற்கென்ற உடம்பினையும் புலிபோலும் பார்வையினையுமுடைய தறுகண்மையை யுடைய மறவர், தாம் (எ) வம்பலர் பக்கற் பெறுவதொரு பொருளினை யுடைய ரல்லராயினுந் தங்களம்புபட்டுப் பதைப்பாரைக்கண்டு மனமகிழ்வ தற்குத் தொடர்ந்து சென்று உயிரைக்கொள்ளுகையினாலே பறவைகளும் பறத்தலைச் செய்யாத வருத்தத்தைக்கொண்ட தொலையாத வழியை வெள் ளிய வேலை வலக்கையிலே எந்திப் பொருளைத் தேடிக்கொண்டு வருதலின் மேலுள்ள விருப்பத்தினாலே நினைந்தீரென்று தனக்கு வெளியாகச்சொல் லுகின்ற நும்முடைய செயலை என் தோழி அறிந்தாள்; எ - று.

---

க. "அறுமுக வொருவனோர் பெறுமுறை யின்றியு, மிறுமுறைகாணு மியல்பினி னன்றே, யஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச், செங்கடை மழைக்க ணிரண்டா வீத்தது" என்புழி முருகவேள், தனக்குப் பெறுங்கூறு வேறொன்றுமில்லையாகவும் யான்இறந்து படு முறைமையைத் தன்கண்ணாற் காணவேண்டுங் காரணத்தால் இவ்வாறு செய்தானென்னும் பொருளுக்கிற்கு, 'துன்னுநர்க்காண் மார்'என்பதை மேற்கோள் காட்டினர், அடியார்க்கு. சில.உ: சகூ-ருஉ.

உ. (அ) "செங்கோல் வாளிக் கொடுவி லாடவர், வம்பமாக்க ளுயிர்த்திறம் பெயர்த்தென, வெங்கடற் றடைமுதற் படுமுடை தழீஇ, யுறுபசிக் குறுநரி குறுகல் செல்லாது, மாறுபுறக் கொடுக்கு மத்தம்." நற். கசுச. (ஆ) "யாவரும், வழங்குந ரின்மையின் வௌவுநர் மடியச், சுரம்புல் லென்ற வாற்ற" அகம். க: கங-ரு.

ங. "புள்ளும் வழங்கா வழி" தஞ்சை. சoஉ.

ச. "புலம்பு வீற்றிருந்த நிலம்பகு வெஞ்சுரம்" அகம். ஙங-ரு.

ரு. (அ) "வெள்வேல்வலத்திர்......னுள்ளினிர்" என்பது முன்னிலைப் பன்மை வினைக்குறிப்பு முற்று வினையெச்சக் குறிப்பாயினதற்கு மேற்கோள். நன். வினை. சூ. ஙஉ. மயிலை. வி. இராமா. இ-வி. சூ. உருo.

(ஆ) "வெள்வேல் வலத்திர்" என்பது வினையெச்ச முன்னிலை வினைக் குறிப்பு முற்றுக்கு மேற்கோள் தொல். எச்ச. சூ. சுக.

சு. வற்கென்றல் - வலிமையுறல்; "வற்கென்ற நெஞ்சம்" பு - வே என்பதனுரை பார்க்க.

எ. "நகையொன்றே நன்பயனுக் கொள்வான்-பயமின்று, மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக் கொல்வான்போற், கைவிதிர்த் தஞ்சப் படும்." நீதிநெறி. எங.

இது (க) பாலைநிலத்திற்கு உரிய செய்தி கூறிற்று.
ஆரிடையை உள்ளினி ரென்க.
இது தரவு.

௬ (உ) காழ்விரி கவையார மீவரு மிளமுலை
(௩) போழ்திடைப் * படாஅமன் முயங்கியு மமையாரென்
றாழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர்
† சூழ்வதை யெவன்கொ லறியே னென்னும்

எ - து: காதலர், முத்துவடங்கள் விரிந்த ‡கலத்தை அகத்திட்டுக்கிடக்கின்ற ஆரம் மீதே கிடந்தசையும் இளைய முலையை ஒருபோதும் இடையீடுபடாமற் றழுவியும் அதனானும் வேட்கை தணியாராய், என்னுடைய கூட்டத்தாற் றாழ்ந்த மயிரைக் கோலஞ்செய்வர்; பின்னை, அவர் சூழ்கின்ற காரியம் எத்தன்மையதுகொல்? அதனை யான் அறியேனென்று கூறாநிற்கும்; எ - று.

மேற் கலங்களுங் கீழ்ப் பல முத்துவடங்களுமாகிய ஆரம்.

---

க. ஆறலைத்தலும் சூறைகோடலும்.

உ. (அ) "கழூஉவிளங் காரங் கவைஇய மார்பே" புறநானூறு. கக. (ஆ) "காழ்விரிகவையார...லறியேனென்னும்" என்பது ஒத்தாழிசைக் கலியில் தாழிசைதோறும் 'அறியே னென்னும்' என இரண்டு நேரீற்றியற்சீரும் வந்தமைக்கு மேற்கோள். தோல். செய். சூ. க௩௦. பே.

௩. (அ) "கழுமிய காதலொடு கவவுக் கைவிடா, தொழுகுங் காலை நிகழ் பொருள் கூறுவேன்" பெருங். (௩) உ௩: க௦-கக. (ஆ) "கங்குலும் பகலும் பிரிவில ராகிக் காதல்வெள் ளத்திடை யழுந்திப், பங்கமில் போக நுகருநாள்" இரா. சீதைவனம். கக. (இ) "இடையறாமலே யெழில் கொண் மைந்தனு, மடமை மாதரு மருவி வைகுநாள்" பிரமோ. பத்திராயுவின். ௭௭. (ஈ) "மல்லலந் தோளி னானு மழைமதர் நெடுங்க ணாளும், புல்லுவிட் டொழியிலாவி பொன்றிடு மென்னவெண்ணி, யல்லுநண் பகலும் விள்ளா தணிநலம் பருகி யாங்குச், செல்வுழி நிகழ்ந்த வெல்லாஞ் செப்புவான் றொடங்கு கின்றேன்" (உ) "வாம்பரித் தேரி னானு மாழையொண் கண்ணி னாளு, மேம்பலோ டினிது புல்லி யிடைவிடா தொழுகு நாளில்." நைடதம். மணம்புரி. ௱எ. சூதாடு. க. (ஊ) "தலைவன் சொல்லாதுபிரியுங்கால் போழ்திடைப் படாமல் முயங்கியும் அதன்றலைத் தாழ்கதுப் பணிந்தும் முள்ளெயிற் றமுதங் கள்ளினு மகிழ்செய்யு மெனவுரைத்தும் இவைமுதலிய

(பிரதிபேதம்) * படாமல், † சூழ்வகை. ‡ அகலத்தை.

+ தொல். மெய்ப். சூ. கூழைவிரித்தல்

கரு (க) முள்ளுறழ் (உ) முளை (ரு) யெயிற் றமிழ்தூ றுந் தீநீரைக்
(ச) கள்ளினு மகிழ்செயு மெனவுரைத்து மமையாரென்
ஞெள்ளிழை திருத்துவர் காதலர் மற்றவ
ருள்ளுவ தெவன்கொ லறியே னென்னும்

எ - து: காதலர், முள்ளைமாறுபடுகின்ற முனையினையுடைய(ரு)நாணன் முளைபோலும் எயிற்றிடத்து விடாமல் ஊறும் அமிழ்துபோலும் இனிய நீரைக் கள்ளினுங்காட்டில் மகிழ்ச்சியைத் தருமென்று கூறியும் வேட்கை தணியாராகி என்னுடைய ஒள்ளிய பூண்கள் புணர்ச்சியால் நிலைகுலைந்த வற்றைப் பழைய நிலைகளிலே கிடக்கும்படி திருத்துவர்; பின்னை, அவர் நினைக்கின்ற காரியம் எத்தன்மையதுகொல்? அதனை யான் அறியே னென்று கூறுநிற்கும்; எ - று.

அக்கள்ளென்று பாடமாயின்,*அங்ஙனம் மிகக்களிப்பிக்குங் கள்ளென்க. திருநீரையும் பாடம்.

---

தலையளிசெய்து தெருட்டிப்பிரிய, அவை பற்றுக்கோடாக ஆற்றுதலின் அவன் குணங்கள் வற்புறுத்துவன ஆயின" என இவ்வடியிலுள்ள சொற்பொருள்களை இடையிட்டு உரை நடையாக அமைத்தனர், நச். தொல். கற். சூ. சரு.

க. (அ) "முத்துக்கூர்த் தன்ன முள்ளெயிற் றமுத, மருந்தே மாந்த வாருயிர் தளிர்ப்ப" மணி. கஅ: எக-உ. (ஆ) "முள்வா யெயிற்றூ றமுதம் முனி யாது மாந்தி" சீவக. சகூக. (இ) "தித்தியாநின்ற...... முள்ளெயிற்றூறுதேன்...பெருக்கலால்." கம்ப. கிட்கிந்தைப். உக. (ஈ) "முருந்தேய்க்குமுட்போ லெயிற்றினாய்" ஏலாதி அ. (உ) 'முள்ளெயிறு' சீவக. கOகூ, உஎருஉ.

(ஊ) "பிரிவஞ்சும் புன்கணுடைத்தாற் புணர்வு" என்பதன் பொருளை விளக்குதற்கு, விசேடவுரையில் "அவ்வச்சத்தினை யுடைத்தாதலாவது, 'முள்ளுறழ் முளையெயிற்............ஞெள்ளிழைதிருத்தும்' பண்டையிற் சிறப்பால் அவன் பிரிதற் குறிப்புக்காட்டி அச்சஞ்செய்தலுடைமை" என இவ்வடிகளை உரையிடை யிடுவர், பரி. குறள். ககருஉ.

உ. "முளைநிரை முறுவலார்" "முளைநேர் முறுவலார்" கலி. கரு, கூஅ. 'முளையெயிறு' சீவக. உOசஉ.

ரு. (அ) "ஊறுநீ ரமிழ்தேய்க்கு மெயிற்றாய்" கலி. உO-கக. (ஆ) "கூரெயிற் றமிழ்த மூறுஞ் செவ்வாய்" அகம். ருருரு: உச-ரு.

ச. "உண்டது, கள்ளு மன்று களிப்பட் டனனே" புறத். தானைமறம்.

ரு. "இளையரி ஞணற் கிழங்கு மணற் கீன்ற, முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்" அகம். உகஉ.

(பிரதிபேதம்) * இங்ஙனம்.

௧௭ (௧) நுண்ணெழின் மாமைச் சுணங்கணி யாகந்தங்
(௨) கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையாரென்
(௩) ஒண்ணுத லீவுவர் காதலர் * மற்றவ
ரெண்ணுவ தெவன்கொ லறியே னென்னும்

எ - து: காதலர், கூரிய அழகினையும் மாமை நிறத்தினையுமுடைய சுணங்குபரந்த மார்பம் தங்கண்ணோடு எதிராக வைத்துக் கட்டினதென்று யாங் கூறும்படி இமையாமற் பார்த்தும் வேட்கை தணியாராய் என்னுடைய ஒள்ளிய நுதலைப் புணர்ச்சியால் அரும்பிய வியரைத் துடைப்பர். பின்னை, அவர் சூழ்கின்ற காரியம் எத்தன்மையதுகொல்? அதனை யான் அறியே னென்று கூறாநிற்கும்; எ - று.

தொடுத்தது, தொடுத்தென விகாரமாயிற்று.

இவை மூன்றும், தாழிசை.

---

௧. "நுண்ணெழின்.........எண்ணுவ தெவன்கொ லறியே னென்னும்" என்பது (அ) அந்தமில்லாதசிறப்பினாகிய (அந்தமில் சிறப்பென்பது மேன்மேலுஞ் சிறப்புச்செய்தல்) இன்பத்திடத்து உள்ளுறைப் பொருண்மை வருவதற்கும் (தொல். பொருளியல், சூ. ௪௭ 'அந்தமில்' இள.) (ஆ) தலைவன்கணிகழ்ந்த மிக்கதலையளி வஞ்சமென்று தலைவி உட்கொண்டு பிரியுங்கொல்லென நினைத்தற்கு நிமித்தமானதற்கும் (தொல். அகத். சூ. ௪௩. நச்.) (இ) தோழிக்குக் கூறியது கொண்டு கூறியதற்கும் (தொல். கற். சூ. கூ. நச்.) மேற்கோள். (ஈ) தலைவன் தலைவியைப் பாராட்டுதலாகிய கிழவி பாராட்டென்பது, 'யாம் செய்யக்கருதிய பொருட்கு இவள் இடையூறாவள்கொல்' என்று தலைவன் அஞ்சியதனையும் அவன் அதற்குப் பிரிகின்றதனையும், தலைவிக்கு அறிவிக்கு மென்பதற்கு இப்பகுதியைமேற்கோள் காட்டி, தலைவன் கழிபெருநல்கலால் தலைவி அவற்றை யுணர்ந்தாளென்றுகூறி அன்பாலன்றிப் பொருள்காரணத்தால் பாராட்டினமையானும் (தலைவற்கும்) அதனைச் செவ்வனங் கொள்ளாது பிறழக் கோடலானும் (தலைவிக்கும்) இருவர்க்கும் வழுவாமென்று அமைத்தாரென்பர், நச்; தொல். பொருளியல், சூ. ௩௮.

௨. (அ) "கண்ணொடு தொடுத்தென நோக்கி" காசி. தேவி தக்கன் வேள்விச் சாலையடைந்த. ௧௨. கூர்ம. பார்வதிதோற்றமுரைத்த. ௪. (ஆ) "கண்ணொடு பிணித்தா லென்ன வியப்புறக் களித்து நோக்கும் ......வேலான்" நைடதம். நளன்றூதுப். ௮௮.

௩. தலைவி தலைவன்குறிப்புக்கண்டு ஐயப்படுதலாகிய ஐயஞ்செய்தலென்னு மெய்ப்பாட்டிற்கு, "ஒண்ணுத லீவுவர் காதலர் மற்றவ, ரெண்ணுவ தெவன்கொ லறியே னென்னும்" என்பது மேற்கோள். தொல். மெய்ப்பா. சூ. ௨௨. 'இன்பத்தை' இளம்.

(பிரதிபேதம்) * மற்றவர் கண்ணுவதெவன்கொலோ.

இத்தாழிசைகளில், தலைவிக்கு ஆராய்ச்சி பிறந்ததனைத் தோழி கூறினாள்.

"பொழுதுதலைவைத்த" என்னுஞ் (௧) சூத்திரத்து நிகழுமென்பதனால், பெருந்திணைக்கேயன்றி ஏனைத்திணைக்கண்ணும் வனப்புமிகுதி கூறப்பெறு மென்றலின், தாழிசைகளில் தலைவி வனப்புமிகுதி கூறினாள்.

எனவாங்கு

எ - து: என்று அவள் கூறும்படியாக; எ - று.

ஆங்கு, அசை.

இது தனிச்சொல்.

௨௨ கழிபெரு நல்கலொன் றுடைத்தென வென்றோழி
யழிவொடு கலங்கிய வெவ்வத்த ளொருநாணீர்
பொழுதிடைப் படநீப்பின் வாழ்வாளோ
(௨) வொழிகினிப் பெருமநின் பொருட்பிணிச் செலவே

எ - து: புணர்ச்சிப்பின்னர் நிகழ்த்தின மிக்கபெரிய தலையளி ஒரு பிரிவை*யுடைத்தென்று உட்கொண்டு என் தோழி நெஞ்சழிவாலே கலங்கிய வருத்தத்தையுடையள்; இத்தன்மையாள் ஒருநாள் ஒருபொழுது கூட்டம் இடையீடுபட நீர் பிரிவீராயின் உயிர் கொண்டு இருப்பாளோ? இராள். ஆதலால், பெருமா! நின்னுடைய, பொருளிடத்து நெஞ்சு பிணித்தலாற் செல்லுஞ் செலவைத் தவிர்வாயாக; †எ - று.

இதனால், தலைவர்க்கு இழிவு பிறந்தது.

இது 'நிகழ்ந்தது நினைத்தற் கேதுவுமாகும்'(௩)என்றதனால், தலைவன்கண் நிகழ்ந்த ‡வஞ்சந் தலைவிநினைந்து பிரிவனென்று கருதுதற்கு||நிமித்தமாயிற்று.

"செய்பொருளச்சமும் வினைவயிற்பிரிவு, மெய்யுற ÷வுணர்த்துங்கிழவி பாராட்டே" (௪)என்பதனால், தலைவன் தலைவியைப் பாராட்டியது, அவட்குச் செய்பொருள் அச்சமும் வினைவயிற்பிரிவும் உணர்த்தி நின்றவாறு காண்க.

இது சுரிதகம்.

(௫)இஃது எட்டடித்தரவும் நான்கடித்தாழிசையுந் ∴தனிச்சொல்லுந்தரவின் பாகமாகிய சுரிதகமும் நேரீற்றியற்சீரும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (௩)

---

௧. தொல். பொருளியல். சூ. ௪௨.

௨. (அ)'ஒழிகினிச்செலவே' ஐங். ௩௩௦;(ஆ)"ஒழிகினி" திணைமொழி௩௮.

௩. தொல். அகத். சூ. ௪௩. உரைபார்க்க. ௪. தொல். பொருளி சூ. ௩௮.

௫. தொல். செய். ௧௩௭-ஆம், சூத்திரவுரையில் இதனை 'இது மிகவுந் துள்ளிவந்த எட்டடித்தரவும் தாழம்பட்ட வோசை பெற்றுத் தரவகப்பட்ட மரபினதாகிய நான்கடித்தாழிசை மூன்றும் ஆங் கென்னும் அசைநிலைத் தனிச்சொல்லும் தரவின் பாகம் பெற்று நான்கடியா யிறுதிநிலை யுரைத்த சுரிதகமும் பெற்று, தரவினும் தாழிசையினும் நேரீற்றியற் சீரும் பெற்றுவந்த ஒத்தாழிசைக்கலி.' என இவ்வுரைகாரரே விரித்தெழுதி யுள்ளார்.

(பிரதிபேதம்) * உடைத்தென்றுகொண்டு. † என்றுரைக்க. ‡ வஞ்சனம் || நிமித்தமும், ÷ உணர்தலுங்கிளவி. ∴ பொருள பெறுததனிச்சொல்லும்.

(ரு) (க) பாஅ லஞ்செவிப் பணைத்தாண் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கித்
தூறதர் பட்ட வாறுமயங் கருஞ்சுர
மிறந்துநீர் செய்யும் பொருளினும் யாநுமக்குச்
ரு சிறந்தன மாத லறிந்தனி ராயி
னீளிரு முந்நீர் வளிகலன் வௌவலி
னுள்வினைக் கழிந்தோர் போற லல்லதை
கேள்பெருந் தகையோ டெவன்பல மொழிகுவ
நாளுங் கோண்மீன் றகைத்தலுந் தகைமே;
க0 கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபிற்
புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ;
கஉ ஆள்பவர் கலக்குற வலைபெற்ற நாடுபோற்
பாழ்பட்ட முகத்தோடு பைதல்கொண் டமைவாளோ;
கச ஓரிரா வைகலுட் டாமரைப் பொய்கையு
ணீர்நீத்த மலர்போல நீ நீப்பின் வாழ்வாளோ;
எனவாங்கு;
கஎ பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்
டெந்நாளோ நெடுந்தகாய் நீ செல்வ
தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே.

இது தலைமகன் பொருள்வயிற் பிரிவலெனக் கேட்டதோழி தான் ஆற்றளாய் நீர் செய்யும் பொருளினும் யாம் உமக்குச் சிறந்தேமென்பது நும் உள்ளத்து உளதேனின் நும்மை நாளும் புள்ளும் விலக்குமெனவும், இவள் பிரிந்திருப்பார் இருக்குமாறு இருப்பாளல்லள், பிரிந்த அன்றே இறந்து படுவளெனவுஞ் சொல்லிச் செலவழுங்குவித்தது.

இதன்பொருள்

(உ) பாஅ லஞ்செவிப் பணைத்தாண் மாநிரை
(ந) மாஅல் யானையொடு மறவர் மயங்கித்

---

க. தலைவரும் விழும நிலை யெடுத்துரைத்தற்கு, இச்செய்யுள் மேற்கோள். தொல். அகத். சூ. சஉ. 'தலைவரும்' இளம்.

உ. உயிரளபெடைத் தொடைக்கு (அ) "பாஅலஞ்செவி........மாஅல் யானை......மயங்கி" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. கஎ. பே. (ஆ) கலிப்பாவிற் கட்டளையடிக்கண் நேரீற்றியற் சீரிரண்டும் வாராவென விலக்கியதனல் அல்லனவற்றுக்கண் வருமென்பதற்கு 'பாஅ லஞ்செவிப் பணைத்தாண் மாநிரை' என்பது மேற்கோள். தொல். செய். சூ. உரு. பே.

ந. (அ) "மாஅல்யானை......மயங்கருஞ்சுரம்" என்பது செய்தென்னும் வினையெச்சம் காரணகாரியப்பொருட்டாய்த் தனக்குரியவினைமுதலா

தூறதர் பட்ட வாறுமயங் (க)கருஞ்சுர
மிறந்துநீர் செய்யும் பொருளினும் (உ) * யாநுமக்குச்
சிறந்தன மாத லறிந்தனி ராயி
(௩) னளிரு முந்நீர் வளிகலன் வெளவலி
னுள்வினைக் கழிந்தோர் போற லல்லதை

னன்றிப், பிறவினைமுதலான் முடிந்ததற்கு மேற்கோள். தொல். வினை. சூ. ௩௪. நச். இ - வி. நூலார், இதனை (ஆ) செய்தென்னும் வினையெச்ச விகுதியாகிய உகரம் கடதறக்களையூர்ந்து இயல்பாய் நிற்றலே யன்றி வேறு சிலவற்றை யூர்ந்து இகரமாய்த் திரிந்தும் நிற்குமென் றுகூறிச் செயவென்னும்அகரவீறு செய்தென்னும் உகர வீறாய்த் திரிந்து நிற்றற்கும்; (இ) காரண காரியப்பொருட்டாய் இறந்த கால முணர்த்துஞ்செயவெனெச்சம் செய்தெனெச்சமாய்த் திரிந்து நின்று பிறவினை கொள்ளுதற்கும் (இ - வி. சூ. உசசு, உசஅ.) மேற்கோள் காட்டினர். (ஈ) "மானதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி" நாற். சூ. ககக மேற். (உ) "சேந்தெரி பரந்த பாலையிற் புகுந்து சென்னெறி சிறிதுந்தோன்றாமற், காந்தெரி கதிரோனெழுதிசை தெற்கு வடக்குமேற்கெல்லைகா ணுமன், மாந்தரு மாவுந் திசைதடு மாறி" என்பவை ஒப்புநோக்கற்பாலன.

க "அத்த, மிறந்துசெய் பொருளு மின்பந் தருமெனி, னிளமையிற் சிறந்த வளமையுமில்லை, யிளமை கழிந்த பின்றை வளமை, காமந் தருதலு மின்றே" நற். கஉசு: சு-கo.

உ. (அ) சிறப் பென்பதற்கு இன்றியமையாமை யென்று பொருள் கூறி அதற்கு "யாநுமக்குச் சிறந்தன மாதலறிந்தனி ராயின்" என்பதை (தொல். வேற். சூ. கச. 'அதற்கு வினை')மேற்கோள் காட்டினர். தெய். (ஆ) கலி. சஉ: ச-சு. அடிகளும் அவற்றின் உரையும் இங்கே கருதற் பாலன.

௩. (அ) "நளியிரு முந்நீர் வளிகலன் வெளவ" மணி. கசு. க௩. (ஆ) "வந்ததே ஆழ்கலத்தன்ன கலி" நாலடி. கஉ. (இ) "கலங் கவிழ்த் தல்லலுற்றாள்" (ஈ) "மல்லன்மாக் கடலிடைக், கல்லெனக் கலங்கவிழ்த், தல்லலுற் றழுங்கிய, செல்வன்" (உ) "ஆழ்கல மாந்தர் போல வணிகக ரழுங்கிற்றன்றே" (ஊ) "பண்ணார் களிறேபோற் பாயோங் குயர்நாவாய், கண்ணார் கடன்மண்டிக் காற்றிற் கவிழுங் கான், மண்ணார் மணிப்பூணோய் மக்க ளுறுந்துன்ப, நண்ணு நரகத்தி னுன்கா மடியன்றே." சீவக. ௩௩உ; ருஎஉ; கககூ௩; உஎகூ௩. (எ) "நாவாய் கவிழ்த்த நாய்கன் போல, வோவா வவலமொடு" பெருங். (உ) கூ: சஎ - அ. (ஏ) "கலங்கவிழ்த்த நாய்கன்போற்

(பிரதிபேதம்) * யாமுமக்கு.

கேள்பெருந் தகையோ டெவன்பல மொழிகுவ
நாளுங் கோண்மீன் றகைத்தலுந் தகையமே

எ - து: தத்தம் பகுதிகளையும் அழகிய செவிகளையும் பெருமையை யுடைத்தாகிய தாள்களையும் மதத்தாலுள்ள மயக்கத்தினையுமுடைய யானைத் திரள்களோடே ஒழிந்த விலங்கின் திரள்களும் மறவரும் மயங்குகையினாலே தாறுகளெல்லாம் வழிப்பட்டுப் பழையவழிகள் மயங்கின அரியகாட்டைக் கடந்து நீர் (க) தேடும்பொருளினுங்காட்டில் யாங்கள் உமக்குச் சிறந்தே மாதலை நீரே அறிந்தீராயின், இனி யாங்கள் நீண்ட பெரிதாகிய கடலிலே காற்று *மரக்கலத்தைச் சிதறஅடித்துவிடுகையினாலே தாம் எடுத்துக்கொண்ட முயற்சி நிமித்தமாக நெஞ்சழிந்தோரைப்போலே நெஞ்சழிந்திருக்குமதல்லது நின்னோடு எங்ஙனம் பலவார்த்தைகளைக் கூறுவோம்? யாம் அங்ஙனம் இருக்கவும் நின்னை நாண்மீனும் மனத்தாற் குறித்துக்கொள்ளப் படும் புள்ளுந் தகைத்தலையுஞ் செய்யும். நெடுந்தகாய்! இன்னும் யாங் கூறுகின்றதனைக்கேள்; எ - று.

மயங்கியென்னுஞ் செய்தெனெச்சம் "அம்மூக்கிளவி" (உ) என்னுஞ் † சூத்திரத்திற் பிறவினை கொள்ளுமெனக் கூறினும். அதனான் உணர்க. தகைம் என்றது (௩) ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங் கெட்டு நின்றது. குறித்துக் கொள்ளப்படுதலிற் கோளென்றது ஆகுபெயர்.

இதனுட் குறிஞ்சிக்குரிய இறைச்சியாற் காட்டின்கொடுமை கூறிச்செல வழுங்குவித்தலின், அது திணைப்பொருட்கு உபகாரப்பட்டு நின்றவாறுஉணர்க.

இனி "நாளுங் கொண்மின் றகைத்தலுந் தகையேம்" என்றபாடத்திற்கு நாளையும் இன்னநாளென்று குறியும், அப்பொழுதும் தகைத்தலையுஞ் செய்யேமென்க.

போறலல்லதையெனவே, தோழிக்கு இடுக்கண் பிறந்தது.

இது தரவு.

---

கலங்குமென் றுயர்கண்டும்"......(ஐ) "தேவர்......இரங்கினர் கவற்சியெய்திப், புணைவிழச் சலதி யாழ்ந்து புலம்புகொண் மாக்க ளேபோல்" (ஒ) " மதலை யிற்றுழி நாய்கர்போற் றுயர்க் கடன் மறிகின்றார் " (ஓ) "உம்பர்க டாமு முடன்றளர் வுற்றார் தம்பம தான தடம்புணை தாழ,வம்புதி தன்னி லழுந்திடு வார்போல்"(ஔ)"அவுணர்க ளுலைந்து சிந்தினர், கலம்பகிவுற்றிடக் கடலுற்றார்கள்போல்." கந்த.மேருப்.௧௧. மோனநீங்கு. ௨; இந்திரன் கயிலை. எ. யுத்தகாண்டம், நகர்புகு. ௩௩.

௧. பொருள்தேடுதலைப் பொருள் செய்த லென்பது மரபு: (அ) "பொருள் செய்வார்க்கு" கலி. ௧௪: ௧௪. (ஆ) "செய்க பொருளை" குறள். ௭௫௯. (இ) "செய்க பொருள்யாரும்" சீவக. ௪௧௭.

௨. தொல். வினை. சூ. ௩௪. ௩. தொல். வினை. சூ. ௪௩. உரைபார்க்க.

(பிரதிபேதம்) * கலத்தை. † சூத்திரத்தால்.

௧௦. (௧) கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபிற்
புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ

எ - து: கல்லென்னும் ஓசை உண்டாக அழகுபெற்ற திருநாளை வழிப்படுத்திவிட்ட பிற்றைநாட் பொலிவழிந்த இடம் போலத் தனிமை கொண்டு ஆற்றியிருப்பாளொருத்தியோ?

௧௨ (௨) ஆள்பவர் கலக்குற வலைபெற்ற நாடுபோற்
பாழ்பட்ட முகத்தோடு பைதல்கொண் டமைவாளோ

---

௧. (அ) "அருஅ யாண ரகன்றலைப் பேரூர்ச், சாறுகழி வழிநாட் சோறு நசை யுறாது, வேறு புல முன்னிய விரகறி பொருந" பொருந. ௧-௩. (ஆ) "காதல ருழைய ராகப் பெரிதுவந்து, சாறுகொ ளூரிற் புகல்வேன், மன்ற......புல்லென். றலப்பேன் றோழியவ ரகன்ற ஞான்றே" (இ) "விழவுமேம் பட்டவென் னலனே.........தண்ணந் துறைவனொடு கண்மா றின்றே" நறுந். ௪௧, ௨௨௫. (ஈ) "முழவொலி முந்நீர் முழுதுடனுண்டார், விழவூரிற் கூத்தேபோல் வீந்தவிதல் கண்டும்" பழமொழி. ௩௪௩.

(உ) 'ஒத்துமூன் றாகு மொத்தா ழிசையே' என்னும் தேவபாணி விதிச் சூத்திரத்தின் விசேட வுரையின் கண் இவை பொருள் ஒக்குமெனவே முன்னை அகநிலையொத்தாழிசைக்கண்வரும் இடைநிலைப் பாட்டிற் பொருளொவ்வாது வருதலும் சிறுபான்மை யுண்டென்று கூறி, "கல்லெனக் கவின்பெற்ற...............புலம்புகொண் டமைவாளோ" என இடத்தியல் பொருளொழிய இடப்பொருளோடுவமங் கூறினன், "ஓரிராவைகலுட்........................நீப்பின் வாழ்வாளோ" என இடப் பொருளொழிய இடத்தியல் பொருளோடு உவமங் கூறின மையின் வேறுபட்டன" என்பர் பே. தொல். செய். சூ. ௧௪௨. (ஊ) கல்லென்பது ஓசைப்பொருண்மேல் வருமென்பதற்கு, (நன். இடை.சூ.௨.)மயிலைநாதரும்.(எ)எனவென்கிளவி இசைப்பொருண்மை குறித்து வருமென்பதற்கு, (தொல். இடை. சூ. ௧௦.) தெய்வச்சிலை யாரும் 'கல்லெனக்...படுத்தபின்' என்பதை மேற்கோள்காட்டினர்.

௨. (அ) "அலவுற்றுக் குடிகூவவாறின்றிப் பொருள்வெஃகிக், கொலையஞ்சா வினைவராற் கோல்கோடி யவனிழ, லுலகுபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம்" கலி. ௧௦. ௫-௭. (ஆ) "கொள்பொருள் வெஃகிக்குடியலைக் கும் வேந்தனும்...........மழையருக்குங் கோள்" திரிகடுகம். ௫௦. (இ) "முறையி லரசனொடு நல்கூர்ந் தன்று" முது. அக. (ஈ) "கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி, வேத்திய லிழந்த வியனிலம் போல, ..........தன்மையிற் குன்றி" சில. ௧௧ : ௬௦ - ௬௩. (உ) 'ஆள்பவர் கலக்குற மயங்கிய நன்னாட்டு' மணி. ௨௩ : ௧௦௪. (ஊ) "பழிபடர் மன்னவன் படைத்த நாட்டினூஉங், கழிவதென் காரண மறிஞ கூறென்றான்" கம்ப. தாட. ௨௦. என்பவை ஒப்பு நோக்கற் பாலன.

எ - து: நாட்டை ஆளுகின்ற அரசர் தாம் பின்பு கலக்கமுறும்படி, அவரால் அலைத்தலைப்பெற்றநாடு பாழ்பட்டாற்போல அழகு கெட்ட முகத்தோடே வருத்தத்தைக்கொண்டு ஆற்றியிருப்பாளொருத்தியோ? எ - று.

கச (க) ஓரிரா வைகலுட் டாமரைப் பொய்கையு
ணீர்நீத்த மலர்போல நீ நீப்பின் வாழ்வாளோ

எ - து: ஓர் இராப்பொழுதிடத்துத் தாமரையையுடைய பொய்கையுள் நீரால் நீக்கப்பட்டமலர் அவ்விராக்கால முழுவதும் வாடாமற்கிடந்தாற்போல நீ பிரிவையாயின் ஓர் இராப்பொழுதும் உயிர்கொண்டு வாழ்வாளொருத்தியோ? எ - று.

ஓகாரம் மூன்றும், எதிர்மறை.

களமும் நாடும் பூவும், பின்னும் விழவாலும் அரசனாலும் நீராலும் பழைய பொலிவு பெறும். அவைபோலன்றி இவள் நீ நீத்தபொழுதே இறந்துபடுவ * ளென்றதனால், தலைவிக்குக் கையாறு நிகழுமென்றாள்.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு

எ - து: என்று யாம் நினக்குச் சொல்லாநிற்க; எ - று.

ஆங்கு அசை; * அச்சுரத்தை யெனினுமாம்.

இது தனிச்சொல்.

கரு பொய்நல்கல் (உ) † புரிந்தனை புறந்தரல் கைவிட்
டெந்நாளோ நெடுந்தகாய் நீ செல்வ
தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே

---

(எ) 'பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும்' அரசர் பிரிவரென்னுமிடத்து, 'பிழைத்தது' என்பதற்கு முன்னர் ஆள்பவர் கலக்குறுத்த அலை பெற்று நெறிமுறைமை தப்பிய அந்நாடு என இவ்வடிப் பொருளை உட்கொண்டு உரையிட்டிருத்தல் ஈண்டறியற் பாலது. தோல். அகத். சூ. உஅ. நச்.

க. உடன்சேறல் செய்கையொ டன்னவை பிறவு மடம்பட வந்த தோழிக்கண்ணும் தலைவன் கூற்று நிகழுமென்று கூறி, "பாஅலஞ் செவியென்னும் பாலைக் கலியுள் 'ஓரிராவைகலு.........நீநீப்பின் வாழ்வாளோ' எனவும், 'அந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே' எனவும் உடன் கொண்டு சென்மினெனத் தோழி கூறியது கேட்ட தலைவன் இவளை உடன் கொண்டு போதல் எல்லாவாற்றானும் முறைமையன் றென்று தோழிக்குக் கூறுவனவும் நெஞ்சிற்குக் கூறுவனவும் பிறவுங் கொள்க" என்பர், நச். தோல். கற். சூ. ரு.

உ. (அ) 'வினை வெஃகி நீ செலின் விடு மிவளுயிர்' கலி. கO: உக. (ஆ) (பிரதிபேதம்) * என்றலின், இதனால் † புரிந்திவளை.

எ - து: (க) நெடுந்தகாய்! பொய்யே இவளுக்கு அருளுதலை *விரும்பிப் பாதுகாத்தலைக் கைவிட்டு நீ நயந்த அச்சுரத்திலே செல்வது † எந்நாளிலோ அந்நாள் இவளுடைய பெறுதற்கரிய உயிரைக் கொண்டுபோம்; எ - று.

புறப்படல் கைவிட்டு என்ற பாடத்திற்குக் கைவிட்டுப் புறப்படலென்க.

இதனால், தலைவற்கு இழிவு பிறந்தது.

(உ) தாழிசையிற் கூறிய ஏனையுவமங்கள் திணைப்பொருட்கு உவமையாய் நின்றன.

"பிரியுங் காலை யெதிர்நின்று சாற்றிய, மரபுடை யெதிரு முளப் படப் பிறவும்" (ங) என்றதனால் புரிந்தனையென இறப்பும் இறக்குமென எதிரும் மரபிற் பிறழாமல் வந்தவாறுணர்க.

இது சுரிதகம்.

இஃது ஒன்பதடித்தரவும் சிறுமைக்கு எல்லை கூறிய ஈரடித்தாழிசையும் பொருள்பெற்ற தனிச்சொல்லும் ஆசிரியத்திற்கு உரித்தென்ற மூவடிச் சிறுமையான் வந்த சுரிதகமும் பெற்று வந்த ஒத்தாழிசைக்கலி. (௪)

---

"நின்னின், றிமைப்புவரைவாழாண் மடவோள்" கலி. உக : கஉ-ங. என்பவையும் (இ) "செல்லாமை யுண்டே லெனக்குரை மற்று நின், வல்வரவு வாழ்வார்க்குரை" என்னும் குறளும் 'தலைமகளை யொழித்து எனக்கென்றாள், தானவளென்னும் வேற்றுமையின்மையின். அக்கால மெல்லா மாற்றியிருந்து அவ்வரவு காண வல்லளல்லள், பிரிந்த பொழுதே இறந்து படுமென்பதாம்' என்னும் அதன்விசேட வுரையும் இங்கே கருதற் பாலன. குறள். ககருக. பரி.

க. நெடுந்தகை யென்பதற்கு, பெரிய மேம்பாட்டாளனென்றும் பெரிய நிலையையுடையவனென்றும் அளத்தற்கரிய தன்மையையுடையவனென்றும் புறப்பொருள் வெண்பாமாலை யுரையாசிரியர் பொருள்கூறுவர்.

உ. "உள்ளுறை யுவம மேனை யுவமமெனத், தள்ளா தாகுந் திணையுணர் வகையே" என்னுஞ் சூத்திரத் துரைக்கண், "இனி, தள்ளாதென்ற தனனே 'பாஅ லஞ்செவி' என்னும் பாலைக்கலியுள் தாழிசை மூன்றும் ஏனை யுவமமாய் நின்று கருப்பொருளோடு கூடிச் சிறப்பி யாது தானே திணைப்பொருள் தோற்றுவித்து நிற்பனபோல் வனவும்.........அமைக்க" என்பர், நச். தொல். அகத். சூ. ௪௬, நச்.

ங. தொல். கற். சூ. க. நச்சினார்க்கினியருரையில், "பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட், டெந்நாளோ நெடுந்தகாய் நீ செல்வ, தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே" என்னு மேற் கோளோடு இக்குறிப்பும் உள்ளது.

(பிரதிபேதம்) * விரும்பினையாய்ப். † எந்நாளிலே.

(சு) (க) மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் (உ) செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்த
முண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
ரு தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்று
(ந)லென்னீ ரறியா தீர் போல விவை*கூறி
னின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையு
மன்பறச் சூழாதே யாற்றிடை நும்மொடு

---

க. (அ) தலைவரும் விழுமமென்னுஞ் சூத்திரத்து, போக்கற்கண்ணு மென்றிருப்பதனைப் பேர்த்தற் கண்ணு மெனப்பாடங்கொண்டு பெயரென்பது கூறுதற் கண்ணுமெனப் பொருள் கூறி அதற்கும், (ஆ) ஒரு பொருணுதலிய வென்னுஞ் சூத்திரத்து, கலிவெண்பாட்டு அல்லது வெண் கலிப்பாட்டு வெண்டளையான் வந்து ஈற்றடி முச்சீரான் இறு மென்பதற்கும் (தொல். அகத் சூ. சஉ; செய். சூ. கசசு.) இளம்பூரணரும், (இ) தலைவி கற்பினுட் பிரிவாற்றாது எம்மையும் உடன்கொண்டு சென்மினென்பதற்கு (தொல். அகத் சூ. சரு.) நச்சினார்க்கினியரும், (ஈ) கலிவெண் பாட்டுப் பதினோரடியான் ஒரு பொருணுதலி வந்ததற்கு (தொல். செய். சூ. கருந.) பே; நச். இருவரும் இச்செய்யுளை மேற்கோள் காட்டினர். (உ) சீலப். பதிக முகவுரையில் நீரின்மை நிலையே பாலை நிலத்திற்குச் சிறப்பு என்பதற்கும்,(ஊ) சிலப். கக: எஎ 'வரிமரற்றிரங்கிய கரிபுறக் கிடக்கையும்' என்பதன் இரண்டா முரையில், திரங்கிய வென்பதற்கு விலங்கு சுவைத்தலால் திரங்கிய வென்றுமா மென்பதற்கும் 'மரையா மரல்கவர' என்ற பகுதியை மேற்கோள் காட்டினர். அடியார்க்கு நல்லார்.
(எ) மரை மரல் தின்னுதல் "வரிமரற்பாவை மரையேறு கறிக்கும்"
(ஏ) மரை ஆவெனப்படுதல்: "அண்ணன் மரையா" பதிற். உந.
(ஐ) "கன்றுடை மரையா" புறம். உகஎ.

உ. "பலருமெய்த வாளிமெய் படப்படப் பனித்துநாப், புலரநொந்து கங்கை மைந்த னிதயமும் புழுங்கினான்" வில்லி. பத்தாம். கஉ.

ந. "ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி, பன்மைக் காகு மிடனுமாருண்டே" என்பது பன்மை சுட்டிய பெயர்ச்சொல் ஒருமைக்குப் பொருந்தி நிற்கு மிடமுமுண்டென்னும் பொருளை அருத்தா பத்தியாற்றந்த தென்று கூறி,(அ)"என்னீரறியாதீர் போல விவை கூறின்"

(பிரதிபேதம்) * கூறல்,

கo (க) துன்பந் துணையாக நாடி னதுவல்ல
தின்பமு முண்டோ வெமக்கு.

**இது தலைவன் செலவுக்குறிப்பறிந்து நீர் செல்லுங் கடுஞ்சுரத்துத் துன்பத்திற்குத் துணையாக எம்மையும் உடன்கொண்டு சென்மினெனத் தலைவி கூறியது.**

**இதன்பொருள்**

காடு, தற்றத்தையுடைய மறவர்தம்முடைய மூட்டுவாயை யுடைய அம்புகள், மலைவளர்ந்து போதற்கரிய காட்டிடத்து அரிய வழியைப் போவார்மேலே அழுந்துகையினாலே, உடலஞ்சுருங்கி உள்ளுண்டாகிய நீர் வற்றுகையினாலே உலர்ச்சியாலே வாடுகின்ற நாவிற்கு, மரையா மரலைத் தின்னும்படியாக மாரி வறக்கையினாலே தண்ணீர் பெறாத மனத் தடுமாற்றத்தையுடைய வருத்தத்தை அவருடைய கண்ணீர் வீழ்ந்து அந் நாவினை நனைத்துப் போக்குங் கடுமையை யுடையவென்று நீர் உடன் சேறலை மறுத்துக் கூறினால், யான் உயிர்தாங்கியிருத்தலாற்றாது இறந்து படுதலை அறியாதிருந்தீர்போல உடன்சேறலை மறுத்த இம்மொழிகளைக் கூறுதலாற் பெற்றதென்? நெடுந்தகாய்! இக்கூற்று நினக்கு உரிய நன்றாகிய நீர்மைகளை உடைய அல்ல! இனி நீ எம்மிடத்து அன்பு நீங்கப் பிரி தலைக் கருதாதே அவ்வாற்றிடைத் துன்பத்திற்கு எம்மையுந் துணையாகக் கொண்டு நும்மொடு போதலை ஆராயின் அதுவல்லது எமக்கு வேறோர் இன்பமும் உண்டோ? எ - று.

இதனால், தலைவிக்குக் கைம்மிகலும் தலைவற்கு இடுக்கணும் பிறந்தன.

---

என ஒருவனைப் பன்மையாற் கூறிப் பின்னர் "நின்னீரவல்ல நெடுந்தகாய்" என அவனை ஒருமையாற் கூறுவன போல்வனவும் இதனாற் கொள்க வென்பர், நச்; தொல். எச்ச. சூ. சுரு. (ஆ)முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி ஆற்றுப்படை யல்லாத வழியும் பலரில் வழியும் பன்மையொடு மயங்கி வருமென்பதற்கு (தொல். எச்ச. சூ. சுரு. 'முன்னிலை') இதனை மேற்கோள் காட்டுவர் தெய். (இ) உயர்வு சிறப்புக்களுள் (ஒன்றின்) 'பால் வழுவமைதி யென அமைப்பர் இ - வி. நூலார்; இ - வி. சூ. ருOO. (ஈ) "எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந், தேரான் பிறனில் புகல்" என்னும் (கசச) குறளின் விசேடவுரையில் இதனை உயர்த்தற்கட் பன்மை யொருமை மயங்கி வருதற்கு மேற்கோள் காட்டுவர்; பரிமே. பேராசிரியரும்" நின் மொழி யென்று உம்மவே யென்றது 'என்னீரறியாதீர்... நெடுந்தகாய்' என்பது போல ஈண்டும் பன்மையு மொருமையு மயங்கி நின்றன" என்பர்; கோவையாருரை. கருகு.

க. "துன்பத்திற்கி யாரே துணையாவார் தாமுடைய நெஞ்சந் துணையல் வழி" குறள். கஉகக.

"பெற்றமுமெருமையு மரையுமாவே"(க)என்றதனுன் மரையாவென்றூர்.

இதன்கண்ணே, இவள் தன்(உ)பெண்டன்மையாற் கூறத்தகாதது கூறக் கேட்ட யாம், உலக ஒழுக்கத்தை அறிந்து, இவளை உடன்கொண்டு செல்வே மாயின், இவள் தண்ணீர் பெருத அருந்துயரம் நமக்கு மிக்க வருத்தத்தைத் தருமாகலின், இவடன்னை உடன்கொண்டு சேறல் எவ்வாற்ருனுந் தகாதென் றும்,யாம் அன்புபெருகுமாறு சூழ்ந்த காரியத்தினை இவள் அன்பு*அருகும்படி சூழ்ந்தேமாகக்கருதி † இதற்குமாறு கூறினளென்றும் உட்கொண்டு, இனி இவளை ஆற்றுவித்துப் பிரிவேமெனச் செலவழுங்கினமை தோன்ற நிற்றலின் வேறுமொரு பொருள் தோன்றி நின்றது.

இஃது "ஒருபொருணுதலிய வெள்ளடி யியலாற், றிரிவின்றி ‡ வருவது கலி வெண் பாட்டே" (ந) என்பதனுற் பாட்டிற் பொருளோடே வேறும் ஒருபொருள் தோன்றி நின்று பதினோரடியான் வந்த கட்டளைக்கலி வெண் பாட்டு. வேறும் ஒரு பொருள் || தோன்ற நிற்றல் எனைப் பாக்கட்குஞ் சிறி துளவேனும் பொருளாற் செய்யுள் வேறுபட்டுவரும் விதியின்மையின் ஆண்டு ÷ அவற்றூராய்ச்சியின்றாயிற்று. இது வெண்பாவாய் வருதலிற் குறித்த பொருளை மறையாது செப்பிக் கூறவேண்டும். இது குறித்த பொருளை மறைத்து வந்தமையானும் தனக்கு உரிய வெண்டளையான் வந்தமையானுங் கலிவெண்பாட்டாயிற்று. "நெடுவெண் பாட்டே முந்நா லடித்தே, குறு வெண் ∴பாட்டி னளவெழு சீரே."(ச) எனவே,(ரு) நெடுவெண்பாப் பன்னீரடி யின் இகவாவென்றலின் இதற்குப் பன்னீரடி பெருமையென்று கொண்டார். [] இக்கலித்தொகையின் இவ்விலக்கணம் பெற்றுவரும் பாட்டு எட்டுள. அவை வந்தவழிக்கூறுதும். பன்னீரடியின் இகந்துவருங் கலிவெண்பாட்டுக்களுக்கும் அவை வந்துழி அவற்றவற்றிலக்கணங் கூறுதும்.

தலைவி உடன் கொண்டுபோவெனக் கூறுதல் "மரபுநிலை திரியா மாட் சிய" என்னும் (சா) அகத்திணையியற் சூத்திரத்து அமைத்தாம்.

இதனைத் தோழி கூற்ருக்கிக் கூறின், காடு கடுமையவென்று உடன் சேறலை மறுத்துக் கூறினுற் றலைவி இறந்துபடும், அவள் இறந்துபடுதலை அறியாதிருந்தீர்போல இவை கூறலென்னெனக. (ரு)

---

க. தொல். மர. சூ. கூ0. இச்சூத்திரவுரையில் மரையென்பது ஆவென்னும் பெயர் பெற்றுவருதற்கு 'மரையா மரல்கவர மாரி வறப்ப' என்பதை மேற்கோள் காட்டினர். பே; நச்.

உ. கலி. கஅ-ஆம் செய்யுளின் உரை யிறுதிபார்க்க.

ந. தொல். செய். சூ. கருச. பார்க்க. ச. தொல். செய். சூ. கருஅ.

ரு. 'முந்நான்கடியின் இ[ற](க)ந்துவருதலான், நெடுவெண்பாட்டாகாது கலிவெண்பாட் டாத லுணர்க' என்பது சில. சு. உரையிறுதி.

சா. தொல். அகத். சூ. சரு.

(பிரதிபேதம்) * அறும்படி, † இறக்குமாறு, ‡ நடப்பது, || தோன்றி, ÷ அவை ஆரா ய்ச்சி, ∴ பாட்டிற்களவு, [] இத்தொகையின்.

(௭) (௧)வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு
வானீங்கு வைப்பின் வழங்காத்தேர் நீர்க்கவாஅங்
கானங் கடத்தி ரெனக்கேட்பின் யானொன்
றுசாவுகோ வைய சிறிது ;
௫ நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின்
கைபுனை வல்வின் ஞாணுளர் தீயே
இவட்கே, செய்வுறு மண்டில மையாப் பதுபோன்
மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே ;
௰ நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே
இவட்கே, சுனைமா ணீலங் காரெதிர் பவைபோ
லினைநோக் குண்கண் ணீர்நில் லாவே ;
௧௫ நீயே, புலம்பி லுள்ளமொடு பொருள்வயிற் செலீஇய
வலம்படு திகிரி வாய்நீ வுதியே
இவட்கே, அலங்கிதழ்க் கோடல் வீயுகு பவைபோ
லிலங்கே ரெல்வளை யிறையூ ரும்மே ;
௧௭ எனநின் ;
சென்னவை யரவத்து மிணையவ ணீநீப்பிற்
றன்னலங் கடைகொளப் படுதலின் மற்றிவ
ணின்னுயிர் தருதலு மாற்றுமோ
முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே.

இது, பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகற்கு நீர் பிரிகின்றீரென்று யான்கூறத் தலைவி கேட்பின் அவட்கு அக்காலத்து நிகழ்வனவற்றை நும்மோடு ஆராய்வதுடையேன் ; நீர் செய்யும்பொருள் இவளுயிரையுந் தருகிற்குமோ எனச் செலவழுங்கக் கூறியது.

இஃது "உடன்சேறல் செய்கையோ டன்னவை பிறவு-ம்மடம்பட வந்த தோழி கண்ணும்" (௨) என்பதனுட் செய்கை கூறுகின்றது.

---

௧. தேர்நிலை யுரைத்த லென்பதற்கு ஆராய்ச்சி நிலையாற் கூறுதலென்று பொருள் கூறி, அதற்கு (தொல். கற். சூ. ௩௨. 'காமநிலை') இச்செய்யுளை மேற்கோள் காட்டுவர், இளம்பூரணர். பேராசிரியர். தொல். செய். ௧௫௫-ம் சூத்திரவுரையில் "வேனிலுழந்த வறிதுயங் கோய்களி றென்னும்பாட்டு, தரவும்போக்கும் பாட்டிடை மிடைந்து ஐஞ்சீரடுக்கி வந்தது, இதனுள் தரவடி நான்கும் வெண்பாவாயினும் அச்செய்யுண் முழுவதும் வெண்பா வன்மையிற் கொச்சகமாயிற்று." என்பர்.

௨. தொல். கற். சூ. ௫. நச். இதனுரையில் 'செய்கைகளாவன : தலைவன் கைபுனை வல்வில் நாணுளர்ந்த வழி இவள் மையில் வாண்முகம் பசப்

(க) வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு
வானீங்கு வைப்பின் (உ)வழங்காத்தேர் நீர்க்கவாஅங்
கானங் கடத்தி ரெனக்கேட்பின் (ந) யானென்
றுசாவுகோ வைய சிறிது

எ - து: முதுவேனிற் காலத்தாலே வருந்தின உடல் சிறிதாக வருந்தும் ஓய்ந்த களிறுகள் (ச)மழைநீங்குதற்குக்காரணமான கொடுமையையுடைய ஊர்களிலே தண்ணீருண்டற்கு (ரு)ஊரப்படாத பேய்த்தேரைத் தண்ணீரென்று அவாவுங் காட்டை நீர் போவீரென்று யான் கூறுதலைக் கேட்பின் நீர் செல்லுங்காலத்து அவட்கு நிகழ்வதொன்றை யான் சிறிது நும்மொடு உசாவுவேனோ? எ - று.

இதனால், தலைவற்குச் சூழ்ச்சிபிறந்தது.

இது தரவு.

ரு (சு)நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின்
கைபுனை வல்வின் * ஞாணுளர் தீயே

---

பூர்தலும் அவன் புனைமாண் மரீஇய அம்பு தெரிந்தவழி இவள் இனைநோக்குண்கண் நீர்நில்லாமையும் பிறவுமாம்' என இவ்வடிகள் உரை நடையாக அமைக்கப் பெற்றுள்ளன.

க. (அ)"யானை,நீர்மருங்கறியாது தேர்மருங்கோடி,யறுநீரம்பியி னெறிமுதலுணங்கு, முள்ளுநரப் பனிக்கு மூக்கருங் கடத்திடை." அகம். உகூ. (ஆ) 'வேனிலுழந்த வறிதுயங்கோய்களிறு' என்பது ஓய்தல் நுணுக்கமாகிய குறிப்புணர்த்து மென்பதற்கு (தொல். உரி. சூ. நச. சே; உசு. தெய்; நஉ. நச். இ - வி. சூ. உஅக. நன். உரி. சூ. கஅ. இரா.) மேற்.

உ. "வெண்ட ரங்கமென வீசுபேயிரத மிஞ்சு கானநெறி" வில்லி.

ந. உசாவென்பது சூழ்ச்சி யென்னும் பொருளில் வருதற்கு "யானென் றுசாவுகோ வைய சிறிது" என்பது மேற்கோள். தொல். உரி. சூ.ருசு. 'உயாவே' தெய்.

ச. மழை நீங்குதற்குக் காரணமான கொடுமையென்றது (அ)மறவர் செய்யும் தகாக்கொலை முதலியவற்றை. (ஆ) பாண்டியன் கோவலனைக் கொன்றதனால் அவனாடு பன்னீராண்டு வற்கட முற்றதென்னும் செய்தியும் (இ) 'விண்பொய்யதனால் மழை விழாதொழியினும்' தே. என்பதும். ஈண்டுக் கருதத் தக்கன.

ரு. "உருவில் பேஎ யூராத் தேரொடு" அகம். சுஎ.

சு. யாழவென்பது முன்னிலை யசைச்சொல்லாய் வருதற்கு 'நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின்......ணுளர்தீயே' என்பது மேற்கோள். நன். இடை. சூ. உக. மயிலை. வி. இரா. இ - வி. சூ. உஎசு.

(பிரதிபேதம்) * ஞாணூர்தீயே,

எ - து: ஐயனே, நீ *செய்கின்ற காரியத்திடத்தே செல்லுதலை மனத் தான் நிகழ்த்துகையினுலே நின்னுடைய கையாலே எழுதி வழித்த வல்தாகிய வில்லிணைத் தடவாநின்றாய்; எ - று.

யாழ, அசை.

உளர்தியென்னும் முன்னிலைவினை, விகாரத்தால் நீண்டது.

> இவட்கே,(க)செய்வுறு (உ)†மண்டில (ங) மையாப் பதுபோன்
> (ச) மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே

எ - து: இக்காலத்து இவளுக்கு மறுவறச்செய்தலுறுகின்றதொரு மதி யிடத்தே மேகம் பரக்கின்ற தன்மைபோல மறுவில்லாத ஒளியையுடைய முகத்தே பசப்புப் பரவாநிற்கும்; எ - று.

செய்வுறு மண்டிலம், இல்பொரு ளுவமை.

---

க. (அ) "செய்வுறு நன்கலம்" (ஆ) "செய்வுறு பாவைக்கு" புறம். சு, உசங: (இ) "செய்வுறு திவவின்" மநுத. கசo.

உ. "பனி கொண் மாமதி போற் பசப் பூரயான், றனிய ளாவது தக்கதுவோ" சீவக. கடுகo. என வருதலும் ஈண்டுக் கருதத்தக்கது.

ங. (அ) மையாத்த லென்பதற்கு மயங்கல் என்று (குறள். ககஉ.) பரிமே லழகர் பொருள் செய்திருக்கின்றனர். இச்சொல்லுக்கு மேகம் பரத்த லென்று இங்கே பொருள் செய்திருத்தலை நோக்கின் இது மை பாப்பது, மை பரப்பது என இருக்கவேண்டுமென்றுதோற்றுகிறது. அவ்வாறே ஒருபிரதியில் பேதமும் உள்ளது. ஆனாலும்(ஆ)"காண்மை யாத்த வெண்முகத்தை" (இ) "திருவுருத் தேசு நோக்கிச் செங் கதி ரொளிமையாக்கு; மொருபுடை" (ஈ) "மீனொளி மையாப்ப" (உ) "பரிதிமுன்னர் வெண்கதிரென மையாக்கும், பேறிருங் கிரணக்கற்றை" (ஊ) "வெய்யவற் கொளிமையாந்து வேறுபட் டிருந்தசெந்தீ" என்னுமிடங்களிலும் மற்றும் பல விடங்களிலும் கச்சியப்ப முனிவர் இச்சொல்லை மழுங்குதலென்ற பொருளிற் பிரயோகித்திருத்தலாலும் இங்கு அப்பொருள்கொள்ளினும் ஒருவாறு பொருந்துமாதலாலும் மையாத்தலென்றே கொள்ளப்பட்டது.

ச. (அ) வாண்முகம் பசப்பூர்தல் கலி. கoo: கஅ. (ஆ) பசப்பு நிற வேறுபாட்டை யுணர்த்துதற்கு, 'மையில் வாண்முகம் பசப் பூரும்மே' என்பதும். (தொல். உரி. சூ. கக. சே. சூ. கo. நச். இ - வி. சூ. உகo.) (இ) இல்லென்கிளவி இன்மை செப்புமிடத்து ஐகார ஆகாரங்களைப் பெறாது இயற்கையாய் வருதற்கு 'மையில் வாண்முகம்' என்பதும் தொல்.புள்ளி.சூ.எஎ.நச்.(ஈ)வாளென்பது ஒளியையுணர்த்து தற்கு, 'வாண்முகம்' என்பதும் தொல்.உரி. சூ.எக. சே. மேற்கோள்.

(பிரதிபேதம்) * செல்கின்ற, † மண்டலமைபாப்பதுபோல்,

௬ (க)நீயே, வினைமாண் (உ)காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே

எ - து: நீ தொழின் மாட்சிமைப்பட்ட * கைச்சரட்டை இறுகக்கட்டி நீ மருவிப்போர்ந்த புனைதன் மாட்சிமைப்பட்ட (௩) அம்புகளைத் தெரியா நின்றாய்; எ - று.

இவட்கே, சுனைமா (ச)ணீலங் காரெதிர் பவைபோ
லினைநோக் குண்கண் ணீர்நில் லாவே

எ - து: இக்காலத்து இவளுக்குச் சுனையிடத்து மாட்சிமைப்பட்ட நீலம் மழையை எதிர்கொள்ளுமவை நீர் சொரியுமாறுபோல வருத்தும் பார்வையினை யுடைய மையுண்கண் நீர்நில்லாவாய் வீழாநிற்கும்; எ - று.

கண், நீர் விழுமென இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்துமேல் நின்றது.

இணைநோக்கும் பாடம்.

---

க. (அ) "நீயே, வினைமாண்..........ணீர் நில்லாவே" என்னும் பகுதி கொச்சகக்கலியுள் இடைநிலைப் பாட்டுத் தாழிசை யின்றி வந்ததற்கும் (தோல். செய். சூ. கருo. பே.) (ஆ) "நீயே, வினைமாண்...தெரிதியே" என்னும் பகுதி சீர்முழுதுங் கூனாகிவருதல் அளவடிக்குரிய தென்புழிக் கலிப்பாவிற் கூன் வந்ததற்கும் (தோல். செய். சூ. சஎ. 'சீர்கூனாதல்' இள.) (இ) கொச்சகத்தில் தாழிசை தாழம் பட்ட வோசை யின்றி வந்ததற்கும். (தொல். செய். சூ. கருo. நச்.) மேற்கோள்.

உ. (அ) "வம்புகளை வறியாச் சுற்றமொ டம்புதெரிந்து" (ஆ) "விரற் றலைப் புட்டில் வீக்கி வெஞ்சிலை கணையோ டேந்தி" சீவக. உஉoஉ. (இ) "முன்கைக், கார்விற் செறிநா ணெறிகைச்செறி கட்டி கட்டி" பெரிய. கண்ணப்ப. சுo. (ஈ) "கோதை தங்கு கரத்தில் வில்" (உ) "விரற்புனை கோதைவல் வில்லின் வல்லவர்" வில்லி. பதின் மூன்றாம். உரு, உருச. என்பவை ஈண்டறியற் பாலன.

௩. அம்புகளை ஆராய்ந்து கைக்கொள்ளுதலை அம்புதெரித லென்றார்; இவ்வழக்கை, 'தெரிகணை நோக்கி' (கலி. ௩க: உஉ;) என்பதன் குறிப்பிற் காண்க.

ச. (அ) "சுனை பெய னீலம்போற் கண்பனி கலுழ்பவால்" கலி. சஅ: கரு. (ஆ) "தண் கயம் பயந்த வண்காற் குவளை, மாரி மாமலர் பெயற் கேற் றன்ன, நீரொடு நிறைந்த பேரமர் மழைக்கண், பனிவா ரெவ்வம்" அகம். ௩கரு.

(பிரதிபேதம்) * கைச்சாட்டை (என்று படித்தலுமாம்).

கரு  நீயே, * புலம்பி லுள்ளமொடு பொருள்வயிற் † செலீஇய
வலம்படு திகிரி வாய்நீ வுதியே

எ - து: நீ பிரிகின்றேமென்கின்ற தனிமையில்லாத நெஞ்சத்தோடே பொருளைத் தேடற்குப்போக வெற்றியுண்டாகின்ற சக்கரத்தினது வாயைத் துகள்போகத் துடையாநின்றாய்; எ - று.

இவட்கே, அலங்கிதழ்க் (க) கோடல் வீயுகு பவைபோ
லிலங்கே ரெல்வளை யிறையூ ருமமே

எ - து: இக்காலத்து இவளுக்கு அசைகின்ற இதழினையுடைய கோடற்பூ ஊழ்த்து விழுகின்றவைபோல விளங்கும் அழகினையுடைய ஒளிபொருந்தின வளை இறையினின்றுங் கழலாநிற்கும்; எ - று.

இவை மூன்றும், தாழிசை.

களை          எனநின்,

சென்னவை யரவத்து மினையவ ணீநீப்பிற்
றன்னலங் கடைகொளப் படுதலின் மற்றிவ
(உ) ளின்னுயிர் தருதலு மாற்றுமோ
முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே

எ - து: நீ செல்கின்றது எமக்குக் குற்றத்தைச் ‡ செய்யு நின்னுடைய ஆரவாரத்தும் இத்தன்மையளானவள், தன்னுடைய நலம் நீ நீங்குவையாயின் இறந்து படுங் காலத்தாலே கைக்கொள்ளப்படுகையினாலே நின்னை ஒன்று வினவுகின்றேன்; நீ கருதின தேயத்துச்சென்று முயன்று தேடும் பொருள் இன்பந்தருதலேயன்றி இவள்இனிய ||உயிரையும் தருதலைச் செய்யுமோ?எ-று.

என அசை.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

எனநின், தனிச்சொல்; எஞ்சியது, சுரிதகம்.

---

க. கோடல்—வெண்காந்தள்; இது வளைக்கு உவமையாதல் (அ) "ஊழுறு கோடல்போ லெல்வளை யுகுபவால்" (ஆ) "ஊழுற்ற கோடல்வீ, யிதழ்சோருங் குலைபோல விறைநீவு வளையாட்கு" கலி: சஅ, கஉக. இதற்கு வளை உவமையாதல்: (இ) "வளையுடைந் தன்ன வள்ளிதழ்க் காந்தள்" மலை.நிகக.(ஈ)"உடைவளைகடுப்ப மலர்ந்தகாந்தள்"புறம்.கo.

உ. (அ) ஓது வதற்கண்ண லேபிரிந் தாலொண் மயிலையென்பு, மாது படுத்தினர் போலோதி வாரும் ........தீது படக்கொடி யாவிசென் றாலுந் திருப்புகைக்கே" (ஆ) "சிறந்திடு கல்விகள் வேண்டுவ யாவை யுந் தேர்ந்துபின்ன, ரிறந்தமின் னாரென்பை யன்னார்க ளாக வியற்றுதற்கோர், திறந்தரு விஞ்சையுங் கற்றறி காணவுன் செல்வியையே" என ஓதற்பிரிவின்கண் இக்கருத்து அமைக்கப் பெற்றிருத்தல் காண்க.

(பிரதிபேதம்) * புலம்பியவுள்ள, † செலீஇயர், ‡ செய்ய, || உயிரைத் தருதலையும்.

"தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்து, ஐஞ்சீ ரடுக்கியு மாறுமெய் பெற்றும், வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்" (க) * என்பதனாற் கூறுகி, நீயே இவட்கே என்னுஞ் சொற்கள் இடைநிலைப்பாட்டோடு கூடி ஐஞ்சீரடுக்கிவந்த கலிவெண்பாட்டாயினும் அத்தரவு வெண்பாவாய் ஒழிந்தன வெண்பா அன்மையிற் கொச்சகமாயிற்று. (சு)

(அ) நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினந் தெறுதலி
னுறலூறு கமழ்கடாஅத் தொல்கிய வெழில்வேழம்
௫ வறனுழு நாஞ்சில்போன் மருப்பூன்றி நிலஞ்சேர
விறன்மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரஞ்
சொல்லா திறப்பத் துணிந்தனிர்க் கொருபொருள்
சொல்லுவ துடையேன் கேண்மின்மற் றைஇய;
சு வீழுநர்க் கிறைச்சியாய் விரல்கவர் பிசைக்குங்கோ
லேழுந்தம் பயன்கெட விடைநின்ற நரம்பறாஉம்
யாழினுந் நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ;
கஉ மரீஇத்தாங் கொண்டாரைக் கொண்டக்காற் போலாது
பிரியுங்காற் பிறரெள்ளப் பீடின்றிப் புறமாறுந்
திருவினுந் நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ;
க௫ புரைதவப் பயனோக்கார் தம்மாக்க முயல்வாரை
வரைவின்றிச் செறும்பொழுதிற் கண்ணோடா துயிர்வௌவு
மரைசினுந் நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ;
எனவாங்கு;
கசு நச்சல் கூடாது பெரும விச்செல
வொழிதல் வேண்டுவல் சூழிற் பழியின்று
மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பித்
தன்னகர் விழையக் கூடி
னின்னுறல் வியன்மார்ப வதுமனும் பொருளே.

இது சொல்லாது பிரியலுற்ற தலைவன் குறிப்பறிந்து தோழி பொருளது நிலையாமை கூறி † அவளோடு கூடிச் செல்கின்ற இல்வாழ்க்கைச் செலவே பொருளென அவன் செலவழுங்கக் கூறியது.

இதன் பொருள்.

---

க. தொல். செய். சூ. க௫௫.

(பிரதிபேதம்) * என்பதனானுகி. † இவளொடு.

(அ) (க) நடுவிகந் தொரீஇ (உ) நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினந் தெறுதலி
னுறலூறு (ங) கமழ் *கடாஅத் தொல்கிய வெழில்வேழம்
வறனுழு (ச) நாஞ்சில்போன் மருப்பூன்றி நிலஞ்சேர
(ரு) விறன்மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரஞ்
சொல்லா திறப்பத் துணிந்தனிர்க் கொருபொருள்
சொல்லுவ துடையேன் (சு) கேண்மின்மற் றைஇய

எ - து: நடுவுநிலையைக்கைவிட்டு நீங்கி அருளில்லாத அமைச்சன் தன் †மனத்திற்கிடந்த காரியத்தை மனத்தினின்றுந் தோற்றுவிக்க, அது கேட்டுக் கொடுந்தொழிலைச் சூழ்ந்த அரசனது கொடுங்கோல் சுடுமாறுபோலப் பகலோன் கடுகிக் காய்கின்ற கிரணங்களைச் செலுத்திச்(எ)சினத்தாற்சுடுகையி

க. (அ) "அலவுற்றுக் குடிகூவ வாறின்றிப் பொருள் வெஃகிக், கொலையஞ்சா வினைவராற் கோல்கோடி யவனிழ, லுலகுபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம்" கலி. க0: ரு-எ. (ஆ) "செம்மையி னிகந் தொரீஇ" கலி. கச. (இ) "அறனிலை திரியா வன்பி னவையத்துத், திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து, மெலிகோல் செய்தே னுகுக" புறம். எக. (ஈ) "முறைதெரிந்து செல்வர்க்கு நல்கூர்ந் தவர்க்கு, மிறைதிரியா னேரொக்கல் வேண்டும்." பழமொழி. உ0சு. (உ) "உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை,யடக்கமி லுள்ளத்த னாகி - நடக்கையி, னொள்ளிய னல்லான்மேல் வைத்தல் குரங்கின் கைக், கொள்ளி கொடுத்து விடல்." பழமொழி. உ00.

உ. (அ) "பேதையோன் வினை வாங்க" கலி. உஎ. (ஆ) "வினைவாங்கி" திருவிளை. பன்றிக்குட்டிகளை. கங.

ங. யானை மதம் கமழுமென்பதனை. கலி. உக:உ; 'கமழ் கடாஅத்து' என்பதன் குறிப்பாலுணர்க.

ச. (அ) "பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சில்" பெரும்பாண். கககூ. (ஆ) "யானைத், தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து, நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள" புறம். ககூ: (இ) "வெள்ளி வெண் ணாஞ் சிலான் ஞால முழுவனபோ, லெல்லாக் களிறு நிலஞ் சேர்ந்த" களவழி. ச0. (ஈ) "அலப்படை யனைய தூங்குவாய் நெடுங்கை யலைசெவி வாரணம்" விநாயக. திருநகர. உக.

ரு. விறன்மலை: கலி. உ0, சச, சரு, ருங. திணைமொழி. உ, எ.

சு. 'ஐய' என்பது பன்மைவினை பெற்றுவருதலை ககூ-ம் பக்கம் ங-வது குறிப்பிற் காண்க.

எ. சினமென்பதற்கு வெம்மையென்று பொருள்விளக்குவர் புறநானூற் றுரைகாரர்.

(பிரதிபேதம்) * கடாத்து. † மனதிற்.

ஞலே (க) முன்பு வண்டுகளூறுதலையுடைத்தாய் ஊறுகின்ற கமழும் மதத்தினை யுடைத்தாய் இப்பொழுது கெட்ட அழகையுடைய * யானை ஈரமற்ற நிலத்தை உழுகின்ற கலப்பைகள்போலக் கொம்புகளை ஊன்றிக் கையை நிமிர்த்து நிலத்தே கிடவாநிற்க வெற்றியை யுடைய மலைகள் வெம்புதலைச் செய்த போதற்றொழில் அரிய வெய்யகாட்டை, எங்களுக்குச் சொல்லாதே போகத்துணிந்த நுமக்கு ஒரு காரியத்தினைக் கூறுந் தன்மையையுடையேன். அதனைக்கேட்பீராக; எ - று.

இதனால், தோழிக்குச் சூழ்ச்சி பிறந்தது.

வாங்க என்றது "விருத்திவாங்க" என்றது போல் நின்றது; உறல் (௨) வாயிடத்தே வந்து உறுதலுமாம்.

பொருள், ஆகுபெயர்; மற்று அசை.

இது தரவு.

கூ. வீழுநர்க் கிறைச்சியாய் (ந) விரல்கவர் பிசைக்குங்கோ
லேழுந்தம் பயன்கெட விடைநின்ற நரம்பறூஉம்
யாழினுந் † நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ

எ - து: ஐயனே, விரும்புவார்க்கு நேயமாய் விரலாலே வாசிக்கப்பட்டு ஒலிக்கும் நரம்பு ஏழும் தம்முடைய பயன் இன்றாம்படி (ச) தானக்கோலின் அகப்பட்டு இடைநின்ற (ரு) நரம்பு அற்றுப்போம் யாழினுங் காட்டில் நிலைபேறில்லாத பொருளையும் அறிவுடையோர்கள் நச்சுவர்களோ? நச்சார் காண்; எ - று.

---

க. 'வென்றிக்களிறு' (சீவக. கச.) என்பதன் உரைநோக்குக.

௨. (அ) "வரி ஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்துப், பொறிநுதற் பொலிந்த வயக்களிற்றொருத்தல்" அகம். எஅ. (ஆ) "வரிஞிமிறார்க்கும் வாய்புகு கடாஅத், தண்ணல் யானை" புறம். கூ௩. (இ) "வரி வண் டார்க்கும் வாய்புகு கடாஅத்த, வண்ணல் யானை" தொல். மேற்.

௩. "விரல் கவர்ந்துழந்த கவர்வி னல்யாழ்" நற். ௩௩ரு: "விரல் கவர் பேரியாழ்" பதிற். ருஎ:அ கவர்தல்—அகப்படுத்தல்; பதிற். அச. உரை.

ச. (அ) தானக்கோல், "தன்மக ளொருத்தியைத் தானயாழ் கற்கென" பெருங். (க) ௩ரு: ரு. (ஆ) "திருந்தொளிப்பசுந் தொடிக்கரங் கோல்பொரச் சிவப்ப" பாகவதம், (க0) மதுரைகண்ட. கரு.

ரு. "தக்க நரம்பிலா நாத யாழும்...........போன்ற வீடுமெனிலாத சேனை" வில்லி. பதினொராம். ரு.

(பிரதிபேதம்) * யானைகள், † நிலையிலா (தாழிசைமூன்றிலும்).

கஉ. (க)மரீஇத்தாங் கொண்டாரைக் கொண்டக்காற் போலாது
பிரியுங்காற் பிறரெள்ளப் பீடின்றிப் புறமாறுந்
திருவினுந் நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ

எ-து: தாம் மருவி மனத்தாற் கொண்டவர்களைத் தம்மனங்கொண்ட காலம்போலாகாமற் பிரியுமிடத்துப் பிறர் இகழும்படி அவர்க்கொரு வலியின்றாக அவர்கள் * அப்புறமாக மனமாறுந் திருமகளினுங் காட்டில் நிலைபேறில்லாதபொருளையும் அறிவுடையோர்கள் நச்சுவர்களோ? நச்சார்காண்;எ-று.

தாம், பன்மை யொருமை மயக்கம். தானும் பாடம்.

கொண்டக்காலென்னும் [பெயரெச்சத்திற்] (வினையெச்சத்திற்) கால் ஈண்டுக் காலங்காட்டிற்று. கொண்டக்காற்போலாதென்றது தான்வருதற்கு முன்பு அவர் நின்ற † நிலையையும் கெடுத்துப்போமென்னும் ‡ நினைவிற்று.

---

க. (அ)"பிறந்த குலமாயும் பேராண்மை மாயும், சிறந்ததங்கல்வியு மாயும் .........இன்மை தழுவப்பட் டார்க்கு" (ஆ) "பிறக்கலான்......... இரப்பாரை யெள்ளாமகன்" நாலடி. உஅரு, ருO௭. (இ) "எளியரிவரென் றிகழ்ந்துரையா ராகி, யொளிபட வாழ்த லினிது" இனியது. ருO. (ஈ) "இல்லாரை யெல்லாரு மெள்ளுவர்" குறள். எருஉ. (உ) "துளியுண் பறவைபோற் செவ்வனேர்ப் பாரு, மெளியாரை யெள்ளாதா ரில்" பழ. உ௮எ. (ஊ) "எளியாரை, யெள்ளானீத் துண்பானே லேதமின் மண்ணுண்டு, கொள்வான்" ஏலாதி. ௬எ. (எ) "பரப்புநீர் வையமுற்றுந் தேரினு மில்லை, யிரப்பாரை யெள்ளா மகன்" தசுரேயாத்திரை. (ஏ) "எள்ளன் மின்னில ரென்றெண்ணி யாரையும்" வளையாபதி. (ஐ) "திருமக ணிலைமையுஞ் செல்வர் சேட்டிரேன், மருவிய மனிதரை யிகந்து மற்றவள், பொருவறு புகழினார்ப் புகிய காமுறு, மொருவர்கண் ணுறவில ளுணர்ந்து கொண்மினே" சூளா. முத்தி. க௪. (ஒ) "இல்லோரை யற்ப மிகழோம்" அரிச்சந்திர. மயான. உ௬. (ஓ) "அருந்திரவியங் காக்கைக் கேதனத்தா டருமோ திரு வன்றியிலே" திருவரங்கத். ௬௬. (ஔ) "இருங்கடற் புவி யிடத்தினில் லாரையெல் லாருமெள் ளுவரென்னு, மொருங் குணர்ந்தமுன் னோருரைத் திட்டஃ துண்மையென் றுளங் கொண்ணீ" குசேலோ. மேல்கடலடைந்த. க௬௪. என்பனவைகளும். (ஃ) "கிழவ ரின்னே ரென்னது பொருடான், பழவினை மருங்கிற் பெயர்பு பெயர்புறையும்" (கலி. உக: ௬O-கக) என்பதன் குறிப்பில் இவ்விடத்திற்குப் பொருந்துவனவும் ஈங்கு நோக்கத்தக்கன.

(பிரதிபேதம்) *புறமாக, † நிலைமையும், ‡ நிலையிற்று.

கரு. புரைதவப் பயனோக்கார் தம்மாக்க முயல்வாரை
வரைவின்றிச்(க)செறும்*பொழுதிற் கண்ணோடா துயிர்வெளவு
† மரைசினுந் நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ

எ - து: தமக்கு உயர்ச்சி மிகும்படியாகத் (உ) தாம் பெறும் பயனைப் பாராதே அரசராக்கத்தை ‡ முயன்றபோதும் அமைச்சரைக் கோபிக்கும் பொழுது நங்காரியத்தினை முயன்றவரென்று ஒருவரைவின்றிப் (ங) பழமையையும்பாராதே பொருண்முதலியனவன்றி உயிரைக்கொள்ளும் அரைசினுங் காட்டில் நிலைபேறில்லாத பொருளையும் அறிவுடையோர்கள் நச்சுவார்களோ? நச்சார்காண்; எ - று.

(ச)|| அத்தன்மையானுயிரைவெளவிய அரசனும்அன்றேகெடுவனென்றார்.

இவை மூன்றும், தாழிசை.

---

க. (அ) "உரைசெல வுயர்ந்தோங்கிச் சேர்ந்தாரை யொருநிலையே, வரைநில்லா விழுமமுறீஇ நடுக்குரைத்துத் தெறன்மாலை, யரைசு" கலி. கசசு:க-ங. (ஆ)"பொறிசெறித்த மாண்பினராய்ப் பொருந்தலர்ச்செற் றிருநிதியஞ், செறிதருமா றீட்டியரு வினைவாங்கு செயலி னரு, முறுபிழையுட் சிறிதியற்றி னொறுத்திடுவர் வயவேந்தர்" நைடதம். அன்னத்தைத் தூது. கoசு. (இ) "தொழுந் தகை யமைச்சரைச் சுளிந்து நோக்குறா, மொழிந்தன னிடியொடு முகிலுஞ் சிந்தவே" கம்ப. அதிகாயன். க.

உ. (அ) "பால்வரு முறுதி யாவுந் தலைவர்க்குப் பயக்கு நீரார்" கம்ப. அயோத்தி. மந்திர. அ. (ஆ) "இன்னுயி ரழியும் போழ்து மிறைவனுக் குறுதியல்லான், முன்னிய முகமன்மாட்டா முற்றிய வறிவினரை" சூளா. துறவு. உக.(இ)"ஆளு மரசன் பாலன்பு மவனுக் காவதறியறிவு, நாளு மவற்றைக் கலங்காம னன்று முடிக்கு முளத்துணிவு, மூளும் வினைக்குத் தன்கரத்தின் மொய்த்த பொருளின் விழையாத, கோளுமுடையான் புரிவினையிற் குற்றமுறாது குணமேயாம்" "முறைவழிப் பிறழ்தல் செல்லா முதுக்குறை யமைச்சர் தம்மைச், சிறையிடைப் படுத்து" விநாயக. அரசியற்கை அக; வன்னி. கசு.

ங. "பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார், கிழமை பிறிதொன் றுங் கொள்ளார் வெகுளின்மன், காதன்மை யுண்டே யிறைமாண் டார்க் கேதிலரு, மார்வலரு மில்லை யவர்க்கு" நீதிநெறி. சஎ.

ச. (அ) "தீயவை செய்தார் கெடுத னிழறன்னை, வீயா தடியுறைந்தற்று" (ஆ) "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" குறள். உoஅ, ஙகக.(இ)"முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்" கொன்றை. (ஈ)"முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு, பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்" சில. உக : ங - ச. (உ) "முற்பகல்

(பிரதிபேதம்) * பொழுது, † அரசினும், ‡ முயன்றும், || அத்தன்மையான அரசனும் உயிரை வெளவிய அன்றே.

எனவாங்கு

எ - து: என்று யான்சொல்லாநிற்க; எ - று.

ஆங்கு, அசை.

இது தனிச்சொல்.

கக நச்சல் கூடாது பெரும விச்செல

வொழிதல் வேண்டுவல் சூழிற் பழியின்று

(க) மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பித்

* தன்னகர் விழையக் கூடி

னின்னுறல் வியன்மார்ப வதுமனும் பொருளே

எ - து: பெருமா! பொருளை நச்சுதல் நினக்குப்†பொருந்தாதால்; ஆராயிற் பழியின்றாக இச்செலவை நீ தவிர்தலை யான்விரும்புவேன்; அரசன் காக்க வருகின்ற விருந்தினரைப் பாதுகாத்துத் தன்மனைவி விரும்பும்படி அவளுடன் கூடியிருக்கில் இனிய முயக்கத்தை யுடைத்தாகிய அகற்சியை யுடைய மார்பனே நிலைபெறும் பொருள் அதுகாண்; எ - று.

நகர், ஆகுபெயர்.

இதனால், தலைவற்குக் கருதுதல்பிறந்தது; தோழிக்குச் சூழ்ச்சிபிறந்தது.

இது 'பழியின்று' எனத் (உ) தாழிசைப் பொருள்களைக்கொண்டு பின்பு 'மன்னவன் புறந்தர வருவிருந்து ............பொருளே' எனப் போக்கியற் பொருளையுங்கொண்டு இற்ற சுரிதகமும் ஏனை உறுப்புக்களும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. "தரவிய லொத்தும்" என்னுஞ் சூத்திரத்துப் புரைதீர் என்பதனாற் போக்கியற் பொருளுங் கொண்டு ‡புரைபடாது வந்தது. (எ)

செய்வினை பிற்பக லுறுநரின்" பெருங். (க) ருசு: உருக.(ஊ) "அற்பக னுகருமீ னவரை நுங்குமான், முற்பக லோர்பழி முடிக்கின் மற்றது, பிற்பக றமக்குறும் பெற்றியென்னவே" கந்த. இரண்டாநாட் நசுரு.

க. "வாழி யாதன் வாழி யவினி, நெற்பல பொலிக" என்னு மூலமும், 'காவற் பொருட்டு அரசன் வாழ்க; விருந்தாற்றுதற்பொருட்டு நெற்பல பொலிக' என்னும் பழையவுரை விளக்கமும் (ஐங். க.) இங்கே ஒப்பு நோக்கத் தக்கன.

உ. (அ) சுரிதகம் தாழிசையின் பொருண் முடிபைத் தன்பாற் பெற்று நிற்றற்கு (நச்சுபவோ என்பன தாழிசைகளிலுள்ளன) 'நச்சல் கூடாது பெரும விச்செல, வொழிதல் வேண்டுவல்' என்பதையும் போக்கியற் பொருள் வந்தால் அவ்விரண்டையும் புரைபடாமற் பொருந்தச் செய்வரென்பதற்கு 'தன்னகர் விழையக் கூடின்' என்பதையும் (தொல். செய். சூ. கருஎ.) மேற்கோள் காட்டுவர், பேராசிரியர். (ஆ) "புரைதீ ரென்றதனால், தாழிசைப் பொருளேயன்றி அவற்றோடு போக்கியற் பொருளுங்கொண்டு புரை[ட](ர)படாது வருவனவுங் கொள்க. அது 'அரசினு நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ' என முடித்தலின் 'நச்சல்கூடாது பெரும விச்செல, வொழிதல் வேண்டுவல்

(பிரதிபேதம்) * நன்னகர், † பொருந்தாது, ‡ புடைபடாது.

(கூ) (க) எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழ
லுறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலு
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணீர்
ரு. வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத்தீ ரிவ்விடை
யென்மக ளொருத்தியும் பிறண்மக னொருவனுந்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சிய
ரன்னா ரிருவரைக் காணிரோ பெரும
கூ. காணே மல்லேங் கண்டனங் கடத்திடை
யாணெழி லண்ணலோ டருஞ்சுர முன்னிய
மாணிழை மடவர லுயிர்நீர் போறிர் ;
கஉ. பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே ;
கரு. சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுந்
தேருங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே ;
கஅ. ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யுஞ்
சூழுங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே ;
எனவாங்கு ;
உஉ. இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றன
ளறந்தலை பிரியா வாறுமற் றதுவே.

இஃது உடன்போய தலைவிபின் சென்ற செவிலி இடைச்சுரத்து முக்கோற்பகவரைக்கண்டு இவ்வகைப்பட்டாரை ஆண்டுக்காணீரோவென

சூழிற் பழியின்று' எனத்தாழிசைப் பொருளைக்கொண்டு பின்பு 'மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பி, நன்னகர் விழையக் கூடி, னின்னுறல் வியன்மார்ப வதுமனும் பொருளே' எனப் போக்கியற் பொருளையும் கொண்டிற்றது" என்பர், நச்; தொல். செய். சூ. கருஎ.

க. 'எறித்தரு...மற்றதுவே' என்பது, செவிலிவரவின்கட் கூறியதற்கும். தொல். அகத். சூ. சo. நச். இடைச் சுரத்துப் புலம்புஞ் செவிலியை எதிர் வருவார் கண்டு தெருட்டியதற்கும் இறை. சூ. உங; மேற்கோள்.

வினவியாட்கு, அவனைக் கண்டு அஃதறமெனவே கருதிப் * போந்தேம், நீரும் அவர்திறத்து † எவ்வம்பட வேண்டாவென ‡ எடுத்துக்காட்டி அவர் தெருட்டியது.

இதன் பொருள்.

(க) எறித்தரு கதிர்தாங்கி யேந்திய (உ) குடைநீழ
(ங) லுறித்தாழ்ந்த கரகமு (ச) முரைசான்ற முக்கோலு
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
(ரு) குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணீர்

க. "எறித்தரு கதிர்தாங்கி...........காணிரோ பெரும" என்னும்பகுதி சுரத்திடை வினுதற்கு மேற்கோள். தொல். அகத். சூ. சo. இளம்.

உ. (அ) 'விரிகுடை தண்டே குண்டிகை' (அந்தணப்பூத வருணனை) சிலப். உஉ: ஙக. (ஆ) "குடையார் நிழலுறி சேர்கர கத்தொடு குன்றிடத்து, நடையான் மெலிந்து வருகின்ற வந்தணிர் ஞால மெல்லா, முடையா ளெளிவே லுசிதன்றென் கூடலொண் டீந்த மிழ்போ, லிடையாள் விடலையின் சென்றன ளோவிவ் விருஞ் சுரத்தே" இறை. சூ. உங. மேற்கோள். (இ) "ஆதபத்திரங் குண்டிகை யொருகையி னணைத்துப், போதமுற்றிய தண்டொரு கையினிற் பொலிய, மாதவப்பய னுருவுகொண் டெதிர்வருமாபோ, னீதிவித்தக னடைந்தமை நோக்கின னெடியோன்" கம்ப. மீட்சி. கஅக. (ஈ) "உறித்தாழ் கரகமு மூன்றுமுக் கோலு முடுத்த செவ்வா, னெறித் தாலனைய விருந்துவ ராடையு மிந்திரவி, மறித்தா லனைய குடையுங் கொண்டேவரு வீரொருவ, னெறித்தாழ் குழல்வல்லி முன்செல்லு மோவிந் நெடுஞ்சுரத்தே" அம்பிகா. சoo. (உ) "ஒரு வெண் குடை யிரு நீழன்முக் கோல்கொண் டொழுக்கத்தினு, லருவெங் களரியைத் தாறுசெல் வீரரு வீரெழுபார், மருவெண் டிசைபுகழ் வாணன்றென் மாறையென் வஞ்சியன்னுள், பொருவெஞ் சுடரிலை வேலொரு காளைபின் போயினளே" தஞ்சை. ஙசக.

ங. (அ) "உறித்தாழ் கரகம்" சிலப். ஙo, சுச, கo. (ஆ) "முறுக்குறி தூங்கு, குண்டிகைத்தடங் கையராய்" திருவிளை. சமணரைக் கழு. கஅ.

ச. "கற்றேய்த் துடுத்த படிவப் பார்ப்பான், முக்கோ லசைநிலை கடுப்ப" முல்லை. ஙஎ-அ. "நான்மறை நெறிமுக், கோலு மேந்திய குடைகளுங் குண்டிகைக் கரமும்" "இன்ன கொண்டுளவிருடிகள் யாவரு மெய்தி" அரிச்சந்திர. விவாக. ங-ச.

ரு. "குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணீர்" என்பது மாலை இயல் பென்னும் பொருளில் வருதற்கு மேற்கோள். தொல். உரி. சூ. கங. 'மாலை' தெய்.

(பிரதிபேதம்) * போந்தேம், † அவலம், ‡ எதுக்காட்டி.

வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத்தீ ரிவ்விடை
யென்மக ளொருத்தியும் பிறண்மக னொருவனுந்
தம்முளே புணர்ந்த * தாமறி புணர்ச்சிய
ரன்ன ரிருவரைக் காணிரோ பெரும

கூ (க) காணே மல்லேங் கண்டனங் கடத்திடை
யாணெழி லண்ணலோ டருஞ்சுர முன்னிய
மாணிழை மடவர † ளுயிர்நீர் போறிர்

எ - து: பெருமா! அந்தணீர்! உறியிலே தங்கின கமண்டலத்தையும் அரி அயன் அரனென்னும் மூவரும் ஒருவரென்று சொல்லுதல் தன்னிடத்தே அமைந்த (உ) முக்கோலையும் முறைமைபடத் தோளிலே வைத்து எறித்தலைச் செய்கின்ற(ங)ஞாயிற்றின் கதிர்களைத் தாங்குகையினாலே எடுக்கப்பட்ட குடைநிழலிலே, வெவ்விய காட்டிடத்தே போதலை இயல்பாகவுடைய ஒழுக்கத்தினை யுடையீராதலான் உம்மை வினவுகின்றேன்; இக்காட்டிடத்து என்னுடைய மகளொருத்தியும் வேறொருத்தி மகனொருவனும் பிறரறியாமற் றங்களிலே கூடின தாங்கள் இப்பொழுது பிறர் அறிந்த கூட்டத்தினையுடையராயினார்; அத்தன்மையார் இருவரைக் காணுதிருந்தீரோ? இக்காட்டிடைக் காணு திருந்தேமல்லேம்; கண்டு அஃதறமென்றே கருதிப் போந்தேம், ஆண்மக்கட்குக் கூறும் அழகினையுடைய தலைவனோடே இவ்வரிய சுரத்தைப் போகக்கருதிப் போந்த மாட்சிமைப்பட்ட அணியினையுடைய மடப்பத்தை யுடையாளுக்குத் தாயாந்தன்மையை உடையீர் ‡ போல இருந்தீர்; எ - று.

அரியயனரனென்னும் மூவரையும் ஒருவனாகவல்லது || வெவ்வேறாக நினையாத நெஞ்சத்தாலே ஐம்பொறியும் நுமக்கு எவல் செய்தலை இயல்பாகவுடைய கோட்பாட்டையும் ÷ நுமக்குரிய ஒழுக்கத்தையுமுடைய அந்தணீரென்க. குறிப்பு, ஆகுபெயர்.

---

க. 'அறியே மல்லே மறிந்தன மாதோ' ஐங். உ௪௦.

உ. (அ) நியாயப்பிரகாசம். முதற் பரிச்சேதம் அகூ-அஎ. எண்களின் தலைப்பில் ஏகதண்டி வேதாந்திகளென்றும் திரிதண்டி வேதாந்திகளென்றும் இருவகையார் கூறப்படுகின்றனர். (ஆ) பேராசிரியர், ஒரு கோலுடையார் இருவருளர்; அவர் துறவறத்து நின்றாராதலின் உலகியலின் ஆராயப் படாரென்றும், முக்கோலுடையா ரிருவருட் பிச்சை கொள்வானும் பிறண்டிருந்து தனதுண்பானும் உலகியலின் நீங்காமையின் அவரே கூறப்படுவரென்றும் விளக்குவர்; தொல். மர. சூ. எ௦.

ங. (அ) "அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும்" அற. ௬ங (ஆ) "வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின் மாலை வெண்குடை"

(பிரதிபேதம்) * தாமார், † தாயினீர், ‡ போலே, || வேறாக, ÷ உமக்கு.

பெருமாவென்றாள் அவர்கள் ஆசிரியனாகிய பெரியோனை. அந்தணர் அவன் மாணாக்கர். அவர்களைப் பெருமா அந்தணீரென விளித்தாள்; பெயர்கள் ஒருவனை ஒருவன் ஆற்றுப்படுத்த செய்யுளின்மையின் (௧) முன்னிலை சுட்டிய ஒருமைக்கிளவி பன்மையொடு முடிந்ததல்லாமையுணர்க.

காணீரோ? குறுகிநின்றது. கண்டேமென்னுமற் காணேமல்லேங் கண்டனமென்றதனால், அங்ஙனம் போகின்றவரை அறிந்து விலக்கல் அறமன்றென்று * பெயர்ந்தேமென்றாராகக் கொள்க. போறிரென்றார், (௨) தேடி வருவாள் செவிலியென்பது உணர்ந்து.

இது தரவு.

௧௨ (௩) பலவுறு நறுஞ் (௪) சாந்தம் படுப்பவர்க் † கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே

---

புறம்.௬௦.என்பவைகளும்.(இ) "நின்விண்பொரு வியன்குடை, வெயின் மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப்பதுவே" எனச் சிறப்பித்திருப்பதும்(புறம். ௩௫.) பிறவும் ஈண்டு அறிதற்பாலன.

௧. முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி ஆற்றுப்படையல்லாத வழியும் பலரில் வழியும் பன்மையொடு போற்றாமற் கூறப்படும் என்பதற்கு 'குறிப்பேவல்......காணீரோ பெரும' என்பது (தொல். எச்ச. சூ. ௬௩. 'முன்னிலை') தெய்வச்சிலையார் காட்டிய மேற்கோள்.

௨. "செவிலிபின் றேடிச் சேறலென் றாங்கு" நாற்கவி. சூ. ௧௮௩.

௩. "பலவுறு முத்து" என்பதற்கு, 'பலவிலையுற்ற முத்தென்றுமாம்' என, (பொருந. ௨௮.) உரை. எழுதியிருத்தல் ஈண்டு அறியத் தக்கது.

௪. (அ) "சடவரை காதலனோடு கடந்த கயனெடுங்கட், படவர வல்குனும் பாவைக் கிரங்கன்மின்...மலய மென்னுந், தடவரை தானே யணிந்தறி யாதுதண் சந்தனமே." இறை. சூ. ௨௩. மேற்கோள். (ஆ) "சுரும் பிவர் சந்துந் தொடுகடன் முத்தும்வெண் சங்குமெங்கும், விரும் பினர் பாற்சென்று மெய்க்கணி யாம்..............கரும்பனமென் மொழி யாருமந் நீர்மையர் காணுநர்க்கே" திருச்சிற். ௨௪௮. (இ) "தாளம், வவ்வினரிடத்து மவ்வழியான,......................பொதியப் பொருப்பு நெடுமுதுகு வருந்திப், பெற்று வளர்த்த கற்புடை யார, மணியுமா மகிழ்நர் பதியுறை புகுந்தால்......சென்றாட் குடைந்து, பொன்பதி நீங்கியுண்பது மடங்கி, முழங்கப் பெருங்குரல் கூஉய்ப், பழங்க ணெய்தியது பேதைமை யறிவே" கல். ௨௧

(ஈ) "பலவுறு........நினையுங்கா னும்மக ளுமக்குமாங்கனையளே" என்பது சுரத்திடைக் கண்டோர் செவிலியர்க்கு அறநூற்குத்தக உலகியல் புரைத்தற்கு மேற்கோள். தொல். செய். சூ. ௧௬௫. பே. நச்.

(பிரதிபேதம்) * பேர்ந்தேமாக, † அல்லது, (தாழிசை மூன்றினும்).

எ - து: † நறியனபலவுங்கூடும் நறிய * சந்தனம் தங்கண் மெய்ப்படுப் பார்க்குப்பயன்கொடுப்பதல்லது மலையிடத்தேபிறந்தனவாயினும் அச்சந்தனங் கடாம் அம்மலைக்கு என்னபயனைக் கொடுக்கும்? ஆராயுங்காலத்து நும் முடைய † மகளும் பயன்படும் பருவத்து ‡ நுமக்குப் பயன்படாள்; எ - று.

கரு (க) சீர்கெழு வெண் (உ) முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுந்
தேருங்கா னும்மக ணுமக்குமாங் கனையளே

எ - து: தலைமை பொருந்திய வெள்ளிய முத்துக்கள் அணிவார்க்குப் பயன்படுவதல்லது (ந) கடலிடத்தே பிறந்தனவாயினும் அம்முத்தங்கடாம்

---

க. (அ) "சீர்கெழு.........கனையளே' என்பது, கொண்டுதலைக் கழிந்துழி இடைச்சுரத்துக் கண்டோர் செவிலியைத் தடுத்ததற்கும் (தொல். அகத். சூ.சா௦. நச்.) (ஆ) பார்ப்பான் கூற்றுக்கும் (தொல். செய். சூ. கஅகூ. பே. நச்.) (இ) மிக்கோர் ஏதுக் காட்டற்கும். (நாற்கவி. சூ. கஅஅ.) மேற்கோள்.

உ. (அ) "மடவரன் மாதர்க்கு வருந்தா தீமோ, கடல்வயிறு பயந்த நித்தில, முடையோர்க் காத லுலகியல் வழக்கே".........(ஆ) "வெந்நீ ரருஞ்சுரங் காளைபின் சென்றநும் மெல்லியன்மாட், டிந்நீர்மை யீரிரங் கன்மின்..................றண்குமரி, முந்நீர் பயந்தா லணிவார் பிறரென்ப முத்தங்களே" (இ) "பெருங்கடன் ஞாலத்துட் பெண்பிறந் தார்தம்பெற் றூர்க்குதவா, ரிருங்கடல் போற்றுய ரெய்தன்மி னீன்றன வென்று முந்நீர்க், கருங்கடல் வெண்சங் கணிந் தறியாதண் கதிர் முத்தமே" இறை. சூ. உந. மேற்கோள். (ஈ) "வலம்புரி யீன்ற முத்த மண்மிசை யவர்கட் கல்லால், வலம்புரி பயத்தை யெய்தா தனையரே மகளிர்" சீவக. ருகூந. (உ) "இற்றுங் கேண்மதி முற்றிழை மகளிர், தத்துநீர்ப் பெருங்கடற் சங்குபொறை யுயிர்த்த, நித்திலத்தன்னர் நினைந்தனை காணென" பெருங். (க) சாஎ: உருந-ரு. (ஊ) "நாகைமின்னே, மீனூர் விழியை யென்னுடி னைவாய்விரி வாரிமுத்தம்,.........தானுகப் பூண்பவர்............தாங கொள்வரே" குலோத்துங்க சோழன் கோவை. நகூஉ. (எ) "வேலைத் தரளமும்....................போல நம்மைத் துறந்து மெல்ல, மாலைக் குழலிதனக்குரி யானை மணந்து சென்றாள்" வெங்கைக். நநந. (ஏ) "மடவா ளொருவ னுடனகன் றாளென்று வாடுகின்றாய்,........... சங்கத் திடையே விளங்கிய முத்தமிழை, யுடனே புனைந்து மறிவிலை யோமொழி யொண்ணுதலே" திருவாரூர்க். நகூஉ. (ஐ) "ஙையன் மின்னே, தனையீன் றவளை விடுத்தணி வாரிடஞ் சார்ந்திடுமுத், துனையீன் றவளில்லி னீயுமுற் றாயில்லை யுன்மகளு, மனையா ளொரு வன்பின் சென்றா ளுலகியல் பாமிதுவே" கோடீச்சுரக். நருஉ.

ந. "பெருங்கடலுட் பல்விலைய முத்தம்பிறக்கும்" நான்மணி. கூ.

(பிரதிபேதம்) * சந்தனமாங்கண்மெய், † மகள், ‡ நமக்கும்.

+ அகம். 340: 16-7.

அக்கடலுக்கு என்ன பயனைக் கொடுக்கும்? ஆராயுங்காலத்து நும்முடைய மகளும் பயன் படும் பருவத்து நுமக்குப் பயன்படாள்; எ - று.

கஅ ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யுஞ்
சூழுங்கா லும்மக ளுமக்குமாங் கனையளே

எ - து: எழுநரம்பாற் கூட்டிய இனிய ஓசைகள் பாடுவார்க்குப் பயன் கொடுத்தலல்லது யாழிடத்தே பிறந்தனவாயினும் அவ்வோசைகடாம் அந்த யாழுக்கு என்னபயனைக் கொடுக்கும்? ஆராயுங் காலத்து நும்முடைய மகளும் பயன்படும் (க) பருவத்து நுமக்குப் பயன்படாள்; எ - று.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு, அசை.

இது தனிச்சொல்.

உஉ இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை * வழிபடீஇச் சென்றனள்
ளறந்தலை பிரியா வாறுமற் றதுவே

எ - து: ஆதலான் மிக்க கற்பினை யுடையாளுக்கு வருத்தமுறாதே கொள்ளுமின். (உ) இருமுது குரவரிலுஞ் சிறந்த கணவனை வழிபட்டு அவன் பின்னே போனாள். இம்மையில் இங்ஙனங் கற்புப் பூண்டு நிகழ்த்தும் (ஙு) இவ் வில்லறமே அறங்களிற் றலையான அறம்; மறுமையில் இவ்விருவரும் நீங்காமற் சுவர்க்கத்திலே செல்லும் வழியும் அவ்வழிபாடே; எ - று.

இது சுரிதகம்.

† படரன்மின் ஒருசொல்; படர்மினென்பதன் மறையாதலின்.

அறத்திடத்து நின்று நீங்காதவாறென்று பொருள்கூறின், தலைப்பிரியாவாறெனப் பகரவொற்றுப் பெறுதல்வேண்டும். "ஐகாரவிறுதிப் பெயர்நிலை முன்னர், வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே" (ச) என்றலின்.

---

க. "கொடுத்தலுந் துய்த்தலுந் தேற்றா விடுக்குடை, யுள்ளத்தான் பெற்ற பெருஞ் செல்வ - மில்லத், துருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்தா, லேதிலான் றுய்க்கப் படும்" நாலடி. உஎச.

உ. (அ) "கொண்டானிற் றுன்னிய கேளிர் பிறரில்லை" நான்மணி. ருசு. (ஆ) "தங்கணா யகரிற் றெய்வந் தவம் பிறி திலவென் றெண்ணு, மங்கைமார் சிந்தை போலத் தூயது" கம்ப. வேள்வி. கசு. (இ) "குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற, புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்" நீதிநெறி. உஎ.

ஙு. (அ) "அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை" குறள். சக. (ஆ) "இல்லற மல்லது நல்லற மன்று"

ச. தொல். உயிர்மயங்கு. சூ. எஅ.

(பிரதிபேதம்) * வழிபட்டுச், † படாமின் ஒரு சொல்; படுமென்பதன்.

மற்று வினைமாற்றாய் மறுமையை உணர்த்திற்று. ஆறுமென்ற உம்மை சிறப்பு.

இதனால், செவிலிக்குத் தன்மையென்னும் மெய்ப்பாடு பிறந்தது.

"நூலே கரக முக்கோன் மணையே, யாயுங் காலை யந்தணர்க் குரிய" (க) என்பதனாற் கரகமும் முக்கோலுங் கூறினார்.

இது பதினோரடித்தரவும் மூன்றடித் தாழிசையும், அசைநிலையாகிய தனிச்சொல்லுஞ் சிறுமைக்கெல்லை கூறாமையின் ஆசிரியத்திற்குக் கூறிய மூன்றடிச் * சிறுமை பெற்ற சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (அ)

(கo) வறியவ னிளமைபோல் வாடிய சினையவாய்ச்
சிறியவன் செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி
யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா னிறுதிபோல்
வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலி
ரு னலவுற்றுக் குடிகூவ வாறின்றிப் பொருள்வெஃகிக்
கொலையஞ்சா வினைவராற் கோல்கோடி யவனிழ
லுலகுபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம் ;
அ இடைகொண்டு பொருள்வயி னிறத்திநீ யெனக்கேட்பி
னுடைபுநெஞ் சுகவாங்கே யொளியோடற் பாண்மன்னோ
படையமை சேக்கையுட் பாயலி னறியாய்நீ
புடைபெயர்வா யாயினும் புலம்புகொண் டினைபவள் ;
கஉ முனிவின்றி முயல்பொருட் கிறத்திநீ யெனக்கேட்பிற்
பனியகண் படலொல்லா படர்கூர்கிற் பாண்மன்னோ
நனிகொண்ட சாயலா ணயந்துநீ நகையாகத்
துனிசெய்து நீடினுந் துறப்பஞ்சிக் கலுழ்பவள் ;
கசு பொருணோக்கிப் பிரிந்துநீ போகுதி யெனக்கேட்பின்
மருணோக்க மடிந்தாங்கே மயல்கூர்கிற் பாண்மன்னோ
விருணோக்க மிடையின்றி யீரத்தி னியன்றநின்
னருணோக்க மழியினு மவலங்கொண் டழிபவள் ;
எனவாங்கு ;

---

க. தொல். மரபு. சூ. எo. இச்சூத்திரத்து ஆயுங்காலை யென்றதனால், குடையும் செருப்பு முதலாயினவும் ஒப்பன அறிந்து கொள்கவென்று கூறி 'எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழ, லுறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும்' என்னும் பகுதியை மேற்கோள் காட்டினர், பே. நச்.

(பிரதிபேதம்) * சிறுமையும்.

உக விளைவெஃகி நீசெலின் விடுமிவ ளுயிரெனப்
புனையிழாய் நின்னிலை யான்கூறப் பையென
நிலவுவே னெடுந்தகை நீளிடைச்
செலவொழிந் தனனாற் செறிகநின் வளையே.

இது தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி, இவ்வகைப்பட்ட சுரத்தைப் பொருள் காரணமாகப் பிரிகின்றீரெனக் கேட்பின் இவ்வகை யாகற்பாலளெனச் சொல்லிச் செலவழுங்குவித்தமை, தலைமகட்குச் சொல்லியது.

இதன்பொருள்.

(க) வறியவ னிளமைபோல் வாடிய சினையவாய்ச்
(உ) சிறியவன் செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி

---

க. (அ) "பொருளில்லா னிளமைபோற் புல்லென்றாள்" கலி. நுஅ: கடு. (ஆ) "நலனு மிளமையு நல்குரவின் கீழ்ச்சாம்" நான்மணி. அஉ. (இ) "பொருளி லொருவற் கிளமையும் போற்று, மருளி லொருவற் கறனுந் - தெருளான், றெரிந்தாழ்ந்த நெஞ்சினான் கல்வியு மூன்றும், பரிந்தாலுஞ் செய்யா பயன்" திரிகடுகம். (ஈ) "பொரு ளுடையான் கண்ணதே போகம்" (உ) "பொருளினா னாகுமாம் போகம்" சிறுபஞ்ச. ரு, ருடு. (ஊ) "பொறையிலா வறிவு போகப் புணர்விலா விளமை..........போலுஞ், சேயிலாச் செல்வமன்றே" வளையாபதி. (எ) "அழகாக்கலும், பொன்றுஞ் சாகத்தினாய் பொருள் செய்யுமே" (ஏ) "கைப்படு பொருளி லாதான் காமம்போற் காளை மீண்டான்" சீவக. ககூஉஉ, உஉருகூ. (ஐ) "நல்கூர்ந்தா ரின்னலமும், பூத்தலிற் பூவாமை நன்று" நீதிநெறி. சு.

(ஒ) "வறியவ னிளமைபோல்" என்பது ஒருமைப் பொருள் கூறிற்றேனும் பன்மைப்பொருள் உணர்த்தலின் மெய்ந்நிலை மயக்க மாயிற்று; மெய் - பொருள் என்பர். நச். தொல். எச். சூ. ருடு.

உ. (அ) "நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார், கொடுத்துத் தான் றுய்ப்பினு மீண்டுங் காலீண்டும்" (ஆ) "செல்வ முடையாருஞ் செல்வரே தற்சேர்ந்தா, ரல்லல் களைபவெனின்" (இ) "அழன்மண்டு போழ்தி னடைந்தவர்கட் கெல்லா, நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கிப் - பழுமரம்போற், பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே, நல்லாண் மகற்குக்கடன்" நாலடி. கூரு, கஎ0, உ0உ. (ஈ) "சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான், பெற்றத்தாற் பெற்ற பயன்" (உ) "கொடுத்தலு மின்சொலு மாற்றினடெக்கிய, சுற்றத் தாற் சுற்றப்படும்" (ஊ) "பெருங்கொடையான் பேணான்வெகுளி யவனின், மருங்குடையார் மாநிலத்தில்" (எ) "காக்கை கரவா கரைந்

(க) யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா னிறுதிபோல்
வேரொடு மரம்வெம்ப விரி (உ) கதிர் தெறுதலி
னலவுற்றுக் (ங) குடிகூவ வாறின்றிப் பொருள் வெஃகிக்

---

துண்ணுமாக்கமு, மன்னநீ ரார்க்கேயுள" (எ) "எதிலாராரத் தமர்பசிப்பர் பேதை, பெருஞ்செல்வ முற்றக்கடை" குறள். ருஉச - எ, அஙஎ. (ஐ) "அல்ல லொருவர்க் கடைந்தக்கான் மற்றவர்க்கு, நல்லகிளைக ளெனப் படுவார் - நல்ல, வினைமரபின் மற்றதனை நீக்குமதுவே" (ஒ) "சேர்ந்தா ரொருவரைச் சேர்ந்தொழுகப் பட்டவர், தீர்ந்தாராக் கொண்டு தெளியினுந் - தேர்ந்தவர்க்குச், செல்லாமை காணுக்காற் செல்லும்வா யென்னுண்டாம்" (ஓ) "மல்லற் பெருஞ்செல்வ மாண்டவர் பெற்றக்காற், செல்வுழியு மேமாப்பச் செய்பதாம்" (ஔ) "தமக் குற்றதேயாகத் தாமடைந்தார்க் குற்ற, தெமக்குற்ற தென்றுணரா விட்டக் காலென்னும்" பழ. ருங, உகங, உஅக, ஙகூஅ. (ஃ) "செல்வத் தைப் பெற்றார் சினங்கடிந்து செவ்வியராய்ப், பல்கிளையும் வாடாமற் பாத்துண்டு - நல்லவாந், தான மறவாத தன்மையரே லஃதென்பார், வானகத்து வைப்பதோர் வைப்பு". அறநெறி. எகூ. (அஅ) "அடைந் தவர்க் கருளானுகி னறமென்ணு மாண்மை யென்னும்" கம்ப. விபீடண. ககO. (ஆஆ) "செல்வற் கழகு செழுங்கிளை தாங்குதல்" வெற்றி. (இஇ) "சுற்றநல் கூரவாழுந் தோமுறு சிறியர் போல" நைடதம். மணம்புரி. ஙரு.

க. "தேம்புனலை நீர்க்கடலுஞ் சென்று தரலின்றே" என்பதற்கு, உப்பு நீரையுடைய கடலும் உலகத்தே வந்து இனிய நீரைத்தருதல் ஒரு காலத்து மில்லை; என்றது தீயகுணத்தையுடையோர் பிறர்க்கு இனிமை செய்ய அறியா ரென்றவாறு. எனவே கட்டியங்காரன் எக்காலமும் நமக்குத் தீங்கு செய்வனென்றும் இக்குணத்தால் அவ னுக்குக் கேடுவிளையு மென்றும் கூறினன். என்று உரைவிரித்து "யார் கண்ணு...............தெறுதலின்" என்பதை மேற்கோள்காட் டினர். இவ்வுரைகாரர். சீவக. அசஅ.

உ. (அ)கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி, வேத்திய லிழந்தவிய னிலம்போல, வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன், றனலந் திருகத் தன்மையிற் குன்றி, முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்ப தோர் படிவங் கொள்ளுங், காலை" சிலப். கக: கூO - கூஎ.

ங. (அ) "நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக், கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு, கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினந் தெறுதலின்...........மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரம்" கலி. அ.

கொலையஞ்சா வினைவராற் கோல் * கோடி யவணிழ
லுலகுபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம்

எ - து: பிரமசரியங் காத்தலான் இளமைப் பயன்கொள்ளாது வறிய னனவன் இளமைச் செவ்வியின்றி இருக்குமாறுபோலத் தளிர்கள் வாடின கொம்புகளை யுடையவாய்க், கொடுத்தற்கு மனஞ் சிறியனனவனுடைய செல்வம் தன்னைச் † சேர்ந்தவர்களைப் பாதுகாவாதவாறுபோலத் தன்னைச் சேர்ந்தவர்களுக்கு நிழலின்றாய், யாவரிடத்தும் உலக ஒழுக்கத்தைக் கடந்து தீங்குசெய்து பின்பு புகழில்லையானவனுடைய முடிவுகாலத்து அவன் கிளையயன்றி அவனுங் கெடுமாறுபோல மரம் சினையயன்றி வேரோடே நின்றுவெம்பும்படியாக ஞாயிற்றினுடைய பரந்த கதிர்கள் சுடுகையினாலே வருத்தமுற்றுக் குடிமக்கள் கூப்பிடும்படி கொலைத்தொழிலுக்கு அஞ்சா அமைச்சராலே நெறியன்றிப் பொருளை வாங்கிக்கொண்டு செங்கோல்வளைந்த அரசனுடைய குடைநிழலிற் றங்கிய உலகம்போலே உலறின உயர்ந்த ‡ மரங்களையுடைய வெய்ய காட்டை; எ - று.

சினையவாய், நிழலின்றாய், வெம்பவென்க. தெறுகையினாலே உலறிய மரமென்க.

இது தரவு.

அ இடைகொண்டு பொருள்வயி னிறத்திநீ யெனக்கேட்பி
னுடைபுநெஞ் சுகவாங்கே யொளியோடற் பாண்மன்னே
(க) படை || யமை சேக்கையுட் பாயலி னறியாய்நீ
(உ) புடைபெயர்வா யாயினும் புலம்புகொண் டினைபவள்

---

(ஆ) "கொண்மூ, மழைகாலூன்று வளவயல் விளையா.........கொடுங் கோல் வேந்தன் காக்குநாடே" ஆசிரிய. (இ) "பகையுடன் கிடந்த நிலைபிரி வழக்கினைப், பொருத்தலும் பிரித்தலும் பொருபகைகாட்டலு, முட்பகை யமைத்தலு முணர்த்துசொற் பொருத்தலு, மொரு தொழிற் கிருபகை தீராது வளர்த்தலுஞ், செய்யா வமைச்சுடன் சேரா(?)வரச, னுடுகரிந்தன்ன காடு" கல். ௩. (ஈ) "மருளேகொண்டு குடிவருந்தமனுநூல் குன்றிவழக்கழியப், பொருளே வெஃகு மரசரைப் போற் புகுவேம் யாமு நரகென்றார்" வில்லி. பதினொராம். போர் ௬௧. (உ) "முற்றுமிருங் குடிகூவப் பொருள்வவ்வி முதுக்குறைவி லுளத்த னாகிக், கற்றவரைத் தண்டித்துக் கல்லாத புல்லருரை கசிந்துகேட்குங், கொற்றவனவ் வுலகுதன தடிப்படுத்திக் கொடுங்கோன்மை புரியு நாளில்"..........

௧. (அ) 'படையமைசேக்கை' அகம். ௨௮௧ : ௧௨. (ஆ) சிலப். ௧௩ : ௭௦. (இ) "கிடையும் பூளையும் கிழியும் பஞ்சியும், படையமைத் தியற்றிய மடையணிப்பள்ளியுள்" பெருங். (க) ௬௩ : ௧௮௬ - ௭.

௨. (அ) "ஒண்டொடி, யுழையமாகவு மினைவோள், பிழையலண்மாதோ

(பிரதிபேதம்) * கோடியவணிழல், † சேர்ந்தவர் தம்மைப், ‡ மரங்களுடைய வெய்யகாட்டிடை, || அமைச்சேக்கை.

எ - து: * பலவும்படுத்தல் பொருந்திய படுக்கையிடத்தே துயிலிடத்து நீ அவள் வருத்தம் அறியாயாய் அவள் முயங்கிய கையை விட்டு நீங்குவா யாயினுந் தனிமைகொண்டு வருந்துமவள் கூட்டத்திற்கு இடையே பிரிதலை மனத்தேகொண்டு வேற்றுநாட்டிடத்தே நிலைநில்லாத பொருளினிடத்தே நீ போவையென்று யான்கூறக்கேட்பின் நெஞ்சு அழிந்துகெட்டுப்போக மிகவும் ஒளிகெடுவாளோ? இறந்துபடுவாளே; எ - று.

இனைபவள் ஒளியோடற் † பாளோவென்க.

‡ பலபடையாவன: (க)"சிறுபூளைசெம்பஞ்சு வெண்பஞ்சு சேண, முறு தூவி தாமிவையோ ரைந்து." என்பனவாம்.

|| ஓடற்பாள் முற்றுவினைத்திரிசொல். அறியாய், வினையெச்ச முற்று ஓகாரம், எதிர்மறை.

கஉ (உ) முனிவின்றி முயல்பொருட் கிறத்திநீ யெனக்கேட்பிற்
பணியகண் படலொல்லா படர்கூர்கிற் பாண்மன்னோ
நனிகொண்ட சாயலா ணயந்துநீ (ங) நகையாகத்
துனிசெய்து நீடினுந் துறப்பஞ்சிக் கலுழ்பவள்

எ - து: மிகுதியைக் கொண்ட மென்மையையுடையவள் நீ ஓர் விளை யாட்டை விரும்பி விளையாட்டாக ஒரு நீக்கத்தைச்செய்து அதிலே சிறிது

---

பிரிது நாமெனினே" அகம். ரு. (ஆ) "மடவைகா ணன்னெஞ்சே மாண்பொருண்மாட் டோடப், புடைபெயர் போழ்தத்து மாற்றாள் - படர்கூர்ந்து, விம்மி யுயிர்க்கும் விளங்கிழையா ளாற்றுமோ, நம்மிற் பிரிந்த விடத்து" ஐந் - ஐம். ௩கூ. (இ) "தெளித்தபூம் பள்ளியிற் சிறிது நீங்கினு, மளப்பருந் துயரொடு மவல மெய்துவேன்" நைடதம். பிரிவுறு. கஉ.

க. "சிறுபூளை.........முறுதூவி சேக்கை யோரைந்து" என்பது சீவக. அ௩அ. மேற்கோளிற்காணப்படும் பாடபேதம்.

உ. (அ) "முனியாதார் முன்னிய செய்யுந்திரு" நான். சo. (ஆ) "தனி யேம்யா மென்றொருவர் தாமடியல் வேண்டா, முனிவில ராகி முயல்க முனியாதார், முன்னிய தெய்தாமை யில்" பழ. ககூக. (இ)துஞ்சலென்பது உறக்கம்; அதுவும் உறங்காமை போலாமையின் மெய்ப்பாடாயிற்று; "முனிவின்றி (..............கண்படலொல்லா படர்கூர்கிற் பாண்மன்னோ") எனவரும். என்பர் இளம் பூரணர்; தொல். மெய்ப். சூ. சஉ.

௩. "நடுங்குதல் காண்மார் நகை குறித்தனரே" கலி. க௩.

(பிரதிபேதம்) * பதம்படுத்தல், † பாலளோ, ‡ படையாவன, || ஒளியோடற்பாள்.

பொழுது நீட்டிப்பினும் அத்துணை நீக்கத்துக்கு அஞ்சிக் கலங்குகின்றவள் யாம் இவளைப் பிரிகின்றேமென்னும் வெறுப்பின்றி முயன்று தேடும் பொருள் காரணமாக நீ போவையென்று யான் கூறக்கேட்பின் நீரையுடையனவாகிய கண்கள் மிகவும் உறக்கத்தைப் பொருந்தாவாய் நினைவு மிகுவாளோ? இறந்து படுவாளோ; எ - று.

கசு பொருணோக்கிப் பிரிந்துநீ போகுதி யெனக்கேட்பின்
மருணோக்க மடிந்தாங்கே மயல்கூர்கிற் பாண்மன்னோ
விருணோக்க மிடையின்றி யீரத்தி னியன்றநின்
னருணோக்க மழியினு மவலங்கொண் டழிபவள்

எ - து: மனத்திற்கு இருளைத் தருகின்ற பார்வை இடையின்றி * அருளிடத்துச் சென்றபார்வை நீங்கினும் வருத்தங்கொண்டு நெஞ்சழிபவள் நீ பொருளை நன்றென்று கருதித் தன்னைப்பிரிந்து அவ்விடத்தே போவை யென்று யான் கூறக் கேட்பின், கண்டார் மருளும் அழகுகெட்டு மிகவும் மயக்கம் மிகுவாளோ? இறந்துபடுவாளே; எ - று.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு, அசை.

இது தனிச் சொல்.

உக வினைவெஃகி (க) நீசெலின் விடுமிவ ளுயிரெனப்
புனையிழாய் நின்னிலை யான்கூறப் பையென
நிலவுவே னெடுந்தகை நீளிடைச்
செலவொழிந் தனனாற் செறிகநின் வளையே

எ - து: புனைந்த பூணினையுடையாய்! இவளுடைய உயிர் நீ பொருளைத் தேடுதலை விரும்பிப் போகின், தானும்போமென்று நின் பிரிவாற்றாமையை யான் சொல்ல, புகழ்ச்சி நிலைபெறும் வேலினையுடைய நெடிய தகையினை யுடையான் நீண்ட வழியிடத்துப் போக்கைப் பையெனத் தவிர்ந்தனன்; இனி நின் † வளைகள் கழலாதிருப்பனவாக; எ - று.

ஆல், அசை.

இதனால், தலைவிக்குப் புணர்வென்னும் உவகையும் தலைவற்கு இழிவும் தோழிக்கு அச்சமும் பிறந்தன.

இது சுரிதகம்.

இஃது எழுடித்தரவும் நான்கடித் தாழிசையும் அசைநிலையான அடைநிலைக்கிளவியும் நான்கடிச் சுரிதகமும் பெற்று வந்த ஒத்தாழிசைக்கலி. (கூ)

---

க. "என்நாளோ நெடுந்தகாய் நீ செல்வது, அந்நாள் கொண் டிறக்குமிவ ளருமபெறலுயிரே" கலி. ௫: கஅ - கூ. "நின்னின், றிமைப்புவரை வாழாண் மடவோள்" கலி. உக: கஉ - ௩.

(பிரதிபேதம்) * அயலிடத்துச் சென்ற, † வளை கழலாதிருப்பன.

(கக) (க)அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி ;

ரு. அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாஅய் காடென்றா ரக்காட்டுட்
டுடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே ;

க0. இன்பத்தி னிகந்தொரீஇ யிலைதீந்த வுலவையாற்
றுன்புறூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளன்புகொண் மடப்பெடை யசைஇய வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவு முரைத்தனரே ;

---

க. (அ) "தலைவரும் விழுமநிலை" என்னுஞ் சூத்திரத்து 'ஒழிந்தது கூறி' என்பதை மொழிந்ததுகூறி யெனப் பாடங்கொண்டு, 'மொழிந்ததுகூறிவன்புறை நெருங்குதலாவது தலைமகன்மொழிந்தது கூறி வற்புறுத்தல்' என்று பொருளெழுதி இச்செய்யுளை மேற்கோள் காட்டித் தோழி "அரிதாய.........கலையெனவு முரைத்தனரே" என அவன் மொழிந்ததுகூறி, "எனவாங்கு, இனைநல......விடனே" என வற்புறுத்தியவாறு கண்டுகொள்க வென்பர், இளம். தொல். அகத். சூ. சஉ. (உரையாசிரியர் பலர் இக்கருத்தினர் பக்கம், எக. ௩. பார்க்க.) (ஆ) நச்சினார்க்கினியர் "அரிதாய வறனெய்தி யென்னுங் கலிப்பாட்டு.தலைவன் அன்புறுதக்கன கூறக்கேட்ட தலைவி அவற்றைக் கூறிப் புனைநலம் வாட்டுநரல்லரென வரவுகருதிக் கூறியவாறு காண்க; இதனுள் ஆற்றுவிக்குந் தோழி வருவர்கொலென ஐயுற்றுக் கூறலின்மையிற் றோழிகூற்றன்மையு முணர்க" (தொல். கற். சூ.எ.) என்றும் (இ) "அரிதாய வறனென்பது தோழிகூற்றன்மையுணர்க" (தொல். பொருளி. சூ. ௩எ.) என்றும் இளம்பூரணர் கருத்தினை மறுப்பர். அன்றியும் இவர் (ஈ) இச்செய்யுளைத் தலைவன் சொல்லிப் பிரிதற்கும் (தொல். கற். சூ. ச௩), (உ) கலியிறுதி யாசிரியம் ஈற்றடி நாற்சீரும் அயலடிமுச்சீருமாக எழுசீரான் இற்றதற்கும் (தொல். செய். சூ. எசு), (ஊ) கலியுறுப்பாகவந்த செய்யுளுக்கும் (தொல், செய். சூ. க0ரு) மேற்கோள் காட்டுவர். (எ) பேராசிரியர் கலிப்பா அளவடியான்வந்ததற்கும். (ஏ) ஈற்றயல் முச்சீரடி யாசிரியம்வந்த கலிப்பாவிற்கும் (ஐ) கலிப்பா வுறுப்புவந்த செய்யுளுக்கும் (தொல். செய். சூ. ௩ரு, எசு, க0ரு) மேற்கோள் காட்டுவர். (ஒ) யா - வி, உரைகாரர்

கச. கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலாற்
றுன்னருஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளின்னிழ லின்மையான் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்குங் கலையெனவு முரைத்தனரே;
எனவாங்கு;

கரு. இணைநல முடைய கானஞ் சென்றோர்
புணைநலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழி லுண்கணு மாடுமா லிடனே.

இது (க)தலைவி,மூன்றன்பகுதி தலைவன்கூறிப் பொருள்வயிற் பிரிகின்ற காலத்துக் காடு கடியவாயினும் இவ்வகைப்பட்டனவும் * உளவென்று கூறினர், அவை காண்டலின் வருவரெனத் தோழிக்குக் கூறி அதற்கு நிமித்தமுங் கூறி ஆற்றுவித்தது.

மூன்றன்பகுதி கூறுதலாவது அறத்தினுற் பொருளாக்கி அப்பொருளாற் காமம் நுகர்வேனென்றலாம். உடைமையது உயர்ச்சி கூறிப் பிரிந்தானெனக் கிளவி கூறிற் பொருள்வயிற் பிரிதலின்றாம், அது பொருள்வயிற் பிரிவை விலக்குமென்றலின்.

இதன்பொருள்.

(உ) அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்

எ - து: தம்மை அருள்பண்ணிவந்த அந்தணர்தாபதர் முதலியோருக்குப் பெறுதற்கரிதாய அறஞ்செய்தலைப் பொருந்தி வேண்டுவன கொடுத்தலும்; எ - று.

இஃது அருளென்னும் மெய்ப்பாடு.

---

யா - வி. சூ. உஎ. இலும் (ஓ) இ - வி. சூ. எஉக. இலும் கலிப்பா அளவடியான் வந்ததற்கு மேற்கோள்காட்டுவர்.

க. "அரிதாய வறனெய்தி யென்றது மூன்றன்பகுதி தலைவன்கூறக் கேட்ட தலைவி கூறியது" தொல். அகத். சூ. சச. நச்.

உ. "துள்ளலோசை கலிப்பாவிற்கு ஆம்; துள்ளுதலாவது ஒழுகு நடைத்தன்றி இடையிடை உயர்ந்து வருதல்; கன்று துள்ளிற்றென்றாற் போலக் கொள்கவென விளக்கி, 'அரிதாய................கேளினி' என்னும் பகுதியை மேற்கோள் காட்டி, அரிதாய என நின்றவழிச் செப்பலோசைத் தாகிய வெண்சீர் பின்னும் வெண்டளைக் கேற்ற சொல்லொடு புணராது ஆண்டெழுந்த வோசை துள்ளி வந்தமையால் துள்ளலோசை யாயிற்று" என்பர், இளம். தொல். செய். சூ. எஅ. 'துள்ளலோசை' (ஆ) "அரிதாய......கேளினி" என்பதனைத் தலைவன்

(பிரதிபேதம்) * உளவெனவுங்.

(க) பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்

எ - து: பெரிதாய * பகையையெல்லாம் வென்று அச்செருக்கினால், தம்மை வழிபடாதாரை அழித்தலும்; எ - று.

---

மூன்றன்பகுதி கூறியதற்கு மேற்கோள்காட்டி இதனுள் என வென்றதனால், தலைவன் கூற்றுப்பெற்றாமென்பர், நச். தோல். அகத். சூ. சக. (இ) "அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" என்பதனை இளம்பூரணர் அருளலென்பதற்கு, எல்லாவுயிர்க்கும் அருள்செய்தலென்று பொருள்கூறி அதற்கும், (தோல். மெய்ப். சூ. கஉ); (ஈ)பேராசிரியர் அச்சொல்லுக்கு மக்கண் முதலிய சுற்றத்தாரை யருளுதலென்று பொருள் கூறி அதற்கும், (தொல். மெய்ப். சூ. கஉ); (உ)ஆசிரியவுரிச்சீர் கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ எனக்கூறிய இடத்து வெண்சீர் வருகவெனல் வேண்டாவோ வென்று வினவி வெண்பாவிற்கு வெண்சீர் வருமென விதந்தோதான். அதுபோல அதனியற்றாகிய கலிப்பாவிற்கும் வெண்சீர்வருமென விதந்தோதல் வேண்டுவ தன்றென்று விடுத்துக் கலிப்பாவில் வெண்சீர் வந்ததற்கும், (ஊ)வெண்சீ ரிறுதி நிரையொடுதட்ட கலித்தளைக்கும்,(எ)அடியென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது நாற்சீரடி யென்றும் அது ஆசிரியப்பா வெண்பாக் கலிப்பாவென்னு மூன்று பாவினும் வருமென்றுங் கூறிக் கலிப்பாவில் வந்ததற்கும்; (ஏ) அளவடிக்கட் டுள்ளலோசை வந்ததற்கும், (தோல். செய். சூ. உச. உக, ௩உ, ககரு;) (ஐ) நச்சினார்க்கினியர் "வெண்சீ ரிறுதி நிரை முதலியற்சீர் தட்டலிற் றுள்ளலோசை சிறவாதாயிற்று" என்பதற்கும், (ஒ) கலிப்பாவில் அளவடி வந்ததற்கும், (ஓ)புலவன் தான்வைப்பக்கருதிய பொருளைப் பிறிதோரடியுங்கொண்டு கூட்டாதுமுடிய நாட்டலாகிய யாப்பென்னுமுறுப்புக் கலியில் வந்ததற்கும், (ஔ)முற்றுமோனைக்கும், (தொல். செய். சூ. உக, ௩உ, எஅ, கூஉ) (ஃ)இ - வி. நூலார் அருளலென்பதற்கு மக்கள் முதலிய சுற்றத்தாரை அருளுதலென்றுபொருள்கூறி அதற்கும்மேற்கோள்காட்டினர்.

க. (அ)"செறுவோர்செம்மல் வாட்டலுஞ் சேர்ந்தோர்க், குறுமிடத்துவக்கு முதவி யாண்மையு, மில்லிருந் தமைவோர்க் கில்லென்றெண்ணி...... வெஞ்சுர மிறந்தனர்." அகம். உ௩க. (ஆ) "நண்ணார்த் தெறுதலுந், தற்செய்வான் சென்றார்த்தரூஉம்" கார். எ. (இ) "செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு, மெஃகதனிற் கூரியதில்" குறள். எ௫௯, (ஈ) "செய்க பொருள் யாருஞ்செறு வாரைச் செறுகிற்கு, மெஃகு பிறி தில்லை" (உ) "பொன்னினுகும் பொருபடை யப்படை, தன்னி ஞகுந் தரணி" சீவக. சகள, ககஉ௩. (ஊ) "கருதலர் தம்மை வாட்டுங், கூரிய திதன்மேலில்லை கொழும்பொனீர் கொண்மினென்றார்" உத்தா. அசுவமேத. க௯௩.

(பிரதிபேதம்) * பகைகளை.

காதலிற் புரிவமர் புணர்ச்சியுந் தருமெனப்

எ - து: (க)முற்பிறப்பில் இருவர்க்கும் உண்டான காதலினாலே இப்பிறப்பில் மனம் பொருந்துதல் அமர்ந்த கூட்டத்தினையுந் தருமென்று நமக்குக் கூறி ; எ - று.

"துன்புறு பொழுதினு மெல்லாங் கிழவன், வன்புறுத் தல்லது சேற லில்லை" (உ) என்பதனாற் றலைவன் வற்புறுத்திச் செல்கின்றமை இதனாற் பெற்றாம்.

(ங) * பிரிவெண்ணிப் பொருள்வயிற் † சென்றநங் காதலர்

(ச) வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி

எ - து: பொருள் வயிற்பிரிவை நன்றென்றெண்ணிப் போன நம்முடைய காதலர் வருவர்போல இருந்தது ; விளங்குகின்ற பூணினையுடையாய், யான் அவர் வர வினைத் துணிவல்; இப்பொழுது அதற்குக் காரணங் கேள் ; எ - று.

---

க. "அற்புளஞ் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்,........புதுவதன்றே" என்பதும், மணிமேகலையிற் கூறப்பெற்ற விசாகை தருமதத்தர் வரலாறும் இந்நூற் பக்கம் கஅ, க. குறிப்பிலுள்ளவைகளும் இங்கு நோக்கத்தக்கன.

உ. தொல். கற்பியல். சூ. சங.

ங. "பிரிவெண்ணிப்..........வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல் யான் கேளினி" என்பது கொல்லென்னும் இடைச் சொல் அசை நிலையாய் வருதற்கு மேற்கோள். நன். இடை. சூ. கசு. மயிலை. வி, இரா. இ - வி. சூ. உசுகூ.

ச. (அ) உயிரும் உயிர் மெய்யும் தமக்குக் கூறிய மாத்திரையை இறந்தொலித்தல் நால் வகைச் செய்யுட்கண்ணு முண்டென்றுகூறிக் கலிப்பாவில் மாத்திரை இறந்தொலித்தற்கு, 'வருவர் கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி' என்பதை மேற்கோள் காட்டி இதில் ழகரஆகாரமும் ககர எகாரமும் மாத்திரை யிறந்தொலித்த வாறுணர்க வென்பர், நச்; தொல். நூன்மரபு. சூ. ஙங. அன்றியும் (ஆ) குறுமையு நெடுமையு மென்னும். தொல். மொழி. கஎ-ஆம் சூத்திர வுரையிலும் "அவற்றுள்,மாத்திரையளவும்" என்னும் தொல். செய். உ-ஆம் சூத்திரவுரையிலும் "வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல் யான் கேளினி" "கடியவே கனங்குழாஅய் காடென்றா ரக்காட்டுள்" என்பவற்றை மேற்கோள் காட்டி, குற்றெழுத்துக்க ளெல்லாம் நெட்டெழுத்தினை மாத்திரை மிகுத்தற்குக் கூடியவாறு உணர்க வென்றும் குற்றெழுக்க ளெல்லாம் நெட்டெழுத்தினை மாத்திரை மிகுத்து விராஅய் நின்றவாறு காண்க வென்றும் கூறுவர்.

(பிரதிபேதம்) * பிரிவுள்ளி, † பெயர்ந்தநங்.

(க) பொருள் அளித்தலுந் தெறுதலும் புணர்ச்சியுந் தருமென எண்ணிச் சென்ற காதலரென்க. இதனாற் போந்த பொருள் (உ) அருளியோர்க்கு அளித்த அறத்தாலே பேணுரை அழித்துப் பொருளைத்தேடி அப்பொருளாற் புணர்ச்சி பெறுவேனென மூன்றன்பகுதிகூறினாயிற்று.

இது தரவு.

சு (ங) அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாஅய் காடென்று ரக்காட்டுட்

---

க. (அ) "அறனும் பொருளு மின்பமு மூன்று, மாற்றும் பெருமநின் செல்வம்" புறம். உஅ: கரு-சு. (ஆ) "வடுவிலாவையத்து மன்னிய மூன்றி, னடுவண தெய்த விருதலையு மெய்தும்" நாலடி. ககசு. (இ) ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு, ளேனை யிரண்டு மொருங்கு" குறள். எசுo. (ஈ) "பாரோர் சொலப் பட்ட மூன்றன்றே யம்மூன்று, மாராயிற் றானே யறம்பொரு ளின்பமென், றாரா ரிவற்றி னிடையதனை யெய்துவார், சீராரிருதலையு மெய்துவார்" சீறிய. ங-ச. (உ) "ஐயமில்லை யின்பமற னோடவையு மாக்கும்,பொய்யில் பொரு ளேபொருள்" (ஊ) "அப்பொரு, ளென்னுங்காலைத் துன்னுதன வில்லையே" சீவக. சகள, ககஉங. (எ) "அருள்கொண் டியற்று மறமு மறநெறி யாய்ந்த மென்பூச், சுருள்கொண்ட கோதையர் தோள்புண ரின்பமுஞ் சூழ்சுரும்பு, மருள்கொண்டு பாடு மதுமலர்ச் சோலை மயிலனையாய், பொருள்கொண் டொழியமுற் றுதென்று ஞாலம் புகலு மன்றே"........(ஏ) "பொன் பொருட்டினால் யாவு முண்டாம்" கந்த. மாயைப். எ.

உ. "நலங்கிள்ளி;........;அருளவல்லை யாகுமதி யருளிலர், கொடாமை வல்லராகுக, கெடாத துப்பினின் பகையெதிர்ந் தோரே" புறம். உஎ. என்பதும் அதன் விசேட வுரையில் 'அருளிலர் கொடாமை வல்ல ராகுக வென்றதனாற் பயன், அவையுடையோர் தத்தம் பகைவரை வெல்வ ராதலால் பகை யெதிர்ந்தோர் அவையிலராக வென்பதாம்' என எழுதி யிருத்தலும். "அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" புறம். டுரு. "அறத்தினாலன்றி யமரர்க்கு மருஞ்சமங் கடத்தன், மறத்தி னாலரி தென்பது மனத்திடை வலித்தி" கம்ப. முதற்போர். உருக. "காலையா தபனைத் தருமன்மா மதலை கைதொழு கடன் முடித் தருளிச், சாலையார் தழல்செய் வேள்வியந் தணர்க்குத் தானமுந் தகுவன வழங்கி, மாலையா மளவிற் றனஞ்சயன் மொழிந்த வஞ்சினம் வழுவற முடிப்பான், வேலையா ரவப் பல பணை முழங்க வெம்முரட் சேனையோ டெழுந்தான்." வில்லி. பதி னான்காம். உ. என்பவைகளும் ஈண்டு அறிதற்பாலன.

ங. (அ)முதலெழுத்தொன் றுதலாகிய மோனையும் இரண்டாமெழுத்தொன் றுதலாகிய எதுகையுமுள்ள தொடை முந்துற்றமோனையாற் பெயரிட்டு

(௧)டுடியடிக் (௨)கயந்தலை (௩)கலக்கிய (௪)சின்னீரைப்

வழங்கப்படுமென்பதற்கு "அடிதாங்கு....................களிறெனவு முரைத்தனரே" என்பது மேற்கோள். (தொல். செய். சூ. ௮௮. 'அஃதொழித்' இளம்) ("தொடைபல தொடுப்பினுந் தளைபலவிரவினு, முதல்வந்ததனுன் மொழிந்திசிற் பெயரே" என்னும் யா - வி. சூ. ௫௩. இங்கு ஓர்க்கத்தக்கது.) (ஆ) இளம்பூரணர். 'அன்புறுதகுந' என்னும் தொல். பொருளி. ௩௫-ம் சூத்திரவுரையில் அன்புறுதற்குத் தகுவன இறைச்சிப் பொருட்கட் சுட்டுதலும் வற்புறுத்தலாமென்று கூறி இதனை மேற்கோள்காட்டி இது வற்புறுத்தற் குறிப்பென்பர். (இ) "அடிதாங்கு மளவன்றி யழலன்ன வெம்மையானென்பது வெண் சீர்கள் பகைத்து வந்து ஈற்றுச் சீரின் முதற்கணின்ற நேரசை நிரையசைபோலக் கலியோசை கொண்டமையின் அது கலித்தளை யெனப்பட்டது" என்பர், பே. (ஈ) நச்சினார்க்கினியரும் இதனையே இறுதியிறசிறிதுமாற்றி 'துள்ளலோசை கோடலிற் கலித்தளையாயிற்று' என்றும் "இது கட்டளையடிக்கே யென்பது 'தளைவகை சிதையாத் தன்மையான' (செய். ௨௮.) என நின்ற அதிகாரத்தாற் கொள்க" என்றும் கூறுவர். தொல். செய். சூ. ௨௧. (உ) இளம்பூரணர், கலிப்பா வின் அடி பதின்மூன்றெழுத்து முதலாக இருபதெழுத்து ஈறாக வருமென்றுகூறி, இதனைப் பதினேந்தெழுத்தான் வந்தவடிக்கு மேற் கோள் காட்டுவர். தொல். செய். சூ. ௫௫. 'அளவடி'

௧. (அ) "துடியடியன்ன தூங்குநடைக் குழவியொடு" பொருந. ௧௨௫; (ஆ) "துடியடிக் குழவிய" புறம். ௩௬௧: ௨௬; (இ) "துடியடியன மடிசெவியன துறுகய மூனி" பெரிய. கண்ணப்ப. ௮௬; (ஈ) "கொடியகுர லுடையவிடை கடியதுடி யடியினொடு மிடியினதிர" தே.

௨. "கயந்தலைக் குழவி" நற். ௧௭௧; குறுந். ௩௯௪.

௩. 'கலக்கிய சின்னீரை' என்பதனொடு "கலங்குநீ ரென்பதற்கு, சின்னீ ரெனப் பொருளெழுதி யிருத்தலும்" சீவக. ௨௩௮௧. "தேறுபடு சின்னீர்போலத் தெளிந்து" மணி. ௨௩: ௧௪௨. என்பதும் ஒப்பு நோக்கற்பாலன.

௪. (அ) "சேலேறு சின்னீரிடைச் செல்வனபோன்று" (ஆ) "சின்னீர் மாக்கய லெதிர்ந்தவேபோல்" சீவக. ௨௩௪௪, ௨௫௪௦. (இ) "வேலைச் சின்னீர் பருகின் னிரவி" (ஈ) "யாற்றுநீர் சிலவென்று மருவான்" கம்ப. கும்ப. ௩௧; இரணிய. ௪. என்பவைகளும், (உ) நச்சினார்க் கினியர். கலி. ௩௪-இல் சின்னீரென்பதற்கும் ௭௨-இல் பால் சிலவென் பதற்கும் எழுதிய குறிப்புக்களும் தொல். கிளவி. சூ: ௧௭. உரையில் குடத்துள்ளும் பிறகலத்துள்ளும் இருந்த நீரைச் சிறிதென்னுது சில வென்றலும்...........போல்வன வழக்காம் என்று எழுதியிருப்பதும் ஈண்டு அறியத்தக்கன.

(க) பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே

---

க. (அ) "மடப்பிடி யுயங்குபசி களைஇயர், பெருங்களிறு தொலைத்த முடத்தாளோமை" (ஆ) "இரும்பிணர்த்தடக்கை நீட்டி நீர்கொண்டு, பெருங்கை யானை பிடியெதி ரோடுங், கானம் வெம்பிய வறங்கூர் கடத்திடை" (இ) "மடப்பிடி தழீஇய தடக்கை வேழந், தேன்செய் பெருங்கிளை யிரிய வேங்கைப், பொன்புரை கவழம் புறந்தரூட்டு, மாமலை" (ஈ) "நசைபெரி துடையர் நல்கலு நல்குவர், பிடிபசி களைஇய பெருங்கைவேழ, மென்சினை யாஅம் பிளக்கு, மன்பின தோழியவர் சென்ற வாறே" (உ) "மறந்தனர் கொல்லோ தாமே களிறுதன், னுயங்குநடை மடப்பிடி வருத்த நோனாது, நிலையுயர் யாஅத் துலையக் குத்தி, வெண்ணார் கொண்டு கைசுவைத் தண்ணாந், தழுங்க னெஞ்ச மொடு முழங்கு, மத்த நீளிடை யழப்பிரிந் தோரே." (ஊ) "தொடு குழி மருங்கிற் றுவ்வாக் கலங்கல், கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணிச், சேறுகொண் டாடிய வேறுபடு வயக்களிறு" (எ) "யானை தன், கொன்மருப் பொடியக் குத்திச் சினஞ்சிறந், தின்னாவேனி லின்றுணை யார, முளிசினை மராஅத்துப் பொளிபிளந் தூட்ட" (ஏ) "வீழ்பிடி கெடுத்த வெண்கோட் டியானை, யுண்குளகு மறுத்தவுயக்கத் தன்ன" (ஐ) "செந்தினை கவர்ந்த பைங்கண் வேழங், கருவரைப் பிரசங் கையின் வாங்கி, யீயின மிரிய வீசி வயவுப்பிடியின், வாயுறக் கொடுத்த செவ்விநோக்கி" (ஒ) "விலக்கல் விளங்கிழாஅய் செல்வா ரோ வல்ல, ரழற்பட் டசைந்த பிடியை - யெழிற்களிறு, கற்சுனைச் சேற்றிடைச் சின்னீரைக் கையாற்கொண், டுச்சி யொழுக்குஞ் சுரம்" (ஓ) "குழவிப்பிடி குஞ்சர மாழ்குமெனத் தழுவிச்சுடு வெவ்வழ ருங் குவன" (ஔ) "உழையுடைக் கற்பின ருரையிற் சென்றிடா, தழை யுடைப் பிடிக்குநீர் தணிக்கும் வேட்கையாற், புழையுடைத்தனிக்கரம் போக்கிப் பொங்குசுன், மழையுடைத் திடுவன மதங்கொள்யானையே" (ஃ) "உருகு காதலிற் றழைகொண்டு மழலைவண் டோச்சி, முருகு நாறு செந்தேனினை முழைநின்றும் வாங்கிப், பெருகு சூலிளம் பிடிக்கொரு பிறைமருப் பியானை, பருக வாயினிற் கையினின் றளிப்பது பாராய்" (அஅ) "ஒருத்தற் குலம்பிடிக் கூண்பல வூட்டியுண் டோங்குநிழற், பொருத்தற் குகைப்பது நின்னகநாடு" என்பவை, களிற்றுக்குப் பிடி யின்பா லன்புமிகுதியென்பவற்றை விளக்கும். (ஆஆ) "தானுமுண் ணும் விருந்துண்டு மிகினே" என்பதை இவ்வடி நினைப்பிக்கின்றது. ஆசிரியமாலை. "சிறுசெவியன்னே"

(இஇ) "பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே" என்பதனை ஒற்றிசை நீடலுக்கு (தொல். நூன்மரபு. சூ. ௩௩) மேற் கோள்காட்டி, 'னகர வொற்று அளபிறந்தவாறு காண்க' வென்றும் (௩௩) மாத்திரை யளவு மெழுத்தியல் வகையு, மேற்கிளந்தன்ன வென்

எ - து: பொன்னாற் செய்த கனவிய குழையினையுடையாய், காடுகள் (க)நெருப்புப்போன்ற வெம்மையாலே அடிபொறுக்கும் அளவின்றிக்கடியவாயிருக்குமென்று சொன்னர்; சொல்லி, *அக்காட்டகத்தே களிறு, துடிபோலும் அடியையுடைய யானைக்கன்றுகள் இழிந்து, தாயுந்தந்தையும் உண்ணவேண்டுமென்று கருதாது கலக்கிய சிறிய நீரை முதற் பிடியை ஊட்டிப் பின்பு தானும் உண்ணுமென்றுஞ் சொன்னர்; எ - று.

கο இன்பத்தி னிகந்தொரீஇ யிலைதீந்த வுலவையாற்
றன் (உ) புறாஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளன்புகொண் மடப் (ங) பெடை யசைஇய வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவு முரைத்தனரே

எ - து: காடுகள் இலை பசுமை இகந்து தீந்தகொம்புகளாலேஇன்பத்தினின்று நீங்கி, சென்றாரைத் துன்பமுறுத்துந் தகைமையையுடையவாயே இருக்குமென்று சொன்னர்; சொல்லி, அக்காட்டிடத்தே புறவுகள், தாம் அன்புகொண்ட மடப்பத்தையுடைய பெடைகள் வெம்மையால் இளைத்த வருத்தத்தைத் தஞ் சிறகை விரித்து அதன் நிழலாலே அவ்வெம்மையைத் தீர்க்குமென்றுஞ் சொன்னர்; எ - று.

சிறகர்: அர், ஈற்றுப்போலி.

---

பதற்கு (தொல். செய். சூ. உ.) மேற்கோள் காட்டி, குற்றெழுத்து இடையினின்ற வொற்றெழுத்தை மாத்திரை மிகுத்து விராஅய் நின்றவாறு காண்கவென்றும் கூறுவர், நச்சினர்க்கினியர்.

க. "செல்பவோதம்மடைந்தார் சீரழிய .............கீழா,லடிவெந்து கண் சுடுமாறு" திணைமாலை. கூஉ.

உ. உறுவென்பது உறுத்தென்னும் பொருளில் வருதலை (அ) செவியறிவுறூ வென்பதன் பொருளாலும் (ஆ) "வளிசுழற்றுறூஉ" என்புழி (அகம். ஙக.) உறூஉ வென்பதற்கு உறுத்தி யெனப் பொருளெழுதி இருத்தலாலும் (இ) "நீப்பிடந் தோறும் யாப்புற வறிவுறீஇ" (ஈ) "குளம்புங் கோடும் விளங்குபொன் னுறீஇ" என்னும் பெருங்கதையாலும் உணர்க.

ங. (அ)"கெழுவிப் பெடையைக் கிளர்சேவ றழீஇத், தொழுதிச் சிறகிற் றுயராற்றுவன" சீவக. கக௮௭. (ஆ) "தேர்த்தானை வாணன் றென் மாறைமின் னேயஞ்சல் செம்புருக்கி, வார்த்தாலனைய வழி நெடும் பாலை மடப் பெடை நோய், பார்த்தாத வந்தணி பாதவ மின்மையிற் பைஞ்சிறகாற், போர்த்தாலு மஞ்ஞைகண் டும்போரவரோநம் புரவலரே" தஞ்சை. உசு௭.

(பிரதிபேதம்) * சொல்லிய காட்டிடத்தே (தாழிசை மூன்றனுரையிலும்).

கச கன்மிசை (க)வேய்வாடக் (உ) கனைகதிர் தெறுதலாற்
றுன்னருஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளின்(ங)னிழ லின்மையான் வருந்திய மடப்(ச)பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்குங் கலையெனவு முரைத்தனரே

எ - து: காடுகள் ஞாயிற்றினுடைய செறிந்தகதிர்கள் மலையின்மே னின்ற மூங்கில்கள் வாடும்படி சுடுதலாலே செல்வார்க்குச் சேருதலரிய தகைமையினை யுடையவாயே இருக்குமென்று சொன்னார்; சொல்லி, அக்காட்டிடத்தே * கலைமான், இனிய நிழலில்லாதபடியாலே வருந்திய மடப்பத்தை யுடைய † தன் பிணைக்குத் தான் நின்று தன் நிழலைக்கொடுத்து உயிரை அளியா நிற்குமென்றுஞ் சொன்னார்; எ - று.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு, அசை.

இது தனிச்சொல்.

கரு இனைநல முடைய (ரு) கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்

---

க. (அ) "மழைபெயன் மாறிய கழைதிரங் கத்தம்" (ஆ) "இரும்பனை திரங்கப் பெரும்பெய லொளிப்பக், குன்றுவறங் கூரச் சுடர்சினந் திகழ, வருவி யற்ற பெருவறற் காலையும்" பதிற். சக: கச. சங: கஉ-ச. (இ) "கழைகாய்ந் துலறிய வறங்கூர் நீளிடை" புறம். ஙஎ0:

உ. (அ) "கனைகதிர் தெறுதலிற்" கலி. கரு0, ங. (ஆ) "கனைகதிர்க் கனலியை" கலி. ககூ: கஉ. என்பவையும். (இ) "கனைசுடர்" கலி. கஉ0. என்பதன் குறிப்பும் பார்க்க.

ங. "ஆடு கின்றசிறை வெம்ப ருந்தினிழ லஞ்சி யக்கடு வனத்தைவிட், டோடு கின்ற நிழ லொக்கு நிற்குநிழ லோரி டத்துமுள வல்லவே." கலிங். சுஎ.

ச. (அ) "கலையின்பிணை கன்றிடு மென்றுகசிந், திலையின்னிழ லவ்வயி னின்மையினு, னிலையின்னிழ றுனது நின்று கொடுத், துலையும் வெயி னின்றுருகும் முரவோய்." சீவக. ககஅஅ. (ஆ) "பண்ணார் பணிமொழிப் பைந்தொடி யாய்வெந்த பாலைவன, மெண்ணு திரு நிதிக் கேகினர் காண்ப ரெதிர்ந்தவலின், கண்ணார் சிறுபுனல் மெய்யுறும் வேட்கை கரந்துகலை, யுண்ணு தரிணத்தை யுண்டதுபோல நின் றாட்டுவதே" அம்பிகா. ஙகஉ.

ரு. "தகையெழில் வாட்டுந ரல்லர், முகையவிழ் புறவி னாடிறந் தோரே" ஐங். சசுஉ.

(பிரதிபேதம்) * கலைகள், † தம்பிணைக்குத் தாநின்றுந் தந்நிழலை,

(௧)பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழி லுண்கணு மாடுமா லிடனே

௧. (அ)" இடங்க ணினி.........ம படூஉ, நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கிற் றேற்றும்..................சுரம்பல நீந்திச், செய் பொருட் ககன்றன ராயினும் பொய்யலர், வருவர் வாழி தோழி" நற்றிணை. உசசு. (ஆ) "பூங்கணிட மாடுங் கனவுந் திருந்தின, வோங்கிய குன்ற மிறந் தாரை யாகினைப்ப, வீங்கிய மென்றோள் கவினிப் பிணிதீரப், பாங் கத்துப் பல்லிபடும்." ஐந் - எழு. சக. (இ) "எல்லிருட் கனவிற் கண்டேன் கண்ணிட னாடு மின்னே, பல்லியும் பட்ட பாங்கர் வருங் கொலோ நம்பி யென்று, சொல்லின டேவிகிற்பப் பதுமுகன் றொழுது சேர்ந்து, நல்லடி பணிந்து நம்பி வந்தன னடிக ளென்றான்" சீவக. ௧௯௦௧. (ஈ) "அரவிசைக் குந்திரு வல்குனல் லாயடை யார்மடியப், பொரவிசைக் கும்பரி பூண்டபொற் றேர்நம் புரவலர்தம், வரவிசைக் கும்பல்லி வாமங் துடிக்கும் வரிநெடுங்க, ணிரவிசைக் குங்குழ லோடிள வாடையின்றென் செய்யுமே" அம்பிகா. ருடரு. (உ) "துடித்தன வெனக்கிடந் தோளுங் கொங்கையும், வடித்தவேல்விழியுநல் வரைப் பிற் பல்லியு, நொடித்தன விரிச்சியு நுவலப்பட்டன, கடைத்தலைக் குமரநிற் காண்டற் கென்றனள்"...................... எனப்பல்லி யிசைத்தலும் இடந்துடித்தலும் சேர்த்தும். (ஊ) "அரும்பொருட் ககன்ற காதலர் முயக்கெதிர்ந்து, திருந்திழைப் பணைத்தோள் பெறுநர் போலு, நீங்குக மாதோநின் னவல மோங்குமிசை, யுயர்புகழ் நல்லி லொண்சுவர்ப் பொருந்தி, நயவரு குரல பல்லி, நள்ளென் யாமத் துள்ளுதொறும படுமே." நற். ௩௩௩. (எ) "ஓங்கிய நல்லி லொரு சிறை நிலைஇப், பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவி" அகம். ௯: (ஏ) "கள்ளி முள்ளரைப் பொருந்திச் செல்லுநர்க், குறுவது கூறுஞ் சிறுசெந் நாவின், மணியோர்த்தன்ன தெண்குரற், கணிவாய்ப் பல்லிய காடிறந்தோரே" அகம். ௧௫௧: ௧௨ - ௫. (ஐ) "பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி, நல்ல கூறென நடுங்கிப், புல்லென்மாலை யொடு பொருங்கொ ளானே" அகம். ௨௮௯: ௧௫ - எ. (ஒ) "வருந்து தோட் பூசல் களையு மருந்தென, வுள்ளுதொறு படூஉம்பல்லி, புள்ளுத் தொழு துறைவி செவிமுதலானே" அகம். ௩௫௧. (ஓ)" ஆமா சிலைக்கு மணிவரை யாரிடை, யேமாண் சிலையார்க் கினமா விரிந்தோடுந், தாமாண்பில் வெஞ்சுரஞ் சென்றார் வரல் கூறும், வாய்மாண்டபல்லி படும்" கைந்நிலை. ௧௮. (ஔ) "கொட்டாய் பல்லிக்குட்டி - குடமாடி யுலகளந்த, மட்டார் பூங்குழன் மாதவனை வரக் - கொட்டாய் பல்லிக்குட்டி" பெரியதிருமொழி. ௧௦ - ௧௦: ௬. (ஃ) "பல்லியின்

எ - து: இங்ஙனம் அவர்க்கு (க) அருள்வந்தவை காட்டுதலின் அவர் வருந்துதற்குக் காரணமான *நன்மைகளையுடைய காட்டைப்போனவர் நமது புனைந்த நலத்தைக் கெடுக்குமவரல்லர்காண்; அதற்குக் காரணம் என்னெனின், நம்மனையிடத்துப் பல்லியும் நன்றாகிய இடத்தே அவர் வரவுக்குப் பொருந்திக் கூறின; நல்ல அழகையுடைய மையுண்கண்ணும் இடந்துடியா †நிற்கும்; எ- று.

பல்லி இசைத்தது, பிறிதின்கட் டோன்றிய ஆக்கம் பற்றிய வியப்பு. இடந்துடித்தது, தன்கட் டோன்றிய ஆக்கம்பற்றிய வியப்பு.

பல்லியுங்கண்ணுமென்னும் உம்மைகள், எச்சவும்மை. இனைநலமென்பதற்கு இனையநல மென்பது விகாரப்பட்டதென்பாரும் உளர்.

‡ இனைய நலமென்பது பாடமாயின், இத்தன்மையவாய நலமென்க.

இப்பாட்டுப் "புணர்ந்துடன் போகிய கிழவோண் மனையிருந், திடைச் சுரத் திறைச்சியும் வினையுஞ் சுட்டி, ||யன்புறு தக்க கிளத்த றானே, கிழவோன் செய்வினைக் கச்ச மாகும்" என்னும் (உ) சூத்திரத்துப் புணர்ந்துடன்

---

சொல்லுஞ்சொல் லாக்கொள்வ தோவுண்டு பண்டுபண்டே" திருவிருத். சஅ. (அஅ) "நனைசுவர்க் கூரைக் கனைகுரற்பல்லி, பாடுபார்த்திருக்குமெம் மனைவியை" எனப் பல்லி இசைத்தலும். (ஆஆ) "உருவவேற் கண்ணு யொருகாற்றேர்ச் செல்வன், வெருவிவீந் துக்கநீ ளத்தம் - வருவர், சிறந்து பொருடருவான் சேட்சென்றாரின்றே, யிறந்துகண்ணாடு மிடம்" திணைமாலை. அ௦. (இஇ) "மகிழ்துடி - கையணல்; வைத்த வெயிற்றியர் வாட்க ணிடனுடை, வுய்த்தன் றுவகை யொருங்கு" பு - வெ. வெட்சி. கஉ. (ஈஈ) "இருபிறப் பாள னென்கொ லெய்தில னின்னு மென்னு, வரிமிடற் றளிவீ ழோதி மனத்தினி லுணருமேல்லை, முருகுகொப் புளிக்குஞ் செய்ய முளரியம்போது பூத்த, கருநெறிக் குவளையன்ன கண்ணிடனுடிற்றன்றே" பாகவதம். க௦: உருக்குமிணி மணத்திறமுரைத்த. உச. (உஉ) "அம்பிகையங் கிடமுலையுங் கண்ணு மாடப், பெருவிருப்பினணித்தாகக் கூட்டுறவுண் டெனப்பிறங்கு மகிழ்ச்சி பூத்தாள்" காஞ்சிப். கழுவாய்ப். உஙங. என இடந்துடித்தலும் தனித்தனியாயும் கூறப்பட்டிருத்தல் ஈண்டு அறிதற்பாலது. (ஊஊ) "பாங்கர்ப், பகுவாய்ப் பல்லிப் பாடோர்த்துக் குறுகும், புருவைப்பன்றி" (அகம் அஅ)என்பதும் (எஎ) கலி. க௦க: சரு. விசேடவுரையின் குறிப்பில் மகளிர்க்கு இடந்துடித்தல் நன்னிமித்த மெனப்படும் பகுதிகளும் ஈண்டு நோக்கத் தக்கன.

க இனை நல முடையகானஞ் சென்றோர் என்புழி இங்ஙனம் அவர்க்கு அருள்வந்தவை காட்டுதலின் எனப் பெய்துரைத்த சொற்றொடர். கலி. ங: உ௦. இல் உள்ளது.

உ. தொல். கற்பியல் சூ. எ.

(பிரதிபேதம்) * நன்மைகளுடைய, † நிற்குமென்றாளென்க, ‡ இனைநலம், || அன்புறுத் தகலங்கிளத்தல்.

போகாத தலைவி மனைக்கணிருந்து (க) தலைவன் அன்புறுத்தத்தக்கன கூறக் கேட்டுத் தலைவன் தன்மேல் அன்புறுதற்குத் தக்க கருப்பொருளைக் கூறித் தலைவன் செய்வினை முடியாது வருவனென்னும் அச்சம் பிறவாமல் மீண்டு வருவனெனத் துணிந்தே கூறுமென்றலின், 'புனைநலம் வாட்டுநரல்லர்' என வரவு கருதிக் கூறினாள். ஆற்றுவிக்குந்தோழி 'வருவர் கொல்' என ஐயுற்றுக் கூறலாகாமையிற் றோழிகூற்றன்மை உணர்க.

இது சுரிதகம்.

இஃது ஐந்தடித்தரவும் நாலடித்தாழிசையும் அசைநிலையாகிய * அடைநிலைக்கிளவியும் நான்கடிச் சுரிதகமும் பெற்று வந்த ஒத்தாழிசைக்கலி. (கo)

(கஉ) (உ) இடுமு ணெடுவேலி போலக் (ங) கொலைவர்
கொடுமரந் தேய்த்தார் பதுக்கை நிரைத்த
கடுநவை யாராற் றறுசுனை முற்றி
யுடங்குநீர் வேட்ட (ச) வுடம்புயங் கியானை
ரு கடுந்தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு
வெறிநிரை வேறுகச் † சார்ச்சார லோடி
நெறிமயக் குற்ற நிரம்பாநீ டத்தஞ்

க. பக்கம் சுஅ. குறிப்பு க. இல் (ஆ) என்பதன்பின் பார்க்க.

உ. தலைவன் பிரியக் கருதியவழித் தோழியுந் தலைவியும், நீ போகின்ற விடம் எல்லாவாற்றானும் போதற்கரிய நிலம், எனக்கூறி விலக்குதலுண்டென்பதற்கு, "இடுமுணெடுவேலி......உரனுடை யுள்ளத்தை" என்பதை மேற்கோள் காட்டி, தலைவியும் தோழியாற் கூற்று நிகழ்த்துமென்பர், நச். தொல். பொருளி. சூ. உஉ.

ங. (அ) "உவலிடு பதுக்கை யாளுகு பறந்தலை'" (ஆ) "கொடுவிற் கானவர் கணையிடத் தொலைந்தோர், படுகளத் துயர்த்த மயிர்த்தலைப் பதுக்கை" அகம். சுஎ: கச. உஙக: ரு-சு. (இ) 'கொலைவன்' கலி. கoங: கசு; கசஎ: உரு; புறம். கருஉ: அ. மணி. உரு: களச.

(ஈ) "கொலைவர் கொடுமரந் தேய்த்தார்" என்பதனை (தொல். வேற். சூ. கூ.) வினைப்பெயராய்ச் செயப்படு பொருட்கண் காலங்காட்டி நின்றது. என்று கல்லாடரும், செயப்படு பொருட்கட் காலங் காட்டி நின்ற தொழிற் பெயரென்று நச்சினார்க்கினியரும், காலங் காட்டிப் படுத்தலோசையாற் செயப்படு பொருண் மேனின்ற வினைப்பெயர் (இ.-வி. சூ. களசு.) என்று இ-வி. நூலாரும் கூறுவர்.

ச. 'உடம்புயங்கி யானை' கலி. கங: சு.

(பிரதிபேதம்) * இடைநிலைக், † சாரச்சாரல்.

(க) சிறுநனி நீதுஞ்சி (உ) யேற்பினு மஞ்சு
நறுநுத னீத்துப் பொருள்வயிற் செல்வோ
க0 யுரனுடை யுள்ளத்தை செய்பொருண் முற்றிய
(ங) வளமையா னாகும் பொருளிது வென்பா
யிளமையுங் காமமு நின்பாணி நில்லா
விடைமுலைக் (ச)கோதை குழைய முயங்கு
முறைநாள் கழித லுறுஅமைக் காண்டை
கரு (ரு)கடைநா ளிதுவென் றறிந்தாரு மில்லைப்
(சு)போற்றாய் பெருமநீ காமம் புகர்பட
வேற்றுமைக் கொண்டு பொருள்வயிற் போகுவாய்
கூற்றமு மூப்பு மறந்தாரோ டோராஅங்கு
மாற்றுமைக் கொண்ட வழி.

இது தலைமகனற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி காட்டது கடுமையுந் தலைவியது மென்மையும் "நாளது சின்மையு மிளமைய தருமையுந்,

---

க. 'சிறுநனி நீதுஞ்சி யேற்பினும்' என்பது (தொல். வினை. சூ. ௩0 கல் தொல். வினை. சூ. ௩க. நச்.) குறிப்பு வினையெச்சம் அகர வீற்றா னன்றி வேறீற்றான் முடிக்குஞ் சொல்லை விசேடித்து வருவதற்கு மேற்கோள்.

உ. எற்றலென்னுஞ் சொல்லின் பொருள் (அ) "வாய்த்தகைப் பொய்க் கனா மருட்ட வேற்றெழூஉந், தமளி தைவந் தனனே" (ஆ) "மெய் யுணர்ந் தேற்றெழுவே னாயின்" (இ) "எழுவார்யாழு மேத்தொலியு மிறைவன்கேளாத் துயிலேற்றான்" (ஈ) "செங்க, ணேற்றெழுந் தனனால்" (உ) "பூஞை மெல்லியற் புல்லினையாகவப் பொய்யை மெய்யாப், பேணுமகிழ்ந்து பெருந்துயி லேற்றவள் பின்னைநின்னைக், காணுள்கலங்கினள்" என்பவற்றால் தெளியலாம்.

௩. (அ) "வளமையோ வைகலுஞ் செயலாகும்...............இளமையுந் தருவதோ விறந்தபின்னே" (ஆ) இளமையுங் காமமு மோராங்குப் பெற்றார், வளமை விழைதக்க துண்டோ...........அரிதரோ, சென்ற விளமை தரற்கு" கலி. கரு: உச-சு, கஅ: எ-கஉ. என்பவைகளும் அவற்றின் குறிப்பில் இவ்விடத்துக்குப் பொருந்து வனவும் காண்க.

ச. கலி. எ௩-ம் செய்யுளின் கஉ - ௩. அடிகளின் குறிப்புப் பார்க்க.

ரு. "இதுவென வரைந்து வாழுநா ளுணர்ந்தோர், முதுநீ ருலகின் முழுவதுமில்லை" சிலப். உஅ, கஅக-உ.

சு. "மாற்றுமைக் கொண்டவழி" என்பது இறுதிக்கண் இரண்டாவது தொக்கதென்றும் அது போற்றாயெனவரு முடிக்குஞ் சொல்லோடு ஒட்டி ஒரு சொல்லாகாமை புணர்கவென் றுங் கூறுவர், நச். தொல். எச்ச. சூ. கசு.

தாளாண் பக்கழந் தகுதிய தமைதியும்" (க) "அன்பினை தகலழ மகற்சிய தருமையும்" (உ) கூறிச் செலவழுங்குவித்தது.

### இதன் பொருள்.

கட்டுமுள்ளால் இடும் நெடியவேலிபோலக் கொலைத் தொழிலையுடைய வேடர் வில்லாலே கொல்லப்பட்டவருடைய உடலம் மறையவிட்ட இலைக் குவை நிரைத்துக் கிடக்கின்ற கடியகுற்றம் நிறைந்த வழியில் நீர் அறுங் கடுஞ்சுனையைச் சூழ்ந்து தண்ணீருண்டலை விரும்பிய உடம்பு வருந்தின யானைகள் தாஞ் சேரப்பதிந்து அவ்விடத்துக் கைகள் சுடப்பட்டு ஒழுங்குபட்ட திரள்கள் வெவ்வேறும்படி மலைச்சாரல் தோறும் ஒடுகையினுலே பழைய வழிகள் மயங்கப்பட்ட தொலையாத நீண்ட காட்டைப், பண்டு துயில் கொள்ளுங் காலத்தின் மிகச் சிறிது பொழுது தாழ்த்துத் துயில் கொண்டெழுந்திருப்பினும் இதுவும் ஒன்றுடைத்தென்று அஞ்சும் நறிய நுதலையுடையாளைக் கைவிட்டுப் பொருளிடத்தே வேட்கை நிகழ்ந்து போகின்றவனே, நீதான் வலியுடைத்தாகிய மனத்தையுடையை; தேடும் பொருளைத் தேடிமுடித்த செல்வத்தாலே உண்டாகும் * பொருடான் இவ் வின்பமென்று கூறுகின்றவனே, நீ அப்பொருளைத் தேடிவரக் குறித்த காலத்தளவும் இளமையுங் காமமும் நின் கையிடத்து நில்லாவாய் நாடோறுங் கழியும்; அதுவே அன்றி இறக்கும் நாள் இதுவென்று உலகத்திலே அறிந்தவர்களும் இல்லை; † ஆதலான் மூலையிடையிற் கோதை குழையும்படி முயங்கு முறைமையினையுடைய நாள்கள் ‡ இளமைப்பயனின்றிப் போத லருமையை நெஞ்சாலே காண்பாய்; || காமதன்மங் குற்றப்படும்படி அதனோடு வேறுபாடுகொண்டு பொருளிடத்தே வேட்கை நிகழ்ந்து போகின்றவனே, பெருமா, நீ தமக்கு வருகின்ற கூற்றத்தையும் மூப்பையும் மறந்திருக்கின்ற அறிவில்லாதாருடனே ÷ ஒரு படிப்பட்ட மாறுபாட்டினைக்கொண்ட, நன்மக்கள் நிற்கின்ற வழியினை நினக்கு வழியாகப்பேணுய்; எ - று.

முதுவேனிற் காலங்களெல்லாம் நீர் அறுதலின் அறுசுனையென (ங)நிகழ் காலத்தாற் கூறினர். கடுமை ஈண்டு வெம்மை மேற்று. இனி, கடுந் (ச)தாக மென வடமொழித் திரிபாக்கி விகாரமாய் நின்றதென்பாரும் உளர். தாகத் தாலே பதியென்க.

---

க, உ. தொல். அகத். சூ. சக.

ங. தொல்.

ச. தாகமென்பது தாமெனத் திரிந்து வழங்குதலை. (அ) "பேஎய் வெண் டேர் பெயல்செத் தோடித், தாஅம் பட்ட தனிமுதிர் பெருங்கலை" (ஆ) "தாஅம் படுநர்க்குத் தண்ணீ ருளகொல்லோ" (இ) "தாம்படு மாந்தர்க்குத் தண்ணீர் போலுங், காம்படு தோளியொடு கலந்து மகிழ் வெய்திய" என்பவற்றுலும் அறிக.

(பிரதிபேதம்) * பொருள்காண் இவ், † காதலான், ‡ இன்னும் அப்பய, || காமவின் பங் குற்றப், ÷ ஒரு வழிப்படுமாறு பாட்டினை.

ஓடியென்னுஞ் செய்தெனெச்சம் "அம்முக் கிளவியும்" என்னும் (க) சூத்திர விதியாற் பிறவினை கொண்டது.

அஞ்சுமென்றது பிரியுமாறு நினைந்து முன்னர்த் துயிலின்றிப் பின்னர்த் தாழ்க்கத் துயின்றானென்று அஞ்சினாளென்க.

காண் என்னும் முன்னிலைவினை காண்டையெனத் திரிந்தது.

மாற்றுமைக்கோடல், கூற்றமும் மூப்பும் உண்டென்றிருத்தல்.

'கடைநா ளிதுவென் றறிந்தாரு மில்லை' இது நாளது சின்மை; 'இளமையுங் காமமு நின்பாணி நில்லா' இஃது இளமையதருமை; 'உரனுடையுள்ளத்தை' இது தாளாண்பக்கம்; 'செய்பொருண் முற்றிய' இது தேடும் முறைமையிற் றேடவேண்டுமென்றலிற் றகுதியதமைதி; 'சிறுநனி நீதுஞ்சி ......செல்வோய்' இஃது அன்பினதகலம்; 'இடைமுலைக்.........காண்டை' இஃது அகற்சிய தருமை.

(௨) 'செய்பொருண் முற்றி...........என்பாய்' என்பது செல்வத்தாற் பிறந்த உவகை; † வளமையானுகும் மனமகிழ்ச்சி இது வென்றலின்.

"நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே." (ங)என்பதனால், தலைவன் முன் ஒருகாற் கூறியவற்றினைத் தோழி தலைவற்குக் கூறிச் செலவழுங்குவித்தாள்.

"சுரமென மொழிதலும் வரைநிலை யின்றே" (ச)என்பதனால் வழியருமை கூறினாள்.

இவள் கூறுகின்ற காலத்து, தலைவற்கு மூப்பென்னும் மெய்ப்பாடு தோன்றிப் பின்னர் அசைவுபிறந்தது; தோழிக்கு நடுக்கம் பிறந்தது.

(ரு) இது பன்னீரடியின் இகந்து ஒரு பொருணுதலாது ஆசிரியத்தளை விரவிவந்த சீர்வகைக் கலிவெண்பா. (கக)

(கங) செருமிகு சினவேந்தன் சிவந்திறுத்த புலம்போல
வெரிமேய்ந்த கரிவறல் வாய்புகுவ காணுவாய்ப்
பொரிமலர்ந் தன்ன பொறிய மடமான்
றிரிமருப் பேறொடு தேரறற் கோட

க. தொல். வினை·சூ.௩௪. இதனுரையிலும் 'உடம்புயங்கி யானை......நெறி மயக்குற்ற' என்பது செய்தெனெச்சம் காரணகாரியப்பொருட்டாய்த் தனக்குரிய வினைமுதலானன்றிப் பிறவினை முதலான் முடிந்த தற்கு இவ்வுரையாசிரியரால் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது.

௨. "உரனுடை யுள்ளத்தை செய்பொருண்முற்றிய வளமையானுகும் பொருளிது வென்பாய்" என்புழி வளமையானுகும் மனமகிழ்ச்சி இதுவெனக் கூறினமையின், இது செல்வம் பொருளாகப் பிறந்த உவகை யாமென்பர், பேராசிரியரும்; தொல். மெய்ப். சூ. கக. இ-வி. நூலாரும் இங்ஙனமே எழுதுவர்; இ-வி. சூ. ௫௭அ.

௩. தொல். அகத். சூ. ௪௪. ௪. தொல். பொருளியல். சூ. ௨௨.

ரு. இச்செய்தி தொல். செய். சூ. க௫௩. நச்சினார்க்கினியருரையிலும் காணப்படுகின்றது.

† தண்டி. "வெஞ்சுடர்"

ரு மரல்சாய மலைவெம்ப மந்தி யுயங்க
வுரல்போ லடிய வுடம்புயங் கியானை
யூறுநீ ரடங்கலி னுண்கயங் காணாது
சேறு சுவைத்துத்தஞ் செல்லுயிர் தாங்கும்
புயறுளி மாறிய போக்கரு வெஞ்சுரம் ;
க0 எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியன் மேவந்த சீறடித் தாமரை
யல்லிசே ராயிதழ் ரக்குத்தோய்ந் தவைபோலக்
கல்லுறி னவ்வடி கறுக்குந வல்லவோ ;
கரு நலம்பெறு சுடர்நுதா லெம்மொடு நீவரி
னிலங்குமா ணவிர்தூவி யன்னமென் சேக்கையுட்
டுலங்குமான் மேலூர்தித் துயிலேற்பாய் மற்றண்டை
விலங்குமான் குரல்கேட்பின் வெருவுவை யல்லையோ;
கஅ கிளிபுரை கிளவியா யெம்மொடு நீவரிற்
றளிபொழி தளிரன்ன வெழின்மேனி கவின்வாட
முளியரில் பொத்திய முழங்கழ லிடைபோழ்ந்த
வளியுறி னவ்வெழில் வாடுவை யல்லையோ;
எனவாங்கு;
உரு அணையவை காதலர் கூறலின் வினைவயிற்
பிரிகுவ ரெனப்பெரி தழியாதி திரிபுரீஇக்
கடுங்குரை யருமைய காடெனி னல்லது
கொடுங்குழாய் துறக்குந ரல்லர்
நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரே.

இது தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றளாய தலைமகள், யான் நும்மோடு போதுவல் என்றாட்கு, தலைவன் அவளது மென்மையுங் காட்டின் கடுமையுங் கூறி உடம்படானாக, ஆற்றளாய தலைவியைத் தோழி, அவர் நம்மோடு நகையாடிச் சொன்னார் பிரிவாரல்லரென வற் புறுத்தியது.

இதன் பொருள்.

செருமிகு சினவேந்தன் சிவந்திறுத்த புலம்போல
ல (க) * வெரிமேய்ந்த கரிவறல் வாய்பு தவ காணாவாய்ப் (புகவ)

க. (அ) "நாடுகெட வெரிபரப்பி" (ஆ) "பெருந் தண்பணை, குரூஉக் கொடிய வெரிமேய......பாழாயினநின் பகைவர் தேஎம்" மது. கஉசு, (பிரதிபேதம்) * எரிவெந்த.

(க) பொரிமலர்ந் தன்ன * பொறிய மடமான்
றிரிமருப் பேற்றொடு (உ) † தேரறற் கோட
ரு (ங) மரல்சாய (ச) மலைவெம்ப (ரு) மந்தி யுயங்க

---

கஙச-களசு. (இ) "ஊரெரி கவர வுருத்தெழுந் துரைஇப், போர்சுடு கமழ் புகைமாதிர மறைப்ப" (பதிற். எக.) (ஈ) "வாடுக விறைவநின் கண்ணி யொன்னார், நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே" (உ) "பகைவ ரூர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக், கொள்ளை மேவலை" (ஊ) "பெருந்தண்பணை பாழாக, வேம நன்னா டொள்ளெரி யூட்டினை" (எ) "வினைபுனை நல்லில் வெவ்வெரி யினைப்பக், கனையெரி யுரறிய மருங்கும்" புறநா. சு, எ, கசு, உங.

க. உழைமான் சாதியின் ஆண்பால் ஏறெனப்படு மென்பதற்கு, "பொரி மலர்ந் தன்ன பொறிய மடமா, திரிமருப் பேற்றொடு தேரறற் கோட" என்னும் பகுதி மேற்கோள். தொல். மரபு. சு. ஙஅ. பே.நச்.

உ. (அ) "யானை, நீர்மருங் கறியாது தேர்மருங் கோடி, யறுநீ ரம்பியி னெறி முதலுணங்கும்.........கடத்திடை" அகம். உக, (ஆ) "அழன்மேய்ந் துண்ட நிழன்மா யியவின், வறன்மரத் தன்ன கவைமருப் பெழிற் கலை, யறலவிர்ந் தன்ன தேர்நசைஇ யோடி" அகம். ஙகரு. (இ) தேரோட வெஃகினின் றத்தமாச், சிந்தையா னீரென்று செத்துக் கவர்போடும், பண்பி லருஞ்சுர மென்ப. கைந்நிலை. பாலை. கஉ. (ஈ) "வெண்டேரை நீராமென் றெண்ணி" ஐந் - ஐம். ஙசு. என்பவை. களும், "நிறைநீர் வேலியு முறைபடக் கிடந்தவிந், நெடும் பேரத்தம்" (சிலப். கக: சுக, எ०. அடி.) என்புழி, "நிறைநீர் வேலியென்றார், பேய்த்தேரை, நீர்போலத் தோன்றுதலின்" என எழுதியிருத்தலும் "நீரிலெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு, மோரினவை யின்றுமா றொப்பு" என்னும் பகுதியின் விசேடவுரையில் 'அருஞ்சுரத்தின் கண் முதுவேனிலின் நண்பகற் கடுமைபற்றித் தோன்றி ஞாயிற்றின் கிரணம் முகிற்படலத்தின் மறைந்தவழித்தானும் மறைந்துபோவதாகிய பேய்த்தேர், ஒரு காரணங்காட்டி மறைந்து போவதற்கு உவமை' என்று சிவஞானமுனிவர் எழுதியிருத்தலும் (சிவஞானபாடியம். இலக் கணவியல். சு-ம் சூத்திரம் க-ம். அதிகரணம். வெண்பா. க. 'அசத் தறியாய்' பக். ங०ங.) இங்கே அறிதற்பாலன.

ங. "மரல்சாய மலைவெம்ப மந்தியுயங்க" என்பது கலியடி பதின்மூன் றெழுத்தான் வந்ததற்கு மேற்கோள்; தொல்.செய்.ருரு.'அளவடி' இளம்.

ச. மலைவெம்பல். கலி. உ०: ரு, உங: ங, "கல்காயுங் கடுவேனிலொடு" மது. க०ச.

ரு. "கயந்தலை மந்தி யுயங்குபசி களைஇயர்" அகம். உஅஅ.

(பிரதிபேதம்) * பொறியமை மடமா, † தேரதேர்க்கோடும்.

(க) வுரல்போ லடிய (உ) வுடம்புயங் கியானை
யூறுநீ ரடங்கலி னுண்கயங் காணாது
சேறு சுவைத்துத்தஞ் செல்லுயிர் தாங்கும்
(ங) புயறுளி மாறிய (ச) போக்கரு வெஞ்சுரம்

எ - து: போர்த்தொழிலிலே மிகுகின்ற சினத்தையுடைய அரசன் கோபித்துச் சென்று விட்ட பகைப்புலத்தை நெருப்புத் தின்றாற்போல நெருப்புத்தின்ற கரியினையுடைய வறந்த நிலத்திடத்தனவாகிய பொரி மலர்ந்தாற்போன்ற புள்ளிகளையுடையவாகிய மடப்பத்தையுடைய மான்கள் உணவுகளைக் காணாவாய்த் திரிந்த கொம்பினையுடைய எற்றோடே பேய்த் தேரை நீரென்று கருதி உண்டற்பொருட்டு ஓட, மரல்வாடும்படி மலைகள் கொதிக்க, ஊணின்றி மந்திகள் வருந்த, உரல்போன்ற அடிகளையுடைய வாகிய, உடம்பு வருந்திய யானைகள் ஊறுகின்ற நீரூற்று அடங்கலின் நீர் உண்டற்கு வேறோர் நீர்நிலை காணாமற் சேற்றில் ஈரத்தை நுகர்ந்து தம் போகின்ற உயிரைக்காக்கும் மேகந் துளித்தலைத் தவிர்ந்த செலவரிய வெய்ய * சுரத்தே; எ - று.

"பன்றி புல்வா யுழையே கவரி, யென்றிவை நான்கு மேறெனற் குரிய." (ரு) இதனான் ஏறென்றார். †மேய்ந்தகரி, உண்ட எச்சில்போல நின்றது. எற்றொடு என்பது ஏறொடு என விகாரமாயிற்று. சுரத்தென்னும் அத்து விகாரத்தாற் றொக்கது.

இது தரவு.

கo (சு) எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியன் மேவந்த சீறடித் தாமரை

---

க. "உரல்புரை பாவடி............யொருத்தல்" கலி. உக.

உ. 'உடம்புயங்கியானை' கலி. கஉ: ச.

ங. புயறுளி மாறியசுரம்: "விழுந்ததுளி யந்தரத்தே வேமென்றும் வீழி, னெழுந்துசுடர் சுடுமென் றேங்கிச் - செழுங்கொண்டல், பெய்யாத கானகத்தே"

ச. போக்கரு வெஞ்சுரம் கலி. உங: ங.

ரு. தொல். மரபியல், சூ. ஙஅ.

சு. (அ) "எல்வளை யெம்மொடு..............கறுக்குந வல்லவோ" என்பது உடன்கொண்டு போகவேண்டு மெனச் சொல்லியவழித் தலைவன் கூறியதற்கும், தொல். கற். சூ. ரு. இள; (ஆ) தலைவிக்குத் தலைவன் உடன் போக்கு மறுத்துக் கூறியதற்கும் தொல். அகத். சூ. சரு. நச்; (இ) தலைவி உடன்வரக் கருதியவழித் தலைவன் எம்மொடு நீவரக் கருதியநிலம் சுரமென்று கூறியதற்கும் தொல். பொருளியல். சூ. உஉ. நச். மேற்கோள்.

(பிரதிபேதம்) * சுரத்தை, † வெந்தகரி.

யல்லிசே ராயித ழரக்குத்தோய்ந் தவைபோலக்
கல்லுறி னவ்வடி கறுக்குந வல்லவோ

எ - து: ஒளியினையுடைத்தாகிய வளையினையுடையாய்! நீ எம்மோடு வருவையாயின் நின்னுடைய (க) மெல்லிதாகிய இயல்பினையுடைய, அனிச்ச முதலியவற்றிலே பொருந்துதல்வந்த சிறிய அடிகள் ஆண்டுள்ள கல்லைத் தீண்டும்; அவ் வடிகள் கல்லைத் தீண்டுமாயின், (உ) தாமரைப் பூவினது (ங) அல்லியைச் சேர்ந்த அழகிய இதழ்கள் (ச) இங்குலிகந் தோய்ந்தன போலக் கறுப்பனவல்லவோ; எ - று.

---

(ஈ) எல்லே யிலக்க மென்னும் தோல். இடை உக-ஆம் சூத்திரத்துக்கு எல்லென்பது விளங்குதற் பொருண்மை யுணர்த்து மென்று பொருள் கூறி "எல்வளை யெம்மொடு நீவரின்" என்பதை மேற்கோள் காட்டினர். நச். (உ) பிறவுரை யாசிரியர்களும் இப்பொருளே கூறி 'எல்வளை' என்பதை மேற்கோள் காட்டினர். அவர்களுள் (ஊ) சேனாவரையர் எல் லென்பது உரிச்சொ னீர் மைத்தாயினும் ஆசிரியர் இடைச் சொல் லாக ஓதினமையான் இடைச்சொல்லென்று கோடுமென்றெழுதி யிருத்தலும் (எ) தெய்வச்சிலையார், இஃதுரிச் சொல்லன்றோ வெனின் அது குறைச்சொல்லாகிநிற்கும். இது குறையின்றி நிற்றலின் இடைச் சொல்லாயிற்றென் றெழுதி யிருத்தலும் ஆராயத்தக்கன. (ஏ) நன். இடை. சூ. கசு. இரா.

க. (அ) "மோப்பக் குழையு மனிச்சம்" (ஆ) "அனிச்சமே நின்னினு, மென்னீரள் யாம்வீழ் பவள்" (இ) "அனிச்சமும்............மாதரடிக்கு நெருஞ்சிப் பழம்" என்னும் குறளும் (ஈ) "அனிச்ச நெருஞ்சி யீன்ற பழமாலென், றஞ்சு மலரடிகள்" சீவக. ருசக. (உ) "அனித்த மிதிப் பினும் பனித்த லான, வொளிச்செஞ் சீறடி யுருக்கரக் கேய்ப்ப, வுளித்தலை வெம்பர லூன்றுபு நலிய" பெருங். (க) ருரு: கசுஉ-கசுச. என்பவைகளும். ஈண்டு அறிதற்பாலன. பிற்காலத்து நூல்களில் இது கோட்டுப் பூவாகவும் நீர்ப் பூவாகவும் அடிக்கு உவமையாகவும் கூறப் பெற்றுள்ளது.

உ. "கல்லதர் நடந்துபூங் கமலம் வாட்டிய, மெல்லடி சிவப்புறல் வீழி வாய் மயிற், கொல்லுமே யெனமன முருகி" நைடதம். கான்புகு. கஉ.

ங. (அ) "பொய்கை போர்க்களம் புறவிதழ் புலவு வாட்படை புல்லித, ழைய கொல்களி றகவித ழரச ரல்லிதன் மக்களா, மையில் கொட் டையம் மன்னனு மலர்ந்த தாமரை" சீவக. உஙகக; (ஆ) "காத லுள்ளமொடு கலந்துண் டாடுநர், போகச்சேரி புறவித ழாக,......... அருமதியமைச்சர் திருமதிற் சேரி, மாசில் பைந்தாது சுமந்தமத்தகத், தாசில் பன்மல ரல்லி யாக,..................கோயில் கொட்டை யாகத் தாமரைப் பூவொடு பொலியும் பொலிவிற்றாகி" பெருங். (ங) ங: ருரு-க0கூ. என்பவற்றால் அல்லி யென்பது கொட்டையைச் சூழ்ந் துள்ள கேசர மென்று தோற்றுகிறது.

ச. இங்குலிகம், இக்காலத்துச் சாதிலிங்கமென்றும் இலிங்கமென்றும் வழங்கப் படுகின்றது; சாதிங்குலிக மென்பது பண்டை வழக்கு.

சக நலம்பெறு சுடர்நுதா லெம்மொடு நீவரி
 னிலங்குமா ணவிர் (க) தூவி யன்னமென்சேக்கையுட்
 (உ) * டுலங்குமான் மேலூர்தித் துயிலேற்பாய் மற்றுண்டை
 † விலங்குமான் குரல்கேட்பின் வெருவுவை யல்லையோ

எ - து: நன்மையைப் பெறுகின்ற ஒளியினையுடைத்தாகிய நுதலினை யுடையாய்! நீ எம்மோடு கூட வருவையாயிற் சிங்கக்கான்மேற் றைத்த தூங்குகட்டிலின் இலங்கும் மாட்சிமை விளங்கும் அன்னத்தூவியாற்செய்த மெல்லிய படுக்கையிடத்தே உறக்கத்தைப் பொருந்துகின்ற நீ பொய்யான சிங்கம் ஒழிய அக்காட்டிடத்தில் விலங்காகிய சிங்கத்தின் குரலைக் கேட்பின் அஞ்சுவையல்லையோ; எ - று.

மாட்சிமை விளங்குகின்ற தூவியையுடைய அன்னமென்பது முதற் கேற்ற அடையடுத்த ஆகுபெயர்.

துலங்கூர்தி, தூங்குகட்டில். மற்று, வினைமாற்று; வெருவரத்தக்க, பொய்ம்மானல்லாத மெய்ம்மானின் குரல்கேட்பினெனப் பொருள் தந்து நின்றது.

கஅ (ங)கிளிபுரை கிளவியா யெம்மொடு நீவரிற்
 றளிபொழி தளிரன்ன வெழின்மேனி ‡ கவின்வாட
 முளியரில் பொத்திய முழங்கழ லிடைபோழ்ந்த
 வளியுறி னவ்வெழில் வாடுவை யல்லையோ

எ - து: கிளியையொக்கும் மொழியினையுடையாய்! நீ எம்மோடே வருவையாயின் முகில் துளியைச் சொரியப்பட்ட தளிரையொத்த அழகினை யுடைய மேனி அழகு கெடும்படி உலர்ந்த சிறுதூற்றை மறைத்த முழங்கு கின்ற அழலினது நடுவை ஊடறுத்து வந்த காற்றுத் தீண்டின் அந்த அழகு கெடுவையல்லையோ; எ - று.

இவை மூன்றும், தாழிசை.

---

க. "மைந்துறு மடங்கற் றிண்கான் மணிவட வயிர வூச, லைந்துடன் பதஞ்செய் பஞ்சி யணையினோ டன்னத்தூவிப், பைந்துகிலணை" திருவிளை. வேல்வளை செண்டு. சக.

உ. "துளங்குமா னூர்தித் தூமலர்ப்பள்ளி" மணி. கஅ: சஅ.

ங. (அ)"கிளிபுரை கிளவியாய்............வாடுவை யல்லையோ" என்பது உடன் கொண்டு பெயர்தல் வேண்டுமென்ற தோழிக்குக் காட்டது கடுமை கூறிவிடுத்ததற்கு மேற்கோள். தொல். அகத். சூத்திரம். சச. 'ஒன்றாத் தமரினும்' இளம்.
(ஆ) "கிளிபுரை கிளவியாய்" கலி. உ௦:எ. (இ) "மடந்தை, கிளிபுரை கிளவியும்" தமிழ் நெறி. மேற்கோள்.

(பிரதிபேதம்) * துலங்குகால், † விலங்குகால், ‡ தகைவாட.

17. குறுந்.

எனவாங்கு

எ - து: என்று; எ - று.

ஆங்கு அசை.

இது தனிச்சொல்.

உரு. அனையவை காதலர் கூறலின் வினைவயிற்
பிரிகுவ ரெனப்பெரி தழியாதி திரிபுறீஇக்
கடுங்குரை யருமைய காடெனி னல்லது
(க) *கொடுங்குழாய் துறக்குந ரல்லர்
(உ) நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரே

எ - து: நினது அழகு கெடும் அச்சமாகிய அத்தன்மையவற்றை நின்னைக்காதலித்தவர் கூறுகையினாலே யாம் பிரியின் இவள் இறப்பளென்று பிரியார்; ஆதலான் மனத்தைத் திரிவுறுத்தி வினையிடத்துப் பிரிகுவரென மிக நெஞ்சழியாதேகொள்; வளைந்த மகரக்குழையையுடையாய்! காடுகடிய அருமையவென்று †சொல்லுவாராயின் அது நினது மெய்ந்நடுக்கத்தைக் காண்டற்கு ஒரு விளையாட்டைக் குறித்துக் கூறினாரென்பதல்லது துறப்ப ரென்று நான் சொல்லுமவரல்லர்; எ - று.

காட்டின் கடுமை தாமே கூறினார், நாம் போதற்கு உடம்படேமென் பது தாமே உணர்வாராகலின்.

இது சுரிதகம்.

தாழிசைகள் தலைவன் உடன்போக்கு மறுத்துக்கூறியன. (ந) வினைவயிற் பிரிவரெனவே கற்பிற் கூறியதாயிற்று. ‡ காடு கடுங்குரையருமையவெனத்

---

க. நடுக்கமென்பது யாதானு மொருபொருளை இழக்கின்றோ மெனவருமனநிகழ்ச்சி யென்றுகூறி அம்மெய்ப்பாட்டிற்கு, "கொடுங் குழாய்....................நடுங்குதல். காண்மார் நகைகுறித்தனரே" என்பதை (தொல். மெய்ப். சூ. கஉ.) மேற்கோள் காட்டினர், இளம் பூரணர்.

உ. (அ) 'நடுங்குதல் காண்மார் நகை குறித்தனரே' என்பதனொடு "புல்லா திராஅப் புலத்தை யவருறு, மல்லனோய் காண்கஞ் சிறிது" என நகை யாடிச் சொல்லிய (கஙOக) குறள். ஒருவாறு ஒப்புநோக்கற்பாலது. (ஆ) "நடுங்குதல் காண்மார் நகை குறித்தனரே" என்பது தன் இளமை பொருளாக நகை பிறந்ததற்கு (தொல். மெய்ப். சூ. ச. பே.) மேற்கோள்.

ந. "அனையவை காதலர் கூறலின் வினைவயிற், பிரிகுவ ரெனப்பெரி தழியாதி யென வினைவயிற் பிரிவு கூறலின் இது, கற்பிற்குக் கூறிய தாயிற்று." என்பது (தொல். அகத் சூ. சரு. நச்.) காணப்படுகின்றது.

(பிரதிபேதம்) * கொடுங்குழாஅய், † சொல்லுவாராயின் நினது, ‡ காடுங்கடுங்.

தரவிற் பொருளையும் சுரிதகத்து உடன் கொண்டு கூறினர், "தரவிய லொத்து மதனகப் படுமே" என்னும் (க) சூத்திரத்து இயலென்றதனால்.

தலைவன் இளமை பொருளாகத் தலைவற்கு * நகைபிறந்தது. தலைவிக்கு அசைவு பிறந்தது.

இஃது ஒன்பதடித் தரவும் நான்கடித் தாழிசையும் தனிச்சொல்லும் † ஐயடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (கஉ)

(௩௪) அணைமரு ளின்றுயி லம்பணைத் தடமென்றோட்
டுணைமல ரெழினீலத் தேந்தெழின் மலருண்கண்
மணமௌவன் முகையன்ன மாவீழ்வா ணிரைவெண்பன்
மணநாறு நறுநுதன் மாரிவீ ழிருங்கூந்த
ரு லலர்முலை யாகத் தகன்ற வல்குற்
சிலநிரை வால்வளைச் செய்யா யோவெனப்
பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி
யினிய சொல்லி யின்னாங்குப் பெயர்ப்ப
தினியறிந் தேனது துனியா குதலே ;
க0 பொருளல்லாற் பொருளுமுண் டோவென யாழநின்
மருளிகொண் மடநோக்க மயக்கப்பட் டயர்த்தாயோ ;
கஉ காதலா ரெவன்செய்ப பொருளில்லா தார்க்கென
வேதிலார் கூறுஞ்சொற் பொருளாக மதித்தாயோ ;
கச செம்மையி னிகந்தொரீஇப் பொருள்செய்வார்க் கப்பொரு
ளிம்மையு மறுமையும் பகையாவ தறியாயோ ;
கரு அதனால்;
எம்மையும் பொருளாக மதித்தீத்தை நம்முணங்
கவவுக்கை விடப்பெறும் பொருட்டிறத்
தவவுக்கை விடுத லதுமனும் பொருளே.

இது தலைமகனுற் பிரிவுணர்த்தப்பட்டதோழி, தலைமகற்கு முன்னை யிற் சிறப்ப ‡ எம் வயிற் பாராட்டியதெல்லாம் எம்வயிற்பிறந்த வேறுப் பேன்பது இப்பொழுதறிந்தேன், இவ்வகைப்பட்ட போக்கு நினைக்கு எவ்வகையான் வந்ததென, அவன் செலவழுங்கச் சொல்லியது.

இதன்பொருள்.

---

க. தொல். செய். சூ. கஙௗ.

(பிரதிபேதம்) * நசை, † ஐயடிச், ‡ எம்மையிற் பாராட்டிய.

(க) அணைமருளின் றுயி (உ) லம்பணைத் தடமென்றேட்
(ங)டுணைமல ரெழினீலத் தேந்தெழின் மலருண்கண்
மண (ச) மௌவன் முகையன்ன மாவீழ்*வார் நிரைவெண்பன்
(ரு) மணநாறு நறுநுதன் (சு)மாரிவீ ழிருங்கூந்த
ரு லலர்முலை யாகத் தகன்ற வல்குற்
சிலநிரை வால்வளைச் செய்யா யோவெனப்
பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி
யினிய சொல்லி யின்னுங்குப் பெயர்ப்ப
(எ) தினியறிந் தேனது துனியா குதலே

---

க. (அ) "அணைமருளின் றுயில்.........துனியாகுதலே" என்பது போக்கின்கண் தலைவன் தலைவியைப் புகழ்ந்ததற்கு மேற்கோள். தொல். பொருளியல். சூ. ஙச. நச். (ஆ) "அணைமருளின் றுயில்......பண்டையிற் பாராட்டி" என்பது களவு காலத்து நலம் பாராட்டிய தலைமகன் கற்புக்காலத்து மொழிநலம் பாராட்டுதற்கு மேற்கோள்; தொல். பொருளி. சூ. ஙக. 'நிகழ்தகை' இளம். (இ) "அணைமென்றோள்" பரி. எ: ருரு. கலி. கூகூ:க. (ஈ)"அணைபுரை மென்மை யமைபடு பணைத் தோள்" பெருங். (உ) கரு: எஉ.(உ)"செம்பஞ்சி யணையளைய வாடமைத் தோள்" சீவக. கஎO.(ஊ)"பணையெழி லணைமென்றோள்" கலி. க: க.

உ. "அம்பணைத்தட மென்றோள்" கலி.சO: அ. "தடமென் பணைத்தோள்" அகம். உக.

ங. "துணைமல ரெழினீலத் தேந்தெழின் மலருண்கண்" என்பது 'அன்னபிறவும்' என்பதனாற் கொள்ளப் படுவன வற்றுள் அத்து உவமையுணர்த்துஞ் சொல்லாய் வருதற்கு மேற்கோள். தொல். உவம. சூ. கக. இளம்.

ச. "மௌவல் வான் முகைத், துணை நிரைத்தன்ன மாவீழ் வெண்பல்" "முகைநிரைத் தன்னமாவீழ் வெண்பல்" அகம். உக: க-உ, கசுஉ: கஉ. "பன்னிற முல்லை" திணைமொழியைம். உஉ.

ரு. 'தேங்கமழ் திருநுதல்' முருகு. உச; நற். சுஉ; அகம்: ஙஅக.

சு. "மாரிவீ ழிருங்கூந்தல்" கலி. சுO: உ, கஙக: உக. வினையுவம முதலியவற்றிற்குப் பாகுபடுத் துணர்த்தப்பட்ட சொற்களன்றி மரபாற் (மரபு - பயிற்சி) பிறசொல்லும் வருமென்பதற்கு இத்தொடர் மேற்கோள். தொல். உவம. சூ. கஎ. இளம்.

எ. (அ) "இனியறிந்தேனது துனியாகுதலே" என்னும் இவ்வடி குறுந். அச-இல். உ-ஆம் அடியாகவும் காணப்படுகின்றது. (ஆ) இனியறிந் தேன்" குறள். கOஅங.

(பிரதிபேதம்) * வாணிரை.

எ - து: இனியதுயிலையுடைய அணையையொத்ததும் அழகியமூங்கிலை யொத்த பெருமையை யுடையதுமான மெல்லிய தோளினையும் எழுச்சியை யுடைய நீலத்தினுடைய உயர்ந்த அழகினையுடைய இரண்டாகிய மலர் போலும் அகன்ற மையுண் கண்ணினையும் மணத்தையுடைய மௌவன் முகையை யொத்த வண்டுகள் விரும்பின நேரிதாகிய ஒழுங்கினையுடைய வெள்ளிய பல்லினையும் மணம் நாறுகின்ற நறியதாகிய நுதலினையும் மழை விரும்பின கரிதாகிய மயிரினையும் ஆகத்திடத்தே பெருத்த முலையினையும் அகன்ற வல்குலினையும் சிலவாகிய நிரைத்த வாலிய வளையினையுமுடைய செய்யோளேயென்று பலபலவாகிய புனைந்துரைகளாற் பண்டையிற் காட்டிற் கொண்டாடி இங்ஙனம் இனிய மொழிகளைக்கூறி என்னை வருத்தத்தே செலுத்துகின்ற தன்மை எம்மிடத்து வெறுப்பாகுதலை இப் பொழுதறிந்தேன்; எ - று.

மருள், உவமவுருபு.

"நிகழ்தகை மருங்கின் வேட்கை மிகுதியிற், புகழ்தகை வரையார் கற்பினுள்ளே."(க)என்பதனால், போக்கின்கண் தலைவன் தலைவியைப் புகழ்ந்து கூறினான்.

இது தரவு.

கo (உ) பொருளல்லாற் பொருளுமுண் டோவென யாழநின்
(ந)மருளிகொண் மடநோக்க மயக்கப்பட் டயர்த்தாயோ

எ - து: மயக்கங்கொண்ட அறியாமையையுடைய நின்னறிவு பொருளல்லது நன்குமதிக்கும் பொருளும் வேறுண்டோவென்று நின்னை மயக்கப் பட்டு அன்பை மறந்தாயோ; எ - று.

---

க. தோல். பொருளியல். சூ. ௩௪.

உ. (அ) "பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும், பொருளல்ல தில்லை பொருள்" குறள். எடுக. (ஆ) "வென்றி யாக்கலு மேதக வாக் கலுங், குன்றினார்களைக் குன்றென வாக்கலு, மன்றி யுங்கல்வி யோடழ காக்கலும், பொன்றுஞ் சாகத்தி னும்பொருள் செய்யுமே" சீவக. ககஉஉ. (இ) "அளப்பரும் விஞ்சையே யன்றி மேன்மையு, முளப்படு தன்மையு முயர்ந்த சீர்த்தியுங், கொளப்படு கொற்றமும் பிறவுங் கூட்டலால், வளத்தினிற் சிறந்தது மற்றொன் றில்லையே" கந்த............................(ஈ) "பூரியர் தமைவேந் தாக்கும் புவி புரப் பிக்குந் துய்க்குஞ், சீரிய வுண்டி சேர்க்குந் தேவர்த முலகம் போக்குங், காரிய மனைத்துங் கூட்டுங் கருதலர் தம்மை வாட்டுங், கூரிய திதன்மே லில்லை கொழும் பொனீர் கொண்மி னென்றார்." உத்தர. அசுவமேத. கசுங. என்பவைகளும் (உ) இந்நூல். பக். ௩ங: க. குறிப்பும். (ஊ) இந்நூல் எஉ: க. குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

ந. "மருளி நெஞ்ச மயங்கலுங் காண்பல்" கலி. கஉஉ: கரு. "மருளி யாயம்" "மருளி மாவும் வெருளிப் பிணையும்" பெருங். (க) ௩௪: கஎo; (உ) கரு: ௩க.

(க) மருள், மருளியெனப் பகுதிப்பொருள் விகுதியாய் நின்றது.

யாழ, அசை.

கஉ காதலா ரெவன்செய்ப பொருளில்லா தார்க்கென
வேதிலார் கூறுஞ்சொற் பொருளாக மதித்தாயோ

எ - து: கையிற்பொருளில்லாதவர்கட்குத் தம்மாற்காதலிக்கப் பட்டார் என்ன காரியத்தைச் செய்வரென்று உறவுபோல இருந்து உறுதியல்லன கூறுவார் கூறும் மொழிகளை நினக்குப் பொருளாக மதித்தாயோ; எ - று.

கச (உ)செம்மையி னிகந்தொரீஇப் (ங) பொருள் செய்வார்க் (ச) கப்
ளிம்மையு மறுமையும் பகையாவ தறியாயோ [பொரு

---

க. (அ) மருளியென்பதில், 'இ' பகுதிப் பொருள் விகுதியென்பதே இவர் கருத்தென்பதை, சீவக. உசஎ-உரையில் இவர் எழுதியிருப்பதும் வற்புறுத்தும். (ஆ) "இரவில் வந்து மீளியுரைத்தி"(கோவை.கஙக.) என்பதன் விசேடவுரையில் 'மருடல் வெருடலென்பன, மருளி வெருளியென நின்றாற்போல மீடலென்பது மீளியென நின்றது' என்பர்; பேராசிரியர்.

உ. (அ) "செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி, யெச்சத்திற் கேமாப் புடைத்து" (ஆ) "நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை, யன்றே யொழிய விடல்"(இ)"அழக் கொண்ட வெல்லா மழப்போமிழப்பினும், பிற்பயக்கு நற்பா லவை" (ஈ) "சலத்தாற் பொருள் செய்தே மார்த்தல் பசுமட், கலத்துணீர் பெய்திரீஇ யற்று" (உ) "அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம், புல்லார் புரள விடல்" குறள். கஙஉ, கஙங, சுருக, சுசுO, எருரு. என்பவைகளும் (ஊ) "பொன்மணி தரளந் தேனுமற் றுள்ள பொருளுடை யோனைவஞ் சித்துப், பன்மறை பயிலு மந்தணர்க் கீந்தா லீந்தவன் பரகதி யடையா, னன்ம......யுடையோன் றனைப்பலன் சாரு நரகம்வஞ் சித்தவற் கெய்துந், தன்மநன் னெறியார்ச் சிதப்பொரு ளீந்தாற் சார்குவ னிகபர மிரண்டும்" மச்ச. பிரயாகையிற். கO. (எ) "படுமுன் பொருட்குப் புதுவெள்ளம் பழையநீரை யுடைப்பது போற், கெடுதிபயக்குங் குடிகெடுக்குங் கெடாதபெருந்துன் பமும்விளைக்கும், வடுமிக் கியன்ற பழியென்றும் வளர்க்கு மதனுன் மறுமையினு, நடுவு நிலையிற்றிரிந்தொருவர் நன்பொன்கவரக் கருத்தெண்ணேல்"விநாயக அரசியற். ஙங. என்பவையும். (ஏ) சத்தியகோடன் சரிதமும் இங்கே அறியத்தக்கன. (ஐ) "செம்மையி னிகந்தொரீஇ" என்பதனோடு 'நடுவிகந் தொரீஇ' என்பதை. (கலி. அ: க.) ஒப்புநோக்குக.

ங. பொருள் செய்தல்: இந்நூற் பக்கம், ஙஅ. க. குறிப்புப்பார்க்க.

ச. "அப்பொரு, ளிம்மையு மறுமையும் பகையாவ தறியாயோ" என்பதில் ஓகாரம் ஈற்றசையாய் வந்ததென்பர், நேமி. உரை. நேமி. சொல். ருரு.

எ - து: பொருள்தேடும் * முறைமையினின்று நீங்கிப் பொருள் தேடுவார்க்கு அப்பொருள் தான் † அவரைவிட்டு நீங்கி இம்மையிலும் மறுமையிலும் ‡ பகையாந்தன்மையை அறியாயோ; எ - று.

||இவளிறந்து படப்போய்ப் பொருடேடலிற் செம்மையினிகந்தென்றாள்.

இவை மூன்றும், தாழிசை.

கசு அதனால்

எம்மையும் பொருளாக மதித்தீத்தை நம்முணுங்
(க) கவவுக்கை விடப்பெறும் பொருட்டிறத்
தவவுக்கை விடுத லதுமனும் பொருளே.

எ - து: பொருள் இத்தன்மைத்தாகையினாலே அப்பொருளே யன்றி எம்மையும் பொருளாக மதிப்பாய்; நம்மூண் முயங்கின முயக்கத்தைக் கைவிட்டுப் போகையினாலே பெறுகின்ற பொருட் கூற்றிடத்து அவாவைக் கைவிடுவாயாக, அதுவே நிலைபெறும்பொருள்; எ - று.

மதித்தீத்தை, மதியென்னும் முன்னிலையேவற் றிரிசொல்.

அவவெனக் (உ) குறியதன் இறுதிச்சினை கெட்டு நின்றது. கைவிடுதல் "இற்றெனக்கிளத்தல்" போல (ந) நின்றது.

அதனால், தனிச்சொல்; எஞ்சியது, சுரிதகம்

இதனால், ÷ தலைவற்கிழிவு பிறந்தது. தோழிக்குச் சூழ்ச்சி பிறந்தது.

இஃது ஒன்பதடித்தரவும் சிறுமைக்கு எல்லைகூறிய ஈரடித்தாழிசையும் பொருள்பெற்ற தனிச்சொல்லும் மூன்றடிச் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (கஙு)

(கரு) (ச) அரிமா னிடித்தன்ன வஞ்சிலை வல்விற்
புரிநாண் புடையிற் புறங்காண்ட லல்லா
லிணைப்படைத் தானை யரசோ டுறினுங்
கணைத்தொடை நாணுங் கடுந்துடி யார்ப்பி
ரு னெருத்து வலிய வெறுழ்நோக் கிரலை
மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி
யுருத்த கடுஞ்சினத் தோடா மறவர்
பொருள்கொண்டு புண்செயி னல்லதை யன்போ
டருள்புற மாறிய வாரிடை யத்தம்;

க. "கழுமிய காதலொடு கவவுக் கைவிடாது" பெருங். (ந) உங: கo.
உ. தொல். உயிர்மயங்கு. சூ. நஉ. உரைபார்க்க.
ந. தொல். கிளவி. சூ. கக.
ச. கலிப்பாவின் கண் ஆசிரியச் சுரிதகத்து ஈற்றயலடி நாற்சீராகியும் வருமென்பதற்கு இச்செய்யுள்(தொல்.செய். சூ. கசு.'முச்சீர்'இளம்).மேற்.

(பிரதிபேதம்) * முறைமையினீங்கி, † தம்மைவிட்டுநீங்கி, ‡ பகையாவதை, || இவளிறந்து படப்பொருடேடலிற், ÷ தலைவற்கிழிவும் தோழிக்குச் சூழ்ச்சியும் பிறந்தன.

கo புரிபுநீ புறமாறிப் போக்கெண்ணிப் புதிதீண்டிப்
பெருகிய செல்வத்தாற் பெயர்த்தர லொல்வதோ
செயலையந் தளிரேய்க்கு மெழினல மந்நலம்
பசலையா லுணப்பட்டுப் பண்டைநீ ரொழிந்தக்கால்;

கசு பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ
மையற்ற படிவத்தான் மறுத்தர லொல்வதோ
தீங்கதிர் மதியேய்க்குந் திருமுக மம்முகம்
பாம்புசேர் மதிபோலப் பசப்பூர்ந்து தொலைந்தக்கால்;

கஅ பின்னிய தொடர்நீவிப் பிறர்நாட்டுப் படர்ந்துநீ
மன்னிய புணர்ச்சியான் மறுத்தர லொல்வதோ
புரியவிழ் நறுநீலம் புரையுண்கண் கலுழ்பானாத்
திரியுமிழ் நெய்யேபோற் றெண்பனி யுறைக்குங்கால்;

எனவாங்கு;

உங அனையவை போற்றி நினைஇயன நாடிக்காண்
வளமையோ வைகலுஞ் செயலாகு மற்றிவண்
முளைநிரை முறுவலா ராயத்து ளெடுத்தாய்ந்த
விளைமையுந் தருவதோ விறந்த பின்னே.

இது பிரிவுணர்த்திய தலைமகற்குத், தோழி, தலைமகளது ஆற்றுமையும் இளமைய தருமையுங் கூறி, நீர் பிரிந்து செய்யக்கருதியவை எக்காலத்துஞ் செய்யலாம். பொருளால், கழிந்த இளமை மீட்க லாமோ வெனக் கூறியது.

இதன் பொருள்.

(க) அரிமா னிடித்தன்ன வஞ் (உ) சிலை வல்விற்
புரி (ங) நாண் புடையிற் புறங்காண்ட லல்லா

க. (அ) "தேயத்தின் றலைவன் மைந்தன் சிலையைநா ணெறிந்தான் றீய,மாயத்தின்வினையை வல்லார் நிலையென்னை முடிவின்மாரி,யாயத்தினிடியி தெண்றே யஞ்சின வுலகம் யானை, சீயத்தின் முழக்கங் கேட்டல் போன்றனர் செறுநரெல்லாம்." கம்ப. முதற்போர். கசஉ.
(ஆ) "அரிமானிடித் தன்ன வஞ்சிலை" என்பது அன்னவென்பது உவம வுருபாய் வருதற்கு மேற்கோள். நன். பொது. சூ. கசு. மயிலை.

உ. (அ) "சிலைவிற் கானவன்" குறுந். ஙஅரு. (ஆ) "சிலைவிற்பகழி" ஐங்குறு. ஙசுங; (இ) "சிலைமாண் வல்வில்" அகம். சுகூ: கரு; (ஈ) "வணங்குசிலைச் சாபம் வார்கணை கொளீஇ" பெருங். (ங) உo: அ; என்பவையும். (உ) "சிலைவிற் சேவகஞ் செய்து" திருவிளை. சுந்தரப் பேரம்பு. சச. (ஊ) "கண்ணுடை நுதலவன் சிலைவிலிஞ்ஞென்மை நூறிய புதல்வனே" கம்ப. பள்ளியடை ருo. என்பவையும் பார்க்க.

ங. (அ) "ஒருகார்முக மிருகால்வளை வுறவேகுனித் துகுதே, னருகா

(க) * விணைப்படைத் தானை யரசோ டுறினுங்
† கணைத்தொடை நாணுங் கடுந்துடி யார்ப்பி
௫ னெருத்து வலிய வெறுழ்நோக் (உ) கிரலை
(ங) மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி
யுருத்த கடுஞ்சினத் தோடா மறவர்

---

தொழு கியதன்மையி னவிர்நாணொலி யெடுப்பத், திருகாநெடு வரையானவுந் தெருமந்தன வவுண, ரிருகாதையு நனிபொத்தின ரேங்குற்றன ரிரிவார்." கந்த. தாரக. சுகூ. (ஆ) "கரங்கொள் வில்லொலி கேட்டலும் பாரிடக் கணங்கண், மரங்கள் சிந்தினர் சிகரிகள் சிந்தினர் மலையு, முரங்கள் சிந்தினர் வீரமுஞ் சிந்தினருடலுஞ், சிரங்களானவும் பனித்திட வோடினர் சிதறி." (இ) "வஞ்சன் வார்சிலை நாணொலி கேட்டலு மறத்தால், விஞ்சு பூதமீ ராயிர வெள்ளமும் வெருவி, யெஞ்சியேயவ ணின்றிடா திரிந்துள வென்று, லஞ்சுபூதங்களஞ்சுவதற் புதத்தனவோ." கந்த. இரண்டாநாட். கஉஅ, கஙௗ. (ஈ) "தாங்கு கின்றதன் முழ்சிலை தோள்கொடே, வாங்கி நாணியின் வல்லிசை கோடலும், வீங்கு மொய்ம்பின் விறல் கெழு தானவ, ரேங்கியாரு மிரிந்தனர் போயினர்." கந்த. இரணியன் யுத்த. ககஉ. (உ) "அவ்வழி யிராவண னமர ரஞ்சத்தன், வெவ்விழி நெருப்புக வில்லினுணினைச், செவ்வழிக் கோதையிற் றெறிப்பச் சிந்தின, வெவ்வழி மருங்கினு மிரிந்தவானரம்" (ஊ) "உருமிடித் துழியுலைந் தொளிக்கு நாகமொத், திரியலுற் றனசில விறந்த வாற்சில, வெருவலுற்றன சில விம்மலுற்றன, பொருகளத் துயிரொடும் புரண்டு போஞ்சில" (எ) "பொரக்கரு நிறநெடு விசும்பு புண்பட, விரக்கமி லிராவண னெறிந்த நாணினுற், குரக்கின முற்றதென் கூறிற் றன்குலத், தரக்கரு மனையதோ ரச்ச மெய்தினர்." கம்ப. முதற்போர். கஉங-கஉ௫. (ஏ) "நாண்டொழி லோசைவீசிச் செவிதொறு நடத்தலோடு, மாண்டொழி லுடனே கையி னடுக்கிய மரனுங் கல்லு, மீண்டன மறிந்து சோர விழுந்தன விழுந்த மெய்யே, மாண்டன மென்றேயுன்னி யிரிந்தது குரங்கின்மாலை." கம்ப. நிகும்பலை. அஎ.

க. ஆரமரோட்ட லென்னுந்துறை அகத்தும் வந்ததற்கு "இணைப் படைத்.........மறவர்" என்பது மேற்கோள். தொல். புறத். சூ. ௫. நச்.

உ. "கலையிரு மருப்பிற் கோடிக் காதளவோடுந் தாடிச், சிலையிருந் தடக்கை வேடத் திருவுருக்கொண்டு தோன்றி" திருவிளை. மாபாதகந் தீர்த்த உஉ. "தகர்மருப்பினிற் றிரிந்துவீழ் தாடிவில்வேடர்" காசி. கடோற்காதித்தன். கசு.

ங. அன்னபிறவு மென்பதனாற் கொள்ளப்படுவனவற்றுள் இன் உவமச்

(பிரதிபேதம்) * முனைப்படை, † கனைத்தொடை.

(க) பொருள் கொண்டு புண்செயி னல்லதை யன்போ
டருள்புற மாறிய வாரிடை யத்தம்

எ - து: வந்து கூடுதலையுடைத்தாகிய படையினையுடைய படையோடே அரசர்கள் வந்து போர் செய்யினும் அழகினையுடைய சிலைமரத்தாற் செய்த வலிய வில்லினது முறுக்குதலையுடைய நாணிலெழுந்த, சிங்கம் இடித்தாற்போன்ற சிறுநாணொலியாலே அவ்வரசரை முதுகுகாண்டலன்றி அம்பை வில்லிலே தொடுத்தலை நாணும், கடிய துடியினது ஆரவாரத்தினையும், வலியினை யுடைத்தாகிய பார்வையினையுடைய கழுத்துவலிய கலையினது கொம்புபோலே நேர்போகாமற் றிருகி முறுக்குண்டு தாழ்ந்த தாடியினையும், வெவ்விதான கடிய சினத்தினையுமுடைய கெடாத மறவர், வழி போவாருடைய பொருளைப் பறித்துக்கொண்டு அவர்க்குப் புண்ணைக் கொடுத்து விடுதலன்றி, அன்போடே அருளும் அவ்விடத்தினின்றுங் கைவிட்டுப்போன அரிய இடத்தையுடைய காட்டிடத்தே; எ - று.

நாணும் மறவரென்க.

இது தரவு.

அன்றியென்னும் வினையெச்ச வினைக்குறிப்பு அல்லதையெனவினைக் குறிப்பு முற்றாய்த் திரிந்தது. (உ) அருள் அன்பிற்குக் காரணமாய் மனத்து நிகழ்வது.

கo புரிபுநீ புறமாறிப் போக்கெண்ணிப் புதிதீண்டிப்
பெருகிய செல்வத்தாற் பெயர்த்தர லொல்வதோ
(ந) செயலையந் தளிரேய்க்கு மெழினல மந்நலம்
* பயலையா லுணப்பட்டுப் பண்டைநீ ரொழிந்தக்கால்

எ - து: நீ புறப்பொருளை விரும்பி அகப்பொருளைக் கைவிட்டு அதிலே போனதெண்ணி இவளுடைய அழகையுடைய நிறம் அசோகினது அழகையுடைய தளிரையொக்கும் அத்தன்மைத்தாகிய நிறம் பசலைநிறத்தாலே கைக்கொள்ளப்பட்டுப் பண்டைநீர்மைபோனக்கால் நீ போக்கெண்ணுகையினாலே முன்பு உள்ளதன்றிப் புதிதாகத் திரண்டு பெருத்த செல்வத்தினாலே மீட்டல் பொருந்துமோ; எ - று.

நீ புறம் புரிபு மாறியென்க.

---

சொல்லாய் வந்ததற்கு, "மருப்பிற் றிரிந்து மறிந்து வீழ்தாடி" என்பது மேற்கோள். தொல். உவம. சூ. கக. இளம்.

க. "பொருள் கொண்டு புண்செயி னல்லதை யார்க்கு, மருளிலெயினர்" சிலப். கஉ. [குறிப்பும் பார்க்க.

உ. 'அருளுடைமை' என்பதன் பொருளும் இந்நூற் பக்கம். உஅ: ந.

ந. "செயலையந் தளிரேய்க்கு மெழினலம்" என்பது தத்தமரபிற் றோன்றுமன் பொருளே யென்பதற்கும் (தொல். உவம. சூ. கஎ. இளம்.) பொதுச் சூத்திரத்திற்கூறிய வாய்பாடு உருவுவமத்தின்கண் அருகி வருதற்கும் (தொல். உவம. சூ. கசு. பே.) மேற்கோள்.

(பிரதிபேதம்) * பசலையால்.

செல்வமென்றது துறவறத்திற் சேறற்குக் கற்ற கல்வியை. அது (க) வானப்பிரத்தம்.

"உண்டற் குரிய வல்லாப் பொருளை, யுண்டன போலக் கூறலு மரபே." (உ) என்பதனான் உண்ணப்பட்டென்றார். இதனுட் சொல்வழுவன்றி, "செய்யாமரபிற் றொழிற்படுத் தடக்கலும்" (ங) அமைத்தார்.

கச (ச) பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ
மையற்ற படிவத்தான் மறுத்தர லொல்வதோ
தீங்கதிர் மதியேய்க்குந் திருமுக மம்முகம்
பாம்புசேர் மதிபோலப் பசப்பூர்ந்து தொலைந்தக்கால்

எ - து: இவளுடைய திருமுகம் இனிய கிரணங்களையுடைய திங்களை யொக்கும்; அந்த முகம் பாம்பு சேர்ந்த திங்களைப்போலப் பசப்புப் பரந்து கெட்டக்கால் மெய்ப்பொருளுணர்ந்தோரை நினைந்து நீசென்று அவரிடத்துக் கற்ற பொய்யற்ற நூற்கேள்விகளாலே முன்பு மனத்திற் றங்கிய மாசற்ற விரதங்களாலே மீட்டல்பொருந்துமோ; எ - று.

---

க. வானப்பிரத்தமென்பது: மனைவியுடனாவது தனித்தாவது தவஞ் செய்துகொண்டு காட்டில் இருத்தல்.

உ. (தொல். பொருளியல், சூ. கஅ. 'உண்டற்குரிய' இளம்; சூ. கக. நச்.) இதனுரையில் உண்டற் றொழிலுக் குரியவல்லாத பொருளை உண்டனவாகக்கூறலு மரபென்பதற்கு, "பசலையா லுணப்பட்டுப் பண்டைநீ ரொழிந்தக்கால்" என்பது மேற்கோள்.

ங. தொல். பொருளி. சூ. உ.

ச. "பொய்யற்ற கேள்வியாற்..............லொல்வதோ" என்பதனை (அ) அந்தணர் முதலிய மூவரும் இல்லறம் நிகழ்த்துகின்ற காலத்தே மேல்வரும் துறவற நிகழ்த்துதற்காக அவ்வறத்தைக் கூறு நூல்களை யுங்கற்று அதன்பின்னர்த் தத்துவங்களை உணர்ந்து மெய்யுணர வேண்டுதலின் அவர்க்கு ஓதற்பிரிவு சிறந்ததென்று கூறி அதற்கும் (தொல். அகத். சூ. உசு.), (ஆ)ஓதற்குப் பிரிவலெனக் கேட்ட தோழி கூறியதற்கும் (தொல். அகத். சூ. சச.), (இ) "அந்தரத்......வழிகெட வொழுகுதற்கும் (இது முன்புபோலக் குற்றஞ்சான்ற பொருளை வழுவமைத்துக்கொள்ளாது குற்றமென்றே கருதிக் கடிதலாம். மை யற்ற படிவமெனத் தலைவன் கூறியதனைத் தோழிகூறியவாறுகாண்க) (தொல். கற்பியல். சூ. ரு.) மேற்கோள்காட்டினர்; நச்.
(ஈ) "பொய்யில் கேள்விப் புலமையினோர்" (உ) "உண்ட பேதைமை மயக்கற வேறுபட் டொருவங், கொண்டு மெய்யுணர் பவன்கழல் கூடிய தொப்பப், பண்டை வண்ணமாய் நின்றனள்" கம்பர். பாயிரம். சு. அகலிகை. எக.

13

இல்லறத்தே நின்று முன்னுள்ள மாசறுத்து வானப்பிரத்தனுமென்றது. இஃது "அந்தரத் தெழுதிய வெழுத்தின் மான, வந்த குற்றம் வழிகெட வொழுகல்" (க) ஆம்.

பாம்பு சேர்விடமும் பாடம்.

கஅ பின்னிய தொடர்நீவிப் பிறர்நாட்டுப் படர்ந்துநீ
மன்னிய புணர்ச்சியான் மறுத்தர லொல்வதோ
புரியவிழ் நறுநீலம் புரையுண் (உ) கண் கலுழ்பானுத்
திரியுமிழ் நெய்யேபோற் றெண்பனி யுறைக்குங்கால்

எ - து: இவளுடைய முறுக்கு அவிழ்ந்த நறிய நீலத்தையொக்கும் மையுண்கண்கள் அமையாவாய் அழுது, எரிகின்ற திரிகான்ற நெய்போலச் சுடும்படி தெள்ளிதாகிய நீரைத்துளிக்குங்கால் வேற்று நாட்டிடத்தே போய் நின்னைப் பிணித்த ஆசையாகிய சங்கிலியை அறுத்து நிலைபெற்ற தத்துவப் பொருள்களைக் கூடிய கூட்டத்தாலே மீட்டல் பொருந்துமோ; எ - று.

இது (ரு) சன்னியாசம் வேண்டுமெனக் கொண்டமை கூறிற்று.

இது தலைவன் ஓதற்பிரிவாற் பெறும்பயன் கூறியவற்றை உணர்ந்த தோழி, அவற்றைக்கூறி அவை எக்காலத்துஞ் செய்யலாம்; இளமைமீட்டல் இவற்றால் ஒல்லாதென்றாள்.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு, * ஆங்கசை.

இது தனிச்சொல்.

உரு அனையவை போற்றி † நினைஇயன நாடிக்காண்
வளமையோ வைகலுஞ் செயலாகு மற்றிவண்
(ச) முளைநிரை முறுவலா ராயத்து ளெடுத்தாய்ந்த
(ரு) ‡ விளைமையுந் தருவதோ விறந்த பின்னே

---

க. தொல். கற்பி. சூ. ரு.

உ. திரிக்குழாய் உகுக்கும் நெய் கண்ணீர்த் துளிக்குவமையாதல். "கனல் சேர்ந்த திரிநெய்போன், மைச்சென்ற மலர்நீல வாட்டடங்கண் புனலுறைப்ப" திருவானைக்காப். சம்புமுனி தவம்புரி படலம். ருரு. "திரிவீழ்நெய்போற், செறிந்துகு கண்ணீர் மார்பிற் செறிதுகள் கழுவாநிற்ப" பூவாளூர்ப். இரதியருச்சனை. ருரு. என்பவற்றாலும் அறியலாகும். திரிக்குழாய் நெய்யுகுத்தல்: "சொரிசுரை கவரு நெய்வழி புராலிற், பாண்டில் விளக்குப் பரூஉச்சுட ரழல"பதிற். எஎ: ரு-சு. என்புழியும் கூறப்பெற்றுள்ளது.

ரு. சன்னியாசமாவது: தன்பொருளினிடத்தும் மனைவிமக்கண் முதலிய சுற்றத்தினிடத்தும் தன்னிடத்துமுள்ள ஆசையை முற்றத்துறத்தல்.

ச. "முளைநிரை முறுவ லொருத்தியொடு" ஐங்குறு. ருசுகூ.

ரு. பின்னென்பது வினையெச்சமாக வருங்கால் இறந்த காலச்சொற் பற்றி

(பிரதிபேதம்) * அசை, † நினைஇயவை, ‡ இளமையும்.

எ - து: * என்று யான்சொன்ன அணையவை செய்த நன்மைகளை நினைத்து அவை கெடாமற்பாதுகாத்துப் பின்னர் நீ ஆராய்ந்து தேடுகின்ற வற்றை ஆராய்ந்துபார். அக்கல்வியாலுண்டாம் வளப்பமோ இவ்விடத்தே யிருந்து நாடோறுஞ் செய்துகொள்ளுஞ் செயலாயிருக்கும்; அக்கல்வி, முளையையொத்த நிரையினையுடைய முறுவலையுடையாருடைய திரளுள்ளே உயர்த்தாராய்ந்த இவளுடைய (க) இளமை போனபின்பு அவ்விளமையுந் தருவதொன்றோ? எ - று.

அணையவையென்றது, நிறத்தையும் முகத்தையும் கண்ணையும்.

வளமையோவென்னும் ஓகாரம் இழிவுசிறப்பு; இளமையுமென்னும் உம்மை சிறப்பு; தருவதோவென்னும் ஓகாரம் எதிர்மறை.

"ஓதலுந் தூது முயர்ந்தோர் மேன" (உ) இதனு னுணர்க.

இது சுரிதகம்.

இதனால், தோழிக்கு இழிவுதோன்றிற்று; தலைவற்கு அசைவு பிறந்தது.

இஃது ஒன்பதடித் தரவும் நான்கடித் தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (கச)

(கரு) (ங) பாடின்றிப் பசந்தகண் பைதல பனிமல்க
வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர
வாடெழி லழிவஞ்சா தகன்றவர் திறத்தினி
நாடுங்கா னினைப்பதொன் றுடையேன்மன் னதுவுந்தான்;

---

வருதற்கு "இளமையுந் தருவதோ விறந்த பின்னே" என்பது மேற்கோள்; தொல். வினை. சூ. ௩௧. கல்; சூ. ௩௨. நச்.

க. (அ) இளமை யென்பது குழவிப் பருவமொழிந்த தாகிய யௌவன மென்னும் பொருளில் வந்ததென்பதற்கு நச். 'இளமையுந் தருவதோ' என்பதை (சீவக. கசரு) மேற்கோள் காட்டியிருப்பதும் (ஆ) இளமை யாவது காமச்செவ்வி நிகழ்வதொருகாலம். (தொல். கிளவி. ௫எ.) என விளக்கியிருப்பதும், ஈண்டு அறிதற்பாலன. (இ) "இறந்தபின் இளமை வாராது" என்பது தொல். வினை. சூ. ௩௫. சே.

உ. தொல். அகத். சூ. உசு.

௩. இச்செய்யுள், நான்கடித்தரவும் நான்கடியான் மூன்றுதாழிசையும் தனிச்சொல்லும் ஐந்தடிச் சுரிதகமும் ஒத்தாழிசைக் கலிப்பாவில் வந்ததற்கும் (தொல். செய். சூ. க௩க. 'போக்கியல்' இளம்; சூ. க௩எ. பே. நச்.) தலைவியாற்றாமைகண்டுழிப் பிரிந்ததலைவன் மீண்டு வந்தானெனத் தோழி கூறியதற்கும். (தொல். அகத். சூ. சரு. நச்.) மேற்கோள்.

(பிரதிபேதம்) * அணையவை.

௫ தொன்னலந் தொலைபீங்கியாந் துயருழப்பத் துறந்துள்ளார்
துன்னிநங் காதலர் துறந்தேகு மாரிடைக்
கன்மிசை யுருப்பறக் கனைதுளி சிதறென
வின்னிசை யெழிலியை யிரப்பவு மியைவதோ ;

௬ புனையிழா யீங்குநாம் புலம்புறப் பொருள்வெஃகி
முனையென்னார் காதலர் முன்னிய வாரிடைச்
சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ ;

௭ ஒளியிழா யீங்குநாந் துயர்கூரப் பொருள்வயி
னளியொரீஇக் காதல ரகன்றேகு மாரிடை
முளிமுதன் மூழ்கிய வெம்மைதீர்ந் துறுகென
வளிதருஞ் செல்வனை வாழ்த்தவு மியைவதோ ;

எனவாங்கு;

௮ செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வார்மாட் டினையன
தெய்வத்துத் திறனோக்கித் தெருமர றேமொழி
வறனோடின் வையகத்து வான்றருங் கற்பினு
ணிறனோடிப் பசப்பூர்த லுண்டென
வறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே.

இது தலைமகன் பொருள்வயிற்பிரிந்த இடத்து அவன் போகிய காட்டது கடுமை நினைந்து ஆற்றளாகிய தலைமகள் அவர் பொருட்டாக நாம் இவ்வகைப்பட்ட தெய்வங்களைப் பரவுதல் நங்கற்புக்கு இயைவதோ வென, கேட்ட தோழி அவ்வாற்றனே மீண்டனர் நீ கவலவேண்டா வெனக் கூறியது.

இதன் பொருள்.

பாடின்றிப் பசந்தகண் பைதல பனிமல்க
(௧) வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர
வாடெழி * லழிவஞ்சா (௨) தகன்றவர் திறத்தினி
நாடுங்கா னினைப்பதொன் றுடையேன்மன் னதுவுந்தான்

௧. (அ) செய்புவென்னும் வினையெச்சம் நிகழ்காலங் குறித்து வருதற்கு 'வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர' என்பது மேற்கோள் தொல். வினை. சூ. ௩௩. தெய்; ௩௧. நச்; இ - வி. சூ. ௨௪௬.
(ஆ) 'வாடுபுவனப்போடி' கலி. ௩௨: ௧௪.

௨. காலீற்று வினையெச்சம் நிகழ்வும் எதிர்வும் பற்றிவருதற்கு 'அகன்றவர்

(பிரதிபேதம்) * அழிபஞ்சாதகன்றவர்.

எ - து: துயிலின்றிப் பசந்த கண்கள் வருத்தத்தை யுடையவாய் நீர்மல்க நிறம்வாடி அழகு கெடுகையினாலே வளைகள் வணங்கின முன் கையினின்றுங் கழல வெற்றியையுடைய அழகழிவுக்கு அஞ்சாதேபிரிந்தவர் கூற்றில் இப்பொழுது செய்வதாக நினைப்பதொரு காரியமுடையேன்; அத்தாற் பெற்றதென்? அக்காரியந்தானும் ஆராயுங்கால் நங்கற்பிற்குப் பொருந்துவதன்றாய் இராநின்றது; எ - று.

இது தரவு.

ரு (க) தொன்னலந் தொலைபீங்கியாந் துயருழப்பத் துறந்துள்ளார்
துன்னிநங் காதலர் துறந்தேகு மாரிடைக்
கன்மிசை *யுருப்பறக் கனைதுளி சிதறென
வின்னிசை (உ) யெழிலியை யிரப்பவு மியைவதோ

எ - து: நங்காதலர் யாம் இயற்கை நலமுங் கெட்டு இவ்விடத்தே, யிருந்து வருத்தத்திலே அழுந்தும்படி நம்மைக் கைவிட்டுப் பின்னர் நினையாராய்ப் பொருண்மேல் அன்பு நெருங்கி நம்மேல் அன்பைத்துறந்துபோம் அரியவழியிடத்திற் கல்லின்மேல் உண்டான வெப்பம் நீங்கும்படி செறிந்த துளியைச் சிதறுவாயாக வென்று பராய் இனிய ஓசையை யுடைய (ங) மேகத்திற்கு உரிய ஞாயிற்றை இரத்தல்செய்யவும் † நங்கற்பிற்கு இயைவ தொருகாரியமோ? அல்லவே; எ - று.

---

திறத்தினி நாடுங்கால்' என்பது மேற்கோள். தோல். வினை. சூ. ஙஉ. சே; நச்; தோல். எச்ச. சூ. கக. நச்.

க. "தொன்னலந்............காமுறலியைவதோ" என்பதனோடு "ஞாயிறு காயாது மரநிழற் பட்டு, மலைமுதற் சிறுநெறி மணன்மிகத் தாஅய்த், தண்மழை தலைய லாகுக நந்நீத்துச், சுடர்வாய் நெடுவேற் காளையொடு, மடமாவரிவை போகியசுரனே" நற்றிணை. ஙஎஅ. "சூன்முதிர் கொண்மூ மின்னுபு பொழியக், கானங் கடுமை நீங்குக, மானுண் கண்ணிபோகிய நெறியே" தமிழ்நெறி. என்பவை ஒருவாறு ஒப்பு நோக்கற் பாலன. 'தொன்னலம்' கலி. உஎ: கச; எஎ: கரு; கOO: உO; கஉச: கக.

உ. எழிலி கனலி வளிதருசெல்வ னென்பன "வீறுமழை வெய்யசுடர் வீசுவளி யென்றிவை தமக்குதவுகைம், மாறு முளதோ" "பொழி யருள் வலக்கணின்று புரவியே முடையோன் காற்றுச், சுழிபுனலு மிழுமேகந் தோன்றின" எனச் சேர்த்துக் கூறப்பெறுதல் காண்க.

ங. (அ) "வெய்ய வன்கணுள தாயவன் மறைந்திட வெழு மேகமே" மோகவதைப்பரணி. (ஆ) "பரிதி யுலகமெல்லாம், விருப்பவிர் மேகம் விளைப்பதன்றோ" தணிகை. களவு சகஉ. (இ) "தினஞ் செய்வோன்..............பைங்கூழ்கள், கரிந்தன தளிர்ப்ப வெள்ளி வீழன்ன கணமழை பொழிவது கடுப்ப" நைடத. அன்னத்தைத். ரு.

(பிரதிபேதம்) * உருப்பிற, † கற்பிற்கு.

௬ (௧) புனையிழா யீங்குநாம் புலம்புறப் பொருள்வெஃகி
முனையென்னார் காதலர் முன்னிய * வாரிடைச்
(௨) சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ

எ - து: புனைந்த பூணினையுடையாய்! காதலர் இவ்விடத்தேயிருந்து நாம் தனிமையுறும்படி பொருளை விரும்பிப் பகைப்புலமென்று கருதாராய்ப்போதற்கு†நினைந்த அரியவழியிடத்தில் மரக்கொம்புகள் வாடும்படியாகச் சிறக்கும் நின் (௩) சினந் தணிவதாகவென்று பரவிச் செறிந்த கதிரையுடைய ஞாயிற்றை நாம்வேண்டிக்கோடலும் நங்கற்பிற்கு இயைவதொரு காரியமோ? அல்லவே; எ - று.

(௪)நாமென்னும் படர்க்கையுளப்பாடு இடவழுவமைதி; தணிந்தீக, வியங்கோட் டிரிசொல்; விகாரமாய் நின்றது.

௰௬. ஒளியிழா யீங்குநாந் துயர்கூரப் பொருள்வயி
னளியொரீஇக் காதல ரகன்றேகு மாரிடை

௧. 'புனையிழாய்.........காமுற லியைவதோ' என்பது தெய்வம் பராயதற்கு மேற்கோள். தொல். அகத். சூ. ௪௫. 'எஞ்சியோர்க்கும்' இளம்.

௨. (அ)"பாலைக்கு, 'சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக், கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ' எனவும், 'வளிதரு செல்வனை வாழ்த்தவு மியைவதோ' எனவும் ஞாயிற்றைத் தெய்வமாக்கி அவனிற்றோன்றியமழையினையுங் காற்றினையும் அத்தெய்வப் பகுதியாக்கிக் கூறுபவாலெனின், எல்லாத்தெய்வத்திற்கும் அந்தணர் அவிகொடுக்குங்கால் அங்கி ஆதித்தன்கட் கொடுக்கு மென்பது வேத முடிபாகலின், ஆதித்தன் எல்லா நிலத்திற்கும் பொதுவென மறுக்க. இவ்வாசிரியர் கருப்பொருளாகிய தெய்வத்தினை முதற்பொருளோடுகூட்டிக்கூறியது தெய்வ வழிபாட்மரபு இதுவே, ஒழிந்தது மரபன்று என்றற்கு. எனவே அவ்வந்நிலத்தின் தெய்வங்களே பாலைக்குந் தெய்வமாயிற்று" என்பது (தொல். அகத். சூ. ௫. நச்.) காணப்படுவது. (ஆ) இப்பகுதியைத் தெய்வ மஞ்சலுக்கு மேற்கோள் காட்டித் தெய்வத்திறம் நோக்கித் தெருமந்ததென்பர் (தொல். மெய்ப். சூ. ௨௪.) பேராசிரியர். இ - வி. நூலாரும் தெய்வ மஞ்சலுக்கு மேற்கோள் காட்டுவர். இ - வி. சூ. ௫௮௦.

௩. சினம் என்றது வெம்மையை, 'காய்சினந் தவிராது கடலூர் பெழுதரு, ஞாயிறு' புறம். ௫௬. என்பதன் உரையைப் பார்க்க, 'கதிர் சினந்தணிந்த கையறுமாலை' என்பது குறுந். ௩௮௭.

௪. யாமென்பது படர்க்கை யுளப்பாடென்றும் நாமென்பது முன்னிலை யுளப்பாடென்றும் தொல்காப்பிய வுரையில் கல்லாடர் கூறுதலால் இங்கு மூலம் உரை விசேடவுரை மூன்றிலு முள்ள நாமென்பது யாமென இருக்க வேண்டியது போலும்.

(பிரதிபேதம்) * ஆற்றிடை, † நினைந்தவழி.

முளிமுதன் மூழ்கிய வெம்மைதீர்ந் துறுகென
வளிதருஞ் செல்வனை வாழ்த்தவு மியைவதோ

எ - து: ஒளியினையுடைத்தாகிய பூணினையுடையாய்! காதலர் இவ்விடத்தேயிருந்து நாம் வருத்தமிகும்படி நம்மிடத்து அளித்தலை நீங்கிப் பொருளிடத்தே வேட்கை சென்று நம்மை அகன்றுபோம் அரிய வழியிடத்து உலர்ந்த சிறுதூறுகளிலே தங்கி வந்த வெப்பமாறி அவன்மேலே சேர்வாயாகவென்று பரவிக் காற்றைத் தருகின்ற ஞாயிற்றினை வாழ்த்துதலைச்செய்யவும் நங் கற்பிற்கு இயைவதொரு காரியமோ? அல்லவே; எ - று.

மழையையுங் காற்றையுந் தருகின்ற (௧) ஞாயிறு பாலைக்குத் தெய்வமாயினமை "மாயோன் மேய" என்னும் (௨) சூத்திரத்தானுணர்க.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு

எ - து: என்றுசொல்லி; எ - று.

ஆங்கு அசை.

இது தனிச்சொல்.

௧அ (௩) செய்பொருட் சிறப்பெண்ணிச் * செல்வார்மாட் டினையன
தெய்வத்துத் திறனோக்கித் தெருமரா றேமொழி
(௪) வறனோடின் வையகத்து (௫) வான்றருங் கற்பினா
ணிறனோடிப் பசப்பூர்த லுண்டெனா
வறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே

---

௧. (அ) பக்கம் ௧௦௨: ௨-ஆம் குறிப்புள் (அ) என்பதன் பின்னுள்ளது இங்கே ஆராய்தற்பாலது. (ஆ) பரிதியஞ் செல்வனும் திகிரியஞ் செல்வியும் பாலைக்குத் தெய்வமென்பர், அடியார்க்கு நல்லார். சிலப். ப. ௧அ.

௨. தொல். அகத். சூ. ௫.

௩. "வினையின் றொகுதி காலத்தியலும்" என்னுஞ் சூத்திரத்து, 'செய்பொருட்சிறப்பெண்ணி' என்பதைமேற்கோள்காட்டி, 'பொருட்கேற்ற காலத்தை விரிக்க' என்பர் நச்சினார்க்கினியர். தொல். எச்ச. சூ. ௧௧.

௪. 'வறனோ டுலகின்' மணி. ௧௫: ௫௩.

௫. (அ) "அருமழை தரல்வேண்டிற் றருகிற்கும் பெருமையளே" கலி. ௩௯: ௬. (ஆ) "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை" குறள். ௫௫. (இ) "பெண்பால் கொழுநன் வழிச்செலவு மிம்மூன்றும், திங்கண்மும் மாரிக்கும் வித்து." திரிகடுகம். ௩அ. (ஈ) "வான்றருங் கற்பின் மனையுறைமகளிரிற், றான்றனி யோங்கிய தகைமைய ளன்றே" மணி. ௧௫: ௭௭ - அ. (உ) "பொழிமழை தரூஉ, மரும்பெறன் மரபிற் பத்தினிப் பெண்டிரும்" மணி. ௧௬: ௪௧ - ௫௦. (ஊ) "மண்டிணி ஞாலத்து மழை

(பிரதிபேதம்) * செல்வர் மாட்டு.

எ - து: தேமொழி! *இத்தன்மையவாகிய மற்றத் தெய்வங்களினுடைய கூறுபாடுகளையும் மனத்தான்வேண்டிக்கொள்ளக்கருதித்தேடுகின்ற(க)பொருளான் உண்டாஞ் சிறப்புக்களை நினைத்துப் போகின்றவரிடத்து மனஞ் சுழலாதே கொள்; வற்கடமான காலத்தாலே வையங்கெட்டதாகில் அவ் வையத்திடத்தே மழையைப் பெய்விக்குங் கற்பினையுடையாளுடைய நிறங் கெட்டுப் பசப்புப் பரத்தலுண்டாமென்று கருதி அவருடைய முயற்சியிடத்தே அறக்கடவுள் விரைந்து சென்று விலக்கிற்று; † இனிவருந்தல்; எ - று.

‡ இது (உ) தங் குலதெய்வமன்றி எல்லார்க்கும் பொதுவாதலிற் கற்பிற்கு இயைவதோவென்றாள். அது "தெய்வமஞ்சல்"(ங)என்பதனான் உணர்க. இது "செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே, || வன்புறை குறித்த தவிர்ச்சி யாகும்" (ச) என்பதனால் தலைவன் செலவழுங்கினமை கூறிற்று.

இது சுரிதகம்.

இதனால், தலைவிக்குப் புணர்வென்னும் உவகையும் தலைவற்கு அசைவும் பிறந்தன.

இது "தரவே தானு நாலடி யிழிபாய்" (ரு) எனச் சிறுமைக்கு எல்லை கூறிய நான்கடித்தரவிற்கு "இடைநிலைப்பாட்டே, தரவகப்பட்ட மரபின தென்ப" (சு) என்றதன்கண் ÷ மரபினதென்ற இலேசால் நான்கடியாகிய

---

வளந் தரூஉம், பெண்டி ராயிற் பிறர்நெஞ்சுபுகாஅர்" (எ)"வான்றருங் கற்பின் மனையறம் பட்டேன்" (ஏ) "ஆங்கவை யொழிகுவை யாயி னுயிழை, யோங்கிரு வானத்து மழையுநின் மொழியது" மணி. உஉ: சரு - கூ, ருங, சுஅ - கூ. (ஐ) "வானம் பொய்யாது.........பத்தினிப் பெண்டிரிருந்த நாடு." சிலப். கரு: கசரு - எ. (ஒ) "பீடு சான் மழை பெய்யெனப் பெய்தலும்,..............பாடுசான்மிகு பத்தினிக் காவதே." வளையாபதி.(ஓ) "அன்னவர் கற்பினின்றன காலமாரியே" கம்ப. நாட்டுப். ருகூ. (ஔ) "கற்பினர்த மெய்யுரையி னிற்கு, மீண்டையுள தெய்வதமு மாமுகிலும்" கந்த. மார்க்கண். சஎ. (௱) "இவளிடம் திங்கண்மும் மாரியும் பெய்திடுமே" வேங்கைக் கோவை. ஙஎசு. (அஅ) "சாரதை யென்பவ, ளினக்கனப்பெய லீட்டுமெய்க் கற்பினுள்" விநாயக. மகோற்கடர். ரு. "மாரிக்கு வித் தன்ன மடமாதர் கற்போங்கி மல்கும்" திருவாப்ப. இடவபுர. ச.

க. பொருள். சிறப்புக்குக் காரண மென்பதை இந்நூற்பக்கம் எஉ: க, ககக: உ. குறிப்புக்களால் அறிக.

உ. "திருவாக்குந் தெய்வதையு மெஞ்ஞான்றுந் தேற்றவழிபாடு, செய்வதே பெண்டிர் சிறப்பு" என்பதும் குல தெய்வ வழிபாட்டைக் குறிப்பதாம்.

ங. தொல்: மெய்ப். சூ. உச.          ச. தொல். கற்பி. சூ. சச.

ரு. தொல். செய். சூ. கஙங.          சு. தொல். செய். சூ. கஙச.

(பிரதிபேதம்) * இத்தன்மையராகிய பிறதெய்வ, † இனிவருந்தலென்று ஆற்றுவித்தாள், ‡ இது குலத்தெய்வ, || வன்பொறை குறித்தறவிர்ச்சி, ÷ மரபினென்றவிலேசால்.

இடைநிலைப்பாட்டும் பெற்றுத் தனிச்சொல்லும் பெற்றுத் "தரவியலொத்தும்" (க) என்ற உம்மையான் ஏறியும் வருமென்றலிற் றரவின் மிக்க சுரிதகமும் பெற்று வந்த ஒத்தாழிசைக்கலி. (கரு)

(கஎ) (உ) படைபண்ணிப் புனையவும் பாமாண்ட பலவணைப்
புடைபெயர்ந் தொடுங்கவும் புறஞ்சேர வுயிர்ப்பவு
முடையதை யெவன்கொலென் றாறளந் தவர்வயி
னடைசெல்லாய் நனியேங்கி நடுங்கற்கா ணறுநுதால்;

ரு தொல்லெழி றொலைபிவ டெருழப்பத் துறந்துநீ
வல்வினை வயக்குதல் வலித்திமன் வலிப்பளவை
நீள்கதி ரவிர்மதி நிறைவுபோ னிலையாது
நாளினு நெகிழ்போடு நலனுட னிலையுமோ ;

கூ ஆற்றனோ யடவிவ ளணிவாட வகன்றுநீ
தோற்றஞ்சா றருகுபொருண் முயறிமன் முயல்வளவை
நாற்றஞ்சா னளிபொய்கை யடைமுதிர் முகையிற்குக்
கூற்றாழ்போற் குறைபடூஉம் வாழ்நாளு நிலையுமோ ;

கரு வகையெழில் வனப்பெஞ்ச வரைபோக வலித்துநீ
பகையறு பயவினை முயறிமன் முயல்வளவைத்
தகைவண்டு புதிதுண்ணத் தாதவிழ் தண்போதின்
முகைவாய்த்த தடம்போலு மிளமையு நிலையுமோ ;

எனவாங்கு ;

கஅ பொருந்தியான் றன்வேட்ட பொருள்வயி னினைந்தசொற்
றிருந்திய யாக்கையுண் மருத்துவ னூட்டிய
மருந்துபோன் மருந்தாகி மனனுவப்பப்
பெரும்பெயர் மீளி பெயர்ந்தனன் செலவே.

இது பகைவர் திறைதந்த நாடு காத்தற்கு (தலைவன்) பிரிகின்றமை யுணர்ந்து தலைவி வேறுபட்டமை கண்டு தோழி அவனை எதிர்ப்பட்டு அவளது ஆற்றமையும் இளமையதருமையுங் கூறிச் செலவழுங்குவித்தமை தலைமகட்குக் கூறியது.

---

க. தொல். செய். சூ கருஎ.

உ. "படைபண்ணிப் புனையவுமென்னும் பாலைக் கலியுள் 'வல்வினை வயக்குதல் வலித்திமன்' என்பதற்கு வலிய போர்செய்து அப்பகைவர் தந்தநாட்டை விளக்குதற்கு வலித்தி யெனவும், 'தோற்றஞ்சா றருகுபொருள்' என்பதற்குத் தோற்றம் அமைந்த திரண்டபொரு

## இதன் பொருள்.

படைபண்ணிப் புனையவும் பாமாண்ட * பலவணைப்
புடைபெயர்ந் தொடுங்கவும் † புறஞ்சேர வுயிர்ப்பவு
முடையதை யெவன்கொலென் றாறளந் தவர்வயி
னடைசெல்லாய் நனியேங்கி நடுங்கற்கா ணறுநுதால்

எ - து: நறுநுதால், படைக்கலங்களைப் புதியவாகப் பண்ணிக் கை செய்யவுங் காரியத்தின் நினைவாலே முயங்குதலைத் தவிர்ந்து பரத்தன் மாட்சிமைப்பட்ட பலவாகிய அணையிடத்தே கிடக்கவும் அது ‡ பொருது அவன்புறத்தே புல்லுதலாலே யாம் பிரிந்தால் இவள் எங்ஙனம் ஆற்றுவ ளென்று நெட்டுயிர்ப்புக்கொள்ளவும் இவன் மனத்திலுடைய காரியம் எத் தன்மையதுகொலென்று கருதிக் கூட்டத்திற்கு இடையூறு வருமென்று கருதியவர் (?) நினைவிடத்தே நீ ஒழுகுதலைச் செய்யாயாய் மிகவும் ஏங்கி நடுங்காதேகொள். எ - று.

இது நிகழ்ந்தது நினைத்து வருந்தினுள்.

இது தரவு.

ரு தொல்லெழி றொலைபிவ டெருழப்பத் துறந்துநீ
வல்வினை வயக்குதல் வலித்திமன் || வலிப்பளவை
நீள்கதி ரவிர் (க) மதி நிறைவுபோ னிலையாது
நாளினு நெகிழ்போடு நலனுட னிலையுமோ

எ - து: இவள் இயற்கை நலங் கெட்டு வருத்தத்தே அழுந்த நீபிரிந்து வலிதாகிய காவலாலே பகைவர் தந்த நாட்டை விளக்குதலை மிகவுந் துணிவை; அங்ஙனந் துணியுமளவில் நீண்ட கதிரினையுடைய விளங்குகின்ற திங்களினிறைவு, பின்னர்ஒழுகத் தேயுமாறுபோலநிலைநில்லாமல் நாடோறுந் தன்னிலைகுலைந்து கெடும் அழகு இவளுடன் நிலைபெறுமோ; எ - று.

---

ளாவன அந்நாடு காத்துப் பெற்ற அறம்பொரு ளின்பமெனவும், 'பகையறு பயவினை' என்பதற்குப் பகையறுதற்குக் காரணமாகிய நாடாகிய பயனைத்தரும் வினையெனவும் 'வேட்டபொருள்' என்ப தற்கு அறம்பொரு ளின்பமெனவும் பொருளுரைத்துக் கொள்ளுக." என்பது தோல். அகத். சூ. உஅ. நச்.

க. நாளுக்கு நாள் குறையும் பொருளுக்கு மதிதேய்தலை உவமை கூறு தல் (அ) "குணமுதற் றோன்றிய வாரிருண் மதியிற், றேய்வன கெடுக நின் றெவ்வ ராக்கம்" மதுரைக். ககரு - கூ; (ஆ) "வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" நாலடி. கஉரு. (இ) "மதிப்பின்னீர பேதையார் நட்பு" குறள். எஅஉ. (ஈ) "குறைமதிக்கதிரென மாய்கவென் றவமென்றான்" கந்த. மார்க். கண். ருக. (உ) "முறைபோது மாசர் திருக் குறைமதிபோன் முழுது மிறும்" இராகு. அரசியற் கூ.

(பிரதிபேதம்) * பயிலணை, † புறஞ்சேரா, ‡ பெருது, || வலிப்பனை.

* நாளின்: இன், அசை; ஓகாரம் எதிர்மறை.

கசு ஆற்றனே யடவிவ ளணிவாட வகன்றுநீ
தோற்றஞ்சா றெருகுபொருண் முயறிமன் † முயல்வளவை
நாற்றஞ்சா னளிபொய்கை யடைமுதிர் முகையிற்குக்
‡ கூற்றாழ்போற் குறைபடூஉம் வாழ்நாளு நிலையுமோ

எ - து: இவள் வலியையுடைய காமநோய் அடுகையினாலே அழகு கெடும்படி நீ பிரிந்து பகைவர் தந்த நாட்டைக் காத்துப் பெறும் விளக்கம் அமைந்த திரளும் பொருள்களைத் தேடுதற்கு மிகவும் முயல்வை; அங்ஙனம் முயலுமளவில் நாற்றம் அமைந்த பெருமையையுடைய பொய்கை இலையை விட்டு முற்றின தாமரைமுகைக்குக் (க) கூற்றமாகிய (உ) அலர்ச்சி அதன் குறைவிற்குக் காரணமாயினாற்போல இத்துணைக்காலம் இருவென விதித்த காலங் குறைபட்டு வருவதற்குக் காரணமான வாழுகின்ற நாள்களும் இவளுடன் நிலைபெறுமோ; எ - று.

தொகுபொருளாவன, (ந) அறமும் பொருளும் இன்பமுமாம்.

கஎ வகையெழில் வனப்பெஞ்ச வரைபோக வலித்துநீ
பகையறு பயவினை முயறிமன் || முயல்வளவைத்
தகை (ச) வண்டு புதிதுண்ணத் தாதவிழ் தண்போதின்
முகைவாய்த்த தடம்போலு மிளமையு நிலையுமோ

எ - து: இவள் கூறுபாட்டையுடைய உறுப்பழகுந் தோற்றப்பொலிவுங் கெடும்படி மலையைப்போக நீ துணிந்து பகையறுதற்குக் காரணமான நாடாகிய பயனைத்தருங் காவற்பிரிவை மிகவும் முயல்வை; அங்ஙனம் முயலுமளவில் அழகையுடைய வண்டுகள் தன் புதுமையை நுகரும்படியாகத் தாதை அலர்ந்த குளிர்ந்தபூ இனிய முகையென்கின்றவை வாய்த்

க. "ஊழைக்குத் தானீன்ற காய்கூற்றம்" மூதுரை.

உ. ஊழ்த்தல் அலர்தலென்னும் பொருளின் வருதலை (அ) "நனையூழ்த்த செருந்தியும்" (ஆ) "இணரூழ்த்த மரத்தொடும்" (இ) "அரும் பூழ்த்து மரமெல்லா மலர்வேய" (ஈ) "இணரூழ் கொண்ட............ வேங்கை" (உ) "இணரூழ்த்த கமழ்தோட்டமலர்" கலி உசு. நஉ. நந. சச. சுஎ. (ஊ) "காயாவு நுண்ணரும் பூழ்த்த புறவு" கார். அ. (எ) "இணரூழ்த்து நாறு மலரனையர்" குறள். சுருO. என்பவையும் வலியுறுத்தும். இங்கு ஊழெனை முதனிலைத் தொழிற் பெயராய் நின்றது.

ந. "அறனும் பொருளு மின்பமு மூன்றும்" புறம். உஅ.

ச. (அ) "பல்வரி யினவண்டு புதிதுண்ணும் பருவத்து" (ஆ) "பொய்கைப் பூப் புதிதுண்ட வரிவண்டு" (இ) "புதுவமலர்தேரும் வண்டேபோல்" கலி. உசு: க; எச: க; கஅ: உ. "வண்டும் புதிதுண்டு" நைடதம். இளவேனிற். ரு.

(பிரதிபேதம்) * நாளினின், † முயல்வனை, ‡ கூற்றம்போல்: || முயல்வனே.

தற்குக் காரணமான நீர் நிறைந்த தடம் அந்நீர் நாடோறுங் குறையுமாறு போல நாடோறுங் குறையும் இளமையும் இவளுடன் நிலைபெறுமோ எ-று.

அளவு, அளவையெனப் பெயர்த் திரிசொல்லாய் நின்றது.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு, எ - து: அசை.

இது தனிச்சொல்.

க௮ பொருந்தியான் றான்வேட்ட பொருள்வயி னினைந்தசொற்

(க) றிருந்திய யாக்கையுண் மருத்துவ னூட்டிய

மருந்துபோன் மருந்தாகி மனனுவப்பப்

பெரும்பெயர் மீளி பெயர்ந்தனன் செலவே

எ - து: பெரிய புகழையுடைய (உ) மீளி, யான் தன்னைப் பொருந்தித் தான் விரும்பிய அறம்பொரு ளின்பமாகிய பொருளிடத்தே யான் அறன் உண்டாக நினைத்ததனுற் பிறந்த சொல், நல்வினையாற் றிருந்திய யாக்கையின் கண்ணே மருத்துவன் நுகர்வித்த மருந்துபோலே நல்ல மருந்தாகி, தன் மனமகிழுகையினலே போக்கைத் தவிர்ந்தான்; * எ - று.

இதனல், தலைவிக்குப் புணர்வென்னும் உவகையும் தலைவற்கு அசைவும் பிறந்தன.

இது முன்னர்ப் பாட்டிற் கூறியவாறே வந்து சுரிதகம் தரவோடொத்து வந்த ஒத்தாழிசைக்கலி. (கசு)

(க௭) (௩) அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப்

(௪) பிரிந்துறை சூழாதி யைய விரும்பிநீ

---

க. "பழவினையானுங் காரணங்களானும் மக்கட்கு வாதம் முதலிய பிணிகள்வரும்; அவற்றுள், பழ வினையான் வருவன அதன் கழிவின்கணல்லது தீராமையின் அவை யொழித்து ஏனைக் காரணங்களான் வருவனவற்றைத் தீர்க்கும் மருந்தின்றிறங் கூறுகின்றார்" என்னும் நூறள். கரு ம் அதிகாரத்தின் அவதாரிகை ஈண்டு அறிதற்பாலது.

உ. மீளியென்பது பருவங்குறித்தும் ஆண்பால்குறித்தும் வரும்பெயராய் நில்லாது ஈண்டுப்பாலைநிலத்தலைவ னென்னும் பொருட்டாய் நின்றது.

௩. இச்செய்யுள் தொல். அகத். சூ. ௫௪. நச்; செய். சூ. கருங. பே. நச். இவற்றில் மேற்கோள். இந்நூற் பக்கம் ககo: உ. ககக: உ. குறிப்புக்கள் பார்க்க. " அரும்பொரு ணசைஇப் பிரிந்துறை வவ்வி " என்பது (அகம். ககூக: கக.) ஒப்புநோக்கற்பாலது.

௪. இகரவீறு முன்னிலை யொருமை எதிர் மறை வினைமுற்ருய் வருதற்கு "பிரிந்துறை சூழாதி" என்பது மேற்கோள். தொல். வினை. சூ. உசு. நச்; இ - வி. சூ. உ௩௮.

(பிரதிபேதம்) * என ஆற்றுவித்தாள்.

(க) யென்றோ ளெழுதிய தொய்யிலும் யாழ (உ)நின்
மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்
ரு சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா
தொழிந்தவ ரெல்லாரு முண்ணுதுஞ் செல்லா
(௩) ரிளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்
(ச) வளமை விழைதக்க துண்டோ வுளநா
* ளொரோஒகை தம்முட் டழீஇ † யொரோஒகை
க0 (ரு)யொன்றன்கூ றுடை யுடுப்பவரே யாயினு
(சு) மொன்றினர் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ
சென்ற விளமை தரற்கு.

இஃது "ஒன்றத்தமரினும்" என்னும்(எ)சூத்திரத்தில்"நாளதுசின்மையு மிளமைய தருமையுந், தாளாண் பக்கழந் தகுதியதமைதியு, மின்மைய திழிவு முடைமைய துயர்ச்சியு, மன்பின தகலமு மகற்சிய தருமையும்" எனக்கூறிய எட்டினையும் தலைவன் கூறக்கேட்ட தோழி, அவற்றை "நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே" என்னும் (அ) விதியாற் றலைவற்குக் கூறிச் செலவழுங்குவித்தது.

---

க. "என்றோ ளெழுதிய.........நினைத்துக்காண்" என்பது யாண்டினது ஒப்புக்கு மேற்கோள். தொல். மெய்ப்பாடு. சூ. உரு. பே.

உ. "நின் மைந்துடை மார்பிற் சுணங்கு" என்பது (ஆறும்) வேற்றுமைத் தொகைக்கு மேற்கோளாக வுள்ளது? தொல். எச்ச. சூ. கஎ. நச்.

௩. "இறந்துசெய் பொருளு மின்பந் தருமெனின், னிள்மையிற் சிறந்த வளமையுமில்லை, யிளமை கழிந்த பின்றை வளமை, காமந்தருதலு மின்றே" நற். கஉசு: எ-க0. "இளமையுங் காமமும் யாங்கொளித் தனவோ" மணி. உஉ: கந௩.

ச. "பொருள் செய்ய, மருங்கிற்பாதி தருந்துகில் புனைந்தும், விளைவய லொடுங்கு முதிர்நெல் லுணவினுந், தம்மில் வீழுநர்க் கின்பமென் றறிந்தும்.............செல்லுதிபெரும" கல். உச. என்பதும். கலி. கரு: உச-சு-ஆம் அடிகளும்; இங்கே ஒப்புநோக்கற்பாலன.

ரு. "வண்ணத் துகிலுடுப்பின் வாய்விட் டழுவதுபோல் வருந்து மல்கு, னண்ணுச் சிறுகூறை பாகமோர் கைபாக முடுத்து" "மாசித் திங்கண் மாசின சின்னத் துணிமுள்ளி, னூசித்துன்ன மூசியவாடை யுடையாக" சீவக. உசுஉரு; உகூஉகூ.

சு. "இனிதுடன் கழிக்கி லிளமை, யினிதாலம்ம" ஐங். சகரு.

எ. தொல். அகத். சக.                அ. தொல். அகத். சூ. சச.

(பிரதிபேதம்) * † ஒரோகை.

### இதன் பொருள்.

ஐய! அரிய பொருளிடத்துச் செல்கின்ற ஆசையினால் உள்ளம் உளுற்று கையினாலே பிரிந்துபோயிருத்தலை நினையாதேகொள், நீ விரும்பித் தலைவி தோளில் எழுதிய தொய்யில் தருகின்ற அழகினையும் இவள் மார்பில் நின்னை வலியாகவுடைய சுணங்கின் அழகையும் கைவிடல் ஒல்லுமாயின் நினைத்துப் பார்; நீ நன்கு மதித்த பொருளும், சென்றவர்கள் தத்தம் நிலைமைக்கேற்பக் காலம் நீட்டிப்ப நின்று தேடுவதன்றி இப்பொழுதே முகந்துகொள்ள ஓரிடத்தே கிடவாது; பொருள் தேடப் போகாதிருந்தவர்களெல்லாரும் ஒருவாற்றான் உண்ணுமையும் ஒழுகார்; இளமையையும் இருதலையுமொத்த காமத்தையுஞ் சேரப்பெற்றவர்கள் செல்வத்தை விரும்பத்தக்கதொரு நன்மை அச்செல்வத்திற்கில்லை; இல்வாழ்க்கையாவது தமக்குக்கற்பித்தநாளெல்லாம் உள்ளில் ஒரொவொரு * கையாலே தம்முள்ளே தழுவிக்கொண்டு புறத்தில் ஓரோவொரு † கையாலே ஒன்றன் ‡ கூறுகிய ஆடையை உடுத்திருப்பவரேயாயினும் பிரியாதிருப்பவர்களுடைய வாழ்க்கையே [வாழ்க்கை], கழிந்த இளமை மீண்டு தருதற்கு || அரிது; எ - று.

பிரிந்திறை சூழாதியைய என்று பாடமாயின் பிரிந்து போவதனால் இவள் இறந்துபடுஞ் செய்கையை நினையாதே கொள்ளென்க.

"தாயத்தி னடையா வீயச் செல்லா, வினைவயிற் றங்கா வீற்றுக் கொளப்படா, வெம்மென வருஉங் கிழமைத் தோற்ற, ÷ மல்ல வாயினும் புல்லுவ வுளவே." (க) இதனால், தோழி தலைவிதோளை என்றோளென்றாள். மென்றோளும் பாடம். இவன் முயக்கத்தால் சுணங்கு பரத்தலின் நின்னை வலியாக உடைய சுணங்கென்றாள்.

பொருளுமென்ற உம்மை சிறப்பு; உண்ணுது மென்னும் உம்மை ஐயம்; உண்டோவென்னும் ஓகாரம் எதிர்மறை; யாழவும் அரோவும் அசை.

(உ) இதனுள், 'உளநாள்' என்றது நாளதுசின்மை; சென்றஇளமைதரற்கு அரிதென்றது இளமையதருமை; 'உள்ளந்துரப்ப' என்றது உள்ளம் உளுற்று

---

க. தோல். பொருளி. சூ. உஎ. இச்சூத்திரத்து இளம்பூரணருரையில் எம்மென வருஉங் கிழமைத்தோற்றத்திற்கு, மேற்கோளாக "விரும்பிநீ, யென்றோ ளெழுதிய..........நினைத்துக் காண்" என்ற பகுதியும் அதற்கு 'இதனுள், தலைமகள்தோளைத் தோழி தன்னையு முளப் படுத்தி எனதெனக் கூறியவாறு காண்க' என்னும் குறிப்பும் உள்ளன. (தோல். பொருளி. சூ. உரு. 'தாயத்தின்'); சூ. உஎ. நச்.

உ. தலைவன்கண் நிகழ்ந்த கூற்றினைத் தலைவியுந் தோழியும் கூறி நிற்றலும் பாலைத் திணையாம் என்பதற்கு இச்செய்யுளை மேற்கோள் காட்டி இதிற் சிறிது வேறுபட விசேடவுரையு மெழுதினர் நச்சினார்க்கினியர். தோல். அகத். சூ. சச.

(பிரதிபேதம்) * † கைகளாலே, ‡ கூற்றுகிய. || அரிதெனமுடிக்க. "தாயத்தினடையா...வே" ÷ அல்லா.

தலால், தாளாண்பக்கம்; 'சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவாது' என்றது (க) தத்தம் நிலைமைக்கு ஏற்பப் பொருள் தேடவேண்டுதலி னதுபாணிக்கு மென்றலின், தகுதியதமைதி. 'ஒரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை, யொன்றன்கூறுடை யுடுப்பவரே யாயினும்' என்றது இன்மையதிழிவு; 'இளமையுங் காமமு மோராங்குப் பெற்றார், வளமை விழைதக்க துண்டோ' என்றது உடைமைய துயர்ச்சி; 'பிரிந்துறை சூழாதி யைய' என்றது அன்பின தகலம், பிரிந்துறைந்து அன்பு பெருக்கவேண்டா, 'ஒன்றினர் வாழ்க்கையே வாழ்க்கை' என்றலின்; 'தொய்யிலும் யாழ நின் மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்' என்பது அகற்சியதருமை.

இதனால், தோழிக்கு நலிதலும் தலைவற்குக் கருதுதலும் பிறந்தன.

இது (உ) பன்னீரடியான் வந்து ஒருபொருணுதலிய கட்டளைக் கலி வெண்பா. இது பெண்டன்மைக்கேலா நுண்பொருளினைத் தலைவனெதிர் நின்று உணர்த்துவாள் செவ்வன்கூறாது, தலைவன்பண்டு கூறியன சிலவற்றை வாங்கிக்கொண்டு கூறுங் கூற்று. நீ மறந்தாயென்பது யாம், உணரக் கூறுகின்றாள் இவளென்பது படநின்றமையின் ஒருபொரு ணுதலிற்றாயிற்று.

---

க. "தத்த நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே, யொத்த கடப்பாட்டிற் றாளூன்றி - யெய்த்தும், மறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும் வெஃகார், புறங்கடைய தாகும் பொருள்" நீதிநெறி. கூ௫.

உ. (அ) "அரும்பொருள்......தரற்கு" என்பது பன்னிரண்டடியான் வந்து பல பொருணுதலி யமைதலிற் கலிவெண்பாட்டாயிற்று. ஒரு பொருள் நுதலிய வெனவே சொல்லப்படும் பொருளின் வேறாகிக் கருதியுண ரப்படும் பொருளுடைய தென்பதூஉம் பெற்றாம். என்னை? இப் பாட்டினுட் பெண்டன்மைக் கேலாத நுண்பொருளினைத் தலைமக னெதிர்நின்று உணர்த்துவாள் செவ்வனஞ் சொல்லாது தலைமகன் பண்டு கூறியன சிலவற்றை வாங்கிக்கொண்டு சொல்லி அவன் மறைத்தா னென்பது உணர்த்துகின்ற பொருண்மை கருதி உணர வைத்தமையின் அவ்வாறாயிற்று. ஒழிந்த பாக்களும் அவ்வாறு ஒரு பொருணுதலுமாயினும் அங்ஙனம் நுதலிய பொருள் பற்றிச் செய்யுள் வேறுபடாமையின் ஆண்டாராய்ச்சி யின்றென்பது; வெண்பாவிற் குறித்த பொருளினை மறைத்துச் சொல்லாது செப்பிக் கூறல்வேண்டு மாகலானும் இஃது அன்னதன்றி ஒரு பொருணுதலித் துள்ளினமை யானுங் கலிவெண்பாட்டெனப் பட்டதென்பது. என்பர் பேராசிரியர். (தொல். செய். சூ. கடுரு); (ஆ) நச்சினார்க்கினியர், "அரும்பொருள் .........தரற்கு" என்பது பன்னீரடியான் வந்து ஒரு பொருணுதலிய கட்டளைக் கலிவெண்பா. இதனுட் பெண்டன்மைக்குஏலா நுண் பொருளினைத் தலைவனெதிர்நின் றுணர்த்துவாள் செவ்வன் கூறாது தலைவன் பண்டு கூறின சிலவற்றை வாங்கிக் கொண்டு கூறுங் கூற்று. நீ மறந்தாயென்பது யாம் உணரக் கூறுகின்றாள்

"மரையா மரல்கவர" (க) என்பதனுட் கூறிய உரையில் வேண்டுவன இதற்குங் கூறிக்கொள்க. (கள)

(கக) (உ) செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு
பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய
வகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற வினி ;
எ செல்லினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி
யன்பற மாறியா முள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
யென்றிறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை முற்றும லாண்டோ
ரவலம் படுதலு முண்டு.

**இது பிரிவுணர்த்தப்பட்ட தோழி செலவு விலக்கவும் பிரிவின் மேற் சென்ற உள்ளத்தனுயினனை நீ பிரியின் இவள் இறந்துபடுமெனச் சொல்லிய வாய்பாட்டான் மறுத்தது.**

**இதன் பொருள்.**

---

இவளென்பது பட நின்றமையின் ஒரு பொருணுதலிற்றாயிற்று. அது அகப்பொருளே யாமாறும் ஒழிந்தபாக்களும் அவ்வாறு வருமேனும் அங்ஙனம் நுதலிய பொருளா[ன](ற்) செய்யுள் வேறுபடாமையின் ஆண்டு ஆராய்ச்சியின்று ; இது வெண்பாவா[யி](தலி)ற் குறித்த பொருளை மறைத் துக்கூறாது செப்பிக்கூறல் வேண்டும். இஃதன்ன தன்றிப் பொருள் வேறு படுதலானுந் துள்ளி வருதலானுங் கலி வெண்பாட்டாயிற்று." என்பர். தொல். செய். சூ. கருந.

க. கலி. சூ. பக்கம். சச. பார்க்க.

உ. இச்செய்யுள் (அ) தலைமகன் பிரிவுணர்ந்த தலைமகள் அவனுடன் கூறியதற்கும், (தொல். அகத். சூ. சரு. 'எஞ்சியோர்' இளம்) (ஆ) தாழிசையின்றித் தரவு முதலாயின வந்ததற்கும் (இவர் "செவ்விய திவ்விய..............வினிது" என்பது தரவென்றும், "செல்லினிச்.....முண்டு" என்பது சுரிதக மென்றும் தாழிசையும் தனிச்சொல்லும் இல்லை யென்றும் கூறுவர்) (தொல். செய். சூ. கசஉ. 'தரவின்றாகித்' இளம்) (இ) தரவிணைக் கொச்சகத்திற்கும் (தரவிணை அடுக்குதலிற் தரவிணைக் கொச்சக மெனப்படும்) (தொல். செய். சூ. கருரு. பேரா) மேற்கோள்.

(க) செவ்விய (உ) தீவிய சொல்லி யவற்றொடு
பைய முயங்கிய * வஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய
வகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து.
பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற வினி

எ - று: ஐய! வஞ்சனை † யிலவாய இனியவாகிய சொற்களைப் பையச் சொல்லி அச்சொற்களாலே தழுவின அக்களவொழுக்கம் நிகழ்ந்த நாளிற் கூறியவையெல்லாம் பொய்யாயிருத்தலை அறிவில்லாத யான் எங்ஙனம் அறிவேன்? அகன்ற மனையி லுள்ளாரால் அடக்க வொண்ணாத அலரை எம்மிடத்தே தந்து ஞாயிறு முனிந்த வெய்தாகிய காட்டைப் போக நினைத்தலை இப்பொழுது அறிந்தேன். நீஅறுதியாக நல்லமகனுனதன்மையை யுடையையல்லை; எ - று.

"சினனே பேதைமை நிம்பிரி நல்குர, ‡ வனைநால் வகையுஞ் சிறப் பொடு || பெறுமே" (௩)என்பதனாற் றன்காதலான் நின்னை உள்ளவாறு அறிந் திலேனெனத் தன் பேதைமையைக் காதலாற் சிறப்பித்தலின் அமைந்தது.

மற்றும் ஓவும் அசை.

---

க. (அ) "செவ்விய ........மற்றைய" என்பதனுள் 'யான் யாங்கறிகோ' என்பது பேதைமை பற்றியும் "அகனகர்...........மன்றவினி" என்பதனுள் தலைவி 'மகனல்லை' என்பது நிம்பிரியாகிய வெறுப்புப் பற்றியும் பிரிவாற்றாமையைச் சிறப்பிக்க வந்ததென்பர் இளம்பூரணர்; தொல். பொருளி. சூ. சக. 'சினனே' (ஆ) தன்னொடும் தலைவியானு மிடையீடு படுதலின்றித் தலைவனாற் கூட்டத்திற் கிடையூறு தோன்றிய வழித்தோழி கூறியதற்கும், (இ) தலைவி கூற்றுப் பேதைமை பற்றி வரினும் காதலைச் சிறப்பித்தலின் அமைந்த தென்பதற்கும் மேற் கோள்காட்டுவர், நச்சினார்க்கினியர்; தொல். கள. சூ. உ௩. பொருளி சூ. ௫க. (ஈ) "செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல்" கம்ப. நகரப். க.

உ. (அ) "வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே" அகம். கசஉ: உ௬. (ஆ) "தேம்படு கிளவியிற் றீவிய மிழற்றி" (இ) "திருமாதேவி யொடுந் தீவிய மொழிந்து" (ஈ) "தீவிய மொழியொடு சேதிபற் குறுகி" பெருங். (க) சக; அஎ. (ச) அ: ௬௬; (ச) க௩: க௫உ.

௩. தொல். பொருளி. சூ. ௫க.

(பிரதிபேதம்) * அந்நான்று, † இலவாய், ‡ எனநால், || வருமே.

எ செல்லினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி
(க) யன்பற மாறியா முள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
யென்றிறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை * முற்றும லாண்டோ
ரவலம் படுதலு முண்டு

எ - து: இனி, நீ நினைத்த காரியத்தே போய் ஆண்டுச் செய்யுங் காரியத்தை முடித்தபின்னர் இவ்விடத்து †நின்று வருவாரை எம்மை நினைத்து வருந்தும்படியாக அன்பு நீங்கும்படி மனம் வேறுபட்டு யாந் துறக்கப் பட்டவளுடைய செய்தியும் அறிவீரோவென்று என் றிறத்துச் சிறிதும் வினவாதேகொள். வினவுவையாயின் அவர் இறந்துபாடு கூறவுங் கூடும். அது கேட்டால் (உ) ஞாயிறுபோல விளங்குகின்ற நின் தலைமை கெடும்படி யாகக் கெடுதற்கரிய நீ செய்யுங் காரியம் முடியாமல் அவ்விடத்தே ஓர் அவலம் பிறத்தலும் உண்டு; ‡ எ - று.

"வருத்த மிகுதி சுட்டுங் காலையு, முரித்தென மொழிப வாழ்க்கையு ளிரக்கம்" (௩)என்பதற்கு உய்த்துக்கொண்டுணர்தலென்னுந் தந்திரவுத்தியால் வினைப் பிரிவான் நிகழும் வருத்த மிகுதியைக் குறித்த இடத்தும் உயிர் வாழ்க்கையுள் இரக்கம் உரித்தென்றதனுன் உயிர்வாழ்க்கையுள் இரக்கங் கூறினுள்.

உம்மை, ஐயம்.

இதனுல், தோழிக்கு அச்சமும் தலைவற்கு அசைவும் பிறந்தன.

கொச்சகம் || வெண்பாவாய் வருதலானுந் தாழிசையோடு தொடராது வருதலானும் இவை தரவிணைக் கொச்சகம். இரண்டும் ஒருபொருணுதலி இவ்வாறு வரினுங் கொச்சகமேயாம். இது "பாநிலை வகையே" என்னும் (௪) சூத்திரவிதியாம். (க௮)

---

க. (அ) "அன்பறமாறியா...படுதலுமுண்டு" என்பது வருத்த மிகுதியைக் குறித்தவழி மனைவாழ்க்கையுள் இரக்க முரித்து என்பதற்கு மேற் கோள். தொல். பொருளி. சூ.௩௦. 'வருத்தமிகுதி' இளம்; சூ. ௩௨. நச். (ஆ)"இனவா ரணந்திரி வெஞ்சுரம் போகவிரும் பொருட்கு, நினைவாகி லும்மை விலக்கு கிலேஞ்செல்லு நீள்புனத்து, மனவா ரகலல்குல் வல்லியை நீர்வரு வார்சிலரை, வினவா தொழியும் வினவின் முற் றுது வினையுமக்கே" அம்பிகா. ருசுங.

உ. "மாகதேச, னெங்நரபதிகளுக்கு மிரவியே யென்னவந்தான்"

௩. தொல். பொருளி. சூ. ௩உ. ௪. தொல். செய். சூ. கருரு.

(பிரதிபேதம்) * முற்றுமை, † நின்றும், ‡ எனச்செலவழுங்குவித்தாள், || வெண்பாவாயும்.

(உ0) பல்வளம் பகர்பூட்டும் பயனிலம் பைதறச்
செல்கதிர் ஞாயிறு செயிர்சினஞ் சொரிதலிற்
றணிவில்வெங் கோடைக்குத் தண்ணயந் தணிகொள்ளும்
பிணிதெற லுயக்கத்த பெருங்களிற் றினந்தாங்கு
மணிதிகழ் விறன்மலை வெம்ப மண்பகத்
துணிகயந் துகள்பட்ட தூங்கழல் வெஞ்சுரம் ;
௭ கிளிபுரை கிளவியாய் நின்னடிக் கெளியவோ
தளியுறு பறியாவே காடெனக் கூறுவீர்
வளியினும் வரைநில்லா வாழுநா ளும்மாகத்
தளியென வுடையேன்யா னவலங்கொண் டழிவலோ ;
௧௧ ஊறுநீ ரமிழ்தேய்க்கு மெயிற்றாய்நீ யுணல்வேட்பி
னாறுநீ ரிலவென வறனோக்கிக் கூறுவீர்
யாறுநீர் கழிந்தன்ன விளமைநு நெஞ்சென்னுந்
தேறுநீ ருடையேன்யான் றெருமந்தீங் கொழிவலோ ;
௧௫ மாணெழில் வேய்வென்ற தோளாய்நீ வரிற்றாங்கு
மாணிழ லலவாண்டை மரமெனக் கூறுவீர்
நீணிழற் றளிர்போல நிறனூழ்த்த லறிவேனுந்
தாணிழல் கைவிட்டியான் றவிர்தலைச் சூழ்வலோ ;
எனவாங்கு ;
உ0 அணையருும் வெம்மைய காடெனக் கூறுவீர்
கணைகழி கல்லாத கல்பிறங் காரிடைப்
பணையெருத் தெழிலேற்றின் பின்னர்ப்
பிணையுங் காணிரோ பிரியுமோ வவையே.

இது பிரிவுணர்த்திய தலைவற்குத் தலைவி எம்மையும் உடன்கொண்டு சென்மி னென்றற்கு அவன் கானின் கடுமையுந் தலைவி மென்மையுங் கூறுவது கேட்ட தலைவி நாளது சின்மையும் இளமையதருமையுங் கூறி எம்மையும் உடன்கொண்டு சென்மினென்றது.

இதன் பொருள்.

பல்வளம் பகர்பூட்டும் பயனிலம் பைதறச்
செல்கதிர் ஞாயிறு செயிர்சினஞ் சொரிதலிற்
றணிவில்வெங் கோடைக்குத் தண்ணயந் தணிகொள்ளும்
பிணிதெற லுயக்கத்த பெருங்களிற் றினந்தாங்கு

மணிதிகழ் விறன்மலை வெம்ப (க) மண்பகத்
துணிகயந் துகள்பட்ட தூங்கழல் வெஞ்சுரம்

எ - து: பல உணவுகளையும் விளைந்து கொடுத்து எல்லாரையும் நுகர்விக்கும் பயனையுடைய நிலம் ஈரம் அறும்படி ஞாயிறு குற்றத்தைச்செய்யுஞ் சினத்தோடே தன்னிடத்தினின்றுஞ் செல்கின்ற கதிர்களைச் * சொரிகையினாலே மாறுதலில்லாத வெய்ய கோடைக்காலத்திற்கு அதனிடத்துள்ள குளிர்ச்சியை விரும்பித் திரட்சிகொள்ளும் பசிப்பிணியாற் சுடுதலையுடைய வருத்தத்தினையுடையவாகிய பெரிய களிற்றினுடைய திரளைத் தாங்கும் மணிகள் விளங்கும் வெற்றியையுடைய மலை வெம்ப மண்பிளக்கத் தெளிந்த நீர்நிலைகளும் துகளுண்டான செறிந்த அழலையுடைய வெய்ய காடு; எ - று.

தாங்கும் விளங்கும் மலை; அணிகொள்ளுங் களிற்றினம்

அயத்தணி கொள்ளுமென்று பாடமாயின், நீர்நிலைகளிலே திரட்சிகொள்ளுமென்க.

இது தரவு.

எ (உ) கிளிபுரை கிளவியாய் நின்னடிக் கெளியவோ
தளியுறு பறியாவே காடெனக் கூறுவீர்
வளியினும் வரைநில்லா வாழுநா ளும்மாகத்
(ரு) தளியென வுடையேன்யா னவலங்கொண் டழிவலோ

எ - து: 'கிளியினது மொழியை யொக்கும் மொழியினை யுடையாய்! தூங்கழல் வெஞ்சுரம் † மழைபெய்தலைக் கண்டறியாவாதலால் அக்காடு நின் அடிக்குப் போதற்கு ‡ எளியவாயிருக்குமோ' என்று கூறுகின்றவரே! யான், நும்முடைய ஆகத்திடத்து முயக்கத்தைக் கண்டார் காற்றினுங்காட்டில் ஓர் எல்லையில் அகப்பட்டு நில்லாதவளுடைய வாழ்நாளென்று கூறும்படியாக அதனை (?) வாழ்நாளாக உடையேனாதலால் அவலத்தைக் கொண்டு நெஞ்சழிவேனோ? இறந்துபடுவேனே; எ - று.

கக (ச) ஊறுநீ ரமிழ்தேய்க்கு மெயிற்றாய்நீ யுணல்வேட்பி
னாறுநீ ரிலவென வறனேக்கிக் கூறுவீர்

---

க. (அ) "புலம்பு வீற்றிருந்த நிலம்பகு வெஞ்சுரம்" அகம். ருரு: அ. (ஆ) "வான, நிலம்பக வறந்த புலம்புறு சேணிடை" தமிழ்நெறி. மேற்கோள் (இ) "நிலம்பக வெம்பிய நீள்சுரம்" வளையாபதி.

உ. "கிளிபுரை கிளவியாய்" கலி. கரு: கஅ.

ரு. "அளியென............டழிவலோ" என்பது மேற்கதுவாய் மோனைக்கு மேற்கோள். தொல். செய். சூ. கூஉ. நச்.

ச. (அ) எய்க்கும் என்பது அருகிப் பயவுவமையில் வந்ததற்கு "ஊறுநீ ரமிழ்தேய்க்கு மெயிற்றாய்" என்பது மேற்கோள். தொல். உவம. சூ. கச. பே. (ஆ) "எயிற்றமிழ் தூறுந் தீநீர்" கலி. ச: கரு.

(பிரதிபேதம்) * சொரிகையினாலே மலைவெம்ப, † மழையைத்தலைக், ‡ போக்கெளிய.

(௧) யாறுநீர் கழிந்தன்ன விளமைநுந் நெஞ்சென்னுந்
தேறுநீ ருடையேன்யான் றெருமந்தீங் கொழிவலோ

எ - து: 'தன்னிடத்து ஊறுகின்ற நீர் அமிழ்தத்தை ஒத்தற்குக் காரணமாகின்றஎயிற்றையுடையாய்! வெஞ்சுரத்துவழி தண்ணீருண்டலை விரும்பின் (௨) நீர்களில' என்று அறத்தைக் கருதிக் கூறுகின்றவரே! யான் உம் நெஞ்சென்று சொல்லப்படுந் தெளிவுநீர்மையை யாறு நீர் கழிந்தாற்போன்ற இளமையாக உடையேனாதலால் இவ்விடத்தே சுழன்று நெஞ்சழிவேனோ? இறந்துபடுவேனே; எ - று.

கழிந்த நீர்போல இளமையும் மீளாதென்பது பொருள்.

௧௫ (௩) மாணெழில் வேய்வென்ற தோளாய்நீ வரிற்றாங்கு
மா(௪)ணிழ * லலவாண்டை மரமெனக் கூறுவீர்
நீணிழற் றளிர்போல நிறனூழ்த்த லறிவேனுந்
தாணிழல் கைவிட்டியான் றவிர்தலைச் சூழ்வலோ

எ - து: 'மாட்சிமைப்பட்ட அழகினையுடைய மூங்கிலை வென்ற தோளினையுடையாய்! நீ வெஞ்சுரத்தே வரில் அவ்விடத்தில் மரங்கள் நின் இளைப்பை ஆற்றும் மாட்சிமைப்பட்ட நிழலையுடையவல்ல' என்று கூறுகின்றவரே! நீர் நீங்கினால் என் நலம் நீண்ட நிழலினின்ற தளிர்போலே வெளுத்தலை அறிந்திருப்பேனாதலால் யான் உம்முடைய திருவடியில் அருளைக் கைவிட்டு இங்கே இருத்தலைச் சூழ்வேனோ? இறந்துபடுவேனே; எ - று.

வென்ற, உவமவுருபு.

இவை மூன்றும், தாழிசை.

---

௧. ஐஷம்தே வாரு ஸஞ்ஜாதம் யௌவநம் வ்யதிவர்த்ததே ।
யதீதம் புநர்நைதி ஸ்ரோதஸ்ஸீவ ஹ்யபாம்யிவ ॥ என வான்மீகி முனிவரும் இளமை கழிதற்கு யாற்றுநீர் கழிதலை உவமித்திருத்தல் இங்கே அறிதற்பாலது. ஸ்ரீமத் ராமாயணம். சுந். ௨௦: ௧௨.

௨. "நன்னீர்கள் சுமந்து" திருவிருத்தம். ௩௨. "கண்ணினீர்கள் சொரிந்தவை" சீவக. ௧௩௯௧.

௩. (அ) வென்ற வென்பது அருகி மெய்யுவமத்தின்கண் வந்ததற்கு "மாணெழில் வேய்வென்ற தோளாய்நீ வரிற்றாங்கும்" என்பது மேற்கோள். தொல். பொ. உவம. சூ. ௧௫. பே. (ஆ) வேய்வென்ற தோளென்பதுதத்தமரபிற்றோன்றுமன்பொருளேயென்பதற்குமேற்கோள். தொல். உவம. சூ. ௧௭. இளம். (இ) "வேய்வென்ற தோளாள்" கலி. ௧௩௮: ௧௮-௯.

௪. "நிழறேய்ந் துலறிய மரத்த" "மரநிழலற்ற வியவிற் சுரன்" அகம். ௧: ௧௧; ௩௫௩: ௧௫.

(பிரதிபேதம்) * இல.

எனவாங்கு

எ - து: என்று யான் கூறவும்; எ - று.

ஆங்கு, அசை.

இது தனிச்சொல்.

உ0 அணையரும் வெம்மைய காடெனக் கூறுவீர்
(க) கணைகழி கல்லாத கல்பிறங் காரிடைப்
பணைபெருத் தெழி (உ)லேற்றின் பின்னர்ப்
(ங) பிணையுங் காணிரோ பிரியுமோ வவையே

எ - து: அவ்விடத்துக் காடு நீ அணைய அரிய வெம்மையையுடைய வென்று பின்னுங் கூறுகின்றவரே! பெருக்குங் கல்லின் நெருக்கத்தால் எய்த அம்பு ஓடாத அரிய வழியிடத்துப் பெருமையையுடைய கழுத்தினையும் அழகையுமுடைய ஏற்றின்பின் நீங்காமற் றிரியும் பிணையையுங் காணு திருக்கின்றீரோ? அவை நீர் அறியப் பிரியாவே; ஆதலால், எம்மையும் உடன்கொண்டே சென்மின்; எ - று.

இது சுரிதகம்.

இதனால், தலைவிக்கு இழிவும் தலைவற்கு அசைவும் பிறந்தன.

இங்ஙனந் தலைவி கூறுதல் "மரபு நிலைதிரியா" என்னும் (ச) சூத்திரத்து அமைத்தது.

இஃது ஆறடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. (கக)

---

க. "கணைகழி...வவையே" என்பது எம்மெய்யாயினும் ஒப்புமை கோட லென்பதற்குமேற்கோள். தொல். மெய்ப். சூ. உஉ.பே. இ-வி சூ. ருஅ0.

உ. (அ) "கலையொழி பிணையிற் கலங்கிமாறி, யன்பிலி ரகறி ராயின்" நற். ஙஎ. (ஆ) "குன்றங் கவைஇய, வங்காட்டா ரிடை மடப்பிணை தழீஇத், திரிமருப் பிரலை புல்லருந் துகள" (இ) "மறியுடை மடப்பிணை தழீஇப்புறவிற், றிரிமருப் பிரலை பைம்பயி ருகள" அகம். கச: ச-சு. ஙகச: ரு-சு. (ஈ) "உருகு மடமான் பிணையோ கெளும்" திணைமொழி யைம். உரு. (உ) "மான்வீடு போழ்திற் பிணையின்னுயிர் போவதே போல்" யா - வி. சூ. கரு மேற்கோள். (ஊ) "உங்கள், கண்போற் பிணையுங் கலையுமிங் கேவரக் கண்டதுண்டோ" அம்பிகா. அரு.

ங. பிணையென்னுஞ்சொல் பொருளுணர்க்கிற் பிரியாது பிணையும் பிற சாதிக்குஞ் செல்லுமாயினும், மரபு நோக்கப் பிணையென்றற்குச் சிறப்புடையன: புல்வாய் நவ்வி உழை கவரி யென்பர், பேராசிரியர்; தொல். மரபு. சூ. ருஎ:

ச. தொல். அகத். சூ. சரு.

(உக) (க) * பான்மருண் மருப்பி (உ) னுரல்புரை பாவடி
யீர்நறுங் (ங) கமழ்கடாஅத் தினம்பிரி யொருத்த
லாறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து
பொருள்வயிற் பிரிதல் வேண்டு மென்னு
ரு மருளில் சொல்லு நீசொல் லினையே

---

க. (அ) இச்செய்யுளை, தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொள்ளினு மென்பதற்கு மேற்கோள் காட்டி இது தலைமகனைச் சுட்டிக் கூறிய தென்றும்(தொல். அகத். சூ. சஉ. 'தலைவரும்',)(ஆ) இஃது அடக்கிய லின்றி அடிநிமிர்ந் தொழுகிற் றென்றும் (தொல். செய். சூ. கசஉ. 'தரவின்') கூறுவர் இளம் பூரணர். (இ) இது தனிச்சொல்லும் அடக் கியலு மின்றி அடி நிமிர்ந்தொழுகிற்றென்பர். பேராசிரியர்; தொல். செய். சூ. கருரு. (ஈ) இஃது 'அவற்றுள்' என ஐஞ்சீரடி வந்து தனிச் சொல்லும் அடக்கியலு மின்றிச் சுரிதகம்பெற்று அடிநிமிர்ந் தோடிற் றென்பர், நச்; தொல். செய். சூ. கருரு. (உ) "பாஅன் மருண்மருப் புரல்புரை பாவடி" என்பது "தத்தமரபிற் றோன்றுமன் பொருளே" என்பதற்கும் (தொல். உவம. சூ. கஎ. 'தத்த' இளம்.), (ஊ) உரு வுவமத்தின்கண் மருளென்பது அருகி உவமவுருபாய் வருதற்கும் (தொல். உவம. சூ. ககூ. பே.) மேற்கோள்.

உ. 'உரல்புரைபாவடி' என்பது புரை என்பது மெய்யுவம வாய்பாடாய் வருதற்கும் (தொல். உவம. சூ. கடு. பே.) வடிவு பற்றிய பண் புவமைக்கும் ( இ - வி. சூ. கூசஉ). மேற்கோள்.

ங. யானைமதம் கமழுமென்பதனை (அ) "கடுஞ்சினத்த கமழ் கடாஅத்து ......யானை" மது. சச-எ. (ஆ) "கமழ்கடாத் தொல்கிய மதவேழம்" கலி. அ: ச; (இ) "வரிஞிமிறூர்க்கும் வாய்புகு கடாஅத்துப், பொறி நுதற் பொலிந்த வயக்களிற் றொருத்தல்" அகம். எஅ: ங-ச. (ஈ) "துன்னருந்திறற் கமழ்கடாஅத்து..................பெருங்கையானை" (உ) "மிஞிறூர்க்குங் கமழ்கடாஅத்து..................களிறு" புறநா. ங: அ-கக; உஉ: கூ-அ. (ஊ) "நீலயானை...........வண்டுபடு பூநாறு கடாஅஞ்செருக்கி" மணி. ககூ: உ௦-உஉ. (எ) "யானையின் புயல் கொண் மும்மத மணமகள் கதுப்பென நாறு மாநகர்" (ஏ) "மையல் யானையின் படுமதங் கெடப்பகட் டரசன், செய்த மும்மதம் போற் றிசை திசைதொறுங் கமழுந், தெய்வ வாசத்து" சீவக. கசூஉக, உ௩கூரு. (ஐ) யானைமதமு நானமும், வாசப் பொடியொடு காயத்துக் கமழும" பெருங். (க) சஉ: எரு - கூ. (ஒ) "விழிமலர்ப்பூ சனை யுஞற்றித் திருநெடுமால் பெறுமாழி மீளவாங்கி, வழியொழுகாச் சலந்தரன்மெய்க் குருதிபடி முடைநாற்ற மாறுமாற்றூற், பொழிமதநீர் விரையேற்றி" காஞ்சிப். கடவுள். ரு. என்பவற்றாலும் உணர்க.

(பிரதிபேதம்) * பாஅன் மருண்மருப் புரல்.

(க) நன்னர் நறுநுத னயந்தனை நீவி
(உ) நின்னிற் பிரியலெ னஞ்சலோம் பென்னு
நன்னர் மொழியு நீமொழிந் தனையே
அவற்றுள், யாவோ * வாயின மாஅன் மகனே
கO (ங) கிழவ ரின்னோ ரென்னாது பொருடான்
பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையு

---

க. "நன்னர் நறுநுத னயந்தனை நீவி" என்பது வினையெச்ச முன்னிலை யொருமை [வினைக்குறிப்பு] (த்தெரிநிலை) முற்றிற்கு மேற்கோள். தொல். எச்ச. சூ. சுக. நச்.

உ. அஞ்சலோம் பென்று ரென்பதற்கு, "தம்மை யெதிர்ப்பட்டானொன்று நின்னிற் பிரியே னஞ்சலோம் பென்றவர்" எனவும் அஞ்சலென்றவ ரென்பதற்கு, "நின்னிற் பிரியேன் அஞ்சலென்றவர்" எனவும் பரிமேலழகர் இவ்வடியைக் கருத்திற்கொண்டுபொருளெழுதியிருத்தல் இங்கே கருதற்பாலது குறள். ககசக, ககருச.

ங. திரு, கிழவரின்னோ ரென்னாது பொதுவாய் நல்வினை யுள்ளாரிடத்தே பெயர்ந்துறைதலை, (அ) "தாமரைப் பொன்மல, ரெல்லையாகும் பொதுப் பெண்ணவள்" சீவக. ககரு0. (ஆ) "பூவின்மேலிருந்த தெய்வத் தையலும் பொதுமை யுற்றாள்" கம்ப. மாயாசனக. சுஉ. (இ) "திருமக ளிவளென...................பேதை வைகுமே" - "திருவுவமம் வடிவிற்கும் நல்வினை யுடையோ னிடத்து எகுந்துணை யும் பொதுவா யிருத்தற்கும்" சீவக. கஅங. விசேடவுரை. என்ப வற்றாலும் (ஈ) "சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா, வுறுகாலத் தூற்றாகா வாமிடத்தே யாகுஞ், சிறுகாலைப் பட்ட பொறி யும்" நாலடி கக0. (உ) "பொறியுந்தொடற் பாலார்கண்ணேதொடும்" பழ. உ0ரு. (ஊ) "பெருமுழங்கு திரைவரைக ணீந்திப்பிணி யுறினுந், திருமுயங்க லில்லையெனி னில்லைபொரு ளீட்ட, மொருமுழமுஞ் சேறலில ரேனும்பொரு ளூர்க்கே, வரும்வழி வினையுழந்து வாழ்க தவ மாதோ" (எ) "நற்றவஞ் செய்தவீர ருளவழி நயந்து நாடும், பொற்றதா மரையி னாளின்" (ஏ) "நற்றவம் பரவைஞால நாமுட னிறப்பின்வைய, மற்றமிறவத்திற் கென்றுமையவி யனைத்து மாற்று, திற்றென வுணர்ந்து நிற்பிற் றிருமக ளென்று நீங்காள், பற் றேடே நிற்பினென்றுந் திருமகள் பற்றல்செல்லாள்." சீவக. உருருசு, உஎஙஅ, உகஅங. (ஐ) "வினையொழிகாலைத் திருவின் செல்வி,யனையே மாகி யாடவர்த் துறப்பேம்" மணி. கஅ: உக-உ. (ஒ) "பழமையிற் பசையாது கிழமையிற் கெழுவாது, தவந்தீர் மருங்கிற் றிருமகள் போலப், பயந்தீர் மருங்கிற் பற்றுவிட்டொரீஇ" பெருங். (க) ருரு:

(பிரதிபேதம்) * வாயன.

மன்ன பொருள்வயிற் பிரிவோய் (க) நின்னின்
றிமைப்புவரை வாழாண் மடவோ
ளமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே.

**இது தலைமகனுற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி அவனை நெருங்கிக், களவுகாலத்தொழுக்கம் எடுத்துக்காட்டலாற் றெளிவுபட மொழிந்ததூஉம் பொருளது நிலையின்மையும் அவளது ஆற்றாமையுங் கூறிச் செலவு மறுத்தது.**

**இதன் பொருள்.**

பால் தான் மருளும் மருப்பினையும் உரலின் அடியையொக்கும் நிலத்தே பாவும் அடியினையும் ஈர்த்தினையுடைய நறியவாகக் கமழும் மதத்தினையுமுடைய இனத்தைப் பிரிந்த யானை வழியைக் காவல்கொண்டு நிற்கும் வேறாகிய நிலத்தைப் போய்ப் பொருள் தேடுகின்ற இடத்தே இவளைப் பிரிந்திருத்தலை நெஞ்சு விரும்புமென்று சொல்லும் அருளில்லாத சொல்லையும் நீ சொன்னாய்; எம்மை விரும்பி நன்மையையுடைய நறிய நுதலை நீவி நின்னிடத்தினின்றும் பிரியேன் நீ அஞ்சுதலைத் தவிர்வாயென்று சொல்லும் நன்மையையுடைய சொல்லையும் நீ சொன்னாய்; அவ்விரண்டி னுள் மயக்கத்தினையுடைய மகனே! உண்மையிடத்தன யாவைதான் அறி

கஙசு-அ. (ஓ) "மாரியுந்திருவு மகளிர் மனமுந், தக்குழி நில்லாது பட்டுழிப் படும்" **பெருங்.** (க) ருகு: கருசு-எ. (ஔ) "நல்வினைப்பி னல்லா னறுந்தா மரையாளுஞ், செல்லாள் சிறந்தார்பி னாயினும்" **அறநெறி.** கஉ௪. (ஃ) "புண்ணிய முலந்தபின்............எண்ணில ளிகந்திடும் யாவர் தம்மையு, நண்ணிய நண்பில ணங்கை வண்ணமே" **சூளா.** முத்தி கரு. என்பவற்றாலும். (அ) "அகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ், சகடக்கால் போல வரும்" **நாலடி.** உ. (ஆ) "அற்கா வியல்பிற்றுச் செல்வம்" **குறள்.** ருகரு. (இ) "பொருள் போற்றி வழங்கும்நெறி" - 'போற்றி வழங்குதல்' பேணிக்கொண் டொழுகுதல்: அஃதாவது ஒருவரோடு நட்பில்லாத அதனைத் தம்மோடு நட்புண்டாக்கிக் கொண் டொழுகுதல். **குறள்.** ௪எஎ. விசேடவுரை (ஈ) "திருவினைத் தீராமையார்க்குங்கயிறு" - 'ஒருவர் கண்ணும் நில்லாது நீங்குஞ் செல்வத்தைத் தன்க ணீங்காமற் பிணிக்குங் கயிறும்' 'தீராமையென்றதனால், தீர்தன்மாலைய தென்பது பெற்றாம்;' **குறள்.** ௪அஉ. விசேடவுரை என்பவற்றாலும் அறிக. **கலி.** அ: கஉ - ௪-ம் அடிக்குறிப்புக்களுள் இவ்விடத்துக்குப் பொருந்து வனவும் இங்கே அறிதற்பாலன.

க. "எந்நாளோ நெடுந்தகாய் நீ செல்வ, தந்நாள் கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே" (**கலி.** ரு: கஅ-க) என்பதும், இந்நூற்பக்கம் ௪௦: உ - இன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * தலைவன்.

கின்றிலேன்; நீ தேடுகின்ற பொருடான், இத்தன்மையோர் நமக்கு உரியவ ரென்று கருதாதே பிறரிடத்து நின்ற நல்வினையாலே மீண்டு மீண்டு சென்று தங்கும்; நின்னையின்றிக் கண்ணிமைத்தொழில் நிகழுங்காலத்தின் எல்லையும் உயிர் வாழாத மடவோளுடைய அமையினுடைய அழகைத் தன் னிடத்தேகொண்ட தோளிரண்டினையும் மறந்து அத்தன்மைத்தாகிய பொ ருள் தேடுகின்ற இடத்தே இவளை விட்டுப் பிரிந்திருப்பாய்; எ - று.

அவற்றுளென இரண்டனுள் ஒன்றை வகுத்தலின் யாதுவாயதென ஒருமையாற் கூறற்பாலதுவும் (க)"அவ்விரண்டனுட் கூர்ங்கோட்ட * காட்டு வல்" என்றது போலப் பன்மை யொருமை மயங்கிற்று. பிரிவா யென்னும் முன்னிலையேவ லொருமை முற்று, "ஆயென் கிளவியு மவற்றொடு கொள்ளும்" (உ) என்றதனால் ஓவாய் நின்றது.

"உறுக ணோம்ப றன்னியல் பாகலி, னுரிய தாகுந் † தோழிக ணுரனே" (ந)என்பதனாற் குற்றேவற்றோழி 'பொருடான் பழவினை........... பிரிவோய்' என அறிவுடையாளாகக் கூறினாள்.

இதனால், தோழிக்கு அச்சமும் தலைவற்கு அசைவும் பிறந்தன.

இஃது அவற்றுளென ஐஞ்சீரடி வந்து தனிச்சொல்லும் அடக்கியலு மின்றிச் சுரிதகம்பெற்று அடிநிமிர்ந்தோடிய கொச்சகம். (உ0)

(உஉ) (ச) உண்கடன் வழிமொழிந் திரக்குங்கான் முகனுந்தாங்
கொண்டது கொடுக்குங்கான் முகனும்வே றுருகுதல்

---

க. "அவ்விரண்டனுட் கூர்ங்கோட்ட சுடர்வேல்" என்பதே கிடைத்த கலித்தொகைக் கையெழுத்துப் பிரதிகளி லெல்லாம் உள்ளது. (தோல். எச்ச. சூ. சுரு. நச்) உரையிலும் இவ்வாறே காணப்படுகின் றது. ஆனாலும் இதுதவறென்றும் (தோல். எச்ச. சூ. சுரு. இளம். சூ. சுஎ. சே.) உரையிலும் காணப்படும் "அவ்விரண்டனுட் கூர்ங்கோட்ட காட்டுவல்" என்பதே தவறற்ற தென்றும் தோற்றுகின்றன.

உ. தோல். வினை. சூ. கரு.

ந. தோல். பொருளி. சூ. சங. இதனுரையில் (அ) இளம்பூரணர் "கிழவ ரின்னோர்...............பெயர் புறையும்" என்பது தலைமக[ற்](ட்) குற்ற துன்பம் பரிகரித்தல் தோழி யியல்பாகலின் அவட்கு அறிவு உரிய தாகு மென்பதற்கு மேற்கோள்காட்டினர். (ஆ) நச்சினார்க்கினியர் தலைவிக்கு வந்தவருத்தத்தைப்பரிகரித்தல் தோழிகடனாதலின் அவட்கு அறிவு உரியதாகுமென்பதற்கு "பொருடான், பழவினை........... பிரிவோய்" என்பதை மேற்கோள் காட்டினர். தோல். பொரு சூ. சரு

ச. தாழிசை மூன்றடியால் வந்ததற்கு இச்செய்யுள் மேற்கோள். தோல். செய். சூ. கஙக. 'போக்கியல்' இளம்.

(பிரதிபேதம்) * சாடுவல், சுடர்வல், † தோழிதன்னுரனே.

பண்டுமிவ் வுலகத் தியற்கை யஃதின் றும்
புதுவ தன்றே புலனுடை மாந்திர்
ரு தாயுயிர் பெய்த பாவை போல
நலனுடை யார்மொழிக்கட் டாவர்தாந் தந்நலந்
தாதுதேர் பறவையி னருந்திறல் கொடுக்குங்கா
லேதிலார் கூறுவ தெவனோநின் பொருள்வேட்கை;
நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த
கo செறிமுறை பாராட்டி னுய்மற்றெம் பல்லின்
பறிமுறை பாராட் டினையோ வைய;
நெய்யிடை நீவி மணியொளி விட்டன்ன
வைவகை பாராட்டி னுய்மற்றெங் கூந்தற்
செய்வினை பாராட் டினையோ வைய;
கரு குளனணி தாமரைப் பாசரும் பேய்க்கு
மிளமுலை பாராட்டி னுய்மற்றெம் மார்பிற்
றளர்முலை பாராட் டினையோ வைய;
எனவாங்கு;
அடர்பொ னவிரேய்க்கு மவ்வரி வாடச்
உo சுடர்காய் சுரம்போகு நும்மையா மெங்கட்
படர்கூற நின்றது முண்டோ தொடர்கூரத்
துவ்வாமை வந்தக் கடை.

இது பிரிவுணர்த்தப்பட்ட தோழி அதற்கு உடம்படாது தலைமகனை நெருங்கிக் களவுகாலத்தொழுக்கம் எடுத்துக்காட்டி ஆற்றுவித்து உடம்பட்ட வாய்பாட்டான் மறுத்தது.

இதன் பொருள்.

(க) உண்கடன் வழிமொழிந் திரக்குங்கான் முகனுந்தாங்
கொண்டது கொடுக்குங்கான் முகனும்வே றுகுதல்

---

க. (அ) முன்னிலைப் புறமொழியாவது முன்னிலையாக நிற்பாரைக்குறித்துப் பிறனைக் கூறுமாறுபோலக் கூறுதலென்று கூறி அதற்கு "உண்கடன்...........வுலகத் தியற்கை" என்ற பகுதியை மேற்கோள் காட்டி இவ்வுரை தலைமகனை நோக்கியவாறு காண்க வென்பர், இளம்; தொல். கற். சூ. உரு. 'முன்னிலைப்'. (ஆ) நச்சினார்க்கினியரும் இதற்கே "உண்கடன் வழிமொழிந்து............பொருள் வேட்கை" என்ற பகுதியை மேற்கோள் காட்டுவர். தொல். கற். சூ. உசு.)

(க) பண்டு * மிவ் வுலகத் தியற்கை யஃதின்றும்
புதுவ தன்றே புலனுடை † மாந்திர்
ரு தாயுயிர் பெய்த பாவை போல
நலனுடை யார்மொழிக்கட் டாவார்தாந் தந்நலந்
தாதுதேர் பறவையி னருந்திறல் கொடுக்குங்கா
லேதிலார் கூறுவ தெவனோநின் பொருள்வேட்கை

எ - து: அறிவுடைய (உ)மாந்திர்! தாம் வாங்கியுண்ணுந் தனிசை வழிபாடாகச் சொல்லி இரந்துவாங்கும்பொழுது முகமலர்ந்திருத்தலும் அங்ஙனம் வாங்கின தனிசை மீண்டு கொடுக்கும்பொழுது முகங் கெட்டிருத்தலும் முன்பும் இவ்வுலகத்துள்ளார் இயல்பு; அஃது இன்றும் புதியதொன்றன்று; அஃது இயல்பாயவாறு என்னெனில், மகளிர் தம்முடைய நலத்தை அவர்களை இரந்துகொண்டு (ங) தாதைத் தேடி உண்ணும் வண்டுபோல நுகர்ந்து அதனை அவர் வேண்டின காலத்து அவர்க்குக் கொடாது கேட்டினைக் கொடாநின்றீர், அங்ஙனங் கேட்டினைக் கொடுக்குமிடத்து ஏதிலார் கூறுவ தெவனோ? அதுவன்றியும் நன்மைக்குணமுடையார், (ச)சித்திரமெழுதுகின்றவன் உயிர்ப்புக் கொடுத்த பாவை, தான் அழியுமளவும் அக்குறிப்பு நிற்குமாறுபோலத், தாங் கூறிய மொழியிடத்து உயிராகிய உண்மைகெடார், நீ அம்மொழியிடத்து நலந்தாவி நினக்கு நிகழ்கின்ற நின் பொருள் வேட்கையிடத்து நினக்கு ஏதிலாராகிய யான் கூறுகின்ற காரியம் எத்தன்மைத்து? பயன்படாதே; எ - று.

"முன்னிலைப் புறமொழி யெல்லா வாயிற்கும், பின்னிலைத் தோன்று மென்மனார் புலவர்." (ரு) என்பதனான் இது முன்னிலைப் புறமொழியாகக் கூறினான்.

---

(இ) "கடன்கொண்ட வொண்பொருளைக் கைவிட் டிருப்பார், ரிடங்கொண்டு தம்மினே யென்றாற் - றொடங்கிப், பகைமேற்கொண் டார்போலக் கொண்டார்வெகுட, னகைமேலுங் கைப்பாய்விடும்" பழ. ஙஎச. (ஈ) "தாயினைக் கண்டெனச் சார்ந்துவாங்கிப்பின், பேயினைக் கண்டென வொளித்துப் பேதுறீஇ, யியவொன் றில்லவர் கடன்களேற்றவர், மாயிருங் களிகொள வழங்கிப் போக்கினுள்" காஞ்சிப். (உ) கழுவாய்ப். உருசு.

க. "புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை" புறம். எசு: உ. "புதுவதன்றே தொன்றியல் வாழ்க்கை" சிலப். ஙo: கசo. "புதுவது புகுந்ததோ வன்றே" கந்த. மார்க்கண்டேய உஉo.

உ. மாந்தரென்னுஞ் சொல்லுக்கு ஒருமையின்றென்பர், சிலர்; அஃது ஆண்பாலொருமையில் மாந்தனென்றும் வருகின்றது.

ங. கலி சo; உச-ரு ஆம் அடிகளின் குறிப்புப்பார்க்க.

ச. (அ) "சூழ்ச்சிமேலோன், சித்திரம் புணர்த்த பாவை செயலறவிருக்குமாபோல்" கந்த. மேருப். கச. (ஆ) "துகிலத் தெழுது பர்வையினுன்றமை புலத்தினன்" கந்த. குமாரபுரி சுச.

ரு. இந்நூற்பக்கம் கஉங: க - இன் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * இவ்வுலகியற்கை, † மாந்தீர.

முகனும் முகனுமென்னும் உம்மைகளை வேறுகுதலென்பதன் பின்னே கூட்டி எண்ணும்மையாக்குக. பண்டுமென்ற உம்மை எதிரதும் இன்று மென்னும் உம்மை இறந்ததும்தழீஇயின. மாந்திர், அண்மைவிளி. (க) ஆர்ந்து அருந்தென விகாரமாயிற்று. இறல்கொடுக்குமிடத்து பொருள்வேட்கையிடத்து என்பன கூறுவதெவனென்பதனோடு முடிந்தன.

இது தரவு.

கூ (உ) நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த
(ங) செறிமுறை பாராட்டி னையமற்றெம் பல்லின்
(ச) பறிமுறை பாராட் டினையோ வைய

எ - து: ஐய எம் பல்லினுடைய விழுந்தெழுந்த முறைமையினை யுடைய இளமைப்பருவத்தை இதற்குமுன்பு பாராட்டிவிட்டாய், அப்பருவம் ஒழிந்து நறிய முல்லையினது தன்னிலொத்த முகையையொக்கும்படி நிரைத்த செறிந்த முறைமையாகிய நுகர்ச்சிக்குரிய இளமைப்பருவமெல்லாம் முற்பாராட்டிவிட்டாயோ? அது செய்திலையே; எ - று.

மற்று, வினைமாற்று; ஓகாரம், எதிர்மறை.

பறிமுறை பாராட்டினாய் செறிமுறை பாராட்டினையோவெனப் பாடத்தை (௫) மாறிப் பொருள்கூறுக. அன்றி அங்ஙனம் பாடமோதலும் ஒன்று.

கஉ நெய்யிடை நீவி மணியொளி விட்டன்ன
(௬) வைவகை பாராட்டி னையமற்றெங் கூந்தற்
செய்வினை பாராட் டினையோ வைய

எ - து: ஐய, நீலமணி ஒளிவிட்டாற்போன்ற எங்கூந்தலிற் புழுகு பூசித் தாயர் (எ) ஐந்து வகையாக முடித்த இளமைப் பருவத்தை இதற்கு முன்பு பாராட்டிவிட்டாய், அப்பருவம் ஒழிந்து நீதான் அதனிடத்துச் செய்யும் தொழில்களை முற்றச்செய்து பாராட்டிவிட்டாயோ? அது செய்திலையே; எ - று.

---

க. ஆர்ந்தென்பது அருந்தெனவருதலைக் குறுக்கும் வழிக் குறுக்கலென்பர் சேனா. தொல். எச்ச. சூ. எ. அகம். கச. பதிற். அகூ: ௫: ஆர்ந்தவென்பது 'அருந்த' என ஐங்குறு. எ0, உஎக. இலும்வந்துள்ளது. நெடிலைக் குறுக்கிப் பின்னின்ற ரகரமெய்யின்மேல் உகரவுயிரேற்றல் தமிழ்மரபு.

உ. ஒப்பவென்பது மெய்யுவமமாகச் சிறுபான்மை வருதற்கு "நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த" என்பது மேற்கோள். தொல். உவம சூ. க௫. பே.

ங. "செறிநிறை வெண்பலும் பறிமுறை நிரம்பின" குறுந். ஙஙஎ.

ச. "பறிமுறை நேர்ந்த நகையாராய்" கலி. கூங: கக.

௫. மாற்றலென்னும் பொருளில் மாறலென்னுஞ் சொல்லே பிறவிடங் களிலும் வந்துள்ளது.

௬. "ஐம்பா லாய்கவி னேத்தி" குறிஞ்சி. கஙகூ.

எ. "நறுவீயைம்பான் மகளிர்" ஐங். அச.

தலைவன் செய்யும் தொழிலாவன; ஐவகையாக முடியாமல் தான் வேண்டியவாறே கோலங்கள் செய்துமுடித்தலும் அக் (க) கூந்தலணையிற் றுயிலுதன் முதலியனவுமாம்.

கரு (உ) குளனணி தாமரைப் பாசரும் பேய்க்கு
(ங) மிளமுலை பாராட்டி னுய்மற்றெம் மார்பிற்
(ச) றளர்முலை பாராட் டிணையோ வைய

எ - து: ஐய, குளம் அழகுபெறுதற்குக் காரணமான தாமரையினது பசிய அரும்பையொக்கும் எம்முடைய ஊற்றின்பம் மிகவுமில்லாத இளமுலையை இதற்கு முன்பு பாராட்டிவிட்டாய்; அப்பருவம் ஒழிந்து ஊற்றின்பத்தை மிகவுமுடைய நீக்கம் அறியாத எந்தின நிலைமை சிறிதுசாய்ந்த முலையினையுடைய மிக்க இளமைப்பருவமெல்லாம் முற்றப் பாராட்டிவிட்டாயோ? அது செய்திலையே; எ - று.

இவை மூன்றும், தாழிசை.

இத்தாழிசையின் கருத்தான் முற்பட்டவற்றிற்கும் யாங்கூறியதே பொருளென்றுணர்க.

எனவாங்கு; அசை.

இது தனிச்சொல்.

கசு (ரு) அடர்பொ னவிரேய்க்கு மவ்வரி வாடச்
சுடர்காய் சுரம்போகு நும்மையா மெங்கட்
படர்கூற நின்றது முண்டோ (சு) தொடர்கூரத்
துவ்வாமை வந்தக் கடை

---

க. கூந்தலணையிற்றுயிலுதல் கலி கOச: அடிக்குறிப்புப்பார்க்க.

உ. (அ) "குளத்துக் கணியென்ப தாமரை" நான். கக. (ஆ) "குளனணி தாமரை" மணி. கரு: எரு. (இ) "தண்கய மருங்கிற் றாமரைபோல, வண்ணன் மூதூர்க் கணியெனத் தோன்றி" பெருங். (க) ஙசு: கக - உO. (ஈ) "பொய்கை தாமரை பூத்தெனப் பொலிந்தன" கம்ப. வருணனைவழி. ஙஉ. (உ) "புண்டரிக மோடுபல பூத்திர ளணிந்து, கண்டவர்க ணெஞ்சுகட வாததொர் வனப்புக், கொண்டு குளிர் தூங்கு தடம்" விநாயக. சோமகாந்தன்வனம். உஉ. (ஊ) "அலரணியா நீர்நிலைபோல்.........அடிகளையடியே னீத்திருத்த லழகேயோ" திருவானைக்கா. சம்புமுனிதவ சO.

ங. "இவைபா ராட்டிய பருவமு முளவே" அகம். உசு.

ச. "தளர்முலை பாராட்டி" ஐந் - யெழ சஎ.

ரு. "அடர்பொ னவிரேய்க்கு மவ்வரி வாட" என்பது அரியென்பது நிறத்தின்கண் வந்ததற்கு மேற்கோள். தொல். உரி. சூ. எங. 'கூறிய கிளவி'தெய். 'அவ்வரிவாட' நற். ஙருஅ.

சு. "தொடர்கூரத், துவ்வாமை வந்தக்கடை" என்பது வினையெச்சங்களுள், கடையீறு இறந்தகாலம் பற்றிவருதற்கு மேற்கோள் தொல். வினை சூ. ஙஉ. சேனு; சூ. ஙக. கல்; சூ. ஙஉ. நச். நன். வினை. சூ. உச. இரா. இ - வி. சூ. உசசு. துவ்வாமை யென்னும் மறைக்கு,

எ - து: நம்முடன் இவட்குப் பிணிப்புமிகும்படி நல்வினை * நிகழ்கின்ற காலத்தே நும்மை நுகராமையாகிய தீவினை வந்து புகுந்த இடத்துத், தகடாகிய பொன்னினது விளக்கத்தையொக்கும் அழகிய சுணங்கு கெடும்படி ஞாயிறுகாய்ந்த சுரத்தைப் போகும் நும்மை யாங்கள் எம்மிடத்து வருத்தத்தைச் சொல்லி விலக்க எம்மிடத்து ஒரு நல்வினை நின்றதும் உண்டோ ?இல்லையே, யாங் கூறுவதென் ? எ - று.

ஓகாரம் எதிர்மறை.

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை, யேமஞ் சான்ற மக்களொடு துவன்றி, யறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ், சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே" என்னும்(க) சூத்திரத்திற் றலைவனும் தலைவியும்(உ)மூப்பு வருவதன்முன் துறப்பாரென்றலின், பல்லு விழும்பருவத்தும் (ங) நரைவரும் பருவத்தும் இல்லறஞ் செய்திருப்பாரென்றல் பொருந்தாமை யுணர்க.

இது சுரிதகம்.

இதனால், தோழிக்கு இழிவும் தலைவற்கு அசைவும் பிறந்தன.

இஃது எட்டடித்தரவும் மூன்றடித்தாழிசையும் தனிச்சொல்லும் வெள்ளைச் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. "வெண்பா வியலினும் பண்புற முடியும்" (ச)என்பதுவிதி. இது மேல்வருவன வற்றிற்குங் கொள்க. (உக)

(உங) (ரு) இலங்கொளி மருப்பிற் கைம்மா வுளம்புநர்
புலங்கடி கவணையிற் பூஞ்சினை யுதிர்க்கும்
விலங்குமலை வெம்பிய போக்கரு வெஞ்சுரந்
தனியே யிறப்ப யானொழிந் திருத்த
னருதக் கன்றிவ் வழுங்க லூர்க்கே

---

துவ்வுதல் உடம்பாட்டுச் சொல்லென்பதனை "நெடுவான் பேகர், துவ்வுதல்யான் விழைந்திலேன்" என்பதனானும் உணர்க.

க. தொல். கற்பியல், சூ. ருக.

உ. (அ)" இறந்திலன் செருக்களத் திராமன் றாதைதா, னறந்தலை நிரம்ப மூப்படைந்த பின்னருந், துறந்திலனென்பதோர் சொல்லுண் டான பின், பிறந்திலனென்பதிற் பிறிதுண் டாகுமோ" கம்ப. அயோத்தி மந்திர உச. (ஆ) "வெண்மதி நுதலாய் காமம் வெறுக்குநாள் காறு நின்கேள், வண்மலராகந் தோய்ந்து வாழ்தி" பிரமோத்தர உமாமகேசுவர பூசாபலம் சு.

ங. "நரைவரு மென்றெண்ணி நல்லறி வாளர், குழவியிடத்தே துறந்தார் புரைதீரா, மன்னா விளமை மகிழ்ந்தாரே கோலூன்றி, யின்னாங் கெழுந் திருப்பார்" நாலடி. கக.

ச. தொல். செய். சூ. ளஎ.

ரு. இரண்டடியாற் றாழிசை வந்ததற்கு இச்செய்யுள் மேற்கோள். தொல். செய். சூ. கஙக. 'போக்கியல்' இளம்.

(பிரதிபேதம்) * நெகிழ்கின்ற, நல்குகின்ற.

இனியான்

உண்ணலு முண்ணேன் வாழலும் வாழேன் ;

அ தோணல் முண்டு துறக்கப் பட்டோர்

வேணீ ருண்ட குடையோ ரன்னர் ;

க0 நல்குநர் புரிந்து நலனுணப் பட்டோ

ரல்குநர் போகிய வூரோ ரன்னர் ;

கஉ கூடினர் புரிந்து குணனுணப் பட்டோர்

சூடின ரிட்ட பூவோ ரன்னர் ;

எனவாங்கு ;

கரு யானு நின்னகத் தனையே னாதது

கொலைவெங் கொள்கையொடு நாயகப் படுப்ப

வலைவர்க் கமர்ந்த மடமான் போல

நின்னுங்கு வரூஉமென் னெஞ்சினை

யென்னுங்கு வாரா தோம்பினை கொண்மே.

இது பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றளாய தலைவி எம்மையும் உடன் கொண்டு சென்மினென்றட்த உடன்படாது அவன் பிரியலுறத் தனது இறந்துபாடுதோன்றக் கூறியது.

இதன் பொருள்.

இலங்கொளி மருப்பிற் (க)கைம்மா * வுளம்புநர்

புலங்கடி கவணையிற் பூஞ்சினை † யுதிர்க்கும்

விலங்குமலை வெம்பிய போக்கரு வெஞ்சுரந்

தனியே யிறப்ப யானொழிந் திருத்த

‡ னகுதக் கன்றிவ் வழுங்க லூர்க்கே

---

க. (அ)" குறவ, ருயர்நிலை யிதண மேறிக் கைபுடையூஉ, வகன்மலை யிறும்பிற் றுவன்றிய யானைப், பகனிலை தளர்க்குங் கவணுமிழ் கடுங்கல்" மலை. உ0௫-௬.(ஆ)" யானைக்,கால்வ லியக்க மொற்றி நடுநாள், வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன், கடுவிசைக் கவணி னெறிந்த சிறுக, லுடுவுறு கணையிற் போகிச் சாரல், வேங்கை விரியிணர் சிதறி" அகம். உகஉ: அ - கரு.

(பிரதிபேதம்) * உலம்புநர், † உதிர்க்கு மிலங்கு, ‡ நகுதக்கொன்று, நகுதற்கொன்று.

இனியா
(க) னுண்ணலு முண்ணேன் *வாழலும் வாழேன்

எ - து: விளங்குகின்ற ஒளியினையுடையவாகிய கொம்பினையுடைய யானையை யலைப்பார் அந்நிலத்தினின்றும் அவ்வியானையை ஓட்டுங் கவணையாலே பூக்களையுடைய கொம்பிற் பூக்களை உதிர்க்கும் †விலங்குகின்ற மலைகள் வெம்பிய, போதலரிய வெய்ய சுரத்தைத் தனித்து நீ போக யான் நின்னைக் கைவிட்டிருத்தல், இந்த இரக்கத்தையுடைய ஊர்க்குச் சிரித்தற்குத்தக்க காரியம்; நீ இங்ஙனம் பிரியுமளவில் யான் உண்டற்கு உரியனவற்றை உண்ணுதலுஞ் செய்யேன், உயிரை வாழ்தலுஞ் செய்யேன்; எ - று.

உண்ணேன் வாழேனென்பன முழுவதுங் காரியவாசகமாயே நிற்கு மென்பது, "வினையேசெய்வது" என்னும் (உ) சூத்திரத்தாற் கூறினும். உம்மைகள் எண்ணும்மை; உண்ணலுமுண்ணேனென்பது, (ந) பசியடநிற்றல்.

இது தரவு.

---

க. (அ) "அணியலு மணிந்தன்று" (ஆ) "அரற்றலு மரற்றும்" (இ) "அழுதலு மழுஉம்" (ஈ) "அறிதலு மறிதியோ" (உ) "அறிதலு மறிதிரோ" (ஊ) "அறிதலு மறியார்" (எ) "இயங்கலு மியங்கும்" (ஏ) "உயிர்த்தலு முயிர்த்தனன்" (ஐ) "ஓடலு மோடும்" (ஒ) "சுழலலுஞ் சுழலும்" (ஓ) "தொடலுந் தொட்டான்" (ஔ) "தொழலுந் தொழுதான்" (ஃ) "நகுதலு நகூம்" (அஅ) "நல்கலு நல்குவர்" (ஆஆ) "நீங்கலு நீங்கார்" (இஇ) "நீடலு நீடும்" (ஈஈ) "பயிற்றலும் பயிற்றும்" (உஉ) "புலம்பலும் புலம்பாளோ" (ஊஊ) "மயங்கலு மயங்கும்" (எஎ) "மருட்டலு மருட்டினன்" (ஏஏ) "மாந்துதன் மாந்தி" என்பவை முதலியன உண்ணலுமுண்ணே னென்பதனொடு ஒப்புநோக் கற்பாலன.

உ. தொல். வேற்.மயங். சூ. உக. இச்சூத்திரத்தினச்சினார்க்கினியருரையில் (அ) "இனி யானுண்ணலு முண்ணேனென்புழி இனியான் சோற்றை யுண்ணுதலையுஞ் செய்யே னெனவும் வாழலும் வாழேனென்புழி இனி யான் உயிரை வாழுதலையுஞ் செய்யேனெனவும்.............. உண்ணேன் வாழேனென்பன முழுதுங் காரியவாசகமாயே நின்ற வாறுகாண்க" என்ற குறிப்புக் காணப்படுகிறது. (ஆ) "பாவக மேற் றனசத்தாம்" என்னும் வெண்பாவி னுரையில் பாவகத்தைப் பாவித்த லென்புழி, பாவித்தல் செய்த லென்னும் பொருட்டாய் நின்றது என்றுகூறி, "உண்ணலுமுண்ணேன் வாழலும் வாழேன்" என்பதனை மேற்கோள் காட்டுவர், சிவஞான முனிவர்; சிவஞான பாடியம் இலக்கணவியல் சூ. கூ. அதிகரணம் உ. வெண்பா நக. (இ) "உண்ணலு முண்ணேன் வாழலும் வாழேன்" என்பதனை ஒருபொருட் பன்மொழி யென்பர் மயிலைநாதர்; நன். பொது. சூ. சஎ.

ந. தொல். மெய்ப் சூ. உஉ. பேராசிரியருரையிலும் "இனியான்...... ......வாழேன்" என்பது பசியட நிற்றற்கு மேற்கோள்.

(பிரதிபேதம்) * வாழ்தலும் வாழேன், † விளங்குகின்ற.

அ (௧) தோணல முண்டு துறக்கப் பட்டோர்
(௨) வேணீ ருண்ட குடை (௩)யோ ரன்னர்

எ - து: தோளின் நலத்தை நுகர்ந்து கணவராற் றுறக்கப்பட்ட மகளிர் தண்ணீர் வேட்கையாலே கோலித் தண்ணீர் குடிக்கப்பட்ட எச்சிலாற் பயன் படாத (௪)குடையோலையை ஒப்பர், அந்நிலையை ஓர்ந்துபார்; எ - று.

௧௦ நல்குநர் புரிந்து நலனுணப் பட்டோ
(௫) ரல்குநர் போகிய வூரோ ரன்னர்

எ - து: மனம் விரும்பி *யருளின கணவரால் நலத்தை நுகர்ந்து † விடப்பட்ட மகளிர் குடியிருப்பார் போகிய பாழூரை ஒப்பர், அந்நிலையை ஓர்ந்துபார்; எ - று.

---

௧. (அ) உண்டற்குரிய வல்லாப்பொருளை யுண்டனபோலக் கூறலுமரபென்பதற்கு, "தோணல முண்டு..............பூவோரன்னர்" என்பவற்றை மேற்கோள் காட்டுவர் நச்சினார்க்கினியர்; தோல். பொருளி. சூ. ௧௯. (ஆ) அளித்தயில் கின்ற வேந்த னென்புழி "அயிறல்-உண்டல்; 'உண்டற்குரிய வல்லாப் பொருளை, யுண்டன போலக் கூறலு மரபே' 'தோணலமுண்டு துறக்கப்பட்டோர்' என்றார் பிறரும்;" என இதனை மேற்கோள் காட்டுவர் இவ்வுரை யாசிரியர், சீவக. ௧௯௨. (இ) "தோணலமுண்டு" பரி. ௧௨: ௪௯. (ஈ) "தோணலமுண்டானை" கலி. ௧௪௭: ௭. (உ) "பச்சிள வேய்புரை தோணல முண்டானுல்" (ஊ) "தோணல மினிதுமாந்தி" பாகவதம். (௧௦) உத்தவனைக். ௩௯. பத்திரையை. ௭. என்பவையும் (எ) "தோணல முணீஇய" சிலப். ௨௭: ௨௪அ. என்பதும் இங்கே அறிதற்பாலன.

௨. வேட்கை நீர் - வேணீரென்றுதலைப் போலிமொழி யென்பர் மயிலைநாதர்; இலக்கணப் போலியென்பர் இராமாநுசகவிராயர்; நன். மெய். சூ. ௩௯.

௩. "ஓரன்னள்;" குறுந். ௩௧௨ "ஓரன்ன" மது. ௭௦௯. குறுந். ௯௫. அகம். ௩அ௫.

௪. "சூடிய பூவும் பருகிய வோலையுந் தோகையரு, நாடிய காலை நிகர்ப்பர்" தணிகை. களவு. ௩௩௯. 'பனங்குடை' அகம். ௧௨௧: ௧௨. புறம். ௧௭௭: ௧௯; ௩௫௨: ௩. நாலடி. ௨அ௯.

௫. (அ) "அங்குடிச் சீறூர், மக்கள் போகிய வணிலாடு முன்றிற், புலப்பில் போலப் புல்லென், றலப்பேன் றோழியவ ரகன்ற ஞான்றே" குறுந். ௪௧. (ஆ) "நால்வேறு தேவரு நலத்தகு சிறப்பிற், பால்வேறு தேவரு மிப்பதிப் படர்ந்து, மன்னன் கரிகால் வளவனீங் கியநா, ளிந்நகர் போல்வதோ ரியல்பின தாகிப், பொன்னகர் வறிதாப் போதுவர்" மணி. ௧: ௩௭-௪௧. (இ) கம்ப. அயோத்தி. ஆற்று. ௪௫.

(பிரதிபேதம்) * அருளி அக்கணவர், † விட்டமகளிர்.

கஉ கூடினர் புரிந்து (க) குணனுணப் பட்டோர்
சூடின ரிட்ட பூவோ ரன்னர்

எ - து: மனம் விரும்பிக் கூடின கணவராற் றங் குணத்தை நுகர்ந்து விடப்பட்ட மகளிர், முடிப்பார் முடித்துப்போகட்ட பூவை ஒப்பர், அந்நிலைமை ஓர்ந்துபார்; எ - று.

இவை "உண்டற் குரிய வல்லாப் *பொருளை" என்னும் (உ)சூத்திரத்தில் உய்த்துக்கொண் டுணர்தலென்பதனாற் கொண்டாம்.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு, அசை.

இது தனிச் சொல்.

கரு யானு நின்னகத் தனையே னானது
கொலைவெங் கொள்கையொடு † நாயகப் படுப்ப
‡ வலைவர்க் கமர்ந்த மடமான் போல
(ங) நின்னாங்கு வரூஉமென் னெஞ்சினை
யென்னாங்கு வாரா தோம்பினை கொண்மே

எ - து: நின்னிடத்து யானும் பயன்படாததன்மையையுடையேன், இனிக் கொலைத் தொழிலிடத்துக் கடிய கோட்பாட்டோடே நாய் அமையாமற் சென்று தனக்கு உரித்தென்று || அகப்படுத்திக்கொள்ள அதற்கு உரித்தாகாது வலைவர்க்கு அமர்ந்துவிட்ட மடமான்போலே எனக்கு உரித்தாக யான் அகப்படுப்பவும் என்னாங்கு வாராமல் நின்னாங்குவரும் என் நெஞ்சினைப் பாதுகாத்துக் ÷ கொள்; எ - று.

இது சுரிதகம்.

இதனால், தலைவிக்கு இழிவும் தலைவற்கு அசைவும் பிறந்தன.

நின்னாங்கு என்னாங்கு என்பன நின்னுடைய கையிடத்து என்னுடைய கையிடத்து எனச் சுட்டுப் பொருள்(?) தந்தவாறுணர்க.

இஃது இனியான் எனத் தனிச்சொல்லும் ஓரடியான் ஒன்றும் பெற்று வந்த கொச்சகம்; இது "பாநிலைவகை" என்னும் (ச) சூத்திரவிதி. (உஉ)

---

க. ஓசையாற் சன மொண்ணிதி யுண்டதே யென்னுமிடத்து உண்டதென்பதற்குக் கைக்கொண்டதென்று பொருள் கூறி "உண்டற் குரியவல்லாப்பொருளை, யுண்டனபோலக்கூறலுமரபே" என்றதனால் உண்டதென்றார்; 'குணனுணப் பட்டோர்' என்றார்போல "என இப்பகுதியை இவ்வுரை யாசிரியர் மேற்கோள் காட்டினர். சீவக. கககக.

உ. தொல். பொருளி. சூ. கக. இந்நூற் பக்கம் கஙo: க-குறிப்புப் பார்க்க.

ங. (அ) காவற்பாங்கி னாங்கோர் பக்கமு மென்புழி, காவற் பாங்கினாங் கென்பதற்கு, காவற் பக்கத்தின் கண்ணே யெனப்பொருளும் ஆங் கென்பது இடங்குறித்து நின்றதென விளக்கமு மெழுதி 'நின்னாங்கு வரூஉமென் னெஞ்சினை' என்னும் பகுதியை மேற்கோள் காட்டினர். இளம். தொல். அகத். சூ. சச. 'ஒன்றாத்தமரினும்'. (ஆ) "நின்னாங்கு வருவது போலும்" மணி. கக: சஎ.

ச. தொல். செய். சூ. கருகூ

(பிரதிபேதம்) * பொருளையும்" என்னும், † நாயகப்படுப்ப, ‡ வலைவறகமாந்த, || அகப்பற்றிக்கொள்ள, ÷ கொள்ளென இறந்தபாடு தோன்றக்கூறினாள்.

(௨௪) (க) நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தா
மஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொ
லின்றீங் கிளவியாய் வாய்மன்ற (௨) நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
௫ மிதுவொன் றுடைத்தென வெண்ணி யதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
(௩)பாயல்கொண் டென்றோட் * கனவுவா ராய்கோற்
(௪) றொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ

---

க. இச்செய்யுள் பிரிதலுற்ற தலைமகன் குறிப்புக் கண்டு தலைமகள் கூறியதற்கும் (தோல். அகத். சூ. சரு. 'எஞ்சியோர்க்கும்' இளம்.) அந்தணர் பொருண் முடித்தற்காகத் தூதுபற்றிப் பிரிதற்கும் (தோல். அகத் சூ. உகூ. நச்.) தலைவன்க ணிகழ்ந்தது தலைவிநினைந்து தோழிக்குக் கூறியதற்கும் (தோல்.அகத்.சூ. சரு. நச்.) பிரியக்கருதிய தலைவன் பள்ளி யிடத்துக் கனவிற் கூறுத லாகிய வேற்றுநாட் டகல்வயின் விழுமத்துக்கும் (தொல். கற் சூ. ரு. நச்.) பதினே ழடியான் வந்தகலி வெண்பாட்டிற்கும் (தோல். செய் சூ. கசுo. பே.) மேற்கோள்.
"நெஞ்சு நடுக்குற...........மிதுவொன் றுடைத்தென வெண்ணி" என்பது பாராட்டினுல் தலைமகன் பிரிவு தலைமக ளுணர்ந்ததற்கு மேற்கோள். தோல். பொருளியல் சூ. ௩௬. 'செய்பொருள்' இளம். "நெஞ்சுநடுக்குறக் கேட்டுமெய்வருந்தி" மணி. உ௪: ௪.

௨. "நின்கேள், புதுவது...........றுடைத்தென வெண்ணி" என்பது தோழிகேட்பத் தலைமகள் கூற்று வந்ததற்கு மேற்கோள். தோல். செய். சூ. ககசு. பே. நச்.

௩. (அ) அரற்றென்பது உறக்கத்தின்கண்வரும் † வாய்ச்சொலவு; அதுவும் ஏனைச் சொல்லின் வேறுபடுதலின் அரற்றென ஒரு மெய்ப்பா டாயிற்று; முன் உறக்கம்வைத்தலானும் பின் கனவுவைத்தலானும் இப்பொருள் உரைக்கப்பட்ட தென்று கூறி, "பாயல்கொண்டென் றோட் கனவுவா ராய்கோற்...........செய்பொருண் முற்றுமளவு" என்பதனை அம்மெய்ப்பாட்டுக்கு மேற்கோள் காட்டினர். இளம் பூரணர்; தோல். மெய்ப். சூ. க௨.
(ஆ) "காதல் பெருமையிற் கனவினு மரற்றும்" என்பது புறம் கக௮:.

௪. கையாறென்பது காதலர் பிரிந்தால் வருந் துன்பமும் அந்நிகரன பிறவுமென்று கூறி, "தொடிநிரை...........வல்லுவள் கொல்லோ" என்பதனை அம்மெய்ப் பாட்டுக்கு மேற்கோள் காட்டினர், இளம் பூரணர்; தோல். மெய்ப். சூ. க௨.

(பிரதிபேதம்) * கனவுவான், † வாய்ச்சோர்வு.

௧௦ (க)விடுமருப் பியானை யிலங்குதேர்க் கோடு
நெடுமலை வெஞ்சுரம் போகி (உ) * நடுநின் று
செய்பொருண் முற்று மளவென்று ராயிழாய்
தாமிடை கொண்ட ததுவாயிற் றம்மின்றி
யாமுயிர் வாழு மதுகை † யிலேமாயிற்
௧௫ றெய்யி றுறந்தா ரவரெனத் தம்வயி
னெய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று ‡ சொல்லென் னுயிர்.

இது தலைமகன் குறிப்புக் கண்டு பிரிவனென ஐயுற்றுச் செல்கின்ற தலைவி அக்காலத்துத் தலைவன் கனவின் அரற்றினமைகேட்டுப் பொருள் வயிற் பிரிகின்றனெனத் துணிந்து ஆற்றளாய்த் தோழிக்குச் சொல்லியது.

இது "மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே" (௩) என்பதனுல் அந்தணன் அறங் கருதித் தூதிற்பிரிந்து அவ்வரசர் செய்த பூசனை வாங்கிக் கொண்டு வருதற்குப் பிரிகின்றதென்று கொள்க. இது "வேற்று நாட் டகல்வயின் விழுமம்" (௪) கூறுகின்றது.

இதன் பொருள்.

இன்றீங்கிளவியை யுடையாய்! நெஞ்சு நடுக்கமுறும்படி பலகாலுங் கேட்டும் கேட்டஅதனை உண்டோ இல்லையோ வென்று ஐயுற்றும் தாம் அஞ்சியிருந்த பொருள் தாங் கேட்டபடியிலே மெய்யாய் வருத்தமாமெனும் பழமொழி, அறுதியாக உண்மை; அஃது எங்ஙனேயென்னில், நின்னுடைய || உறவானவர், பலநாளும் புதியதொன்றாக என்னைப் பாராட்டுகையினலே யானும் இப்பாராட்டுதல் ஒரு பிரிவையுடைத்தென்று கருதி அப்பிரிவை ஆராயா நிற்க, (ரு)ஐந்துவகையாகக் கூட்டின மாசில்லாத வண்மையையுடைய

௧. இடுதலென்பது இவ்வாறே குத்துதலென்னும் பொருளில் வருதலை (அ) "எயிறு படையாக வெயிற்கத விடாஅ" என்னும் புறம். ௩. மூலமும் அதனுரையும் (ஆ) "இடுமருப் பியானையூ ரிருது பன்னன் பால்" உத்தரகோச. நளசக்கர. ௧௧. என்பதும் வலியுறுத்தும். (இ) "இடுமருப் பியானை யெறிந்த வெற்கே" புறம். ௩௦௩: ௧. பிரதிபேதம்.

உ. "நடுநின்று செய்பொருண் முற்று மளவென்றார்" என்றலின் எத்துணையும் அணித்தாக மீள்வலென்ற தாமென இதனை அந்தணன் சந்துசெய்து பொருளீட்டுதற்குப் பிரியும் தூதிற்பிரிவிற்கு மேற்கோள் காட்டினர், இவ்வுரையாசிரியர்; தொல். கற்பியல் சூ. ௪௧.

௩. தொல். அகத். சூ. ௨௧. ௪. தொல். கற். சூ. ரு.

ரு. "சிறுபூளை, செம்பஞ்சு, வெண்பஞ்சு, சேணம்,-உறுதூவி தாமிவை யோ ரைந்து"

(பிரதிபேதம்) * நடுநின்றெஞ், † இலமாயிற, ‡ கொல்லென், || உறவானவன்.

படுக்கையிற் புணர்ந்த புணர்ச்சியிடத்தே என் (க) தோளிலே துயில்கொண்டு கணுக்காண்கின்றவர், ஆராய்ந்த கோற்றொழிலையுடைய செறிந்த தொடியணிந்த முன்கையினையுடையாள் கையாறுகொள்ளாளாய்க், குத்துங் கொம்பினையுடைய யானை நீர் வேட்கையினாலே விளங்குகின்ற பேய்த்தேரின் பொருட்டு ஓடும் நெடுமலையில் வெய்யசுரத்தைப் போய் இரு பெரு வேந்தரையுஞ் சந்துசெய்வித்தற்கு நடுவாகநின்றுசந்துசெய்வித்தபின்னர் யாம் பெறுதற்கு உரியவாய் அவர் எமக்குச்செய்யும் பூசனையாகிய பொருள் அவர் தந்து முடியுமளவும், தனக்கு வரைவினையுடைய இல்லறத்தையுங் காத்துச் செந்தீயையும் பாதுகாக்க வல்லளோவென்று கூறினார்; ஆய்ந்த இழையினையுடையாய்! நங் காதலர் கூட்டத்திற்கு இடையீடாகக் கொண்ட காரியம் பொருள்வயிற் பிரிவாயின், யாம் தம்மைப் பிரிந்து உயிர்வாழும் வலியிலேமாயின், இனி, அவள் மார்பிற் றொய்யிலை நீங்காதவர் இப்பொழுது துறந்தாரென்று நொய்ய மகளிர் கூறும் பழி தம்மிடத்தே நிற்ப, என்னுயிர் தம்மோடேகூடப் போயிற்றென்று சொல்; * எ - று.

நெஞ்சுநடுக்குறக் கேட்டது இவ்வாலிலே பேயுண்டென்று கேட்டாற் † போல்வது. இன்கிளவி, பின்பு காரியத்தில் இனிய கிளவி; தீங்கிளவி, கேட்டகாலத்தில் இனிய கிளவி.

கனவுவாரென்றது தொடங்கி என்றாரென்ற துணையும் கனவென்னும் மெய்ப்பாடு. கையாறு, உயிர்ப்பின்றி வினையொழிந்தயர்தல். தொய்யிலவரெனக் கூட்டுக.

போயின்றென்ற குற்றுகரம் இன்பெற்று ‡ னகரந் திரியாமல் நின்றது; தெளிவுபற்றி இறந்தகாலத்தாற் கூறினாள்.

இதனால், தலைவிக்கு ‖ இழிவும் தோழிக்கு அச்சமும் பிறந்தன.

இது சீருந் தளையுஞ் சிதையாமற் பன்னீரடியின் இகந்து ஒரு பொருளுதலாத சீர்வகைக் கலிவெண்பா. (உங)

(உரு) (உ)வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற
முகத்தவன் மக்களுண் முதியவன் புணர்ப்பினா
லைவரென் றுலகேத்து மரசர்க ளகத்தராக்
கைபுனை யரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தாங்குக்
(ரு) களிதிகழ் கடாஅத்த கடுங்களி றகத்தவா
முளிகழை யுயர்மலை முற்றிய முழங்கழ
லொள்ளுரு வரக்கில்லை வளிமக னுடைத்துத்தன்
னுள்ளத்துக் கிளைகளோ டுய்ப்போகு வான்போல

க. கலி. கஉகூ : கரு ஆம் அடிக் குறிப்புப் பார்க்க.

உ. இச்செய்யுள் தரவு பன்னிரண்டடியான் வந்ததற்கு மேற்கோள். தொல். செய். சூ. கஙக. 'போக்கியல்' இளம்.

(பிரதிபேதம்) * எனத் தோழிக்குக்கூறினாள், † போல்வன, ‡ இனத்தாற்றிரியாமல், ‖ இழிவுபிறந்தது ; தோழிக்கு அச்சம் பிறந்தது.

வெழுவுறழ் தடக்கையி னினக்காக்கு மெழில்வேழ
க0 மழுவஞ்சூழ் புகையழ லதர்பட மிதித்துத்தங்
குழுவொடு புணர்ந்துபோங் குன்றழல் வெஞ்சுர
மிறத்திரா லையமற் றிவணிலைமை கேட்டீமின் ;

கரு. மணக்குங்கான் மலரன்ன தகையவாய்ச் சிறிதுநீ
தணக்குங்காற் கலுழ்பானுக் கண்ணெனவு முளவன்றே
சிறப்புச்செய் துழையராப் புகழ்பேற்றி மற்றவர்
புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார் தொடர்புபோல்;

கள ஈங்குநீ ரளிக்குங்கா லிறைசிறந் தொருநாணீர்
நீங்குங்கா னெகிழ்பேக்கும் வளையெனவு முளவன்றே
செல்வத்துட் சேர்ந்தவர் வளனுண்டு மற்றவ
ரொல்கிடத் துலப்பிலா வுணர்விலார் தொடர்புபோல் ;

உக ஒருநாணீ ரளிக்குங்கா லொளிசிறந் தொருநாணீர்
பாராட்டாக் காற்பசக்கு நுதலெனவு முளவன்றே
பொருந்திய கேண்மையின் மறையுணர்ந் தம்மறை
பிரிந்தக்காற் பிறர்க்குரைக்கும் பீடிலார் தொடர்புபோல் ;
எனவாங்கு ;

உரு யாநிற் கூறுவ தெவனுண் டெம்மினு
நீநற் கறிந்தனை நெடுந்தகை வானந்
துளிமாறு பொழுதினிவ் வுலகம் போலுநின்
னளிமாறு பொழுதினிவ் வாயிழை கவினே.

இது பிரிவுணர்த்தப்பட்ட தோழி நீ பிரிந்தாற் பீடிலார் தொடர்பு போல நும்மை அலர் தூற்றுவன இவ்வகைப்பட்டன சிலவுளவெனத் தலைவி ஆற்றமை கூறிச் செலவழுங்குவித்தது.

இதன் பொருள்.

(க)வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற
முகத்தவன் மக்களுண் முதியவன் புணர்ப்பின்

---

க. சீர்வகையான் வருங் கலியடி தளை விரவி வருதற்கு "வயக் குறு மண்டிலம் வடமொழிப் பெயர் பெற்ற" என்பது மேற்கோள், தொல். செய் சூ. சுக. நச்.

(௧) லைவரென் றுலகேத்து மரசர்க ளகத்தராக்
கைபுனை யரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தாங்குக்
௫ களிதிகழ் கடாஅத்த கடுங்களி றகத்தவா
(௨) முளிகழை யுயர்மலை முற்றிய முழங்கழ
லொள்ளுரு (௩)வரக்கில்லை வளிமக னுடைத்துத்தன்
னுள்ளத்துக் * கிளைகளோ டுயப்போகு வான்போல
வெழுவுறழ் தடக்கையி னினங்காக்கு மெழில்வேழ
௧௦ மழுவஞ்சூழ் புகையழ லதர்பட மிதித்துத்தங்
குழுவொடு புணர்ந்துபோங் குன்றழல் வெஞ்சுர
(௪) மிறத்திரா லையமற் றிவணிலைமை கேட்டீமின்

எ - து: வடமொழிப் பெயர்பெற்ற வயக்குறு மண்டிலம்போலும் முகத்தவனுடையமக்களுள் மூத்ததுரியோதனன் சூட்சியாலே, ஐவரென்று உலகத்தார் புகழுந் தன்மபுத்திரர் முதலியோர் உள்ளேயாகக், கையாலே புனையப்பட்ட அரக்குமாளிகையை விரைந்து நெருப்புச்சூழ்ந்தாற்போல, களிப்பு விளங்குகின்ற மதத்தவாகிய கடிய களிறுகள் உள்ளேயாக, உலர்ந்த மூங்கிலையுடைய உயர்ந்த மலையைச் சூழ்ந்த முழங்குகின்ற அழலைக், கணையத்தை † மாறுபடுகின்ற தடக்கையினையுடைய ‡ தம் இனத்தைக் காக்கும் அழகினையுடைய வேழம், புகையழலையுடைத்தாகிய ஒள்ளிய உருவத்தினையுடைய அவ்வரக்கில்லை அந்த வீமசேனன் அழித்துத் தன் உளத்திற்குப் || பொருந்தின சுற்றத்தோடே பிழைக்கப் போகின்றவனைப்போல, அதர்படும்படி மிதித்துத் தம்முடைய திரளோடே கூடிப் போதுங் காட்டுப் பரப்புச் சூழ்ந்த குன்று அழலும் வெய்தாகிய சுரத்தை இறப்பீராயின், ஐயனே! பின்னை இவளுடைய நிலைமையைக் கேட்பீராக; எ - று.

---

௧. (அ) "கூரெரி வளைக்கப்பட்ட, பஞ்சவர் போலநின்ற பகட்டினப் பரிவு தீர்த்தான்." சீவக. ௧௨௩௭. (ஆ) "மும்மதக் களிவேழ மூடிய விருளத்துச், செம்மணிக் குகையுள்ளாற் சேவகங் கொண்டொழிந்து, சும்மைகொண் டொளிர்கிரணச் சோதியைத் தழலென்று, விம்மென வீமனைப்போ லினத்தொடு மிரிவன வால்" பேரூர். காமதேனு. ௫௦.

௨. சீர்வகை மேற்கதுவாய் மோனைக்கு "முளிகழை.........முழங்கழல்" என்பது மேற்கோள். தோல். செய். சூ. ௯௨. நச்.

௩. இச்செய்தி உய்வதற் குய்யா விடமில்லை யென்பதற்கு "அரக்கிலலுட், பொய்யற்ற வைவரும் போயினு ரில்லையே, யுய்வதற்குய்யா விடம்" என உதாரணமாக்கப் பெற்றுள்ளது. பழ. ௨௮௦

௪. தஞ்சை. ௨௨௪ விசேடவுரையில் "வாரன்மின் ஒருமை பன்மை மயக்கம்; என்னை? வயக்குறுமண்டில மென்னும் பாலைக்கலியில் 'இறத்திரா லையமற் றிவணிலைமை கேட்டீமின்' என்றனபோலக் கொள்க" என இப்பகுதி மேற்கோளாக வந்துள்ளது; ஆராய்க.

(பிரதிபேதம்) * கிளையோடு † மாறுபடுக்கின்ற, ‡ தன், || பொருந்தியவன் சுற்றத்தோடே

வடமொழிப்பெயர் பெற்ற வயக்குறு மண்டிலம் போலும் முகத்தவ னென்றது, (௪)¹ ஆதித்தரிற் (உ) *பகனென்னும் வடமொழிப்பெயரைப் பெற்ற விளங்குதலுறும் ஆதித்தனைப் போலும் முகத்தையுடையவனென்பது. , அவன் தான் குருடாயினமையிற் பிறரைக்காணாதவாறுபோல இவனும் பிறரைக் காணாத முகத்தையுடையவனென்றவாறு. என்றது †திருதராஷ்டிரனை. இனி விளக்கமுற்ற (௩) கண்ணாடியின் பெயரை வடசொல்லாகிய பெயராற் பெற்ற முகத்தவன் என்றலுமாம். அது (௪) ‡தர்ப்பணானனனென்னும்பெயரை. அது பிறரைத்தான்காணாதவாறுபோல இவனும் பிறரைக்காணானென்றதாம். இனி, விளக்கமுற்ற நாடெனநின்ற அச்சொல்லினைத் ||திருதராஷ்டிரனென்னும் வட மொழிப் பெயராலே தமிழ்ச்சொலீறாகத் திரித்த ÷ததராயனென்னும் பெயர் பெற்ற, பாண்டுவுக்கு மூத்தவனென்றும் (?) உரைப்ப.

முற்றிய முழங்கழலை இனங்காக்கும் வேழம், புகையழலையுடைய அவ்வரக்கில்லை அவ்வளிமகன் உடைத்துக் கிளைகளோடே போவான்போல அதர்பட மிதித்துக் குழுவொடு புணர்ந்துபோஞ் சுரமென்க. அழலை மிதித்துப் போமென முடிந்தது. அழுவஞ்சூழ் குன்று அழல்சுரமென்க. இது சுரத்திற்கு அடை.

(௫)ஐய! கேண்மினென்பது, ஒருமைப்பன்மைமயக்கம். ஆயில், ஆலென விகாரமாயிற்று.

இது தரவு.

---

க. "வழுவில் சிறப்புவாய்ந்த வடசொற் பெயரால் விளங்கு, மழல்வெம் பருதி வதனத் தரசற் கண்டானன்றே" பாக. (க0) அக்குரூரனை. ௩.

உ. சிவபெருமானேவலால் தக்கன்வேள்வியை அழிக்கச்சென்ற வீரபத்திர நாயனாரால் ஒறுக்கப்பட்ட தேவர்களில் ஆதித்தர் வகையின்கண் அரியமா பூடா பகனென்னு மூவருள், பகனென்பவன் கண்ணிழந்தா னென்பது புராணகதை; (அ) "பகன்கண் கொண்டார்" தே. (ஆ) "பகன்றாமரைக்கண் கெடக்கடந் தோன்" கோவையார். ௧அ௪.

௩. மண்டிலம் - கண்ணாடி; "கையகத் தெடுத்துக் காண்போர் முகத்தை, மையறு மண்டிலம்போலக் காட்ட" மணி. உ௫: ௧௩௬ - எ.

௪. "முகுர வானனனும்" சம்பவ. ௧௧௫. "முகமுகு ரம்புரை முதலொடு" வாரணவத.௧0உ. "ஆடித் திருமுகமன்னவன்" அருச்சுனன் றவ. ௧௬௫. "முகுரானனன்மைந்தனும்""ஆடிமுகத் தரசினுக்கும்"பதினேட்டாம், ௧௬௪. உ௩௬. என்னும் பாரதச் செய்யுட்களும் இக்கருத்துப் பற்றி வந்தன.

௫. "ஐயகேண்மின்" கலி. உ: ௧0; பக்கம், ௧௬: ௩ - குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்)* அனுகனென்னும், † திரித, ‡ தர்ப்பணனென்னும், || திரித, ÷ தாயனென்னும்.



4. ஆடியானனன் விபா

௧௬ மணக்குங்கான் மலரன்ன தகையவாய்ச் *சிறிதுநீர்
(௧) தணக்குங்காற் கலுழ்பானுக் கண்ணெனவு முளவன்றே
(௨) சிறப்புச்செய் துழையராப் † புகழ்பேத்தி மற்றவர்
(௩) புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார் தொடர்புபோல்

எ - து: தம்மிடத்தே இருந்தாராக அவர்களுக்குச் சிறப்புக்களைச் செய்து புகழ்ந்துவாழ்த்தி அவர் எழுந்த அளவிலே அவர்க்குள்ள பழிகளைப் பலர்க்குங் கூறும் புறங்கூறுவாருடைய உறவுபோல நீர் கூடியிருக்குங் காலத்துச் செவ்வியைத் தோற்றுவித்து மலரையொத்த தகைமையினையுடைய வாய்ச் சிறிதுபொழுது நீர் பிரியுங்காலத்து நும் பழியைத் தூற்றி அழுத லமையாத கண்ணெனவுஞ் சில பகை உளவன்றே? எ - று.

அப்பகையைப் பேணுங் கண்ணெனவு மென்றது "கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை" (௪) எனப்பட்டும் ‡ பகையாயிருக்குமென்னுங் குறிப்பிற்று.

௧௭ ஈங்குநீ ரளிக்குங்கா லிறைசிறந் தொருநாணீர்
நீங்குங்கா ||னெகிழ்போடும் வளையெனவு முளவன்றே
(௫) செல்வத்துட் சேர்ந்தவர் வளனுண்டு மற்றவ
÷ரொல்கிடத் துலப்பிலா வுணர்விலார் தொடர்புபோல்

---

௧. "தணத்தல்" நீக்கங் குறித்து வருதற்கு "தணக்குங்காற் கலுழ்பானுக் கண்ணெனவு முளவன்றே" என்பது மேற்கோள்; தொல். உரி. சூ. ௭௧. 'அன்னபிறவும்' தெய்.

௨. (அ) "நட்டார்ப் புறங்கூறுன் வாழ்த னணியினிதே" இனியது. ௨௦. (ஆ) "முன்னின் றொருவன் முகத்தினும் வாயினுங், கன்னின் றுருகக் கலந்துரைத்துப் - பின்னின், றிழித்துரைக்குஞ் சான்றோரை யஞ்சியே தேவர், விழித்திமையா நின்ற நிலை" அற. ௪௧. (இ) "புறங் கூற்றுளர்" என்பதற்கு "சிறப்புச் செய்துழி உழைநின் றுபுகழ்ந்து அவர் புறக்கொடையிற் பழிதூற்றுவார்" என இவ்வடிகளின் சொற்பொருளை உட்கொண்டு அடியார்க்கு நல்லார் எழுதியிருத்தல் ஈண்டு அறியத்தக்கது. சிலப். ௫: ௧௩௧.

௩. "தம்பி புறக்கொடைகாத்து நிற்ப" கம்ப. மாயாசனக. ௨௩ என் பதனுலும் புறக்கொடை யென்னும் சொல்லின் பொருளை ஆராய்க.

௪. நான்மணி. ௫௬.

௫. (அ) "நிறைந்தோர்த் தேரு நெஞ்சமொடு குறைந்தோர்ப், பயனின் மையிற் பற்றுவிட் டொரூஉ, நயனின் மாக்கள்" அகம். ௭௧. (ஆ) "காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து, மேலாடு மீனிற் பலராவ-ரேலா, விடரொருவ ருற்றக்கா லீர்ங்குன்ற நாட, தொடர்புடையே

(பிரதிபேதம்) * சிறிதுநீ, † புகழ்போற்றி. ‡ பகையாமென்னும், || நெகிழ்போகும், ÷ ஒல்கத்து நல்கிலா வுணர்விலார்.

எ - து: ஒருவர்க்குச் செல்வமுண்டான இடத்து நீங்காதிருந்து அவருடைய செல்வத்தை நுகர்ந்து பின்னை அவர் (க) மிடித்தகாலத்து அவர்க்கு ஒன்றை உதவுதலில்லாத அறிவில்லாதாருடைய உறவுபோலே நீர் இவ்விடத்தே கூடியிருந்து அருள்செய்யுங்காலத்து இவட்கு உண்டாகிய அழகைத்

---

மென்பார் சிலர்" (இ) "இலாஅஅர்க் கில்லை தமர்" (ஈ) "உண்டாய போழ்தி னுடைந்துழிக் காகம்போற், றொண்டா யிரவர் தொகுபவே—வண்டாய்த், திருதருங் காலத்துத் தீதிலிரோ வென்பா, ரொருவரு மிவ்வுலகத்தில்" (உ) "வாழாதார்க் கில்லைத் தமர்" நாலடியார் ககரு, உஅரு, உஅச, உகூ0. (ஊ) "கெட்டறிப கேளிரா னுய பயன்" நான்மணி. ரு. (எ) "கடையாயார் நட்பேபோற் காஞ்சி நல்லூர, வுடைய விளநல முண்டாய்" திணைமொழியைம். ருரு. (ஏ) "கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ, பெட்டாங் கவர்பின் செலல்" குறள். கஉகூரு. (ஐ) "முட்டின் றொருவ ருடைய பொழுதின்க, ணட்டிற்றுத் தின்பவ ராயிரவ ராபவே, கட்டலர்தார் மார்ப கலியூழிக் காலத்துக், கெட்டார்க்கு நட்டாரோ வில்" பழ. ருக. (ஒ) "அற்ற குளத்தி லறுநீர்ப் பறவைபோ, லுற்றுழித்தீர்வா ருறவல்லர்" மூதுரை. (ஓ) "பொருள்கை யுண்டாய்ச் செல்லக் காணிற் போற்றியென் றேற்றெழுவ, ரிருள்கொ டுன்பத் தின்மை காணி லென்னேயென்பாருமில்லை." திருவாய்மொழி. (கூ.) க: ரு. (ஔ) "தொழுமக னுயினுந் துற்றுடை யானைப், பழுமரஞ் சூழ்ந்த பறவையிற் சூழ்ப, விழுமிய ரேனும் வெறுக்கை யுலந்தாற், பழுமரம் வீழ்ந்த பறவையிற் போப" வளையாபதி. (ஃ) "நறிதாநல் லமிர்துண்ண நல்கலிற், பிறியாவின் னுயிர் பெற்ற பெற்றிதா, மறியாரோ நமனுர தன்றெனிற், சிறியாரோ வுபகாரஞ் சிந்தியார்" கம்ப. அரசியற். சு. (அஅ) "வார்க்குறு வனைகழற் றம்முன் வாழ்ந்தநாள், சீர்க்குற வாயிடைச் செறுநர் சீறிய, போர்க்குற வன்றியே புகுந்த போதிவ, ணூர்க்குற வாகுவ னருளி னுழியாய்." கம்ப. விபீடண. கூகூ. (ஆஆ) "உள்ளபோ தினிதுண்டிலாதபோ தவரோ டுறவுவிட் டுறுமிடந் தேடு, மொள்ளிய ரல்லா ருறவுபோல்" இராமா. சீதைவனம் புகு. கஅ. (இஇ) "வாழ்ந்தார்க் குறவு வழியினு முளதாந், தாழ்ந்தார்க் குறவிலை தமரினும்" புலவாராற்.........(ஈஈ) "படைப்பதற்கே யரிய பொருள் கொண்டார்க் கல்லாற் பயன்பயவாத், துடைப்பதற்கே யரும்வறுமை யவர்க்கொன் றுண்டோசுற்றமதே"தேம். மகவருள். சுஉ.

க. குறள். கஃகூரு-இன் விசேடவுரையில் "ஒல்கிடத்துலப்பிலா வுணர்வில்லார் தொடர்பாயிற்று நின்றொடர்பென்பதாம்" என இவ்வுரைக்கு மூலமாகிய அடியை அமைத்தெழுதியிருத்தல் ஈண்டு அறிதற் பாலது.

தா[னு](மு)ம் பெற்று இறையிலேசிறந்துகாட்டி ஒருநாள் நீர்பிரியுங்காலத்துத் தோள் மெலிகையினுலே தா[ன்](ம்) உதவிசெய்யாது கழன்றுபோம் வளை யெனவுஞ் சில பகை உளவன்றே? எ - று.

அப்பகையைப்பேணும் வளையெனவுமென்றது (க) சிறந்து அழகுதருமாயி னும் பகையாயிற்றென்னுங் குறிப்பிற்று.

உக ஒருநாணீ ரளிக்குங்கா லொளிசிறந் தொருநாணீர்
பாராட்டாக் காற்பசக்கு நுதலெனவு* முளதன்றே
பொருந்திய (உ) கேண்மையின் மறையுணர்ந் தம்மறை
பிரிந்தக்காற் பிறர்க்குரைக்கும் பீடிலார் தொடர்புபோல்

எ - து: இருவர் மனமும் பொருந்திய நட்பாலே அவன்கூறிய மறைப் பொருளை அறிந்து அம்மறைப் பொருளை அவன் நீங்கினுற் பிறர்க்கு இருந்து சொல்லும் பெருமை யில்லாதார் உறவுபோலே ஒரு நாள் நீர் அளிசெய்யுங் காலத்து நும் அளிக்குத் தானுங் கூடினுற்போன்று ஒளி மிக்கு ஒரு நாள் நீர் அளியாக்காலத்து நும்முடைய குணத்தைப் பிறர்க்கு அறிவித்துப் பசந்து காட்டும் நுதலெனவும் ஒரு பகை உண்டன்றே? எ - று.

அப்பகையைப் பேணும் நுதலெனவுமென்றது, சிறப்புறுப்பாய் அழகு கொடுத்தற்கு உரியது பகையாயிற்றென்னுங் குறிப்பிற்று. மெய்யெல்லாங் கோலஞ்செய்தாலும் நுதற்குத் திலகம் முதலியன தீட்டாக்கால் அவை கோல மாய்த்தோன்ருததன்மை நுதற்கு உளதாகலின், † அது சிறப்புறுப்பாயிற்று.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு ; எ - து: என்று ; எ - று. ஆங்கு அசை.

இது தனிச்சொல்.

உகூ (ங) யாநிற் கூறுவ தெவனுண் டெம்மினு
நீநற் கறிந்தனை நெடுந்தகை (ச) வானந்

க. "விரும்பிய குழைதொடி மின்செய் கண்டிகை, மருங்கிறச் சுமப்பினும் வளைக்கில்லெனி, னரும்பிய முலையினுர்க் கழகுண் டாகுமோ" திருவிளை. வளையல். உச.

உ. "நட்டான், மறைகாவா விட்டவன் செல்வுழிச்செல்க" நாலடி உங0.

ங. "யாநிற்கூறவு மெமகொள்ளா யாயினை" கலி. ங: கக.

ச. (அ) "வானத் துளிநோக்கி வாழுமுலகம்" (ஆ) "மழையின்றி மாநிலத் தார்க்கில்லை" நான்மணி. உஅ, சஅ. (இ) "வானேக்கிவாழு முலகெல் லாம்" குறள். ருசஉ. (ஈ) "துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த, னளியின்மை வாழு முயிர்க்கு" குறள். ருருஎ. (உ) "வானேக்கி நிற்குமுலகென்னவும்" கந்த. திருநகரப். கூஉ. என்பவையும்; (ஊ) "தூமகேது புவிக்கெனத்தோன்றிய" கம்ப. மந்தரைசூழ்ச்சி. உக. என்பதும் (எ) "விசும்புமெய்யகல" 'என்பதற்கு' மழை யில்லாமைக்கு உற்பாதமாகிய தூமத்தோற்றமின்மையான், ஆகாயவெளி தன்வடிவு

(பிரதிபேதம்) * உளவன்றே, † சிறப்புறுப்பாயிற்று.

துளிமாறு பொழுதினிவ் வுலகம் போலுநின்
னளிமாறு பொழுதினிவ் வாயிழை கவினே

எ - து: யாம் நினக்குக் கூறுகின்ற வார்த்தையால் என்னபயன் உண்டு? எம்மினுங் காட்டில் அப்பகை யுண்மையை நீ நன்றாக அறிந்தாய்; அதுவுமன்றி, நெடுந்தகாய்! இந்த ஆராய்ந்த இழையினையுடையாளழகு, நீ அளித்தலை நீங்குங் காலத்து இவ்விடத்து வானந் துளிமாறுபொழுது இவ் வுலகங் கெடுமாறுபோலக் கெடுங்காண்; அதனை உட்கொள்ளாய்; * எ - று.

இது சுரிதகம்.

இதனால், தோழிக்கு இழிவும் தலைவற்கு அசைவும் பிறந்தன.

இது பெருமைக்கெல்லை கூறிய பன்னீரடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. (உச)

(உரு) (க) ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்
பருதியஞ் செல்வன்போ னனையூழ்த்த செருந்தியு
மீனேற்றுக் கொடியோன்போன் மிஞிறார்க்குங் காஞ்சியு
மேனோன்போ னிறங்கிளர்பு கஞலிய ஞாழலு

ரு மானேற்றுக் கொடியோன்போ லெதிரிய விலவமு மாங்குத்
தீதுதீர் சிறப்பி னைவர்க ணிலைபோலப்
போதவிழ் மரத்தோடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்றா லிளவேனின் மேதக;

கூ பல்வரி யினவண்டு புதிதுண்ணும் பருவத்துத்
தொல்கவின் றொலைந்தவென் றடமென்றோ ளுள்ளுவா
யொல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
வெல்புக ழுலகேத்த விருந்துநாட் டுறைபவர்;

---

பண்டையில் அகன்றாற்போலத்தோன்ற என்றவாறு' பதிற். சுகூ-கடு. என்ற வுரையும் ஈண்டு அறியற்பாலன.

க. பகைமேற்சென்ற அரசன் திறைபெற்ற நாடுகொத்து அதன்கட் டங்கி னெறிமுறைமை அடிப்படுத்தப் பிரிந்ததற்கு இச்செய்யுளை மேற் கோள்காட்டி "இதனுள் ஒல்குபுநிழல் சேர்ந்தார்க்கெனவே,முன்னர் ஆள்பவர்கலக்குறுத்த அலைபெற்றுப் பின் தன்னைநிழலாகச் சேர்ந்தா ரென்பதூஉம், அவர்க்குப் பின்னர் உலைவு பிறவாமற் காத்தா னென்பதூஉம், விருந்து நாட்டென்பதனால் திறைபெற்ற புதியநா டென்பதூஉம் பெற்றாம்; ஏனையவற்றிற்கும் இவ்வாறே கூறிக்கொள்க. எதிர்நாடு - புதியநாடு; ஆறின்றிப் பகைவர்பொருளை விரும்பின நாட் டென்றும் அவரையகன்ற நாட்டென்றும் பொருள்கூறுக. செருவின் மேம்பட்ட என்றது, நாடுகளை. அதனாற்பெற்ற வென்றியெனவே நாடு திறை பெற்றமை கூறிற்று." என்பர் நச். (தொல். அகத். சூ. உஅ.

(பிரதிபேதம்.) * என்றாள்.

கரு திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை
வசைதீர்ந்த வென்னலம் வாடுவ தருளுவார்
நசைகொண்டு தந்நீழல் சேர்ந்தாரைத் தாங்கித்தம்
மிசைபரந் துலகேத்த வேதினுட் டுறைபவர் ;

கஎ அறல்சாஅய் பொழுதோடெம் மணிநுதல் வேறுகித்
திறல்சான்ற பெருவனப் பிழப்பதை யருளுவா
ருறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
யாறின்றிப் பொருள்வெஃகி யகன்றநாட் டுறைபவர் ;

உக என்னீ ;

தெருமரல் வாழி தோழிநங் காதலர்
பொருமுரண் யானையர் போர்மலைந் தெழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்
வருமென வந்தன்றவர் வாய்மொழித் தூதே.

இது "மேவிய சிறப்பி னேனோர்" என்னும் (க) சூத்திரத்தில் பகை மேற்சென்ற அரசன் திறைபெற்ற நாடு காத்து அதன்கண் தன்னெறி முறைமை * அடிப்படுத்துவருதற்குப் பிரிவனென்றலின், பிரிவின்கண் தலைவன் இளவேனிற் † காலங்குறித்துப் பிரிய, அக்காலவரவின்கண் தலைவி ஆற்றளாய் அவர் நமக்கு அருளுங் காலையில் அருளார்காணென்றட்கு, தோழி, அவர்வரவிற்கு இக்காலம் தூதாயன்றோ வந்தது? நீ ஆற்றுவாயாக வென வற்புறுத்தியது.

இதன்பொருள்.

(உ) ஒருகுழையொருவன்போலிணர் சேர்ந்த (ங) மராஅமும்

---

க. தொல். அகத். சூ. உஅ.

உ. (அ) "ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்" என்பது முதற்குமுதல் உவமமாய் வந்ததற்கு மேற்கோள். தொல். உவம. சூ. சு. 'முதலுஞ் சினையும்' இளம். (ஆ) "நாஞ்சில் வலவ னிறம் போலப் பூஞ்சினைச், செங்கான் மராஅந் தகைந்தன" கார், கக. (இ) "பாசிலை செறிந்த பசுங்காற் கழையொடு, வால்வீசேர்ந்த மராஅங் கண்டு, நெடியோன் முன்னொடு நின்றனனுமென" மணி. ககூ: எடு-எ. எனவும் (ஈ) "மராமெனமருளுமேனி வள்ளலோடு" (உ) "வெறித் துணர் மராம்புரை வெள்ளைமேனியான்" பாகவதம், (கo.) அரவின் மேலாடிய. க. சாம்பன்மணம்புரி. சுஅ. எனவும் வந்திருத்தல் காண்க. (ஊ) "ஒருகுழை யொருவன்போல்" என்பது இரண்டாம் வேற்றுமை யுருபு, தொக்கவழித் தொகாது நின்றாற்போலப் பொருளுணர்த் தற்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. கஎ. நச்.

ங. மராஅம் சுரத்திற்கும்வேனிற்குமுரியதென்பதையும் வெள்ளிய பூக் களையுடையதென்பதையும் (அ) "வலஞ்சுரி மராஅத்துச் சுரங்கமழ்

(பிரதிபேதம்.) * அடிப்படுத்துவதற்கு, † காலத்துப்

(க) பருதியஞ் செல்வன்போ னனையூழ்த்த செருந்திய
(உ)மீனேற்றுக் கொடியோன்போன் மிஞிறார்க்குங் காஞ்சியு
(ங) மேனோன்போ னிறங்கிளர்பு கஞலிய ஞாழலு
மானேற்றுக் கொடியோன்போ லெதிரிய விலவமு *மாங்குத்
திதுதீர் சிறப்பி (ச) னைவர்க ளிலைபோலப்

புதுவீ" அகம். அங. (ஆ) "வேனற்பூத்த மராஅங் கோதையோடும்" தே. (இ) "கோட்சுரும் பரற்று நாட் சுரத் தமன்ற, நெடுங்கான் மராஅத்துக் குறுஞ்சினைபற்றி, வலஞ்சுரி வாலிணர் கொய்தற்கு நின்ற, மள்ளன்" ஐங்குறு. ஙஅங. (ஈ) "செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுபு" முருகு. உ0உ. (உ) "கருங்கான் மராஅத்து வைகு சினை வான்பூ" ஐங். ஙஙக. (ஊ) "பரியல்..........பொரியரை மராஅத்து வாலிணர்ச் சுரிமலர்" யா. வி. சூ: சச. மேற்கோள். (எ) "சங்கீர்ந்த துகளேபோன், மரவம்பாவை வயிறாரப் பருகி வாடை யதுநடப்ப" சீவக. உசுகூ0. என்பவை வலியுறுத்தும்.

க. "குழந்தை வெண்மதி மிலைச்சிய குருச்சடைக் குழகா, விழுந்த பல்வினை யெய்துவா னிரவியெற் பிழம்பு பொழிந்த சேயொளித் தேரொடும் புக்கதே போலும், வழிந்து தேன்கமழ் மலர்த்திர டதைந்த தண் செருந்தி" காஞ்சி. திருக்கண்புதைத்த. கருகூ.

"பருதி" கம்ப: திருவபிடேக. உ. வில்லி. கிருட்டிணன். அசு.

உ. (அ) "கரைத்துறு தண்பூங் காஞ்சிகள் சாகைக் கரமோச்சி, விரைத்த கரும்பைத் தைவரு தோற்றம் விரிதார்வண், டிரைத்தெழு திண்டோட் கேள்வரொ டுமினையார்மே,னிரைத்தமர் செய்வான் வேள்சிலை பற்று நிகழ்விற்றால்" (ஆ) "பருப்புழைக்கரக் களிற்றுரிப் போர்வையம் பகவ, பொருப்பு மாதுட னுட்டயர் பொலிவினைக் கேளாக், கருப்பு வில்லினு னினிப்பய மின்றெனக் கணைகள், விருப்பி னெய்யவந் திட்டதே வீழ்ந்தது காஞ்சி" காஞ்சி. திருநாட்டு. ககசு. திருக்கண் புதைத்த. கருஅ. (இ) "மீனே றுயர்த்த கொடிவேந்தனை" சீவக. சு.

ங. (அ) "சினங்கொள் வாளராத் தொடையல்சூழ் செஞ்சடைக் கூத்தா, வணங்க வேளொனுந் தமையனுக் கணியுருத் தருகென், றினங்கொள் வான்றவ மியற்றுவா னவனுடை யிளவன், மனங்கொள் காதலின் வந்தெனத் திகழ்ந்தது ஞாழல்" காஞ்சி. திருக்கண். கசு0. (ஆ) "ஏனோர்க்கிசைப்பின்" பெருங். (ங.) கச: உஅரு.

ச. "செங்கதிர் மேனி யான்போ லவிழ்ந்தன செழும்பலாச, மங்குலூர் செல்வன் போல மலர்ந்தன காஞ்சி திங்கட், புங்கவன் போலப் பூத்த பூஞ்சினை மரவஞ் செங்கை, யங்கதி, ராழி யான்போ லலர்ந்தன விரிந்த காயா" என இதனிழலாய்வரும், செய்யுள் இங்கே ஒப்புநோக்கற் பாலது; திருவிளை. தருமிக்கு. கஉ.

(பிரதிபேதம்.) * ஆங்கத்.

போதவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்று இளவேனின் மேதக

எ-து: நீர்பொருகின்ற கரையினிற்கும் (க) ஒரு பூங்குழையையுடைய (உ) நம்பி மூத்தபிரானைப்போலப் பூங்கொத்துக்கள் பொருந்தின வெண்கடம்பும் பருதியாகிய அழகிய செல்வனைப்போல அரும்புகள் அலர்ந்த செருந்தியும் சுறவையுடைத்தாகிய கொடியினையுடைய காமனைப்போல மிஞிறுகள் ஆரவாரித்தற்கிடமாகிய காஞ்சியும் (ங) அவன் தம்பி சாமனைப்போல நிறம் விளங்கிப் பூக்கள் நெருங்கின ஞாழலும் இடபத்தினையுடைய கொடியினையுடைய இறைவனைப்போலப் பூக்கள் காலத்தை எதிர்கொண்ட இலவமும், தமக்குக் குற்றந் தீர்ந்த தலைமையினையுடைய ஐவர்களுடைய நிறத்தின் றன்மைபோல, அக்கரையிடத்துப் பூக்கள் விரிந்த பிற மரங்களோடே அழகுபெற, பிரிந்தார்க்கு நோவு பொருந்த, கூடியிருந்தார்க்குப் பெருமைபொருந்த இளவேனில் வந்துற்றது; எ-று.

மீனிலேறு. ஆனிலேறு. மிஞிறார்க்குங்காஞ்சி, இடத்துநிகழ் பொருளின் றொழில் இடத்தின்மேலே நின்றது. எஞ்ஞான்; எனையோனின் விகாரம். ஆங்கென்றது அக்கரையை. கரை மராமுஞ் செருந்தியுங் காஞ்சியும் ஞாழலும் இலவமும் பிறமரங்களோடே கவின்பெறவென இடத்துநிகழ் பொருளின் றொழில் இடத்துமேல் ஏற்றலுமென்று.

இது தரவு.

---

க. நம்பி மூத்தபிரான் - (கண்ணன் தமையன்) பலராமன்; இவன் ஒரு குழையினனென்பது கலி. கOடு 'ஒரு குழையவன்' என்புழி விளக்கப் பெறும்.

உ. பலராமன் 'நம்பிமூத்தபிரான்' என வழங்கப்படுதலை, புறம் டுசு. வலியொத்தீயே வாலியோனை என்னுமிடத்து வாலியோனென்றது நம்பிமூத்தபிரானை யென்றெழுதிய உரையும், பாகவதத்து, நம்பி மூத்தபிரான் கோகுலமடைந்த வத்தியாயம், நம்பி மூத்தபிரான் தீர்த்த யாத்திரைசெய்த வத்தியாயம் என்ற தலைப்புப்பெயரும் வலியுறுத்தும்.

ங. காமனுக்குத் தம்பி ஒருவ னுண்டென்பதும் அவன் பெயர் சாமனென்பதும் (அ) "கவர்கணைச் சாமனார் தம்முன் செலவு காண்க" கலி. கூச: ஙங-ச. (ஆ) "காமனுஞ் சாமனுங்கலந்த காட்சிய", (இ) "காமன்றம்பியிற் காளை கிடந்தபின்" சீவக. சங, கஎகடு. (ஈ) "அனங்கதேவா, வுய்யவு மாங்கொலோ வென்று சொல்லி யுன்னையு மும்பியை யுந்தொழுதேன்" நாச்சியார் திருமொழி. க. 'தையொரு திங்கள்'. (உ) "காமனுஞ் சாமன்றானு;முனிவர்தம் வடிவங்கொண்ட முறைமையதாகுமென்ன" இராமா. அசுவமேத. கசஎ. (ஊ) "காமனுஞ் சாமனு மெனக்கவி னமைந்தார்" பிரமோத்தர. சீமந்தனி. ச. (எ) "சாமனிலுங் காமனிலுந் தயங்குமெய்யோன்" வில்லி. அருச்சுனன் தீர்த்த. உஎ. என்பவற்றால் அறியலாகும். (ஏ) காமன் சாமனென்பவர்களின் வரலாறு பிரத்தியும்ந சரிதமென்னும் சைனநூலால் தெரிகின்றதென்பர், உ. வே. சாமிநாதையரவர்கள்; சீவக. சங. விசேடக்.

௬. பல்வரி யினக(௧) வண்டு புதிதுண்ணும் பருவத்துத்
தொல்கவின் றொலைந்தவென் றடமென்றோ ளுள்ளுவா
(௨)ரொல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது (௩) காத்தோம்பி
(௪) வெல்புக ழுலகேத்த விருந்துநாட் டுறைபவர்

---

௧. வண்டு புதிதுண்ணுதல்: இந்நூற்பக்கம், ௧0௭: ௪ - குறிப்புப்பார்க்க.

௨. (அ) "அலந்தயரா நின்றார், நிழலடைந்தே நின்னையென் றேத்திக் - கழலடையச், செற்றங்கொண் டாடிச் சிலைத்தெழுந்தார் வீந்தவியக், கொற்றங்கொண் டெஃகுயர்த்தான் கோ" பு. வெ: வஞ்சி. எ. (ஆ) "களைகணுத் தம்மடைந்தார்க் குற்றுழியு மற்றோர், விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார் - தளர் நடைய,தானுடம் பென்று புகழுடம் போம்புதற்கே,தானுடம் பட்டார்கடாம்" நீதிநெறி. ௪0.(இ) "மறந்தலை மயங்கி வையத் தொருவரை யொருவர் வாட்ட, விறந்தலை யுறுமை நோக்கி யின்னுயிர் போலக் காக்கு, மறந்தலை நின்ற வேந்த ரடிநிழ லன்றி யார்க்குஞ், சிறந்ததொன் றில்லை கண்டாய் திருமணி திகழும் பூணோய்" சூளாமணி. மந்திரசாலை. ௨அ. (ஈ) "உடைந்தவர்க் குதவா னாயி னுள்ள தொன் றீயா னாயி, னடைந்தவர்க் கருளா னாயி னறமென்னு மாண்மை யென்னும்" கம்ப. விபீடணன். ௧௧௧. (உ) "செருவி னெட்டலரைக் கொன்று திறைகொண்டு நாடுகாத்து.........செங்கோல் வளர்ப்பது மாட்சியாமே" (ஊ) "உலகிடை யூறெய்தா, வரிசையிற் காத்து நீதி வழுக்கினர் தம்மை மொத்திக், கரிசறப்பொருளுங் கோடல் காவலர் தருமம்". விநாயக. அரசியற்கை. ௪௫, ௬௧.

௩. "ஆர்கலி ஞாலத் தறங்காவ லாற்சிறந்த, பேரருளினார்க்குப் பெறலரி தியாதரோ,வூர்திரைய மாமகர வெள்ளத்து நாப்பணும்,போர் மலைந்து வெல்லும் புகழ்" இரும்பல் காஞ்சி.

௪. (அ) " அடுதிறலுயர் புகழ்வேந்தே " மது. ௧௩0. (ஆ) " வெல்புக ழுயர்நிலை " கலி. ௧0௫: ௫0. (இ) "சயப்புகழார் பலர்வாழுந் தடங் குருகூர்"திருவாய். (௩)௨:௧௧. (ஈ) "அயன்றலை கொண்டுசெண் டாடல் பாடி யருக்க னெயிறு பறித்தல் பாடிக், கயந்தனைக் கொன்றுரி போர்த்தல் பாடிக் காலனைக் காலாலுதைத்தல் பா டி,யியைந்தன முப் புரமெய்தல்பாடி" திருவாசக. திருப்பொற். ௧அ. (உ) "திரிபுர மெரித்த வாறுந் தேர்மிசை நின்றவாறுங், கரியினை யுரித்தவாறுங் காமனைக் காய்ந்த வாறும்,......பரிவினாற் பாட" பெரிய. திருநீலகண்டயாழ். ௫. (ஊ) "அயன்றலை யறுத்தல் பாடி யரக்கனை யடர்த்தல் பாடிக், கயந் தனை யுரித்தல் பாடிக் காலனை யுதைத்தல் பாடி, வியன்புர மெரித்தல் பாடி வேள்கெட விழித்தல் பாடிச், சயந்தரும் புகழ்கண் மற்றும் பாடி ஞன் சால வாழ்த்தி" திருவால. ௫௬: ௬. (எ) "காலனைச் செகுத்த வாறு முப்புரங் காய்ந்தவாறும், போல்வன வுலகந்தேறப் பூதர்கள்

எ-து. இயற்கை நலங்கெட்ட என்னுடைய பெருமையையுடைய மெல்லிய தோளைப் பலவரியினையுடைய இனமாகிய வண்டுகள் புதிதாகிய தேனை நுகரும் இளவேனிற்காலத்தே கூட நினைப்பார், முன்னர் (க) அந்நாடு ஆள்பவர் கலக்கமுறுத்த அலைபெற்று, பின் தன்னை நிழலாக அடைந்த குடிமக்களுக்கு நெஞ்சுவருந்தாதபடி பகைவரைப் பேணிக் காத்து, முன்பு நாடாட்சி பெற்ற பகைவரை வென்ற புகழை உலகத்தார் புகழப் புதுமையையுடைய நாட்டிலே இருக்கின்றவர்; எ-று.

என்றதனால்; (உ) திறைபெற்றநாட்டைத் திருத்தித் தந் நாடுபோல நெறிமுறைமை நடத்துவித்தலே பொருளென்று இருக்கின்றவர் நம்மை நினையாரென்று நிகழ்ந்தது கூறினாள். விருந்து நாடெனவே பகைவர் தோற்றுத் திறைகொடுத்தமை தோன்றிற்று.

*உள்ளுவாரெனு முற்றுவினை பெயர்கொண்டுநின்றது. காத்து உறைபவரென்க.

௧௩. (௩) திசைதிசை தேனார்க்குந் (௪) திருமருத முன்றுறை
வசைதீர்ந்த வென்னலம் வாடுவதருளுவார்

---

விருது பாட" காஞ்சி. தக்கீச. ௪௮. (ஏ) "பாடினர் வெல்புகழைப் பல்புலவர்" (ஐ) "வெல்புகழறைந்தோர்க் கீந்து" பு-வே. வாகை. ௧. பாடாண்கொளு. உ௬.

௧. "மறந்தலை மயங்கு செவ்வேன் மன்னவன் வெய்ய ஞாயி, னறந்தலை மயங்கி வைய மரும்பட ருழக்குமன்றே" சூளாமணி.மந்திரசாலை. உ௫.

உ. "வென்றுகலந் தரீஇயர் வேண்டுபுலத் திறுத்தவர், வாடா யாணர் நாடு திறை கொடுப்ப" பதிற்று. ௫௩.

௩. (அ)"திசைதிசை........உறைபவர்" என்பது காவற்பாங்கின்கண் தலைவன்கூறியதுகேட்ட தலைவி கூறியதற்கும்" (தொல். அகத். சூ. ௪௪. நச்.) (ஆ) பாட்டுடைத் தலைவன் ஆறுகூறியதற்கும் (தொல். புறத். சூ. ௩உ. நச்.) மேற்கோள். இப்பகுதியில் (இ) வேண்டிக்கோட்பொருண்மைக்கண் அருளுவாராகவென்பது அருளுவார் என ஈறு திரிந்ததுஎன்பர், தெய்; தொல். வினை. சூ. உ௧."அவற்றுண் முன்னிலை"

"திசைதிசை" கோவையார். ௧உ௮. கம்ப. முதற்யோர். ௧உ௧, நாகபாச. ௧௩௫, இராவணவதை. ௮௫. விநாயக. மயூரேசர். ௧௧௭.

௪. (அ) "திருமருதமுன்றுறை சேர்புனற்கண்டுய்ப்பார்" (ஆ) "திருமருத நீர்ப்பூந்துறை" (இ) "தீம்புனல்வையைத் திருமருதமுன்றுறையால்" (ஈ) "திருமருத முன்றுறை முற்றங் குறுகி" பரிபாடல். ௭: ௮௩, ௧௧: ௩௦, உஉ: ௪௫, 'மாநிலம்': ௭உ. (உ)"வருபுனல் வையை வார் மண லகன்று றைத்,திருமரு தோங்கிய விரிமலர்க் காவின்"அகம். ௩௬: ௯-௧௦. (ஊ) "வருபுனல் வையை மருதோங்கு முன்றுறை" சிலப். ௧௪: ௭௨.

(பிரதிபேதம்) * உள்ளுவாரென முற்றுவினைப்பெயர்.

க) நசைகொண்டு (உ) *தந்நிழல் சேர்ந்தாரைத் தாங்கித்தம்
மிசைபரந் துலகேத்த வேதினுட் டுறைபவர்

எ-து. குற்றமற்ற என்னலங்கெடுவதற்குத் திசைதோறுந் திசைதோறும் தேனினம் ஆரவாரிக்குந் திருமருதந்துறைமுன்னே அருளுதலைச் செய்வார், நம்மைக் காத்தற்குரியான் இவனென்று நச்சுதல் கொண்டு தம்மை நிழலாக வந்தடைந்த குடிமக்களைத் தமக்குப் பாரமென்று பொறுத்துத் தம் புகழ் உலகெங்கும் பரக்கையினாலே அவ்வுலகத்தார் புகழத் தமக் கயலாகிய நாட்டிலே இருக்கின்றவர்; எ-று.

"யாறுங் குளனுங் காவு மாடிப், பதியிகந்து நுகர்தலு முரியவென்ப" (ங) என்பதனால், திருமருதந்துறையில் அருளுவாரென்றாள்.

கள (ச) அறல் † சாஅய் பொழுதோடெம் மணிநுதல் வேறுகித்
திறல்சான்ற பெருவனப் பிழப்பதை யருளுவா
ருறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
(ரு) யாறின்றிப் பொருள்வெஃகி யகன்றநாட் டுறைபவர்

எ-து. எம்முடைய அழகினையுடைய நுதலும் பசந்து நாமும் ‡ வலிமையமைந்த பெரிய அழகை இழப்பதற்கு நீரற்று ஓடுதல்சுருங்கின இளவேனிற் காலத்தே அருளுதலைச் செய்வார், முன்பு நாடு ஆட்சிபெற்ற அரசர்செய்த வருத்தத்திற்கு அஞ்சி நிழலாக வந்தடைந்தார்க்கு நெஞ்சுவருந்தாதபடி பகைவரைப் பேணிக் காத்து,நெறியன்றி அவ்வரசர் பொருளை விரும்புகையினாலே, அவரை நீங்கின நாட்டிலே இருக்கின்றவர்; எ-று.

இவை மூன்றும், தாழிசை.

---

க. (அ) "இரந்தது நசைவாட்டாயென்பது கெடாதோதான்" கலி. க00:கஉ. (ஆ) "நச்சித்தற் சென்றார் நசைகொல்லா மாண்பினிதே" இனியது. உள. (இ) "நசையவர்க்குக், கூடுவ தீவானைக் கொவ்வைபோற் செவ்வாயாய், நாடுவர் விண்ணோர் நயந்து" ஏலாதி. ஙரு.

உ. "அடைந்தார் துயர்கூரா வாற்ற லினிதே" இனியது. ஙஉ.

ங. தொல். கற்பியல். சூ. ரு0.

ச. "அறல்சாய.........வேறுகி" என்பது மூன்றாவது எழாவதனோடு மயங்கிவருதற்கு மேற்கோள்; தொல். வேற்றுமைமயங்கு. சூ. உஎ. தெய். 'ஏனையுருபு'

ரு. "பொருத்த மழியாத பூந்தண்டார் மன்ன, ரருத்தமடிநிழ லாரை—வருத்தாது, கொண்டாரும் போலாதே கோட லதுவன்றோ,வண்டுதா துண்டு விடல்" பழ. உசஉ.

(பிரதிபேதம்) * தந்நிழல் † சாயப் பொருளோடெம். ‡ வலியமைந்த.

உக (க) எனநீ
தெருமரல் வாழி தோழிநங் காதலர்
பொருமுரண் யானையர் போர்மலைந் தெழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்
வருமென வந்தன்றவர் (உ) வாய்மொழித் தூதே

எ-து. என்றுகூறிமனஞ்சுழலாதேகொள்; அதற்குக்காரணம்யாதெனில், நங் காதலர் பொருகின்ற மாறுபாட்டையுடைய யானையை யுடையவராய்ப் போர்செய்தற்கு மாறுபட்டு எதிர்வந்தவருடைய போரிடத்தே நீ கூறியவாறே மேலானநாடுகளைப்பெற்ற வெற்றியையுடையர்; ஆகையினாலே, அவருடைய மெய்ம்மொழியாகிய தூது வருவாரென்றுசொல்லி வந்ததுகாண்; இனித் தோழி நீ இனிதுவாழ்வாயாக; *எ-று.

மேம்பட்ட, ஈண்டுப் பெயராய் நின்றது. வரவெனவந்தன்று என்று பாடமாயின், வெற்றியையுடையர்; ஆகையினாலே அவர் மெய்ம்மொழியாகிய தூது வந்ததென்று சொல்லி வந்ததென்க.

எனநீ, தனிச்சொல். எஞ்சியது சுரிதகம்.

இதனால், தலைவிக்குப் புணர்வாகிய உவகை தோன்றிற்று.

இது தரவின்கண் ஐஞ்சீரடிவருதலிற் கொச்சகமாய்க் கலிவெண் பாட்டின் வேறாயிற்று. (உகு)

உஎ. ஈதலிற் குறைகாட்டா தறனறிந் தொழுகிய
தீதிலான் செல்வம்போற் றீங்கரை மரநந்தப்
பேதுறு மடமொழிப் பிணையெழின் மானோக்கின்
மாதரார் முறுவல்போன் மணமௌவன் முகையூழ்ப்பக்

ரு காதலர்ப் புணர்ந்தவர் கதுப்புப்போற் கழல்குபு
தாதொடுந் தளிரொடுந் தண்ணற றகைபெறப்
பேதையோன் வினைவாங்கப் பீடிலா வரசனாட்
டேதிலான் படைபோல விறுத்தந்த திளவேனில்;

கூ நிலம்பூத்த மரமிசை நிமிர்பாலுங் குயிலெள்ள
நலம்பூத்த நிறஞ்சாய நம்மையோ மறந்தைக்க
கலம்பூத்த வணியவர் காரிகை மகிழ்செய்யப்
புலம்பூத்துப் புகழ்பானாக் கூடலு முள்ளார்கொல்;

---

க. "எனநீ..............வாய்மொழித்தூதே" என்பது தூதுவந்தமை தலைவிக்குத் தோழிகூறியதற்கு மேற்கோள். தொல். கற்பி. சூ. கூ நச்.

உ. வாய்மொழித்தூது: "தானறிந்து கூறுந் தலைமற் றிடையது, கோ ணறைந்த தீதென்று கூறுமால்" பாரதம்.

(பிரதிபேதம்) * என்றுாற்றுவித்தாள்.

கரு கன்மிசை மயிலாலக் கறங்கியூ ரலர்தூற்றத்
தொன்னல நனிசாய நம்மையோ மறந்தைக்க
வொன்னுதார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்;

கஎ மையெழின் மலருண்கண் மருளூட்டி மகிழ்கொள்ளப்
பொய்யினாற் புரிவுண்ட நம்மையோ மறந்தைக்க
தைஇய மகளிர்தம் மாயமோ டமர்ந்தாடும்
வையைவா ருயரெக்கர் நுகர்ச்சியு முள்ளார்கொல்;

எனவாங்கு;

உஉ நோய்மலி நெஞ்சமொ டினையல் றோழி
நாமில்லாப் புலம்பாயி னடுக்கஞ்செய் பொழுதாயிற்
காமவேள் விழவாயிற் கலங்குவள் பெரிதென
வேழுறு கடுந்திண்டேர் கடவி
நாமமர் காதலர் துனைதந்தார் விரைந்தே.

இது தலைவன் குறித்துப் பிரிந்த இளவேனில் வரவின்கண் எம்மை யோமறக்க, இக்காலத்து இவ்வூரின்கட் டாம் விளையாடும் விளையாட்டும் *மறந்தாரோவெனச் சொல்லி ஆற்றளாய தலைவிக்கு, தோழி தலைவன் வர வுணர்ந்து கழி யுவகையாற் கூறியது.

இதன் பொருள்.

(க) ஈதலிற் குறைகாட்டா தறனறிந் தொழுகிய
தீதிலான் செல்வம்போற் றீங்கரை மரநந்தப்
பேதுறு மடமொழிப் (உ) பிணையெழின் மானோக்கின்
(ங) மாதரார் முறுவல்போன் மணமௌவன் முகையூழ்ப்பக்

ரு காதலர்ப் புணர்ந்தவர் கதுப்புப்போற் †கழல்குபு
தாதொடுந் தளிரொடுந் தண்ணற றகைபெறப்
(ச) பேதையோன் வினைவாங்கப் பீடிலா வரசனுட்
(ரு) டேதிலான் படைபோல விறுத்தந்த திளவேனில்

---

க. (அ) "இவறலும்........ஏதமிறைக்கு" குறள். சங௨. (ஆ) "அறத் தாற்றி னீயாத தீகை யன்று" முதுமொழிக். சஅ. (இ) "உள்ளியுள்ள வெல் லாமுவந் தீயுமவ், வள்ளி யோரின் வழங்கின மேகமே" கம்ப. பால. ஆற்றுப். ச. (ஈ) "வள்ளியோரீதல்வரையாதுபோல" கலி. ஙO.

உ. "பிணையெழின் மானோக்கு" கலி. ருஅ: உ. குறள். கOஅரு, கOஅக.

ங. (அ) "மணமௌவன் முகையன்ன மாவீழ்வார் நிரை வெண்பல்" கலி. கச: ங. (ஆ) "மௌவல் வான்முகைத், துணை நிரைத்தன்ன மாவீழ் வெண்பல்" அகம். உக: க-உ.

ச. வினைவாங்கல்: கலி. அ: க; நைடதம், அன்னத்தைத்தூது. கOரு; திருவிளை. பன்றிக்குட்டிகளை. கங.

ரு. ஏதிலர் - பகைவர்; பழ. ருஉ.

(பிரதிபேதம்) * மறந்தாரென, † கழல்புகு.

எ-து: (க)கொடுத்தற்றொழிலிடத்துப் பொருட்குறை காட்டாமற் கொடுத்து (உ) இல்லறம் நிகழ்த்தும் முறைமையை அறிந்து நிகழ்த்திய தீவினையில்லாதவனுடைய செல்வம்மிகுமாறுபோல இனிதாகியநீரையுடையஆற்றங்கரையில் மரங்கள் தழைக்க, கேட்டோர் மயக்கம் உறுதற்குக் காரணமான மடமொழியினையும் மான்பிணையினது அழகையுடைய நோக்குப்போலு நோக்கினையுமுடைய காதலையுடைய மகளிருடைய எயிறுபோல மணத்தையுடைய மௌவலின் முகை அலர, தண்ணிதாகிய அறுதியையுடைய மணல் கழன்று வீழ்ந்த தாதாலுந்தளிராலுங் காதலரைக் கூடினவருடைய மயிர்போல அழகு பெற, இளவேனிற்காலம், அறிவில்லாத அமைச்சன் காரியத்தைப்புலப்படுத்தப் படைவலி இல்லாத அரசனது நாட்டிலே பகையரசன் படைவந்து விடுமாறுபோலத் தங்குதலைச் செய்தது. எ - று.

ஊழ்ப்பத் தகைபெற இளவேனில் இறுத்தந்ததென்க. காட்டாதென்பதற்குக் கொடுத்தென்றும் கழல்குபுவென்பதற்கு வீழ்ந்தவென்றும் வினை வருவிக்க.

இது தரவு.

கூ (ந) நிலம்பூத்த மரமிசை நிமிர்பாலுங் குயிலெல்லா
நலம்பூத்த நிறஞ்சாய நம்மையோ மறந்தைக்க

---

க. தானந்தவ மிரண்டுமென்னுங் குறளுரையில் "பெரும்பான்மைபற்றித் தானம் இல்லறத்தின்மேலும், தவம் துறவறத்தின்மேலும் நின்றன" என்பர் பரிமேலழகர்; குறள். கக.

உ. "அறந்தலை" கலி. கூ. "அறனெனப்பட்டதே யில்வாழ்க்கை" குறள். சகூ.

ந. (அ) "நிலம்பூத்த......முள்ளார்கொல்" என்பதனைப் பாட்டுடைத் தலைவன் ஊர்கூறியதற்கு மேற்கோள்காட்டி "இதனுட் கூடலிடத்துத் தலைவியென்பது கூறினுர்". என்பர், நச்; தொல். புறத். சூ. நஉ. (ஆ) "பெயரெச்சங்கொண்டுமுடியு மறுவகைப் பெயர்களுள் கருவியென்றதனுல் மூன்றுவதற்கோதிய காரணமும் ஏதுவுங்கொள்க. வந்ததுகண்டு வாராது முடித்தலென்பதனுல் 'நிலம்பூத்தமரமிசை நிமிர்பாலும்' என்றவழி நிலம்பொலிவுபெற்ற மரமெனப் பொலிதற்கேதுவின்கண் வந்தது" என்பர் தெய். தொல். வினை. சூ. நஅ. 'அவற்றொடு'. (இ) "நிலம் பூத்தமரம்" என்பதை அகரவீற்றுப் பெயரெச்சம் காரணத்தின்கண் வந்ததற்கு (தொல். வினை. சூ. நஎ. நச்.) மேற்கோள் காட்டி, இக்கருத்தை (ஈ) "பெண்மை சுட்டிய வுயர்திணை மருங்கி, னாண்மை திரிந்த பெயர் நிலைக்கிளவியும்" என்புழி 'சுட்டியவென்பது நிலம்பூத்தமரமென்பதுபோலும் பெயரெச்சம்' என்றும் (தொல். சொல். கிளவி. சூ. ச.) (உ) "தேன்வாயுமிழ்ந்தவ மிர்துண்டவன்போன்று" என்பதற்கு, தேனை உமிழ்தற்குக் காரணமாகிய அமிர்தத்தை உண்டவனை யொத்து என்று பொருள்கூறி 'உமிழ்ந்தவமிர்து

கலம்பூத்த வணியவர் காரிகை மகிழ்செய்யப்
புலம்பூத்துப் புகழ்பாணுக் கூடலு முள்ளார்கொல்

எ - து: நிலம் பொலிவுபெறுதற்கு ஏதுவாகிய மரத்தின்மேலேயிருந்து காலங்கண்டு எக்கழுத்தஞ்செய்து ஆரவாரிக்குங் குயில்கள் நம்மை இகழும்படியாக, நன்மைபொலிவுபெற்ற நமதுநிறங் கெடும்படியாக, தாம் விரும்பாத நம்மையோமறப்பாராக;(க) தாம்அணிந்த கலங்கள்பொலிவுபெறுதற்குக் காரணமான அழகினையுடைய பரத்தையருடைய அழகு தம் மனத்தை மகிழ்ச்சியைச் செய்கையினலே தம் அறிவு பொலிவுபெற்று அவரைப் புகழ்தல் அமையாத கூடலையும் நினையாரோ? நினைக்கில் வருவரன்றே? எ - று.

பெயரெச்சத்திற்குக் காரணம்வருதல் கருவிக்கண் அடங்கும். மறந்தைக்க, வியங்கோட் டிரிசொல்.

கரு (உ) கன்மிசை மயிலாலக் கறங்கியூ ரலர்தூற்றத்
தொன்னல நணிசாய நம்மையோ மறந்தைக்க
(ரு) வொன்னுதார்க் (ச) கடந்தடூஉ (ரு) முரவுநீர் (சு) மாகொன்ற
(எ)வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்

---

நிலம் 'பூத்தமரம்போல நின்றது' என்றும் (சீவக. உக.) வற்புறுத்துவர் இவ்வுரையாசிரியர். (ஊ) நிலம்பூத்த மரமென்புழி ஏதுப்பொருண்மை கருவிக்கண் அடங்குமென்பர், இ-வி. உரையாசிரியர்; இ-வி. சூ. உசரு.

க. "பூணுக் கழகளிக்கும் பொற்றொடியை" நள. சுயம்வர. கருக.

உ. (அ) "கன்மிசை...விரும்பார்கொல்" இது குறிஞ்சிக்குப் பயின்ற மயில் பாலைக்கண் இளவேனிற்கண் வருதலிற் பொழுதொடு புள்ளு மயங்கிற்று. என்றும் தோல். அகத். சூ. கக; (ஆ) இதனுள் வென்வேலான் குன்றெனமலை கூறினர் என்றும் தோல். புறத். சூ. ருஉ. கூறுவர்; நச். (இ) இ - வி. நூலார் பாலையில் குறிஞ்சித்திணைக்குரிய மயில் வந்ததென்பர்; இ-வி. சூ. ருகூசு.

ரு. "சொற்களெல்லாம் இந்நூலில் ஓதிய இலக்கணத்தால் முற்றுப் பெற்றிலவாயினும் பலவகைப்பட்ட ஆசிரிய மத விகற்பத்தான் வரும்...... பிறநூன் முடிபினுன் முடியினும் இலக்கணப் பிழைப்பின்று" என்று கூறி, அதற்கு "ஒன்னுதார்......குன்றின்மேல்" என்பதனை மேற்கோள் காட்டி வெவ்வேறுகாலப் பெயரெச்சம் அடுக்கி வந்த தென்பர், தெய்; தோல். எச்ச. சூ. சுச. 'செய்யுண்'.

ச. கடந்தடுதல்: கலி. உ: ச, கoக: ருக, கoரு: க; பரி. கரு: சரு; புறம். அ. ரு, உரு: கசு, சo: உ, அo: கூ, ககo: க.

ரு. "உரவுநீர் மாகொன்ற வேல்" சிலப். உச: சரு.

சு. முருகு. சுo. 'மாமுதற்றடிந்த' என்பதன் குறிப்புப்பார்க்க.

எ. "வென்வேலான் குன்றில் விளையாட்டு யானகலேன்" சிலப். உசு: 'தென்னவன்' பக்கம். ருஎஎ.

எ - து: நஞ்சாயல் கெட்டமைகண்டு மலைமேலே மயில் ஆரவாரித்து ஆடும்படியாக, ஊரிலுள்ளார் ஆரவாரித்து அலர் தூற்றும்படியாக, நம்முடைய இயற்கைநலமும் மிகக்கெடும்படியாக, தாம் விரும்பாத நம்மையோ மறப்பாராக; பகைவரை மாயஞ்செய்துகொல்லாது, வென்றுகொல்லும் பரக்கும் கடவிடத்து எய்தாநின்ற மாமரத்தைத் தடிந்த * வென்றிவேலையுடைய முருகன் திருப்பரங்குன்றின்மேற் பரத்தையருடன் விளையாடும் விளையாட்டையும் விரும்பாரோ ? விரும்பில் வருவரன்றே ? எ - று.

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும், மந்நிலம் பொழுதொடு வாரா வாயினும், வந்த நிலத்தின் பயத்த வாகும்." என்ற (க) விதிபற்றிக் குறிஞ்சிக்குப் பயின்ற மயில் பாலைக்கண் இளவேனிற்காலத்து வருதலிற் பொழுதொடு புள்ளு மயங்கிற்று.

கஎ மையெழின் மலருண்கண் மருவூட்டி மகிழ்கொள்ளப்
பொய்யினாற் புரிவுண்ட நம்மையோ மறந்தைக்க
†தைஇய மகளிர்தம் மாயமோ டமர்ந்தாடும்
வையைவா ருயரெக்கர் நுகர்ச்சியு முள்ளார்கொல்

எ - து, ‡எம்மை மயலாக்கிக் கருமையுடைத்தாகிய அழகினையுடையநீலமலர்போலும் மையுண்கண்ணை மகிழ்ச்சிகொள்ளும்படி ||தம்மோடே மருவுதலூட்டித் ÷ தாம் செய்த பொய்யாலே மனந் தம்மிடத்திலே புரிதலைச்செய்த தாம்விரும்பாத நம்மையோமறப்பாராக; கோலஞ்செய்தலையுடையபரத்தையர் தம்முடைய திரளோடே மனம் பொருந்தி விளையாடும் வையையாற்றிடத்து நீண்ட உயர்ந்த இடுமணலிடத்து நுகர்ச்சியையும் நினையாரோ ? நினைக்கில் வருவரன்றே ? எ - று.

மருவுதலூட்டியென்றார், அக்கண்ணிடத்து நாவாற் செய்யுந் தொழிலை. மருவூட்டிச்செய்தவென ஒருசொல் வருவிக்க.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு

எ - து: என்று கூறி ; எ - று.

ஆங்கு அசை.

இது தனிச்சொல்.

உஉ நோய்மலி நெஞ்சமொ டினைய றோழி
நாமில்லாப் புலம்பாயி னடுக்கஞ்செய் பொழுதாயிற்
(உ) காமவேள் விழவாயிற் கலங்குவள் பெரிதென
வேழுறு கடுந்திண்டேர் கடவி
நாமமர் காதலர் துணைதந்தார் விரைந்தே

க. தொல். அகத். சூ. கக. இந்நூற் பக்கம்; கருக: உ - குறிப்புப் பார்க்க.
உ. காமன் விழவு: கலி. ௩௦. கரு, ௩௫: கஎ.

(பிரதிபேதம்) * வென்வேலை, † தைஇய, ‡ என்னை, || தன்னோடே, ÷ தான்.

எ - து: நோய்மிக்க நெஞ்சோடே வருந்தாதேகொள்; தோழி! நாம் அமர்ந்தகாதலர், தனிமையாயின் நாமில்லாத தனிமையாயிருந்தது; காலமாயிற் பிரிந்தார்க்கு நடுக்கஞ்செய்யும் இளவேனிற்காலமாயிருந்தது; ஊரிலுள்ளார் கொண்டாடும்விழவாயிற் காமவேளுக்குச்செய்யும் விழவாயிருந்தது; ஆதலாற் பெரிதுங் கலங்குவளென்று கருதிப் பகைவர் மயக்கமுறுதற்குக் காரணமான(க)கடிய திண்ணிய தேரை விரைந்து செலுத்தித் தாம் துணையாந் தன்மையை நமக்குத் தந்தார்காண்! * எ - று.

இது சுரிதகம்.

இதனல், தலைவிக்குப் புணர்வாகிய உவகை தோன்றிற்று.

இஃது †எட்டடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் ஐயடிச்சுரிதகமும்பெற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. (உசு)

உஅ. பாடல்சால் சிறப்பிற் சினையவுஞ் சுனையவு
நாடினர் கொயல்வேண்டா நயந்துதாங் கொடுப்பபோற்
றேடவிழ் கமழ்கண்ணி தையுபு புனைவார்கட்
டோடுறத் தாழ்ந்து துறை துறை கவின்பெறச்
செய்யவ ளணியகலத் தாரமொ டணிகொள்பு
தொய்யகந் தாழ்ந்த கதுப்புப்போற் றுவர்மணல்
வையைவா ரவிரற லிடைபோழும் பொழுதினன்;

அ விரிந்தானு மலராயின் விளித்தானுங் குயிலாயிற்
பிரிந்துள்ளா ரவராயிற் பேதுறூஉம் பொழுதாயி
னரும்பட ரவலநோ யாற்றுவ ளென்னது
வருந்தநோய் மிகுமாயின் வணங்கிறை யளியென்னே;

கஉ புதலவை மலராயிற் பொங்கரின வண்டாயி
னயலதை யலராயி னகன்றுள்ளா ரவராயின்
மதலையி னெஞ்சொடு மதனில ளென்னது
நுதலூரும் பசப்பாயி னுணங்கிறை யளியென்னே;

கசு தோயின வறலாயிற் சுரும்பார்க்குஞ் சினையாயின்
மாவின தளிராயின் மறந்துள்ளா ரவராயிற்
பூவெழி லிழந்தகண் புலம்புகொண் டமையாது
பாயனோய் மிகுமாயிற் பைந்தொடி யளியென்னே;

எனவாங்கு;

உக ஆயிழா யாங்கன முரையாதி சேயார்க்கு
நாந்தூது மொழிந்தனம் விடல்வேண்டா நம்மினுந்
தாம்பிரிந் துறைத லாற்றலர்
பரிந்தெவன் செய்தி வருதுவர் விரைந்தே.

---

க. கடுமை - விரைவு.

(பிரதிபேதம்) * என உவகையாற்கூறினுள், † எழடித்தரவும்.

இஃது இளவேனில்வரவின்கண் ஆற்றாத தலைவி தூதுவிடக்கருத, தோழி, அவர் பிரிந்திருத்தலை நம்மினுந் தாம்வல்லரல்லரெனச் சொல்லி வற்புறுத்தியது.

இதன் பொருள்.

உஅ. பாடல்சால் சிறப்பிற் (க) சினையவுஞ் சுனையவு
நாடினர் கொயல்வேண்டா நயந்துதாங் கொடுப்பபோற்

---

க. (அ) அகரவீற்றுப் பலவறி சொல்லுக்கு உண்பவென்பதை உதாரணங் காட்டியவழி "உண்பவென்பது பகரவீற்றுப் பலரறி சொல்லன்றே, அஃறிணைக்காயின வாறென்னை யெனின்:—பகரவிறுதி யாயினன்றே உயர்திணைக்காவது. ஈண்டுக் காட்டப்பட்டது, 'கானந் தகைப்ப செலவு' 'சினையவுஞ் சுனையவு, நாடினர் கொயல் வேண்டா நயந்து தாங் கொடுப்பபோல்' என நின்றனபோல எதிர்காலத்து வரும் பகரமூர்ந்து நின்ற அகர வீறுதலின், அஃறிணைச் சொல்லே யாமென்பது. செய்யுளாகலின் தகைப்பன கொடுப்பன என்னுஞ் சொற்கள் தகைப்ப கொடுப்ப என விகாரவகையான் அவ்வாறு நின்றனவாகலான், வழக்கு முடிவிற்கு அவைகாட்டல் நிரம்பா தெனின்:—தகைத்தன, தகையா நின்றன; தகைத்த, தகையாநின்ற. எனவும் கொடுத்தன, கொடா நின்றன; கொடுத்த கொடாநின்ற. எனவும் இறந்தகாலத்தும் நிகழ்காலத்தும் அகரவீறு முதனிலைக் கேற்றவாற்றான் அவ்வக் காலத்திற்குரிய எழுத்துப்பெற்று அன் பெற்றும் பெறாது முடியுமாறு போல எதிர்காலத்தும் முதனிலைக் கேற்றவாற்றான் அக்காலத்துக்குரிய எழுத்துப்பெற்று அன்பெற்றும் பெறாதும் முடியும். எதிர்காலத்துக்குரிய எழுத்தாவன: பகரமும் வகரமுமாம். அவற்றுட் பகரம் பெற்று அன்பெற்றும் பெறாதும் முடிவுழி, தகைப்பன, தகைப்ப; கொடுப்பன, கொடுப்ப. எனவும் வகரம் பெற்று அவ்வாறு முடிவுழி, வருவன, வருவ; செல்வன, செல்வ. எனவும் இவ்வாறு முடியுமாகலின், தகைப்ப கொடுப்ப என்பன விகாரமெனப்படா; இயல்பேயா மென்பது. கொடுப்பன யாவை அவைபோல என உவமைகருதாது அவை தம்மையே சுட்டி நிற்றலிற் கொடுப்ப என்பது பெயரன்மை யறிக" என்பர், சேனா வரையர்; தொல். கிளவி. சூ. க.(ஆ)பகரவிறுதி அஃறிணைக் கண்ணும் வருமென்பதற்கு 'நயந்துதாங் கொடுப்பபோல்' என்பதைச் சிலர் உதாரணங்காட்டியது தவறென்று மறுத்து அது 'விரும்பிக் கொடுப் பாரைப் போலென மாந்தரோ டுவமைகுறித்து வந்ததென்பர், தெய்வச்சிலையார்; தொல். கிளவி. சூ. எ. 'ரஃகான்'. (இ) "மலையவு நிலத்தவுஞ் சினையவுஞ் சுனையவும், வண்ணவண்ணத்த மலராய்பு" குறிஞ்சி. ககங-ககச. (ஈ) "மாக்கருங்கண்ணியர் வனைந்த வண்குழற், றேக்கமழ் மலர்நனி சிதற வாடலாற், காக்களின் மரங்களுங் கமழும்

ரேடவிழ் கமழ்கண்ணி தையுபு புனைவார்கட்
டோடுறத் தாழ்ந்து துறைதுறை கவின்பெறச்
(௧) செய்யவ ளணியகலத் தாரமொ டணிகொள்பு
தொய்யகந் தாழ்ந்த கதுப்புப்போற் றுவர்மணல்
(௨) வைவ்வா ரவிரற லிடைபோழும் பொழுதினன்

எ - து: சுனையிடத்துப் பூக்களை ஆராய்ந்து பறித்தலும் வேண்டாவாகிப் பாடுதல் அமைந்த தலைமையினையுடைய பூக்களைக் கொம்புகள் தாங் கொடுக்க வேண்டுமென்று * விரும்பியுங் கொடுப்பனபோல் இதழ்விரிகின்ற கமழுங் (௩) கண்ணியைக் கட்டிச் சூடும் அம்மகளிரிடத்தே திரட்சியுறத் தாழ்ந்து கொடுத்துத் துறைதொறுந் துறைதொறும் மரங்கள் அழகுபெறும்படி யாறு அறலிடைபோழும் பொழுதின்க ணென்க.

கவின்பெற அறல் இடைபோழுமென்றது காரணகாரியமாம்; பெரு கியநீர் வற்றினகாலத்து அவைபூத்தலின்.

குறிஞ்சிநிலத்திற் சுனைப் பூக்களைத் தேடிப் பறியாதபடி இக்கரையின் மரங்கள் வேண்டும்பூக்களைக் கொடுத்தனவென்றார்.

சுனையவுமென்னும் உம்மையைக் கொய்யலுமென மாறுக. உம்மை, எதிர் மறை. சினையவுமென்னும் உம்மையை நயந்துமென மாறுக. உம்மை, சிறப்பு.

கல்லிடத்துநீர்நிலைக்குச் சுனையென்னும் பெயரே ஆண்டுக்கூறுதலானும் யாற்றங்கரைக்கண் இன்மையானும் சினை தாழ்ந்து கொடுத்தலன்றிச் சுனை தாழ்ந்து கொடுத்தல் இன்மையானும் இதுவே பொருளாம். தோடுறத்தாழ்ந் தென்றதற்குத் திரட்சியுறத் தங்கியென்றும், கவின்பெறவென்றதற்குக் கவின் பெறுநிற்கவென்றும் பொருள்கூறின், பெறுநிற்க இடைபோழு மென்றது பிறவினையாதலின் ஆற்றிற்குச் சிறப்புக் கூறிற்றன்றாய் வேறோர் வினையா மாறுமுணர்க.

திருமகளுடைய அழகினையுடைய மார்பிடத்து முத்தாரத்தோடே ஒப்புக்கொண்டு அறலிடை போழுமென்க. சிவந்த தலைக்கோலங் தங்கின மயிர்போற் சிலவிடங்கள் சிவப்பையுடைத்தாகிய மணலையுடைய †வையை, யாற்றில் ஒழுகுகின்ற விளக்கத்தையுடைய அறன்மணலை யாரமோ டணிகொள்பு. நடுவே பிளந்தோடும் பொழுதின்கணென்க.

இது தரவு.

---

வல்லியிற், பூக்களும் பூஞ்சுனை பூத்த போலுமே" பாகவதம். (௧௦) புனல் விளையாட்டு. ௧௩.

௧. (அ) "மணிமலைப் பணைத்தோண் மாநில மடந்தை, யணிமுலைத் துயல் வரூஉ மாரம் போலச், செல்புன லுழந்த சேய்வரற் கான்யாறு" சிறுபாண். ௧ - ௩. (ஆ) "அலைநீ ராடை மலைமுலை யாகத், தாரப் பேரியாற்று மாரிக் கூந்தற், கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை" சிலப். ௫: ௧-௩.

௨. "அறல் வாரும் வையை" கலி. ௩௦: ௧௬.

௩. மகளிர் கண்ணி சூடுதல்: சீவக. ௧௩௧௭, ௧௩௫௫; பெருங். (௧) ௩௬: ௧௧௨; ௩௮: ௧எ௨; (௨) ௧௬: எ; ௧எ: ௫௦; ௧௮: ௬; (௩) ௫: ௬௨; ௯: ௧௧.

(பிரதிபேதம்) * விரும்பிக்கொடுப்பன, † வையை, வையையாற்றில்.

அ (க) விரிந்தானு மலராயின் விளித்தாலுங் குயிலாயிற்
பிரிந்துள்ளா ரவராயிற் பேதுறூஉம் பொழுதாயி
(உ) னரும்பட ரவலநோ யாற்றுவ ளென்னாது
வருந்தநோய் மிகுமாயின் வணங்கிறை யளியென்னோ

எ - து: மலர்கள் அலர்ந்து, அமையாவாயின், குயில்கள் தம் பெடையை அழைத்துக் கூவுமாயின், நந்தலைவர் நம்மைப் பிரிந்து நினையாராயின், இளவேனிற்காலம் மயக்கமுறுத்துமாயின், அரிய நினைவையுடைய அவலத்தைச் செய்யுங் காமநோய்க்கு இவள் ஆற்றுவளென்று கருதாது இவள் இறந்துபடுவளென்று நீ வருந்தும்படி எனக்குக்காமநோய்மிகுமாயின், வணங்கின இறையையுடையாய்! நம்மாட்டு அவர்செய்யும் அளி என்னபயன் தரும்? எ - று.

கஉ புதலவை மலராயிற் பொங்கரின வண்டாயி
னயலதை யலராயி னகன்றுள்ளா ரவராயின்
மதலையி னெஞ்சொடு மதனில ளென்னாது
நுதலூரும் பசப்பாயி னுணங்கிறை யளியென்னோ

எ - து: மலர்கள் *சிறுதூற்றினவையாயின், வண்டுகள் சோலையிடத்தனவாயின், அலர் அயலாரிடத்ததாயின், நந்தலைவர் நம்மைப் பிரிந்து நினையாராயின், பசப்பு ஒரு பற்றில்லாத நெஞ்சுடனே தானும் வலியளல்லளென்று கருதாதே நுதலிடத்தே பரக்குமாயின், அசைகின்ற இறையினையுடையாய்! நம்மாட்டு அவர்செய்யும் அளி என்னபயன் தரும்? எ - று.

க௬ தோயின வறலாயிற் சுரும்பார்க்குஞ் சினையாயின்
மாவின தளிராயின் மறந்துள்ளா ரவராயிற்
பூவெழி லிழந்தகண் புலம்புகொண் டமையாது
(௩) பாயனோய் மிகுமாயிற் பைந்தொடி யளியென்னோ

எ - து. அற்றுவருதலையுடைய நீர் மணலிடத்தே செறிந்தனவாயின், கொம்பிற் பூக்களிலே சுரும்பு ஆரவாரிக்குமாயின், தளிர் மாவிடத்தனவாயின், நந்தலைவர் நம்மை மறந்து நினையாராயின், பூவினது அழகை இழந்த கண்கள் உறக்கத்தைக்கொண்டு ஆற்றியிராமற் றனிமையால் உண்டான நோய் மிகுமாயின், பசிய தொடியினையுடையாய்! நம்மாட்டு அவர்செய்யும் அளி என்ன பயன் தரும்? எ - று.

ஓகாரங்கள் எதிர்மறையாதலிற் பயன் தராதென நின்றது.

இவை மூன்றும், தாழிசை.

---

க. "விரிந்தானு மலராயின் விளித்தாலுங் குயிலாயின்" என்பது பொழிப்பியைபுத் தொடைக்கு மேற்கோள்; தொல். செய். சூ. ௯௬. நச்.

உ. "அரும்பட ரவலம்" ஐங்குறு. ௪அ௫.

௩. பாயல் - உறக்கம்: கலி. ௧௦: ௧௦, உ௪: எ, ௩எ: ௬, அஎ: க௬, க௩௪: அ, க௪௫: உ௪.

(பிரதிபேதம்.) * சிறுதூற்றிலவை.

எனவாங்கு

எ - து: என்று ; எ - று.

ஆங்கு அசை.

இது தனிச்சொல்.

உக ஆயிழா யாங்கன முரையாதி சேயார்க்கு
நாந்தூது மொழிந்தனம் விடல்வேண்டா நம்மினுந்
தாம்பிரிந் துறைத லாற்றலர்
பரிந்தெவன் செய்தி வருகுவர் விரைந்தே

எ-து: ஆராய்ந்த இழையினையுடையாய், அங்ஙனம் பயனின்றாக உரையாதேகொள்; சேய்நாட்டில் உறைகின்றவர்க்கு நம்வருத்தத்தைக் கூறினமாய் நாம் தூதுபோக விடவேண்டா; நம்மினும் தாம் இக்காலத்துப் பிரிந்திருத்தலை ஆற்றாராய் விரைந்து வருகுவர்; ஆதலால் வருந்தி என்னகாரியஞ் செய்கின்றாய்? *எ - று.

இது சுரிதகம்.

இதனால், தலைவிக்கு இழிவும், தோழிக்கு அச்சமும் பிறந்தன.

இஃது எழுடித்தரவும் நான்கடித்தாழிசையும் †பொருள்பெற்ற தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக் கலிப்பா. (உஎ)

உஅ. (க) தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலி
னல்லாந்தா ரலவுற வீன்றவள் கிடக்கைபோற்
பல்பய முதவிய பசுமைதீ ரகன்ஞாலம்
புல்லிய புனிறுதீர் இப் புதுநல மேர்தர

ரு வளையவர் வண்டல்போல் வார்மணல் வடுக்கொள
விளையவ ரைம்பால்போ லெக்கர்போழ்ந் தறல்வார
மாவீன்ற தளிர்மிசை மாயவ டிதலைபோ
லாயிதழ்ப் பன்மல ரையகொங் குறைத்தர
மேதக விளவேனி லிறுத்தந்த பொழுதின்கண்;

கO சேயார்கட் சென்றவென் னெஞ்சினைச் சின்மொழி
நீகூறும் வரைத்தன்றி நிறுப்பென்மன் னிறைநீவி
வாய்விரிபு பனியேற்ற விரவுப்பன் மலர்தீண்டி
நோய்சேர்ந்த வைகலான் வாடைவந் தலைத்தரூஉம்;

கசு, போழ்துள்ளார் துறந்தார்கட் புரிவாடுங் கொள்கையைச்
சூழ்பாங்கே சுடரிழாய் கரப்பென்மற் கைநீவி

க. இச்செய்யுள், பாலையில் வேனிலும் வாடையும் கங்குலும் மாலையும் வந்ததற்கு மேற்கோள்; தொல். அகத். சூ. கஉ. நச்.

(பிரதிபேதம்.)* எனவற்புறுத்தினாள், † தனிச்சொல்லும்.

வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணு மிருந்தும்பி
யாழ்கொண்ட விமிழிசை யியன்மாலை யலைத்தரூஉம்;

கஅ. தொடிநிலை நெகிழ்த்தார்கட் டோயுமென் னுருயிர்
வடுநீங்கு கிளவியாய் வலிப்பென்மன் வலிப்பவு
நெடுநிலாத் திறந்துண்ண நிரையிதழ் வாய்விட்ட
கடிமலர் கமழ்நாற்றங் கங்குல்வந் தலைத்தரூஉம்;

எனவாங்கு;

உரு. வருந்தினை வதிந்தநின் வளைநீங்கச் சேய்நாட்டுப்
பிரிந்துசெய் பொருட்பிணி பின்னோக்கா தேகிநம்
மருந்துயர் களைஞர் வந்தனர்
திருந்தெயி றிலங்குநின் றேமொழி படர்ந்தே.

இது பருவ வரவின்கண் ஆற்றாத தலைவியைத் தோழி வற்புறுப்ப வன்புறையெதிரழிந்தாட்கு, தோழி அவன்வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது.

இதன் பொருள்.

(க) தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலி
னல்லாந்தா *ரலவுற வீன்றவள் கிடக்கைபோற்
பல்பய முதவிய பசுமைதீ ரகன்ஞாலம்
புல்லிய புனிறொரீஇப் புதுநல மேர்தர
(உ)வளையவர் வண்டல்போல் வார்மணல் வடுக்கொள
விளையவ ரைம்பால்போ லெக்கர்போழ்ந் தறல்வார
மாவீன்ற (௩) தளிர்மிசை மாயவ டிதலைபோ

க. "தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலின்" என்பது செய்தெனெச்சக்குறிப்பாகிய அன்றியென்பது வினைமுதல்வினையான் முடிந்ததற்கு மேற்கோள். தொல். வினை. சூ. ௩உ. கல்; சூ. ௩௩. நச்.

உ. வண்டலாடும் இளைய மகளிரை 'வளையவர்' என்றார்; (அ) "இளையள் வளையோ ளென்றுனக் கியாவரும், விளைபொருளுரையார்" மணி. க0: எகூ-அ0. உகூ: சூஅ-கூ. என வருதலும் (ஆ) "சில்வளை விறலி" என்னுமிடத்து, "பல்வளையிடுவது பெதும்பைப் பருவத் தாகலின் அஃதன்றிச் சில்வளையிடும் பருவத்தாளென அவள் ஆடல் முதலிய துறைக்குரியளாதல் கூறியவாறு" என்பதும் ஈண்டறிதற் பாலன. பதிற். ரிஎ: சூ.

௩. (அ) "மாவின், றளிரே ரன்ன மேனித் தளிர்ப்புறத், தீர்க்கி னரும்பிய திதலையர்" மது. எ0கூ - அ. (ஆ) "ஈன்றவ டிதலைபோ லீர்பெய்யுந்

(பிரதிபேதம்) * அலமர வுற.

*லாயிதழ்ப் பன்மல ரையகொங் குறைத்தர
மேதக விளவேனி லிறுத்தந்த பொழுதின்கண்

எ - து: கருப்பந் தங்கிய காலத்துப் பிறக்கும் வேட்கையாகிய நோய் இளமைக்காலத்து அழகைக் கெடுக்குமளவன்றி மிகவருத்துகையினாலே அதற்கு அலமந்த சுற்றத்தார், பின்னர் அவள் மெய்ந்நோக்காடு கண்டு வருத்த முறும்படி புதல்வனையீன்றவள் அப்புதல்வனைக்கொண்டு அக்குடியையெல்லாம் பாதுகாத்துக்கிடந்த கிடக்கைபோல, தன்னிடத்துப் பயிரையுண்டாக்கின உழவர், தனக்கு இடையில் வந்த நோய்க்கு வருந்திய வருத்தம் நீங்கும்படி, தான் ஈன்ற உணவுகளைக்கொண்டு குடிமக்களையெல்லாம் பாதுகாத்த உலகம், அவள் தன்னைப்புல்லிய ஈன்றணுமை தீர்ந்து புதுநலம் பெற்றாற் போல, தான் ஈன்ற பசுமை தீர்ந்த புதிய அழகு தோன்ற, வளையினையுடைய இளை யோர் இழைத்த வண்டற்பாவையும் பூவுங் கலந்துகிடந்தாற்போல வார்ந்த மணல் பூக்கள் உதிர்ந்துகிடந்த வடுவைத் தன்னிடத்தே கொள்ள, இளையமகளி ருடைய மயிர்போல † இடுமணலை ஊடறுத்தலையுடைய நீர் ஒழுக, மாமை நிறத்தையுடையவள் திதலைபோல மாவீன்ற சிறிது முற்றின தளிரின் மேலே அழகிய இதழை யுடைய பல மலர்களி னுடைய வியக்கத் தக்க தாதுகள் உதிர்தலைச்செய்ய, பெருமை பொருந்த இளவேனிற்காலம் வந்துவிட்ட பொழுதின்கண்ணே; எ - று.

எர்தர - எழுச்சிதர. ஐயென்னும் உரிச்சொல் ஐயவெனப் பெயரெச்சக் குறிப்பாய் நின்றது.

இது தரவு.

௧0 சேயார்கட் சென்றவென் னெஞ்சினைச் (க) சின்மொழி
நீகூறும் வரைத்தன்றி நிறுப்பென்மன் னிறைநீவி

---

தளிரொடும்" (இ) "மாயவண் மேனிபோற் றளிரீன வம்மேனித், தாய சுணங்குபோற் றளிர்மிசைத் தாதுக" கலி. ௩உ: எ, ௩௫: ௩ - ௪. என்பவையும் (ஈ) "பூத்ததைந்த தாழ்சினைத் தளிரன்ன வெழின் மேனி தகைவாட" கலி. ௪0: ௧௯ - உ0; என்றவிடத்து "பூத்தாழ்ந்த தளிரெனவே சுணங்கும் மாமை நிறமுங் கூறிற்று" என்றெழுதி யிருக்குமுரையும் (உ) "வண்ண நுண் சுண்ணமாட்டி வளரிளந் திங்க ளன்ன, வொண்ணுதலொருத்தி மாமை யொழுகுமா மேனி நோக்கும், பண்ணமர் மழலைப் பல்காற் பறவை வீழ்ந் துழுது மென்பூந், தண்ணறுந் தாது துற்றுத் தயங்குசெந் தளிரு நோக்கும்" பாகவதம். (௧0) கோவியரை. உஅ. என்பதும் ஈண்டுக் கருதற்பாலன.

௧. (அ) சின்மொழி கலி. ௫எ: ௧௧, ௧உ௫: ௧௬, ௧௩உ: ௧௩; (ஆ) "அமிழ்து பொதி செந்நா வஞ்ச வந்த, வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையை" குறுந். ௧௪. (இ) "கூரெயிறு நாப்போழ்த லஞ்சியஞ்சி,

(பிரதிபேதம்.) * ஆயிதட் பன்மலர், † இளமணலை.

வாய்விரிபு (க) பனியேற்ற விரவுப்பன் மலர்தீண்டி
நோய்சேர்ந்த வைகலான் வாடைவந் தலைத்தரூஉம்

எ - து: சிலவான சொல்லினையுடையாய்! சேணிடைப் பிரிந்தோரிடத்தே சென்ற என்னெஞ்சினை ஆற்றுவித்துக் கொண்டிருத்தல்வேண்டுமென்று நீ சொல்லும் எல்லைத்தன்றாக மிகவும் ஆற்றி நிறுப்பேன், அதனாற் பெற்றதென்? யான் ஆற்றிநிறுத்தலைக் கைகடக்கும்படியாக வாடைக்காற்று வாய் விரிந்து பனியையேற்றுநின்ற விரவுதலையுடைய பல மலர்களை அளைந்து வந்து பிரிந்தோர்க்கு நோய்செய்தற்குக் காரணமான இளவேனில் நாளின் கண்ணே வருத்தத்தைத் தரும்; எ - று.
நீவவெனத் திரிக்க.

கச. போழ்துள்ளார் துறந்தார்கட் புரிவாடுங்கொள்கைபைச்
சூழ்பாங்கே சுடரிழாய் கரப்பென்மற் கைநீவி
வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணு (உ)மிருந்(ங)தும்பி
(ச)யாழ்கொண்ட விமிழிசை யியன்மாலை யலைத்தரூஉம்

எ - து: விளங்குகின்ற இழையினையுடையாய்! இளவேனிற்காலத்தை நினையாராய் நம்மை மறந்தாரிடத்தே மனம்புரிதலால் என்மேனிவாடுங் கோட்பாட்டினைப் பிறர் அறியலாகாதென்று சூழ்ந்து அப்பொழுதே மறைப்பேன், அதனாற் பெற்றதென்? யான் மறைத்ததனைக் கைகடக்கும் படியாக

யுழன்மாலைத் தீங்கிளவி யொன்றிரண்டு தான்மிழற்று மொருநாட் காறும்'' சீவக. கஙஙங. என்பவற்றால் சின்மொழி யென்பதற்குக் காரணம் விளங்கும். (எ) பழமொழி யுரைகாரர் சின்மொழி யென்பதற்கு மென்மொழியென்று பொருள் கூறுவர்; பழ. உஉசு.'

க. (அ) "அரும்பனி கலந்த வருளில் வாடை, தனிமை யெள்ளும் பொழுதில்" ஐங். சஎக. (ஆ) "மெய்கூர்ந்த பனியொடு மேனின்ற வாடையாற், கையாறு கடைக்கூட்டக் கலக்குறூஉம் பொழுது" கலி. ஙக: சு - எ.

உ. தும்பி கரியநிறமுடையதென்பதனை, இருந்தும்பி - கரியதும்பி; கலி. ங0:ச, எஅ:உ, கஉங: உ, கஉஎ: ங; கார். கரு. என்பதும் "தகையவர் கைச்செறித்த தாள் போலக் காந்தண், முகையின்மேற் றும்பி யிருக்கும்" கலி. சங: அ-கூ.என்னுமிடத்து, 'தாள்போல' என்பதற்கு, தாட்கூட்டாகிய நீலக்கடைச் செறிபோல என்று விளக்கமெழுதி யிருத்தலும் வற்புறுத்தும்.

ங. "தும்பி வண்டொடு தாவழி யாழ் செய" சீவக. அருச.

ச. பயனிலையுவமைக்குச் சிறுபான்மை கொண்டவென்பதும் வருமென்பதற்கு "யாழ்கொண்ட விமிழிசை யியன்மாலை யலைத்தரூஉம்" என்பது மேற்கோள் தொல். உவம. சூ. கச. பேர்.

வீழ்கின்ற ஞாயிற்றின் கதிர் அலர்த்தின பூவினது தேனையுண்ணுங் கரிய தும்பியினது யாழோசையையொத்த முழங்குகின்ற ஓசை நடக்கும் மாலைக் காலம் வந்து வருத்தத்தைத்தரும்; எ - று.

கொண்ட, உவமவுருபு.

கஅ. தொடிநிலை நெகிழ்த்தார்கட் டோயுமென் னருயிர்
வடுநீங்கு கிளவியாய் வலிப்பென்மன் வலிப்பவு
நெடுநிலாத் *திறந்துண்ண நிரையிதழ் வாய்விட்ட
கடிமலர் கமழ்நாற்றங் கங்குல்வந் தலைத்தரூஉம்

எ - து: குற்றம் நீங்குகின்ற வார்த்தையினையுடையாய்! தொடியை நிற்கின்ற நிலையி னின்று நெகிழப் பண்ணினாரிடத்தே நின்று தோயும் என்னுடைய அரிய உயிரை அவரிடத்துச்சென்று செறியாமற் காக்கத்துணிவேன், அதனாற் பெற்றதென்? யான் அங்ஙனம் துணியவும் வண்டுகள் *திறந்து உண்ணும்படியாக நிரைத்த இதழ்கள் அலர்ந்த மணத்தினையுடைய மலர்கள் கமழும்நாற்றம் நெடியநிலாவையுடைய இராக்காலத்தேவந்து வருத்தத்தைத் தரும்; எ - று.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு

எ - து: எனச்சொல்லி; எ - று.

ஆங்கு அசை.

இது தனிச்சொல்.

உ௲. வருந்தினை வதிந்தநின் வளைநீங்கச் சேய்நாட்டுப்
பிரிந்துசெய் பொருட்பிணி பின்னோக்கா தேகிநம்
மருந்துயர் களைஞர் வந்தனர்
(க)திருந்தெயி றிலங்குநின் றேமொழி படர்ந்தே

எ - து: வருந்தித் தங்கினநின் வளைகழலும்படியாகத் தலைவர் பின் பாராதே தூரிய நாட்டிலே பிரிந்திருந்து தேடும் பொருட்பிணியாலே போய்த் திருந்தின எயிறுகள் விளங்குதற்குக் காரணமான நின் தேன்போலும் மொழியை நினைத்து நம் அரிய துயரைக் களைவாராய் வந்தார்; இனி, நீ வருந்தாதே கொள்; † எ - று.

இது சுரிதகம்.

இதனால், தலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இது ‡ "நிலனொருங்கு மயங்குதலின்று" (உ) எனவே காலம் || மயங்குமென்றலின், வேனிலும் வாடையும் மாலையுங் கங்குலும் ÷வந்தன.

இஃது ஒன்பதடித் தரவும் நான்கடித் தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. (உஅ)

க. "முள்ளெயி றிலங்கச் செவ்வாய் திறந்து, சில்லென் கிளவி மெல்லென மிழற்றி" பெருங். (ச) ௫: கசு - எ.

உ. தொல். அகத். சூ. கஉ. இந்நூற்பக்கம் கருஎ: க-குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * துறந்து, †என ஆற்றுவித்தாள், ‡ நிலமொருங்கு, || மயங்குதலின், ÷வந்தது.

(௩௦.)(க)அருந்தவ மாற்றியார் நுகர்ச்சிபோ லணிகொள
விரிந்தானுச் சினைதொ.றாஉம் வேண்டுந்தா தமர்ந்தாடிப்
புரிந்தார்க்கும் வண்டொடு புலம்புதீர்ந் தெவ்வாயு
மிருந்தும்பி யிறைகொள வெதிரிய வேனிலான்;

ரு துயிலின்றி யாநீந்தத் தொழுவ்வயம் புனலாடி
மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான்மன்னோ
வெயிலொளி யறியாத விரிமலர்த் தண்காவிற்
குயிலாலும் பொழுதெனக் கூறுந ருளராயின்;

கூ பாணுள்யாம் படர்கூரப் பணையெழி லணைமென்றோண்
மாணுக்கி னவரோடு மறந்தமைகு வான்மன்னோ
வாணுச்சீர்க் கூடலு ளரும்பவிழ் நறுமுல்லைத்
தேனார்க்கும் பொழுதெனக் கூறுந ருளராயின்;

க௩ உறலியா மொளிவாட வுயர்ந்தவன் விழவினுள்
விறலிழை யவரோடு விளையாடு வான்மன்னோ
பெறலரும் பொழுதோடு பிறங்கிணர்த் துருத்திசூழ்ந்
தறல்வாரும் வையையென் றறையுந ருளராயின்;

எனவாங்கு;

கஅ தணியாரோ யுழந்தானுத் தகையவ டகைபெற
வணிகின்றார் நெடுந்திண்டே ரயர்மதி பணிபுநின்
காமர் கழலடி சேரா
நாமஞ்சாற் றெவ்வரி னடுங்கினள் பெரிதே.

இது பருவவரவின்கண் ஆற்றாத தலைமகள் இறந்தது சிந்தித்து நம் மாட்டு அன்பிலராயினும்இக்காலத்துஇவ்வூரின்கட்பண்டுதாம் விளையாடிய வாறு நினைந்துவருவர் * இக்காலவரவு சொல்லுவார் உளராயினெனக் கேட்ட பாணன் பாசறைக்கட் சென்று தலைவனைக் கண்டு கூறியது.

இதன் பொருள்.

(உ) அருந்தவ மாற்றியார் நுகர்ச்சிபோ லணிகொள
விரிந்தானுச் சினைதொறாஉம் வேண்டுந்தா தமர்ந்தாடிப்

---

க. இச்செய்யுள் பாலைக்கண் மருதம் நிகழ்ந்ததற்கு மேற்கோள்; தொல். அகத். சூ. கஉ. நச்.

உ. (அ)“தவஞ்செய் மாக்க டம்முடம் பிடாஅ,ததன்பயமெய்திய வளவை மான......வேண்டுவ முகந்துகொண்டு” பொருந. கூக - கஉஅ. (ஆ) “வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ, மீண்டு முயலப் படும்” குறள். உசுரு. (இ) “நோற்றோர்க்குச், சோற்றுள்ளும் வீழுங்கறி”

(பிரதிபேதம்) * இக்காலம் வரவு,

புரிந்தார்க்கும் வண்டொடு புலம்புதீர்ந் தெவ்வாயு
மிருந்(௩)தும்பி யிறைகொள வெதிரிய வேனிலான்.

எ - து: செய்தற்கரிய தவங்களைச் செய்தவர்கள் குறைவற நுகரும் நுகர்ச்சிபோல அழகுகொள்ள அரும்புகள்விரிந்தமையாத(உ)கொம்புகடோறும் தான் விரும்புந் தாதைப் பொருந்தியுண்டு விரும்பி ஆர்க்கும் வண்டோடே கருந்தும்பிகளும் வருத்தந் தீர்ந்து எவ்விடமுந் தங்குதல் கொள்ளும்படி மரங்கள் அவற்றை எதிர்கொண்ட இளவேனிற் கண்ணே; எ - று.

இது தரவு.

ரு. (௩) துயிலின்றி *யாநீந்தத் தொழுவைபம் புனலாடி
மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான்†மன்னோ

---

(௺) "முற்பெரிய நல்வினை முட்டின்றிச் செய்யாதார், பிற்பெரிய செல்வம் பெறலாமோ" பழ. கரு௦, ௩௪உ. (உ) "ஒரு முழமுஞ் சேற லில ரேனும்பொரு ளூர்க்கே, வரும்வழி வினையுழந்து வாழ்கதவ மாதோ" (ஊ) "விழுப்பொருள் பரவை ஞால, நோற்பவர்க் குரிய வாகும்" சீவக. உருருசு, உகூஅசு. (எ) "வேண்டிய விளைத்துக் கொள் ளும் விழுத்தவம் விளைத்து வந்தான்" சூளா. சுயம். கக௩. (ஏ) "பெருந்தவ முள்வழி விரும்புபு செல்லும், பொருளும் போகமும் புக ழும் போல" பெருங். (உ) அ: கஉசு - எ. (ஐ) "வேண்டின வேண்டி னர்க் களிக்கு மெய்த்தவம், பூண்டுளர்" கம்ப. அகத்தியப். அ. (ஒ) "அத்தவம் பிறவியை யகற்றி மேதகு, முத்தியை நல்கியே முதன்மை யாக்குமு, மித்துணை யன்றியே யிம்மை யின்பமு, முய்த்திடு முளந் தனி லுன்னுந் தன்மையே." (ஓ) "உடம்பினை யொறுத்து நோற்பார் ........வெஃகு நெடும்பொருள் பலவுங் கொள்வர்" கந்த. காசிப னுபதேச. கசு, உரு. (ஔ) "எவ்வகைப் பொருள்களு மீய வல்லது, செவ்விய தவமதே" கூவத்து. நைமிசா. உ௪.

க. "கொங்குதேர் வாழ்க்கை யென்பதும் இளவேனி லாயிற்று; தும்பி கொங்கு தேருங்காலம் அதுவாகலின்" (தொல். அகத். சூ. ககூ. நச்) என்பது இங்கே அறிதற்பாலது.

உ. "அருட்டருங் கேள்வி யமையத் தேக்கப், பற்பல வாசான் பாங்குசெல் பவர்போன், மூன்றுவகை யடுத்த தேன்றரு கொழுமலர், கொழுதிப் பாடுங் குணச்சுரும் பினங்காள்" கல். கூ: க - ௪.

௩. (அ) "துயிலின்றி ..........ருளராயின்" என்பது தலைவன் பரத் தையரோடு பாசறைக்கட்சென்றதற்கும் (நாற்கவி. சூ. அரு; இ-வி. சூ. ௪௫௩.) (ஆ) துயிலின்றி.........மன்னோ" என்பது தலைவன்பதியிகந்து

(பிரதிபேதம்) * யானீந்த, † கொல்லோ.

(க) வெயிலொளி யறியாத விரிமலர்த் (உ) தண்காவிற்
குயிலாலும் பொழுதெனக் கூறுந ருளராயின்

எ - து: இக்காலம் வெயிலினது ஒளியைக்கண்டறியாத விரிந்த மலரை யுடைய குளிர்ந்த பொழிலிலே குயில்கூவுங்காலமென்று அவற்குக் கூறுவார் சிலருளராயின், யாம் துயிலின்றி யாமக்கடலை நீந்தத் தான் மயில்போலும் இயலினையுடைய பரத்தையர் மருவுதலை நுகர்ந்து அவருடனே அழகிய புனலையுடைய மடுக்களையாடி நம்மை மறந்து அவரிடத்தே அமைந்திருப்பன்; அதனாற் பெற்றதென்? கூறுவார் இன்றே; எ - று.

---

நுகர்ந்தமை தலைவிகூறியதற்கும் (தொல். கற்பியல். சூ. ௪௬. 'யாறுங்' இளம்.) (இ) "ஆறுடி விளையாடி மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான் என்றமையின் இது விளையாட்டுப் பொருளாக உவகை பிறந்தது" என்பதற்கும் (தொல். மெய்ப். சூ. கக. பே; இ-வி. சூ. ௫எஅ.) (ஈ) "துயிலின்றி யாநீந்த" என்பது வினையெச்சக் குறிப் புக்கும் நன். வினை. சூ. உ௫. மயிலை. மேற்கோள்.

க. (அ) "வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்" பெரும்பாண். ௩எ௪; (ஆ) மணி. ௪: ௫; (இ) "இருநேங்கு சோலை" கலி. ௫௦: ௫, (ஈ) "கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை" புறம். உக: (உ) "பரிதியஞ் செல்வன் விரிகதிர்த் தானைக்,கிருள்வளைவுண்ட மருள்படுபூம்பொழில்" தொல். பொருளி. இளம். மேற்கோள். (ஊ) "காய்கதிர் நுழையாக்கடி பொழில்" தமிழ்நெறி. மேற். (எ) "வெயிற்கெதிர்ந் திடங்கொடா தகங் குளிர்ந்தபைம்பொழில்" தே. (ஏ) "தாங்கிருள்வெய்யோற்கொதுங்கிப், புக்கிருந்தா லன்னபொழில்" நள. சுயம். உஉ. (ஐ) "வெங்கதிர் நுழையா விரிபொழில்" இராமா. சீதைவனம்புகு. உஉ. (ஒ) "விசும்பு போழ்ந்துலாங், காய்கதிர் நுழைகலாக் காவினுடல்போல்" நைடதம். கான்புகு. ௪. (ஓ) "விரிகதிர்ச் செஞ்ஞா யிற்றின் வெயில்புகாப் பொதும்பர் தோறும்" சீகாளத்தி. கண்ணப்ப. ௬௬. என்பவையும் (ஔ) "கலிகெழு கூடல், வரையுறழ் நீண்மதில் வாய்சூழ்ந்த வையைக், கரையணி காவி னகத்து" கலி. ௬உ: கக-௩. என்பதும் (ஃ) வையை யும்போலும் யாற்றினும்.........திருமருதந் துறைக் காவேபோலுங் காக்களினும் விளையாடி உறைபதியைக் கடந்துபோய்நுகர்ச்சியெய்து தலும் தலைவற்கும் காமக்கிழத்தியர்க்கும்.........உரிய" (தொல். கற்பியல், சூ. ௫௦, நச்.) என்பதும் ஈண்டு அறிதற்பாலன.

உ. "அடைகரை மாஅத் தலங்குசினை பொலியத்,தளிர்கவி னெய்திய தண் ணறும் பொதும்பிற், சேவலொடு கெழீஇய செங்க ணிருங்குயில், புகன்றெதி ராலும் பூமலி காலையு, மகன்றோர் மன்றநம் மறந்திசி னோ ரென" நற். ககஅ.

கல. பாஅனுள்யாம் படர்கூரப் (க) பணைமெழி லணைமென்றோண்
மானோக்கி னவரோடு மறந்தமைகு வான்மன்னோ
வானுச்சீர்க் கூடலு ளரும்பவிழ் நறுமுல்லைத்
தேனார்க்கும் பொழுதெனத் தெளிக்குந ருளராயின்

எ-து: இக்காலம் அமையாத (உ)புகழையுடைய மதுரையிடத்து அரும்புக ளவிழ்ந்த நறிய முல்லையிலே தேனினம் ஆரவாரிக்குங் காலமென்று அவற்குத் தெளிவிப்பார் சிலருளராயின், * நடுயாமத்தே யாம் வருத்தமிகத் தான் மூங்கிலின் அழகையுடைய அணைபோலும் மெல்லிய தோளையும் மானினது நோக்கம்போலும் நோக்கினையுமுடையபரத்தையருடனே †கூடி நம்மை மறந்து அவரிடத்தே அமைந்திருப்பன்; அதனாற் பெற்றதென்? கூறுவார் இன்றே; எ-று.

கசு. (௩) உறலியா மொளிவாட (ச)வுயர்ந்தவன் விழவினுள்
விறலிழை யவரோடு விளையாடு வான்மன்னோ
பெறலரும் பொழுதோடு பிறங்கிணர்த் துருத்திசூழ்ந்
(ரு) ‡தறல்வாரும் வையையென் றறையுந ருளராயின்

எ-து: இக்காலம் பெறுதற்கரிய இளவேனிற் காலத்துடனே பெருமையினையுடைய பூங்கொத்துக்களையுடைத்தாகிய யாற்றிடைக்குறையைப் புடைசூழ்ந்து வையை அறலுண்டாம்படி ஒழுகுமென்று அவற்குச் சொல்லுவார் உளராயின், ||தன்னை உறுதற்குரிய யாம்ஒளிகெடும்படியாகக் காமனுக்கு எடுத்த

---

க. "பணைமெழி லணைமென்றோள்" கலி. க: க.

உ. (அ) "மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்" (ஆ) "மிக்குப்புக ழெய்திய பெரும்பெயர் மதுரை" மது. சஉக, சுககு. (இ) "புகழ்பூத்த லல்லது, குன்றுத லுண்டோ மதுரை" (ஈ) "புகழ்பூத்த லல்லது, பொய்யாத லுண்டோ மதுரை" பரிபாடல்.

௩. (அ) "உறலியாம்......ருளராயின்" என்பது தலைவன்கண் நிகழ்ந்தது தலைவி நினைந்து தோழிக்குக் கூறியதற்கும் தோல். அகத். சூ. சங. நச். (ஆ) நிம்பிரிக்கும் (நிம்பிரி - பொறாமை தோன்றுங் குறிப்பு; அவரோடும் விளையாடுவா னெனப் பொறாமை கூறியும் அவன் ஈண்டையானாக வேண்டுமெனக் காதலைச் சிறப்பித்தலின் அமைந்தது' என்பர், நச்;) தொல். பொருளி. சூ. ருக. நச். மேற்கோள்.

ச. "மல்கிய துருத்தியுண் மகிழ்துணைப் புணர்ந்தவர், வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ" கலி. ௩ரு: க௩-ச.

ரு. (அ) "அறல்வாரும் ..............ருளராயின்" என்பது அறையென்பது சொல்லுதற்பொருளிற் பண்பின்மேல் வருதற்கு மேற்கோள்; நன். உரி. சூ. சஎ. மயிலை. (ஆ) "வையைவா ரவிரற லிடைபோழும் பொழுதினான்" கலி. உஅ: எ.

(பிரதிபேதம்) * நடுவியாமத்தே, † கூடிமகிழ்ந்து நம்மை, ‡ அறலாரும், || தம்மை.

திருநாள் இக்காலத்து வெற்றியையுடைய இழையினையுடைய பரத்தைய ருடனே விளையாடுவென், அதனாற் பெற்றதென் ? கூறுவார் இன்றே; எ - று.

"சினனே பேதைமை நிம்பிரி நல்குர, வனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே." (௧) என்பதனாற் பரத்தையரோடு விளையாடுவானெனப் பொருமை கூறியும் *அவன் ஈண்டையானாகவெனக் காதலைச் சிறப்பித்தலின் அமைந் தது. இவை விளையாட்டிற் பிறந்த உவகையென்னும் மெய்ப்பாடு; இவை தன்கட் டோன்றிய பெயர்பற்றி வரும்.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு

எ - து: எனச்சொல்லி; எ - று.

ஆங்கு அசை.

இது தனிச்சொல்.

கசு (உ) தணியாநோ யுழந்தானாத் (௩)தகையவ டகைபெற
வணிகிளர் நெடுந்திண்டே ரயர்மதி பணிபுநின்
காமர் கழலடி சேரா
நாமஞ்சா றெவ்வரி னடுங்கினள் பெரிதே

எ-து: மீளாத காமநோயிலேவருந்தி அமையாததகைமையையுடையவள் நின்னுடைய விருப்பத்தையுடைய கழலணிந்த அடியைப் பணிந்து சேராத அச்சமமைந்த (௪) பகைவரைப்போலே பெரிதுநடுங்கினள், அவள் அழகைப் பெறும்படி அழகுவிளங்கின நெடிய திண்ணிய தேரைச் செலுத்துவாயாக; †எ - று.

இது சுரிதகம்.

---

௧. தொல். பொருளி. ௬. ௩௧. இந்நூற்பக்கம் கசுரு: ௩ - (ஆ) குறிப்புப் பார்க்க.

௨. அவணிலை யுரைத்த லென்பதற்கு "தணியாநோ.........பெரிதே" என்பதை மேற்கோள் காட்டி, பாசறைக்கண் தலைவற்குத் தலைவி வருத்தங் கூறியவாறு காண்க என்பர், இளம்பூரணர்; தொல். கற். ௬. ௨௫. 'நிலம் பெயர்ந்து'.

௩. "ஒடுங்கீ ரோதி யொண்ணுத லணிகொளக், கொடுங்குழைக் கமர்த்த நோக்கி னயவரப், பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து, மாணிழை யரிவை காணிய வொருநாட், பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்" பதிற். ஆக: ௨௮-௩௨.

௪. "வடதிசை மருங்கின் மன்னர்த முடித்தலைக், கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது, வறிது மீளுமென் வாய்வா ளாகிற், செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப், பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பிற், குடிநடுக் குறூஉங் கோலே னாகென" எனச் செங்குட்டுவன் வஞ்சினங் கூறுதலாலும் பகை யரசரை நடுக்குதல் அரசர்க்குரிய தொழிலென்பது விளங்கும். சிலப். உ௬: க௩-அ.

(பிரதிபேதம்) * அவனீண்டடையானாக, † எனப் பாணன் பாசறைக்கட் கூறினான்.

"பாசறைப் புலம்பலும்" (க) என்புழித் தூதுகண்டு தலைவன் புலம்புவனாதலின், தூதாய்ச்சென்ற பாணன் கூறினான்.

இது "திணைமயங் குறுதலும்" (உ) என்பதனாற் பாலைக்கண் மருதம் நிகழ்ந்தது.

இதனால், தலைவிக்கு இழிவும் தலைவற்கு அசைவும் *பிறந்தன.

இது † "மரபினது" (௩) என்றதனான் நான்கடித்தரவிற்கு நான்கடித் தாழிசை வந்து தனிச்சொற்பெற்று நான்கடிச்சுரிதகத்தாலிற்ற ஒத்தாழிசைக் கலிப்பா. (உசு)

(௩க.) (ச)கடும்புனல் கால்பட்டுக் கலுழ்தேறிக் கவின்பெற
நெடுங்கயத் தயலய லயிர்தோன்ற வம்மணல்
வடுத்தூர வரிப்பபோ லீங்கைவா டுதிர்புகப்
பிரிந்தவர் நுதல்போலப் பீர்வீயக் காதலர்ப்
௫ புணர்ந்தவர் முகம்போலப் பொய்கைபூப் புதிதீன
மெய்கூர்ந்த பனியொடு மேனின்ற வாடையாற்
கையாறு கடைகூட்டக் கலக்குறூஉம் பொழுதுமற்
பொய்யேமென் றுயிழாய் புணர்ந்தவ ருரைத்ததை;

கூ மயங்கமர் மாறட்டு மண்வெளவி வருபவர்
தயங்கிய களிற்றின்மேற் றகைகாண விடுவதோ
பயங்கெழு பல்கதிர் பால்போலும் பொழுதொடு
வயங்கிழை தண்ணென வந்தவிவ் வசைவாடை;

க௩ தாள்வலம் படவென்று தகைநன்மா மேல்கொண்டு
வாள்வென்று வருபவர் வனப்பார விடுவதோ
நீள்கழை நிவந்தபூ நிறம்வாடத் தூற்றுபு
தோளதிர் பகஞ்சேரத் துவற்றுமிச் சின்மழை;

கஎ பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்
வகைகொண்ட செம்மனும் வனப்பார விடுவதோ

---

க. தோல். அகத். சூ. சக.

உ. தோல். அகத். சூ. கஉ. இந்நூற்பக்கம், கசுஉ: க - ஆம் குறிப்புப் பார்க்க.

௩. தோல். செய். சூ. க௩ச.

ச. இச்செய்யுள் (அ) மண்கோடலும் திறைகோடலும் அரசர்க்கே யுரிய வென்பதற்கும், (தோல். அகத். சூ. உஎ. நச்.) (ஆ) குறிப்பினாற் பாட்டுடைத் தலைவனைக் கிளவித் தலைவனாகக்கூறியதற்கும் (தோல். புறத். சூ. உஅ. நச்.) மேற்கோள்.

(பிரதிபேதம்) * பிறக்கும், † மரபினவென்றதனால்.

புகையெனப் புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா
முகைவெண்ப னுதிபொர முற்றிய கடும்பனி;
 எனவாங்கு;

௨௨ வாளாதி வயங்கிழாய் வருந்துவ ளிவளென
நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி
மீளிவேற் றானையர் புகுதந்தார்
நீளுயர் கூட னெடுங்கொடி யெழவே.

இஃது இளவேனிற்காலத்து வருவல், அத்துணையும் ஆற்றியிருவென்று மன்னசையால் வேந்தன் சென்றவழி, முன்பனிக்காலமும் பின்பனிக்காலமும் வந்து வருத்தலின் ஆற்றாத தலைவியைத் * தோழி வருவரென வற்புறுப்பவும், வன்புறை எதிரழிந்தவழி, தலைவன் யாங்குறித்த பருவம் வருந்துணையும் ஆற்றியிராளெனப் பின்பனிக்காலத்து வருகின்ற வரவுணர்ந்து தோழி கழியுவகையாற் கூறியது.

இதன் பொருள்.

கடும்புனல் கால்பட்டுக் † கலுழ்தேறிக் கவின்பெற
நெடுங்கயத் தயலய லயிர்தோன்ற வம்மணல்
வடுத்தூர வரிப்பபோ லீங்கைவா டிதிர்புகப்
(க) பிரிந்தவர் நுதல்போலப் பீர்வீயக் காதலர்ப்
ரு புணர்ந்தவர் முகம்போலப் (௨) பொய்கைபூப் (௩)புதிதீன
(௪) மெய்கூர்ந்த பனியொடு மேனின்ற வாடையாற்
கையாறு கடைக்கூட்டக் கலக்குறாஉம் பொழுதுமற்
பொய்யேமென் றுயிழாய் புணர்ந்தவ ருரைத்ததை

எ - து: யாறு கூதிர்க்காலத்து, பெருகுதலிற் கடிதாகிய நீர் வற்றிக் கால்களாக ஓடுதலுண்டாய்க் கலக்கந் தெளிந்து அழகுபெற, நெடிய குளங்களின் அயலேஅயலே நுண்மணல்தோன்ற, அம்மணலின் அறல்மறையும்

---

க. பிரிந்தவர் நுதற்குப் பீர்க்கம்பூ உவமையாதலை ருஙு-ஆம் கலி. கச - ரு ஆம் அடிகளின் குறிப்பிற்காண்க.

௨. "பொய்கை பூப்புதிதீன" என்பது வினைக்குறிப்பு அகர வீறன்றிப் பிறஈற்றான் முடிக்குஞ் சொல்லை விசேடித்து வருதற்கு மேற்கோள்; தொல். வினை. சூ. ௩௦. "செய்து செய்யூ" கல்; சூ. ௩க. நச்.

௩. புதிதீன வென்பதற்குப் புதிதாக ஈன எனப் பொருள்கூறி, செய வென்னுந் தெரிநிலை வாய்பாட்டிற்குரிய குறிப்பெச்சம் என்பர், இராமாநுசகவிராயர்; நன். வினை. சூ. உ௩.

௪. கலி. உக: க௨-க௩.

(பிரதிபேதம்) * வருவரெனத்தோழி வற்புறுப்பவும், † கலிழ்.

படி கோலஞ்செய்வனபோல ஈங்கையினது வாடற்பூக் காம்பு கழன்று அம்மணலிலே வீழ, கணவரைப் பிரிந்த மகளிர் நுதல்போல (௧) முன்பூத்த பீர்க்கம்பூ இப்பொழுது பூவின்றாக, தாம் * காதலித்த தலைவரைக்கூடின மகளிர்முகம்போலப்பொய்கையிற் பூக்குந் தாமரையைப் பொய்கை புதிதாகப் பூக்க, முன்பனிக்காலத்திற்கும் பின்பனிக்காலத்திற்கும் மேலாய்நின்ற இளவேனிற்காலம் ஆயிழாய்! நம்மைக்கூடினவர் தப்பாமல்வருவேமென்றுகூறின காலம், அதனாற்பெற்றதென்? அக்காலம் வருந்துணையும் ஆற்றியிராதபடி முன்பனிக்காலத்து வாடையாலும் மெய் வளைதற்குக் காரணமான பின்பனியாலும் உண்டாகிய வினை ஒழிந்து அயர்தல் இறந்துபாட்டை நமக்குக் கூட்டுகையினாலே நெஞ்சு கலக்கமுறாநின்றது ; யான் எங்ஙனம் ஆற்றுவேன் ; † எ - று.

முன்னர்நின்ற செயவெனெச்சங்கள் மேனின்றவென்னும் பெயரெச்சத்தோடுமுடிந்து, அது பொழுதென்னும்பெயரோடுமுடிந்தது.

கையாறும் ஒரு மெய்ப்பாடென்றுணர்க.

இது தரவு.

௬ (௨)மயங்கமர் மாறட்டு (௩)மண்வௌவி வருபவர்
(௪) தயங்கிய களிற்றின்மேற் றகைகாண விடுவதோ
பயங்கெழு பல்கதிர் பால்போலும் பொழுதொடு
வயங்கிழை தண்ணென வந்தவிவ் வசைவாடை

எ-து: உலகிற்கு (௫) உணவுகளை விளைத்தற்குக் காரணமாகிய மதியின் கதிர்கள் பாலையொத்து விளங்கும் இராப்பொழுதோடே விளங்குகின்ற அணிகள் குளிரும்படியாக வந்த இந்த அசைதலையுடைய வாடைக்காற்று இரண்டு படையும் தம்முள் மயங்கினபோரிலே மாறாகிய அரசனைக்கொன்று அவன் நாட்டைக்கைக்கொண்டு களிற்றின்மேலே வருமவருடைய வீரத்தாற்

---

௧. "இவர்கொடிப் பீர மிரும்புதன் மலரு, மற்சிரம்" (ஐங். ௪௬௪) என்பது இங்கே அறிதற்பாலது.

௨. (அ) "வேண்டா, செறிபடை மயங்கிய வெருவரு ஞாட்பின்" (ஆ) "படைமயங்காரிடை" புறம். ௧எஅ: ௬ - எ, ௩௪௩: ௧எ; (இ) "கழுமிய ஞாட்பினுள்" களவழி. ௧௧.

௩. "போயவர் மண்வௌவி வந்தனர்" கலி. ௧௪அ: ௨௩.

௪. "தயங்கிய........விடுவதோ" என்பது தலைவி கூற்றுக்கு மேற்கோள்; தொல். கற். ௬. ௫. நச்.

௫. "மண்ணக மனைத்து நிறைந்தபல் லுயிர்கட்,காய வமுத மீகுத லானும்" என்பது ஈண்டு அறிதற்பாலது. கல். ௨௩.

(பிரதிபேதம்) * காதலித்தவரை, † என்றாள்.

பிறந்த அழகை நாங்கண்டுநுகரும்படியாக (௧) நம்முயிரைக்கொள்ளாது விடுவ தொன்றுமிருந்ததோ ? அது கொண்டேவிடும்; எ - று.

தயங்குதல் - அசைவு.

பால்போழுமென்று பாடமாயின், பாலை வருத்துமென்க.

இதனுள் வென்ற வீரத்தாற் பிறந்த அழகை நுகர விரும்புதலின் தலைவி யும் அரசவருணமேயாயிற்று. இது மேல்வருவனவற்றிற்கும் ஒக்கும். இஃது *"ஏவன்மரபின்" என்னும் (௨) சூத்திரத்தானுணர்க.

௧௩ (௩)தாள்வலம் படவென்று தகைநன்மா மேல்கொண்டு
வாள்வென்று வருபவர் வனப்பார விடுவதோ
நீள்கழை நிவந்தபூ நிறம்வாடத் தூற்றுபு
தோளதிர் பகஞ்சேரத் துவற்றுமிச் சின்மழை

எ-து: நீண்ட கரும்பில் ஓங்கின பூவை நிறங்கெடும்படி காற்றுத் தூற்றித் (௪)தோள்கள் குளிரால் நடுங்கி நம் ஆகத்தைச் சேரும்படி † துவற்றுகின்ற இச்சிலவாகியமழை தமது (௫)தாள்களாலே வெற்றியுண்டாம்படிவென்று அழ கினையுடைத்தாகிய நல்ல குதிரையை ஏறி வாளாலே வென்றுவருமவருடைய வீரத்தாற்பிறந்த அழகை நாங் கண்டு நுகரும்படியாக நம்முயிரைக் கொள்ளாது விடுவதொன்றுமிருந்ததோ? அது கொண்டேவிடும்; எ - று.

இத்தாழிசைகள் இரண்டும் முன்பனிப்பருவங் கழிகின்றன கூறின வாகக் கொள்க.

௧௪ (௬)பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்
வகைகொண்ட செம்மனும் வனப்பார விடுவதோ

---

௧. "மழைத்தாரை வல்லிருட்கும் வாடைக்கு நாங்கள், பிழைத்தால்வந் தேனென்னும் பேர்" நள. சுயம். ௧0௩.

௨. தொல். அகத். சூ. ௨௪.

௩. (அ) "தாள்வலம்...............விடுவதோ" என்பது தலைவி கூற்றுக்கு மேற்கோள்; தொல். கற். சூ. ௫. (ஆ) "வாளின் வாழ்நர் தாள்வலம் வாழ்த்த" புறம். ௨௪: ௨௯.

௪. "நடுங்குசுவ லசைத்த கையள்" முல்லை. ௧௪.

௫. தாள் - முயற்சி.

௬. (அ)பாலைத்திணையிற் பின்பனிப் பருவம் வருதற்கு "பகைவென்று...... கடும்பனி" என்பதை மேற்கோள் காட்டி "இது தனித்தோர்க்குப் பின்பனி ஆற்றற்கரிது. இஃதெவர்க்கு மேதமாம் எனவும் இதனா னிறந்து படுவேனெனவும் கூறிற்று" (தொல். அகத். சூ.௧0.) என்றும் (ஆ) "வாளாணெதிரும் பிரிவினானும்" என்புழி இப்பகுதியை மேற்

(பிரதிபேதம்) * ஏனைமரபின், † தூற்றுகின்ற,

(க)புகையெனப் புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா
முகைவெண்(உ)ப னுதிபொர முற்றிய கடும்பனி

எ - து: புகையென்னும்படி சிறுதூறுகளைச் சூழ்ந்து பூவாய் அழகிய கள்ளைப் பொதிதலைச் செய்யாத முகைபோலும் வெள்ளிய பல்லின் நுனைகள் தம்மிற்பொரும்படி முதிர்ந்தகடியபனி பகையைவென்றுதிறையைவாங்கின, பாய்ந்து செல்கின்ற திண்ணிய தேர்மிசை வருமவருடைய கூறுபாடு கொண்ட தலைமையினையுடைய வீரத்தாற் பிறந்த அழகை நாங்கண்டு நுகரும் படியாக நம்முயிரைக் கொள்ளாது விடுவதொன்றுமுயிருந்ததோ ? அது கொண்டேவிடும் ; எ று.

இது "பின்பனி தானு முரித்தென மொழிப" (ங) என்றதனாற் பின் பனி வந்தது.

பரித்திண்டேர் எனவும் பாடம்.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு

எ - து: என்று; எ - று. ஆங்கு, அசை.

இது தனிச்சொல்.

---

கோள் காட்டி "இதனுட் பனியெதிர் பருவங் குறிஞ்சியாகலிற் களவிற் பிரிந்தான் வாளாணெதிரும் வென்றி தோழிக்குத் தலைவி கூறியவாறு; இஃது அவன்வயிற் பரத்தைமை கருதாதது." (தோல். களவியல். சூ. கசு.) என்றும் (இ) வேந்தன் உரிப்பெருட் டலைவ ஞனதற்கு, "பகைவென்று........ விடுவதோ" என்பதை மேற்கோள் காட்டி "இதனுள்வேந்தன்தலைவனுனவாறும்வகைகொண்டதலைமையி னழகை நுகரவிரும்பினுள் என்றலின், தலைவியும் அவ்வருணத்தா ளாயவாறும் உணர்க"; (தோல். அகத்.சூ. உச.) என்றும் கூறுவர், நச். (ஈ) 'பகைவென்று திறைகோடற்குப் பிரியுங்கால், அன்புறுகிழவி துன்புற்றிருப்பவரையாது பிரிதலின்று' என்பது (தோல். கள. சூ. ௫0. நச்.) காணப்படுகின்றது.

க. (அ)"நளிர்மலைப் பூங்கொடி தங்கு புகக்கும், பனிவள ராவியும் போன்ம் மணிமாடத், துண்ணின்று தூய பனிநீ ருடன்கலந்து, காறிரிய வார்க்கும் புகை" பரி. க0: கஉஉ-௫. (ஆ) "புகையிற் பொங்கி வியல் விசும்புகந்து,பனியூ ரழற்கொடி கடுப்பத் தோன்று,மியச் செவ்வரை" (இ) "புகைநிற வுருவி னற்சிரம்" அகம். உகூ௫: க-ங; ஙகஎ: ங.

உ. "பன், னுனிபொரு காலம் வர" திருவேங்கைக். சசங.

ங. தோல். அகத். சூ. க0.

௨௨ வாளாதி வயங்கிழாய் வருந்துவ ளிவளென
(க)நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி
(௨)மீளிவேற் றானையர் புகுதந்தார்
நீளுயர் கூட னெடுங்கொடி யெழவே

எ-து: பயனிலகூறாதேகொள். விளங்கின இழையினையுடையாய்! பொய்யன்றித் (௩)தாஞ்சொல்லிய நாளெல்லைவருதற்குஇன்னுஞ்சிறிதுநாட் செல்லுமென்று தாக்கி அத்துணையும் ஆற்றாது இவள் வருந்துவளென்று கருதிக் (௪)கூற்றுவனையொத்த வேற்படையினையுடையவர் புகழ் வளர்கின்ற உயர்ந்த கூடலிலேநெடிய வெற்றிக்கொடிகளைக்கட்டும்படியாகப்புகுந்தார்காண்;*எ-று.

நிறுத்தென்றது, தூக்கியென்னும்பொருட்டு.

"இழவி நிலையே வினையிடத் துரையார்,"வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்" (௫) என்பதனால் (௬)உருவுவெளிப்படுதலின் இவளென்றான்.

"நிலனொருங்கு†மயங்குத லின்று"(எ)எனவே காலம் இரண்டும் மயங்குமென்றலின் முன்பனியும் பின்பனியும் மயங்கிற்று.

இது சுரிதகம்.

இதனால், தலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது

இஃதுஎட்டடித்தரவும் நான்கடித்தாழிசையும்தனிச்சொல்லும்நான்கடிச் சுரிதகமும் பெற்று வந்த ஒத்தாழிசைக்கலிப்பா. (௩௦)

௩௨. (அ)எஃகிடை தொட்டகார்க் கவின்பெற்ற வைம்பால்போன்
மையற விளங்கிய துவர்மண லதுவது

---

க. இவ்வடி முற்றும் கலி. ௩௩-வது செய்யுளிலும் ௨௬-ஆம் அடியாக வந்துள்ளது. இங்குள்ள இவ்வடியுரையுடன் "அச்சிர, முந்து வந்தனர் நங்காத லோரே" ஐங். ௨௨௩. என்பது ஒப்புநோக்கற்பாலது.

௨. "சூழவன் பதாகை கட்டித் தோரணம் பலவு நாட்டி, யேழுயர் மாடமூதூ ரெங்கணும் கோடித் தாரே" வில்லி. நிரை. ௧௧அ.

௩. தலைவர், தாஞ்சொல்லிய நாளெல்லை வருதற்கு முன்பு வருதலுண்டென்பது, ஐங். ௪௨-ஆம் பத்தாலுணரப்படும்.

௪. "காலவேல்" சீவக. ௬௬௬, ௨௬௩௫. "காலவேலான்" கம்ப. கையடை. ௧௧.

௫. தொல். கற். சூ. ௪௫.

௬. உருவு வெளிப்படுதல். ஐங். ௪௧அ.

எ. தொல். அகத். சூ. ௧௨.

அ. இச்செய்யுள், தனிச்சொல்லும் அடக்கியலுமின்றி அடிநிமிர்ந் தொழுகியதற்கும் (தொல்.செய்.சூ.௧௫௫.பே.) "எண்ணிடையிட்டுச் சின்னங்குன்றிய கொச்சகத்திற்கும் (தொல்.செய்.சூ. ௧௫௫. நச்.) மேற்கோள்.

(பிரதிபேதம்) * எனஆற்றுவித்தாள், † மயங்குதலிலவெனவே.

வைதாக நெறித்தன்ன வறலவிர் நீளம்பா
லணிநகை யிடையிட்ட வீகையங் கண்ணிபோற்
பிணிநெகி ழலர்வேங்கை விரிந்தபூ வெறிகொளத்

௫ துணிநீராற் றூமதி நாளா லணிபெற
வீன்றவ டிதலைபோ லீர்பெய்யுந் தளிரொடு
மான்றவ ரடக்கம்போ லலர்ச்செல்லாச் சினையொடும்
வல்லவர் யாழ்போல வண்டார்க்கும் புதலொடு
நல்லவர் நுடக்கம்போ னயம்வந்த கொம்பொடு
முணர்ந்தவ ரீகைபோ லிணரூழ்த்த மரத்தொடும்
புணர்ந்தவர் முயக்கம்போற் புரிவுற்ற கொடியொடு
நயந்தார்க்கோ நல்லமை னிளவேனி லெம்போல;

௧௪ பசந்தவர் பைதனோய் பகையெனத் தணித்துநம்
மின்னுயிர் செய்யு மருந்தாகிப் பின்னிய
காதல ரெயிறேய்க்குந் தண்ணருவி நறுமுல்லைப்
போதாரக் கொள்ளுங் கமழ்குரற் கென்னுந்
தூது வந்தன்றே தோழி
துயரறு கிளவியோ டயர்ந்தீகம் விருந்தே.

இது காலவரவு கண்டு ஆற்றளாயினவிடத்துத் தோழி காலத்தை நோக்கி அழகிதாகச்செய்தாய் வந்தேனச் சொல்லி, தலைவிக்கு நங் காதலர் வருகின்றாரெனச் சொல்லிவந்த தூதுகாண் இது, நாம் விருந்தயர்க மெனச் சொல்லியது.

இதன் பொருள்.

(க) (உ)எஃகிடை தொட்டகார்க் கவின்பெற்ற வைம்பால்போன்
மையற விளங்கிய துவர்மண லதுவது
வைதாக நெறித்தன்ன வறலவிர் நீளம்பா
லணிநகை யிடையிட்ட (௩)வீகையங் கண்ணிபோற்
பிணிநெகி ழலர்வேங்கை விரிந்தபூ *வெறிகொள

---

க. இப்பாட்டின் மூலம், எடுகளில் ஒரே தொடர்ச்சியாக உள்ளதேனும், முடிபு கருதித் தரவு இருபகுதியாகவும் சுரிதகம் ஒரு பகுதியாகவும் பதிப்பிக்கலாயிற்று.

உ. (அ) கலி. ௫: க-உ-ஆம் அடிக்குறிப்புப் பார்க்க. (ஆ) "வாளிடைப் படுத்த வயங்கீ ரோதி" கலி. ௩௬: உ௩. (இ) "எஃகிடை தொட்ட பூங்குழலை" காஞ்சீப். மாசாத்தன் றளி. அ.

௩. (அ) "ஈகையங் கழற்கால்". (ஆ) "ஈகைக் கண்ணி யிலங்கத் தைஇ" புறம். ௧௧: ௫, ௩௫௩: ௩.

(பிரதிபேதம்) * நெறிகொள.

எ - து: கத்திரிகை இடையிலே தீண்டிய, மேகத்தின் கவினைப்பெற்ற, (க)ஐந்துபகுதியையுடைய மயிர்போலப் புலர்ந்த மணல் மேகம் மழைபெய்யாமற் போகையினாலே விளங்கினவென முற்றுகஅறுத்து மேல்வருகின்ற நீளம் பாலென்றதனை முற்கூறிய ஐம்பாலைச்சுட்டிய சுட்டுப்பெயராகக் கொள்க.

நொய்தாகப் பிடித்துவிட்டாற்போன்ற அறுதிவிளங்கின நீண்ட ஐம்பாலிற் பல ஒளிகளையுடைய அணிகளுக்கிடையே இட்டுவைத்தபொன்னாற்செய்த அழகியகண்ணிபோலே அந்த மணலிலே பிணிநெகிழ்ந்த பல பூக்களும் வேங்கையினது விரிந்தபூக்களும் ஒழுங்குகொள்ள மணல் ஐம்பால் போல விளங்கின. அவ்வைம்பாலிற் கிடந்த அணியும்(உ)பொன்மாலையும்போலே அந்தமணலிலே பல நிறத்தையுடைய பூக்களும் வேங்கைப்பூக்களும் ஒழுங்கு கொண்டனவென உணர்க.

சு (௩) துணிநீராற் *றாமதி நாளா ணணிபெற
(ச) வின்றவ டிதலைபோ லீர்பெய்யுந் தளிரொடு
(௫) மான்றவ ரடக்கம்போ †லலர்ச்செல்லாச் சினையொடும்
வல்லவர் (சு) யாழ்போல வண்டார்க்கும் புதலொடு

---

க. ஐந்து பகுதி:—குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை.

உ. "எரிமருள் வேங்கை யிருந்த தோகை, யிழையணி மடந்தையிற் றோன்று நாட" ஐங். உகச.

௩. "துணிநீராற் றூய்மதி......விளவேனி லெம்போல" என்புழி ஆலும் ஒடுவும் பலவடுக்கி நல்லை யென்பதோடு முடிந்தன வென்பர், தெய்; தோல். வேற்றுமைமயங்கி. சூ. கஅ. 'உருபுதொடர்ந்து'.

ச. கலி. உ௬: எ - அ - ஆம் அடிகளையும் அவற்றின் குறிப்பையும்பார்க்க.

௫. (அ) "கற்றறிந்தார் கண்ட தடக்கம்" பழ. உச௩. (ஆ) "கற்றறிந் தவரென வடங்கி" கம்ப. சித்திரகூட. ௩௫. (இ) "அறிவோர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்" வெற்றி.

சு. (அ) "யாழிசை யினவண் டார்ப்ப" முல்லை. அ. (ஆ) "வண்டியாழாக, வின்பல் விமிழிசை கேட்டு" (இ) "வரையிழி யருவிப் பாட்டொடு பிரச, முழவுசேர் நரம்பி னிம்மென விமிரும், பழவிற னனந்தலைப் பயமலை நாட" அகம். அஉ : சு - எ; ௩கஅ: ௫ - எ. (ஈ) "யாழிசை கொண்ட வினவண் டிமிர்ந்தார்ப்ப" கலி. க௩க: க. (உ) 'வண்டியாழாக'.திணைமாலை.ககக. (ஊ) "யாழின்வண் டார்க்கும் புனலூர" பழமொழி. உஉக. (எ) "அரவ வண்டின மார்த்துடன் யாழ்செயும்" (ஏ) "இளவண் டியாழ்செய" (ஐ) "பல்வண்டியாழ்செய" சிலப். (கஉ) 'மரவம்' (உசு) ககஉ, (உஎ) ககச. (ஒ) "மழலை வண்டின நல்லியாழ் செய்ய"(ஓ) "பொங்கர் வண்டினம் நல்லியாழ் செய்ய" மணி. ச: ச; கசு: ௫அ. (ஔ) "அரவ வண்டொடு

(பிரதிபேதம்) * தூய்மதி நாளா லணி, † அலர் செல்லா.

(௧)நல்லவர் நுடக்கம்போ *னயம்வந்த கொம்பொடு
(௨)முணர்ந்தவ ரீகைபோ லிணைரூழ்த்த மரத்தொடும்
(௩)புணர்ந்தவர் †முயக்கம்போற் புரிவுற்ற கொடியொடு
நயந்தார்க்கோ நல்லைம னிளவேனி லெம்போல

எ - து: தெளிந்த நீராலும் தூய மதியையுடைய நாளாலும் புதல்வனை
ஈன்றவளுடைய துத்திபோலே நெய்ப்பினையுண்டாக்கும் மாந்தளிராலும்

---

தேனினம் யாழ்செயும்" (ஃ) "பாடல் வண் டியாழ்செயும்"
சீவக. ௧௧௩௬, ௧௨௦௭. (அஅ) "வண்டினங் காலையாழ் செய்யும்"
பு-வே. பெருந். ௧௩. (ஆஆ) "அரவ வண்டினம் யாழென வார்ப்ப"
பெருங். (௫) ௨: ௧அ.

௧. "சேட்டிகைத் தென்கா றள்ளத் தெண்மதுச் சிதறத் தும்பி, நீட்டிசை முரலச்'சாயா நின்றுபூங் கொம்ப ராட, ஞட்டியப் புலவ ஞட்ட நகை முகம் வெயர்வை சிந்தப்,பாட்டிசைத் தாடாநின்ற பாவைமார்போன்ற வன்றே." திருவிளை. தருமிக்கு. ௧௬.

௨. (அ) "செல்வத்துப் பயனே யீதல், துய்ப்பே மெனினே தப்புந பலவே" புறம். ௧அ௯: எ-அ. (ஆ) "புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி, யின்னினியே செய்க வறவினை-யின்னினியே, நின்றா னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச், சென்றா னெனப்படுத லால்" நாலடி. ௨௯. (இ) "பலதிரண்ட செல்வத்தைப் பார்க்கிற் கனவா, மல ருதிர்ந்தாற் போலிளமை வாடுஞ் - சிலநிகழ்ந்த, மின்னெக்கும் வாழ்நா ளிவையிற்றை மெய்யென்றிட், டுன்னிக் களிப்பா ருளர்" பாரதம். (ஈ) "இளமையும் வனப்பு நில்லா வின்பமு நின்ற வல்ல, வளமையும் வலிது நில்லா வாழ்வுநா ணின்ற வல்ல, களமக ணேச நில்லா கைப் பொருள் கள்வர் கொள்வா, ரளவிலா வறத்தின் மிக்க தியாதுமற் றில்லை யன்றே" நரிவிருத்தம். ௧௪.(உ) "இளமையு நிலையாவா லின்பமு நின்றவல்ல,வளமையு மஃதேயால் வைகலுந் துன்பவெள்ள,முளவென நினையாதே செல்கதிக் கென்றுமொன்று, விளைநில முழுவார்ப்போல் வித்துநீர் செய்துகொண்மின்"வளையாபதி. (ஊ) "இன்றளா ரின்றேயு மாய்வ ரவருடைமை, யன்றே பிறருடைமை யாயிருக்கு - நின்ற, கருமத்த தல்லாத கூற்றின்கீழ் வாழ்வார், தருமந் தலைநிற்ற னன்று" அறநெறி. ௧௧௧.

௩. (அ) "அல்லிடை யன்றியே யலர்ந்த மாலதி,வல்லிகடருவெனு மகிழ்நர் தங்களைப், புல்லுவ பகலினும் பொருந்து மோவெனு, முல்லைகண் மலர்ந்தன முறுவல் செய்வபோல்" கந்த. இந்திரனருச்சனை. ௨௩. (ஆ) "இடியினுங்கொடியினு மயங்கி" சீவக. ௧௧௬.(இ) "இழையினுங் கொடியினு மிடியினும் பிணங்கி" பெருங்.(௧) ௩௨...

(பிரதிபேதம்) * நயவந்த, † மயக்கம்.

(௧)அறிவானமைந்தவர் தங்காரியத்தைமுடித்தற்கு அக்காலம்வருந்துணையும் அடங்கியிருக்குமாறுபோலக் காலம்வருந்துணையும் மலர்தலிற் செல்லாத அரும்புகளையுடைய கொம்புகளாலும் வாசிக்க வல்லவரது யாழோசைபோல வண்டுக(௨)ளாரவாரிக்குஞ் சிறுதூறுகளாலும் நல்லமகளிருடைய (௩) கூத்து, கண்டார்க்கு விருப்பஞ்செய்யுமாறுபோல விருப்பம்வந்த கொம்பாலும் நிலையாமையை உணர்ந்தவருடைய கொடைபோலக் கொத்துகள் அலர்ந்து எல்லார்க்கும் பயன்படும் மரத்தாலும் அன்பாற் கூடினவருடைய புல்லுதலைப் போலப் பின்னுதலுற்ற கொடியாலும்,பொழில்கள் அழகைப்பெறவென்க.

கொடியொடும் அணிபெறவெனக் கூட்டுக.

(௪) ஈர், ஈர்க்குமாம்.

இளவேனில் எம்போல நயந்தார்க்கு நல்லையோவென்மாறி, இளவேனிலே யாங்கள் எம்மை நயந்தார்க்கு நல்லேமாயினாற்போல, நீயும் வெறிகொள அணிபெற எப்பொழுதும் வருவையென்று விரும்பியிருந்தார்க்கு மிகவும் நல்லையோ. நீதான் வந்து அழகிதாகச் செய்தாயென இளவேனிலை நோக்கித் தோழி கூறினாள். அதனை நோக்கிக் கூறியபின்னர்த் தலைவியை நோக்கி, (கூறுகின்றாள்.)

௧௪ பசந்தவர் பைதனோய் பகையெனத் தணித்துநம்
மின்னுயிர் செய்யு மருந்தாகிப் பின்னிய
காதல ரெயிறேய்க்குந்(௫)தண்ணருவி நறுமுல்லைப்
போதாரக் கொள்ளுங் கமழ்குரற் கென்னுந்
(௬)தூது வந்தன்றே தோழி
துயரறு கிளவியோ டயர்ந்தீகம் விருந்தே

---

௧. (அ) "காலங் கருதி யிருப்பர் கலங்காது, ஞாலங் கருதுபவர்" (ஆ) "கொக்கொக்க கூம்பும் பருவத்து" குறள். ௪௮௫, ௪௯௦.

௨. வண்டார்த்தல்: கலி. ௩௩: ௫ - ஆம் அடியின் குறிப்புப் பார்க்க.

௩. "வேறிலை கூத்துப்போல மெய்யுளங் கவர்வதென்றார்" திருவால. ௧: ௭.

௪. (அ) ஈர்க்கு என்பது மாவிலைமேல்வந்ததற்கு "ஈன்றவள்..........தளிரொடும்" என்பது மேற்கோள்; தொல். மரபியல். சூ. ௮௭. பே. நச். (ஆ) "ஈர்க்கென்பது: தெங்கு, பனை, மா, வேம்பு, பறப்பனவற்றிற் குரித்து" என்பர், மயிலைநாதர்; நன். பொது. சூ. ௩௭.

௫. "தண்ணருவி நறுமுல்லை" கலி. ௩௫: ௧௦.

௬. (அ) 'குடிமையாண்மை' என்னுஞ்சூத்திரத்து 'அன்னபிறவும்' என்பதனான் 'தூதுவந்தது' என்பதனைக்கொள்கவென்றும் தூதென்பது தன்பொருட்குரிய பாலான்முடியாமையின் ஆகுபெயரன்றென்றும் குறிப்புமொழியென்றும் கூறுவர், தெய்; தொல். கிளவி. சூ. ௫௫. (ஆ) " காதலர் தூதொடு வந்த கனவினுக், கியாதுசெய் வேன்கொல் விருந்து" (இ) 'மாலையயர்கம் விருந்து' குறள். ௧௨௧௧: ௧௨௬௮.

எ-து: தோழி; இவ்விளவேனில் குளிர்ந்த அருவியின் அருகேநின்ற நறிய முல்லையினது மகளிரெயிற்றையொக்கும்பூக்களையும்முடையகமழ்கின்றகொத்தாகிய மயிருக்கு நிறையக் கொய்துகொண்மினென்று கூறாநிற்கும்: அதுவேயுமன்றி உலகத்திற் பசந்தவருடைய வருத்தத்தையுடைய காமநோயையுந் தனக்குப் பகையென்று கருதிப் போக்கி விசேடித்து நம்முடைய இனிய உயிரை உண்டாக்கும் மருந்துமாய் நாம் துயரறுதற்குக்காரணமான வார்த்தையோடே நாம் முயங்கிய காதலருடைய தூதாய் வந்தது; ஆதலால் இனி அக்காலத்திற்கு விருந்தானவற்றை நாஞ்செய்வேமென ஆற்றுவித்தாள். ௨

பின்னிய காதலர் தூதென மாறுக. பசந்தவர்நோயைத்தணித்து என்பதனாலும் நம் மின்னுயிரைச்செய்யு மருந்தாகி என்பதனாலும் தலைவி காலங்கண்டுவருந்தினமை பெற்றாம்; இளவேனிற்கண்வருவலெனக் கூறிப்பிரிந்தவர் தப்பாரென்பதுபற்றி அவர் வார்த்தையோடே தூதாய் வந்ததென்றாள்.

கொள்ளுமென்னும் உம்மீறு பன்மையுணர்த்தி முன்னிலையாய்நிற்றல் "இர்ஈர் மின்" (௧) என்பதனுட்கூறினாம்.

இதனால், தலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இது தனிச்சொல்லும் அடக்கியலுமின்றிச் சுரிதகம் பெற்று அடிமிகிர்ந்தோடிய கொச்சகக்கலிப்பா. (௩௧)

(௩௩.) வீறுசான் ஞாலத்து வியலணி காணிய
யாறுகண் விழித்தபோற் கயநந்திக் கவின்பெற
மணிபுரை வயங்கலுட் டுப்பெறிந் தவைபோலப்
பிணிவிடு முருக்கித ழணிகயத் துதிர்ந்துகத்
௫ துணிகய நிழனோக்கித் துதைபுடன் வண்டார்ப்ப
மணிபோல வரும்பூழ்த்து மரமெல்லா மலர்வேயக்
காதலர்ப் புணர்ந்தவர் கவவுக்கை நெகிழாது
தாதவிழ் வேனிலோ வந்தன்று வாரார்நம்
போதெழி லுண்கண் புலம்ப நீத்தவர்;

௧௦ எரியுரு வுறழ விலவ மலரப்
பொரியுரு வுறழப் புன்குபூ வுதிரப்
புதுமலர்க் கோங்கம் பொன்னெனத் தாதூழ்ப்பத்
தமியார்ப் புறத்தெறிந் தெள்ளி முனியவந்
தார்ப்பது போலும் பொழுதென் னணிநலம்
போர்ப்பது போலும் பசப்பு;

௧. தொல். வினை. சூ. உஎ.

௧௬ நொந்து, நகுவனபோ னந்தின கொம்பு; நைந்துள்ளி
யுகுவது போலுமென் னெஞ்சு; எள்ளித்
தொகுபுட னாடுவ போலு மயில்; கையி
னுகுவன போலும் வளை; என்கண்போ
லிகுபறல் வாரும் பருவத்தும் வாரார்
மிகுவது போலுமிந் நோய்;

௨௨ நரம்பின் றீங்குர னிறக்குங் குழல்போ
லிரங்கிசை மிஞிறொடு தும்பிதா தூதத்
தூதவர் விடுதரார் துறப்பார்கொ லோதக
விருங்குயி லாலு மரோ;

என்வாங்கு;

௨எ புரிந்துநீ எள்ளுங் குயிலையு மவரையும் புலவாதி
நீலித மூண்கணும் நெறிகூந்தல் பிணிவிட
நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி
மாலைதாழ் வியன்மார்பர் துணைதந்தார்
காலுறழ் கடுந்திண்டேர் கடவினர் விரைந்தே.

இது பருவவரவின்கண் வன்புறையெதிரழிந்து ஆற்றளாயினளைத் தோழி தலைவனது வரவுணர்ந்து கூறி ஆற்றுவித்தது.

இதன் பொருள்.

வீறுசான் ஞாலத்து வியலணி காணிய
யாறுகண் விழித்தபோற் கயநந்திக் கவின்பெற
(௧)மணிபுரை வயங்கலுட் டுப்பெறிந் தவைபோலப்
பிணிவிடு முருக்கித ழணிகயத் துதிர்ந்துகத்

௧. (அ) "பளிங்குசொரி வன்ன பாய்சுனை" குறிஞ்சி. ௫௭. (ஆ) "வீரநீ பாராய் மெல்லென் பளிங்கினால் விளங்குகின்ற,மாரனு மருளச்செய்த மாளிகை மற்றோர் சோதி, சேர்தலுந் தெரிவ வன்றேற் றெரிதில தெரிந்த காட்சி, நீரினு லியன்ற வென்ன நிழலெழு கின்ற நீர்மை" கம்ப. இலங்கைகாண். ௪௦. (இ) "மீன வாவிபோல் வியன்படி கத்தினால் விளங்குந், தான மீமிசை" கந்த. திருநகர. ௩௩. (ஈ) "சூழ்ந்த பேரொளி துளும்பிய நிலனைநீ ரென்னுத், தாழ்ந்த வந்துகி லிடை வயிற் றழீஇயினன் பளிங்கு, போழ்ந்தி யற்றிய நிலனெனப் பூம்புன லிடைப்போய், வீழ்ந்த னன்பெரு வேத்தவை முகிழ்நகை விளைப்ப" பாகவதம். (௧௦) சிசுபாலனைக்கொன்ற. ௧௧௮. (உ) "மணியிற் றிகழ்

துணிகய (௧) நிழனோக்கித் துதைபுடன்(௨)வண்டார்ப்ப
மணிபோல வரும்பூழ்த்து (௩)மரமெல்லா மலர்வேயக்
(௪)காதலர்ப் புணர்ந்தவர் (௫)கவவுக்கை நெகிழாது
தாதவிழ் வேனிலோ வந்தன்று வாரார்நம்
போதெழி லுண்கண் புலம்ப நீத்தவர்

எ - து: தான் விளைவித்தலின்(௬)வேற்றுநாட்டிற்கு இல்லாத வீறமைந்த உலகிடத்து அகற்சியையுடைய அழகைத் தான் காணவேண்டி யாறு கண்களை விழித்துப்பார்த்தனபோலப் பக்கத்தினின்ற குளங்கள் நீர்நிறைந்து பூக்களால் அழகுபெற, * பளிக்குமணியையொக்கும் கண்ணாடிக்குள்ளே பவழம் அழுந்தப்பட்டவை தோன்றினாற்போலஅரும்பவிழ்கின்ற(எ) முருக்கினுடைய இதழ்கள் அழகையுடைய குளங்களிலே தாம்பினின்றுங் கழன்றுவீழ, தெளிந்த குளங்களின் நிழலிலே தம்மையுந் தாம் ஊதும் பூவையுங் கண்டு அவ்விடத்தே நெருங்கி வண்டுகள் சேர ஆரவாரிக்கும்படியாக, கரையினின்ற மரங்களெல்லாம் அரும்புகள் அலர்ந்து பலமணிகளைச் சூடினாற்போலப் பூக்களைச் சூட, எம்மைப்போலாது காதலையுடைய கணவரைக்கூடினவருடைய அகத்திடுதலையுடைய கையை நெகிழாதே தாதையவிழ்க்கும் இளவேனிலோ வந்தது; பூவினது அழகையுடைய மையுண்கண் வருந்த நம்மைக்கைவிட்டவர் வாராராயினர் ; எ - று.

ஓகாரம் பிரிநிலை.

இது தரவு.

---

தரு நூல்போல்" குறள். கஉஎ௩. (ஊ) "பளிங்குபுறத் தெறிந்த பவளப் பாவையி, னிளங்கொடி தோன்றுமால்" மணி. ௪: கஉ௪ - ௫.

௧. தும்பி செவியுணர் வொழிந்த நாலுணர் வுடையதென்பதும், வண்டும் தேனீயும் குளவியு முதலாயின அதன் கிளையென்பதும் இங்கே அறியற்பாலன. தொல். மரபு. சூ. ௩௧. பே.

௨. வண்டு ஒலித்தலை ஆர்த்தலென்பதும் மரபு: கலி. ௩௦: ௩, ௩௨: ௧, ௩௪: ௬, ௩௬: ௩, ௬௨: ௪௦, ௧௧௮: ௧௧, ௧௩௧: ௬.

௩. (அ) "கோழிணர் ரெதிரிய மரத்த கவினிக், காடணி கொண்ட காண் டகு பொழுதின்" (ஆ) "மரனேமுற்ற காமர்வேனில்" அகம். ௪௧: ௮ - ௯, ௩௧எ: ௧௪.

௪. "காதலற் பிரியாமற் கவவுக்கை ஞெகிழாமல்" சிலப். ௧: ௬௧.

௫. "கவவுக்கை ஞெகிழ்ந்தனனாய்" சிலப். (எ) ௫௨: ௫.

௬. (அ) "பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங் கேட்டா, லாற்ற விளைவது நாடு" (ஆ) "நாடென்ப நாடா வளத்தன நாடல்ல, நாட வளந்தரு நாடு" குறள். எ௩௨, எ௩௯.

எ. "பொங்கழன் முருக்கி னொண்குரன் மாந்திச், சிதர் சிதர்ந் துகுத்த செவ்வி வேனில்" அகம். உஎஎ.

(பிரதிபேதம்) * பளிங்குமணியை.

கO (க)எரியுரு வுறழ விலவ மலரப்
(உ)பொரியுரு வுறழப் புன்குபூ வுதிரப்
புதுமலர்க் (ங)கோங்கம் பொன்னெனத் தாதூழ்ப்பத்
தமியார்ப் புறத்தெறிந் தெள்ளி முனியவந்
தார்ப்பது போலும் *பொழுதென் னணிநலம்
போர்ப்பது போலும் பசப்பு

எ - து: இவ்விளவேனிற்பொழுது நெருப்பினுருவையொப்ப இலவம் பூப்ப, பொரியின் உருவை யொப்பப் புன்குகள் பூஉதிர, புதிய மலர்களை யுடைய கோங்கம் பொன்னென்னும்படி தாதை அலர, நாம் வெறுக்கும்படி வந்து தனித்திருப்பாரை அகத்திடாது புறத்தே தள்ளி இகழ்ந்து இவ்வூர் அலர் தூற்றுங் கொடுமையையொக்கும்; அது கண்டு பசப்பு எனது அழகை யுடைய நலத்தை மறைப்பதுபோல இராநின்றது ; †எ - று.

---

க. "எரியுருவுறழ விலவமலர" என்பது (அ) உருவுவமத்தின்கண் உரியவாய்பாடன்றி, பொதுச்சூத்திரத்தான் வருமெனப்பட்ட வாய் பாட்டுள் உறழவென்பது அருகிவந்ததற்கும் (தோல். உவம சூ. கக. பே) (ஆ) உருட்டுவண்ணத்திற்கும் (தோல். செய். சூ. உஙஉ. பே.) மேற்கோள். (இ) "எரிப்பூ விலவத் தூழ்கழி பன்மலர்" ஐங்குறு. ஙகஅ. (ஈ) "இலவ மேறிய கலவ மஞ்ஞை,யெரிபுகு மகளி ரேய்க்கும்" ஐங்குறு. ௫0ங. (உ) "இலவத் தழலகைந் தன்ன வலங்குசினை யொண்பூ" அகம். உசரு. (ஊ) "எரிநிறத் திலவம்" சிலப். (௫) உகச. (எ)"எரிமல ரிலவமும்" மணி. ங. ககக. (ஏ) "ஒள்ளெரி யெழுந்த ஆழ்படு கொழுமலர் முள்ளரை யிலவத்துள்" (ஐ) "எரிமல ரிலவத்து" பெருங். (க) ௫ங: கஎஎ; ௫ச: கசங.

உ. (அ) "பொரிப்பூம் புன்கின்" நற். க. (ஆ) ஐங்குறு. ஙசஎ. (இ) "புன் கின் பூத்தாழ் வெண்மணல்......செந்நெல் வான்பொரி சிதறியன்ன" (ஈ) "பொரிப்பூம் புன்கொடு" குறுந். ௫ங, ஙசக. (உ) "பொரியெனப் புன்கவி ழகன்றுறை" அகம். ககக; ௫-கு. (ஊ) "புன்கு பொரி மலரும் பூந்தண் பொழில்" திணைமொழி. கச. (எ) "பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கு" சிலப். கஉ: 'செம்பொன்' (ஏ) "புன்கம் பொரி யணிந்தவே" சீவக. ககசக.

ங. "நிலவுமரக் குருவாய்ந்து நிற்பனபோற் பூவையெலாங், குலவியகோங் குமிழ்தாதிற் குளித்தொளிருங் கவின்கண்டான்" காஞ்சி. நகரேற்று. உசO.

(பிரதிபேதம்) * பொழுதெண்ணி, † நோக்குமென்க.

௧௬ (௧)நொந்து, நகுவனபோ னந்தின கொம்பு; *நைந்துள்ளி
(௨)யுகுவது போலுமென் னெஞ்சு; எள்ளித்
தொகுபுட னாடுவ போலு மயில்; கையி
லுகுவன போலும் வளை; (௩)என்கண்போ
லிகுபறல் வாரும் பருவத்தும் வாரார்
மிகுவது போலுமிந் நோய்

எ - து: பிரிந்த மகளிரை நகுதற்கு நங்காலம் வருகின்ற தில்லையே யென்றுநொந்திருந்து அதுவந்தபின்னர் நம்வருத்தங்கண்டுசிரிப்பனபோலக் கொம்புகள் பூ மிக்கன; அதனைக் கண்டு என்னெஞ்சம் வருந்தித் தலைவரை

---

௧. "நொந்து, நகுவனபோ னந்தின கொம்பு; நைந்துள்ளி, யுகுவது போலுமென் னெஞ்சு; எள்ளித், தொகுபுட னாடுவ போலு மயில்; கையி, லுகுவன போலும் வளை. இவை முச்சீரடியான் வந்தனவு நாற்சீரடியான் வந்தனவுமாய் நின்றவாறுணர்தற்கு 'நகுவன', 'உகுவது', 'தொகுபுடன்', 'உகுவன', எனத் தொடைச்சுவடு படுத்துக் கூறவே அவற்றின் முன்னின்ற சொற்கள் வழியசை புணர்ந்த சொற்சீரடியாயவாறு காண்க. இவை யிடைநிலைப்பாட்டன்றிக் கொச்சக மாகலின் வரையறையின்றி, 'தொகுபுட னாடுவ போலு மயில்' என நாற்சீரடியானும் வந்தது. இவை மேலெண்ணவும் படும். இவை கலிக்கண் வருங்கால் ஒத்தாழிசையினும் உறழ்கலியினும் முடுகியல் வாராமையும், அவற்றுட்சொற்சீரடி வருங்காற் றனிச்சொல்லாயல்லது வாராமையுங் கொள்க." தொல். செய். சூ. ௧௨௩. நச்.

௨. " 'உகுவதுபோலு மென்னெஞ்சு; எள்ளித்,தொகுபுட னாடுவது போலு மயில்' என்பது வழியசை புணர்ந்த சொற்சீரடி; என்னை? எள்ளியென நின்ற சீரின் வழித் தொகுபெனவந்த அசை உகுவதுபோலுமென்னும் தொடையொடு பொருந்தி, 'உகுவதுபோலு மென்னெஞ் செள்ளித், தொகுபுடன்' எனப் புணர்ந்துநின்றாற் போல்வதோர் சுவைமை செய்து நின்றமையின். கொச்சகம் இடை நிலைப்பாட்டெனப் படா மையின்'(தொகுபுடன்) ஆடுவது போலு மயில்',என நா[லடி](ற்சீரடி) யாலும் வருவதாயிற்று. வரையறையின்மையின். இங்ஙனம் வந்த மையின் சொற்சீரடி மேல் எண்ணவும் படும். இவை கலிக்கண் வருங்கால் ஒத்தாழிசைக்கண் முடுகியலடிவாராதென்பதூஉம் சொற் சீரடி வருஞான்றுத் தனிச்சொல்லாகியன்றி வாராதென்பதூஉம் உறழ்கலிக்கண்ணும் முடுகியலடி உரித்தன் றென்பதூஉம் கொள்க" தொல். செய். சூ. ௧௨௩. பே.

௩. "தனியறல் வாரும் பொழுதென வெய்ய, பனியறல் வாருமென் கண்" கலி. ௩௬: ௧௭ - ௮.

பிரதிபேதம்;* இனைந்துள்ளி:

நினைந்து அழிவதுபோலே இராநிற்கும்; (க) மயில்கள் நம்மை இகழ்ந்து காலமன்றியும் சேரத் திரண்டு ஆடுவனபோலே இராநிற்கும்; நம் கையில் வளைகள் நாம் காப்பவுங் கழல்வனபோலே இராநிற்கும்; என் கண்போலே அறுதியையுடைய நீர் இற்று ஒழுகும் இளவேனிற்காலத்தும் தலைவர் வாரார்; ஆதலால் இந்நோய் இனி இந்நிலையினும் மிகுவதுபோல இராநிற்கும்; எ - று.

௨௨ (௨)நரம்பின் றீங்குர னிறுக்குங் குழல்போ
(௩)லிரங்கிசை (௪)மிஞிறொடு (௫)தும்பிதா தூதத்
(௬)தூதவர் *விடுதரார் துறப்பார்கொ (௭)னோதக
விருங்குயி லாலு மரோ

எ-து: †நரம்பினது இனிய இசையைத் தானத்திலே நிறுத்தும் வங்கியம்போல, ஒலிக்கும் ஓசையையுடைய (அ)மிஞிறோடே தும்பி தாதை ஊதாநிற்க, நமக்கு ‡நோவுதரும்படியாகக் கரிய குயில்கள் கூவாநிற்கும்; இவ்வளவிலும் தலைவர் ஒருதூதாயினும் வரவிடாராய் நம்மைத் துறப்பாரோ துறவாரோ கூறாய்; ||எ - று.

---

க. "களிமயில் குனித் திடக்கால மன்றியும்" நைடதம். கான்புகு. க.

௨. "குழல்வழி நின்ற தியாழே" என்பது இங்கு அறியத்தக்கது.

௩. நச்சினார்க்கினியர் சுரும்பு, வண்டு, தேன், மிஞிறு இந்நான்கையும் தும்பியதுகிளையென்றுகூறி "இரங்கிசை மிஞிறொடு தும்பிதா தூத" என்பதை அதற்கு மேற்கோள் காட்டுவர்; சீவக. அகூ௨. அகூ௩.

௪. "மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்" புறம். ௩௦அ: ௨.

௫. (அ) "தும்பி......தீங்குழலாம்பலி னினிய விமிரும்" ஐங். ௨க௫. (ஆ) "குழலிசைத் தும்பி" அகம். ௨௪௫ (இ) "இருந்தும்பி யின்குழலூதும் பொழுது" கார். க௫. (ஈ) "குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட"(உ) "கொம்பர்த்தும்பி குழலிசை காட்ட" மணி. (௪) ௩. (கக) ருஎ. (ஊ) "இருங்கட் டும்பி குழலாக" சீவக. ௨௬கக. (எ) "சோலைத் தும்பி மென்குழ லாக" கம்ப. பூக்கொய். ௩௪. (ஏ) "நறுந்தா தாதுங் குறுஞ்சிறைத்தும்பி" குறுந். ௨௩க. (ஐ) "நறுந்தா தூதுந் தும்பி" அகம். க௦அ.

௬. "தூதவர்.....அரோ" என்பது அரோ அசையாய் வருதற்கு மேற்கோள்; நன். இடை. சூ. ௨௨ மயிலை.

௭. 'அரோ' என்பது அசை நிலையாய் வருதற்கு (அ) "நோதக விருங்குயி லாலுமரோ" என்பது தொல். இடை. சூ. ௩க. சேனா. நச். சூ. ௩௦. தெய். நன். இடை. சூ. ௨௨, வி. இரா; இ-வி. சூ. ௨எஎ. மேற்கோள். (ஆ) புறனடை விதியான் நோவுதகவென்பது நோதகவாயிற்றென்பர், அடியார்க்கு நல்லார்; சிலப். (க௬) கஎ.

அ. மிஞிறு, தேனீயென்பர், புறநானூற் றுரையாசிரியர்; புறம். ௨௨: ௬.

(பிரதிபேதம்) * விடாராய், † நரம்பினினிய, ‡ நோவுதருபடியாக, || என்றாள்.

(க)நம்மை இம்மைப்பிறப்பினுள் துறப்பார்கொல்லென வாளாதே ஐயஞ் செய்தலின், இஃது ஐயஞ்செய்தல்.

அரோ, அசை.

இவை தரவின் விகற்பமாகிய தாழிசை.

எனவாங்கு, *ஆங்கசை.

இது தனிச்சொல்.

௨எ புரிந்துநீ எள்ளுங் குயிலையு மவரையும் புலவாதி
நீலித †முண்கணாய் ‡நெறிகூந்தல் பிணிவிட
(௨) நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி
(௩) மாலைதாழ் வியன் மார்பர் துணைதந்தார்
(௪)காலுறழ் கடுந்திண்டேர் கடவினர் விரைந்தே

எ - து: அதுகேட்ட தோழி, என்று, மனம் வேறுபட்டு நீலப்பூப்போலும் மையுண்கண்ணினையுடையாய்! நீ நம்மை இகழுங் குயிலையும் தலைவரையும் புலவாதேகொள்; தாம்வரும் நாளெல்லையை நம்நெஞ்சிலே நிறுத்திச்சொல்லிய கூற்றுக்கள் பொய்யல்லவாக மாலை தங்கின அகற்சியையுடைய மார்பினையுடையார் காற்றையொக்குங் கடிய திண்ணிய தேரை விரைந்து செலுத்தி நமது||நெறித்த (௫)கூந்தலைப் பின்னின பின்னல் விடும்படி÷நாம் விரைதலை நமக்குத் தந்தார்காண் ×என்றாள்; எ - று.

(௬) நீலம், கடைக்குறைந்தது.

இது சுரிதகம்.

---

க. "தூதவர்......அரோ" என்பதை ஐயஞ் செய்தல் என்னும் மெய்ப்பாட்டிற்கு மேற்கோள்காட்டி, (தொல். மெய்ப். சூ. ௨௨;) இக்குறிப்பையும் எழுதினர், பேராசிரியர்; இ - வி. நூலாசிரியரும் (இ - வி. சூ. ௫அ௦.) இப்பகுதியை ஐயஞ்செய்தலுக்கு மேற்கோள் காட்டினர்.

௨. இவ்வடி கலி. ௩க-இல். ௨௩-ஆவது அடியாகவும் வந்துள்ளது.

௩. "எமுறு கடுந் திண்டேர் கடவி, நாமமர் காதலர் துணை தந்தார் விரைந்தே" என்பது, கலி. ௨எ: ௨௫ - ௨௬.

௪. "வளியி னிகன்மிகுந் தேரும்" கலி. ௫௦: க௫.

௫. (அ) "சிறுகுறுங் கூனுங் குறளுஞ் சென்று, பெறுகநின் செவ்வி பெருமகன் வந்தா, னறுமலர்க் கூந்த ளுளணி பெறுகென" சிலப். ௨எ: ௨க௪-௬ (ஆ) "தன்னவன் றணந்த காலைப், பூமனும் புனைத லின்றி" சீவக. க௫க௮.

௬. "நீலுண் டுகிலிகை கடுப்ப"

(பிரதிபேதம்) * அசை, † உண்கண்ணாய். ‡ செறிகூந்தல் || செறிந்தகூந்தலை, ÷ தாம், × எனஆற்றுவித்தாள்.

இதனால், தலைவிக்குப் புணர்வாகிய உவகை தோன்றிற்று.

இதனுள், முச்சீரடியும் நாற்சீரடியுமாய் நின்றவாறுணர்தற்கு 'நகுவன' 'புகுவது' 'தொகுபுடன்' 'உகுவன' 'இகுபறல்' எனத் தொடைச்சுவை கொடுத்துக்கூறவே, அவற்றிற்கு முன்னின்றன நொந்து என ஒழியசையாகியும் நைந்துள்ளி, எள்ளி, கையில், என்கண்போலென வழியசை புணர்ந்தும் வந்த சொற்சீரடிகளும் 'தொகுபுட னுடுவ போலு மயில்' என நாற்சீரடியுமாய் வந்தன.

இது தரவும் தரவின்விகற்பமாகிய தாழிசையும் ஏனையுறுப்புக்களும் பெற்று வந்த கொச்சகக் கலிப்பா. தரவின் விகற்பமாகிய தாழிசையையும் தரவின்பாற்படுத்து இதனை இடைநிலைப்பாட்டின்றிவந்த தரவிணைக்கொச்சகக் கலிப்பா என்பாரும் உளர்.

"இயற்சீர் வெள்ளடி யாசிரிய மருங்கி, னிலைக்குரி மரபி னிற்கவும் பெறுமே" என்னும் (க) சூத்திரத்துள் இங்ஙனம் வரும் வெள்ளைக் கொச்சகத்துள் ஆசிரியவடி சிறிதுவருமென்றலின், 'பொரியுரு வுறழப் புன்குபூ வுதிர' என ஆசிரியவடி வந்தது. (௩௩)

(௩௪.) மன்னுயி ரேமுற மலர்ஞாலம் புரவின்று
பன்னீராற் பாய்புனல் பரந்தூட்டி யிறந்தபிற்
சின்னீரா னறல்வார †வகல்யாறு கவின்பெற
முன்னொன்று தமக்காற்றி முயன்றவ ரிறுதிக்கட்
பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடை யாளர்போற்
பன்மலர் சினையுகச் சுரும்பிமிர்ந்து வண்டார்ப்ப
வின்னமரி ளவேனி லிறுத்தந்த பொழுதினான்;

அ விரிகாஞ்சித் தாதாடி யிருங்குயில் விளிப்பவும்
பிரிவஞ்சா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவுங்
கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி
யெரிபொத்தி யென்னெஞ்சஞ் சுடுமாயி னெவன்செய்கோ;

கஉ பொறைதளர் கொம்பின்மேற் சிதரின மிறைகொள
நிறைதளரா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவு
முறைதளர்ந்த மன்னவன்கீழ்க் குடிபோலக் கலங்குபு
பொறைதளர்பு பனிவாருங் கண்ணாயி னெவன்செய்கோ;

கசு தளையவிழ்பூஞ் சினைச்சுரும் பியாழ்போல விசைப்பவுங்
கொளைதளரா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவுங்
கிளையழிய வாழ்பவ னாக்கம்போற் புல்லென்று
வளையானா நெகிழ்போடுந் தோளாயி னெவன்செய்கோ;

---

க. தொல். செய். கூஉ.

எனவாங்கு;

௨க நின்னுண்ணுப் நீயுரைத் தலமர லெல்லாநா
மெண்ணிய நாள்வரை யிறவாது காதலர்
பண்ணிய மாவினர் புகுதந்தார்
கண்ணூறு பூசல் கைகளைந் தாங்கே.

இது பருவங்கண்டு வன்புறையெதிரழிந்து ஆற்றளாய் தலைவிக்குத் தோழி அவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது.

இதன் பொருள்.

(க)மன்னுயி ரேமுற மலர் ஞாலம் புரவின்று
பன்னீராற் (௨)*பாய்புனல் பரந்தூட்டி (௩)யிறந்தபிற்
(௪)சின்னீரா னறல்வார †வகல்யாறு கவின்பெற

---

க. (அ) "சுரந்த காவிரி மரங்கொன் மலிநீர், மன்பதை புரக்கு நன்னாட்டுப் பொருநன்" புறம். ௬அ: ௯-க௦;(ஆ) "சரயு வென்பது தாய்முலை யன்ன திவ்,வுரவுநீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம்" கம்ப. பால. ஆற்று. கஉ.

௨. (அ) பாய்தலென்பது பரத்தலாகிய குறிப்புணர்த்து மென்பதற்குப் 'பாய்புனல்' என்பது மேற்கோள்;" தொல்.உரி. சூ.௬௫. சே;தெய்.(ஆ) பெயரெச்சவீற்றும்மை இடைச்சொல்லென்று கொள்ளப்படுமென்றும் பாயும் புனலென்பது பாய்புனலெனத் தொக்குழி வேற்றுமைப் பொருட்கண் உருபு பெயர்நிற்பத் தொக்கவாறு போல வினை நிற்ப உருபுதொகுதலாற் பாயுமென்பது வினையு முருபுமாகிய இரு நிலைமைத்தென்று கொள்கவென்றும் கூறுவர், தெய் ; தொல். இடை. சூ. எ. 'எச்சஞ்'.

௩. (அ)"அற்றக் கடைத்து மகல்யா றகழ்ந்தக்கா,றெற்றெனத் தெண்ணீர் படும்" (ஆ) "உறுபுன றந்துல கூட்டி யறுமிடத்துங், கல்லூற் றுழியூறு மாறே போல்" நாலடி. க௫௦; கஅ௫. (இ) "பிள்ளை தைவரப் பெருகு பால் சொரிமுலைத் தாய்போன், மள்ளர் வேனிலின் மணற்றிடர் பிசைந்துகை வருட, வெள்ள நீரிரு மருங்குகால் வழிமிதந் தேறிப், பள்ள நீள்வயற் பருமடை யுடைப்பது பாலி" பெரிய. திருக்குறிப்பு. ௨௨. (ஈ) "ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா, றூற்றுப் பெருக்கா லுலகூட்டும்" நல்வழி. க. (உ) "ஆறு பெருக்கற் றருந் திடர்தான் பட்டாலு, மூறலமை யாதோ வுலகாற்ற" தனிப்பாடல்.

௪. (அ)"அயிர்வரித்தறல் வார்ந்துமெய்யடியவ ரகம்போற்,செயிர றத்தவத் தெளிந்துசின் னீர்புடை யொழுக" திருவானைக்காப். ஆரஞ்சாத்து கஅ. (ஆ) சின்னீர்: இந்நூற்பக்கம். எ௩: ௪ - ஆம் குறிப்புப்பார்க்க,

(பாடபேதம்) * கால்புனல், † அகன்யாறு,

(க)முன்னொன்று தமக்காற்றி முயன்றவ ரிறுதிக்கட்
(உ)பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடை யாளர்போற்
பன்மலர் சினையுகச் (௩)சுரும்பிமிர்ந்து வண்டார்ப்ப
(௪)வின்னமை ரிளவேனி லிறுத்தந்த *பொழுதினன்

எ - து: அகன்ற யாறுகள் அகன்ற உலகிடத்துப் பெருமையையுடைய உயிர்களெல்லாம் உயிர்வாழும்படி பலவாகிய நீரோடுகால்களாலே †தம்மிடத்தே வந்து பரக்கும் நீரைத் ‡தாம் எங்கும் பரந்து ஊட்டிப் பாதுகாத்தலையுண்டாக்கி அந்நீர் வற்றியபின்பு சிலவாகிய நீரோடு கால்களாலே அறலொழுக அவ்வாறுகள் அழகுபெறும்படியாகத் தமக்கு முன்னே ஓர் உதவியைச் செய்து அவ்வுதவியிலே முழுக்க முயன்றவருடையகேட்டிடத்தே பின்பு ஓர் உதவியை மீண்டு செய்யும் பெருமையையுடைய ||தொழிலை ஆளுவாரைப்போலே, சுரும்புகளும் ஒலிக்கப்பட்டு வண்டுகளும் ஆர்க்கும்படியாக, அந்நீரை உண்ட கொம்புகளினின்றும் பலமலர்கள் ஆற்றிலே உகும்படி இனிமை பொருந்தின இளவேனில் வந்துவிட்ட பொழுதின்கண்ணே ; எ - று.

பன்னீர் சின்னீர் ஆகுபெயர். இது "தகுதியும் வழக்கும்" என்னும் (௫) சூத்திரத்திற் கூறிய மரூஉ. "வல்லெழுத் தியற்கை யுறழத் தோன்றும்" (௬) என்றதனிற் றோன்றுமென்றதனால் அகரங் கெட லகரம் னகரமாய் வருமொழியில் நகரம் "லன வெனவரூஉம் புள்ளி முன்னர்த், தந வெனவரிற் றனவா கும்மே" (எ) என்பதனான் னகரமாய்முடிந்தது.

இது தரவு.

---

க. (அ)"வேனில் வெயிற்குலர்ந்த மெய்வறுமை கண்டிரங்கி,வானின்வளஞ்சுரந்த வண்புயற்குத் - தானுடைய, தாதுமே தக்க மதுவுந் தடஞ்சினையாற், போதுமீ தேந்தும் பொழில்" இ - வி. சூ. ௬௫௬. மேற்கோள்.
(ஆ) "நன்றி யொருவற்குச் செய்தக்கா லந்நன்றி, யென்று தருங்கொலெனவேண்டா-நின்று, தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத், தலையாலே தான்றருத லால்" மூதுரை. க.

உ. எடுத்தோதப்படாதஉரிச்சொற்களுள் பீடென்பது பெருமை குறித்து வருமென்பதற்கு, "பின்னொன்று பெயர்த் தாற்றும் பீடுடையாளர் போல்" என்பது மேற்கோள்; தொல். உரி. சூ. ௭௯. 'அன்ன' தெய்.

௩. சுரும் பிமிர்தல்: கலி. ௪௫: ௧௬, ௬௪: ௧௨.

௪. "இன்னிள வேனில்வந்திறுத்ததென்பவே" பிரமோத். பிரதோஷ. ௨௨.

௫. தொல். கிளவி. சூ. ௧௭.

௬. தொல். உயிர்மயங்கு. சூ. ௧௩.

எ. தொல். தொகை. சூ. எ.

(பிரதிபேதம்) * பொழுதின்கண், † தன்னிடத்தே, ‡ தான், || அத்தொழிலை.

அ விரி(௧)காஞ்சித் தாதாடி யிருங்குயில் (௨)விளிப்பவும்
பிரிவஞ்சா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவுங்
(௩)கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி
(௪)யெரிபொத்தி யென்னெஞ்சஞ் சுடுமாயி னெவன்செய்கோ

எ – து: அலர்ந்த காஞ்சிப்பூவிற் றாதை அளைந்து கரிய குயில்கள் கூவா நிற்கவும் இக்காலத்தே பிரிந்துறைதற்கு அஞ்சாதவருடைய கொடுமையை யான் மறையாநிற்பேன்; அதனாற் பெற்றதென்? மறைப்பினும் சான்று பொய்த்தவன் வந்து தன்கீழே இருக்கப்பட்ட மரம்போல யான் அழகு கெடும்படி என்னெஞ்சு காமத்தீக்கொளுந்தி என்னைச்சுடுமாயின் யான் அதற்கு என்செய்வேன்? எ – று.

---

௧. (அ) "புன் காஞ்சித் தாதுதன் புறம்புதைய..........குயிறழுவ" (ஆ) "குறுத்தாட் குயிற்சேவல் கொழுங்காஞ்சித் தாதாடி" சீவக. ௬௪௮, ௬௫௦. (இ) "குயிற்குழாங்குடை காஞ்சியின் கோமளத் தாது" காஞ்சி. திருக்கண். ௨௧.

௨. (அ) "விளித்தாலுங் குயிலாயின்" (கலி. ௨௮: ௮) என்பதனையும் (ஆ) "தண்காஞ்சித் தாதாடித் தன்னிறங்கரந்ததனைக், கண்டானு மடப் பெடை கிளியெனப்போய்க்கையகல, நுண்டுவி யிளஞ்சேவனுக்கோடு விளிபயிற்றித், தன்சிறகாற் பெடைதழுவத் தலைவந்த திளவேனில்" (சீவக. ௬௪௧) என்பதனையும் நோக்கி விளித்தலென்பதற்கு அழைத்த லென்று பொருள் கூறலுமாம். (இ) "கூடிப் புணர்ந்தீர் பிரியன்மி னீடிப், பிரிந்தீர் புணர்தம்மி னென்பன போல, வரும்பவிழ் பூஞ்சினை தோறு மிருங்குயி, லானு தகவும் பொழுதினான்" கலி. ௩௨: ௬௧ – ௬௪, என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௩. (அ) "அறிகரி பொய்த்த லான்றோர்க் கில்லை" குறுந். ௧௮௪. (ஆ) "சான்றவர் கையுண்டுங் கூறவர் மெய்" பழ. ௨௪௧. (இ) "கொடுங்கரி போ வாஞ்சாம்" சிறுபஞ்ச. ௧௦. (ஈ) "கைக்கரி யன்னவன் பகழி கண்டகர், மெய்க்குலம் வேரொடுந் துணித்து வீழ்த்தின, மைக்கரு மனத்தொரு வஞ்சன் மாண்பிலன், பொய்க்கரி கூறிய கொடுஞ்சொல் போன்றவே" கம்ப. கரன்வதை. ௧௨௪. (உ) "புலந்தெரி பொய்க்கரி புகலும் புன்கணார், குலங்களி னவிந்தனர் குரங்கி னாலென்றார்" கம்ப. கிங்கரர்வதை. ௫௮. (ஊ) "மொய்த்த மீன்குல முதலற முருங்கின மொழியிற், பொய்த்த சான்றவன் குலமெனப் பொருகணை யெரிப்ப" கம்ப. வருணனை வழிவேண்டு. ௨௫. (எ) "வஞ்சவினை செய்து நெடு மன்றில்வள னுண்டுகரி பொய்க்கு மறமார், நெஞ்சமுடை யோர்கள் குல மொத்தன ரரக்கர்" கம்ப. மூலபல. ௧௪௫.

௪. (அ) "எரிபொத்துதலென்னும்வழக்கை", "பொத்திற்றுத்தீ" கலி. ௧௪௫: ௫௮. (ஆ) "கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து" புறம்.

"புல்லு மரனு மோரறி வினவே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே." (௧) இதனுட் (௨)பிற அறிவும் உளவென்று கூறினர்; அதனாற் பாவத்திற்கு அஞ்சி மரம் கவின்வாடிற்றென்றார்.

௧௨ பொறைதளர் கொம்பின்மேற் (௩)சிதரின மிறைகொள
நிறை(௪) தளரா தவர்தீமை மறைப்பென்மன் *மறைப்பவு
(௫)முறைதளர்ந்த மன்னவன்கீழ்க் குடிபோலக் கலங்குபு
பொறைதளர்பு பனிவாருங் கண்ணாயி னெவன்செய்கோ

எ - து: பூவின்பாரத்தாற் றளர்ந்த கொம்பின்மேலே வண்டினுடைய திரள் தங்குதல்கொள்ளாநிற்கவும் நிறையென்னுங் குணம் தளராதவருடைய கொடுமையை யான் மறையாநிற்பேன்; அதனாற் பெற்றதென் ? மறைப்பினும் நாடாளும் முறைமை தளர்ந்த அரசன்கீழ் இருந்த குடிமக்களைப்போலக் கலங்காநின்று கண்கள் பொறுத்தலாற்றாமல் நீர் ஒழுகுமாயின் யான் அதற்கு என்செய்வேன் ; எ - று.

---

௨௪எ: ௨. (இ) "கனையெரி பொத்தி" சிலப். ௧௪: ௧௨௨ ; மணி. ௨: ௪௨. (ஈ) "புகையழல்பொத்தி, நெஞ்சஞ் சுடுதலின்"சிலப். ௨௩: ௪அ - ௯. (உ) "முளியெரிபொத்தி" (ஊ) "புகையெரி பொத்தி" (எ) "இகலெரி பொத்தி" மணி. ௧௬: ௨௬, ௧௧: ௨௭. ௨0: ௭அ. (ஏ) 'கனல்பொத்தி' கம்ப. இரணியன். அ௪. என்பவற்றாலுணர்க.

௧. தொல். மரபு. ௬. ௨அ. இதற்கு இவ்வுரைகாரர் அங்கெழுதியிருக்கு முறை ஆராய்தற் பாலது.

௨. "மரமுயி ரில்லை யென்பார், பித்தல ராயிற் பேய்க ளென்றலாற் பேச லாமோ" சீவக. ௧௬0௭.

௩. (அ) "சிதர்சிதர்ந் துகுத்த செவ்விவேனில்(ஆ)"மல்ருண் வேட்கையிற் சிதர்சிதர்ந் துகுப்ப" அகம். ௨௭௭: ௧அ; ௩௭௭: ௭. (இ) "சிதர்தொழிற் றும்பியொடு மதர்வண்டு மருட்ட" பெருங். (௧) ௩௩: ௨அ. என்ப வற்றால், சிதறுதல் அல்லது கிளறுதலாகிய சிதர்தற்றொழில் பற்றி வண்டு சிதரெனப்பட்டதென்று தெரிகிறது. (ஈ) "தொழித்து வண்டி மிருங்கோதை" சீவக. ௧௬அ௬. என்பத னுரையும் நோக்குக.

௪. தளர்தல் - குலைதல், கலி. ௩௪: ௧௭; தப்புதல், சீவக. ௧௧௬0.

௫. (அ) "மண்குளிர் கொள்ளக் காக்கு மரபொழிந் தரசர் தங்கள், விண் குளிர் கொள்ள வோங்கும் வெண்குடை வெதும்பு மாயிற்,' கண்குளிர் கொள்ளப் பூக்குங் கடிகயத் தடமுங் காவுந், தண்குளிர் கொள்ளு மேனுந் தான்மிக வெதும்பு மன்றே."(ஆ)"தீயினம் படர்ந்து வேந்தன் செறவதே புரியுமாயிற், போயினம் படர்ந்து வாழும் புகலிட மின்மை யாலே, வேயினம் படர்ந்த சாரல் வேங்கையை வெருவிப்புல்வாய், மாயினம் படர்ந்த தெல்லாம் வையகம் படருமன்றே." சூளா. மந்திர.

௧௬ தளையவிழ்பூஞ் சினைச்(௧)சுரும் பியாழ்போல விசைப்பவுங்
கொளைதளரா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவுங்
(௨)கிளையழிய வாழ்பவ னாக்கம்போற் புல்லென்று
வளையானா நெகிழ்போடுந் தோளாயி னெவன்செய்கோ

எ - து: முறுக்கு அவிழ்ந்த பூக்களையுடைய சினையிடத்தே சுரும்பினம் யாழ்போலே ஒலியாநிற்கவும் கொண்டகோட்பாட்டினைக்குலையாதவருடைய தீமையை மறையாநிற்பேன்; அதனாற் பெற்றதென்? மறைப்பினும் சுற்றங் கெடவாழ்பவன் ஆக்கம் பொலிவழியுமாறுபோலப் பொலிவழிந்து தோள்கள் வளைகிடத்தலமையாவாய் நெகிழ்ந்து கழலுமாயின் யான் அதற்கு என் செய்வேன்? எ - று.

கண் பனிவாரும், தோள் வளையோடுமெனச் சினைவினை முதன்மேல் நின்றது.

இவை மூன்றும் தாழிசை.

எனவாங்கு

எ - து: என்றுசொல்லி; எ - று.

ஆங்கு, அசை.

இது தனிச்சொல்.

௨௧ நின்னுண்ணோய் நீயுரைத் தலமர லெல்லாநா
மெண்ணிய நாள்வரை யிறவாது காதலர்

---

௨௬ - ௨௭. (இ) "கோல்வளை யரசன் கீழ்வாழ் குடியென நடுங்க மாட்டி" உத்தரகோச. பார்ப்பதி. ௩௪. என்பவையும், (ஈ) "ஆள்பவர் கலக்குற வலைபெற்ற நாடுபோல்" கலி. ௫: ௧௨. என்பதும் (உ) அதன் குறிப்பிலும் (ஊ) இந்நூற்பக்கம், ௧௪௫: ௨ - ஆம் குறிப்பிலும் (எ) ௧௪௬: ௧ - ஆம் குறிப்பிலும் இவ்விடத்திற்குப் பொருந்துவனவும் இங்கே அறிதற்பாலன.

௧. (அ) "வடிநரம் பிசைப்ப போல்......சுரும்பார்ப்ப" கலி. ௩௬: ௩.
(ஆ) "சுரும்பு நரம் பெனவார்ப்ப" வளையாபதி.

௨. "தன்னினந் தளரா வண்ணந் தாங்குத றரும மென்றே, நன்னகர் பலவும் வாழ நயந்துதன் னிடத்தில் வாழ்வு, மன்னிய செல்வர் தம்பால் வளமிகக் கொடுத்துத் தன்பா, லெந்நகர் வளமுங் காட்டி யிருப்பதந் நகர நாளும்" விநாயக. திருநகர. ௩. என்பதும் "சிறியவன் செல்வம் போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி" (கலி. ௧௦: ௨) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

பண்ணிய மாவினர் புகுதந்தார்
(க)கண்ணுறு பூசல் கை*களைந்தாங்கே

எ - து: நின் †நெஞ்சினேய்ய நீகூறிச் சுழலாதேகொள். ஏடீ! நாம் வருவரென எண்ணியிருந்தநாளெல்லே கடவாமல், கண்உறுகின்றவருத்தத்தைக் கை நீக்கினாற்போலக் காதலர் சமைத்த மாவினையுடையராய் வந்தார்காண் ‡எ-று.

இது சுரிதகம்.

இதனால், தலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இஃது எழடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்று வந்த ஒத்தாழிசைக்கலிப்பா. (ருடு)

(ருசு.) மடியிலான் செல்வம்போன் மரனந்த வச்செல்வம்
படியுண்பார் நுகர்ச்சிபோற் பல்சினை மிஞிறார்ப்ப
மாயவண் மேனிபோற் றளிரீன வம்மேனித்
தாய சுணங்குபோற் றளிர்மிசைத் தாதுக
மலர்தாய பொழினண்ணி மணிநீர கயநிற்ப
வலர்தாய துறைநண்ணி யயிர்வரித் தறல்வார
நனியெள்ளுங் குயினேக்கி யினைபுகு நெஞ்சத்தாற்
றுறந்துள்ளா ரவரெனத் துனிகொள்ள லெல்லாநீ;

கூ. வண்ணவண் டிமிர்ந்தான வையைவா ருயரெக்கர்த்
தண்ணருவி நறுமுல்லைத் தாதுண்ணும் பொழுதன்றே
கண்ணிலா நீர்மல்கக் கவவிநாம் விடுத்தக்கா
லொண்ணுதா னமக்கவர் வருதுமென் றுரைத்ததை;

கரு. மல்கிய துருத்தியுண் மகிழ்துணைப் புணர்ந்தவர்
வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றே
வலனுக வினையென்று வணங்கிநாம் விடுத்தக்கா
லொளியிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை;

கஎ. நிலனாவிற் றிரிதரூஉ நீண்மாடக் கூடலார்
புலனாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுதன்றே
பலநாடு நெஞ்சினேம் பரிந்துநாம் விடுத்தக்காற்
சுடரிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை;

க. (அ) "கண்பனி துடையினித் தோழி நீயே." (ஆ) "கண்ணுறு பொழுதிற் கைபோ லெய்தி, நும்மோர்க்கு நீதுணை யாகலு முளையே" (இ) "பனித்தகண்டுடைத்து" விநாயக. சிந்தாமணி. உ0உ.

(பிரதிபேதம்) * கலந்தாங்கே, † நெஞ்சினேய்கூறிநீ, ‡ என உவகையாற்கூறினாள்.

எனவாங்கு;

௨௧. உள்ளு தொ றுடையுநின் னுயவுநோய்க் குயிர்ப்பாகி
யெள்ளறு காதல ரியைதந்தார் புள்ளியற்
காமர் கடுந்திண்டேர்ப் பொருப்பன்
வாய்மை யன்ன வைகலொடு புணர்ந்தே.

இது வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி இக்காலம் அல்லவோ அவர் வருதுமெனச் சொன்ன காலமென வன்புறையெதிரழிந்தாளை நீ துனி கொள்ளல் அவர் வந்தாரெனத் தலைவன் வரவுணர்ந்து தோழி ஆற்று வித்தது.

இதன் பொருள்.

(௧)மடியிலான் செல்வம்போன் மரனந்த வச்செல்வம்
*படியுண்பார் நுகர்ச்சிபோற் பல்சினை மிஞிறார்ப்ப
(௨)மாயவண் மேனிபோற் றளிரீன வம்மேனித்
தாய சுணங்குபோற் றளிர்மிசைத் தாதுக
(௩)மலர்தாய பொழினண்ணி (௪)†மணிநீர கயநிற்ப
வலர்தாய துறைநண்ணி யயிர்வரித் தறல்வார

---

௧. (அ)சீர்வகையான்வருங்கலியடி தளைவிரவினுங் கடியப்படா வென்பதற்கு "மடியிலான் செல்வம்போன் மரனந்த வச்செல்வம்" என்பது மேற்கோள். தொல். செய். சூ. ௬௧. நச். (ஆ) "அசைவி லுனேன்று ணசைவள னேத்தி"(இ) "நின்றாள்படு செல்வங் காண்டொறு மருள" புறம். ௧௪௮: ௨. ௧௬௧: ௧௫-௫. (ஈ) "ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா, வூக்க முடையா னுழை" (உ) "மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான், றாஅய தெல்லா மொருங்கு" (ஊ) "முயற்சி திருவினை யாக்கும்" (எ) "மடியிலான், றாளுளா டாமரையி னுள்" குறள். ௫௯௪, ௬௧௦,௬௧௬, ௬௧௭. (ஏ) "ஊக்க வேந்த னுக்கம்போல, வீக்கங்கொண்டு" பெருங். (௩) ௫: ௨௦-௨௧. (ஐ) "ஆக்கமிங் கொருவரா லணுக வேண்டுமே, லூக்கமுண் டாவரே லுறுவ ரன்னது, நீக்கமில் கொள்கையி னிற்ப ரேயெனின், மேக்குறு பெருந்திரு விரைவின் மேவுமால்" கந்த............(ஒ) "முயற்சி, யுலைவறப் புரியா வொருவனுக் கெங்ங னுற்றிடுஞ் செல்வம்" நுசேலோ. மேல்கடல். ௧௪௭.

௨. கலி. ௨௯: எ-அ-ஆம் அடிகளையும் அவற்றின் குறிப்பையும் பார்க்க.

௩. "அணிமலர்ப் பூம்பொழி லதனுள், வண்ண மாச்சுனை மாநீர் மணி தெளித்தனையது" சீவக. ௧௫௯௯.

௪. (அ) "மணிநீரும்" குறள். ௭௪௨. (ஆ)"மணிதெளித்தனைய நீர்" நைட. புனல். ௧. (இ) "மணிதெளித் தனைய வான்புனற் றடத்தின்" காசி.

(பிரதிபேதம்) * படியுண்பா னுகர்ச்சி, † மணிநீர்க் கயம்,

௩௱(௩)வெள்ளுங் குயிலுேக்கி யிணைபுகு நெஞ்சத்தாற்
(௨)றுறந்துள்ளா ரவரெனத் துனிகொள்ள லெல்லாநீ

எ - து: ஏடீ, நீ உள்ளம் மடித்திருத்தலில்லாதவன் செல்வம் பெருகு மாறுபோல மரங்கள் பூப் பெருக்க, அங்ஙனம் முயன்றுபெற்ற செல்வத்தைத் தான் வருந்தாமற் படிபெற்று உண்பாரது நுகர்ச்சிபோல அம்மரங்களிற் பல கொம்புகளிலேதேனையுண்டு மிஞிறுகள் ஆரவாரிப்ப, கரியபசிறத்தையுடையவன் மேனிபோலத் தளிரை ஈன, அந்நிறத்திற் பரந்த சுணங்குபோல அந்தத் தளிரின்மேலே தாது விழ, அந்த மலர்பரந்த சோலையை அணுகிப் பளிங்கு போலும் நீர்களையுடையவாகிய குளங்கள் வற்றுது நிற்பப், பூப்பரந்த துறை களையணுகி நுண்மணலைக் கோலஞ்செய்து அறுதியையுடைய நீர் ஒழுக இவற்றின்மேலே தான் மொழிக்குத் தோற்றிருந்த, பகையாற்பிரிந்திருந்தாரை மிக இகழுங் குயிலைப் பார்த்து வருந்திக் கெடுகின்ற நெஞ்சத்தோடே அவர் நம்மைத் துறந்து இனி நினையாரென்று கருதி வெறுப்புக்கொள்ளாதே; கொள்; எ - று.

இது தரவு.

---

விஷ்ணு. ரு. (௯) "சுடர்மணி தெளித்ததன்ன, மென்புனற்றடம்" உத்தரகோச. நளசக்கர. எ. (உ) "எறிக்கும் படிகத் திரடெளித்தா லெனநின் றிலங்கித் தன்பெயரைக், குறிக்குந் தடந்தீம் புனலாடி" (ஊ) "ஈர்ந்தநுண் பளிங்கெனத் தெளிந்த, வந்தணீர்" (எ) "மணி தெளித்தனைய மாதீர்த்தக் குளம்" சீகாழி. பிரமபுர. உஉ; சந்திரன். எ; சேடனுங். உரு.

க. "எள்ளுங் குயிலையு மவரையும் புலவாதி" கலி. ௩௩: உஎ.

உ. (அ) "துறந்துள்ளாரவரெனத் துனிகொள்ளலெல்லாநீ" என்பது விளி யேற்கும் என்று எடுத்தோதாத ஈற்றுள் ஆகாரஈறு ஏடி என்று விளி யேற்று வருதற்கு மேற்கோள். தொல். விளி. சூ. கஉ. நச். (ஆ) "துனிகொள்ள லெல்லாநீ" என்பதனை, "எல்லாள்" என்பது ஈறு கெட்டு "எல்லா" எனநின்று விளியேற்றற்கு மேற்கோள் காட்டினர்; மயிலை. வி. இரா. நன். பெயரியல். சூ. ருக. (இ) "ளகாரவீற் றுயர்பெயர் ஈறழிந்துவிளியேற்குமென்னும்நன்னூற்கருத்தை மாற்றி, தாம் செய்த சூத்திரத்தினுரையில், "துறந்துள்ளா ரவரெனத் துனி கொள்ள லெல்லாநீயென ஈறழிந்தும் விளியேற்கும் என்பாரும் உளராலோவெனின், அது படர்க்கைப் பெயராகாது தோழிமுன் னிலைப் பெயராயே தோழீ என்னும் பொருட்டாய் நிற்பதொன்ருக லின் ஈண்டைக்கு ஏலாதென்க" என்பர். இ - வி. நூலாசிரியர், இ - வி. சூ. உகO.

௯. (௧)வண்ணவண் டிமிர்ந்தானு வையைவா ருயரெக்கர்த்
(௨)தண்ணருவி நறுமுல்லைத் தாதுண்ணும் பொழுதன்றோ
கண்ணிலா நீர்மல்கக் கவவிநாம் விடுத்தக்கா
லொண்ணுதா னமக்கவர் வருதுமென் றுரைத்ததை

எ - து: ஒள்ளிய நுதலினையுடையாய்! நாம் நிறுத்தினவளவில் நில்லாவாய்க் கண் நீர்மல்க முயங்கி விடுக்க, அவர் நமக்கு வருவேமென்று உரைத்த காலம், நிறத்தையுடைய வண்டுகள் ஆரவாரித்து,இன்பம் அமையாத வையையாற்றில் ஒழுங்குபட்ட உயர்ந்த இடுமணலிடத்துக் குளிர்ந்த அருவிநீராலே வளர்ந்த நறிய முல்லைப்பூவிற் றாதையுண்ணும் இவ்விளவேனிற் காலமல்லவோ? எ - று.

விடுத்தக்கால், காலீற்றுவினையெச்சம்.

௧௩. மல்கிய துருத்தியுண் (௩)மகிழ்துணைப் புணர்ந்தவர்
(௪)வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ
(௫)வலனாக வினையென்று வணங்கிநாம் விடுத்தக்கா
லொளியிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை

எ - து: ஒளியிழாய்; நீர் எடுத்துக்கொண்ட காரியம் வெற்றியுண்டாவதாகவென்று கூறித் தொழுது நாம் விடுக்க, அவர் நமக்கு வருவேமென்று உரைத்த காலம், பெருகியகாலத்து நீர் நிறைந்த ஆற்றிடைக்குறையிலே அவர் தம்மை மகிழும் பரத்தையரைக்கூடி, காமனுக்குநிகழ்த்துகின்ற விழாவிடத்தே அவருடனேவிளையாடும் இவ்விளவேனிற்காலமல்லவோ? எ - று.

---

௧. "கமழ்தா துதும், வண்ணவண் டிமிர்குரல் பண்ணைபோன் றனவே" பரி. ௧௪: ௩௪.

௨. "தண்ணருவி நறுமுல்லை" கலி. ௩௨: ௧௯.

௩. "உறலியா மொளிவாட வுயர்ந்தவன் விழவினுள், விறலிழை யவரோடு விளையாடு வான்மன்னோ" கலி. ௩௦: ௧௩-௪.

௪. (அ) 'சிலைவலான்' கலி. ௧௪௩: ௩௪. (ஆ) "திருமலி கருப்பு வெஞ்சிச் சிலையினு லுலக மெல்லாம்,பொருதுசெங் கோன டாத்திப் புகழ் விளையேக வீரன்"

௫. (அ)"வலனாக......றுரைத்ததை" என்பது காலீற்று வினையெச்சம் பிறவினைகொண்டு முடிந்ததற்கு மேற்கோள்; தொல். வினை. சூ. ௩௫. நச். இ-வி. சூ. ௨௪௭. (ஆ) "வலனாக......விடுத்தக்கால்" என்பது காலீறு இறந்த காலம்பற்றி வருதற்கு மேற்கோள்; தொல். வினை. சூ.௩௨. சே. சூ. ௩௧. கல். சூ. ௩௨. நச். இ-வி. சூ. ௨௪௯.

௧௭ (௧)*நிலனாவிற் றிரிதரூஉ நீண்(௨)மாடக் கூடலார்
†புலனாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுதன்றோ
(௩)பலநாடு நெஞ்சினேம் பரிந்துநாம் விடுத்தக்காற்
‡சுடரிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை

எ - து: விளங்குகின்ற இழையினையுடையாய்! இறந்து படுவேமோ ஆற்றியிருப்பேமோவென்று பலவற்றையும் ஆராயும் நெஞ்சினையுடையேமாய் நாம் வருந்தி விடுக்க, அவர் நமக்கு வருவேமென்று உரைத்த காலம், நிலத்தினுள்ளார் நாவிலே வழங்கும் நீண்ட மாடங்களையுடைய மதுரையிலுள்ளார் அறிவினையுடைய சான்றோர் நாவிற் பிறந்த கவிகளின் புதுமையைக் கொண்டாடும் இவ்விளவேனிற்காலமல்லவோ? எ - று.

"வேந்துறு தொழிலே யாண்டின தகமே" (௪) என்பதனான் இது பின்பனியிற் பிரிந்து இளவேனிலுள் வருதல்குறித்தலின் இருதிங்களிடையிட்டது.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு

எ - து: எனச்சொல்லி, எ - று.

ஆங்கு, அசை,

இது தனிச்சொல்.

௨௨ உள்ளுதொ றுடையுநின் னுயவுநோய்க் குயிர்ப்பாகி
||வெள்ளறு காதல ரியைதந்தார் புள்ளியற்

---

௧. "உரைவாய நகர்" என்பதற்கு உரையிடத் தனவாகிய நகர் என்று பொருள்கூறி "நிலனாவிற்றிரிதரூஉம்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டினார், நச்; சீவக. ௨௫௫௮.

௨. (அ) "மாடமலி மறுகிற் கூடற் குடவயின்" முருகு. ௭௧. (ஆ) "மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்" மது. ௪௨௯. (இ) "நீண்மாடக் கூடல்" பரி. ௨௦: ௧௦௬. (ஈ)"மாடமலி மறுகிற் கூட லாங்கண்" அகம். ௩௪௬: ௨௦; (உ) "மாட மதுரையும்" புறம். ௩௨: ௫. (ஊ) "மாடமதுரை புகுந்தனன்" (எ) "மாட மதுரையும்" (ஏ) "மாடமதுரை யகத்துச் சென்று" (ஐ) "மாட மதுரை மாநகர் புகுகென" சிலப். பதிகம்: ௨௦, ௮: ௩, ௯: ௭௬. ௧௫: ௧௧௨. (ஒ) "மதிமலி புரிசை மாடக் கூடற், பதிமிசை" பதினோரந்.

௩. "பலநினைந் தினையும் பைத னெஞ்சின்" கலி. ௧௨௬. ௧௧.

௪. தோல். கற்பி.சூ. ௪௮. இதனுரையிலும் இக்குறிப்புடன் இச்செய்திக்கே "நிலனாவிற் றிரிதரூஉம்" என்னும் இத்தாழிசை மேற்கோள்.

பிரதிபேதம்) * நிலநாவில், † புலநாவில், ‡ சுடர்தாதாய், || எள்ளூறு.

காமர் கடுந்திண்டேர்ப் (க)பொருப்பன்
(உ)வாய்மை யன்ன வைகலொடு புணர்ந்தே

எ - து: தம்மை நினைக்கும் பொழுதெல்லாம் நெஞ்சழியும் நினது வருத்தத்தையுடைய காமநோய்க்கு இளைப்பாறுதலாகிப் பறவையினது பறத்தற்றன்மையையுடைத்தாகிய விருப்பத்தையுடைய கடிய திண்ணிய தேரையுடைய பொதியின்மலையினையுடைய பாண்டியனுடைய தப்பாத மொழியையொத்த குறித்த எல்லைதப்பாத நாளோடே கூடி நம்மை * இகழ்ந்திருத்தல் நீங்கின காதலர் நம்மைக்கூடுதலைத் தந்தார்; †எ-று.

இது சுரிதகம்.

இதனால், தலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இஃது எட்டடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. (௩௪)

(௩௫.) கொடுமிட ஞஞ்சிலான் றார்போன் மராத்து
நெடுமிசைச் சூழு மயிலாலுஞ் சீர
வடிநரம் பிசைப்பபோல் வண்டொடு சுரும்பார்ப்பத்
தொடிமகண் முரற்சிபோற் றும்பிவந் திமிர்தர
௫ வியனெழீஇ யவைபோல வெவ்வாயு மிம்மெனக்
கயனணி பொதும்பருட் கடிமலர்த் தேனூத
மலராய்ந்து வயின்வயின் விளிப்பபோன் மரனாழ்ப்ப
விருங்குயி லாலப் பெருந்துறை கவின்பெறக்
குழவி வேனில் விழவெதிர் கொள்ளுஞ்

க. பொருப் பென்னும் பெயர்பொதியின் மலைக்குப் பயின்று வருதலை, (அ) "வரைத்தா ழருவிப் பொருப்பிற்பொருந" மது. ௪௨. (ஆ) "திண்டேர்ச் செழியன் பொருப்பிற் கவாஅன்" (இ) "பலர் புகழ்திருவிற் பசும்பூட்பாண்டிய,னணங்குடையுயர்நிலைப்பொருப்பிற்கவான்" அகம். ௧௩௭: ௧௪. ௩௩௮: ௫ - ௬. (ஈ) "வகையமை தண்டாரான் கோடுயர் பொருப்பின்மேல்" (உ) "சினையலர் வேம்பின் பொருப்பன்" கலி. ௫௭: ௧௬, ௬௨: ௭. (ஊ) "பூண்டாழ் மார்பிற் பொருப்பிற் கோமான், பாண்டியன்" (தொல். அகத். சூ. ௫௪. மேற்கோள்.) (எ) "தென்னனுயர்பொருப்புந் தெய்வ வடமலையும்" பெரியதிருமடல். ௬. (ஏ) "பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து" வில்லி. சிறப்புப். க. என்பவையும் வலியுறுத்தும்.

௨. (அ) "காலை யன்ன சீர் சால் வாய் மொழி" பதிற். ௨௧: ௪. (ஆ) "வாய்மை வயங்கிய வைகல்" பரி. ௨: ௫௪. (இ) "வெயிலினுமெய்யன வுரைத்தன் மேயினுள்" கம்ப. காட்சி. ௩௬.

(பிரதிபேதம்) * இகழ்ந்திருக்க நீங்கின, † இனி ஆற்றென்றாள்

௧0 சீரார் செவ்வியும் வந்தன்று
வாரார் தோழிநங் காத லோரே;

௧௨ பாஅய்ப் பாஅய்ப் பசந்தன்று நுதல்
சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன தோள்;

௧௪ நனியறல் வாரும் பொழுதென வெய்ய
பனியறல் வாருமென் கண்;

௧௬ மலையிடைப் போயினர் வரனசைஇ நோயொடு
முலையிடைக் கனலுமென் னெஞ்சு;

௧௮ காதலிற் பிரிந்தார் கொல்லோ வறிதோர்
தூதொடு மறந்தார் கொல்லோ நோதகக்
காதலர் காதலுங் காண்பாங் கொல்லோ
துறந்தவ ராண்டாண் டுறைகுவர் கொல்லோ யாவது
நீளிடைப் படுதலு மொல்லும் யாழநின்
வாளிடைப் படுத்த வயங்கீ ரோதி
நாளணி சிதைத்தலு முண்டென நயவந்து
கேள்வி யந்தணர் கடவும்
வேள்வி யாவியி னுயிர்க்குமென் னெஞ்சே.

இது காலங்கண்டு ஆற்றாத தலைவியது நிலைமைகண்டு, ஆற்றாத தோழி, தான் ஆற்றளாய் அவட்குக் கூறியது.

இதன் பொருள்.

(௧)கொடுமிட (௨)ஞாஞ்சிலான் றூர்போன் (௩)மராத்து
நெடுமிசைச் சூழு மயிலாலுஞ் சீர

௧. (அ) "விறன்மிகு வலியொலி பொலிபகழ் புழுதியி, னிறனுழு வளை வாய் நாஞ்சி லோனும்" பரி. ௧௩: ௩௨-௩. (ஆ) "வலியொத் தீயே வாலியோனை" புறம். ௫௬: ௧௨. (இ) "விறல் வெள்ளையாயவனென் றுள்" சிலப். ௧௭. 'மாயவ' (ஈ) "புரவல வின்னு நும் பொன்னஞ் சூட்டெயிற், றிருநகர் தென்றலை சேணி லோங்குறு, விரிதிரைக் கங்கையில் வீழ்தல் போன்றுமற், றொருகுழை யவன்வலி யுணர்த்து கின்றதால்" பாகவதம். (௧0) சாம்பன் மணம். ௫௪. என்பவைகளும் பலதேவன் பலராமன் என்னும்பேர்களும் இங்கே அறிதற்பாலன.

௨. (அ) " வளைநாஞ்சி லொருகுழை யொருவனை." (ஆ) "வள்ளணி வளை நாஞ்சிலவை" பரி. ௧: ௫, ௧௫: ௫௭. (இ) "மேழிவல னுயர்த்த வெள்ளை நகரமும்" சிலப். ௧௪: ௯.

௩. "மராஅ மயிலின் மயங்குபு துங்குங், குழாஅ மகளிர் குரவை காண் மின்" பெருங். (௧) ௪0: ௧௪௫-௬.

வடி(க)நரம் பிசைப்பபோல் வண்டொடு சுரும்பார்ப்பத்
(உ)தொடிமகண் முரற்சிபோற் றும்பிவந் திமிர்தர
ரு வியனெழீஇ யவைபோல வெவ்வாயு மிம்மெனக்
கயனணி பொதும்பருட் கடிமலர்த் தேனூத
மலராய்ந்து வயின்வயின் விளிப்பபோன் மராஅம்ப
விருங்குயி லாலப் பெருந்துறை கவின்பெறக்
(ந) குழவி வேனில் விழவெதிர் கொள்ளுஞ்
க0 சீரார் செவ்வியும் வந்தன்று
வாரார் தோழிநங் காத லோரே *

எ-து: தோழீ! (ச)காமனுக்கு நிகழ்த்தும் விழவை எதிர்கொள்ளும் இள வேனிற் செவ்வியும், கொடிய வலியினையுடைய கலப்பைப்படையினையுடைய நம்பி மூத்தபிரானுடைய துழாய்மாலைபோல வெண்கடம்பின் உயர்ந்த இடத்தே ஆரவாரிக்கும் மயில்களைத்துந் தங்குஞ்சீர்மையுடையவாய் அதிலே வண்டோடே சுரும்புகளும் வடித்த நரம்புகள் ஒலிப்பனபோல ஆரவாரிப்ப, தொடியினையுடைய விறலியர்(ரு)கானத்திற்போலே தும்பிகள்வந்து ஒலித்தலை

---

க. யாழொலி வண்டினொலிக்கு உவமையாதலை, கலி. நஉ: கூ-ஆம் அடியாலும் அதன்குறிப்பாலும் சுரும்பினொலிக்கு உவமையாதலை, கலி. நச: ககூ-ஆம் அடியாலும் அதன் குறிப்பாலும் உணர்க.

உ. "சுரும்பார்க்குங் குரலினோ டிருந்தும்பி யியை பூத, வொருங்குட னிம்மென விமிர்தலிற் பாடலோ, டரும்பொருண் மரபின்மால் யாழ் கேளாக் கிடந்தான்போற், பெருங்கட றுயில்கொள்ளும் வண்டிமிர் நறுங்காணல்" கலி. கஉந: உ - ரு.

ந. (அ) குழவியென்பது ஓரறி வுயிர்க்கன்றியும் பொழுதின்கண்வருதற்கு 'குழவிவேனில்' என்பது மேற்கோள்; தோல். மர. சூ. உச. பே. (ஆ) குழவியென்பது பருவத்துக்கு முரித்தென்பர், மயிலைநாதர்; நன். பொது. சூ. நஎ. மயிலை.

ச. (அ) "ஆஅ விருப்போ டணியயர்பு காமற்கு, வேனில் விருந்தெதிர் கொண்டு" கலி. கூஉ: சுஎ-சுஅ. (ஆ) "வானுயர் சோலை தோறு முருகு வாய் மடுத்து வீழுந், தேனொடு சுரும்பும் வண்டும் புதிதுண்டு தெவிட்டி யார்ப்பக், கானமர் குழலி னார்தங் கணவர்பாற் புலவிதீர, வேனில் வேட் .குலகம் யாவும் விழவயர்ந் திட்ட வன்றே". நைடதம். இளவேனில். ரு.

ரு. ஏடுகளில் தாளத்திற்போலேயென் றும் ஐயுறும்படி உள்ளது. முரற்கையென்பதற்குத் தாளமென்ற பொருளும், மலை. நகo-ஆம் அடியிற் காணப்படுகின்றது. முரன்றுபாட வெண்பதற்கு ஆளாபஞ்செய்துபாடும்படியென் றும் சீவக. ககருக. முரன்முற்கென்பதற்குப் பாடினாற்

(பிரதிபேதம்.) * பாஅய்...........நுதல் எ - து:

யுண்டாக்க, தேனினம் இயங்கள் சூழ்ந்த இளமரக்காவில் மணத்தையுடைய மலர்களை வாச்சியங்களை எழுப்பின ஓசைபோல எவ்விடமும் *இம்மென்னும் ஓசை †பிறக்கும்படியாகச் சத்திக்க, மரங்கள் கூட உரியாரை ஆராய்ந்து நாற்றத்தாலே ‡தம்மிடத்தே தம்மிடத்தே அழைப்பனபோல மலர்கள் அலர, கரிய குயில்கள் கூவ, பெரிய நீர்த்துறைகள் பூவால் அழகுபெற வந்தது; இக்காலம் இங்ஙனம் முதிர்ந்த அளவிலும் நங்காதலரோ வாரார்; ||எ - று.

௧௨ (௧) பாஅய்ப் பாஅய்ப் ÷பசந்தன்று நுதல்
சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன தோள்

எ - து: ஆதலால் எனது நுதல் பசப்பொழுகப் பரந்து பரந்து வந்து பின்னர் முழுக்கப்பசந்தே விட்டது; என் தோள்கள் ஒழுக மெலிந்து மெலிந்து வந்து பின்னர் மிகவும் மெலிந்தேவிட்டன; எ - று.

௧௪ (௨)நனியறல் வாரும் பொழுதென வெய்ய
பனியறல் வாருமென் கண்

எ - து: என் கண்கள் இக்காலம் மிகவும் அறலொழுகுமென்று கருதி அதற்கெதிரே வெய்ய நீர் அறுதியுடைத்தாய் ஒழுகாநிற்கும்; எ - று.

௧௬ மலையிடைப் போயினர் =வரனசைஇ நோயொடு
முலையிடைக் கனலுமென் னெஞ்சு

எ-து: என்னெஞ்சு மலையிடத்தே போனவருடைய ×வரத்தை நச்சுகையினாலே தோன்றிய காமத்தீயாலே என்னுடைய முலையெல்லாம் காந்தாநிற்கும்; எ - று.

நசைஇயென்னுஞ் செய்தெனெச்சம் காரணகாரியப் பொருட்டாய்நின்றது. தோன்றியவென வருவிக்க. அது நச்சின நோயெனப் பெயரெச்சமாகாது.

௧௮ காதலிற் பிரிந்தார் கொல்லோ வறிதோர்
தூதொடு மறந்தார் கொல்லோ நோதகக்
காதலர் காதலுங் காண்பாங் கொல்லோ
துறந்தவ (௩)ராண்டாண் டுறைகுவர் கொல்லோ யாவது

---

கென்னும் சீவக. ௨௦௩௫. பொருள்காணப்படுதலாலும் இப்பொருளே சிறந்ததாகத் தோற்றுதலாலும் கானமென்றே கொள்ளப்பட்டது.

௧. பாய்தல் பரத்தல் என்னும் பொருளில் வருதற்கு "பாஅய்ப் பாஅய்ப் பசந்தன்றுநுதல்" என்பது மேற்கோள்; தக்க. தாழிசை. ௩. 'சதகோடி'

௨. "என் கண்போ,லிகுபறல் வாரும் பருவத்தும் வாரார்,மிகுவது போலுமிந் நோய்" கலி. ௩௩: ௧௱ - ௨௧.

௩. "ஆண்டாண் டுறைதலு மறிந்த வாறே" குறுந். ௨௪௧.

(பிரதிபேதம்) * நிம்மென்னும். † பிறக்கும் படியாக மரங்கள, ‡ தன்னிடத்தே தன்னிடத்தே, || ஆதலால் எனதுநுதல்.........பசந்தேவிட்டது, ÷ பசந்தநறு நுதல், = வாய்நசையி, × வாரத்தை.

நீளிடைப் படுதலு மொல்லும் யாழநின்
(க)வாளிடைப் படுத்த வயங்கி ரோதி
நாளணி சிதைத்தலு முண்டென நயவந்து
கேள்வி யந்தணர் கடவும்
வேள்வி யாவியி னுயிர்க்குமென் னெஞ்சே

எ-து: காதலர் நம்மிடத்துக் காதலின்று நீங்கினரோ? அன்றிக் காதலுண் டாயிருக்க ஒரு தூதொடு கூறி வரவிடும் வார்த்தையைச் சிறிது மறந்தாரோ? அவர் நம்மிடத்து நிகழ்த்துங் காதலையும் நாம் இறந்துபடாமலிருந்து காண் பேமோ? நம்மை இங்ஙனந் துறந்தவர் அவ்விடங்களிலே அவ்விடங்களிலே இருந்தே விடுவரோ? இவற்றுண் முடியுங் காரியம் எதுதானென்று தலைவி கூற, அதுகேட்டதோழி, (உ)புணர்ந்தவர் சேயிடத்தே பிரிந்திருத்தலும் உல கத்துக்குப் பொருந்தும். அவர் வருவதற்கு முன்பே கத்திரிகை இடையிட்ட விளங்குகின்ற நெய்த்த ஓதியினையுடையாய்! என் நெஞ்சு அவர் குறித்தநாள் வந்து நின்னழகைக் கெடுத்தலுமுண்டென்று கருதி நூற்கேள்வியினையுடைய அந்தணர் விருப்பம் வந்து செலுத்தும் யாகத்திடத்துப் புகைபோலே நெட் டுயிர்ப்புக்கொள்ளாநிற்கும்; இதுகாண் யானுறுகின்ற வருத்தமெனத் தானும் ஆற்றுளாய்க்கூறி ஆற்றுவித்தாள்; எ - று.

இது தோழி கூற்றிற் (ங) "பிறவும்" என்பதனாற் கொள்க.

இதனால், தோழிக்கும் தலைவிக்கும் சூழ்ச்சி தோன்றிற்று.

இது தரவின்கண்ணே 'செவ்வியும்வந்தன்று'என வழியசை புணர்ந்த சொற்சீரடியும் (ச) 'பாஅய்ப்பாஅய்ப் பசந்தன்று நுதல், சாஅய்ச்சாஅய் நெகிழ்ந்தன தோள்' என முட்டடியின்றிக் குறைவுசீர்த்தாகிய சொற்சீரடியும் வந்து கலிவெண்பாவின் வேறுபட்ட கொச்சகம். (கரு)

*பாலைக்கலி முற்றும்.

---

க. கலி: கஉ: க-ங, அடிகளையும் அவற்றின் குறிப்பையும் பார்க்க.

உ. "மகளிர், தோள்சேர்ந்த மாந்தர் துயர்கூர நீத்தலு,நீள்சுரம் போகியார் வல்லைவந் தளித்தலு, மூழ்செய் திரவும் பகலும்போல் வேறாகி, வீழ் வார்கட் டோன்றுந் தமொற்ற ஞாலத்துள், வாழ்வார்கட் கெல்லாம் வரும்." கலி. கசரு: கங - கஎ.

ங. தொல். கற். சு. க.

ச. தொல். செய். கருரு - ஆம் சூத்திரத்தினுரையில் பேராசிரியரும் நச்சி னார்க்கினியரும் இவ்வாறே கூறியிருக்கின்றனர்.

(பிரதிபேதம்,) * பாலை முற்றும், நச்சினார்க்கினியார் கூறிய பாலை நிலத்தினுரை முடிந்தது.

உ

முருகக்கடவுள் துணை.

# கலித்தொகை

## மூலமும்

### நச்சினார்க்கினியருரையும்.

### இரண்டாவது குறிஞ்சிக்கலி.

(௩௭.) (க)கயமல ருண்கண்ணாய் காணா யொருவன்
வயமா னடித்தேர்வான் போலத் தொடைமாண்ட
(உ)கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு
முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற

---

க. (அ) "இருவர்கண் டால்வரு மேதமென் றெண்ணி யெனக்கெதிரே, வருவர்வந் தாலும்தம் வாய்திற வார்தஞ்சை வாணன்வெற்பி,னொருவர்நஞ் சார லுழையக லார்தழை யுள்ளதெல்லாந், தருவர்வம் பார்முலை யாயென்கொ லோசெயத் தக்கதுவே" தஞ்சை. ககஎ. (ஆ) "கயமல ருண்கண்ணாய் காணாய்நின் னையர்" சிலப். கஉ: 'கயமலர்'.

உ. (அ) முற்றுத்திரிசொல் வினையெச்சமாய் வருதற்கு "கண்ணியன் வில்லன் வரும்" என்பது மேற்கோள்; தொல். எச்ச. சூ. சுக. சே. (ஆ)இதற்கு, 'கண்ணியனாய்த் தன் வில்லையேந்தி வரும்' எனப் பொருளுங் கூறுவர். தெய்; தொல். எச்ச. சூ. ௬அ. 'வினையெஞ்சு'. (இ) "முற்றுச்சொல் திரிந்து எச்சமாமென்றது எச்சமே முற்றாய்த்திரியுமென்று ஓதிற் படும்இழுக்கு என்னையெனின், இருதிணை ஐம்பான் மூவிடத்திற்கும் பொதுவாகிய வினை நிகழ்ச்சியன்றே எச்சமாவன? அவை அவ்வாறன்றி முற்றுச்சொற்கு ஓதிய ஈற்றவாய் இருதிணையைம்பான் மூவிடமும் உணர்த்தலின் முற்றுச்சொல்லே எச்சமாய்த் திரிந்தன எனப்படும்; எச்சம் முற்றாய்த் திரிந்தனஎனப்படா; ஆதலான் அவ்வாறு ஓதினாரென்க. அவ்வாறன்றி வினைகோடன் மாத்திரத்தான்

௫ நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும்
பாயல் பெறேஎன் படர்கூர்ந் தவன்வயிற்
சேயேன்மன் யானுந் துயருழப்பே னாயிடைக்
(௧)கண்ணின்று கூறுத லாற்றா னவனாயிற்
பெண்ணன் றுரைத்த னமக்காயி னின்னாதூஉங்
௧௦ (௨)காணான் கழிதலு முண்டென் (௩)றொருநாளென்
றோணெகிழ் புற்ற துயராற் றுணிதந்தோர்
நாணின்மை செய்தே னறுநுதா லேன
லினக்கிளி யாங்கடிந் தோம்பும் புனத்தய
லூசலூர்ந் தாட வொருஞான்று வந்தானை

---

வினையெச்சமெனின், மாரீறும் வினையொடுமுடியும்வேற்றுமையும் பிறவும் வினையெச்சமாவான் செல்லுமாகலானும், அல்லதூஉம் 'கண்ணியன் வில்லன்' எனவரும் வினைக்குறிப் முற்றாய்த்(?)திரிதற்கு ஏற்பதோர் எச்சமின்மையானும் அஃதுஇலக்கணமன்றென்க. இஃது ஆசிரியர் தொல்காப்பியனார்க்குங் கருத்தாதல் சேனாவரைய ருரையா னுணர்க" இ - வி. சூ. ௨௫௦.

௧. (அ)கண்ணென்னும் பொருளாவது கண்ணென்னும்இடைச்சொல்லா னுணர்த்தப்படும் இடப்பொருண்மை என்றுகூறி,"கண்ணின்றுகூறுத லாற்றா னவனாயின்" என்பதை மேற்கோள் காட்டுவர், சேனாவரையர்; தொல். வேற். சூ. ௨௧. (ஆ) நச்சினார்க்கினியர் இச்சூத்திரவுரையில் இக்கருத்தை, மறுத்து, இப்பகுதியில் கண்ணென்பதற்கு என் கணின்றென என்னென்பதுதோன்றாவெழுவாயாய்நின்றுகண் ணுருபு ஏற்றதென்று பொருள்கூறுவர். (இ) வேறுரையாசிரியரும் இவ்வாறே கூறுவர். தொல். வேற். சூ. ௨௧. (ஈ) "கண்ணின்றொருவர், குண னேயுங் கூறற்கரிதால்" நாலடி. ௩௫௩. (உ) "கண்ணின்று கண்ணறச் சொல்லினும்" குறள். ௧௮௪.

௨. ஆண்பாலின் வினைமுற்று வினையெச்சமானதற்கு "காணான் கழிதலு முண்டென் றொருநாள்" என்பது மேற்கோள். நன். வினை. சூ. ௩௨. இரா. மயிலை. இ-வி. சூ: ௨௫௦. விருத்தியுரையிலும் இராமானுசகாண் டிகையிலும் இலக்கணவிளக்கவுரையிலும் இது கூடியும் குறைந்தும் பிழைபட்டு வந்துள்ளது.

௩. தோழி தலைவியுறுப்பினைத் தன்னுறுப்பாகக் கூறப்பெறுமென்னும் வழு வமைதிக்கு "ஒருநாளென், றோணெகிழ்புற்ற துயராற் றுணிதந்து" என்பது மேற்கோள்; தொல். பொருளியல். சூ. ௨௭. ௩.

கரு (க)ையைய சிறிதென்னை (உ)யூக்கி யெனக்கூறத்
தையா னன்றென் றவனூக்கக் கைநெகிழ்பு
(௩)பொய்யாக வீழ்ந்தே னவன்மார்பின் (௪)வாயாச்செத்
(௫)தொய்யென வாங்கே யெடுத்தனன் கொண்டான்மேன்
மெய்யறியா தேன்போற் கிடந்தேன்மன் ஞயிடை
உ0 மெய்யறிந் (௬)தேற்றெழுவே ஞயின்மற் றெய்யென
வொண்குழாய் செல்கெனக் கூறி விடும்பண்பி
*னங்க ணுடைய னவன்.

இது "நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ், செய்வினை மறைப்பினுஞ் செலவினும் பயில்வினும், புணர்ச்சியெதிர்ப்பா டுள்ளுறுத்து வருஉ,முணர்ச்சியேழினுமுணர்ந்த பின்றை" (எ) தன்னை அவள் மறையாமை

---

க. (அ) 'ஐயசிறிதென்னை யூக்கி' என்பது முன்னிலையீற்றுஇகரம் சிறுபான்மை ககரம்பெற்று வருமென்பதற்கும் (தோல். வினை. சூ. உ௬. சே.) (ஆ) ககரம்பெற்ற இகரம் ஏவல்கண்ணியே நிற்குமென்பதற்கும், (தோல். வினை. சூ. உ௬. நச்.) (இ) ககரம் சிறுபான்மை எதிர்காலங்காட்டுமென்பதற்கும். (இ-வி. சூ. ௪௧.) (ஈ) இகரம் ககரமூர்ந்து எதிர்காலம் பற்றி ஏவற்பொருண்மைக்கண்வருமென்பதற்கும்: (இ-வி. சூ. உ௩அ.) மேற்கோள்.

உ. ஊக்குதல் ஆட்டுதல்;(அ)"தானூக் கினனவ் வூசலை வந்தே" கலி. ௧௩௧: ௪௬.(ஆ)"மடவோர்க்கியற்றியமாமணியூசல்,கடுவனூக்குவதுகண்டுநகையெய்தியும்" மணி. ௧௧: எ௩-எ௪. (இ) "தழைக்கயிற் றூசல் விருப்புற் றூக்கியும்" பெருங். (உ)௧௪: உஎ. (ஈ) "சோர்பனிமுகத்து மென்கால் சுழலவார் விசிறியூக்க" பூவாளூர். இந்திரனருச்சனை. ௧௪.

௩. (அ) அறக்கழிவுடையனவற்றுள்,தோழிதலைவிக்குப் படைத்து மொழிதலுக்கு, "பொய்யாக வீழ்ந்தே னவன்மார்பின்" என்பது மேற்கோள்; தோல். பொருளியல். சூ. உ௪. நச்.

(ஆ) "அலங்கலங் குன்ற மன்ஞ னணிவரை யகல மூழ்கி, நலங்கெழு கலவைச் சாந்து நானமு மழித லோடு, மிலங்கொளி வயிரப் பைம்பூ ணிளமுலை வடுக்கண் டேங்கிப்,பொலங்கொடி நாணி ஞேடும் பொய்த் துயில் கூர்ந்தா ளன்றே" நைடதம். மணம். ௪உ.

௪. எடுத்தோதப்படாத உரிச்சொற்களுள் செத்தென்பது குறிப்புணர்த்தி வருதற்கு "வாயாச்செத், தொய்யென வாங்கேயெடுத்தனன்" என்பது மேற்கோள்; தோல். உரி. சூ. எ௧ 'அன்ன' தெய்.

௫. "ஒய்யென" பொருந. ௧௫உ; முல்லை. அ௩; அகம். அ௬:௨௧, ௧௬௫: ௩.

௬. 'எற்றெழுதல்' கலி. ௧உ: அ-ஆம் அடிக்குறிப்புப் பார்க்க.

எ. தோல். களா. சூ. உ௩.

(பிரதிபேதம்) * இன்கண், நன்கண்.

காரணமாக "மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது, பல் வேறு கவர்பொரு ளுட்டத்தான்" (க)தலைமகட்குத் தோழிகூறியது.

இதன் பொருள்.

* கயத்திடத்து நீலமலர்போலும் மையுண்கண்ணினையுடையாய்! யான் கூறுகின்றதனை நின் மனத்தான் ஆராய்ந்துபாராய், தனக்கு ஒப்பில்லாதான் வலியையுடைய யானைமுதலியவற்றின் அடியைத் தேடுவான்போலே கட்டுதன்மாட்சிமைப்பட்ட கண்ணியையுடையனாய் வில்லையுடையனாய்வரும்; அங்ஙனம் வந்து என்னைப் பார்த்துத் தான் உற்ற நோயை (உ)மிகவுங் குறிப்பாலே யான் உணரக் காட்டுவதன்றிக் கூற்றுற் கூறுனாய்ப் பலநாளும் மீண்டும்போம்; அதுகண்டு அவனேயன்றி அவனிடத்து மிகவும் உறவில்லாத யானும் அவன் என்செய்கின்றானென்னும் நினைவுமிக்குத் துயில்பெறேனாய் வருத்தத்திலே விழுந்துஅழுந்துவேன்; அவ்விடத்து அவனாயிற் றன்குறையை நம்மெதிர்நின்று கூறுதலைச் செலுத்தான்; நமக்காயின் நின்வருத்தத்திற்கு யாமும் வருந்தினேமென்று கூறுதல் பெண்டன்மையன்று; இங்ஙனம் நின்ற இதனைச் சிறிது நெஞ்சால் ஆராயானாய் இறந்துபடுதலுமுண்டாமென்று கருதி, இடையிலே ஒருநாளிலே என்றோள்கள் மெலிந்து யானுற்ற வருத்தத்தாலே துணியாததொன்றைத் துணிதலைச்செய்து ஒரு நாணமில்லாமையைச் செய்தேன்; அஃதியாதெனின், நறிய நுதலினையுடையாய், தினைப் புனங்களில் இனமாகிய கிளியை† விழாமல் ஓட்டி யாம் பாதுகாக்கும் புனத்துக்கு அயலிலிட்ட ஊசலை ஏறி ஆடாநிற்க, ஒருநாள் வந்தவனை ஐயனே, சிறிதுபொழுது என்னை ஊசலாட்டுவாயாகவெனச்சொல்ல, அவனும் அதற்குடம்பட்டுத் தையால், நீ கூறியது நன்றென்று ஊசலாட்டாநிற்க, அவன் மார்பின்கண்ணே கை நெகிழ்ந்து வீழ்ந்தேனாக அவன் கருதும்படி பொய் யுண்டாக வீழ்ந்தேன்; அதனை அவன் உண்மையாகக்‡கருதி, விரைய அப்பொழுதேஎன்னையெடுத்து அணைத்துக்கொண்டான்; அவ்விடத்தே என்மெய் வருத்தத்தை யான் அறிந்து மயக்கம் நீங்கி எழுந்திருப்பேனாயின், பின்னைப் பிறர் அறிவரென்று கருதி விரைய ஒண்குழாய், நீபோவென்று கூறிவிடுங் குணத்தாலே நம்மேலேஒரு(ந)கண்ணோட்டமுடையனாயிருந்தான்;|| அதனாலே அவன்மேலே மெய்ம்மறந்தேன்போலே கிடந்தேன்; இதுகாண்; எ - று.

---

க. தொல். களவு. சூ. உந.

உ. "கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க, ளென்ன பயனுமில" குறள். ககOO.

ந. (அ) "கண்ணென்னும் கண்ணோட்டமில்லாத கண்" (ஆ) "கண்ணிற் கணிகலங் கண்ணோட்டம்" குறள். நுஎந,நுஎசு.(இ)"கண்ணுக்குப் புனை மணிப்பூண் கண்ணோட்ட மென்பதெல்லாங் கருணையன்றோ" வில்லி. அருச்சுனன்றவ. சந.

(பிரதிபேதம்) * கயத்திடத்தின், † வீழாமல், ‡ கருதி அப்பொழுதே விரைய, || அதனாலேமெய்.

மேலென்றது அவன்மார்பிலென்னும் பொருட்டு. (க) ''தானுற்ற நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும்'' என்றது தலைவன் இளிவந்தொழுகுதல் * அக்காரணத்தான் யானுந் துயருழப்பே†னென்றலிற் பிறன்கட் டோன்றிய இளிவரல் பொருளாக அவலச்சுவை பிறந்தது. (உ) 'முன்னத்திற் காட்டுத லல்லது' என்றது‡நிறையுடைமையென்னும் ஒப்புமை. 'பெண்ணன் றுரைத்த னமக்காயின்' என்பதும் அது.

இஃது || ''இயல்'' (ங) என்றதனாற் பன்னீரடியி னிகந்தும் தையானன் றெனத் தனிவிரவியும் வந்த கலிவெண்பா.

---

க. (அ) ''தானுற்ற...பன்னாளும்'' எனத் தலைமகன் இளிவந்தொழுகுவது காரணமாக, ''சேயேன் மன்......ருழப்பேன்'' என்றமையின், இது பிறன்கட் டோன்றிய இளிவரல்பொருளாக அவலச் சுவை பிறந்தது. இது கருணையெனவும் படுமென்றனர் பேராசிரியரும்; தொல். மெய்ப். சூ. ரு; (ஆ) இ - வி. நூலாரும் இதனைப் பின்பற்றுவர்; இ-வி. சூ. ருஎஅ. (இ) 'இற்ற தென்னவி' என்னுஞ்செய்யுளின் விசேட வுரையில் 'கண்கள் வெம்பனி யுகுத்த' என்பதற்கு''ஊடல் முழுதுந் தீராமையின் வெம்பனியாயிற்று......(தலைமகன்) அடியில் வணங்கிய பின்னும் ஊடல் தீராது அழுதாளென்றல் கற்பிற்குப்பொருந்தாது. 'இளிவே யிழவே' என்னுஞ் சூத்திரத்தில் அழுகையாவது அவலமும் கருணையுமாதலின், ''கயமலருண் கண்ணாய்' என்னுங்கலியில் ' தானுற்ற...... யானுந்துயருழப்பேன் ' என்றவழி, பிறன்கட்டோன்றிய இளிவரல் பொருளாக அவலந் தோன்றினாற்போல, இதனையும் பிறன்கட்டோன்றிய இளிவரல் பொருளாகப் பிறந்த கருணையென் றுகொள்க; வணங்குதல், அவற்கு இளிவரவு; அதனாற் கருணைபிறந்தது. அழுகை ஈண்டுக் கருணை, இதனான் ஊடறீரக்கருதினாளாம்'' என்பர், நச்; சீவக. உரு0அ.

உ. '''கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு,முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற, நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும். பாயல் பெறேஎன் படர்கூர்ந்து' என்புழி முன்னத்திற்காட்டுதலல்லது தானுரையானென்பது தலைமகனிறையுடைமை கூறியவாறு; 'அவன் வயிற், சேயேன்மன் யானுந் துயருழப்பேன்' எனத் தன்னிறையுடைமைகாரணத்தாற் காமக்குறிப்பு நிகழ்ந்தவாறு. 'பெண்ணன் றுரைத்த னமக்காயின்' என்பதும் அது. இது தோழிகூற் றன்றேவெனின், அதுவுந் தலைமகள் குறிப்பெனவே படுமென்பது முன்னர்க் கூறினாமென்பது'' தொல். மெய்ப். சூ. உரு. பே.

ங. தொல். செய். சூ. கருங. இச்சூத்திரத்தினுரையில் நச்சினார்க்கினியர் இச்செய்யுளைப் பன்னீரடியினிகந்தும் தளைவிரவியும் வந்த கலிவெண் பாட்டிற்கு மேற்கோள்காட்டி, இது தையா னன்றென்று எனமெய்யினும் பொய்யினும் வழிநிலைபிழையாமற் றோழி தலைவிக்குரைத்தது. இதுகேட்டுத் தலைவன் தன்னை நயந்தானென இவள்கருதினாள் போலுமெனத்தலைவி கருதுமாற்றாற் றோழிகூறியவாறும் இதனானே தலைவி

(பிரதிபேதம்) * காரணத்தால், † ஆதலின், ‡ நிறைவுடைமை, || அயலென்றதனால்,

இதுவும், வேறுபொருள் நுதலுமென்றலின், வேறுமொரு பொருள் நுதலுமாறு கூறுதும். "அறக்கழி வுடையன பொருட்பயம் * படவரின் வழக்கென வழங்கலும்†பழித்தன் றென்ப" என்னும்(க)பொருளியற் சூத்திரத் தால் அறக்கழிவுடையனவாக அவன்மார்பில்வீழ்ந்து மெய்யறியாதேன்போற் கிடந்தேனெனக் கூறினாள். இது பொருட்பயன் தந்தவாறென்னையெனின் தலைவன் குறையுற்றுநின்றமையை முன்னர் மெய்யாக வழிநிலைபிழையாமற் கூறிப், பின்னர்ப் படைத்துமொழிந்து பொய்யேகூறுகின்றாள், வழிநிலை பிழைப்பக் கூறினாள். அது பொருட்பயன் ‡ தருதற்கென்க. அஃதென்னை? தலைவன் குறை புலப்படுத்தாது வருந்துகின்ற காலத்து அதனைத் தனக்குப் புலப்படுவித்துக்கொண்டே அவனை ஆற்றுவித்தற்பொருட்டு || அறக்கழிவுடை யன கூறித் ,தானுந் தலைவனும் இவ்வாறே செறிந்தமை உணர்த்தலின், மறை புலப்படுத்துங் கருத்தினளாந் தலைவியென்னும் பொருட்பயன் தந்தே நின்ற தாயிற்று. இதனான் இதுவும் ,"வழக்கென வழங்கலும் பழித்தன்று" ÷ என ஆசிரியரும் அமைத்தார். இங்ஙனம் பொருட்பயன் தருதல்: "நெருந லெல்லை யேனற்றோன்றித், திருமணி யொளிர்வரும்" என்னும்(ங) அகப்பாட்டில்,"சிறு புறங் கவையின னாக......கை பிணிவிடா" என்ற பொருளானும் உணர்க.

இதனால், தலைவிக்கு நாணம் பிறந்தது. (க)

---

இனிக்கரந்தொழுகி உடம்படுக்குமென்பதூஉ மொரு பொருளாயிற்று. இது 'அறக்கழிவுடையன' (தோல். பொருளி. உச) என்னும் பொரு ளியற் சூத்திரத்தில் வழுவமைத்தவாறுங்காண்க. என்பர்.

க. தோல். பொருளியல். சூ. உச. நச். இதனுரையில் "கயமலருண்கண் ணாய்.................. அங்கனுடையனவனென்பதனுள் 'மெய்யறி யா தேன்போற் கிடந்தேன்' என்புழி முன்னர் மெய்கூறி வழிநிலை பிழையாமனின்று பின்னர்ப்பொய்யாக வழிநிலை பிழைத்துக்கூறியது வழுவேனும் இவளுந் தலைவனும் இவ்வாறே செறிந்தமை யுணர்த் தலின் மறைபுலப்படுத்துங் கருத்தினளாந் தலைவியென்பது பயனும்" என்பது காணப்படுகின்றது.

ங. "நெருந லெல்லை யேனற் றோன்றித், திருமணி யொளிர்வரும் பூணன் வந்து, புரவலன் போலுந் தோற்ற முறழ்கொள, விரவன் மாக்களிற் பணிமொழி பயிற்றிச், சிறுதினைப் படுகிளி கடீஇயர் பன்மாண், குளிர் கொ டட்டை மதனில புடையாச், சூரர மகளிரி னின்ற நீமற், றியாரை யோவெம் மணங்கியோ யுண்கெனச், சிறுபுறங் கவையின னாக வதற்கொண், டிகுபெயன் மண்ணின் ஞெகிழ்பஞ ருற்றவென், னுள்ளவ னறித லஞ்சி யுள்ளில், கடிய கூறிக் கைபிணி விடாஅ, வெரூஉ-மான் பிணையி னொரீஇ நின்ற, வென்னூரத் தகைமையிற் பெயர்த்துப்பிறி தென்வயிற், சொல்ல வல்லிற்று மிலனே யல்லார்,

பிரதிபேதம்: * வரினே, † பழித்தலன்றென்ப, ‡ தருதற்கு அ∴தென்னை, || அறத்திற் கழிவுடையன, ÷ என்று.

(ரு அ.) இமையவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தண
னுமையமர்ந் துயர்மலை யிருந்தன னாக
வையிரு தலையி னரக்கர் கோமான்
றொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை
ரு யெடுக்கல் செல்லா துழப்பவன் போல
வுறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை
நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்த்தன்
கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்;
க0 ஆரிடை யென்னாய்நீ யரவஞ்சாய் வந்தக்கா
னீரற்ற புலமேபோற் புல்லென்றாள் வைகறை
கார்பெற்ற புலமேபோற் கவின்பெறு மக்கவின்
றீராமற் காப்பதோர் திறனுண்டே லுரைத்தைக்காண்;
கச இருளிடை யென்னாய்நீ யிரவஞ்சாய் வந்தக்காற்
பொருளில்லா னிளமைபோற் புல்லென்றாள் வைகறை
யருள்வல்லா னாக்கம்போ லணிபெறு மவ்வணி
தெருளாமற் காப்பதோர் திறனுண்டே லுரைத்தைக்காண்;
கஅ மறந்திருந்தா ரென்னாய்நீ மலையிடை வந்தக்கா
லறஞ்சாரான் மூப்பேபோ லழிதக்காள் வைகறை
திறஞ்சேர்ந்தா னாக்கம்போற் றிருத்தகு மத்திருப்
புறங்கூற்றுத்தீர்ப்பதோர் பொருளுண்டே லுரைத்தைக்காண் ;
எனவாங்கு;
உரு நின்னுறு விழுமங் கூறக் கேட்டு
வருமே தோழி நன்மலை நாடன்
வேங்கை விரிவிட நோக்கி
வீங்கிறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே.

இஃது இரவுக்குறிவந்து நீங்குந் தலைவனைஎதிர்ப்பட்டுத் தோழி தலைவியது நிலைமைகூறி அவனை வரைவுகடாவ, அவன் வரைய வருகின்றமை தோழி தலைவிக்கு வரைவுமலிந்துகூறியது.

---

தினந்தீர் களிற்றிற் பெயர்ந்தோ னின்றும், தோலாவா றில்லை தோழிநாஞ் 'சென்மோ, சாயிறைப்பணைத் தோட் கிழமை தனக்கே, மாசின் றாதலு மறியா னேசற், றென்குறைப் புறனிலை முயலு, மண்கணாளனை நகுகம் யாமே." அகம். ருஉ.

இதன் பொருள்.

*(௩)இமையவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தண
னுமையமர்ந் துயர்மலை யிருந்தன னாக

---

௧. (அ) "விராய்நிலை தளையு மொரூஉநிலை யிலவே" என்பதற்குப் பிறவாகி விரவிய தளையும் நீக்குதலில்லை; அஃதாவது வெண்டளையு மாசிரியத் தளையும் விரவுதல் என்றுகூறி, " இமையவில்........................ கோமான்" என்பதை மேற்கோள் காட்டி"இதில் முந்துற்ற விருசீரும் வெண்சீர் வெண்டளை, இரண்டாஞ் சீரொடு மூன்றாஞ்சீர் இயற்சீர் வெண்டளை,நாலாஞ்சீரொடு மற்றையடிமுதற்சீர்நிரையொன்றாசிரியத் தளை, அரக்கர் கோமான் நேரொன்றாசிரியத்தளை. அஃதேல் நேரீற்றியற்சீர் கலிக்கண் வரப்பெறாதென்ற தென்னை? ஈண்டுக் கோமான் வந்ததாலெனின் அவ்விலக்கணங்கள் அத்தன்மையான் வரும் அடிக்கென்க. சிறுபான்மை வஞ்சித்தளை வருதலுங்கொள்க" என்பர், இளம்பூரணர்; தொல். செய். சூ. ௫௭. 'விராய்நிலை'.

(ஆ) "சிவபெருமான் மேருமலையை வில்லாகக் கொண்டாரென்பது பெருவழக்கு. (௧)"செல்விடைப் பாகன் றிரிபுரஞ் செற்றுழிக்,கல்லுயர் சென்னி யிமயவி லாணுகி" (௨) 'மலை வில்லாக - இமயம் வில்லாக' பரி. வானூரெழிலி: ௭௬ - ௭; ௫: ௨௪, உரை. (௩) "இமைய வில் வாங்கிய வீசன்" கம்ப. கார்முக. ௧௨. (௪) "இமயவிற் குரிசிலெய்தி" கூர்ம. இராமனவதரித்த. ௮௧. (௫) "இமயவில் வளைய வாங்கித், தவளவெண் முறுவல் கோட்டித் தரியலர் புரமட்டோற்கு" உத்தர கோச. நளசக்கர. ௩௪. (௬) "உமைநடுங்குற மேல்வரு மும்பலை யடர்த்த, விமைய வில்லினன்"விநாயக. பிந்தியமயூரேசர். ௨௧௩. (௭) "இமயத்,தொல்லைப்பொருப்பு வில்விட் டரண்க டொளாய்விளைத்தும்" (௮) 'இமயவெற்பாற், றெவ்வாறு கடந்த பரன்' சீகாழித்தல. பிரம புர. ௧௨. புறவமான. ௩௦. என்று தமிழ் நூல்களிற் பயின்றுவருவதை நோக்கின் இமயமென்பதும் மேருவின் ஒரு பெயரோவென்று ஐய முண்டாகிறது. (௯) 'இமயத்தைக் கூறவேண்டுமிடத்து மேருக் குன்றத் தூருநீர்ச் சரவணத்து' மணி. (௧௮) ௯௨. (௧௦) "ஐந்தலையுத்தி யரவுநா ணாக, மந்தரவில்லி னந்தணன் விட்ட, தீவாயம்பு" பெருங் (௧) ௪௩. ௧௧௯ - ௨௧. என்பதையும், (௧௧) "மந்தர நெடுமலை நடுவின் வாய்ந்தது,சுந்தரவேதிகை மருங்குசூழ்ந்தது, நந்திய நளிசினை நாவன் மாமர, மந்தரத் துடையதிவ் வவனி வட்டமே" (௧௨) 'சந்திரருஞ் சூரியருந் தாரகையு நாண்மீனும், வெந்திறல கோட்களுமா மெனவிளங்கி விசும்பாரூ, மந்தரத்தை வலஞ்சூழ்ந்துவருபவருநிற்பவருஞ், சுந்தரஞ்சேர் மணிமுடியாய் சுடர்பவருஞ் சோதிடரே" சூளாமணி. மந்திரசாலை. ௩௮௯. துறவு. ௨௦௬. (௧௩) "சந்திரர் சூரியர் கோளவர்

(பிரதிபேதம்) * இமயவில்.

(௧)வையிரு தலையி னரக்கர் கோமான்
*றெடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை
ரு யெடுக்கல் செல்லா துழப்பவன் போல
(உ) வுறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை

---

காளவ ரல்லவராய், மந்தர மாமலை தன்னை வலமுறை சூழவரும்" நீலகேசீ. தருமவுரை. ௬௩. என்பவற்றையும் நோக்கின் மந்தரமென் பதும் மேருவின் பெயரோவென்று ஐயுறவுறுகின்றது. (௧௪) "அந்தர முழிதரு திரிபுர மொருநொடி யளவினின், மந்தர வரிசிலை யதனிடை யரவரிவாளியால், வெந்தழிதரவெய்த விடலையர்" (௧௫) "மந்தரநற் பொருசிலையசை வளைத்துக்கொண்டார்"என்புழி மந்தரம்வில்லென்பது தேவாரத்தும் கூறப்படுகின்றது. (௧௬) "மந்தர மேருவில் லாவளைத் தான்" என்புழி மந்தர மேருவென்பதற்கு மந்தரமு மேருவுமென்றோ, மந்தரமென்னும் பெயரையுடையமேருவென்றோ,மந்தரமலையென்றோ பொருள் கொள்ளல்வேண்டும். (௧௭) "இமயநட் டரவு சுற்றி, யத்தலை யலற முந்நீர் கடைந்தவர்" என்பதன் விசேடவுரையில் "மந்தரத்தின் றொழிலை இமயத்துக்கு ஏற்றினர், அது மலையரைய னாதலின்; 'இமையவில் வாங்கிய' என்றார் பிறரும்" என(சீவக.௬௩௩.) இவ்வுரையாசிரியரே எழுதியிருத்தலை நோக்கின், இங்கு எழுதியிருக் கும் உரையைவிட்டு மேருவின்றொழிலை இமயத்துக்கேற்றினரென்று கொள்ளல் வேண்டும். பெரியார்வாய்க் கேட்டுத் தெளிக.

௧. (அ) "இயக்குமிரதத்தினை யெதிர்ந்திகலின் முட்டிப்,புயக்கவலி யின்றி மதம் பொங்குவிறல் வேழம், வியக்கவொ ரரக்கன்வளர் வெள்ளிவரை யூன்ற, வுயக்கமுட னேலிடுதெ லொப்புற முழங்கும்" விநாயக. மயூ ரேசர். ௮௭.

(ஆ) "ஐயிருதலையினரக்கர்கோமான்" என்பது (இ) சீர்வகையடிக்கண் நேரீற்றியற்சீர் இரண்டும் வருதற்கும், (தொல். செய். சூ.௨௫.நச்.) (ஈ) சீர்வகை யடிக்கண் கலியினளவடி பதினேரெழுத்தான் வருதற்கும், (தொல். செய். சூ. ௫௬. நச்.) மேற்கோள்.

௨. (அ)நேரீற்றியற்சீர் கட்டளையடியல்லாதகலியடிக்கண்வருமென்பதற்கு, "உறு புலியுருவேய்ப்பப்" பூத்த வேங்கையை என்பது, மேற்கோள்; தொல். செய்.சூ. ௨௫. பே. (ஆ) "உறுபுலி" நாலடி. ௧௯௩.
"வேங்கைப் பூவுக்கு வேங்கைப்புலி உவமையாகக் கூறப்படுதலை" (இ) "புலிப்பொறி வேங்கைப் பொன்னிணர்" ஐங். ௩௧௪. (ஈ) "வேங்கை வீயுகு துறுக, விரும்புலிக் குருளையிற் றோன்றும்" குறுந். ௪௭.

(பிரதிபேதம்) * தொடிபொலி.

நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்த்தன்
(க)கோடு(உ)புய்க் கல்லா துழக்கு நாடகேள்

எ - து: இமயமலை யிடத்துப் பிறந்த மூங்கிலாகிய வில்லை வளைத்த, கங்கையான் ஈரத்தையுடைத்தாகிய சடையினையுடைய இறைவன், இறைவியோடே பொருந்தி,(ந) *உயர்ந்தகயிலைமலையிலே இருந்தானாக,†அரக்கர்க்கரசனாகிய பத்துத்தலையையுடைய இராவணன் வரையெடுத்தற்குக் கையைக் கீழே ‡ செருகி, தொடிபொலிவுபெற்ற || அத்தடக்கையினாலே அம்மலையை எடுத்த

---

(உ) "மெல்லிணர் வேங்கை வியலறைத் தாயின, வழுகை மகளிர்க் குழுவை செப்ப" பரி. கச: கக - உ. (ஊ) "குறவ ரூன்றிய குரம்பை புதைய, வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம், புலிசெத்து" அகம். கஉ: கூ - கக. (எ)"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை, மாத்தகட் டொள்வீ தாய துறுக, லிரும்புலி வரிப்புறங் கடுக்கும்" புறம். உOஉ: கஅ - உO. (ஏ) "புலிப்பறழன்ன பூஞ்சினை வேங்கை" தொல். மர. சூ. கO.பே.மேற்கோள்;(ஐ)"கருங்கா லினவேங்கை காண் றபூக் கன்மே, லிருங்கால் வயவேங்கை யேய்க்கும்" திணைமாலை. உசு; (ஒ)"நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாக நண்ணி, மறமனை வேங்கை யெனநனி யஞ்சும்" கோவையார். கூசு. (ஓ) "புலியதள்போர்ப்ப, வெடுத்து நின்றதே போன்றதா லிணர்விரி வேங்கை" (ஔ) "புலியுரு மருளப் பூத்த பூந்துணர் வேங்கை யொள்வீ"காஞ்சி. திருக்கண். கருசு: உருஉ. என்பவற்றால் உணர்க. (ஃ) "வேங்கையஞ் சினையென விறற் புலி முற்றியும்" கலி. சசு: ரு. என மாறிவருதலும் காண்க.

க. (அ)"மறமிகுவேழந்தன் மாறுகொண்மைந்தினாற்,புகர்நுதல்புண்செய்த புய்கோடுபோல" கலி. ருந: ந - ச. (ஆ) 'கோடுபுய்க்கலாது நின்ற அக்களிற்றை' சீவக. உஉஎசு. உரை.

உ. 'புய்'என்பது(அ)"புய்த்தெறிக்கரும்பின்" புறம்.உஅ:கஉ;(ஆ)"கோட்டினிற் குத்திக்குடர் புய்த்துறுத்து" மணி, கந: சஎ.(இ)"நெடுங்கையுந் தலையும் புய்யாநொய்தினி னிமிர்ந்து"கம்ப. அதிகாயன்,உஉஉ. எனச் செயப்படு பொருள்குன்றா வினையாயும் (ஈ) "புய்ந்துகால்போகி" களா. நகூ.எனச்செயப்படு பொருள்குன்றியவினையாயும்.(உ)"மெய்வதிவேல், புயந்து மேல்வரும் பொருநர்கள் சிரங்களும் புரட்டி" (ஊ) "புயக்க வலியின்றி" விநாயக. திரிபுரதகன. சுO;மயூரேசர், அஎ.(எ)"புயக்கவந் துருமையின்" (ஏ) "புக்கவுண ராவிகள் புயக்கு மிறைவாளி" (ஐ) "புக்கபகன்வாள்விழிபுயந்து"பேநர்.குழகன்குளப்புச்.நகூ,மருதவரை ககஅ, கௌரிதவம்.உரு. (ஒ)"புயக்கவொருமைந்தனைப் போவித்தார்" கச்சிஆனந்தருத். உகூஉ. என அகரச்சாரியைபெற்றும் வருதல்காண்க.

ந. "ஊழிதோ றோங்குமவ் வோங்கல்"

(பிரதிபேதம்.) * கயிலை, † பத்துத்தலையையுடைய அரக்கர்க்கரசனாகிய இராவணன், ‡ சொருகி, || தடக்கை.

லாற்ருது வருந்துகின்றவனைப்போல, மிகுதியையுடைய புலியினது வடிவை யொப்பப்பூத்த(க)வேங்கைமரத்தைப்புலியெனக்கறுவுதல்கொண்டு,அதன் அடியிலே குத்திய மதத்தையுடைய யானை, நீண்ட பெரிய முழைஞ்சிடமெல்லாம் ஒலிக்கும்படி கூப்பிட்டுத் தன் கொம்பைவாங்கமாட்டாதே வருந்தும்நாடனே! யான் கூறுகின்றதனைக் கேள்; எ - று.

கொடிதாகிய புலியின் உருவையொப்ப வேங்கை *பூத்ததென்றதனைக் களவின்கட் பெறுகின்ற இன்பத்தை நீக்குதலிற் கொடியதுபோற் ருேன்றிக் கற்பின்கண் இல்லறப் பயனோடு†கூடிப் பேரின்பத்தைத் தருகின்ற வரைவு கடாய கூற்ருகவும், வேங்கையைப் பகையாகக் கருதி அதனோடே பொருத ||யானையை அக்கூற்றைத் தான் நுகர்கின்ற இன்பத்திற்குமாருகக்‡கருதி அக் கூற்றுடனே மாறுபட்டு வருகின்ற தலைவனாகவும், விடரகஞ் சிலம்பக் கூவுதலை அத்தலைவன் அவ்வொழுக்கத்திற்கு இடையீடுபட்டு வருந்திக் கூறுகின்ற கூற்ருகவும், கோடு புய்க்கல்லாது உழத்தலை அக்கூற்றைப் பகையென்று கொண்ட மனத்தை அவள் கூற்றை நன்றென்று கருதி நீக்கமாட்டாது வருந்துதலாகவும் உள்ளுறையுவமம்÷கொள்க.உழப்பவன்போலவென்றவனை யுவமம் பின்வருகின்ற வேங்கையைக்குத்திய யானை கோடு புய்க்கல்லாதுழக்கு மென்ற உள்ளுறையுவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக் =கொடுத்து அதுவும் உள்ளுறையுவமம்போலத் திணையுணர்த்தலைத் தள்ளாது நின்றது. இது வினையுவமப்போலி. இஃது "உள்ளுறை யுவம மேனை யுவமமெனத், தள்ளாதாகுந் திணையுணர் வகையே" என்னும்(உ) அகத்திணையியற் ×சூத்திரத்தினும் "உடனுறை யுவமஞ் **சுட்டுநகை சிறப்பெனக்,கெடலருமரபி னுள்ளுறை யைந்தே" என்னும் (௩) பொருளியற்††சூத்திரத்தினும் யாங் கூறிய உரையான் உணர்ந்துகொள்க. மேலும் இத்தொகையுள், ஏனை யுவமமும் வந்தும் ஏனையுவமம்உள்ளுறையுவமத்திற்குச் சிறப்புக்‡‡கொடுத்துத் திணையுணர்தலைத் தள்ளாது நிற்கும் பாட்டுக்கட்கெல்லாம் இச்சூத்திரங்களே விதியாகக்கொள்க. "நன்றே" என்னுங்(ச)குறுந்தொகையும் அது.

இது தரவு.

கO. ஆரிடை யென்னுய்நீ யரவஞ்சாய் வந்தக்கா
(ரு)னீரற்ற புலமேபோற் புல்லென்ருள் வைகறை

க. யானை, வேங்கைமரத்தைச்சினந்து கெடுத்தலுண்டென்பதை,கலி.சக, உ - கூ. ஆம் அடிக்குறிப்பான் உணர்க.

உ. தோல். அகத். சூ. சகூ. ௩. தோல். பொருளி. சூ. சஅ.

ச. குறுந்தொகையில் இம்முதலுள்ள பாட்டுக் காணப்படவில்லை.

ரு. "வெயில் பொரவாட்டமுற்ற மென்றளிர்ப்பசிய வல்லி, புயல்பொழி துவலைமாந்திப் பொங்கெழில் படைக்குமாபோன், மயிலெருத்

(பிரதிபேதம்) * பூத்தவென்றதனை, † கூடியபேரின்பத், ‡ கருதிய கூற்று, || யானையைக் கூற்றை. ÷ கைக்கொள்க, = கொடுத்தவதுவும், × சூத்திரத்தானும், ** சுட்டுநிலைநகை. சுட்டுநரைசிறப், †† சூத்திரத்தானும், ‡‡ தொடுத்திணை.

(௩) கார்பெற்ற புலமேபோற் கவின்பெறு மக்கவின்
றீராமற் காப்பதோர் திறனுண்டே லுரைத்தைக்காண்

எ-து: நீரற்ற நிலத்திற் பயிர்போல நின் அளிபெறுமற் பொலிவழிந்தவள் நீ வருவதற் கரிய இடமென்று கருதாயாய் ஆண்டுள்ள பாம்பை அஞ்சாயாய் வர, விடியற்காலத்தே மழையைப் பெற்ற நிலத்திற் பயிர்போல அழகுபெறும்; *இனி அங்ஙனம் பெற்ற அழகு இவளைவிட்டு நீங்காமல் நிலைபெற்று, நிற்கும்படி காப்பதொரு கூறுபாடு உண்டாகில், அதனை எங்களுக்குக் கூறிக்காண்; எ - று.

வந்தக்கால், காலீற்று வினையெச்சம்; உரைத்துக்காணென்பது உரைத்தைக்காணென வினைத்திரிசொல்லாயிற்று.

கச இருளிடை யென்னாய்நீ யிரவஞ்சாய் வந்தக்காற்
(உ) பொருளில்லா னிளமைபோற் புல்லென்றாள் வைகறை
(௩) யருள்வல்லா னாக்கம்போ லணிபெறு மவ்வணி
தெருளாமற் காப்பதோர் திறனுண்டே லுரைத்தைக்காண்

---

துறழுமேனி மாயவன் வரவுகேளாக், குயிலென மிழற்று மாது கொழுங்கவி னெய்தினளே". பாகவதம். (கo) உருக்குமிணி. உஅ.

க. (அ) "கானலஞ் சேர்ப்பனைக் கண்டாய்போலப், புதுவது கவினினை" கலி. கஉஅ: சு - எ. (ஆ) "குருந்த மேறிய கூரரும் பார்முல்லை, பொருந்து கேள்வரைப் புல்லிய.பொன்னனார், மருங்கு போன்றணி மாக்கவின் கொண்டதே." (இ) "நீர் துளும்பு வயிற்றின் னிழன்முகில், பார்துளும்ப முழங்கலிற் பல்கலை, யேர்துளும்ப வெரீஇயிறை வற்றழீஇக்,கார்துளும்புகொம்பிற்கவினெய்தினர்." சீவக.ககசுரு,உசுஎஉ. (ஈ) "வானிறைகின்ற கொண்மூவார் துளி தலைஇயபின்றைக்,கானிறை மரனும் பூடும் வல்லியுங் கவின்றவென்ன" கந்த. இந்திரனருச்சனை. க௩. (உ) "நீர் பெற்றுயர்ந்த நிறைபுலமோ" நள. கலிநீங்கு. சுo. (ஊ) "காரிற் குளிர்ந்து குழைந்தசெழுங் கானம் பூத்த தெனக்கவினி" வில்லி. பன்னிரண்டாம். அஉ. என்பவைகளும் (எ) "அணங்கனையார் நுகர் வேய்தலின்" சீவக. அஎக. என்பதும் 'அணங்கனையார், கணவரிடத்து நுகர்ச்சியால் அவயவங்கள் செவ்விபெறுதலின்' என்னும் அதனுரையும் ஈண்டு ஒப்புநோக்கற்பாலன.

உ. "வறியவனிளமைபோல் வாடிய சினையவாய்" கலி. கo: க, என்பதும் அதன் அடிக்குறிப்புக்களும் இங்கு ஒப்புநோக்கற் பாலன.

௩. "இரப்பவர்க் கீயக் குறைபடுமென் றெண்ணிக், கரப்பவர் கண்டறியார் கொல்லோ—பரப்பிற், றுறைத்தோணி நின்றுலாந் தூங்குநீர்ச்சேர்ப்ப, விறைத்தோறு மூறுங் கிணறு" பழ. ௩சச.

(பிரதிபேதம்) * அங்ஙனம் பெற்ற வழகினைவிட்டு,

எ - து: கைப்பொருளில்லாதான் இளமைபோல நின் அளிபெருமத் பொலிவழிந்தவள் நீ இருளிடத்தில் *இராவென்று கருதாயாய் ஆண்வரும் ஏதத்திற்கு அஞ்சாயாய் வர,விடியற்காலத்தே அருளுதலை வல்லவனுக்கு உண் டாய ஆக்கம்போல அழகுபெறும்; அங்ஙனம் பெற்ற அழகு பிறரான் வந்த அழகென்று புறஞ்சொல்லுதலைப் போக்குவதொரு பொருளுண்டாகில் அதனை எங்களுக்குக் கூறிக்காண் ; எ - று.

கஅ மறந்திருந்தா ரென்னுய்நீ மலையிடை வந்தக்கா
(க) லறஞ்சாரான் மூப்பேபோ லழிதக்காள் வைகறை
(உ.)திறஞ்சேர்ந்தா னாக்கம்போற் றிருத்தகு மத்திருப்
புறங்கூற்றுத் தீர்ப்பதோர் பொருளுண்டே †லுரைத்தைக்காண்

எ - து: தருமநெறியைப் பொருந்தாமல் வறிதே மூப்பினை எய்தியவன் மறுமைச்செல்வத்திற் பொலிவிழந்தாற்போல நின் அளிபெருமற் பொலி விழந்தவள் கொலைத்தொழிலிற் குறைவின்றித் திருந்திய கானவரென்று கருதாயாய் அம்மலைச்சாரலிலுண்டாகிய வழிக்கண் வந்த இடத்து அவ் வரவினுற்பெற்ற முயக்கின்பத்தாலே விடியற்காலம் கூறுபாடுடையவனுடைய செல்வப்பொலிவுபோல அழகுபெறும்; அங்ஙனம் பெற்ற அழகால் அயலவர் கூறத்தக்க புறங்கூற்றுரையை மாற்றத்தக்கதொருபொருளுண்டாகில் அதனை எங்களுக்குக் கூறிக்காண்; எ - று.

பொருளென்றது ஆகுபெயர்.

இவை மூன்றும், தாழிசை.

கானவாங்கு;

எ - து. என்று; எ. - று.

ஆங்கு அசை.

இது தனிச்சொல்.

உங. நின்னுறு விழுமங் கூறக் கேட்டு
வருமே தோழி நன்மலை நாடன்

---

க. (அ) "மறுபிறப்பறியாதது மூப்பன்று" முதுமொழிக். ௫௦; (ஆ) "மூத் தாலு, நன்கறியார் தாமு' நனியுளர்" பழ. ௩௯௯.

உ. (அ) "வகுத்தலும் வல்லதரசு" (ஆ) "அறனீனு மின்பமு மீனுந் திற னறிந்து, தீதின்றி வந்தபொருள்" (இ) "உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த், தெறுபொருளும் வேந்தன் பொருள்" குறள். ௩அ௫, எ௫௪, எ௫௬. (ஈ) "கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டமே மாநிதியம், வெள்ளத்தின் மேலும்பல" நீதிநெறி. உ௯.

(பிரதிபேதம்) * இரவென்று, †உரைத்துக்காண்.

(௩) வேங்கை விரிவிட நோக்கி
*(உ)வீங்கிறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே

எ - து: நின்னுடைய மிகுதலையுடைய வருத்தத்தை யான் கூறக்கேட்டு நல்ல மலைநாடன், தோழீ! வேங்கை அலர்கின்ற காலத்தைப் பார்த்துப் பெருத்த இறையினையுடைய பணைத்தோளை வரைந்துகோடற்கு†வரும்; எ-று.

இது சுரிதகம்.

இதனால், தலைவிக்குச் செல்வமாகிய உவகை பிறந்தது.

இஃது 'ஐயிரு தலையினரக்கர் கோமான்' என ஆசிரியத்தளையும் வந்து பதினேரெழுத்தான் வந்த அடிபெற்ற ஒன்பதடித்தரவும் நான்கடித் தாழிசையுந் தனிச்சொல்லும்‡இயலென்ற இலேசால் தரவின்(௩)உள்ளுறைப் பொருளையுங் கொண்டு நின்ற நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி.

---

க. வேங்கை நன்னாளில் மலருமென்பதையும் அந்நாளில் வரைதல் மர பென்பதையும் (அ) "நன்னாள் வேங்கையு மலர்கமா வினியென" (ஆ) "வேங்கை நாளுறுபுதுப்பூ"(இ)"காரரும்பவிழ்ந்த கணிவாய் வேங்கை" நற்.உ0௬:எ.௩௧௩:௧,௩எ௩:௬.(ஈ)"வேங்கையுமொள்ளிணர் விரிந்தன, நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே" (உ) "நன்னாட் பூத்த நாகிள வேங்கை" (ஊ) "நன்னாள் வேங்கைவீ"(எ)"மன்றவேங்கை மணநாட் பூத்த, மணியே ரரும்பின் பொன்வீ" அகம். உ: ௧௬ - எ, அ௫: ௧0, ௧௩௩: ௪, உ௩உ: எ - அ (ஏ) "இளவேங்கை நாளுரைப்ப" (ஐ) "நாள்வேங்கை பொன்விளையு நன்மலை நன்னாட்" (ஒ)"நாள்வேங்கை. நீழலுள்" திணைமா. ௧அ, உ0, ௩௧. (ஓ) "கணிநிறவேங்கை" திணை மொழி. ௯. (ஔ) "பன்னாளு நின்ற விடத்துங் கணிவேங்கை, நன் னாளே நாடி மலர்தலால்" பழமொழி. ௧உ0. (ஃ) "கணிவளர் வேங்கை" தே. (அஅ) "கணித்தொழில் புரியும் வேங்கை"............ (ஆஆ) "நன்னாட்பூத்த பொன்னிணர் வேங்கை" (இஇ) "நன்னாள் வேங்கைப் பொன்னேர் புதுமலர்' (ஈஈ) "பிணியவிழ்ந்து நன்னாளாற் பூப்பனவும் வேங்கை" யா - வி. சூ. ௬, ௧௬, ௩எ, மேற்கோள். (உஉ) "கடிநாள் வேங்கையும்"(ஊஊ)"கணிவாய்வேங்கையும்" பெருங். (௧) ௫0: உ௬. (உ) உ௩: ௫௯. என்பவற்றுலுணர்க.

உ. (அ)"வீங்கிறைத்தடைஇய வமைமருள் பணைத்தோள்" பதிற். ௫௪: ௩. (ஆ) வீங்கிறைப் பணைத்தோண் மடந்தை. புறம். ௩௫௪: ௯.

௩. (அ)"இமயவில்வாங்கியவீர்ஞ்சடையந்தணனென்னுங்குறிஞ்சிப்பாட்டி னுள் 'கோடுபுய்க்'கல்லா துழக்கு நாடன்' என்று உள்ளுறை யுவமத் தாற் றலைவியதுவிழுமங்கூறக்கொழுநன் (?)மலைநாடனெனவைத்தமை யின் அது தரவியலொத்ததாயிற்று" என்பர்பே;தொல்.செய்.சூ.௧௩எ.

(பிரதிபேதம்) * வீங்கிழைப், † வருமென வரைவுமலிந்து கூறினள், ‡ அயலென்றஇலேசால்.

(௩௬.) (க)காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவா
டாமரைக் கண்புதைத் தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலா
னீணாக நறுந்தண்டார் தயங்கப்பாய்ந் தருளினாற்
பூணாக முறத்தழீஇப் போதந்தா னகனகலம்
வருமுலை புணர்ந்தன வென்பதனா லென்றோழி
யருமழை தரல்வேண்டிற் றருகிற்கும் பெருமையளே;

எ அவனுந்தான், ஏன லிதணத் தகிற்புகை யுண்டியங்கும்
வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத்
தேனி னிறாலென வேணி யிழைத்திருக்குங்
கானக நாடன் மகன்;

கக சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
வள்ளிகீழ் வீழா வரைமிசைத் தேன்றொடா
கொல்லை குரல்வாங்கி யீனா மலைவாழ்ந
ரல்ல புரிந்தொழுக லான்;

கரு காந்தள் கடிகமழுங் கண்வாங் கிருஞ்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர்
தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலாற் றன்னையருந்
தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்;

எனவாங்கு,

௨௦ அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
வென்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்;

௨௨ அவருந், தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்
தொருபக லெல்லா முருத்தெழுந் தாறி
யிருவர்கட் குற்றமு மில்லையா லென்று
தெருமந்து சாய்த்தார் தலை;

---

(ஆ) "'இமயவில் ..நாடகேள்' என்ற இதன்உள்ளுறையுவமத்தால்தலைவி விழுமங் கூறி அதனையுமுடன்கொண்டு சுரிதகத்து 'நின்னுறு........ கொளற்கே' எனக் கூறுதலான் இயலென்ற இலேசால் தரவின் பொருள் கொண்டிற்ற சுரிதகம் வந்தது" தோல். செய். சூ. க௩௭.

க. இச்செய்யுள் இன்னதின்னதற்கு மேற்கோளென்பது இதனுரை யிறுதிக் குறிப்பிற் காணப்படும்.

உசு தெரியிழாய் நீயுநின் கேளும் புணர
வரையுறை தெய்வ முவப்ப வுவந்து
குரவை தழீஇயா மாடக் குரவையுட்
கொண்டு நிலைபாடிக் காண் ;

௩0 நல்லாய்,
நன்னா டலைவரு மெல்லை நமர்மலைத்
தந்நாண்டாந் தாங்குவா ரென்னோற் றனர்கொல்;

௩௩ புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றி
னனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றோ
நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றோ;

௩எ விண்டோய்கன் னாடனு நீயும் வதுவையுட்
பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ
பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ;

சக மைதவழ் வெற்பன் மணவணி காணும்ற்
கையாற் புதைபெறூஉங் கண்களுங் கண்களோ;
என்னைமன், நின்கண்ணாற் காண்பென்மன் யான்;
நெய்த லிதழுண்கண், நின்கண்ணா தென்கண் மன;

எனவாங்கு;

சசு நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக
வேய்புரை மென்றோட் பசலையு மம்பலு
மாயப் புணர்ச்சியு மெல்லா முடனீங்கச்
சேயுயர் வெற்பனும் வந்தனன்
பூவெழி லுண்கணும் பொலிகமா வினியே.

இது "முன்னிலை யறனெனப் படுதலென் றிருவகைப், புரைதீர் கிளவி தாயிடைப்புகுப்பினும்" என்னும்(க)விதிபற்றித்(உ)தமர் வரைவுமறுத்

க. தொல். களவியல், சூ. உ௩.

உ. இக்கிளவியின் செய்திவிரிவை, சீவகசிந்தாமணி. க0சசு - சுஉ - ம் செய்யுட்களானுணர்க.

துழித் தோழி தாயர்க்கு அறத்தோடு நிற்ப, அவள் நற்றாய்க்கு அறத்தோடு நிற்ப, அவள் தன்னையர்முதலியோர்க்கு அறத்தோடுநிற்ப,அவரும் ஒருவாற் றன் *உடன்பட்டமை தோழி தலைவிக்குக் கூறி, தானும் அவளும் வரைவு கடிதின் முடிதற்பொருட்டு வரையுறை தெய்வத்திற்குக் குரவையாட அவன் வரையவருகின்றமை தோழி தலைவிக்கு உரைத்தது.

இதன் பொருள்.

(ரு-சு.) (க)காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவா
(உ)டாமரைக் கண்புதைத் தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலா
னீணுக †நறுந்தண்டார் தயங்கப்பாய்ந் தருளினாற்
(ங)பூணுக முறத்தழீஇப் ‡போதந்தா ||னகனகலம்

---

க. (அ) "திணிநிலைக் கடம்பின் திரளரை வளைஇய, துணையுறை மாலையிற் கைபிணி விடேஎ, நுரையுடைக் கலுழிப் பாய்தலி னுரவுத்திரை, யருங் கரை வாழையி னடுங்கப் பெருந்தகை,யஞ்சி லோதி யசையல் யாவது, மஞ்ச லோம்புநின் னணிநல நுகர்கென" குறிஞ். களசு - கஅக.

(ஆ) "முன்னிலை யறனெனப் படுதலென் றிருவகைப், புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்"என்புழி,"புனறரு புணர்ச்சியும் பூத்தருபுணர்ச் சியும் களிறுதரு புணர்ச்சியும் போல்வன செவிலிக்குக் கூறி அவள் நற்றாய்க்குக்கூறுதலை நிகழ்த்துவித்தலாம். எனவே அவள் தந்தைக்குந் தன்னையர்க்கும் உணர்த்துதலும் அதனை மீண்டுவந்து தலைவிக்கு உணர்த்துதலும் பெற்றாம். அவ் வறத்தொடுநிலை எழுவகைய எனப் பொருளியலிலும் கூறுப"என் றுகூறி 'காமர்கடும்புனல்......சாய்த்தார் தலை' என்பதை மேற்கோள்காட்டி, "புனறரு புணர்ச்சியாற் றோழி செவிலிக்கு அறத்தொடு நிற்ப, செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநிற்ப, அவள் ஏனையோர்க்கு அறத்தொடு நின்றவா று காண்க" என்பர். நச். தொல். களவி. சூ. உங. (இ) புனல்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றற்கு,"காமர்........பெரு மையளே" என்பது மேற்கோள்; இறை. சூ. கடு; நாற்கவி. சூ. களஎ. (ஈ) எதிடு தலைப்பாடு என்பதற்கு யாதானுமோரேதுவை இடையிட்டுக்கொண்டு தலைப்பட்டமை கூறு தல் என்று பொருள்கூறி இப்பகுதியை மேற்கோள்காட்டி, 'இது புனலிடை உதவினானெனத் தலைப்பாடு கூறியது' என்பர். இளம். தொல். களவி. சூ. உங. (உ) கட்டளை யடியல்லாத கலியடிக்கண் நேரீற்றியற்சீர் வருதற்கு,"காமர்கடும்புனல் கலந்தெம்மோடாடுவாள்" என்பது மேற்கோள். தொல். செய். சூ. உடு. பே.

உ. இவ்வடியை நாற்சீரடியாகக் கொள்ளின் மோனை நயமுறும்.

ங. வேட்கையுரைத்தலென்னும் அறத்தொடு நிலைக்கு, "பூணுக...போதந் தான்" என்பது மேற்கோள். தொல். பொருளி. சூ. கங. நச்.

(பிரதிபேதம்) * உடம்பட்டமை, † நறும்பைந்தார், ‡ போத்தந்தான், || அவனகலம்.

வருமுலை புணர்ந்தன வென்பதனு லென்றோழி
(க)யருமழை*தரல்வேண்டிற் (உ) றருகிற்கும் (ந)பெருமையளே

எ-து: எம்மோடேகூடி விருப்பத்தையுடைய(ச)கடிய நீரையாடுகின்றவள் கால்தளர்ந்து அஞ்சித் தாமரைபோலுங் கண்ணைப் புதைத்து அந்நீரோடே போகையினுலே தனக்குச்சென்ற (ரு)அருளினுலே நீண்ட சரபுன்னைப் பூவாற் கட்டின நறிய குளிர்ந்த மாலை அசையும்படி அந்நீரிலே குதித்துப் பூணினை யுடைய இவள் மார்பைத் தன்மார்போடே உறும்படி அணைத்துக்கொண்டு கரையிலே போதவிட்டவனுடைய அகன்ற மார்பை இவளுடைய எழுகின்ற முலைகள் கூடினவென்று பிறர் கூறுகின்ற கூற்ருலே என்னுடைய தோழி நமக்கு அரியமழையைப் பெய்விக்க நாம் விரும்பில் அதனை நமக்குத் தரவல்ல கற்பின் பெருமையளாயினுள்; எ - று.

எ (கூ)அவனுந்தான், ஏன லிதணத் தகிற்புகை யுண்டியங்கும்
(எ)வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத்

---

க. "வான்றருங் கற்பினுள்" கலி. கசு: உ௦. என்பதும் அதன் குறிப்புக் களும் "மழைவளந்தரு கற்பினர்" விநாயக. திருநாட்டுப். எ௦. என்பதும் ஈண்டு உணர்தற் பாலன.

உ. கில், ஆற்றலுணர்த்துவதோர் இடைநிலை.

ந. "மாரி, வறப்பிற் றருவாரு மில்லை" (நாலடி. க௦ச.) என்றிருப்பவும் அதுதருஞ் சிறப்புப்பற்றி 'பெருமையள்' என்ருர்.

ச. கடும்புனல் - மிக்கபுனலென்பர், இளம்; தொல். உரி. சூ. அ௦.

ரு. அருள் இன்னதென்பதை இந்நூற்பக்கம் உஅ; ந-ஆம் குறிப்பாலறிக.

கூ. (அ) 'இருபாற் குடிப்பொரு ளியல்பின் கண்ணும்' என்புழி 'அவனுந் தான்......உரைத்தாள்யாய்' என்பவற்றை மேற்கோள்காட்டி, 'தோழி தான் கூறிய இருபாற் குடிப்பொருளைக்கூறிச் செவிலி அறத்தொடு நின்ருளெனக் கொண்டெடுத்து மொழிந்தவாறு காண்க' என்பர். நச். தொல். களவி. சூ உச. (ஆ) 'அவனுந்தான்.........நாடன்மகன்' என்பது பிறப்பொப்புமைக்கும் தொல். மெய்ப். சூ. உரு: பே. (இ) இடை நின்றகொச்சகம் ஈற்றடி குறைந்ததற்கும் தொல். செய். சூ. கருரு. பே. மேற்கோள். (ஈ) கலிப்பாவின் அளவடிக்கண் சீர்கூனுய் வருதற்கு "அவனுந்தான்...........இயங்கும்' என்பது மேற்கோள். தொல். செய். சூ. சக. பே.

எ. (அ) "வானூர்மதியம்" நாலடி. கஉரு; (ஆ) சிலப். கூ: நஎ; (இ) தொல். செய். சூ. கருந. பே. மேற். (ஈ) ஊர்தல், போதலென்னும் பொருளில் வருதற்கு "வானூர் மதியம்" என்பது மேற்கோள். சீவக. உஅகூ.

(பிரதிபேதம்) * தான்வேண்டின்.

(௩)தேனி னிருளென *வேணி யிழைத்திருக்குங்
கானக நாடன் மகன்

எ - து: இவளேயன்றி அவன்றானும் தினைப்புனத்திலிட்ட பரணிட்டத்து எரிந்த அகிலின் புகையாலுண்ணப்பட்டு ஒளிமழுங்கித் திரியும் மதியம் வானிடத்தேசென்று அம்மலைத்தலையிலே தங்கிற்றாயின் (உ) அதனை அந்தமலையில் வைத்த தேனினது இருளென்றுகருதி அதனை அழித்தற்குக் (௩) கண்ணேணி முதலியன சமைத்திருக்குங் காடு அகன்ற நாட்டையுடையவன்மகன்; எ - று.

மிக்க ஒளியினையுடைய மதி புகையால் மாசுண்ட தன்மைபற்றித் தங்கை யகப்படுத்திப் பயன்கொள்ளக்கருதும் நாடனெனப் புகழ்மிக்க தலைவனும் புனலிடைத் தழுவிப்†போதந்ததனாற் சிறிது புகழ்குறைந்தமை பற்றி யாமும் அவன் வரைந்துகொள்ளக் கருதுகின்றேமென உள்ளுறையுவமங் கொள்க.

இதனால், தலைவன் ‡நங்குலத்தினும் உயர்ந்தானென்பது தோன்றக்கூறினாள். இது ||பிறப்பொப்புமை கூறிற்று.

௧௧ (௪) ÷சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
வள்ளிகீழ் வீழா வரைமிசைத் தேன்றொடா

---

௧. கண்ணேணி யிழைத்துத் தேன் கொள்ளுதல் மரபு; இதனை "கலைகை யற்ற காண்பி னெடுவரை, நிலைபெய் திட்ட மால்புநெறி யாகப், பெரும்பயன் றொகுத்த தேங்கொள் கொள்ளை, யருங்குறும் பெறிந்த கானவர்" மலைபடு. ௩௧௫ - அ. என்பதனாலுமுணர்க.

உ. (அ) "மதியம் இருல்போலத் தோன்றுமென்பதனை இருல் மதிபோலத் தோன்றுமென்னும் பொருளுள்ள கலி. ௪உ: உஉ - ௩ - ஆம் அடிகளாலும் அவற்றின் குறிப்பாலுமுணர்க. (ஆ) மதியம் - பூரணசந்திரன்; இதனை, (க) "குடமுதற் றோன்றிய தொன்றுதொழு பிறையின், வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றங், குணமுதற் றோன்றிய வாரிருண் மதியிற், றேய்வன கெடுகநின் றெவ்வ ராக்கம்" மது. ௧௯௩ - ௬. (உ) "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும் - வரிசையால், வானூர்மதியம்போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" நாலடி, ௧உ௫. (௩) "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப், பின்னீர பேதையார் நட்பு" குறள். எ௮உ. எனத் தெளிவுறக் கூறுதலாலும்: (௪) "மதி நிறைவுபோ னிலையாது" கலி. ௧எ: எ. என்பதனாலும் அதன் அடியிலுள்ள பிற குறிப்புக்களாலும் உணர்க. இஃது இம்மரபு கடந்தும் வரும்.

௩. கண்ணேணி - கணுக்களிலேயே அடிவைத்து ஏறி யிறங்கும்படி அமைத்துள்ள மூங்கில்; கண் - கணு.

௪. (அ) "காமர் கடும்புனல்" என்னுங் கொச்சகக்கலியுள், 'சிறுகுடியீரே சிறுகுடியீரே' எனவோரடியாற் கூன்வந்தவாறு காண்க. என்பர், குண

(பிரதிபேதம்) * எண்ணி, † போத்தந்ததனால், ‡ தங்குலத்தினும், || புறம்பொப்புமை, ÷சிறுகுடிஇரே.

கொல்லை குரல்வாங்கி யீனு மலைவாழ்ந
ரல்ல புரிந்தொழுக லான்

எ - து: சிறுகுடியிலுள்ளீர் ! சிறுகுடியிலுள்ளீர்; *இம்மலையில் வாழ்வார் இங்ஙனம் உதவியார்க்குக் கொடுக்க நினையாது நொதுமலர்க்குக் கொடுக்க நினைந்து அறமல்லாதன வற்றை விரும்பி ஒழுகுகையினாலே இனி இவ்விடத்து வள்ளியும் கிழங்கு கீழ் (க) விழா; † மலைமிசையில் தேனுந் தொடா; கொல்லையில் தினைகளுங் கதிர்பறிந்து ஈனுவாம் ; எ - று.

கரு (உ)காந்தள் கடிகமழுங் கண்வாங் கிருஞ்சிலம்பின்
(௩)வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர்
தாம்பிழையார்(௪)‡கேள்வர்த் தொழுதெழலாற்(ரு)||றம்மையருந்
தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்

எ - து: காந்தட்பூ மணநாறும், பார்த்தவர்கள் கண்ணைத் தன்னிடத்தே வாங்கிக்கொள்ளுங் கரிய மலையிடத்து=வளைந்த மூங்கில்போலும் மெல்லிய தோளையுடைய குறவருடைய மடப்பத்தையுடையமகளிர் தாம் தத்தங் கணவரைத் தப்பாராய் அவரே(சு)தெய்வமென்று(எ)வணங்கி எழுந்திருத்தலாலே

---

சாகரர்; யா - கா. ஒழிபியல். அ. (ஆ) கூனைத் தனிச்சொல்லென் பாருமுள ரென்று கூறி, "காமர் கடும்புனலென்னுங் கலியினுள் 'சிறுகுடியீரே' என ஓரடியாலே தனிச்சொல்வந்தது" என்பர். பெருந்தேவனார்;வீர.யாப்பு. கரு.'சிறுகுடியீரே சிறுகுடியீரே' சிலப்.உச:கக.

க. (அ)"விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை" மலை. கஉஅ. (ஆ) "கிழங்குகீழ் வீழ்ந்து தேன்மேற் றூங்கிச், சிற்சில வித்திப் பற்பல விளைந்து, தினைகிளி கடியும் பெருங்கன் னாடன்" நற். ௩உஅ: க-௩.(இ)"கொழுங்கொடி வள்ளிக் கிழங்குவீழ்க் கும்மே" புறம்.கOகூ.

உ. (அ) "சிலம்புடன் கமழு மலங்கு குலைக் காந்தள்" குறுந். உ௩கூ. (ஆ) "நறுந்தண்சிலம்பி னறுகுலைக் காந்தள்" ஐங். உஉசு.

௩. (அ) "வாங்கமை மென்றோள் வசையின் மகளிர்" பதிற். கஉ. உஉ-௩. (ஆ) "வாங்கமை மென்றோட் குறவர் மகளிரேம்" திணைமொழி. அ. (இ) "வாங்கமைமென்றோண் மடந்தை" நாற். கு. க௩கூ. மேற்கோள். "கண் ணுஞ்".

௪. "கொழுநற் றொழுதெழுவாள்." குறள். ருரு.

ரு. "கானவர் வார்விற் கணைபிழை யாதகண் ணார்சிலம்பன்" தஞ்சை. களவு. ௩கூஉ.

சு. இந்நூற்பக்கம் சுக: உ- (ஆ, இ) என்பவற்றின் குறிப்புப் பார்க்க.

எ. தொழுதெழல் எழுந்து தொழலென்று முன்பின்னாகப் பொருள்படுமென்றும் எழுதல், துயிலொழிதலென்றும் கூறுவர்,பிரயோக விவேக.

(பிரதிபேதம்) * இம்மலைவாழவார். † மலையிற்கு மிசையில், ‡ கொள்வர், || தன்னையரும்.
= வணர்ந்த, வளர்ந்த.

அவர்தம் ஐயன்மார்தாமும் தாம் தொடுத்த அம்புகள் இலக்குத்தப்பாராயினர் ; எ - று.

என்றது, விளைவின்றேல் வேட்டையாடியும் உணவுண்டாக்குதுமென்று கருதில் அதுவுந் தப்புமென்றாளென்றவாறு.

(௩) எனவாங்கு,

எ - து: என்று; எ - று.

ஆங்கு, அசை.

௨0 (௨)அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
வென்னையர்க் *குய்த்துரைத்தாள் யாய்

எ - து: தமர்வரைவுமறுத்துழி அறத்தொடுநின்ற என் †கூற்றைத் தாய் நெஞ்சாற்கண்டு நற்றாய்க்குத் தான் அறத்தொடுநிற்குங் கூற்றிலேபடக்(௩)கூற அதுகேட்டு (௪) அவளும் என்றமையன்மார்க்குவெகுட்சி‡பிறவாமற்செலுத்திக் கூறினள்; எ - று.

௨௨ அவரும், (௫)தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்
தொருபக லெல்லா முருத்தெழுந் தாறி

---

௧. நற்றாய் தந்தைக்குந் தன்னையர்க்கும் அறத்தொடு நிற்றற்கு "எனவாங்கு.........யாய்" என்பது மேற்கோள்; தொல். கள. சூ. ௪௭. ந.

௨. "தாயறிவுறுதல் செவிலியொடொக்கும்" என்பதற்கு 'மகள் களவொழுக்கத்தில்,செவிலிகவலுந் துணைக் கவலுதலல்லது தந்தையை யுந் தன்னையன்மாரையும்போல நற்றாய் வெகுடலிலள்'என்று கூறி,'அறத்தொடு......யாய்'என்பதைத்தாய்வெகுளாமைக்கும்"அவரும்,தெரிகணை......தெழுந்து" என்பதை அவர் வெகுண்டமைக்கும் மேற்கோள் காட்டினர், இளம்; தொல். கள. சூ. ௪௭.

௩. "இங்கிவள்போய் மலர்க்காவி னெழில்விசயற் கீடழிந்த வின்னலெல்லாஞ், சங்கெறியுந் தடம்பொருநைத் துறைவனுக்குச் செவிலியராந் தாயர் சொன்னார்" வில்லி. அருச்சுனன்றீர்த்த. ௩௩.

௪. நற்றாய் குறிப்பினன்றி யறத்தொடு நிற்கப்பெறாள். நாற். சூ. ௧௭௮.

௫. (அ) நற்றாய் அறத்தொடுநின்றவழி, தந்தையுந் தன்னையரும் முன்னர் நிகழ்ந்த வெகுட்சி நீங்கி உய்த்துக்கொண்டு உணர்வர் என்பதற்கும் தொல். களவி. சூ. ௪௯. நச். (ஆ) 'அகத்திணைக்கண் ஊரார்முதலிய அறுவகையோர்கூற்றாகப் பிறர் சொல்லி னல்லது அவர் கூறார் என்பதற்கும் தொல். செய். சூ. ௧௯௧. பே. நச். "தெரிகணை.........தலை." என்பது மேற்கோள். (இ) "வரிசிலை யிடவயி னேந்திக் கணைதெரிந், தெரியுமிழ் கண்ணினரிவரே" தமிழ்நெறி. மேற்கோள். (ஈ) "மலை

[பிரதிபேதம்] * உற்றுரைத்தாள், † கூற்றையென்றாய், ‡ இறவாமல்.

யிருவர்கட் குற்றமு மில்லையா லென்று
தெருமந்து (க)சாய்த்தார் தலை

எ - து: அதுகேட்டு அவரும் (உ)ஒரு முகூர்த்தமெல்லாம் நெஞ்சழன்று கண்சிவந்து தெரிந்த அம்புகளையும் பார்த்து வில்லையும் பார்த்து எழுந்து அலமந்து இருவரிடத்துங் குற்றமில்லையாயிருந்ததென்று சினம் ஆறித் தலை சாய்த்திருந்தார்; எ - று.

*இஃது அறத்தொடுநிலை வாய்த்தவாறு கூறியது.

௨௬ தெரியிழாய் நீயுநின் கேளும் புணர
(௩)வரையுறை தெய்வ முவப்ப வுவந்து

---

முற்றியபுயத் தாயன்னை கூறமற் றென்னையர் வான், சிலைமுற் றிய வெங் கணைதெரிந் தார்கண் சிவந்துறுத்தே" அம்பிகா. ௩௬௧. (உ) "கடுகிய விளையர் நோக்கும் கண்ணிய பொருளுமெண்ணி, யடுசிலை யழலவேந்தி யாருயிர் பருகற் கொத்த, விடுகணை தெரிந்து" சீவக. ௧௦௮௬. (ஊ) "கண்டவக் குமரனும் கடைக்கண் டீயுக, விண்டனை நோக்கித்தன் வில்லை நோக்கினன்" கம்ப. வேள்வி. ௪௮. (எ) 'கணை களை ஆராய்ந்து' எடுத்தலை, 'கணைதெரிதல்' என்பது மரபு. இதனை (க)"கணைதெரிந்து" நள. சுயம். ௯௯. கம்ப. நாகபாச. எக. பாகவதம். (க௦) மலரவன் சிருர். எ. (உ)"தெரிகணை" கம்ப. வருணனைவழி. ௩உ. நாகபாச. க௬௩. நிகும்பலைப். ௪௫; (௩) "தெரிந்த வெங்கணை." கம்ப. இராவணன்வதை. ௯௫. (௬)"தெரிசரங்கள்" (௫)"கூர்சரங்கடெரிந்தனர்" வில்லி. பதினன்காம் போர். ௪௫, க௨௮.

க. (அ) "கனைதுயர்க்கவலையாற் கணனென்பான்றலை, தனையிறக் கிட்டவர் தம்மைப் பார்த்திலன்" விநாயக. சிந்தாமணி. ககஎ. (ஆ) "நாணலைப்பத் தலை சாய்த்தார்" பூவாளூர். இந்திரன். ௪௧.

உ. (அ) "செவ்விதின் முகங்கீழிட்டுத் திருந்துரை யாடா ராகி, யிவ்வண மிரண்டு கன்ன லிருந்துளங் கலங்கி னூரே." பிரமோத்தர. உமாமகேசு வரபூசாபலம். ௩எ. (ஆ) "முனிவனு மதிதி மாது முகூர்த்தமொன் றவச மெய்தி" விநாயக. மகோற்கடர். எ௮௫.

௩. வரையுறை தெய்வமென்றது, (அ) குறிஞ்சிக் கிழவனாகிய முருகக் கடவுளை; கலி. ௫௦: கக-ஆம் அடியின் உரையையும் (ஆ) "கெழீஇக் கேளிர் சுற்ற நின்னை, யெழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே" - பிரிந்த கேளிர் வந்துபுணர்ந்து பின் நீங்காமைப்பொருட்டு மகளிர் யாழை யெழுவி நின்னைப்பாடுகின்ற பாட்டை விரும்பினேய். பரி. க௪: உ௩ - ௪, என்பவற்றையும் (இ) சிலப். உ௪: "கயிலை" "மலைமகள்" "குறமகள்" என்னும் முதலையுடைய செய்யுட்களையும நோக்குக. (ஈ)

(பிரதிபேதம்) *தெரியிழாய்.

(க)குரவை தழீஇயா மாடக் குரவையுட்
(உ)கொண்டு நிலைபாடிக் காண்

எ - து: * தெரிந்தஇழையினையுடையாய்; நீயும் நின்கணவனுங் கூடும்படியாக†இவ்வரையிலுறைகின்ற தெய்வம் மனமகிழும்படி யாம் ‡மகிழ்ந்து ||குரவையைக் கைகோத்தாடுதற்கு ÷ அக்குரவைக் கூத்திற் கொண்டுநிலைச் செய்யுளை நீபாடிக்காண்; × எ - று.

யாமென்னும் படர்க்கையுளப்பாடு, ஆயத்தை **உளப்படுத்தி நின்றது.

இது நாமக் காலத் துண்டெனத் தோழியேமுறு கடவுளேத்தியது (௩) ஒருவர் கூற்றினை ஒருவர் கொண்டுகூறுதலிற் கொண்டுநிலையாயிற்று.

ரு.0　　　　நல்லாய்,
நன்னாடலைவரு மெல்லை நமர்மலைத்
தந்நாண்டாங் தாங்குவா ரென்னோற் றனர்கொல்

எ - து: அதுகேட்ட தலைவி, நல்லாய், நம்மை வரைந்துகொள்ளும் நல்ல நாள் நம்மிடத்தே வருமளவில் நஞ் சுற்றத்தார் தம்மலையிடத்து நாணைத் தாங்குவார் தாம் என்ன நல்வினையைச் செய்தார்கொலென்றாள்; எ - று.

சுற்றத்தாரிடை ††வரைதலாற்பிறந்தநாண் தாங்கலரிதென்றாள்.

ருரு (௪)புனவேங்கைத்‡‡தாதுறைக்கும் பொன்னறை முன்றி
னனவிற் புணர்ச்சி நடக்குமா |||மன்றோ

---

"விடர்முகை யடுக்கத்து விறல்கெழு சூலிக்கு" குறுந். உகஅ. என்பதனால் கொற்றவையை யென்றுமாம். (உ) இளம்பூரணர், குறிஞ்சிக்குக் கொற்றவையும் தெய்வமென்பர்.

க. குரவை, இங்கே குன்றக்குரவை.

உ. "கொண்டு நிலைபாடி யாடுங் குரவையை" சிலப். (உச.)

௩. தொல். கற்பி. சூ. ௫. நச். இப்பகுதியுரையில் "'தெரியிழாய்......காண்' எனத் தான்பராய தெய்வத்தினைத் தோழி கற்புக்காலத்துப் பரவுக்கடன் கொடுத்தற்கு எத்தியவழித் தலைவனுமேத்துதலாம்" என்பது காணப்படுகின்றது.

௪. வெண்கலியுறுப்பு நிலையொத்துப் பாவேறுபடுங் கொச்சகத்து, இடைநின்ற கொச்சகம் ஈற்றடி குறையாது வந்ததற்கு, "புனவேங்கைத் ..............கடிது மாமன்றோ" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. கடுரு. பே.

(பிரதிபேதம்) * என வறத்தொடு நிலைவாய்த்தவாறு கூறிப் பின்னர்த் தெரிந்த, † இவ்வரையுறைகின்ற, ‡ மகிழ்ந்து கைகோத்து, || குரவைக்குக் கை. ÷ அக்குரவைக் கூத்திற்குக், × என்றாள், ** உளப்படுத்திற்று, †† வரைவால், ‡‡ தாதுகுக்கும், ||| என்றோ.

(௧)நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமா *மன்றே

எ - து: புனத்தினின்ற வேங்கைப்பூவிற் பொன்போன்ற தாது உதிரும் பாறையையுடைய முற்றத்தே வெளியிலே உண்டாங் கூட்டமும் ஒப்பில் நடக்குமல்லவோ? அந்நனவிற் புணர்ச்சி நடந்ததாக அப்பொழுதே கனவிடத்தே உண்டாய்ப்போதுங் கூட்டத்தைப் போக்கிவிடுவேமல்லவோ? †எ - று.

நனவினும் புணர்ச்சி கனவினும் புணர்ச்சியென ஆமென்பனவற்றைக் கூட்டுக, நடக்கலுமென்றது உம்மீற்றுவினையெச்சம்; விரைவுதோன்ற நின்றது.

"வரைவுதலைவரினும்" (உ) என்பதனல் தலைவி தன்வயினுரிமையும் அவன் வயிற்‡பரத்தையுந் தோன்றக் கூறினள்.

---

௧. "நனவிற்புணர்ச்சி நடக்கலுமாங்கே" என்பது (அ) "அன்னமரபிற் காலங்கண்ணிய, வென்னகிளவியு மவற்றியல்பினவே" என்பதனாற் கொள்ளப்படும் வினையெச்சங்களுள் உம்மீற்று வினையெச்சத்துக்கு, மேற்கோள். தொல். வினை. சூ. ௩உ. சே. சூ. ௩௫. தெய். (ஆ) இதனை ஒன்றென முடித்தலாற் கொள்கவென்பர் கல்லாடர்; தொல். வினை. சூ. ௩0. (இ) "வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய" என்பதனாற் பெறப்படும் என்பர். நச்; தொல். வினை. சூ. ௩௧. (ஈ) செய்து செய்பு என்னுஞ் சூத்திரத்து 'இன்ன' என்றதனல் அடக்கிக் கொள்க வென்பர், மயிலைநாதர்; நன். வினை. சூ. உ௪.(உ)வினையெச்சங்களுள் இன்னீறு உம்மீருய்த்திரிந்ததென்பர், இ - வி. நூலாசிரியர்; இ - வி. சூ. உ௪௬. (ஊ) 'நனவு, போர்க்களத்தையும் அகலத்தையும் உணர்த்துவதுமன்றிச் சாக்கிர அவத்தையையு முணர்த்துமென்பதற்கு மேற்கோள்காட்டுவர், இராமாநுச கவிராயர்; நன். உரி. சூ. ௧அ.

(எ)"கனவுதொறு மிவள்காமக் கனிநுகர்வா ளாகவந்தக் கனவிற்கூட்ட, நனவிலுறு புணர்ச்சியிலு மளவிறந்த நன்னலமே நல்குமன்றே." ப்ரமோத்தர. உமாமகேசுவரபூசாபலம். ௧௧.

௨. தொல். களவு. சூ. உ0. இப்பகுதிக்கு நச்சினர்க்கினியர் களவு வெளிப்பட்ட பின்னராயினும் வெளிப்படு முன்னராயினும் வரைந்தெய்துதற் செய்கை தலைவன்கண் நிகழின் ஆண்டு முற்காலத்து நிகழ்ந்த ஆற்றாமை பற்றித் தன்வயினுரிமையும் அவன்வயிற் பரத்தைமையும்படத் தலைவி கூற்று நிகழுமென்று கூறி அதற்கு "நன்ஞடலைவரு........கடிதுமாமன்றே" என்றபகுதியை மேற்கோள் காட்டி 'நாண்தாங்கி ஆற்றுவாருமுளரோ வெனவும் கனவிற் புணர்ச்சி கடிதுமெனவும் இரண்டுங் கூறினள்' என்பர்.

(பிரதிபேதம்) * என்றே, † என்று பாடினள், ‡ பரத்தைமையும்.

௩௭ (க)விண்டோய்கன் னாடனு நீயும் வதுவையுட்
(உ)பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ
பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ

எ - து: அதுகேட்ட தோழி விசும்பைத் தீண்டுகின்ற மலைநாடனும் நீயும் அக்கலியாணத்தே பண்டு கண்டறியாதீர்போல மிகவும் நடப்பீரோ? பண்டு கண்டறியாதீர்போல நடந்தீருடைய பழைய உறவை யான் கண்டறியாதேன் போல மிகவும் *மறைப்பேனோ? என்றாள்; எ - று.

ஓகாரங்கள் ஐயம்.

௪௧ (௩)மைதவழ் வெற்பன் மணவணி காணமற்
கையாற் புதைபெறூஉங் †கண்களுங் கண்களோ

எ - து: மேகந் தவழும் மலையை யுடையவனுடைய மணக் கோலங் காணமற் கையாலே புதைத்தலைப் பெறுகின்ற கண்களுங் கண்களென்று கூறப்படுமோ? ‡எ - று.

௪௩ என்னைமன், (௪)நின்கண்ணாற் காண்பென்மன் யான்

எ - து: அதுகேட்ட தலைவியான் நின்கண்ணாலே மிகவுங் காண்பேனென்றாள்; எ - று.

௪௪ (௫)நெய்த லிதழுண்கண், நின்கண்ணா கென்கண் மன

க. "புதுவை போலுநின் வரவுமிவள், வதுவை நாணொடுக்கமுங் காண்கு வல்யானே" கலி. ௫௨: ௨௪ - ௫.

உ. ஓரிடைச்சொல் நிற்கின்றவிடத்தே மற்றோரிடைச்சொல்லு நிற்றலாகிய பிறிதவண் நிலையலுக்கு 'பண்டறியா.........மற்கொலோ' என்பது மேற்கோள். தோல். இடை. சூ. ௩. நச்.

௩. "கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே, கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்னகண்ணே" சிலப். (௧௭) 'பெரியவனை'

௪. (அ) "எம்மெனவரூஉங்கிழமைத்தோற்ற, மல்லாவாயினும்புல்லுவவுள வே" என்புழிஉளஎன்றதனால், சிறுபான்மைதலைவி தோழியினுறுப்பைத் தன்னுறுப்பென்று கூறுவனவும் கொள்க வென்றுகூறி அதற்கு (தோல். பொருளி. சூ. ௨௭.) நச்சினார்க்கினியரும் (ஆ) கலிப்பாவினிடையே மூச்சீரடி வந்ததற்கு (தோல். செய். சூ. ௭0.) பே. நச். இருவரும் 'நின்கண்ணாற்.........யான்' என்பதைமேற்கோள்காட்டினார்.

௫. 'தோழி தலைவியினுறப்பைத் தன்னுறுப்பென்று கூறுவதாகிய எம்மெனவரூஉங் கிழமைத்தோற்றத்திற்கு 'நெய்தலி தழுண்கண்...... மண', என்பது மேற்கோள். தோல். பொருளி. சூ. ௨௭. நச்.

(பிரதிபேதம்) * மறைப்பேனோ ஓகாரங்கள், † கண்ணுங் கண்ணுகுமோ, கண்ணுங்கண்ணோ, ‡ என்றாள்.

எ - து: அதுகேட்ட தோழி நெய்தலிதழ்போலும் மையுண்கண்ணாகிய நின்கண் மிக என்கண்ணுவதாகவென்றாள்; எ - று.

இதுவும் "தாயத்தி னடையா" என்னும் (க) சூத்திரத்தடக்கினும்.

ஏனவாங்கு,*

எ-து, என்று நாஞ்சொன்ன அக்காலத்தே; எ - று.

௪சு (உ)நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத்
(௩)தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக
(௪)வேய்புரை மென்றோட் பசலையு மம்பலு
மாயப் புணர்ச்சியு மெல்லா முடனீங்கச்

---

க. தொல். பொருளியல். சூ. உஎ.

உ. (அ) கலிக்கு உறுப்பாய்வரும் ஆசிரியம் அறுசீரடியும் ஐஞ்சீரடியு முடுகி ஒரு தொடராய் வந்ததற்கு )தொல். செய். சூ. சுஎ. நச்.) "நெறியறி...........பொலிகமாவினியே" என்பது மேற்கோள். (ஆ) 'முடுகுவண்ண மென்பது அராகந்தொடுத்த அடியோடு பிற அடிபடத் தொடர்ந்தோடுவது.' என்றுகூறி அதற்கு 'நெறியறி.........மம்பலும்' என்பதை மேற்கோள் காட்டுவர், பே; தொல். செய். சூ. உ௩௩. (இ) முடுகுவண்ணமென்பது நாற்சீரடியின் மிக்கோடி அராகத்தோடொக்கு மென்றுகூறி அதற்கு 'நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறி வனை முந்துறீஇ' என்பதனை மேற்கோள் காட்டினர், இளம்; தொல். செய்.சூ.உஉ௩. 'முடுகு'.(ஈ)இலக்கண விளக்கத்து'முடுகுவண்ணம் நாற் சீரடியின் மிக்கு ஓரடி அராகத்தோடொக்கும்? என்றிருப்பது திருத்த மானதென்று தோற்றுகிறது. இ - வி. சூ. எ௰எ. (உ) களவு வெளிப் படுப்போன் தலைவன் என்பதற்கும் (தொல். கள. சூ. ௪அ.) (ஊ) கலியில் அறுசீரடியாகிய கழிநெடிலடி வந்ததற்கும (தொல். செய். சூ. ௪௦)இதனை மேற்கோள்காட்டினர்;நச்.(எ)'நெறியறி செறிகுறிபுரிதிரிபு' என்பது முடுகுவண்ணத்திற்கு மேற்கோள்தொல். செய். சூ: உ௩௩. ந.

௩. (அ)கலிப்பாவின் ஐஞ்சீரடிவந்ததற்கு 'தகைமிகு......ரினமாக'என்பது மேற்கோள். தொல். செய். சூ. சு௩. பே. (ஆ) இதனைக் கலிக்குறுப் பாகிய ஆசிரியத்துள் ஐஞ்சீரடி வந்ததென்பர்; நச். தொல். செய். சூ. சு௩. நச்.

௪. (அ) 'வேய்புரை மென்றோள்' என்பது புரையவென்னு முவமச்சொல் மெய்யுவமத்திற்கு வருதற்குமேற்கோள். தொல். உவம.சூ. க௫.இளம் 'கடுப்ப'; (ஆ) 'வேய்புரை மென்றோள்.' குறிஞ்சி. உ௪உ.

(பிரதிபேதம்) * ஆங்கசை நெறியறி.

(௧)சேயுயர் வெற்பனும் வந்தனன்
*பூவெழி லுண்கணும் பொலிகமா வினியே

எ - து: நூனெறியாலே அறிந்த இருவருங் கூடுவதற்கேதுவாகிய முகூர்த்தம் வேறுபட்டுத் தப்புதலை ஒருகாலத்தும் அறியாத(௨)கணியை முன்னிட்டு, அழகுமிகுகின்ற தொகுத்துக்கூறுதலையும் வகுத்துக்கூறுதலையும் அறியுஞ் சான்றவர் தனக்குச் சுற்றமாக, மூங்கிலையொக்கும் நம்முடைய மெத்தென்ற தோளிற் பசலையும் ஊரிற் கூறும் அம்பலும் பொய்யாகிய †களவிற் கூட்டமு மெல்லாஞ் சேர நீங்கும்படி நீளிதாய் உயர்ந்த மலையினை யுடையவனும் வந்தான், நின்னுடைய பூவினது அழகையுடைய கண்ணும் பொலிவதாக ‡என்றாள்; எ - று.

'கானகனுடன்மகன்' 'எனவாங்கறத்.........யாய்',எனத்(௩)தோழிகூறிய இருபாற் குடிப்பொருளைச் செவிலி கூறி அறத்தொடு நின்றாளெனத் தோழி கொண்டெடுத்துமொழிந்தவாறு காண்க.

இதனால், தலைவிக்குச் செல்வமாகிய உவகை பிறந்தது.

தெய்வமஞ்சலென்பது களவிற்கும் உரித்தாகலிற் ||நங்குலதெய்வமாகிய வரை யுறை தெய்வத்திற்குக் குரவை யாடுதல் தலைவிக்கும் உரித் தாகலிற் கொண்டுநிலைபாடினாள். இஃது அறத்தொடுநிலை ஏழுவகையினுள் (௪) ÷எத்தலும் எளித்தலும்வந்தன.

இது ×தரவின்பின் 'அவனுந்தான்(௫)எனலிதணத்து' என்பது முதலிய கொச்சகங்கள்வெண்பாவாய்,'புனவேங்கை'முதலியன துள்ளலோசை விராய்த் தளைவகை ஒன்றிக் கொச்சகமாய், ஒழிந்தபாவும் மயங்கி, சுரிதகம் முடுகிவருதலாற் கலிவெண்பாவுறுப்பின் வேறுபட்ட கொச்சகம். "ஆசிரிய மருங்கினும்

---

௧. "சேயுயர்...........வினியே" என்பது களவுவெளிப்பட்டபின் வரைவு நிகழ்ந்ததற்கு மேற்கோள்; தொல். கள. சூ. ௪௯. நச்.

௨. கணிகூறும் நல்லவேளையில் வரைதல் மரபென்பது கலி. ௯௩: ௧௨-௪. ஆம் அடிகளின் குறிப்பிற்காணப்படும்.

௩. இந்நூற்பக்கம், ௨௧௮, ௬: (அ) குறிப்புப் பார்க்க.

௪. 'காமர் கடும்புனல்' என்பதனுள் இரண்டு (எத்தல், எளித்தல்.) வந்தன என்பர், நச்; தொல். பொருளி. சூ. ௧௩.

௫. (அ)"'காமர்......வினியே' இதனுள் 'எனலிதணத்து' என்பது முதலிய கொச்சகங்கள் வெண்பாவாய்,'புனவேங்கை'முதலியன துள்ளலோசை விராய்த் தளையொன்றிய கொச்சகமாய், ஒழிந்தபாவுமயங்கி, சுரிதகமும் முடுகிவருதலின் இது கொச்சகமாயிற்று" தொல். செய். சூ. ௧௫௫. நச்.(ஆ)"'காமர்......பெருமையளே' இதுதரவு;இதனுள் இரண்டாமடி ஐஞ்சீரான்வந்தது. 'அவனுந்தான்......மகன்' இதனுள் முதற்க

(பிரதிபேதம் * போதெழில், † கனவிற், ‡ எனவரைவு மலிந்தமை கூறினாள், || தங்குலத் தெய்வம், ÷ எளித்தலும் எடுத்தலும், வந்தது, × தரவும் அவனுந்,

வெண்பா மருங்கினு,மூவகை யடியு முன்னுத லிலவே" (க)என்பதனுள் முன்னுதலில என்றதனுல் நாற்சீரும் ஐஞ்சீரும் அறுசீருமாகிய மூன்றடியானும் வரும் முடுகியலோடு விராய்த் தொடர்ந்து ஒன்ருய்க் கலிக்குறுப்பாய் வரும் ஆசிரியமும் வெண்பாவும் உளவென்று கொள்க: என்றலின், 'நெறியறி ...........முந்துறீஇ' என அறுசீரடி முடுகியலும் 'தகைமிகு...........மாக' என ஐஞ்சீரடி முடுகியலும் *விராய ஆசிரியச்சுரிதகம் வந்தது. "முச்சீர் முரற்கையு ணிறையவுநிற்கும்"(உ)என்பதனுன்,'நின்கண்ணுற்காண்பென்மன்யான்' என முச்சீரடியும் வந்தது. (ங)

(௪௦.) அகவினம் பாடுவாந் தோழி யமர்க்க
ணகைமொழி நல்லவர் நாணு நிலைபோற்

---

ணின்றது கூன். 'சிறுகுடியீரே......தொழுகலான்.' இதனுள் முதல் ஆசிரியவடி.'காந்தள்......கோல்'இவைமூன்றங் கொச்சகமெனப்படும். 'எனவாங்கு.' தனிச்சொல். 'அறத்தொடு.........யாய்' இது வெள்ளைச் சுரிதகம். 'அவருந்.........காண்.' இவையிரண்டுங் கொச்சகம். 'நல்லாய்.' தனிச்சொல். 'நன்னுட்டலைவரு...........தனர்கொல்.' இது பேரெண். 'புனவேங்கை........மற்கொலோ.' இவையிரண்டுந் தாழிசை. 'மைதவழ்......கண்ணுகுமோ' இதுபேரெண். 'என்னைமன்...மன' இதுவுங்கொச்சகம். 'எனவாங்கு' தனிச்சொல். 'நெறியறி...வினியே' இதுசுரிதகம். இதனுள்முதலடி அறுசீர்முடுகியல். இரண்டாவது ஐஞ்சீர் முடுகியல். இவ்வாறு வருவன கொச்சகக் கலிப்பாவெனப்படும்" தொல். செய். சூ. க௪எ. இளம். 'தரவும் போக்கும்' (இ) "வேட்கைத் தோற்றத் தலைமகனில்லாதவழித் தோழிகூற்றுநிகழும்; அது 'காமர் கடும்புனல்' என்னும் பாட்டினுட்காண்க" தொல். பொருளி சூ. கங. இளம். (ஈ)"காமர்கடும்புனல்.........டாடுவாளென்னுங் கொச்சகக்கலியுள்ளும் நேரீற்றியற்சீர் வந்தது" யா - வி. சூ. கரு. (உ)"காமர்...... ......டாடுவாளென்னும் மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவினுள் வெண்பாவும் ஆசிரியப்பாவும் மயங்கிவந்தன" யா - வி. சூ. ௩௦; யா - கா. ஒழிபியல், ௪. இ - வி. சூ. எ௪ரு. (ஊ) "காமர்கடும்புனல்... ......... பொலிகமாவினியே.' இது வெள்ளைபலவும் மயங்கி ஆசிரியவடியும் விரவி வந்தமையால் அயன்மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா; இதன் முதற்கண் நேரீற்றியற்சீர் வந்தவாறு கண்டுகொள்க". யா-வி. சூ. அ௬. (எ)"வெண்பாவினேடும்ஆசிரியத்தினேடும்வந்தமயங்கிசைக் கொச்சகக் கலிப்பா 'காமர்கடும்புனல்........டாடுவாள்' என்னும் பழம்பாட்டு முதலாயின" யா-கா. செய். க௨.

க. தொல். செய். சூ. கூஎ.
உ. தொல். செய். சூ. எ௦.

(பிரதிபேதம்) * விராய் ஆசிரியச்.

றகைகொண்ட வேன்னுட் டாழ்குர லூீஇ
முகைவளர் சாந்துரன் முத்தார் மருப்பின்
வகைசா லுலக்கை வயின்வயி னேச்சிப்
பகையினேய் செய்தான் பயமலை யேத்தி
யகவினம் பாடுவா நாம்;

அ ஆய்நுத லணிகூந்த லம்பணைத் தடமென்றோட்
டேஞுறு கதுப்பினு யானுமொன் றேத்துகு
வேய்நரல் விடரக நீயொன்று பாடித்தை;

கக கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோ
லெடுத்த நறவின் குலையலங் காந்தட்
டொடுத்ததேன் சோரத் தயங்குந்தன் னுற்று
ரிடுக்கண் டவிர்ப்பான் மலை;

கரு கல்லாக் கடுவன் கணமலி சுற்றத்து
மெல்விரன் மந்தி குறைகூறுஞ் செம்மற்றே
தொல்லெழி றேய்ந்தார் தொலையி னவரினு
மல்லற் படுவான் மலை;

கசு புரிவிரி புதைதுதை பூத்ததைந்த தாழ்சினைத்
தளிரன்ன வெழின்மேனி தகைவாட நோய்செய்தா
னருவரை யடுக்கநா மழித்தொன்று பாடுவாம்;

உஉ விண்டோய் வரைப்பந் தெறிந்த வயாவிடத்
தண்டா முருவி யரமகளி ராடுபவே
பெண்டிர் நலம்வெளவித் தண்சாரற் றுதுண்ணும்
வண்டிற் றுறப்பான் மலை;

உசு ஒடுங்கா வெழில்வேழம் வீழ்பிடிக் குற்ற
கடுஞ்சூல் வயாவிற் கமர்ந்து நெடுஞ்சினைத்
தீங்கட் கரும்பின் கழைவாங்கு முற்றுரி
னீங்கல மென்பான் மலை;

எனநாம்;

ருக தன்மலை பாட நயவந்து கேட்டருளி
மெய்ம்மலி யுவகையன் புகுதந்தான் புணர்ந்தாரா
மென்முலை யாகங் கவின்பெறச்
செம்மலை யாகிய மலைகிழ வோனே.

இது தோழியுந் தலைமகளுந் தலைமகனது மலையை வாழ்த்திப் பாடுகின்ற *வள்ளைப்பாட்டில், தோழி இயற்படமொழியத் தலைமகள் இயற்பழித்தமை, தலைமகன் சிறைப்புறமாகக் கேட்டு வரையவருகின்றமை, தோழி தலைமகட்கு உரைத்தது.

இதன் பொருள்.

அகவினம் பாடுவாந் தோழி யமர்க்க
ணகைமொழி (க)நல்லவர் நாணு நிலைபோற்
றகைகொண்ட வேலலுட் டாழ்குர லுரீஇ
முகைவளர் (உ)சாந்துரன் முத்தார் (௩) மருப்பின்
வகைசா (௪)லுலக்கை வயின்வயி னேச்சிப்
(௫)பகையினேய் செய்தான் பயமலை யேத்தி
யகவினம் பாடுவா நாம்

எ - து: தோழீ! நங் கருத்திற்கு வேண்டியவாறெல்லாம் அழைத்தேமாய்ப் பாடக்கடவேமெனத் தோழி†கூற, அதுகேட்ட தலைவி அழகுகொண்ட தினைப்புனத்தில்(௬)‡முகத்திற்குப் பொருந்தின கண்ணினையும் மகிழ்ச்சியைத் தரும் மொழியினையுமுடைய நல்ல மகளிர், நாணி இறைஞ்சும் நிலைபோல முற்றித்தாழ்ந்தகதிரைஉருவி அரும்புவளர்ந்த சந்தனமரத்தாற்செய்தஉரலிலே பெய்து,(எ)முத்துநிறைந்த யானைக்கொம்பால் வகுத்த நிறைந்த உலக்கையை

க. (அ) "புன்கதிர், கையுறு முவகையாற் பணியுங் கற்பினோர், மெய்யுறு பரிவென விளைந்து சாய்ந்தவே" கந்த. திருநாட்டு. உ0. (ஆ) "கற்பின் மகளிர்போ லொசிந்த தன்றே" திருவிளை. திருநாட்டு. உ௪. (இ) "மங்கைமையின் மிகநாணு, மாதரைப்போற்...........கதிர்முதிர்ந்து வரவரக்கீ ழிறைஞ்சுமால்" காஞ்சிப். திருநாட்டு. ௬௬.

உ. சந்தனவுரலும் தந்தவுலக்கையும்: "சந்துரற் பெய்து தகைசா லணிமுத்தம், வஞ்சி மகளிர் குறுவரே வான்கோட்டால்" சிலப். உ௯.

௩. மருப்புலக்கை: "வயக்களிற்றுலக் சோடுலக்கை" கலி. ௪க: க - உ, என்பதையும் அதன் குறிப்பையும் பாரக்க.

௪. கொடிச்சியர் மலைபாடித் தானியம் குறுதல் மரபு; "மைபடு மால்வரை பாடினள் கொடிச்சி, யையவன வெண்ணெற் குறூஉ நாடனொடு" நற். ௩எ௩: ௩ - ௪.

௫. ஊடற்கணின்றியும் தலைவனைக் கொடியனென்றற்கு, "பகையினேய் செய்தான்" என்பது மேற்கோள். தொல். பொருளியல், சூ. க௬. நச்.

௬. "அமருண்கண்" (கலி. கக௩: உ) என்பதன் உரை பார்க்க.

எ. முத்து யானைக்கொம்பிலும் பிறக்குமென்பது மரபாதலால் அதனை 'முத்தார் மருப்பு' என்றார்: இது மரபென்பதை (அ) "பெருங்

(பிரதிபேதம்: * வெள்ளைப்பாட்டில், † கூறினள். அது, ‡ அகத்திற்குப்.

என்னிடத்தும் நின்னிடத்தும் உயர்த்திக்குறுநின்று(க)மருந்தில்லாதநோயைச் செய்தவனுடைய பயன்றருகின்ற மலையை வாழ்த்தி நாம் நங் கருத்திற்கு வேண்டியவாறெல்லாம் அழைத்துப் பாடக்கடவேமென்று *உடம்பட்டாள்; எ - று.

† அகவுதல், அகவல்போல நின்றது. தோழி கூற்றினைத் தலைவி விசேடித்துக்கூறினாள்; இரட்டிப்பன்று.

மணம் நாறுகின்ற சந்தனத்தாற் செய்த உரலென்றதனாற்பயன் வரைந்து கோடற்பொருட்டுத்தலைவிஇயற்பழித்ததாகவும்,புலானாற்றத்தையும் முத்தையு முடைய மருப்பாற்செய்த உலக்கையென்றதனாற் பயன் வரைந்துகோடற் பயனின்றிப் புகழ்ச்சிமாத்திரையேயாகத் தோழி இயற்பட்டுமொழிந்ததாகவும், இறைச்சியிடத்தே பொருள்பிறந்தவாறு காண்க. இஃது "இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே, திறத்தியன் மருங்கிற் றெரியு மோர்க்கே" என்னும்(உ)பொருளியற்சூத்திரத்தானுணர்க. புலால்நாறும்மருப்பென்றதனால் வரைந்துகோடல் பயவாமையின் இறைச்சியாயிற்று. நோய்செய்தான் மலையா யிருக்கவுந் தினைவிளைத்துப் பயன்தருகின்ற அதிசயத்தை யேத்தியெனவே தலைவி இயற்பழித்தாளாயிற்று.

அ ஆய்நுத லணிகூந்த (ங)லம்பணைத் தடமென்றோட்
டேனுறு கதுப்பினை யானுமொன் றேத்துகு
(ச)வேய்நரல் விடரக நீயொன்று (ரு)பாடித்தை

---

களிற்று, முத்துடை வான்கோடு" "ஙநநு. ஙoச - ரு. (ஆ) "யானை, முத்தார் மருப்பின்" குறிஞ்சி. ஙரு - ஙசு. (இ) "யானை, முத்துடை மருப்பின்" மலை. ருகஎ - அ. (ஈ) "முத்துடைமருப்பின் மழகளிறு" பதிற்று. ஙஉ: ங.(உ) "யானை வெண்கோடு கொண்டு, நீர்திகழ் சிலம்பி னன்பொன் னகழ்வோன், கண்பொரு திமைக்குந் திண்மணி கிளர்ப்ப, வைந்நுதி வான்மருப் பொடிய வுக்க, தெண்ணீ ராலி கடுக்கு முத்த மொடு" அகம். உஅஉ: ங - எ. (ஊ) "தந்திவராக மருப்பிப்பி............ முத்த மீனு மிருபதுமே"

க. "காம நோய்க்கோ ரருமருந் தில்லை யன்றே" சூளா. கல்யாண. கசுரு.

உ. தொல். பொருளி. சு. ஙசு.

ங. அம்பணைத் தடமென்றோள். கலி. கச: க.

ச. "வேய்நரல் விடரக நீயொன்று பாடித்தை" என்பது இத்தை யென்னும் இடைச்சொல்,முன்னிலை யசையாய் வருதற்கு மேற்கோள். நன். இடை. சு. உக. மயிலை. வி. இரா. இ - வி. சு. உஎசு.

ரு. "செய்யித்தை சிவலிங்கப் பதிட்டை சிந்தையை, வையித்தை யச்சிவன் மாட்டு நீர்மலர், பெய்யித்தை பேணுமிப் பூசைப் பேற்றினாற், கொய்

[பிரதிபேதம்] * உடம்பட்டுக் கூறினாள். † அகவு அகவுதல்.

எ - து: அழகியநுதலினையும், அழகுபெறுத்துகின்ற குழலினையும், அழகிய மூங்கில்போலும் பெருமையினையுடைய மெல்லிய தோளினையுமுடைய பூமணம் நாறுங்கதுப்பினையுடையாய்! மூங்கில் ஒலிக்கின்ற முழைஞ்சையுடைய மலையை முன்புபோலன்றி நீ இயற்பட ஒன்று பாடு, பின்னர் யானும் இயற்பட ஒன்று பாடுவேனெனத் தோழி *கூறினாள்; எ - று.

பாடித்தை, முன்னிலைவினைத்திரிசொல்; எத்துகு, தனித்தன்மை முற்று.

தலைவி இயற்படப் பாடாமையின், மேல் தோழி பாடுகின்றாள்.

கக கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோ
(க)லெடுத்த நறவின் †குலையலங் காந்தட்
டொடுத்ததேன் சோரத் தயங்குந்தன் னுற்று
ரிடுக்கண் டவிர்ப்பான் மலை

எ-து: தன்னைச்சேர்ந்தாருடைய வருத்தத்தைப்போக்குவானுடையமலை, கையிரண்டையுங் குவித்துக் கொடிச்சியர் தங்குறைதீர முருகன் உறையும் மலையைத் தொழுகின்ற கைகள்போல,உயர்ந்த நறவினையுடைய கொத்துக்கள் அசையுங்காந்தளிடத்து வைத்த தேன் ஒழுகும்படியாக, அக்காந்தள் அசையாநிற்கும்; எ - று.

மலை காந்தள் அசையுமென இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்திற்கு ஏறிநின்றது.

இதனால், தெய்வத்தைத் தொழுங் கருத்தில்லாத காந்தளும் தெய்வத்தைத்தொழுவதுபோல நில்லாநின்றது. நீயும்வரைந்துகோடற்குக் குலதெய்வமாகிய முருகனைத் தொழுவாயாகவென இயற்படமொழிந்தாள். காந்தளிற் றேன் பயன்படாமற் சொரிகின்றாற்போல, நீயும் தெய்வத்தைத் தொழாவிடின் நின்னலனும் பயன்படாமற் கழியுமென இஃது உள்ளுறையுவமமாயிற்று.

---

யித்தை நினைத்தொடர் கொலையை யென்றனர்" திருவானைக்காப். நீலவிண்டு. கரு.

க. (அ) சாரியைகளைக்கூறுஞ் சூத்திரத்து,'பிறவும்' என்பதனால்மற்றும் சில சாரியைகளைக் கொண்டபின், "எடுத்த நறவின் குலையலங் காந்தளென்புழி அலமென்பதோர்சாரியையும் உண்டாலெனின், அதனை அலங்கு காந்தளென்பதன் விகாரமென்ப" என இளம்பூரணரும் "வினைத்தொகை; சாரியை அன்று" என நச்சினார்க்கினியரும் (தொல். புண. சூ. கஎ.) கூறுதலால் இதுவே பழம்பாடமென்பது புலனாகின்றது. (ஆ) "அகலிலைக் காந்த ளலங்குலைப் பாய்ந்து, பறவை யிழைத்த பல்கணிறா அற், றேனுடை நெடுவரை" நற். கஅ௫: அ - க௦. (இ) "அலங்கு குலைக் காந்தள்" நற். ௩௫௪:உ. குறுந். உ௩௯.(ஈ) "பூந்தண்சாரற் பொங்கு குலை யெடுத்த, காந்தட்கொழுமுகை" பெருங். (உ) கஉ: ௬எ - அ.

(பிரதிபேதம்) * கூறத் தலைவி.........பாடுகின்றாள். பாடித்தை. † குலையலங்குகாந்தள்.

௧௫ (௧)கல்லாக் கடுவன் கணமலி சுற்றத்து
(௨)மெல்விரன் மந்தி குறைகூறுஞ் (௩)செம்மற்றே
தொல்லெழி றேய்ந்தார் தொலையி னவரினு
மல்லற் *படுவான் மலை

எ - து: தான்கூடின மகளிருடைய இயற்கைநலங் கெடின் அவரினும் வருத்தமுறுகின்றவனது மலை, கடுவன் களவொழுக்கம் ஒழிந்து வரைந்து கொள்ளும் நிலைமையைக் கற்றுத் திரட்சிமிக்க சுற்றத்திடத்தே சென்று மகட் பேசுவார்போல மெல்லிய விரலையுடைய மந்தியை எனக்குத் †தரவேண்டு மென்று தன்குறையைச் சொல்லுந் தலைமையினையுடைத்து ; ‡எ - று.

நம் தெய்வவழிபாட்டாற் களவொழுக்கம் ஒழிந்து நம்மைவரைந்து கொள்ளத் துணிந்து நஞ்சுற்றத்தாரிடத்தே சென்று தன் குறைகூறுவ னென்று உள்ளுறையுவமங்கொள்க.

௧௬ புரிவிரி புதைதுதை பூத்ததைந்த தாழ்சினைத்
தளிரன்ன வெழின் மேனி தகைவாட நோய்செய்தா
னருவரை ||யடுக்கநா மழித்தொன்று பாடுவாம்

எ - து: முறுக்குவிரிந்த கொம்புமறைந்த நெருங்கின பூத் தாழ்ந்த சினையிற் செறிந்த தளிரையொத்த அழகையுடைய மேனி அழகுகெடும்படி நமக்கு நோயைச்செய்தவனுடைய ÷ஏறுதற்கரிய உச்சிமலைகளையுடைய பக்கமலைகளை நாம் இனிப்பாடுங்கால் இயற்படமொழிதலை அழித்து இயற்பழித்தலாகிய ஒன்றைப் பாடுவேம் ; ×எ - று.

---

௧. (அ)"கருவிரன் மந்தி, யருவிடர் வீழ்ந்ததன் கல்லாப் பார்ப்பிற்கு." மலைபடு. ௩௧௧ - ௨. (ஆ) "கருவிரன் மந்திக் கல்லா வன்பறழ்" (இ) "மந்திக் கணவன் கல்லாக் கடுவன்" (ஈ) "கல்லா மந்தி கடுவனோ டுகளும்"(உ) "கருவிரன் மந்திக் கல்லா வன்பார்ப்பு" ஐங்குறு. ௨௭௨, ௨௭௪, ௨௭௭, ௨௮௦. (ஊ) "கல்லாக் கடுவன்" அகம். ௩௫௨: ௨. என இச்சாதிக்குக் கல்லாமை அடையாகக் கூறப்படுதலும் காண்க.

௨. (அ)"பண்பினுகிய சினைமுதற்கிளவி" என்புழி, வேற்றுமைப் பொருள் பற்றிவருங்கால் உறுப்பின் கிழமை யல்லாத தற்கிழமை பயிலாது வருங் குறிப்புவினை முற்றும் உரையிற் கோடலென்பதனாற் கொள்ளப் படும்; சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தலென்பதனாற் கொள்ளினுமமையுமென்று கூறி 'மெல்விரன்...........செம்மற்றே' என்பதனை மேற்கோள்காட்டுவர். சே.(ஆ)இதுபிறிதின் கிழமையாகிய உடைமைப்பொருள்படநின்றது. என்பர், நச்; தொல். வினை. சூ. ௨௩.

௩. றகர வுகரம் குறிப்பு வினை முற்றாய்வருதற்கு, "செம்மற்று" என்பது மேற்கோள். தொல். வினை. சூ. ௨௩. கல்.

(பிரதிபேதம்) * படுப்பான், † தரவேணுமென்று, ‡ எனத்தோழி யியற்பட மொழிந்தாள், || அடுக்கனும், ÷ பெறுதற்கு, × என்றாள் தலைவி.

(க) பூத்தாழ்ந்ததளிரெனவே சுணங்கும் மாமைநிறமுங் கூறிற்றும்.

௨௨ விண்டோய் வரைப்(உ)பந் தெறிந்த *வயாவிடத்
தண்டா (௩)ழருவி யரமகளி ராடுபவே
(௪)பெண்டிர் நலம்வெளவித் தண்சாரற் றாதுண்ணும்
வண்டிற் றுறப்பான்மலை

---

க. "மாவீன்ற தளிர்மிசை மாயவ டிதலைபோ, லாயிதழ்ப் பன்மலரைய கொங்குறைத்தர"(கலி.உக: எ-அ.)என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. (அ)பசப்புறு பருவர லென்னும் குறள். ககக - ஆம் அதிகாரத்தின் அவதாரிகையில் "அது பசப்புற்ற பருவரலென விரியும்; அஃதாவது பசப்புறுதலானுய வருத்தம்; இதனை, 'பந்தெறிந்தவயா' என்பதுபோலக் கொள்க"என இத்தொடரை மேற்கோள்காட்டுவர் பரிமேலழகர். (ஆ) "வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினும்,..............உயங்கின் றன்னையென் மெய்யென் றசைஇ, மயங்குவியர் பொறித்த நுதலள்" அகம். கஎ: க-௪.

௩. (அ) "அருவி நுகரும் வானர மகளிர்" மலை. உ௯௪. (ஆ) " அமரநாடியர் துன்னியா டிடங்களும்" கம்ப. பிலநீங்கு. அ.

௪. (அ)"பெண்டிர் நலம்.....மலை" என்பதனை, புலன்பொருளாகப் பிறந்த உவகை யென்னு மெய்ப்பாட்டிற்கு, மேற்கோள்காட்டி, 'இஃது அறிவுபொருளாக உவகைபிறந்தது என்னை? முகைப்பதம் பார்க்கும் வண்டுபோலத் தலைவியரை நகைப்பதம் பார்க்கும் அறிவுடைமை காமத்திற் கேதுவாதலின்' என்பர் பே; (ஆ) இ - வி. நூலாரும் இவ்வாறே கூறுவர். (இ) "தாதுண் வேட்கையிற் போதுதெரிந் தூதா, வண்டோ ரன்னவவன் றண்டாக் காட்சி"(ஈ)"நீயே பெருநல நகையே யவனே, நெடுநீர்ப் பொய்கை நடுநா ளெய்தித், தண்கமழ் புதுமல ரூதும், வண்டென மொழிப மகனென்னாரே" (உ) "மகிழ்நன் மாண் குணம் வண்டுகொண் டனகொல், வண்டின் மாண்குண மகிழ்நன் கொண் டான் கொல்"(ஊ)"புதுவ மலர்தேரும் வண்டேபோல் யாழ, வதுவை விழவணி.........வந்தமை கைப்படுத்தேன்" (எ) "வேனிற் பருவத் தெதிர்மல ரேற்றூதுங், கூனிவண் டன்னன் குளிர்வய னல்லூரன், மாணிழை நல்லா ரிளநல முண்டவர், மேனியொழிய விடும்." (ஏ)"வண்டோரனையர் ஆடவர் பூவோரனையர்மகளிரென்பது;என்னை? வண்டுகள் தாதூதுமிடத்து நன்மலரே ஊதுவேம் அல்லாதது ஊதேமென்னு, எல்லாமலரும் ஊதும். இனி, பூவாயின 'சால எம்மையே ஊதாது எல்லாப்பூவையும் ஊதினீர்' என்று புலவாவன்றே, அது போலத் தலைமகனும் எல்லாப் பெண்பால்களையும் தலைப்பெய்தற்

(பிரதிபேதம்) * வியா.

எ-து: பெண்டிருடைய நலத்தை நுகர்ந்து,தண்ணிய மலைச்சாரலிடத்துத் தாதை உண்ணும் வண்டு அப்பூவைத் துறக்குமாறுபோல, அவரைத்

---

றன்மையாகவுடையான்; அவர்தன்மைபறிவேம் போம்பொழுது புறந்தொழுதும் வரும்பொழுது எதிர்தொழுதும் எற்றுக்கொண்டு வழிபடுதலல்லது மலைத்தற் கண்ணேமல்லம்'' (ஐ) "கழுநீர் மலரிவள் யானதன் கண் மரு விப்பிரியாக், கொழுநீர் நறப்பரு கும்பெரு நீர்மை யளிகுலமே'' (ஓ) "மணிவண் டொன்றே நலம்பருக மலர்ந்த செந்தா மரைத்தடம்போ, லணிவேன் மன்ன னலம்பருக வலர்ந்த வம்பார் மழைக்கண்ணார்'' (ஓ)"முழுநீர்ப் பொய்கையுட் பொழுதொடு விரிந்த, செழுமலர்த் தாமரைச் செவ்விப் பைந்தாது, வைகலுாதா வந்தக் கடைத்து, மெவ்வுந் தீராது நெய்தற் கவாவும், வண்டே யனையர் மாந்தரென்பது, பண்டே யுரைத்த பழமொழி'' (ஔ) "வண்டாமரை பூத்தன வொத்தனர் வந்து செந்தே, னுண்டாடிய தேன்களை யொத்தன ரோங்கன் மைந்தர்'' (௦) "கன்னிய ரளப்பிலாரைக் கடிமணஞ் செய்து கூடித், துன்னுபன்மலர்த்தே னுண்ணுஞ் சுரும்பென வின்பந் துய்த்தான்'' (அஅ) "பூவே யனையர் புரிகுழற் பாவையர் பூவில்வரு, மாவே யனையர் வரிகழற் காளையர் வாணெடுங் கண், ணேவே யனைய விலங்கிழை யாய்நின் றிரங்கலென்னே, நீவே யனைய நிரைவளைத் தோளி னிறம்பசந்தே'' (ஆஆ) "வண்டுபூ மலர்ந்துழி மதுவை யுண்பதிற், றொண்டைவா யவணலம் பருகுநாள்'' (இஇ) "நிரையிதழ்ப் பூங்கொம் பன்னார், மகிழ்தரு மின்பத் தேறன் மாந்தினன் மணிவன் டன்னான்'' (ஈஈ) "மணமலரின் வண்டு நிகர் வன்கணார்.'' (உஉ) "முத்தவிர் முறுவலு முலையுங் காண்டொறும், பித்தின னுய்மதுப் பிலிற்றித் தாதுகுந், தொத்தலர் மலர்தொறுந் துன்னும் வண்டுபோன்,மெய்த்தசீர்ப் பிறர்மனை விழைந்து மேவுநாள்'' (ஊஊ) "மாதவி யீன்ற மணிமே கலைவல்லிப், போதவிழ் செவ்வி பொருந்துதல் விரும்பிய, வுதய குமரனு முலகாள் வண்டின், சிதையா வுள்ளஞ் செவ்விதி னருந்த'' (எஎ) "அரிதுபெறு சிறப்பிற் குருகுகரு வுயிர்ப்ப, வொருதனி யோங்கிய திருமணிக் காஞ்சிப், பாடல்சால் சிறப்பிற் பரதத் தோங்கிய, நாடகம் விரும்ப நன்னலங் கவினிக், காமர் செவ்விக் கடிமல ரவிழ்ந்த, துதைய குமரனெனு மொருவண் டுணீஇய, விரைவொடு வந்தேன்.'' (ஏஏ) "நுண்டா துண்டு வறும்பூத் துறக்கு, மென்சிறை வண்டின மான.'' (ஐஐ) "நயனின் மாக்கள் போல வண்டினஞ், சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர.'' (ஒஒ)"தண்சே றடைஇய கணைக்கா னெய்த, னுண்டா துண்டு வண்டினந் துறப்ப'' (ஓஓ) "நறுந்தா துண்டு நயனில் காலை, வறும்பூத் துறக்கும் வண்டு'' (ஔஔ) "செம்பொறி வண்டவற் றயலே, நாட் டிளம்படியார் நகைமுகம் பருகுநல்லவர் போன்மலர்பருகு,மோட்டிள

துறக்கின்றவன் மலையாயிருந்தேயும்,விண்ணைத்தீண்டும் மலையிடத்தே தெய்வ மகளிர் பந்தடித்த இளைப்புப் போகத் தண்ணிய தாழ்ந்த அருவியிலே*ஆடுவர் எ - று.

இது தகாததொன்றெனத் தலைவி இயற்பழித்தாள்.

உ௬ ஒடுங்கா வெழில்வேழம் (க)வீழ்பிடிக் குற்ற
(உ) கடுஞ்சூல் வயாவிற் கமர்ந்து நெடுஞ்சினைத்
(௩) தீங்கட் கரும்பின் கழைவாங்கு முற்றுரி
ணீங்கல னென்பான் மலை

எ - து: தன்னைச்சேர்ந்தாரிடத்துநின்றும் நீங்கேனென்றிருப்பானுடைய மலை, மடிந்திராத அழகையுடைய யானை தான்விரும்பின பிடிக்கு உண்டான முற்பட்ட சூலான் உண்டான வயாநோய்க்கு மனம்பொருந்தி இனிய கண்ணிடத்தே தோன்றின நெடிய கிளைகளையுடைய கரும்பங்கோலைமுறியாநிற்கும்;† எ - று.

இது தோழி இயற்படமொழிந்தது. நம்மை முயன்று வரைந்துகொண்டு (௪)நம் வயாவிற்குத் தன்மனம் பொருந்தி நாம் ‡விரும்புமவற்றைத் தந்து மனக்குறைதீர்ப்பானென்ன உள்ளுறையுவமங் கொள்க.

---

முல்லை" (௬௯) "கயமா மலரெனுங் கன்னியை வண்டெனுங் காளை பல்புள், ளியமாமணம்புண ரீர்ந்துறை நாடர்." என முழுதும் ஒரு புடையும் ஒத்துப் பலவாறாக வருபவை ஈண்டு அறிதற் பாலன.

க. (அ) "வீழ்பிடி யளிக்கு, மையல் யானையின்" கலி. ௫௪: க௩ - ௪. (ஆ) "வீழ்பிடி" கலி. ௫௩: உ; அகம். ௩௫௬: ௧0, ௩௬உ: உ.

உ. கடுஞ்சூல். பெரும்பாண். ௩௬௫; ஐங். ௩0௬, ௩அ௬, கலி. ககO: க௪.

௩. (அ) கழையென்பது கோலென்னும் பொருளில் வருதற்கு, "தீங்கட் கரும்பின் கழைவாங்கும்" என்பது மேற்கோள்; சீவக. க௦௬௪.

(ஆ) "தீங்கழைக் கரும்பே" மலை. ககக.(இ)"கழைக்கரும்பின்" புறம். க௩எ: ௬. (ஈ) "மூரிக் கழைக்கரும்பு" சூளா. நாடு. உ௫. (உ) "கழைக் கரும்பு கண்ணுடைக்குந் தேறல்வழிந் தொழுகுவயற் காசி" காசி. சாம்பாதித்தன் கதை; கக. (ஊ) "கழைக்கரும்பு கண்ணுடைத்த சாறடுதீஞ் சுவைவிசயம்" (எ) "கழைக்கரும் புடுத்த கவிழ்தலைச் செந்நெற் கழனி" உத்தரகோச. தீர்த்தச் சிறப்பு. உ0; நளசக்கர. க௪.

௪. மகளிர் வயாவுற்றகாலத்து, அவர் விரும்புமவற்றைத் தந்து அவர் மனக்குறை தீர்த்தல் மரபென்பதை, வாசவதத்தை முதலியவர் உற்ற வயாவை உதயணன் இயக்கன் கூறியவண்ணம் பத்திராவதியின்

(பிரதிபேதம்) * ஆடுவரிது தகாததொன்றென வியற்பழித்தாள் † என இயற்படமொழிந் தாள் இதுதோழி, ‡ விரும்புவன வற்றை.

எனநாம்

௬௧ தன்மலை பாட நயவந்து கேட்டருளி
(௧)மெய்ம்மலி யுவகையன் புகுதந்தான் புணர்ந்தாரா
மென்முலை யாகங் கவின்பெறச்
செம்மலை யாகிய (௨)மலைகிழ வோனே

எ - து: என்று நாம் தன்னுடையமலையைப்பாட மலைகிழவோன் விருப்பம் வந்து கேட்டு மெய்நிறைந்த உவகையனாய் அருளிக் கனவிற்புணர்ச்சியாதலின் முயங்கியமையாத மெல்லிய முலையிணையுடைய ஆகம் அழகுபெறும்படி நீ தலைமையையுடையையாகவேண்டி வரைவொடு *புகுந்தான்; எ - று.

நமக்குப் பேரின்பத்தைத் தருகின்ற இக்களவொழுக்கம் இவட்குத் துன்பத்தைச் செய்தலின் இங்ஙனம் இயற்பழித்தாளென உட்கொண்டுவரைவொடு புகுந்தானாதலின் தலைவி இயற்பழித்தலே வரைவிற்குக் காரணமாயிற்று.

"உயர்மொழிக் குரிய வுறழுங் கிளவி, யையக் கிளவி † யாடூஉவிற் குரித்தே" (௩)என்பதனால் தோழி உறழ்ந்துகூறினாள்.

---

உதவியால் தீர்த்தன னென்பதனால் அறிக. பெருங். (௫) ௧. வயாக் கேட்டது - ௪. வயாநோய் தீர்ந்தது. வயா - கருவுற்ற மகளிர்க்கு அக்காலத்துண்டாகும் வேட்கைப் பெருக்கம்; மசக்கையென வழங்கும்.

௧. (அ) "மனையிற் புகுதரு, மெய்ம்மலி யுவகையன்" அகம். உ௭உ: ௧௧-௧௨. (ஆ) "நுமக்கே, மெய்ம்மலி யுவகை யாகின்று" நற். ௩௬: ௬-௭. (இ) "மெய்ம்மலிந் தான வுவகையே மாயினேம்" அகம். உ௬உ: ௧௨-௩. (ஈ) "மெய்ம்மலி யுவகை செய்யும்" புறம். ௪௫: ௬. மெய் மலி உவகை - உடம்பு பூரித்தற்குக் காரணமாகிய மகிழ்ச்சி.

௨. (அ) "ஆவோ வாகும் பெயருமா ருளவே, யாயிட னறிதல் செய்யு ளுள்ளே" (தொல். பெயரி. சூ. ௪௧) என்பதன் விசேடவுரையில், "ஆன் ஆள், ஆர், ஆய் என்னுமீற்றவாகிய பெயரல்லது, சேரமான், மலையமான் என்னுந்தொடக்கத்தன அவ்வாறு திரியாமையின், ஆயிட னறிதலென்றார். உழாஅன், கிழாஅன் என்பனவோவெனின்;— அவை அன்னீற்றுப்பெயர் ஒருமொழிப் புணர்ச்சியான் அவ்வாறு நின்றனவென்பது. ஆனீறுயவழி, உழவோன், கிழவோன் எனத் திரியுமாறறிக. என்று சேனாவரையர் எழுதியிருத்தலும், (ஆ) "கிழவன் 'மலைகிழவோனே' என அகரம் ஓகாரமாகி ஈரோரிடத்து வருதலும் ... ........கொள்க" என்று (நன். பொது.சூ. ௨) இராமாநுச கவிராயர் எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

௩. தொல். பொருளி. சூ. ௪௪.

(பிரதிபேதம்) * புகுந்தான்காணென வரைவுமலிந்தமைகூறினாள், † ஆடூஉக்குரித்தே.

இதனல், தலைவிக்குச் செல்வமாகிய உவகை பிறந்தது.

இது தரவும் கொச்சகங்களும் கொச்சக *வெண்பாக்களும் தனிச்சொல் லும் சுரிதகமும் பெற்று வந்த கொச்சகக்கலி. (௪)

(சக.) பாடுகம் வாவாழி தோழி வயக்களிற்றுக்
கோடுலக்கை யாகநற் சேம்பி னிலைசுளகா
வாடுகழை நெல்லை யறையுர லுட் பெய்திருவாம்
பாடுகம் வாவாழி தோழிநற் றேழிபா டற்று;

ரு இடியுமிழ் பிரங்கிய விரவுபெய னடுநாட்
கொடிவிடு பிருளிய மின்னுச்செய் விளக்கத்துப்
பிடியொடு மேயுஞ் செய்புன் யானை
யடியொதுங் கியக்கங் கேட்ட கானவ
னெடுவரை யாசினிப் பணவை யேறிக்
க0 கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலி
னிறுவரை வேங்கையி னொள்வீ சிதறி
யாசினி மென்பழ மளிந்தவை யுதிராத்
தேன்செ யிறாஅ றுளைபடப் போகி
நறுவடி மாவின் பைந்துண ருழக்கிக்
கரு குலையுடை வாழைக் கொழுமடல் கிழியாப்
பலவின் பழத்துட் டங்கு மலைகெழு வெற்பனைப்
பாடுகம் வாவாழி தோழிநற் றேழிபா டற்று;

கஅ இலங்கு மருவித் திலங்கு மருவித்தே
வானி னிலங்கு மருவித்தே தானுற்ற
சூள்பேணன் பொய்த்தான் மலை;

உக பொய்த்தற் குரியனே பொய்த்தற் குரியனே
வஞ்சலோம் பென்றுரைப் பொய்த்தற் குரியனே
குன்றக னன்னுடன் வாய்மையிற் பொய்தோன்றிற்
றிங்களுட் டீத்தோன்றி யற்று;

உரு இளமழை யாடு மிளமழை யாடு
மிளமழை வைகலு மாடுமென் முன்கை
வளைநெகிழ வாராதோன் குன்று;

உஅ வாரா தமைவானே வாரா தமைவானே
வாரா தமைகுவா னல்லன் மலைநாட

(பிரதிபேதம் * வெண்பாக்களும் சுரிதகமும்.

ணீரத்து ளின்னவை தோன்றி னிழற்கயத்து
ணீருட் குவளைவெந் தற்று;

ஙஉ மணிபோலத் தோன்று மணிபோலத் தோன்று
மண்ணு மணிபோலத் தோன்றுமென் மேனியைத்
துன்னுன் றுறந்தான் மலை;

ஙரு துறக்குவ னல்லன் றுறக்குவ னல்லன்
றொடர்வரை வெற்பன் றுறக்குவ னல்லன்
றொடர்பு ளினையவை தோன்றின் விசும்பிற்
சுடரு ளிருடோன்றி யற்று;

எனவாங்கு;

சO நன்று கின்றுற் றோழிநம் வள்ளையு
ளொன்றிநாம் பாட மறைநின்று கேட்டருளி
மென்றோட் கிழவனும் வந்தன னுந்தையு
மன்றல் வேங்கைக்கீ ழிருந்து
மணநயந் தனனம் மலைகிழ வோற்கே.

**இஃது இருவரும் இவ்வகையாற் பாடிய வள்ளைப்பாட்டுத் தலைவன் சிறைப்புறமாகக் கேட்டு, வரைவுவேண்டி விடத், தந்தையும் வரைவுடம் பட்டமை தோழி தலைவிக்கு உரைத்தது.**

**இதன் பொருள்.**

(க)பாடுகம் வாவாழி தோழி (உ)வயக்களிற்றுக்
கோடுலக்கை யாகநற் சேம்பி னிலைசுளகா
வாடுகழை *நெல்லை யறையுரலுட் பெய்திருவாம்
பாடுகம் வாவாழி தோழிநற் றோழிபா டுற்று

---

க. (அ) 'பாடுகம் வாவாழி தோழி' என்பது தன்மைப் பன்மை வினை முற்றில் அம்மீறு வருங்கால் ககரம் எதிர்கால முணர்த்தி வருதற்கும் தொல். வினை. சூ. ரு. நச். (ஆ) ககரம் சிறுபான்மை எதிர்காலம் காட்டிவருதற்கும் இ-வி.சூ. சக. நன். பத. சூ. கஎ; இரா. மேற்கோள். (இ) "பாடுகம் வாவாழி தோழியாம்" சிலப். (உச),

உ. (அ) "கொல்யானைக் கோட்டால் வெதிர்நெற் குறுவாநாம், வள்ளை யகவுவம் வா" கலி. சஉ: எ - அ. (ஆ) "வஞ்சி மகளிர் குறுவரே வான் கோட்டால்" சிலப். உக. (இ) "யானை வெண்மருப் புலக்கை யறை யுரல்" சீவக. கருசஉ. (ஈ) "எனற்குறவ ரிருங்குடிச் சீறூர், மானமர்

(பிரதிபேதம்) * நெல்லறை.

எ - து: தோழீ! வாழ்வாயாக, நாம்பாடுவேமாக வா; எங்ஙனம் *பாடுவே மென்னின், வாழ்வாயாக தோழி! இருவரும் அசைகின்ற மூங்கிலினது நெல்லைப் பாறையாகிய உரலிலே பெய்து, வலியினையுடைய யானைக்கொம்பு உலக்கையாகக் குற்று, நல்ல சேம்பினது இலை சுளகாகப் புடைத்துப் பாடுவோமாக; எ - று.

வாவென முன்கூறியதனைப் பின்னர் விசேடித்துக் கூறினாள். இதில், நற்றோழியென நின்ற சொல்லை மலைகெழு வெற்பனைப்பாடுகம் வாவென மேல்வருகின்ற உறுப்போடுங் கூட்டுக.

செய்தெனெச்சங்கள் எதிர்காலத்துப்பிறந்த செயவெனெச்சங்களாம்.

உயர்ந்த மூங்கிலின் நெல்லுத் தானே உதிர்ந்ததனை எடுத்துக்கொண்டு உரலிற்பெய்தென்றதனால் உயர்ந்த தலைவனைத் தெய்வந் தானே கொண்டு வருதலின் †அவனை நம்வயத்தனாக்கினேமென்றும், வள்ளைப்பாட்டிற்கு ஏது வாகிய கோடு உலக்கையாக என்றதனாற் கோடு நெல்லைப் பயன்படுத்தினாற் போல‡நம் வரைவுகடாவலால் இத்தலைவனை இல்லறப்பயனை எய்துவிக்கின் றேமென்றும், சேம்பிலை புடைத்தற் றொழிலை முற்றமுடித்து (க) அரிசியை ஆக்காததன்மைபோல இக்களவொழுக்கத்தால் அவன் வரைந்துகோடலை முற்றமுடியாதிருக்கின்றேமென்றும் இறைச்சி பொருட்புறத்தாய் நின்ற வாறு காண்க.

---

நோக்கின் மகளிரொடு மரீஇ,வெங்கண்மறவர் வில்லின்வீழ்த்த, பைங் கண் வேழத்துப் பணைமருப் புலக்கையி,னறையுர னிறைய வைவனப் பாசவ, லிசையொடு தன்னைய ரியல்புபுகழ்ந் திடிக்கு, மம்மனை வள்ளை யின்னிசைகேட்டும்" பெருங். (2) கச: சகூ - ருஉ. (உ)"பைம் பொ னறைமேற்..............வான்கேழ் மருப்போச்சி, யம்பொன் மலைசிலம்ப வம்மனை வள்ளையுடன், "கம்பஞ்செய்யானைக் கரியவனைப் பாடினார்" சூளா. சுயம். க0சு. (ஊ)"பளிக்குரல் வேய்நெற் படுத்திபக் கோடுபற்றிச் செழுந்தேன், றுளிக்குமென் கூந்தலர் வள்ளை'பி னேச்சு மை சூழ்சிலம்பா" தணிகைப். களவுப்படலம். ௩௩0.

(எ)வயவென்னு முரிச்சொல் வலியென்னும்பொருளில்வருதற்கு'வயக் களிறு' என்பது மேற்கோள். தொல். உரி. சூ. ருச. 'வயவலி' தெய்.

க. சேனாவரையர், 'கிளவியாக்கம்' என்பதன் பொருளை விளக்குமிடத்து "வழுக்களைந்து சொற்களை யாக்கிக்கொண்டமையான், இவ்வோத்துக் கிளவியாக்கமாயிற்று. ஆக்கம் - அமைத்துக்கோடல், நொய்யும் நுறுங் குங்களைந்து அரிசியமைத்தாரை அரிசியாக்கினா ரென்பவாகலின்" என்று எழுதியிருத்தல் இங்கே அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * பாடவென்னின், † அயலை வயத்த, ‡ நாமும் வரைவு கடவுதலிற்றலைவனை.

ரு (க)இடியுமிழ் பிரங்கிய *விரவு(உ)பெய னடுநாட்
கொடிவிடு பிருளிய மின்னுச்செய் விளக்கத்துப்
பிடியொடு (ங)மேயுஞ் †செய்புன் யானை
யடியொதுங் கியக்கங் கேட்ட கானவ
னெடுவரை யாசினிப் பணவை யேறிக்
கO கடுவிசைக் (ச)கவணையிற் கல்கை விடுதலி

---

க. (அ) "முர சிடியுமிழ் தழங்கென முழங்க" சீவக. உஙகஉ, (ஆ) "இடியுமிழ் முரசம்" அகம். ஙருச: உ; சீவக. உகOO.

உ. "இருள்கிழிப் பதுபோன் மின்னி வானந், துளிதலைக் கொண்ட நளிபெய னடுநாள்." அகம். எஉ: க - உ.

ங. யானை, இரவிற் புனமேய வருதலும் அதனைக்கானவர் கவண்கல்லால் விலக்குதலு முண்டென்பதை, (அ) "இரவின் மேயன் மரூஉம் யானைக், கால்வலியக்க மொற்றி நடுநாள், வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன், கடுவிசைக் கவணி னெறிந்த சிறுகலுடுவுறு கணையிற் போகிச் சாரல், வேங்கை விரியிணர் சிதறித் தேன்சிதையூஉப், பலவின் பழத்துட் டங்கு, மலைகெழு நாடன்" அகம். உகஉ: அ - கரு. (ஆ) "காம்பின்,விளைகழையுடைந்த கவண்விசைக் கடியிடிக், கனைசுடரமயத்து வழங்கல் செல்லா,திரவுப்புன மேய்ந்த வுரவுச்சின வேழம்" அகம். ஙOக: கஉ - கரு; (இ) "கணமழைபொழிந்த கான்மடியிரவிற், றினைமே யானை யினனிரிந் தோடக், கல்லுயர் கழுதிற் சேணோ னெறிந்த, வல்வாய்க் கவணின் கடுவெடி யொல்லென......மலையுடன் வெரூஉ மாக்கல் வெற்பின்" அகம். ஙகஉ: கஉ - அ. என்பவையும் வலியுறுத்தும். இவற்றுள் முன்னது இங்கு ஒப்புநோக்கற்பாலது.

ச. கவண்கல் வேங்கைமலர் முதலிய வற்றைச் சிதைத்ததென்பதுபோல அக்கல்லினிலையில் அம்பினையும் பழங்களையும் வைத்து, (அ) "வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி, பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி துறீஇப்,புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி யுரற்றலைக்,கேழற் பன்றி வீழ வயல,தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்,வல்வில்வேட்டம்" புறம். கருஉ: க - சு. (ஆ) "உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைதன் னுரமுருவி, மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி" (இ) "தாதையைத் தம்முனைத் தம்பி யைத்தனிக், காதலைப் பெயரனை மருகனைக்களத், தூதையி னுருகணை யுருவ மாண்டனர்" கம்ப. குலமுறை. உசு. அதிகாய. ககஎ. (ஈ) "தெங்கம் பழங்கமு கின்குலை சாடிக் கதலிசெற்றுக், கொங்கம் பழனத் தொளிர்குளிர் நாட்டினை" திருக்கோவையார். கOO. (உ) "காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகினெற்றிப்,பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கைபோழ்ந்து,

(பிரதிபேதம்) * விரவும்பெயல்,விரவுப்பெயல், † புன்செய்யானை.

(க) னிறவரை *வேங்கையி னொள்வீ சிதறி
(உ) யாசினி மென்பழ †மளிந்தவை யுதிராத்
தேன்செ யிறாஅ றளைபடப் போகி
(௩) நறுவடி மாவின் பைந்துணர் ருழக்கிக்
௪௫ குலையுடை வாழைக் கொழுமடல் கிழியாப்
பலவின் ‡பழத்துட் டங்கு மலைகெழு வெற்பனைப்
பாடுகம் வாவாழி தோழிநற் றோழிபா டுற்று

எ - து: நற்றோழீ ! இடிபடுதலுற்று நெருப்பையுமிழ்ந்து ஒலிக்கும் எங்குங்கலந்த பெயலாலே இருண்ட நடுநாளிலே ஒழுங்குவிட்டு மின்னுண்டாக்கின ஒளியிலே பிடியுடனே வந்து புன்செய்யிலே மேயும் யானைகளினுடைய அடிகள் நடக்கின்ற நடையின் ஓசையைக் கேட்ட கானவன் உயர்ந்த மலையில் ஆசினிப்பலாவின்மேல் இட்ட பரணிலே ஏறிக் கடிய விசையினையுடைய(௪)கவணையிற் கல்லை எறிகையினாலே அக்கல்லு முறிந்தவரையிடத்து நின்ற வேங்கையினது ஒள்ளிய பூக்களைச் சிதறி, ஆசினிப்பலாவினது பெருத்தென்ற பழம் நெகிழ்ந்தவற்றை உதிர்த்து, தேனினம் வைத்த இறாலைத்

தேமாங் கனி சிதறி வாழைப் பழங்கள்சிந்து,மேமாங் கதமென் றிசையார்திசை போய துண்டே" சீவக. ௩௧. (ஊ) "தாழை முப் புடைக்காய் வீழ்ந்து தாற்றிளங் கமுகு செற்ற, வீழ்சுளை வருக்கை போழ்ந்து வெம்புலி யடிய பைங்காய்க், கோழரை யரம்பை சாய்க்குங் குடகநாடு" நைடதம். சுயம்வர. கருக. (எ) "ஓங்கிருந் தாழை நெற்றி யொண்பழன் வருக்கை போழ்ந்து,தீங்கரும் பெருத்திற் றாழ்ந்த தேத்திறால் சிதைய வீழும்,வீங்குநீர் மருத வேலி மிதிலை" பாகவதம். (௧௦) சததன்னுவாவைக் கொன்ற. ௨௦.(ஏ) "பாளைவாய்க் கமுகி னெற்றிப் படுபழ முதிர விண்டு, நீள்கழைக் கரும்பி னெற்றி நெய்ம்முதிர் தொடையல் கீறி" சீவக. ௧௧௯அ. என அவற்றுக்குத்தகப் புனைந்துரைத் திருப்பவை இங்கே ஒப்புநோக்கற்பாலன.

க. "இறவரை புரையுமா றிருகரை யேமத்து" (பரி. எ: ௪௦.) என்புழி இறவரை யென்பதற் கெழுதப்பெற்றுள்ளவுரையும் "இறுவரை வீழ" பு - வெ. தும்பை. உ௦-என்னு மூலமும் நோக்குக.

உ. "குருவி யோப்புதங் கவண்கலாற் குலைந்திறு லினத்தோ,டுருவ வாசினி யுக்கன" தணிகை. நாட்டு. ௪௪.

௩. "நறுவடி மா அத்து" நற். உ௪௩; ஐங்குறு. ௬௧,உ௧௩;'மாவி, னறுவடி' கலி. அ௪: க - உ.

௪. கவணென்பது கவணையென ஐகாரச்சாரியை பெற்றுவந்தது; இஃது இக்காலத்து, கவண்டைஎன வழங்குகின்றது.

(பிரதிபேதம்) * வேங்கை யொள்வீ, † அழிந்தவை, ‡ பழத்திற்றங்கு,

துளையுண்டாம்படி உருவி, நறிய வடுவையுடைய மாவினது பசிய கொத்துந் கலை உழக்கி, குலையுடைத்தாகிய வாழையினுடைய கொழுவிய மடலைக் கிழித்து, பலாவினது பழத்துக்குள்ளே தங்குஞ் சிறிய மலைகள் பொருந்தின பெரிய மலையினையுடையவனைப் பாடுவேமாக வா; *எ - று.

'பலவின் பழத்துட்......தோழி' என்றது(க) உறுபெயர்கேட்டலென்னும் மெய்ப்பாடு, முன்புபிறந்தது.

இயக்கங்கேட்ட கானவன் கல்கைவிடுதலைத் தலைவன் மின்வழிகாட்ட வந்து தலைவியோடு புணர்ந்த நிலைமை அலர் கூறக்கேட்ட செவிலி தன் மனையிடத்தே வெளியாக இருந்து கடுஞ்சொற் சொல்லி இற்செறித்தலாகவும், அக்கல்லு வேங்கையினது செவ்விப்பூவைச் சிதறினதன்மை தலைவன் இன்பம் நுகர்கின்ற மனவெழுச்சியைக் கெடுத்ததாகவும், ஆசினிப்பழத்தைப் பயன்படாமல் உதிர்த்ததன்மை அவன் நுகர்கின்ற இன்பத்தைக் கெடுத்ததாகவும், அஃது இருலிற் றேனைப் பயன்படாமை உகுத்ததன்மை தலைவி நலம் தலைவற்குப் பயன்படாமற் கெட்டதாகவும், அது மாவின் குலையைச் சிதறுவித்ததன்மை ஆயவெள்ளந் தலைவியோடு கூடி விளையாடாமல் நீங்கினதாகவும், அது வாழைமடலைக் கிழித்ததன்மை தோழியை வருத்தினதாகவும், அது பலவின்பழத்துட் டங்கினதன்மை அக்கடுஞ்சொல் தலைவி நெஞ்சத்தே தங்கினதாகவும் உள்ளுறையுவமங்கொள்க.

கஅ (உ)இலங்கு மருவித் திலங்கு மருவித்தே
(ரு)வானி னிலங்கு மருவித்தே தானுற்ற
(சு)சூள்பேணான் பொய்த்தான் மலை

---

க. இம்மெய்ப்பாட்டிற்கே "பலவின்பழத்துட்டங்கு மலைகெழுவெற்பனைப் பாடுகம் வா" என்பது மேற்; தொல். மெய்ப். சூ. உஉ. பே. இ-வி. சூ. ருஅ०.

உ. (அ) "வரைதல்வேண்டித்தோழிசெப்பிய, புரைதீர்கிளவி புல்லியவெதிரும்" என்பதனுரையில் "இலங்கும்........மலை" எனத் தோழி இயற்பழித்த வாய்பாட்டான் வரைவு கடாவ, அதனை உடம்பட்டுப் பழித்தற்கு உடம்படாதாள் 'பொய்த்தற் குரியனோ......த்தோன்றியற்று' எனத் தலைவி இயற்படமொழிந்துஎதிர்மறுத்தவாறுகாண்க" என்றும் (தொல். கள. சூ. கசு.) (ஆ) "ஒன்றே வேறே யென்றிரு பால்வயின்" என்னுஞ் சூத்திரவுரையில் 'இலங்குமருவித்து......மலை' என்பதை மேற்கோள் காட்டி, 'பொய்த்தவன்மலையும் இலங்குமருவித்து என வியந்துகூறி, தமது மலைக்கு நன்றி இயல்பு என்றலிற் குறிஞ்சியுள்ளும் மலை வேறாயிற்று" என்றும் (தொல். களவியல். சூ. உ.) கூறுவர், நச்; (இ) இ - வி. நூலாரும் மலை வேறென்பதற்கு மேற்கோள் காட்டுவர்; இ - வி. சூ. சஅஎ. (ஈ) "இலங்கு வெள்ளருவியொடு" மது. உசுகூ.

ரு. "வானிலங் கருவிய வரையும்" தூளா. நாட்டு. சு.

சு. "மாலை யருவியு மோங்குவ வொண்டொடியா, யழுங்குவ தேநமக் காக்கிப்பொய்ச் சூளுற்ற வண்ணல் வெற்பே." தஞ்சை. களவு. சஎஎ.

(பிரதிபேதம்) * என்றுள்.

எ - து: நற்றோழீ! நீ வாழ்வாயாக; தோழீ! தான் சூளுற்ற சூளுற வினைப் பாதுகாவானுய்ப்(க)பொய்த்தவனுடைய மலையாயிருந்தும் வீழ்தலுற்று விளங்கும் அருவியையுடைத்து, விளங்கும் அருவியையுடைத்து, மழைபெய்த லால் விளங்கும் அருவியையுடைத்து; எ - று.

இஃது என்னவியப்போவெனப் பொருட்புறத்தே இறைச்சி தோன்றிற்று.

இஃது "இறைச்சி தானே பொருட்புறத் ததுவே" (உ) என்பதனுற் கொள்க. இருகால் அருவித்தென்றது அருவிப்பன்மை *நோக்கிற்று.

இது மெய்யைப் பொய்யாகக்கோடலிற் (ங) பொய்யாக்கோடலென்னும் மெய்ப்பாடு. அவைதாம் மழைபெய்து வந்த அருவியென்று அதனைப் பின்னர் †விசேடித்தாள். அதுகேட்ட தோழி.

உக (ச)பொய்த்தற் குரியனே பொய்த்தற் குரியனே
(ரு)வஞ்சலோம் பென்றுரைப் பொய்த்தற் குரியனே

---

க. "விண்பொயத னுண்மழை விழாதொழியி னும்" தேவாரம்.

உ. "இறைச்சிதானே பொருட்புறத்ததுவே" என்புழி 'இலங்கும்...... மலை' என்பதை மேற்கோள்காட்டி, "சூளைப்பொய்த்தானென்பதே கூறவேண்டும்பொருள்; அதன் புறத்தே, இங்ஙனம்பொய்த்தான் மலையகத்து நீர் திகழ்வான் (?) என இறைச்சிப்பொருள் தோன்றியவாறு காண்க" என்பர், நச்; தொல். பொருளியல். சூ. ஙரு. இ - வி. சூ. ருஅஅ. உரையிலும் இவ்வாறே உள்ளது.

ங. இம்மெய்ப்பாட்டிற்கே,"வானினிலங்கு........மலை" என்பதனை மேற்கோள் காட்டினர், பேராசிரியரும்; தொல். மெய்ப். சூ. உஉ.

ச. (அ) "நும்மோரன்னோர்மாட்டுமின்ன,பொய்யொடு மிடைந்தவைதோன்றின், மெய்யாண் டுளதோவிவ் வுலகத் தானே"அகம். உஅஈ: கரு - எ. (ஆ) "மருளிற் பிணைந்து பொய்ச் சூளுறு வார்கொல்லை வேலரன்ன, யிருளிற் பிணைந்த விருவினை மாற்றியெல் லாங்கழிப்பி, யருளிற் பிணைந்தவ ராங்கிரு ளோடு மணைந்தொப்பாம்,பொருளிற்பிணைந்தம் வாய்மையிற் பொய்ம்மை புகுந்திடினே" தணிகை. களவு. சஎஅ.

ரு. (அ) "அஞ்சலோம் பென்னு; நன்னர் மொழியு நீமொழிந் தனையே" கலி. உக: எ-அ, (ஆ) "அஞ்லோம் பென்றதன் பயனன்றோ." கலி. கஙஉ: க. (இ) "அஞ்சலோம் பென்றார்" குறள். ககசக. (ஈ) "அஞ்சலோம் பென்று நலனுண்டு நல்காதான்" சிலப் (உச) (உ) "அஞ்சலோம்பென் றளித்த, வஞ்ச மற்றவர் வாரார்" தொல். செய். சூ. கருரு. பே. மேற்கோள்.

(பிரதிபேதம்) *நோக்கி, † விசேடித்தாள்பொய்த்தற்கு,

குன்றக னன்னுடன் வாய்மையிற் பொய்தோன்றிற்
(க)திங்களுட் டீத்தோன்றி யற்று

எ - து: *தன் சூளுறவினைப் பொய்யாக்குதற்கு உரியனோ? பொய்யாக்கு தற்கு உரியனோ? †நீ அஞ்சுதலைப் பரிகரியென்று தான் சொல்லப்பட்ட மக ளிரைப் பாதுகாவாது விடுதற்கு உரியனோ? மலையகன்ற நன்னாட்டை யுடையவன் கூறிய மெய்யிலே பொய்தோன்றுமாயின், திங்களிடத்தே தீத்தோன்றின தன்மைத்து; அங்ஙனங் கூறாதேகொள்; ‡எ - று.

தேற்றுதற்கு இருகாற் ||கூறிப் பின்விசேடித்துக் கூறினாள்.

உரு (உ)இளமழை யாடு மிளமழை யாடு
மிளமழை வைகலு மாடுமென் முன்கை
வளைநெகிழ வாராதோன் குன்று

எ - து: ÷என் முன்கையில் வளை கழலும்படியாக என்னிடத்து வாராத வன் மலையாயிருந்தும் இளமழை உலாவாநிற்கும்; இளமழை உலாவாநிற்கும்; அது தான் ஒருகாலத்து உலாவுதலன்றி நாடோறும் உலாவா ×நிற்கும்; எ-று.

கருத்தங்கி வந்து சூன்முதிர்தற்கு மலையில் (ங) **மேய்கின்ற மழை யென்பது தோன்ற இளமழை††யென்றாள்.

இஃதென்ன வியப்போவெனப்பொருட்புறத்தே இறைச்சி‡‡தோன்றிற்று; இது தலைவிகூறியது. மேல், தோழி கூறுகின்றாள்.

---

க. "நகைக்கதிர்மதியம்வெய்தா நடுங்கச்சுட்டிடுதலுண்டே." சீவக. உ௩கரு.

உ. (அ)"மந்திக்காதலன்முறிமேய்கடுவன், றண்கமழ்நறைக்கொடிகொண்டு வியலறைப், பொங்க லிளமழைபுடைக்குநாட" ஐங். உஎசு: என்பதும் (ஆ)"மேற்கருக்கொண்டு முற்றிப் பயன்படுவதாய இளமுகிலை மந்தி நறைக்கொடி கொண்டு புடைக்கும் நாட' என்னும் அதன்பழைய வுரையும் (இ) "ஆடிய விளமழை சூடித் தோன்றம், பழந்தூங்கு விடரகத்து" அகம். உஎக: கங - ச. என்பதும் (ஈ) "கலங்கு தெண் டிரை மேய்ந்து கணமழை ..............விலங்கல் சேர்ந்து" என்பதும் (உ) 'கணமழை ........திரையைப் பருகிச் சூன்முதிரு மளவும் மலை யைச்சேர்ந்து' என்னுமதனுரையும் (ஊ) "மாமலை தழுவிய மஞ்சு போலவும்" என்பதும். சீவக. ௩உ கOO. (எ) "மஞ்சுதவழ்வெற்பு." நைடத. பிறிவுறு. கரு. என்பதும் 'குன்று,இளமழைபாடும்' என்பதன் பொருளை வலியுறுத்தும்.

ங. மேகம்மலையில்மேய்தல். திருவிளை. இந்திரன் முடிமேல். சக.

(பிரதிபேதம்)*அதுகேட்டதோழிதன், †விசேடித்துசீ, ‡என்றாள். ||கூறினாள். ÷ அதுகேட்ட தலைவி என், × நிற்குமிதென்ன வியப்போவென, **மெய்கின்ற, ††என்றாள் வாராதமை, ‡‡தோன்றிற்று, கருத்தங்கி.

உஅ (க) வாரா தமைவானோ வாரா தமைவானோ
வாரா *தமைகுவா னல்லன் மலைநாட
(உ) னீரத்து ளின்னவை தோன்றி னிழற்†கயத்து
(௩) ணீருட் குவளைவெந் தற்று

எ - து: ‡நின்னிடத்து வாராதே ஆற்றியிருப்பானோ? வாராதே ஆற்றியிருப்பானோ? இருக்குமதுவுமன்றி அம்மலைநாடனுடைய அருளிடத்தே இத்தன்மையவாகிய கொடியவை தோன்றுமாயின் நிழலையுடைய குளத்துள் நீரினின்ற குவளை வெந்த தன்மைத்து; நீ இங்ஙனங் கூறுதேகொள்; எ - று.

நீருட் குவளை வெந்தற்றென்றது மருட்கையுவமம். நிழற்கயத்துள் வேவன இன்மையின் அற்புதமாயிற்று. இஃது உலகநடையிறந்ததோர் உவமை கூறி அதனோடு தலைவன் ஈரத்தினை ஒப்பித்தலிற் பெருமைபற்றி ||வந்தது. இனி அதுகேட்டதலைவி கூறுகின்றாள்.

௩உ (௪) மணிபோலத் தோன்று மணிபோலத் தோன்று
மண்ணா மணிபோலத் தோன்றுமென் மேனியைத்
துன்னான் றுறந்தான் மலை

எ - து: ×என்மேனியைச் சேராதே துறந்தவனுடைய மலையாயிருந்தும் நீலமணிபோலத் தோன்றும்; நீலமணிபோலத் தோன்றும்; கழுவாத நீலமணி போலத் தோன்றும்; எ - று.

---

க. "வாராதமைவானோ .....வெந்தற்று" என்பது உவமப்போலி ஐந்தனுள் கூடாப்பொருளோ டுவமித்தற்கு மேற்கோள்; தொல். உவம. சூ. உ௪. 'உவம' இளம்.

உ. "ஈரத்து.........வெந்தற்று" என்பதனை மருட்கை யுவமத்திற்கு மேற்கோள்காட்டி "நிழற்கயத்திற் குவளை வேவனவின்மையின் இஃது அற்புதமாயிற்று" என்பர், பேராசிரியரும்; தொல். உவம. சூ. கக.

௩. பெருமைபற்றி ஒப்புமை கொள்ளப்படு முவமைக்கு 'நீருட் ...........வெந்தற்று'என்பதைமேற்கோள்காட்டி உலகநடையிறந்ததோருவமை கூறி அதனோடு தலைமகன்ஈரத்தினை ஒப்பித்தமையின் இது பெருமை பற்றிய தாயிற்று என்பர், பேராசிரியரும்; தொல். உவம. சூ. கக.

௪. (அ) மலை மணிபோலத்தோன்றல்: "மணிமலை" சிறுபாண். க. (ஆ) "மண்ணுறு மணியிற் றோன்றுந், தண்ணறுந் துறுக லோங்கிய மலையே." குறுந். ௩௭௭: ௬ - எ. (இ) "மணிநிறமால்வரை." (ஈ) "மணிநெடுங் குன்றே."(உ) "மணிநிறங் கொண்ட மாமலைவெற்பின்" ஐங். உ0அ,௨0க,உஉ௪.(ஊ)"மணித்தலைமலை" திருவிளை.மாணிக்.௩௪.

(பிரதிபேதம்) * அமைகுவன், † கயத்துநீருட், ‡ அதுகேட்டதோழி நின்னிடத்து, || வந்தது மணிபோல × அதுகேட்ட தலைவி என், மேனியை.

இஃதென்ன வியப்போவெனப் பொருட்புறத்தே இறைச்சி தோன்றிற்று. கொண்ட*வெப்பத்தான் உலராது மழைபெய்து நிறம்பெறுதலின் மணிபோலத்தோன்றுமென்றாள்.

௩ந (க) துறக்குவ னல்லன் றுறக்குவ னல்லன்
றொடர்வரை வெற்பன் றுறக்குவ னல்லன்
றொடர்பு வினையவை தோன்றின் விசும்பிற்
சுடரு மிருடோன்றி யற்று

எ - து: † நம்மைக் கைவிடுவான் அல்லன்; கைவிடுவான் அல்லன்; (உ) ஒன்றோடொன்று தொடர்ந்தசிறுமலைகளையுடைய(ங) வெற்பையுடையான் கைவிடுவான் அல்லன்; அவனோடு கொண்ட உறவின்கண்ணே இத்தன்மையவாகிய கொடியனவை தோன்றுமாயின் ஆகாயத்திற் றிரியும் ஞாயிற்றுள்ளே இருள்தோன்றிய தன்மைத்து: நீ அங்ஙனங் கூறுதே‡கொள்ளெனத் தோழி கூறினாள்; எ - று.

இது மருட்கையுவமம்.

எனவாங்கு, ||அசை.

சO நன் (ச)று கின்றாற் றோழிநம் வள்ளையு
(ந) ளொன்றிநாம் பாட மறைநின்று கேட்டருளி

---

க. (அ) "துறக்குவனல்லன்............இருடோன்றியற்று" என்பதை இசைநிறைக்கு மேற்கோள் காட்டி 'இதனுள் முந்துற்றசொற் பொருளுணர்த்திற்று; ஏனைய இசைநிறைக்கண் வந்தன; இசை நிறையாவது பாட்டுக் குறித்துவரும்' என்றும். (தொல். எச்ச சூ. உகூ. 'இசை') (ஆ) "பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே" என்பதற்கு, 'பெயரை எச்சமாக வுடையசொல் அப்பெயரொடு பொருள்முடிவுபெறும்'என்று பொருள்கூறி "துறக்குவனல்லன்......தோன்றின்" என்பதை அதற்கு மேற்கோள்காட்டி 'இதனுள், அவன் றொடர்பெனவேண்டுதலின் அவனென்னும் பெயர் எஞ்சி நின்றது' என்றும் (தொல். எச்ச. சூ. ௩எ. பெயரெஞ்சு') கூறுவர்; தெய்வச்சிலையார்.

உ. "ஒருவரைபோ லெங்கும் பலவரையுஞ் சூழ்ந்த, வருவரை யுள்ளதாஞ் சீறூர்" திணைமாலை. க௩.

௩. (அ) "சான்றவர் கேண்மை சிதைவின்று யூன்றி, வலியாகிப் பின்னும் பயக்கு மெலிவில், கயந்திகழ் சோலை மலைநாடன் கேண்மை, நயந் திகழு மென்னுமென் னெஞ்சு" ஐந் - எழு. ரு. (ஆ) "செய்த குறியும் பொய் யாயின வாயிழையா, மைதுகொ லான்றோர் தொடர்பு." திணைமொழி. சக.

ச. "ஆகின்று" ஐங்குறு. கஎ, க௩உ, சO௩;பரி. அ:கO,உக; புறம். உச௩:க.

ரு. "என்றியாம் பாட மறைநின்று கேட்டனன்" கலி. சஉ: உஅ.

(பிரதிபேதம்) * வெப்பந்தானுலராது, † அதுகேட்ட தோழி நம்மைக், ‡ சொல்லென்றாள், || ஆங்கு அசை,

மென்(க)றோட் கிழவனும் வந்தன னுந்தையு
மன்றல் வேங்கைக் கீழிருந்து
மணநயந் தனனம் மலைகிழ வோற்கே

எ - து: தோழி! நம் வள்ளைப்பாட்டிடத்தே நாம் பொருந்திப்பாட நம் மென்றோட்கு உரிமையையுடையவனும் மறைந்துநின்றுகேட்டு அருள்பண்ணி வரைவு வேண்டி வந்தனன்; உன்னுடைய தந்தை மணத்தையுடைய வேங்கைக் கீழே இருந்து அம்மலைகிழவோனுக்கு மணஞ்செய்தலை விரும்பிக்கூறினான்; ஆதலால், நமக்குநன்மை(உ)யுண்டாகாநின்றது. இனிநீவருந்தாதேகொள்;*எ-று

இதனால், தலைவிக்குச் செல்வமாகிய உவகை பிறந்தது. இதன் இடைப் பாட்டுக்கள் "வரைதல் வேண்டித் தோழி செப்பிய, புரை தீர்கிளவி புல்லிய வெதிரும்" (ந)என்பதனுன் இயற்பழிக்க இயற்பட மொழிந்தனள்.

இது தரவும் 'ஐஞ்சீரடி † வந்த கொச்சகமும் கொச்சகவெண்பாக்களும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்று ‡வந்த, கலிவெண்பாவின் வேறுபட்ட கொச்சகக் கலி. (ரு)

(சஉ.) மறங்கொ ளிரும்புலித் தொன்முரண் டொலைத்த
முறஞ்செவி வாரண முன்குளா கருந்திக்
கறங்குவெள் ளருவி யோலிற் றுஞ்சும்
பிறங்கிருஞ் சோலை நன்மலை நாடன்
ரு மறந்தான் மறக்கினி யெல்லா நமக்குச்
சிறந்தன நாநற் கறிந்தன மாயி னவன்றிறங்
கொல்யானைக் கோட்டால் வெதிர்நெற் குறுவாநாம்
வள்ளை யகவுவம் வா, இகுளைநாம்
வள்ளை யகவுவம் வா;
க0 காணிய வாவாழி தோழி வரைத்தாழ்பு
வாணிறங் கொண்ட வருவித்தே நம்மருளா
நாணிலி நாட்டு மலை;

---

க. (அ) "சாயிறைப் பணைத்தோட் கிழமை தனக்கே, மாசின் றாதலு மறி யான்" அகம். நஉ: கஅ-கக. (ஆ) "ஒலிபுன லூரன், கிழமை யுடைய மென்ன் றோட்கு" திணைமொழியைம்பது. நக.

உ. ஆகின்றென்பதை இறந்த காலமாகவும் கொள்வர், புறநானூற்றுரை காரர்; புறம். க: எ, க; கசஅ: எ.

ந. தொல். கள. சு. கக. இந்நூற்பக்கம், உசந: உ-ம் குறிப்பு (அ) பார்க்க.

(பிரதிபேதம்) * என வரைவுமலிந்தமை கூறினள், † வந்த கொச்சகவெண்பாக்களும், ‡வந்துகலி.

கரு ஆர்வுற்றார் நெஞ்ச மழிய விடுவானோ
வோர்வுற் றொருதிற மொல்காத நேர்கோ
லறம்புரி நெஞ்சத் தவன்;

கசு தண்ணறுங் கோங்க மலர்ந்த வரையெல்லாம்
பொன்னணி யானைபோற் றோன்றுமே நம்மருளாக்
கொன்னாள னாட்டு மலை;

கசு கூருநோ யெய்ப்ப விடுவானோ தன்மலை
நீரினுஞ் சாய லுடைய னயந்தோர்க்குத்
தேரீயும் வண்கை யவன்;

உஉ வரைமிசை மேற்றொடுத்த நெய்க்க ணிறாஅன்
மழைநுழை திங்கள்போற் றோன்று மிழைநெகிழ
வெவ்வ முறீஇயினான் குன்று;

உடு எஞ்சா தெல்லா கொடுமை நுவலாதி
யஞ்சுவ தஞ்சா வறனிலி யல்லனென்
னெஞ்சம் பிணிக்கொண் டவன்;

உஅ என்றியாம் பாட மறைநின்று கேட்டனன்
றாழிருங் கூந்தலென் றோழியைக் கைகவியாச்
சாயலின் மார்பன் சிறுபுறஞ் சார்தர
ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென்
னாயிழை மேனிப் பசப்பு.

இது முன்பு பெற்றவழிமலிந்ததனைப் பின்பு பிரிந்தவழிக் கலங்கிக் கூறியது. என்னை? தலைவன் அருமைசெய்தயர்த்தவழித் தோழி தலைவியை ஆற்றுவித்தற்பொருட்டுத் தலைவனை இயற்பழிப்பத் தலைவி இயற்பட மொழிந்ததனைச் சிறைப்புறமாகக் கேட்டுத் தலைவன் முன்னொருகால்வந்து சிறுபுறஞ் சாரத் தான் ஆற்றினமை குறித்துப் பின்னொருகால் அவ்வாறு பாட அவன் சிறுபுறஞ்சாராமையிற் கலங்கி நெஞ்சொடு கூறியதாகலின்.

இதன் பொருள்.

(க)மறங்கொ ளிரும்புலித் தொன்முரண் டொலைத்த
(உ)முறஞ்செவி வாரண முன்குள கருந்திக்

க. (அ)"மறப்புலி" பதிற். சுக: எ; புறம். கO: ரு; சீவக. எ௫௨.(ஆ) "மறங் கொ ளிரும்புலி" சிலப். கஉ: உஎ.

உ. (அ) "முறஞ்செவி யானை" புறம். ருகக: கரு. (ஆ) "முறஞ்செவி வாரணம்" சிலப். கO: உசஎ. (இ) "முறஞ்செவி யானையும்" மணி.

*கறங்குவெள் (௧)ளருவி †யொலியிற் றுஞ்சும்
(௨)பிறங்கிருஞ் சோலை (௩)நன்மலை நாடன்
௫ மறந்தான் மறக்கினி யெல்லா(௪)நமக்குச்
‡சிறந்தன நாநற் கறிந்தன மாயி (௫)னவன்றிறங்
(௬)கொல்யானைக் கோட்டால்(௭)வெதிர்நெற் ||குறுவாநாம்
வள்ளை யகவுவம் வா, இகுளைநாம்
வள்ளை யகவுவம் வா

---

௧௯ : ௧௨௧. (௧) "சுளகு வார்செவித் தூங்குகைக் குஞ்சரம்" சீவக. ௧௱௭௮. (உ) "முறஞ்செவி வாரண முகத்துத் தம்பிரான்" விநாயக. தூர்வைதுலை. ௨௨.

௧. அருவி யொலியில் விலங்கு துயிலுமென்பதை (அ) "வேட்டம் படரு மூடங்குளைமான் புனிற்றுக் குருளை விழிதுயில, மோட்டு முதுநீர்ப் பஃறலைய வருவிதூங்கு முகிறவழ்பொற்,கோட்டில்" (ஆ) "கறங்குரா லுளையரிமான் சிறுகுருளை கவிழ்தலைய வருவியோலி, னுறங்குமுயர் பொலங்குடுமி யிமயம்" காசி. காசியின். ௭; கேதார. ௬.

௨. "நிவந்தோங்கிய சோலை, மலைகெழு நாடன்" குறுந். ௨௦௧.

௩. (அ) "நன்மலை நாடன்" (ஆ) "நன்மலை நன்னாட" கலி. ௩௮ : ௨௪, ௪௯. ௯.

௪. (அ) "யாமுமக்குச்,சிறந்தன மாத லறிந்தனி ராயின்" (ஆ) "சிறந்தானை வழிபடீஇ" கலி. ௫: ௪-௫, ௯: ௨௩; என்பவையும் அவற்றின் குறிப்பும் ஈண்டு அறிதற்பாலன.

௫. (அ) "தினைகுறு மகளி ரிசைபடு வள்ளையும்" மலைபடு. ௩௪௨. (ஆ) "இன்னிசைக் கோதையர், வள்ளை பாடுவர் மன்னவன் வண்மையே" அரிச்சந்திர. நகரச்சிறப்பு. ௭.

௬. (அ) "வயக்களிற்றுக், கோடுலக்கை யாக...........வாடுகழை நெல்லை யறையுரலுட் பெய்திருவாம், பாடுகம்" கலி. ௪௧: ௧ - ௪ என்பதும் அதன் குறிப்பும் ஈண்டு அறிதற்பாலன. (ஆ) "கொல்யானை" கலி. ௫௯: ௩௨, ௧௩௪: ௩; ௧௩௪. ௩-இல், கொல்யானை என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௭. வெதிரினெல்லும் வேயின் முத்தும் கூறுதல் மரபு: (அ) "வேயுட் பிறந்த வாய்கதிர் முத்தம், வெதிரிற் பிறந்த பொதியவி ழுருநெல்" பெருங். (௧) ௫௧: ௧௧-௧௨. (ஆ)"வேய்கண் ணுடைந்து முத்துதிரவும், வெதிர்கண் ணுடைந்து நெல்லுதிரவும்" யா - வி. சு. ௯௫. மேற் கோள், 'நலஞ்செல' எனவும் (இ) "நெற்கொ ணெடுவெதிர்க் கணந்த

(பிரதிபேதம்) * கறங்கும், † ஓவில், ‡ சிறந்தமை, || குறுவாணும்.

எ-து: மறத்தைத்தன்னிடத்தேகொண்டபெரிதாகிய(௧)புலியின்துபழைய மாறுபாட்டைக்கெடுத்த முறம்போலுஞ் செவியையுடைய (உ) யானை தனக்கு முன் நின்ற (௩)குளகைத் தின்று ஒலிக்கின்ற வெள்ளிய அருவிநீரைப் பருகி அஃது ஓலுறுத்துதலாற்றுயில்கொள்ளும் பெருக்கின்ற கரிய சோலையினை யுடைய நல்ல மலைநாட்டையுடையவன் நாம் வருந்த நம்மை மறந்தான், இனி அவன் மறப்பானாக;(௪) *இகுளையே! ஆராய்ந்து பார்க்கின் நாம் நமக்கு அவன் சிறந்தபடியை மீளவும் அறிந்தேம், இனிக் கொன்றயானையின் கொம்பாலே மூங்கினெல்லைக் (௫) குறுதற்கு நாம் அவன்செய்த கொடுமையின் கூற்றை வள்ளைப்பாட்டாகப் பாடுவேமாகவாவெனத் தோழிஇயற்பழிக்க, அதுகேட்ட தலைவி தான் இயற்படமொழிவாளாகக்கருதி ஏடீ! நீ கூறியவாறன்றி அவன் திறத்தை நாம் (௬) வள்ளைப்பாட்டாகப் பாடுவேமாக வாவென்றாள்; எ - று.

---

யானை" குறிஞ்சி. ௩௫, (௲) "நெல்லுடை நெடுவெதிர்" (உ) "புல்லிலை வெதிர நெல்விளை காடே" அகம். ௧௮௫: ௬. ௩௧௨: ௧௬. (ஊ) "சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே" புறம். ௧0௯: ௪. (எ) "நெற்பட்ட கண்ணே வெதிர்சாம்" நான்மணி. ௪. எனவும் வருதல் காண்க. சிற்சில விடத்து அருகி மாறியும் வரும்.

௧. (அ) "கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப், புலிவிளை யாடிய புலவு நாறு வேழத்தின், றலைமருப்பு" (ஆ) "இரும்புலி தொலைத்த பெருங் கை யானை" நற். ௩௯: ௪ - ௬, ௩௫௩: ௬; (இ) "சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கித், தொன்முரண் கொல்லுந் துன்னருஞ் சோலை" குறுந். ௮௮; (௲) "இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்து" (உ) "வேங்கை, யடுமுரண் டொலைத்த நெடுநல் யானை" அகம். உ௭உ: ௧, ௩0௭: ௬ - ௭.

உ. யானை, புலியைக்கொன்று மலைப்பக்கத்தி லுறங்குதல்: "கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு, நெடுவரை மருங்கிற் றுஞ்சும் யானை" கலி. ௪௯: ௧ - உ.

௩. குளகென்பது இலையுணும்விலங்குணவென்பர்; அது யானையின் உணவாகிய தழைக்கே (அ) "இன்குளகு" (முல்லை. ௩௩.) (ஆ) "குளகமர்ந் துண்ட" (கலி. ௪௩: உ0.) (இ) "உண்குளகு மறுத்த" (அகம். ௩௧உ: ௩) (௲) 'நாகம்.........அதிமதுரத்தின்குளகைக் கையிலேகொண்டால்' (சீவக. ௭௫0. உரை) எனப் பெரும்பாலும் வருகிறது.

௪. கலி. ௧0௩: ௩௧. "இகுளை" என்பதன் குறிப்பைப் பார்க்க.

௫. இவ்வுரையை நோக்க 'குறுவான்' என்றபாடஞ் சிறந்ததாயினும் 'குறவாம், வினையெச்சமுற்று' என்ற விசேடக்குறிப்பால் குறுவாமென்று பாடங்கொள்ளப்பட்டது.

௬. வள்ளை - உலக்கைப்பாட்டு; உரற்பாட்டென்றுங் கூறப்படும்.

(பிரதிபேதம்) * இளையோய் ஆராய்ந்து.

*மறக்க,வியங்கோள். மறந்தான்மறக்கவென்றது அருமைசெய்தயர்த்தலை. இகுளை ஆயின் என்பனவற்றை முன்னே மாறிக்கூட்டுக. எல்லாவென் பதனைப் பின்னே கூட்டுக.

"முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச்சொ, †னிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே" (க) என்பதனான் (உ) எல்லாவென்முள். குறுவாம், வினையெச்சமுற்று.

நாடனென்றதனால் நாமும் அயலார் கூறும் பழைய அலரைக் கெடுத்துத் தன் மனத்து உளவாகிய நுகரும்பொருள்களை நுகர்ந்து தானுஞ் சுற்றமும் புகழ்ந்துகூறத் தன்னில்லின்கண் நாம் இருக்கும் நிலைமையை நிகழ்த்தாது நாம்வருந்த நம்மை மறந்தானென்று உள்ளுறையுவமங்கொள்க. "கிழவோட் குவம மீரிடத் துரித்தே" என்னும் (ங)உவமவியற் சூத்திரத்துச் சிறுபான்மை குறிஞ்சிமுதலிய வற்றிற்கும் ‡உவமப்போலிகொள்க என்றலிற் குறிஞ்சியில் உவமப்போலிகொண்டார். "தோழியுஞ் செவிலியும் பொருந்துவழி நோக்கிக், கூறுதற் குரியர் கொள்வழி யான" (ச) என்பதனால், தோழி || உவமப்போலி கூறினாள். இதுபயவுவமப்போலி. இந்நிலத்து முன்உள்ளுறைகூறியவற்றிற்கும் பின்னர்உள்ளுறை கூறுகின்றவற்றிற்கும் இதுவே விதியாகக் கொள்க.

க0 (ரு)காணிய வாவாழி தோழி வரைத்தாழ்பு
(சு)வாணிறங் கொண்ட வருவித்தே நம்மருளா
நாணிலி நாட்டு மலை

---

க. தொல். பொருளி. சூ. உசு.

உ. எல்லாவென்பது ஏடியென்னும் பொருளில் 'எலாஅ' என்றும் 'எலா' என்றும் வருகின்றது.

ங. தொல். உவம. சூ. உக.

ச. தொல். உவம. சூ. ஙக.

ரு. (அ)"காணிய வாவாழிதோழி"என்பது செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம் வினைமுதல் வினைகொண்டு முடிந்ததற்கு மேற்கோள்; நன். வினை. சூ. உரு. வி. இரா. இ - வி. சூ. உசஎ. (ஆ) "காணியவாரீ வாழியதோழி" என ஒருமேற்கோள் நன். வினை. சூ. உரு. மயிலை நாதர் உரையிற் காணப்படுகிறது.

சு. (அ) "வாள்வனப்புற்ற அருவி........ குன்றே." ஐங்குறு. ஙகஉ. (ஆ) "வாளிலங் கருவி தாஅய் நாளை" அகம். உஎஅ: எ. (இ) "வாள்வெள் ளருவி வரைமிசை யிழியவுங், கோள்வலுழுவை விடரிடை யியம்பவும்" (தொல். செய். சூ. உஉஅ. 'இயைபுவண்ணம்' இளம். மேற்.) (ஈ) "வாளருவித்,தடமலை மேலுங்கள் சிறு ரெதுவென்பர்" அம்பிகா. அஎ.

(பிரதிபேதம்) * மறக்கு, †நிலைக்குரிய மரபி, ‡வுவமப் பொலிவுகொள்க, || உவமப்பொலிவு.

எ - து: வாழ்வாயாக தோழி ! நம்மை அருளாத கொடுமைக்கு (க) நாணு திருக்கின்றவனுடைய *நாட்டின் மலையாயிருந்தும் பக்கமலையிலே தாழ்ந்து ஒளியையுடைய நிறத்தைக் கொண்ட அருவியை யுடைத்தா யிராநின்றது, இதற்குக் காரணத்தை நம்மனத்தான் ஆராய்தற்கு வாவெனத் தோழி இயற் பழித்தாள்; எ - று.

கங (உ)ஆர்வுற்றார் நெஞ்ச மழிய விடுவானோ
வோர்வுற் றொருதிற மொல்காத நேர்கோ
(ங)லறம்புரி நெஞ்சத் தவன்

எ-து: ஒருகூற்றிற் சாயாத†நேர்நிற்குந்(ச)துலாக்கோல்போலவோர்தலுற்று அறத்தையே விரும்பின நெஞ்சத்தையுடையவன் தன்னுன்(ரு)நுகரப்பட்டார் நெஞ்சத்தை அழியும்படி விடுவனோ? விடான் காணெனத் தலைவி இயற்பட மொழிந்தாள். எ - று.

---

க. நாண்,மகளிர்க்கன்றியும் ஆடவராகிய நன்மக்களுக்கு முரித்தென்பதனை (அ) "வடுப்பரியு, நாணுடையான் கட்டே தெளிவு" (ஆ) "கருமத்தா னாணுத னாணுத் திருநுத, னல்லவர் நாணுப் பிற" (இ) "நாணொடு நல்லாண்மை பண்டுடையேன்" குறள். ருoஉ, கoகக, ககநரு. (ஈ) "நாணிலான் சால்பு.........நாடி னகை" சிறுபஞ்ச. கஉ. என்பவற் றாலும் அறியலாம்.

உ. "உயர்மொழிக் குரிய வுறழுங் கிளவி" என்புழி, "மறங்கொளிரும் புலி யென்னுங் குறிஞ்சிக்கலியுள் 'ஆர்வுற்றார்..............நெஞ்சத்தவன்' எனத் தலைவிகூறலும், 'தண்ணறுங் கோங்க...... ......நாட்டுமலை' எனத் தோழி உறழ்ந்துகூறியவாறு காண்க. இதுவும் தலைவி கூற் றிற்கு மாறுதலின் வழுவாய்ச் சிறைப்புறமாகக் கேட்டு வரைதல் பய னுதலின் அமைந்தது" என்பர், நச். தொல். பொருளி. சூ. சச.

ங. "அறங்கிடந்த நெஞ்சும்" நள. சுயம்வ. சஎ.

ச. (அ)"துலாக்கோ லியல்பே தூக்குங் காலை, மிகினுங் குறையினு நில்லா தாகலு, மையந்தீர்த்தலு நடுவு நிலைமையோ, டெய்தக் கூறுப வியல் புணர்ந்தோரே"(ஆ)"துலைநா வன்ன சமநிலை" (இ) "செம்பொற்றுலைத் தாலமன்ன தனிநிலை" கம்ப. மந்தரை. கக.(ஈ) "ஐயந்தீரப் பொருளை யுணர்த்தலு; மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே" நன்.

ரு. 'ஆர்வு' என்பது அனுபவித்த லென்னும் பொருளில் வருதற்கு, "ஆர் வுற்ற, விட்டகல கில்லாத வேட்கையும்" என்பதும் சான்றுபகரும்; திரிகடுகம். கூரு. ஆர்வமுறலென்பது ஆர்வுறலென வருதலுமுண்டு.

(பிரதிபேதம்) * நாட்டுமலை, †நாநிற்கும்.

௧௯ தண்ணறுங்(௧) கோங்க மலர்ந்த வரையெல்லாம்
பொன்னணி யானைபோற் றோன்றுமே நம்மருளாக்
(௨)கொன்னாள ணாட்டு மலை

எ - து: நம்மை அருளி இல்லறப்பயனை ஆளாமற் பயனின்மையை ஆளுகின்றவன் நாட்டு மலையாயிருந்தும் தண்ணியநறிய *கோங்கம் பூத்த பக்க மலையெல்லாம் பொன்னாற் செய்த பல ஆரமணிந்த யானைகள் போலச் சிறந்து தோன்றும்; இதற்குக் காரணமென்னெனத் தோழி இயற்பழித்தாள். எ - று.

அருளாவென்பது, செய்யாவென்னு மெச்சம்.

௧௧ கூருநோ யெய்ப்ப விடுவானோ தன்மலை
(௩)நீரினுஞ் சாய லுடைய னயந்தோர்க்குத்
(௪)தேரீயும் வண்கை யவன்

எ - து: தன்கொடையை விரும்பி வந்தோர்க்குத் தேரைக் கொடுக்கும் வளவிய கையையுடையவன் நம்மாட்டுத் தன்மலையின்நீரினும் †மென்மையை யுடையவனாதலால் வரையாமல் நமக்கு மிகுகின்ற நோய் நம்மைப் பொருந்த விடுவனோ? ‡விடான்; வரைவனெனத் தலைவி இயற்படமொழிந்தாள்; எ - று.

௨௨ (௫)வரைமிசை மேற்றொடுத்த நெய்க்க ணிறாஅல்
மழைநுழை திங்கள்போற் றோன்று மிழைநெகிழ
வெவ்வ முறீஇயினான் குன்று

---

௧. "மந்தர மென்னு மத்த யானை, நீல நெடுவரை நெற்றித் தாகிய,கோலக் கோங்கின் கொழுமலர் கடுப்புற, சூறைக் கடுவளி பாறப் பறந்தெனப், பட்ட மடுத்த கொட்டையொடு பாறவும்" பெருங். (௩) ௨௭: ௭௧ - ௫.

௨. "அச்சம் பயமிலி காலம் பெருமையென், றப்பா லான்கே கொன்னைச் சொல்லே" தொல். இடை. சூ. ௯.

௩. (அ) "புதுநிறை வந்த புனலஞ் சாயல்......நன்னற்படர்ந்த கொள்கை யொடு" மலை. ௯௧-௪. (ஆ) "வானிநீரினுந், தீந்தண்சாயலன்" பதிற். ௮௬: ௧௨-௩; (இ) "மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரு,நீரினு மினிய சாயற், பாரி" புறம். ௧௦௫: ௯ - ௮.

௪. (அ)"தேர்வீசு கவிகை, யோம்பா வள்ளல்" மலை. ௩௧௧ - ௪௦௦. (ஆ) "தேர்வீ சிருக்கை" (இ) "தேர்வீ சிருக்கை நெடியோன்" புறம். ௯௧: ௧௮; ௧௧௪: ௯.

௫. (அ)"என விதணத் தகிற்புகையுண்டியங்கும்,வானூர்மதியம்வரைசேரி னவ்வரைத், தேனி னிறாலென வேணி யிழைத்திருக்கும், கானக நாடன் மகன்" கலி. ௩௧: ௭ - ௧௦. (ஆ) " பாய்தலிற் கிழிந்து,

(பிரதிபேதம்) *கோங்கு. †மென்மையுடையன், ‡ விடானெனத்.

எ - து: பூணெகிழ்ந்து விழும்படி நம்மை வருத்தமுறுத்தினேன் குன்று யிருந்தும் பக்கமலைகளின்மேலே வைத்த தேனை இடத்தேயுடைய இருல் மழையிலே நுழைகின்ற மதியைப்போலத் தோன்றாநிற்கும், இதற்குக்காரணம் என்னெனத் தோழி இயற்பழித்தாள் ; எ - று.

இது தேன் பயன்படுதல்கூறினள். இதன்கண் தோழி இயற்பழித்தன எல்லாம் பொருட்புறத்திறைச்சி தோன்றியவாறு காண்க.

உரு எஞ்சா தெல்லா கொடுமை நுவலாதி
(க)யஞ்சுவ தஞ்சா வறனிலி யல்லனென்
னெஞ்சம் *பிணிக்கொண் டவன்

எ - து: இங்ஙனந் தோழி இயற்பழித்ததற்குப் பொருளாய், ஏடீ! ஒழியாமல் அவன் கொடுமையைக் கூறாதேகொள், என்னெஞ்சத்தைத் தன்னன்பாற் பிணித்தல்கொண்டவன் பிறரஞ்சுங்கொடுந்தொழிற்கு அஞ்சாத அறனில்லாதவன் அல்லனெனத் தலைவி இயற்படமொழிந்தாள் ; எ - று.

உஅ (உ)என்றியாம் பாட மறைநின்று கேட்டனன்
றாழிருங் கூந்தலென் றோழியைக் கைகவியாச்

---

பொதிக்க ணிறுஅற் பூம்புறம் புதைஇ, மதிக்கண் மறைந்த மாசுணமான, மணிவரை மருங்கி னணிபெற வொழுகி" பெருங். (க) ருo; ௩௪-௩௭. (இ) "முகிறவழ்பொற்,கோட்டிற் றொடுத்த விறாலுமொளிர் குளிர்மா மதியு மினிதுணர்வான், காட்டு கென்னக் குறமகளிர் தத்தங் கணவர்க் கைதொழுவார்" காசிகண்டம். காசியின்சிறப். எ. (ஈ) "விழுமணிக் கோட்டு நெற்றி யிறாலினை விளங்கு வெள்ளை, முழுமதி யென்று வான முள்ளெயிற் றரவங்காக்கு, மழைதவழ் சுவேத மென்னு மால்வரை"(உ) "கலைநிறை மதியி னோடு கழைவள ரிறாலைவானத், தலைமுலை மாத ரொப்பு நோக்கருங் கயிலை வெற்பு" இலிங்க. நவவருடத்தினடைவு. சு; நவவருடத்தினெல்லை. ௩௧. (ஊ) "புடைகலந்த தேனினங்கள் பகன்மதியை யிறாலென்னப் புகுந்து மொய்க்கும், குடுமிவரை" பிரமோத்தா. சிவதான. கஉ.

க. (அ)"அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ,தஞ்ச லறிவார்தொழில்" குறள். ௪உஅ. (ஆ) "அஞ்சுவதஞ்சி............வாழு மியல்புடை யார்" நாலடி. எ௪. இவைகளும்(இ)தறுகணன் என்பதற்கு 'அஞ்சத்தக்கவைகளை அஞ்சாதவன்' என எழுதியிருக்கும் உரையும் நன். வி. சூ. ௩௯. இங்கே அறிதற்பாலன.

உ. (அ) "ஒன்றிநாம் பாட மறைநின்று கேட்டருளி" கலி. ௪௧: ௪௧; (ஆ) "என்றியாம் பாட மறைநின்று கேட்டருளி" சீலப். (உ௪)

(பிரதிபேதம்) * பிணிகொண்டவன்,

(க)சாயலின் மார்பன் சிறுபுறஞ் சார்தர
(உ)ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென்
னுயிழை மேனிப் பசப்பு

எ - து: *என்று தந்நெஞ்சுடனே முன்மொழிந்து பின்பு யாங்கள்பாட மறைந்துநின்று கேட்டனனாய் மென்மையால் இனிய மார்பினையுடையான் தாழ்ந்த கரிய கூந்தலையுடைய என்றோழியை எனக்கு அவள் வரவுகூறுமற் கையைக் கவித்து என், சிறிய புறத்தைச் சேர என்னுடைய ஆராய்ந்த இழையினையுடைய மேனியிற் பசப்பு ஞாயிற்றுமுன்னர் நின்ற இருள்போலக் கெட்டதென்று யாம்† அவ்வாறுபாடவும், அவன்(ங)சிறுபுறஞ்சாராமையின் நம் மேனியிற்(ச)பசப்பு மாயாமல் நின்றதெனப் பிரிந்தவழிக் கலங்கினாள்; எ - று.

இது "சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொள் ளியற்கை, புல்லிய கிளவி யெச்ச மாகும்" (ரு)என்பதனாற் கூற்றெச்சமாம்.

இதனால், உயிர்ப்பென்னும் மெய்ப்பாடு தலைவிக்குத் தோன்றிற்று.

இஃது ஐஞ்சீரடியுஞ்சொற்சீரடியும் வந்த தரவுவந்து ஏனைய வெண்பா வாய் வந்த கலிவெண்பா. (சு)

---

க. (அ)"இன்சாயன்மார்பன்" (ஆ) "சாயலின் மார்பு" கலி. சுரு.: ரு, கூச: ௩அ.

உ. (அ)"ஞாயிற்றுமுன்னரிருள்போல மாய்ந்ததென், னுயிழையுற்றதுயர்" (ஆ)"ஆயிழை மடவர லவல மகலப்,பாயிருட் பரப்பினைப் பகல் களைந் ததுபோல...........வந்தனர்" (இ) "இருளு முண்டோ ஞாயிறு சினவின்" (ஈ) "பொங்கு பானுமுன் னிருளென முடிந்தது" (உ) "அங் கண்மா ஞாலமுண் டமரு மாரிருள், பொங்குபே ரொளிவர விளிந்து போனபோல்" (ஊ) "ஆயிரங் கிரணத் தலர்கதிர் முன்னம், பாயிருள் கெடுமெனப் பகர்பழ மொழியும்" (எ) "ஊழுறு வறுமை பரிதிவான வன்முன்னுள்ளிருட் பிழம்பென வொழியும்"(ஏ)"வெங்காரிருள் பானு விளங்க வொதுங்கு மாபோல்" (ஐ) "வினை முழுது மாயும் வயங் கொளியோன்மின்னுங்கனகவுதயவரைமேவவிருள்வீந் திடுவதுபோல்" (ஒ) "பாவம்...........சுடர்துறக்கு மிருள்போலப் பெயர்ந்த தன்றே" (ஓ)"தவனோ தயத்தி லிருளென்னச் சாய்ந்தான்"(ஔ)"இரவி பொற் கதிர் தெறுதலி னிரிதரு மிருளெ னத்திசை திசைதொறு முதுகிட" (ஃ) "சாப மொல்லைவெஞ் சுடர்மு னள்ளிரு ளெனவகன் றதே"(அஅ) "இருளை, யருணனுண்டென" (ஆஆ) "பொங்குகாரிரு ளிரவிகண் டெனப் புலர்ந்தாங்கு"

௩. சிறுபுறம் – புறக்கழுத்து.

ச. பசப்பு – தலைவனைப் பிரிந்திருக்கு மகளிர்க்குப் பிரி வாற்றாமையான் வருவதொரு நிறவேறுபாடு.

ரு. தொல். செய். சூ. உ௦௬.

(பிரதிபேதம்) * முன்மொழிந்து தன்னெஞ்சுடனே யென்றுமுன்பு யாங்கள், † இவ்வாறு,

(௪௫.) வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்
தேந்து மருப்பி னினவண் டிமிர்பூதுஞ்
சாந்த மரத்தி னியன்ற வுலக்கையா
லைவன வெண்ணெ லறையுர லுட் பெய்திருவா
மையனை யேத்துவாம் போல வணிபெற்ற
மைபடு சென்னிப் பயமலை நாடனைத்
தையலாய் பாடுவா நாம்;

அ தகையவர் கைச்செறித்த தாள்போலக் காந்தண்
முகையின்மேற் றும்பி யிருக்கும் பகையெனிற்
கூற்றம் வரினுந் தொலையான்றன் னட்டார்க்குத்
தோற்றலை நாணுதோன் குன்று;

௧௨ வெருள்புட னோக்கி வியலறை யூக
மிருடேங் கிறுவரை யூர்பிழி பாடும்
வருடைமான் குழவிய வளமலை நாடனைத்
தெருளத் தெரியிழாய் நீயொன்று பாடித்தை;

௧௬ நுண்பொறி மான்செவி போல வெதிர்முளைக்
கண்பொதி பாளை கழன்றுகும் பண்பிற்றே
மாறுகொண் டாற்று ரெனினும் பிறர்குற்றங்
கூறுத றேற்றுதோன் குன்று;

௨0 புணர்நிலை வளகின் றுளகமர்ந் துண்ட
புணர்மருப் பெழில்கொண்ட வரைபுரை செலவின்
வயங்கெழில் யானைப் பயமலை நாடனை
மணநாறு கதுப்பினாய் மறுத்தொன்று பாடித்தை;

௨௪ கடுங்க ணுழுவை யடிபோல வாழைக்
கொடுங்காய் குலைதொறூஉந் தூங்கு மிடும்பையா
லின்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்காற்
றன்மெய் துறப்பான் மலை;

எனவாங்கு;

௨௯ கூடி யவர்திறம் பாடவென் றோழிக்கு
வாடிய மென்றோளும் வீங்கின
வாடமை வெற்ப னளித்தக்காற் போன்றே.

இது வரைவுநீட ஆற்றளாயினவிடத்துத் தோழி தானுந் தலைவியும் வள்ளைப்பாடலுள் முருகனைப் பாடுவார்போல இருவர்க்கும் ஏற்பத் தலைவனைப்பாடத் தலைவி ஆற்றினமை *தோழி தன்னுள்ளே கூறுவாளாய்த் தலைவன் சிறைப்புறமாகக் கூறியது.

இதன் பொருள்.

(க)வேங்கை தொலைத்த வெறிபொறி (உ)வாரணத்
தேந்து மருப்பி னினவண் டிமிர்பூதுஞ்
சாந்த மரத்தி னியன்ற வுலக்கையா
(ங)லைவன வெண்ணெ (ச)லுறையுர லுட் †பெய்திருவா
மையனை யேத்துவாம் போல வணிபெற்ற
(ரு)மைபடு சென்னிப் (சு)பயமலை நாடனைத்
தையலாய் பாடுவா நாம்

---

க. யானைவேங்கைப்புலியைத் தொலைத்தலுண்டென்பதை, இந்நூற்பக்கம் உருக: க - ஆம் குறிப்பாலுணர்க.

உ. (அ) "யானை வெண்மருப் புலக்கை யறையுர லைவன மிடித்த" சீவக. கருசுஉ. (ஆ) யானைக்கொம்பை உலக்கையாகக் கொள்ளுதல் இந்நூற் பக்கம் உஙகூ: உ - ஆம் குறிப்பாலும் உணரப்படும்.

ங. ஐவனம், குறிஞ்சி நிலத்துக்கு உரியதென்றும் இது தினையைப் போலவே குறிஞ்சிநில மாக்களால் பயிர் செய்யப்படுவதென்றும் அருவி நீரால் விளைக்கப்படுவதென்றும், குறிஞ்சி நிலமகளிரால் விளைவின்கண் காக்கப்படுவதென்றும் பண்டை நூல்களிற் கூறப்பெற்றுள்ளது. "தேனுகு மடையை மாற்றிச் செந்தினைக் குறவர் முந்தி, வானநீ ராறுபாய்ச்சி யைவனம் வளர்ப்பர் மாதோ" என்று (கம்ப. வரைக்காட்சி. ஙச.) கம்பர் புனைந்துரைத்தனர். இதனோடு தினையும் கலந்து விதைக்கப்படுமென்பது புறம். கருக - ஆம் செய்யுளுரையால் தெரிகிறது. "மைபடு மால்வரை பாடினள்கொடிச்சி, யைவன வெண்ணெல் குறூஉ நாடனொடு" என ஐவனவெண்ணெல் ஒன்றென்றெண்ணும்படி கூறும் நற்றிணை. ஐவனமும் வெண்ணெல்லும் வெவ்வேறென்னும், மலைபடு கடாத்தினுரை.

ச. "அறை யுரல்" கலி. சக: ங. சீவக. கருசுஉ. பெருங். (உ) கச: ருo; சூளா. சுயம். கoசு.

ரு. (அ)"மைபடு மால்வரை" நற். ஙஎங: ங.(ஆ)"மைபடு சிலம்பின்" குறுந். ஙஎக, பரி. கசு: உ. (இ) "மைபடு குடுமிய குலவரை" பரி. கரு: கூ-கo.

சு. (அ)"பயமலை நாடன்" குறுந். கசங; (ஆ) "பாடிமி ழருவிப் பயமலை" மணி. கஎ: ருo.

(பிரதிபேதம்) * தன்னுள்ளே, † பெய்திருவேம், பெய்திருவம்.

எ - து: தையலாய்! நாம் இருவேமும் ஐவனமாகிய வெண்ணெல்லைப் பாறையாகிய உரலிலே சொரிந்து, புலியைக் கொன்ற *மதத்தான் மயங்கின புகரையுடைய யானையினது தலை யேந்தின கொம்பாலும் இனமான வண்டுகள் ஒலித்துத் தாதை ஊதுஞ் சந்தனமரத்தினுலும் பண்ணின உலக்கைகளாலே குற்று, முருகனைப் புகழ்வேம்போலே அழகுபெற்ற மேகம் உண்டாகின்ற தலைமையினையுடைய பயனையுடைத்தாகிய மலைநாட்டையுடையானைப் †பாடுவேம்; எ - று.

பாடுவாமென்னும் பொருளே பயப்பச் ‡செய்தலின் இறைச்சியிற் பிறந்த பொருள்காண்க. இஃது "இறைச்சியிற் பிறக்கும் பொருளு ............ மோர்க்கே" (௧)என்பதனுற் கொள்க. இஃது இரண்டு உலக்கையானும் பயன்கொண்டாற்போல அவன் பெயர்பாடுதலாற் பயன் கொள்ளாமையில் உள்ளுறையுவமமன்மை உணர்க.

அ (உ)தகையவர் கைச்செறித்த தாள்போலக் காந்தண்
முகையின்மேற் றும்பி யிருக்கும் பகையெனிற்

---

௧. தொல். பொருளி.சூ.௩௬. இச்சூத்திரத்தினுரையில் இவ்வுரையாசிரியர், இறைச்சியிற் பிறக்கும்பொருளுக்கு "வேங்கை........பாடுவா நாம்" என்பதனை மேற்கோள்காட்டி 'இதனுட் புலவுநாறியும் பூநாறியுந் தீதும் நன்றுமாகிய இறைச்சியாகிய உலக்கைகளாற் றலைவனைப்பாடும் பாட்டோடே கலந்து கூறத்தகாத தெய்வத்தையும் பாடுவாமென்னும் பொருள் பயப்பச்செய்த இறைச்சியிற் பொருளே பயந்தவாறும் இரண்டுலக்கையானும் பயன்கொண்டாற் [போல் அவை அன்பே] (போல ஐயன்பேர்) பாடுதலாற் பயன் கொள்ளாமையின் உள்ளுறையுவம மன்மையுங் காண்க' என்று எழுதியிருக்கிறார்.

௨. (அ) "மரகதமணித் தாள்செறிந்த மணிக்காந்தண் மெல்விரல்கள், பயிர் வண்டின் கிளைபோலப் பன்னரம்பின் மிசைப்படர" என (சிலப். எ: ௧௦ - ௧௧.) இவ்வுவமை ஒருவாறாக மாறிவந்திருத்தல் இங்கு ஒப்பு நோக்கற்பாலது. (ஆ) இவ்வணிகலத்துக்குள்ள தாள், தாழ், தாட்கூட்டு, தாள்செறியென்னும் பெயர்களை நோக்கின், இது முதலிற் காலணியின் பெயராயிருந்து பின்பு கைவிரலணிக்கும் வழங்கியிருக்குமென்று தோற்றுகிறது. (இ) "வாள்புரை விழியாயுன் மலரடி யணிமானத், தாள்புரை தளிர்வைகுந் தகைஞிமிறிவைகாணுய்" என்று (கம்ப. வனம். ௧எ.) கம்பர் கூறியிருத்தலும் நோக்கத்தக்கது. இது கைவிரலணிக்கும் நெடுநாட்குமுன்னே வழங்கப்பெற்றதென்பது, (ஈ) "கொடுங்குழை

(பிரதிபேதம்) * புகரை † பாடுவேமென்றுள். வெறிவாரணம் - மதத்தான்மயங்கின வாரணம். பாடுவாமென்னும் ‡ செய்தல் இறைச்சியிற்.

(க)கூற்றம் வரினுந் தொலையான்றன் (உ)னட்டார்க்குத்
தோற்றலை நாணுதோன் குன்று

எ-து: பகையென்றுகூறிற் கூற்றுவன்எதிர்வரினுங் கெடானுய்த் தன்னை உறவுகொண்டார்க்குத்தோற்றலைநாணுதவனுடைய மலை,(௩) தும்பி அழகினை

பெய்த செ[ழு]ஞ்செவிப் பேதை, சிறுதாழ்செறித்த மெல்விரல்சேப்ப, வாளையீர்ந்தடி வல்லிதின் வதைஇப், புகையுண் டமர்த்த கண்ணள்" நற். ௧௨0: ௩ - ௬. (உ) "மரகதத் தாள்செறி, காந்தண் மெல்விரல் கரப்ப வணிந்து" சிலப். (௬) ௬௭ - அ. என்பவற்றாலும் விளங்கும்.

க. (அ) "கூற்றுவெகுண்டு வரினு மாற்றுமாற் றலையே" பதிற். ௧௪: ௧0. (ஆ) "கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு, மாற்றலதுவே படை" குறள். ௭௬௫. (இ) "அருநவை நமனுமாற்றான்" சீவக. ௧௧௧௪. (ஈ)"கூற்றுவன் றன்னொடிவ் வுலகங் கூடிவந், தேற்றன வென்னி னும் வெல்ல வேற்றுள, மாற்றவன்றம்பி" (உ)"கூற்றையுங் கட்பொறி குறுகக் காண்பரே, லூற்றுறுகுருதியோ டுயிருமுண்பரால்" கம்ப. விபீடணனடை. ௬அ. இலங்கை கேள்விப். ௨௨. (ஊ) "மாமறலிநேர் வரினுந், தோற்க லாதவர் மூவருந் தம்முயிர் தோற்றார்" வில்லி. பதினன்காம்போர். ௧௧அ.

உ. (அ)"நட்டார்க்குத்தோற்றலை நாணுதோன்"என்பதனை 'அதற்கு வினை யுடைமையின்' என்னும் நான்காம் வேற்றுமையை முடிக்கவரும் பொருள்வேறுபாட்டுச் சூத்திரத்து'அப்பொருட்கிளவியும் அதன்பால' என்பதற்கு மேற்கோள் காட்டினர், நச்சினார்க்கினியரும் வேறொரு வரும்; (ஆ) சேனாவரையர் 'நட்டார்க்குத் தோற்கும்' என இதனை உரைநடை யாக எடுத்துக் காட்டினர்; தொல். வேற்றுமை. சூ. ௧௫. (இ)"ஆதியென் றதனானே..............'நட்டார்க்குத் தோற்றலை நாணு தோன்' என்பனபோல இதற்கு இதுவென்பது படவருவன பிறவுங் கொள்க" என்பர், இ - வி. உரையாசியர்; இ - வி. சூ. ௨0௧. (ஈ) "வன்பிற்றளரார் நட்டார்க்கு மடங்கித் தோற்ற ணுரே" விநாயக். அரசியற்கை. ௧௪௬.

௩. தும்பி கரு நிறமுடைத்தாதல்பற்றி "நீலக்கடைச்செறி" என்றார். இந்நூற்பக்கம் ௧௬0: உ - ஆங்குறிப்பும் "மணிநிறத்தும்பி" கலி. ௪௬: உ. என்பதும் அதன் குறிப்பும் "மணிச்சிறைத் தும்பி" குறுந். ௩௯௨, என்பதும் "தும்பி, யரியினங் கடுக்குஞ் சுரிவண ரைம்பால்" என்று (அகம். ௨௩. ௧௧ - உ) கருங்கூந்தற்குத் தும்பி உவமையாக்கப் பெற்றிருத்தலும் "நிறங்கருகித் தும்பி பாய்ந்துகைத்தனவே" (சீவக. ௧௨௨அ) என்புழி 'இயல்பாகக் கருகினவேனும் இவ்வருத்தத்திற்குக் கருகியென்றார்' என்றெழுதியிருக்கும்விசேடவுரையும் இங்கேஅறிதற் பாலன.

யுடைய(க) மகளிர் கையிலிட்ட தாட்கூட்டாகிய நீலக்கடைச்செறிபோலக்(உ) காந்தளினது முகையின்மேலே அஃது அலருங்காலம் பார்த்திருக்கும்; எ-று.

என்பதனால், நஞ்சுற்றத்தார் மனநெகிழ்ந்து வரைவிற்கு உடம்படுங் காலம்* பார்த்திருக்கின்றானென்றாளாக உள்ளுறையுவமங் கொள்க. இது பயவுவமப்போலி. போலவென்னும் ஏனையுவமம் இதற்குச் சிறப்புக்கொடுத்து

---

க. மகளிர்கைக்குக் காந்தள் உவமையாகக் கூறப்படுதலை கலி. ௫௯. ௩-௪-ஆம் அடிக்குறிப்பிற்காண்க; கையென்றது விரலையெனின் (அ) "நெடுவரைமிசைஇய காந்தண்மெல்விரல்" (ஆ) "செழுங்குலைக் காந்தள் கைவிரல்பூப்பவும்" (இ) "விரலே....................காந்தளங் கொழுமுகை போன்றன" (ஈ) "காந்தண் முகைபுரை விரலின்" (உ) "காந்தண் முகிழ்விரலாற் கண்ணிபுங் கைதொடாள்"(ஊ) "காந்தளஞ் செம்முகைகை, விரலென்றகொல் செறித்தார்"(எ) "காந்தண் மென்முகையின் முகிழ்விரல் குவித்து" என்பன ஒப்புநோக்குக.

உ. (அ) "அகலிலைக்காந்த ளலங்குகுலைப்பாய்ந்து, பறவையிழைத்த பல்கணிறாஅற், றேனுடை நெடுவரை" நற். ௧அ௫:, அ - ௧௦. (ஆ) "காந்த, ணறுந்தா தூதுங் குறுஞ்சிறைத் தும்பி" குறுந். உ௩௯. (இ) "நாறுகுலைக் காந்தட், கொங்குண் வண்டின்" ஐங். உஉ௬. (ஈ) "காந்த,ளணிமலர் நறுந்தா தூதுந் தும்பி"(உ) "காந்தட், கொழுமடற் புதுப்பூவூதுந் தும்பி" அகம். ௧௦அ: ௧௫ - ௬, ௧௩அ: ௧எ-அ. (ஊ) "கல்லோங் குயர்வரைமேற்காந்தண்மலராக்காற்,செல்லாவாஞ்செம்பொறி வண்டினம்" நாலடி. உஅ௩. (எ) "குலையுடைக் காந்த ளினவண் டிமிரும், வரையக நாடனும்" ஐந்திணையெழு. ௩.(ஏ)"நானிறச் சுரும்பும் வண்டு நன்மணியணியிற் சாரத்,தேனுக மலர்ந்து சாய்ந்த சேயிதழ்க் காந்தட் செம்பூ" கம்ப. கார்கால. உ௬. (ஐ) "பொன்மணி வண்டுவீழ்ந்த காந்தளம் போது போல" திருவிளை. திருமணப். ௧௫௯. எனக் காந்தளில் வண்டு மொய்ப்பதாகக் கூறுதல் காண்க. (ஒ) "சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்" முருகு. ௪௩. என்பதன் அமைதி 'தான் விரும்புதலின்' எனப் பெய்துரைத்த அதனுரையால் அறியலாகும். (ஓ) "நெருப்பவிர்ந்தனைய காந்த ணிரைநிரை மலர்ந்து நிற்பச், சுருப்பின நெருப்பென் றெண்ணித் தூரத்தே யகலுங்காட்சி,பருப்பதச் சிலைக்கைநாதன் பயந்தவன் முடிக்க ணேற, விருப்பன வென்று மூசா திடையொழிந் தகல்வ,போன்ற" என்பதும் அதுவே. (ஔ)"மலர்ந்த காந்தண் மாறூதிய, கடும்பறைத் தும்பி சூர்நசைத் தாஅய்ப், பறைபண் ணழியும் பாடுசா னெடுவரை" என்பதும் இங்கே அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * பார்த்திருக்கின்றாரென்றாளாக

நின்றது. (க) தொலையாமையுந் (உ)தோற்றலை நாணுமையும் முருகனுக்கு*உள வாகல் புராணங்களான் உணர்க.

கஉ †வெருள்புட னேக்கி வியலறை யூக
மிருடேங் கிறுவரை யூர்பிழி பாடும்
(ரு)வருடைமான் குழவிய வளமலை நாடனைத்
தெருளத் தெரியிழாய் நீயொன்று பாடித்தை

எ - து: தெரிந்த இழையினையுடையாய்! அகற்சியையுடைய பாறையிலிருந்த கருங்குரங்கைச் சேரவெருண்டுபார்த்து இருள்செறிந்த பக்கமலையிலே ஏறி இறங்கி ஆடும் வருடைமானின் குழவிகளையுடையனவாகிய வளப்பத்தையுடைய மலைநாடனை விளங்க நீஒன்று பாடுவாயென்ருள்; எ - று.

(ச)பாடித்தை,முன்னிலை வினைத்திரிசொல்;வருடைமான்குழவி தன் இளமையான் வெருளத்தகாத யூகத்தை வெருண்டாற் போல ‡நீயும் நஞ் சுற்றத்தார் வரைவிற்குஉடம்படாரோவெனக்கருதிச் சுற்றத்தாரை வெருளாநின்ருய்; அது தகாதெனக் கூறினளென உள்ளுறையுவமங்கொள்க. இது வினையுவமப் போலி. "தவலருஞ்|| சிறப்பினத் தன்மை நாடின், வினையினும் பயத்தினு

---

க (அ) "ஓங்குவிறற் சேஎ, யாரா வுடம்பினீ யமர்ந்துவிளை யாடிய, போரால் வறுங்கைக்குப் புரந்தர னுடைய..............திருந்துகோன் ஞமன்றன் மெய்யிற் பிரிவித், திருங்கண் வெள்யாட் டெழின்மறி கொடுத்தோன்" பரி. ரு: ருச - சுஉ என்பதனுலும் (ஆ) "இவ்வா றமரர் பொருமெல்லையி லீசன் மைந்தன்..................ஐவாளியினுற் சமனுற்ற லடக்கி னுனல்" கந்த. திருவிளை. ருசு. என்பதனுலும் தொலையாமை விளங்கும்.

உ. இது குறிக்குஞ்செய்தி, தந்தையாரை வலம்வந்து தமையனர் முன்பு பழம்பெற இவர் உலகுசூழ்ந்து பின்புவந்தனரென்பதோ,வள்ளிநாயகியாரால் மாலைகொண்டு இவர் கைபிணிக்கப் பெற்றனரென்பதோ, உடன்பயின்ற மழுவா ணெடியோன் குருகுபெயர்க் குன்று துளைக்க இவர் ஆற்றியிருந்தனரென்பதோ, வேறியாதோ, புராணம் வல்லார் வாய்க்கேட்டுணர்க.

ரு. (அ) குழவியென்னும் இளமைப்பெயர் வருடைக்கும் வருமென்பதற்கு "வருடைமான்குழவிய வளமலைநாடனை" என்பதுமேற்கோள்; தோல். மரபு. சூ. கஅ. நச். சீவக. ருருரு-ஆம் செய்யுளின் உரையும்பார்க்க. (ஆ) குழவியென்பது வருடைக்குமுரிய மரபுப்பெயரென்பர் மயிலைநாதர். நன். பொது. சூ. ருஎ. (இ) கலி. ருO: உக-உ. பார்க்க. (ஈ) வருடையின் செய்தியை கலி. ருO: ச-ஆம் அடிக் குறிப்பிற் காண்க.

ச. பாடித்தை கலி. சO: கO.

(பிரதிபேதம்) * உளதாகல், † வெருன்புடைநோக்கி, ‡ நீ நஞ்சுற்றத்தார், || சிறப்பிற்றன்மை

முறுப்பினு முருவினும், பிறப்பினும் வருஉந் *திறத்த வென்ப" என்னும் (க) உவமவியற் சூத்திரத்தில் 'திறத்த'என்றதனால் தலைவன் நாட்டிலுள்ளன கூறித் தலைவிக்கேற்ற உவமைதோன்றச் செய்தலுங் கொள்கவென்றார்.

க௬ நுண்பொறி (உ)மான்செவி போல (௩)வெதிர்முளைக்
கண்பொதி பாளை கழன்றுகும் பண்பிற்றே
(௪)மாறுகொண் டாற்றா ரெனினும் பிறர்குற்றங்
கூறுத றேற்றாதோன் குன்று

எ - து: செல்வமுதலியவற்றொடு மாறுகொண்டு அவற்றைப் †பொரு திருப்பரென்று பலருங் கூறினும் பிறர் குற்றத்தைக் ‡கூறுதலை அறியாதவன் குன்று நுண்ணிய பொறியையுடைய மானினுடைய செவியைப்போல மூங்கின் முளையினது கண்ணைப்பொதிந்த பாளை கழன்றுவிழும் பண்பினை யுடைத்தெனத் தலைவிகூறினாள்; எ - று.

இதனால் அவன் வரையாமையின் நம்மேனியிற் றோன்றிய வருத்தமும் நீங்கி நம் மேனியும் இனிப் பொலிவுபெறுமெனக் கூறினாளாக உள்ளுறை யுவமங்கொள்க. இஃது உருவுவமப்போலி. குற்றங்கூறுதல்தேற்றாதானெனவே நாஞ்செய்த தீங்குகளையுங் காணானென்றாள். முருகனும் திருமேனிகொண்டு திரிதலின் அவற்கும் குற்றங்கூறாமை || ஏற்றினாள். மேல் தோழிகூறுகின்றாள்.

உ௦ புணர்நிலை (௫)வளகின் குளகமர்ந் துண்ட
(௬)புணர்மருப் பெழில்கொண்ட வரைபுரை செலவின்
வயங்கெழில் யானைப் பயமலை நாடனை
(௭)மணநாறு கதுப்பினாய் மறுத்தொன்று பாடித்தை

---

க. தொல். உவம. ௬. உ௫.

உ. "விழிக்கு டைந்தமான் செவிகண்மெல் லியனல்லார் தடிந்தவ், வுழிக்க ளுற்றியாங் குயர்பணை கண்பொதி பாளை, கழிக்கும்" தணிகை. திருநாட்டுப். ௩எ.

௩. "எழாநெற், பைங்கழை பொதிகளைந் தன்ன விளர்ப்பின், வளையில் வறுங்கை" புறம். உ௫௩: ௩ - ௫.

௪. "மாறுகொண் டோரா மனத்தின ளாகி" மணி. உ௩: க௪௩.

௫. "இளகு காழகிற் சந்தனப் பொதும்பரெவ் விடனும், வளகு மேய்ந்து சேவகங்கொளு மாமத மொழுக்கும்" தணிகை. திருநாட்டு. ௩க.

௬. "புணர்மருப் பியானை" சீவக. க௬உக. "யானைப் புணர்மருப்பு" சீவக. உ௦அக, உககக.

எ. "அரிவை கூந்தலி, னறியவு முளவோ" குறுந். உ.

(பிரதிபேதம்) * திறத்தியல், †பொருதிருப்பர், ‡ கூறுதலறியாதவன், || ஏற்றினான் புணர்நிலை

எ - து: பிடியோடு கூடிய நிலைமையினை*யுடைய வளகென்னும்புதலினது தழையை மனம்பொருந்தித் †தின்ற, இணைந்த கொம்புகள் அழகுகொண்ட வரை நடந்ததனையொக்குஞ் செலவினால் விளங்குகின்ற அழகினையுடைத் தாகிய யானைகளையுடைய பயனையுடைய மலைநாடனை மணம் நாறும் மயிரினை யுடையாய்; முன் இயற்பட மொழிந்ததனை மறுத்து இனி இயற்பழித்து ஒன்று ‡பாடுவாயாக; எ - று.

நிலைமையையுடைய யானை, தின்ற யானை, அழகினையுடைத்தாகிய யானையென்க.

மருப்பெழில்கொண்டவரை, இல்பொருளுவமை.

இதனால் (க) விலங்குகளுந் தமக்கு வேண்டுவனவற்றை நுகர்ந்து வருத்த ||மின்றி ஒழுகினாற்போல நாமும் நமக்கு வேண்டுவனவற்றை நுகர்ந்து இல் லறத்தையும் நிகழ்த்தி வருத்தமின்றிஒழுகுமாறு வரைந்துகொள்வனென்று ளாக உள்ளுறையுவமங் கொள்க. இது பயவுவமப்போலி. மறுத்தொன்று பாடித்தை ÷என்றதன் பயன் இவள் களவொழுக்கங் கருதாமல் வரைந்து கோடலே கருதினளெனத் தலைவன் உட்கொண்டு கடிதின்வரைதலாம். = அது கேட்ட தலைவி கூறுகின்றாள்.

௨௪ (உ)கடுங்க (௩)ணுழுவை யடிபோல வாழைக்
கொடுங்காய் குலைதொறூஉந் தூங்கு மிடும்பையா
(௪)வின்மை ×யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்காற்
றன்மெய் துறப்பான் மலை

---

க. (அ) "கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை, யூழுறு தீங்கனி யுண்ணுநர்த் தடுத்த, சாரற் பலவின் சுளையொ டூழ்படு, பாறை நெடுஞ் சுனை விளைந்த தேற, லறியா துண்ட கடுவ னயலது,கறிவளர் சாந்த மேறல் சொல்லாது, நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்குங், குறியா வின்ப மெளிதி னின்மலைப், பல்வேறு விலங்கு மெய்து நாட, குறித்த வின்ப நினக்கெவ னரிய" அகம். உ: க - ௧௦. (ஆ) "எழுங்குலை வாழையி னின்கனி தின்றிள மந்தியந்தண், செழுங்குலை வாழை நிழ லிற் றுயில்சிலம்பா" கோவையார்: உ௫௦.

உ. "கடுங்கணிரும்புலி" கலி: ௬௫: உ௩ - ௪.

௩. (அ)"வெம்புலி யடிய பைங்காய்க்,கோழரையரம்பை"நைடதம். சுயம். கருக௯. (ஆ) "கதலிப் புலியடிக் குலை" சீறா. நாட்டு. ௩அ.

௪. "ஈத லிரந்தார்க்கொன் றாற்றா து வாழ்தலிற், சாதலுங் கூடுமாமற்று" கலி. ௬௧: ௧௧-உ. என்பதும் அதன் குறிப்பும் இங்கே ஒப்புநோக்கற் பாலன.

(பிரதிபேதம்)* உடையயானைவளகென், † தின்றயானை இணைந், ‡ பாடுவாயென்றாள் தோழி மருப், || இன்றியேஒழுகினாற், ÷ என்றதனாற்பயன், = கடுங்கணுழுவை, × உரைத்தாற்கு.

எ - து: மிடியாலே பொருளின்மையைச் சொன்னார்க்கு அப்பொருளை [அவர்க்கு] நிறைத்தலாற்றாதபொழுது தன்மெய்யைத் துறக்குமவன்மலை தறுகண்மையையுடைய புலியின் அடியைப்போல வாழையினது விளைந்தகாய்க் குலைகடோறுந் தூங்கும்; * எ - று.

புலியடிபோல வாழைக்குலை தூங்குமென்றதனான் நம்மைவரையாமையிற் கொடியன்போற் றோன்றினான், அவன் இனி வரைந்துகொண்டு நமக்கு இனியனாவனென உள்ளுறையுவமங்கொள்க. இது வினையுவமப்போலி.

இனி முருகற்கு எற்றுங்காற் பிறவித் தடுமாற்றத்தான் வீடு பெறுதலின்மையை உரைத்தார்க்கு அவ்வீடு பெறுந்தன்மையைத் தான் நிறைவித்தலை அவர்கள்கொள்ளமாட்டாதகாலத்துத் தன்றிருமேனியைக்கைவிட்டு அவர்கண் மனத்தே தங்குகின்றவனெனக் கூறுக. "ஒருநீ யாகத் †தோன்ற விழுமிய பெறலரும்பரிசினல்கும்"என்றார்(க)முருகாற்றுப்படையில்,(உ) "தன்னையுன்னி யென்னை, யாக்கிய பேர்ழ்தே யானவ னாயினேன்" என்பதனானும் உணர்க.

எனவாங்கு

எ - து: என்று; எ - று.

ஆங்கு, அசை.

உகூ கூடி யவர்திறம் பாடவென் றோழிக்கு
வாடிய மென்றோளும் வீங்கின
வாடமை வெற்ப னளித்தக்காற் போன்றே

எ - து: யானுந் தலைவியுங் கூடித் தலைவன் றிறத்தையும் முருகன் றிறத்தையும் பாடினேமாக, என்னுடைய தோழிக்கு அசைகின்ற மூங்கிலையுடைத்தாகிய வெற்பையுடையவன் அளித்தபொழுது போன்று முன் அளியாமையான் மெலிந்த மெல்லிய தோள்களும் சிறந்தன ; எ - று.

எனத் தன்னுள்ளே கூறுவாளாய்த் தலைவன் சிறைப்புறமாகக் கூறினாள்; அவன் கடிதாக வரைதற்கு.

இதனால், தலைவற்குச் சூழ்ச்சிபிறந்தது.

இப்பாட்டு முழுதும் முருகற்குப் பயன்படாது தலைவற்குப் பயன்பட்டு நின்றவாறு உணர்க.

இது கொச்சகங்களும் விரவி வந்தமையிற் கலிவெண்பாவின் வேறுபட்டு வந்த கொச்சகம். (எ)

---

க. முருகு. உகூச-ரு. அங்கு இப்பகுதியின் இறுதிச்சொல் நல்குமதியென்று கொள்ளப்பட்டு அதற்கு ஏற்ப இலக்கணக்குறிப்பும் எழுதப்பெற்றிருக்கிறது.

உ. 'தன்னையுன்னி..........யானவனாயினேன்' என்னும்இச்சொற்றொடர் திருமுருகாற்றுப்படை. கசக - ரு-ஆம் அடிகளினுரையில்மேற்கோளாக வந்துள்ளது.

(பிரதிபேதம்) * எனத்தலைவிகூறினாள்புலியடி, †தோன்றி.

(௪௪.) கதிர்விரி கனைசுடர்க் கவின்கொண்ட நனஞ்சார
லெதிரெதி ரோங்கிய மால்வரை யடுக்கத்
ததிரிசை யருவிதன் னஞ்சினை மிசைவீழ
முதிரிணர் ரூழ்கொண்ட முழவுத்தா ளெரிவேங்கை
வரிநுத லெழில்வேழம் பூநீர்மேற் சொரிதரப்
புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய்தித்
திருநயந் திருந்தன்ன தேங்கமழ் விறல்வெற்ப;

அ தன்னெவ்வங் கூரினு நீசெய்த வருளின்மை
யென்னையு மறைத்தாளென் றோழி யதுகேட்டு
நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூற றோணி;

௧௧ கூருநோய் சிறப்பவு நீசெய்த வருளின்மை
சேரியு மறைத்தாளென் றோழி யதுகேட்டாங்
கோருநீ நிலையலை யெனக்கூற றோணி;

௧௪ நோயட வருந்தியு நீசெய்த வருளின்மை
யாயமு மறைத்தாளென் றோழி யதுகேட்டு
மாயநின் பண்பின்மை பிறர்கூற றோணி;

எனவாங்கு;

௧௭ இனையன தீமை நினைவனள் காத்தாங்
கனையரும் பண்பினா னின்றீமை காத்தவ
ளருந்துய ராரஞர் தீர்க்கு
மருந்தாகிச் செல்கம் பெருமநாம் விரைந்தே.

இது வரையாது வந்தொழுகுந் தலைவனை, தோழி, தலைவியது கற்பு *மிகுதியும் இவ்வொழுக்கம் அலராகின்றமையும் அவளது ஆற்றமையுங் கூறி வரைவுகடாயது.

இதன்பொருள்.

(௧)கதிர்விரி கனைசுடர்க் கவின்கொண்ட (உ)நனஞ்சார
லெதிரெதி ரோங்கிய மால்வரை யடுக்கத்

---

௧. கனைசுடர், கலி. ௧உ0: அகம். ௪௭: ௬.

உ. "நனஞ்சாரல்" கலி. ௪௫: ௬. ௫உ: ௬.

(பிரதிபேதம்) * மிகுதியு மலராகின்றமையும்.

தகிரிசை யருவிதன் னஞ்சினை மிசைவீழ
(க)முதிரிண ரூழ்கொண்ட (உ)முழவுத்தா (௩)ளெரிவேங்கை
(ச)வரிநுத லெழில்வேழம் பூநீர்மேற் சொரிதரப்
புரிநெகிழ் (ரு)தாமரை மலரங்கண் வீறெய்தித்
திருநயந் திருந்தன்ன தேங்கமழ் (சு)விறல்வெற்ப

எ-து: எதிரே எதிரேஓங்கிய பெருமையையுடைய மலையினது அகர்சியையுடையசாரலில் (எ) இளஞாயிற்றினுடைய விரிகின்ற செறிந்தகிரணங்களினுடைய அழகைத் தன்னிடத்தேகொண்ட மாணிக்கப்பாறையிலே நிற்கப்பட்டு முழங்குகின்ற ஓசையையுடையவாய் இரண்டுமலையினின்றும் வீழ்கின்ற

---

க. (அ) "முதிரிணர்" (ஆ) "முதிர்கோங்கின் முகை" கலி. ருசு: உ, உ௩. (இ) "முதிர்மலர்" பெருங். (ச) ரு: சஅ.

உ. (அ) "முழாவரைப்போர்தை" (ஆ) "முழா அரைப் போர்தை" (புறம். அரு: எ. ௩எரு: ச.) (இ) வேம்பின் முழுவரை முழுமுதல்" (பதிற். ரு-ம் பதி. க௩-ச) என மரத்தினடிக்கு முழவு உவமிக்கப்படுதல்காண்க.

௩. (அ) "எரியகைந் தன்ன வீததை யிணர, வேங்கையம் படுசினை" நற். ௩எகூ: ௩ - ச; (ஆ) "எரியருள் வேங்கை" ஐங். உகூச; (இ) "எரியிணர்வேங்கை" பரி. ககூ: எஎ; (ஈ) "எரிவேங்கை" கலி. சரு: சஎ; (உ) "எரிமருடோன்றல வொண்பூ வேங்கை" (பி - ம்) அகம். உகஅ: உ0 - உக.

ச. "நான்மருப்பின் மதயானை நறியபைந் தாமரை மடந்தையைத், தேன் மதர்ப்பத் திளைத்தாங்கு" என்புழி 'நான் மருப்பென்பது யானையிரண்டினை புணர்த்திற்று' என்று விடயமும் 'இரண்டானை பக்கத்தே நின்று நீரைச்சொரிய நடுவே தாமரைப்பூவிலே யிருந்த திருமகளைத் திளைத்தாற்போலே' என்று பொருளும் கூறி "வரிநுத லெழில்வேழம் ............திருநயந் திருந்தன்ன" என்பதை மேற்கோள் காட்டினர், நச். சீவக. உருகூரு. (ஆ) "நிரைத்த யானை முகத்துவரி கடுப்ப" நற். கஎகூ: ரு; (இ) "களிறு தன், வரிநுதல் வைத்த வலிதேம்பு தடக்கை" அகம். ௩சகூ: கக - உ. (ஈ) "களிற்று முகவரியின்" புறம். கககூ: உ.

ரு. "பெருமலர்ப் பிரிந்த திருமக ளம்மல,ரருங்கவினெய்தச் சென்று சேர்ந் தாங், கருங்கலத் தொண்மனை பொலியப், பெருந்தகைத் தோனி பெயர்ந்தனை சென்மே" தமிழ்நெறி. மேற்.

சு. "விறல்வெற்பு" இந்நூற்பக்கம் ருக - ரு - ஆங் குறிப்பும் கலி. ரு௩: உ. 'விறன்மலை' என்பதன் குறிப்பும் ஈண்டு ஒப்புநோக்கற்பாலன.

எ. (அ) "வீறு பஞ்சின்றி யமுதநெய் மாட்டிய விளக்கே, சீறு வெங்கதிர் செறிந்தன பேர்கல திரியா, மாறின் மண்டில நிரப்பிய மாணிக்க மண்க்கற். பாறை மற்றொரு பரிதியிற் பொலிவன பாராய்" என்பது

அருவி தனது அழகியகொம்புகளின்மேலேவீழ்தலாலேமுதிர்ந்தகொத்துக்கள் அலர்தல்கொண்ட முழவுபோலுந் தாளினையுடைய நெருப்புப்போலும் வேங்கை, புகரினையுடையமத்தகத்தினையும் அழகினையுமுடைய (க) யானைகள் பூவொடு கூடிய நீரை மேலே சொரியாநிற்க எக்காலமும் முறுக்கு நெகிழ்ந்த தாமரைமலரினது அழகையுடைய(உ) அல்லியிலே(ங)வீறுபெற்றுத் திருமகள் விரும்பியிருந்தாலொத்த தேஜுறும் வெற்றியினையுடைய வெற்பனே ; எ-று.

சுடரின் கவினைக்கொண்ட அடுக்கமெனவே மாணிக்கப்பாறை யென்னும் பொருள் தந்தது. எதிர் எதிர் ஓங்கிய வரைகளைத் தலைவன் சுற்றத்தாருந் தலைவி சுற்றத்தாருமாகவும், அவற்றிடையடுக்கத்தைத் தலைவன் மனையாகவும், இரண்டருவியும் வீழ்கின்றதனை இருவகைச்சுற்றத்தாருஞ் செய்கின்ற சிறப்புக்களாவும், இணர் ஊழ்கொண்டதனைப் புதல்வர்ப் பயத்தலாகவும், வேங்கையைத் தலைவியாகவும் உள்ளுறையுவமங்கொள்க. இது பயவுவமப்போலி. இதனாற் கூறியது நின் நாட்டில் உறைகின்ற வேங்கை சிறப்பெய்தினாற் போலத்தலைவியும் நின்னில்லின்கண்வந்துசிறப்பெய்துமாறு கடிதின்வரைந்து கொள்கவென்றதாயிற்று. வரிநுதலெழின் முதலாகத் திருநயந்திருந்த(ன்ன) வென்ற எனையுவமம் *முற்கூறிய உள்ளுறையுவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச்சிறப்புக்கொடுத்தாலும்உள்ளுறையுவமம்போலத் திணையுணர்தலைத் தள்ளாது நின்றது. இதற்கு (சு)விதி முற்கூறினாம்.

---

(கம்ப. சித்திர. கரு) இதனோடு ஒப்புநோக்கற்பாலது. (ஆ) "மஞ்சளாவிய மாணிக்கப் பாறையின் மறைவ, செஞ்செவேநெடு மரகதப் பாறையிற் றெரிவ, விஞ்சை நாடியர் கொழுநரோ டினர் விமலப், பஞ்ச ளாவிய சீறடிச் சுவடுகள் பாராய்" என்றும் (கம்ப. சித்திர. உ0) 'மாணிக்கப்பாறையிடத்து' என்றும் (கலி. சரு. உரை) பிறவிடத்தும் மாணிக்கப்பாறை கூறப்படுதலும் காண்க.

க. (அ) "கள்ளவிழ் கமழ்கோதைக் காவலன் றிருமகளை, வெள்ளிரு மதயானை விழுமணிக் குடமேற்றித், தெள்ளறன் மண்ணுநீ ராட்டினர் தேமலர்மே, லொள்ளிழை யவளொத்தா ளுருவநுண் ணுசுப்பின்னாள்" (சீவக. உசஙக.)(ஆ) "தைய லாளையொர் தாரணி தோளினு,னெய்கொளோதியி னீர்முகந் தெற்றினான், செய்ய தாமரைச் செல்வியைத் தீம்புனல், கையி னாட்டுங் களிற்றர சென்னவே" (கம்ப. நீர்விளை. உரு.) (இ) "நடுவே திருவும் இரண்டுபுறத்தும் இரண்டுசெங்கழுநீர்ப்பூவும் இரண்டு பிடியுமாக வகுத்த உத்தரக்கற்கவி" (நெடு. அக - ரு. விசேடவுரை) என்பவைகளும் இந்நூற்பக்கம் உகூஎ: சு. (அ) குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

உ. (அ) "அல்லிசே ரணங்கிற்கு"(ஆ) 'அல்லியுட் பாவையன்னாள்" சீவக. ககூஉ, கரு0ரு; (இ) "அல்லி யங்கமலை" கூர்ம. இராமனவ. கOங.

ங. வீறு - வேறொன்றற்குமில்லாத அழகு.

சு. இந்நூல் உகக - ஆம் பக்கம் பார்க்க.

(பிரதிபேதம்) * முதற்கூறிய.

அ (௩) தன்னெவ்வங் கூரினு நீசெய்த வருளின்மை
யென்னையு மறைத்தாளென் றேழி யதுகேட்டு
நின்லை யான் பிறர்முன்னர்ப் பழிகூற றுணி

---

௧. "தன்னெவ்வங் ........பழிகூற றுணி" என்றபகுதியை, (அ)'காதன் மிகுதியுளப்படப்பிறவும்' என்புழி, பிறவுமென்பதனுல் தலைமகள் தன்னை ய[ழி](றி)ந்தமை (தோழி) கூறுதலும் தலைவன் மாட்டுவரும் இடையூறஞ்சுதலுங்கொள்கவென்றுகூறித் தலைமகள் தன்னைய[ழி](றி)ந்ததற்கு, இளம்பூரணரும், (ஆ) 'எண்ணரும்பன்னகை கண்ணியவகையினும்' என்புழி, பலநகைகுறித்த பகுதி என்னைமறைத்த லெவனுகியரென்றலும் அறியாள் போறலும் குறியா[ள்] கூறலும் படைத்துமொழி கிளவியும் குறிப்பு வேறுகொளலும் பிறவுமாமென்றுகூறிப் பழிகூறவேனென்று தலைவி குறியாததொன்றைத் தோழி கூறினதற்கு நச்சினார்க்கினியரும் தொல். கள. சூ. உ௩. (இ) தலைமகளறிவு தலைமகற்கு அறிவுறுத்தற்கு நாற்கவிராசநம்பியும்; நாற்கவி. சூ. ௧௬௬. மேற்கோள் காட்டினர். (ஈ) "ஊரல வெடுத்தரற்ற வுள்ளாய்நீ துறத்தலிற், கூருந்தன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண்மன்" கலி. ௧உச: ௫ - ௬. (உ) "தானும் யானுமென் றிருவே றிலமே, யானு மறியாக் கரப்பினண், மானுண் கண்ணி வரையர் மகளே" தமிழ்நெறி. மேற். (ஊ) "கன்னிய ருற்றநோய் கண்ண ஞர்க்குமஃ, தின்னதென் றுரையலர் நாணின்" சீவக. ௧௦உஅ. (எ) "மெல்லிய லொருத்திதான் விரும்புஞ் சேடியைப், புல்லிய கையினள்போதி தூதெனச், சொல்லுவா னுறவுற நாணுஞ் சொல்லல, ளெல்லையில் பொழுதெலா மிருந்துவிம்மினுள்" கம்ப. உண்டாட்டு. ௪௬. (ஏ) "தாமுறு காமத் தன்மை தாங்களே யுரைப்ப தென்ப, தாமென லாவதன்றோ லருங்குல மகளிர்க்கம்மா" கம்ப. சூர்ப்ப. ௪௫. (ஐ) "தையனல்லாள்பழி சாற்றவல்யா, னென நாணி நின்பழி தான்மறைத் தாளன்ப வென்னையுமே" தஞ்சை. உ௩௫. (ஒ) "திறற்கே புலியன்ன கோழிக் குலோத்துங்க சென்னிவெற்பி, லுறற்கே தஞ் சொல்லி யுனைப்பழித் தேன்சுழித் தோடுபொன்னி, யறற்கேச வல்லி யதற்குள நாண் யெனமுதலாம், பிறர்க்கே யொளிப்பதொளித்தா ளெனக்கும் பெருந்தகையே" குலோத்துங்க. உ௭௧. (ஓ) "தெரிவையர்க்குளங் கூசு மாசைநோய் கூறுகிற்பதென், றெம்மனோர்களுஞ் சொல்வர்" வில்லி.-வேத்திர. ௫. (ஔ) "முத்தே நிகர்த்த குறுநகை யாளை முதுக்குறைசோ, தித்தேன்றன் னுளை மறைத்தா ளெனையுஞ் செகதலத்தி, லெத்தேவ ரும்புக ழாழ்வார் குருகை யிறையவ நான், பொய்த்தேனு முன்னைப் பழித்தாலுஞ் சற்றும் பொறுக்கிலளே" மாறன்கோவை. உ௬௬. (ஃ) "தற்பழி யாகநின் றன்பழி நாணித் தலைவறக், கற்பழி யாது மடமாதென்னையுங் காந்தனளே" திருவேங்கை.

எ-து: என்னுடைய தோழி தன்னுடைய வருத்தமுறுநிற்கவும் நீ செய்த அருளில்லாமையை என்னையும் உட்பட மறைத்தாள்; அவள் இங்ஙனம் மறைத்தது அவ்வருளின்மையைக் கேட்டு யான் நின்னைப் பிறர்முன்னே பழி கூறுதலைத் தான் நாணிக்காண்; எ - று.

யான் பழிகூறுவேனென்று தான் நாணியெனத் தலைவி குறியாததொன்றைக் கூறினமையின் *இது (க)குறியா கூறலாம்.

உம்மை, சிறப்பு.

கக கூருநோய் †சிறப்பவு நீசெய்த வருளின்மை
சேரியு மறைத்தாளென் றோழி யதுகேட்டாங்
கோருநீ ‡நிலையலை யெனக்கூற றுணுணி

எ - து: என்னுடைய தோழி மிகுகின்ற காமநோய் சிறவாநிற்கவும் நீ செய்த அருளில்லாமையைச் சேரியிலுள்ளாரும் அறியாதபடி மறைத்தாள்; அவள் இங்ஙனம் மறைத்தது அவ்வருளின்மையைக் ||கேட்குமப்பொழுதே நீ நிலைபே றுடையையல்லையென்று யான் பிறர்க்குக் கூறுதலைத் தான் நாணிக்காண்; எ - று.

உம்மை, சிறப்பு. (உ)ஓரும், அசை.

கச நோயட வருந்தியு நீசெய்த வருளின்மை
யாயமு மறைத்தாளென் றோழி யதுகேட்டு
மாயநின் பண்பின்மை பிறர்கூற றுணுணி

---

உ௩அ. (அஅ) "வெற்பா வுன் பழியை யன்னை, பண்ணைமின் ஞரென வேயறி யாவகை பார்த்தெனையும், பண்ணையுந் தேமொழி நாணு மறைத்தனள் பாங்குறவே" திருவாவடுதுறைக். உ௫ச. (ஆஆ) "நண்பாமுழு முத்தமுலை, யுழியேறு பீருங் கழலும் வளையு முணர்ந் துனக்குப், பழியேறு மென்று மறைத்தா ளேனையும் பசுங்கொடியே" சீகாழி. உஅக. என்பவைகள் இத்தாழிசைக் கருத்தையும் (இஇ) "தன்னையுந் தோளையுந் தோளினில் லாவரிச் சங்கை யுங்கண்,டுன்னை யிங் கோது முறுபழி நாணி யுளங்கிடந்த, தன்னையுஞ் சேரியு மாயத் துளாரு மயலுமன்றி, யென்னையுங் கூடவெற் பாமறைத் தாளென் னிளங்கொடியே" அம்பிகா. உசுசு. என்பது தாழிசை மூன்றன் கருத்தையும் ஒத்திருத்தல் காண்க.

க. இந்நூற்பக்கம். உசுக: க - ஆம் குறிப்பில் (ஆ) பார்க்க.

உ. ஓரும் என்பதைப் புறனடையால் அசையெனக் கொண்டார், நச்; தோல். இடை. சூ. சஅ.

(பிரதிபேதம்) * அதுகுறியாள் கூறலாம், குறியாது கூறலாம். † வெய்ப்பவும், ‡ நிலையிலை, || கேட்டு அப்பொழுதே.

எ - து: என்னுடைய தோழி காமநோய் வருத்துகையினாலே வருந்தியும் நீசெய்த அருளில்லாமையை ஆயத்தையும் மறைத்தாள்; அவள் இங்ஙனம் மறைத்தது அவ்வரு ளின்மையைக் கேட்ட மாயத்தை வல்ல நினது பண்பில்லாமையைப் பிறர்கூறுதலைத் தான் நாணிக்காண் ; எ - று.

ஆயத்திற்கும் வருத்தம் புலப்படாமை மறைத்தாளென்ற உம்மை, சிறப்பும்மை.

*எனவாங்கு, அசை.

க௮ இனையன தீமை நினைவனள் காத்தாங்
கனையரும் பண்பினா னின்றீமை காத்தவ
ளருந்துய ராரளர் தீர்க்கு
மருந்தாகிச் செல்கம் பெருமநாம் விரைந்தே

எ-து: நினது தீமையான் உண்டாகிய அருந்துயரத்தை அத்தன்மைத்தாகிய அரிய நற்குணத்தினாலே நீ பின்னர்க் காத்தாற்போல இத்தன்மையனவாகிய தீமைகளைப் பிறரறியாதபடி நினைத்தாளாய்க் காத்தவளுடைய ஆரளரைத்தீர்க்கும் மருந்தாகிப் பெருமா ! நாம்விரைந்துசெல்வேம் ; †எ - று.

தீமையாயின: இட்டுப் பிரிவும் அருமை செய்தயர்த்தலுமாம்.

இதனால், தலைவற்கு ‡விரைவுபிறந்தது.

இஃது எழடித்தரவும் மூன்றடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. (அ)

(சரு) விடியல்வெங் கதிர்காயும் வேயம லகலறைக்
கடிசுனைக் கவினிய காந்தளங் குலையினை
யருமணி யவிருத்தி யரவுநீ ருணல்செத்துப்
பெருமலை மிளிர்ப்பன்ன காற்றுடைக் கனைபெய
லுருமுக்கண் ணுறுதலி னுயர்குர லொலியோடி
நறுவீய நனஞ்சாரற் சிலம்பலிற் கதுமெனச்
சிறுகுடி துயிலெழூஉஞ் சேணுயர் விறல்வெற்ப ;

அ கால்பொர நுடங்கல கறங்கிசை யருவிநின்
மால்வரை மலிசுனை மலரேய்க்கு மென்பதோ
புல்லாராப் புணர்ச்சியாற் புலம்பிய வென்றோழி
பல்லிதழ் மலருண்கண் பசப்பநீ சிதைத்ததை;

க௨ புகர்முகக் களிறொடு புலிபொரு துழக்குநின்
னகன்மலை யடுக்கத்த வமையேய்க்கு மென்பதோ

(பிரதிபேதம்) * ஆங்கசை, இனையின தீமை,† என வரைவு கடாவினாள். ‡ வரைவு.

கடையெனக் கலுழ்நோய் கைம்மிக வென்றோழி
தடையின திரண்டதோ டகைவாடச் சிதைத்ததை ;

கசு சுடருற வுறநீண்ட சுரும்பிமி ரடுக்கத்த
விடர்வரை யெரிவேங்கை யிணரேய்க்கு மென்பதோ
யாமத்துந் துயிலல ளலமரு மென்றோழி
காமரு நல்லெழில் கவின்வாடச் சிதைத்ததை;

எனவாங்கு;

உக தன்றீமை பலகூறிக் கழறலி னென்றோழி
மறையிற்றன் மருவுற மணந்தநட் பருகலாற்
பிறைபுரை நுதலவர்ப் பேணிநம்
முறைவரைந் தனரவ ருவக்கு நாளே.

இது வரைவிடையாற்றததலைவிக்குத் தோழி தான் தலைவனை நெருங்கி வரைவுகடாவ அதுகேட்ட தலைவன் வரைவுமுயற்சியான் வருதல் இடையிட்டதூஉந் தமர்வரைவெதிர்ந்ததூஉங் கூறி அவளை ஆற்றுவித்தது.

இதன் பொருள்.

(சரு.) (க) விடியல்வெங் கதிர்காயும் வேயம லகலறைக்
கடிசுனைக் கவினிய (உ)காந்தளங் குலையினை

---

க. விடியலென்பது நாள்வெயிற் காலையென்னும் பொருளில் வருதற்கு, "விடியல்வெங் கதிர்காயும் வேயம லகலறை" என்பது மேற்கோள். தொல். அகத். சூ அ. நச். இ - வி. சூ. ௩அரு.

உ. காந்தட் குலையும் அரவும் ஒத்திருத்தல்: (அ) "பாம்புபை யவிந்தது போலக் கூம்பிக், கொண்டலிற் றலைந்த வொண்செங் காந்தள்" (ஆ) "காந்த, ணறுந்தா தூதுங் குறுஞ்சிறைத் தும்பி, பாம்புமிழ் மணியிற் றோன் றும்" நறுந். கஅரு, உ௩௧. (இ) "திருமணி யுமிழ்ந்த நாகங் காந்தட், கொழுமடற் புதுப்பூ வூதுந் தும்பி, நன்னிற மருளு மருவிடர்" அகம். க௩அ: கஎ - கக. (ஈ) "அணர்த்தெழு பாம்பின் றலைபோற் புணர்க்கோடல், பூங்குலை யீன்ற புறவு" கார். கக. (உ) "பூங்கோடலோடி-யுருமுற்ற, வைந்தலை நாகம்புரையும்" திணைமாலை. க௦எ. (ஊ) "ஓங்க லிறவரைமேற் காந்தள் கடிகவினப், பாம்பென வோடி யுருமிடிப்பக் கண்டிரங்கும்" (எ) "கோடலங் கூர்முகை கோளரா நேர்கருத" திணைமொழி. ௩, உ௧. (ஏ) "மலர்க்காந்தளங் குறி பையரா விரியும்" (ஐ) "பைவாய் நாகங் கோடலீனும்" (ஒ) "கோட லரவீனும்" (ஓ) "பையரவம் விரிகாந்தள்" தேவாரம்.

யருமணி யவிருத்தி(௧)யரவுநீ ருணல்செத்துப்
(௨)பெருமலை மிளிர்ப்பன்ன காற்றுடைக் (௩)கனைபெய
லுருமுக்கண் ணுறுதலி னுயர்(௪)குர லொலியோடி
நறுவீய (௫)நனஞ்சாரற் சிலம்பலிற் கதுமெனச்
சிறுகுடி துயிலெழூஉஞ் சேணுயர் (௬)விறல்வெற்ப

---

(ஔ)"வாளெயிற்றரவம்போல வான்றலை தோன்றவார்ந்த,தாளுடைக் கோட றம்மிற் றழீஇயின காத றங்க, மீளல வாகி மன்ன விழைவன வுணர்வு வீந்த, கோளர வென்னப் பின்னி யவற்றொடுங் குழைந்து சாய்ந்த" கம்ப. கார்காலப். ௨௭. (ஃ) "முள்வாளெயிற் றரவம்மென முகிழ்விண்டன காந்தள்" பாக. ௧௦. வேங்குழல். ௧௨. (அஅ) "அரா நிவந் திவர்ந்தெனக், களிதரு கோடல்பா சரும்பு கான்றவே" காஞ்சி. கழுவாய். ௧௪௬.

௧. உருமேறு காந்தளை அரவாகக் கருதலுண்டென்பது இந்நூற்பக்கம் ௨௭௨: ௧-ஆம் குறிப்பில் (ஊ) மேற்கோளால் அறியலாகும்; "செயலை, யோங்குசினைத் தொடுத்த வூசல் பாம்பென, முழுமுத றுமிய வுருமெறிந் தன்றே" எனவும் (அகம். ௬௮: ௫ - ௭.) வருதலால் இஃது அரவென்று கருதியதனை எறியு மியல்பிற்றுப் போலும்.

௨. (அ)"காலொடு வந்த கமஞ்சூன் மாமழை,........யிமயமுந் துளக்கும் பண்பினை"(குறுந். ௧௫௮)என்பதும்(ஆ)"காம்புடை விடரகஞ் சிலம்பப் பாம்புடன், றேங்குவரை மிளிர வாட்டி வீங்குசெலற், கடுங்குர லேறொடு கனைதுளி தலைஇப், பெயலானாதே வானம்" (இ) "ஈர்ங்குர லுருமி னார்கலி நல்லேறு, பாம்புகவி னழிக்கு மோங்குவரைமொத்தி" (ஈ) "மாமழை..............ஓங்குவரை மிளிர வரட்டிப் பாம்பெறிபு" (நற். ௫௧: ௨ - ௫, ௧௧௪: ௯ - ௧௦, ௩௪௭: ௧-௩;)(உ)"அஞ்சுவரு மரபின் வெஞ்சினப் புயலே,றணங்குடை யரவி னருந்தலை துமிய, நின்றுகாண் பன்ன நீண்மலை மிளிரக், குன்றுதூ வெறியு மரவம் போல" (ஊ) "கோடிறு, புருமெறி மலையி னிருநிலஞ் சேர"' (புறம். ௨௧௧: ௧ - ௪, ௩௭௩.....;) (எ) "உருமெறிந் தெங்கும், பெருமலை தூவெறிந் தற்றே" (கள. ௬) என்பவைகளும் இங்கே அறிதற்பாலன.

௩. "கனைபெயல்" ஐங். ௪௦௫; கலி. ௪௬: ௧௮,௪௮:௧௫,௯௦: ௨௨,௧௧௬:௧௪; திணைமொழி. ௨௮.

௪. "இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்" நாலடி. ௧௦௦.

௫. "நனஞ்சாரல்" கலி. ௪௪: ௧.

௬. இந்நூற்பக்கம் ௨௬௭: ௬ - ஆம் குறிப்புப் பார்க்க.

எ-து: விடியற்காலத்து விரும்பிய (க) ஞாயிற்றைக் கெடுக்கும் மூங்கில் நெருங்கின அகன்ற(உ)மாணிக்கப்பாறையிடத்து மணத்தையுடைய (ங) சுனை யிடத்தே அழகுபெற்று வளர்ந்த காந்தளினது அழகிய குலையினைப் பெறுதற் கரிய(ச)மணி விளங்குகின்ற பொறியினையுடைய(ரு)பாம்பு நீரை உண்டலாகக் கருதி, பெரிய மலைகளைக் கீழ்மேலாக்குமாறுபோலே இருக்கின்ற காற்றினை

---

க. (அ) ஞாயிற்றைக்கெடுக்கும் மாணிக்கமென்பதனோடு இருள்பருகுமணி யென்பதற்கு "உதயகிரியிற் சிந்தூர அருவி வீழ்ந்த சிந்தூராகரத்திற் பதினாறு சதுர்யுகம் சிவப்பேறின முழுமாணிக்கம் இருளைக்கெடுக்கு மென இவ்வுரையாசிரியர் (சீவக. கசுக.) எழுதியிருக்கும் விளக்கமும் (ஆ) "ஐவனங் காவலர் பெய்தீ நந்தி, ஞெளிதிகழ் திருந்து மணி நளியிருளகற்றும், வன்புல நாடன்" (புறம். க௭உ: சு - அ.) என்பதும் ஒப்பிடற் பாலன.

உ. "மாணிக்கப்பாறை" கலி. சச.

ங. "அரவுடன் றவைபோல விரிந்த குலை................சுனைகழிந்து தாங்குவன" பரி. உ0: கக - க0க.

ச. "நாகப்பாம்பின் றலையில் மணியுண்டென்பது (அ)"பாம்புமணி யுமிழ" (ஆ) பாம்புமிழ் மணியிற் றோன்றும்" (இ) "பெருமலை வயின்வயின் விலங்கு மருமணி, யரவழங்கும்" (ஈ) "நாம நல்லராக் கதிர்பட வுமிழ்ந்த, மேய்மணி" (உ) "பாம்பின், திருமணி விளக்கில்" (ஊ) "அரவுமிழ் திருமணி" (எ) "மேய்மணி யிழந்த பாம்பின்" (ஏ) "அர வுமிழ் மணியில்" (ஐ) "எழ்மணியங் கெழுணியுத்திக், கட்கேள்விக் கவை நாவி, னிறனுற்ற வராஅப்போலும்" (ஒ) "அருமணி யிழந்த நாகம் போன்றதும்" (ஓ) "நன்மணி யிழந்த நாகம் போன்று" (ஔ) "பைபருகு மணியுமிழ்ந்து பணநாக மிரைதேரும்"(ஃ)"மணியுமிழ்ந்து மாமலைமேன் மேய்வனவு நாகம்"(அஅ) "இழந்தமணி புற்றரவெதிர்ந்த தெனலானுள்" (ஆஆ) "அரவின்வெஞ் சுடிகை கொண்ட வவிர்மணி" (இஇ) "அரவுமிழ்ந்த செம் மணிக்கணம்" என்பவற்றாலும் இந்நூற் பக்கம் உ௭உ: உ-ஆங் குறிப்பில் (ஆ, இ) இப்பக்கம் ரு-ஆங் குறிப்பில் (இ, ஈஈ, எஎ) என்பவற்றின் மேற்கோள்களாலும் அறியலாகும்.

ரு. உருமேறு பாம்பை எறியுமென்பது மரபு: (அ) "நாகத், தணங்குடை யருந்தலை யுடலி வலனேர், பார்கலி நல்லேறு திரிதருங், கார்செய் மாலை வரூஉம் போழ்தே"(ஆ)"கேழ்கிள ருத்தி யரவுத்தலை பனிப்பப், படுமழை யுருமி னுரற்றுகுரல்" (இ)"பெயன்கான் மயங்கிய பொழுது கழி பானாட், டிருமணி யரவுத்தேர்ந் துழல, வுருமுச்சிவந் தெறியு மோங்குவரை யாறே" நற். ங௭: அ-கக, கஉக: எ-அ, உருரு: க - கக; (ஈ) "நெடுவரை மருங்கிற் பாம்புபட விடிக்குங், கடுவிசை யுருமின் கழறுகுரலளை இக், காலொடு வந்த கமஞ்சூன் மாமழை" (உ) "பொறி

யுடைத்தாகிய செறிந்த மழையில் உருமேறு இடித்தலால் எழுந்த உயர்ந்த ஓசையாகிய ஓசை பரந்து *நறிய பூக்களையுடைய சாரலிலே ஒலிக்கையினாலே விரையச் சிறுகுடியினுள்ளார் உறக்கமுணரும் மிக உயர்ந்த வெற்றியினை யுடைய வெற்பனே; எ-று.

மாணிக்கப்பாறை தலைவி உறைகின்ற மனையாகவும், சுனையிடத்துக் காந்தள் சுற்றத்தார் பேண அழகுபெற்ற தலைவியாகவும், மணத்தைத்தரும் அக்காந்தள் பாம்புபோற் றோன்றியது மேல் இல்லறத்தைத் தருகின்ற களவொழுக்கம் பிறர்க்குத்தீங்குபோற் றோன்றியதாகவும், உருமேறு இடித்தலால் எழுந்த ஓசை குறவர் சாரலெல்லாஞ் சிலம்பியது அங்ஙனந் தீதாகக் கருதின அயலார்கூற்றைக் கேட்டதாய் கழறியகூற்றுப் பரந்ததாகவும், சிறுகுடி துயிலெழுந்தது காவன் மிகுதியாற் றலைவியுந் தானும் களவு இடையீடுபட்டு வருந்தித் துயிலின்றியிருந்த தன்மையாகவும் உள்ளுறையுவமங்கொள்க. இது வினையுவமப்போலி.

---

வரி, வெஞ்சின வரவின் பைந்தலை துமிய, நரையுரு முரறு மரையிரு ணடுநாள்" (ஊ) "பாம்பின் பையுடை யிருந்தலை துமிக்கு மேற் றொடு" (எ) "கடிதிடி யுருமிற் பாம்பு பையவிந், திடியொடு மயங்கி யினிதுவீழ்ந் தன்றே" குறுந். கடுஅ, கக0, உகூஅ, ௩கூக. (ஏ) "மழை தவழும் பெருங்குன்றத்துச், செயிருடைய வரவெறிந்து, கடுஞ்சினத்த மிடறபுக்கும், பெருஞ்சினப்புய லேறனையை" பதிற். டுக: உடு - அ. (ஐ) "உருமுச் சிவந் தெறிந்த வுரனழி பாம்பின்" (ஒ) "பாம்பின், பைபட விடிக்குங் கடுங்குர லேற்றொடு" அகம். கூஉ: கக, ௩உ௩: க0 - கக. (ஓ) "கடுவொடுங் கெயிற்ற வரவுத்தலை பனிப்ப, விடியென முழங்கும்"(ஔ)"நஞ்சுடை வாலெயிற் றைந்தலை சுமந்த, வேக வெந்திற னாகம் புக்கென, விசும்புதீப் பிறப்பத் திருகிப் பசுங் கொடிப், பெருமலை விடரகத் துருமெறிந் தாங்கு" (௰) "இளைய தாயி னுங் கிளையரா வெறியு,மருநரை யுருமின்"(அஅ)"அரவெறி யுருமின் முரசெழுந் தியம்ப" (ஆஆ) "அரவெறி யுருமி னுரறுபு சிலைப்ப" புறம். கஎ: ௩அ-கூ, ௩எ: க-ச, டுஅ:கூ-எ, கஉகூ: கக, ௩கூகூ:௩.(இஇ)"விரிதிற நாகம் விடருளதேனு,முருமின் கடுஞ்சினஞ்சேணின் றுமுட்கும்"நாலடி. கசுச. (ஈஈ) "எறே, டருமணி நாக மனுங்கச் செருமன்னர், சேனை போற் செல்லு மழை" கார். உ0. (உஉ) "நிரைகதிர் நீளெஃக நீட்டி வயவர், வரைபுரை யானைக்கை நூற - வரைமே, லுருமெறி பாம்பிற் புரளும்"(ஊஊ)"யானை புண்கூர்ந், துருமெறி பாம்பிற் புரளும்" களவ. க௩, ௩அ. (எஎ) "அதிர்குர லேறோ டலைகடன் மாந்தி, முதிர்மணி நாக மனுங்க முழங்கிக், கதிர்மறை மாலை கனைபெய றூழ" திணை மொழி. உஅ. (ஏஏ) "இடியே றுண்ட நாகம் போலக், கொடியோர் சாயற் கொழுங்கவின் வாட" பெருங். (உ) க0: ககஉ - ௩.

(பிரதிபேதம்) *நறிய,

அ (க)கால்பொர *நுடங்கல கறங்கிசை யருவி(உ)நின்
மால்வரை மலிசுனை மலரேய்க்கு மென்பதோ
(௩)புல்லாராப் புணர்ச்சியாற் புலம்பிய வென்றோழி
(௪)பல்லிதழ் மலருண்(௫)கண் பசப்பநீ சிதைத்ததை

எ - து: முயங்குதலமையாத கூட்டம்பெருமையால் வருந்தின என்றோழியுடைய பல இதழையுடைய மலர்போலும் உண்கண்கள் பசக்கும்படி நீ கெடுத்தது காற்றடிக்கவுந் தன் பெருமையால் (சு) அசையாவாய் நின்று ஒலிக்கின்ற ஓசையினையுடைய அருவிகளையுடைய நினதுபெருமையையுடைய வரையில் நீர்நிறைந்த சுனையின் மலரையொக்குமென்னும் பொருமையோ? †அதுவன்றேல் அருளின்மையன்றோ? எ - று.

கஉ புகர்முகக் (எ)களிறொடு புலிபொரு துழக்கு(அ)நின்
னகன்(கூ)மலை யடுக்கத்த வமையேய்க்கு மென்பதோ

---

க. (அ)"கால்பொர......நீசிதைத்ததை" என்னும் பகுதியை,இதுபாடாண்டிணைப்பகுதியாகியசுட்டியொருவர்பெயர்கொள்ளாக்கைக்கிளையன்றோவென வினாவி, தலைவன் அன்பின்மை மெய்யாயின் அஃதாம்; இஃது அவ்வாறின்றி வரைவுகடாதல் காரணமாகஅன்பிலனென்று இல்லது கூறினமையின் ஒருதலையன்பாகாதென்று விளக்கினர், பேராசிரியர்; (ஆ)நச்சினார்க்கினியரும் இதையே தழுவினர்; தொல். செய். சூ.கசுo.

உ. "கூடற் குடவயின்.............கண்போன் மலர்ந்த காமர் சுனை மலர்" முருகு. எக - எரு.

௩. "புணர்ச்சியுட் புல்லாரா மாத்திரை" கலி. கசஉ: க.

௪. "பல்லித ழுண்கண் பசத்தல்" ஐங். கஎo.

௫. கண் பசத்தல் ஐங். உக, ௩௪, ௩சு, ௩எ, சரு, கசுகூ, உசஉ, உசுச, சஎஎ, ருoo; கலி. எஎ: கஉ, அஉ: உo.

சு. தொல். எச்ச.சூ. சுஎ-இல்"சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்" என்பதன் விசேடவுரையில், "கால்பொர நுடங்கலிற் கறங்கிசை யருவி யென்புழி, நுடங்குதலையுடைய அருவியென நிற்குமாறு உணர்க. இவைபோல்வன ஓசை வேற்றுமையான் வேறுபடுவனவும் உணர்ந்துகொள்க" என இவருரையிற் காணப்படுவது இங்கே அறிதற்பாலது.

எ. மலையில் யானையும் புலியும் பொருமென்பதை கலி. சஅ: சு-எ - ஆம் அடிகளாலும் அவற்றின் குறிப்பாலும் உணர்க.

அ. (அ)"தோளும்...............திண்டேர்ச் செழியன் பொருப்பிற் கவாஅ, னல்லெழி னெடுவேய் புரையுந், தொல்கவின் றொலைந்தன்" அகம் க௩எ: கஉ-சு.(ஆ) புண்ணிய நெடுவரை.........கழை" சிலப். ௩: கஎ.

கூ. (அ)"பன்மலை யடுக்கத்துக் குமரிக் கோடும்"சிலப். கக: ககூ-உo. (ஆ) "ஓங்குமலையடுக்கம் பாய்ந்து"

பிரதிபேதம்) * நுடங்கலா, நுடங்கலிற், † அதுவன்றே யருளின்.

கடையெனக் *கலுழுநோய் கைம்மிக வென்றோழி
(க)தடையின திரண்டதோ டகைவாடச் சிதைத்ததை

எ - து: உயிர்போம் பருவமென்று கூறும்படியாகக் கலங்குதற்கு ஏதுவாகிய காமநோயைக் கடக்கும்படியாக என் தோழியுடைய பெருத்தனவாகிய திரண்டதோள்களை அழகுவாடும்படி நீ கெடுத்தது புகரையுடைத்தாகிய முகத்தையுடைய களிற்றோடே புலி †பொருது துகைத்துத் திரியும் நின்னுடைய அகன்ற மலையில் அடுக்கத்தனவாகிய மூங்கிலையொக்குமென்னும் பொருமையோ? அதுவன்றேல் அருளின்மையன்றோ? எ-று.

கசு (உ)சுடருற வுறநீண்ட சுரும்பிமி ரடுக்கத்த
விடர்வரை (ங)யெரிவேங்கை யிணரேய்க்கு மென்பதோ
(ச)யாமத்துந் ‡துயிலலள லமரு மென்றோழி
(ரு)காமரு நல்லெழில் கவின்வாடச் சிதைத்ததை

எ - து: நடுயாமத்துந் துயில் கொள்ளுத லிலளாய் மனந் தடுமாறும் என் தோழியுடைய விருப்பம் மருவிய நல்ல ||எழுச்சியழகு வாடும்படியாக நீ கெடுத்தது ஞாயிற்றைத் தீண்டும்படியாக மிகநீண்ட சுரும்புகள் ஒலிக்கின்ற (சூ)முழைஞ்சுகளையுடைய மலையினது பக்கமலையிடத்தனவாகிய எரிபோலும் வேங்கையினது பூங்கொத்தை யொக்குமென்னும் பொருமையோ? × அதுவன்றேல் அருளின்மையன்றோ? எ-று.

---

க. (அ)"வீங்கிறைத் தடைஇய வமைமருள் பணைத்தோள்" பதிற். ருச: ங. (ஆ)"தடைஇய மென்றோளாய்" கலி. கூங: ரு. (இ)"தடைஇய" அகம். ஙஉங: அ.

உ. "வெங்க திர்க்கடவுள்வியன் றேர்வரைத், தங்கு சந்தனக் கோட்டிடைப் பட்டென" சீவக. கசூ0எ.

ங. இந்நூற்பக்கம் உகூஎ: ங - ஆம் குறிப்புப் பார்க்க.

ச. (அ) "யாமம் - இடையிரவு; நாற். சூ. கஉ: (ஆ)"ஊர் துஞ்சியாமமும்" குறுந். ஙஉ.(இ)"யாம நடுநாட் டுயில்கொண் டொளித்த,காமநோயின்" (ஈ)"பலர்த்துயிற்றும் யாமநீதுஞ்சலைமன்" கலி. கஉஉ: உசு-உ; கசசு: ஙசு-எ. (உ) "தீய வனமுந் துயின்று திசைதுயின்று, பேயுந் துயின்றதாற் பேர் யாம - நீயுமினிக், கண்மேற் றுயில்கை கடன்" நள. கலி தொடர். கூச.

ரு. (அ) "காமனும் விழையுங் காமர் காரிகைக், கலையுணர் மகளிர்" (ஆ) "கண்டுகெண்ணோராக் காமர்காரிகை,வண்டுளரைம்பால் வாசவதத்தை" பெருங். (க) சூ0: கஅங - ச, உஙச-ரு.

சூ. முழைஞ்சு - குகை.

(பிரதிபேதம்) * கலிழு, †பொருதுகைத்து, ‡ துயிலிலள், || எழிச்சி, × அன்றே.

*காமரு, விகாரம்; மருவும், ஈற்றுமிசை யுகரம் மெய்யொடுங் கெட்டு மகரம் சந்தியாற் கெட்டது.

†எனவாங்கு

எ-து, என்று; எ-று. ஆங்கு, அசை.

உக (க)தன்றீமை பலகூறிக் கழறலி னென்றோழி
மறையிற்றன் மருவுற மணந்தநட் பருகலாற்
பிறைபுரை நுதலவர்ப் பேணிநம்
முறைவரைந் தனரவ ருவக்கு நாளே

எ-து: ‡தன் பொல்லாங்குகள் பலவற்றையுஞ் சொல்லி யான் (உ.) கழறுகையினாலே அவர் என் கூற்றினை ||இஃதுண்மையென்று தெளிந்து களவொழுக்கத்திலே தாம் நம்மோடுமருவுதலுறுகையினாலே கூடினஉறவு பின்னர் வரைவுமுயற்சியான் × (ங.)அருகுகையினாலே, பிறையொத்த நுதலினை யுடையாய்! இக்களவொழுக்கத்தில் வேட்கைநீங்கி நாம்அவரைப் பேணி அவரிடத்தே தங்குதலைஅவர் விரும்பின நாளிலே நஞ்சுற்றத்தாரும் அவர்க்கே கொடுப்பதாக அறுதியிட்டுவிட்டார்; இதுகாண் நமக்குண்டாகிய நன்மை; =எ - று.

தன், தான், அவரென்பது ஒருமைப்பன்மை மயக்கம். ÷ உறைதல் உறையென விகாரமாயிற்று.

இதனால், தலைவிக்குச் செல்வமாகிய உவகை பிறந்தது.

இஃது எழடித்தரவும் நான்கடித்**தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்றுவந்த ஒத்தாழிசைக்கலி. (கூ)

(சகூ.) வீயகம் புலம்ப வேட்டம் போகிய
மாஅ லஞ்சிறை மணிநிறத் தும்பி
வாயிழ் கடாத்த வான்மருப் பொருத்தலோ
டாய்பொறி யுழுவை தாக்கிய பொழுதின்
ரு வேங்கையஞ் சினைபென விறற்புலி முற்றியும்
பூம்பொறி யானைப் புகர்முகங் குறுகியும்

க. "நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக் கண், மேற்சென் றிடித்தற் பொருட்டு" குறள். எஅச.

உ. கழறுகை - இடித்துச்சொல்லுகை.

ங. அருகுகை - அருமையாதல்.

(பிரதிபேதம்) * காமர், † எனவாங்கு, ஆங்கசை. ‡ என்று தன்பொல்லாங்கு, || இது வுண்மை, × அருகையினாலே, = என ஆற்றுவித்தாள். ÷ உறைதல் விகாரம்' ** தாழிசைகளும்.

5-6. கிம்ப. நகர்வ. 58; அகநா.

வலிமிகு வெகுளியான் வாளுற்ற மன்னரை
நயனுடி நட்பாக்கும் வினைவர்போன் மறிதரு
மயமிழி யருவிய வணிமலை நன்னாட;

௧0 எறிரங் கிருளிடை யிரவினிற் பதம்பெறாஅன்
மாறினெ னெனக்கூறி மனங்கொள்ளுந் தானென்ப
கூடுதல் வேட்கையாற் குறிபார்த்துக் குரனெச்சிப்
பாடோர்க்குஞ் செவியோடு பைதலேன் யானுக;

௧௪ அருஞ்செல லாரிடை யருளிவந் தளிபெறாஅன்
வருந்தினெ னெனப்பல வாய்விடூஉந் தானென்ப
நிலையுயர் கடவுட்குக் கடம்பூண்டு தன்மாட்டுப்
பலசூழு மனத்தோடு பைதலேன் யானுக;

௧௮ கனைபெய னடுநாள்யான் கண்மாறக் குறிபெறாஅன்
புனையிழா யென்பழி நினக்குரைக்குந் தானென்ப
துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்ளிற்றன்
னளிநசை யார்வுற்ற வன்பினேன் யானுக;

எனவாங்கு;

௨௩ கலந்தநோய் கைம்மிகக் கண்படா வென்வயிற்
புலந்தாயு நீயாயிற் பொய்யானே வெல்குவை
யிலங்குதா ழருவியோ டணிகொண்ட நின்மலைச்
சிலம்புபோற் கூறுவ கூறு
மிலங்கே ரெல்வளை யிவளுடை நோயே.

இஃது அல்லதறிப்பட்டுத் தலைவன் மீள அதனை என்பிழையாகக் கருதுவனெனக் கவன்று ஆற்றளாகி, "தன்குறி தள்ளிய தெருளாக் காலை, வந்தனன் பெயர்ந்த வறுங்கள நோக்கித், தன் பிழைப்பாகத் தழீஇத் தேறிய"(௧)தலைவியது நிலைமை தோழி தலைவற்குக்கூறி;இவ்விடையீடு நின் *தோழியினுயிற்றென † எனதுபிழைப்பாக்கி அவளை ஆற்றுவிப்பாய், நீ உரைத்ததேஉரையாம்அவட்கென அவளது ஆற்றமைகூறி வரைவுகடாயது.

இதன் பொருள்.

௧. தொல். களவியல், சூ. ௨0.

(பிரதிபேதம்) * தோழியின், † என்பிழைப்பாக அவளை.

வீயகம் புலம்ப வேட்டம் போகிய
(க)மாஅ லஞ்சிறை (உ)மணிநிறத் தும்பி
வாயிழி கடாத்த வான்மருப் (ங)பொருத்தலோ
டாய்(ச)பொறி யுழுவை தாக்கிய பொழுதின்
ரு (ரு)வேங்கையஞ் சினையென விறற்புலி முற்றியும்
பூம்(சு)பொறி யானைப் புகர்முகங் குறுகியும்
வலிமிகு வெகுளியான் (எ)வாளுற்ற (அ)மன்னரை

---

க. (அ) "அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்" என்பதனுரையில் செவியெனச் சகரத்தை முற்கூறியதனால், 'அஞ்சிறைத் தும்பியென இப்பொருளில் வருதலுங் கொள்கவென்று அமைத்து அகஞ்சிறை யென்பதற்கு ஏனையவற்றின் சிறைபோலப் புறத்தின் கண்ணவன்றி அகத்தின்கண்ணவாகிய சிறையென்று பொருளும் ஏழாம்வேற்றுமைத் தொகையென்று இலக்கணமும் எழுதினர் விருத்தியுரைகாரர்; நன். மெய். சூ. கக. (ஆ) "அஞ்சிறைத்தும்பி" குறுந். உ. ஐங். உ0.

உ. (அ) "மணி நிறத்தும்பி" ஐங். உகரு. (ஆ) இந்நூற்பக்கம் உசு0: ங-ஆங் குறிப்பு ஈண்டறிதற்பாலது.

ங. புலி யானையொடு பொருமென்பதை கலி. சஅ: சு - எ - ஆம் அடிக் குறிப்பாலுணர்க.

ச. (அ) பொறி – புள்ளி. (ஆ) புலிக்கு வரிகூறுதல் பெருவழக்காதல் பற்றி இவ்வாறு பொருள் கூறினர்போலும்; (இ) "புலிப்பொறிப் போர்வை"(சீவக. உசுசு)என்புழியும் இவர் இங்ஙனம் கூறியிருக்கிறார். (ஈ) மறங்கொள் 'வயப்புலி..............வரியும் புள்ளியு மயங்கு வான்புறத், துரிவை" சிலப். கஉ: உஎ – ங0 என்பதனால் புலிக்கு வரியே அன்றிப் புள்ளியும் கூறுதல் மரபென்று தெரிகிறது. (உ) "பூம்பொறியுழுவை"(ஊ)"புலிப்பொறியன்ன" நற். க0ச: க, ஙகக: உ; (எ)"புலிப்பொறி வேங்கை" ஐங்குறு. ஙகசு (ஏ)"பொறிகிளருழுவை" அகம். கசஎ: சு. (ஐ) "பொறியெருத் தெறுழ்வலி..............புலிமா னேற்றை" யா-வி. சூ. கசு. மேற். (ஒ) "புள்ளிகொண்ட புலியுரி"தே. (ஓ) "பொறிப்புலித்தோலும்" பெருங். (க) ருஅ: அஎ. (ஔ)"பொறிப் புண்டரீகம் போலு மொருவனால்" (ஃ) "வெறிப்பொறிப் புலியின்" கம்ப. அங்கதன்றூது. ஙசு, விடைகொடுத்த. க0.

ரு. கலி. சஅ: க - சு-ஆம் அடிக் குறிப்புப்பார்க்க.

சு. (அ) "பல்பொறிச் சிறுகண் யானை" ஐங். ஙருரு. (ஆ) "பொறிமுகத் களிறூர்ந்து" யா – வி. சூ. அரு. மேற்கோள்.

எ. வாள், கொலைத்தொழிலுமாம்.

அ. "பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி, நட்பாட றேற்றா தவர்" குறள். கஅஎ.

நயனுடி நட்பாக்கும் வினைவர்போன் *மறிதரு
மயமிழி யருவிய (க)வணிமலை நன்னுடை

எ-து: தான் நுகர்கின்ற பூத் தன்னையின்றித் தனித்து உறைய, தான் விரும்பிய பூவின்மேலே போன பெருமையினையும் அழகினையுமுடைத்தாகிய சிறகினையும் நீலமணிபோலும் நிறத்தினையுமுடைய தும்பி, (உ) வாயிடத்தே பெருகிவீழ்கின்ற மதத்தையும்வெள்ளியமருப்பினையுமுடைய(ங)யானைத்தலைவனோடே அழகினையுடைத்தாகிய வரியினையுடைய புலி வந்து போர்செய்த காலத்தே, வேங்கையினது அழகையுடைய பூங்கொம்பென்று கருதி விறலையுடைய புலியைச் சூழ்ந்தும் வேங்கைச்சினையென்று பொலிவுபெற்ற புள்ளிகளையுடைய யானையினது புகரினையுடைய முகத்தை அணுகியும், வலிமிகுகின்ற கோபத்தாலே (ச) வாட் போரைச் செய்யத் தொடங்கின மன்னரை நட்பாக்கும் உபாயத்தை ஆராய்ந்து நட்பாக்குஞ்சந்துசெய்வாரைப்போலப் பல காலுந் திரியும், பள்ளத்தே குதிக்கின்ற அருவிகளையுடைய திரண்ட மலைகளையுடைய †நன்னுடனே; எ-று.

---

க. அணியென்பது திரளென்னும் பொருளில் "அணியணியாகிய தாரர்" (பரி. சு: ௩க) எனப் பெயர்ச்சொல்லாய் வருதலும் இங்கு அறிதற்பாலது.

உ. (அ) "வாய்ப்புகு கடாஅத்து......................வயக்களிற் ஞெருத்தல்" (அகம். எ௮: ௩ - ச.) (ஆ) "வாய்புகு கடாஅத், தண்ணல் யானை (புறம். கூ௩: கஉ - ௩) (இ) "வாய்புகு கடாஅத்த, வண்ணல் யானை" (தோல். களா. சூ. கக. நச் மேற்கோள்;) (ஈ) நாகம், வாய்வழி கடாத்த தாகி" சீவக. எ௫௩.

௩. ஒருத்தலென்பது யானைத்தலைவனென்னும் பொருளில் வருதலை, (அ) "இனம்பிரி யொருத்தல்" (மலைபடு. உகஎ;) (ஆ) "இனந்தலைத் தரூஉ மெறுழ்கிளர்முன்பின், வரிமிஞிறூர்க்கும் வாய்புகுகடாஅத்துட், பொறிநுதற் பொலிந்த வயக்களிற் ஞெருத்தல்" (அகம். எ௮: உ - ச.) என்பவற்றாலும் அவற்றினுரையாலும்,தலைமையுற்ற களிற்றை யானைத் தலைவனென்னும்வழக்கை (இ) இவ்வுரைகளாலும்(ஈ)"அலகி லானைகளனேகமு மவற்ஞெடுமிடைந்த,திலக வாணுதற் பிடிகளுங் குருளையுஞ் செறிந்த, வுலவை நீள்வனத் தூதமே யொத்தவவ் வூதத், தலைவனேயொத்துப் பொலிந்தது சந்திர சயிலம்" (கம்ப. வரைக்காட்சி. எ.) என்பதனுலும் அறிக. (உ) "யானையு ளரசன்" - 'களிற்றரசன்' (சீவக. உசங்கூ) (ஊ) "நாகாதிபன்" (வில்லி. அருச்சுனன் தீர்த்தயாத்திரை. கo.) என வருதலும் காண்க.

ச. "இகன்மீக் கடவு மிருபெரு வேந்தர், வினையிடை நின்ற சான்றோர் போல, விருபே ரச்சமோ டியானு மாற்றலேன்" குறிஞ்சி. உச - அ.

(பிரதிபேதம்) * மறுத்தருபயமிழி. † நன்னுடனே தும்பி வினைவர்.

மறித்தரும் பயமிழி என்றும் பாடம்.

தும்பி வினைவர்போல முற்றியுங் குறுகியும் *மறிதருமென்க. பூப்புலம்ப வேட்டம் போகியதும்பி தலைவி தனித்திருக்க முன்வரைந்துகொண்ட மனைவி யிடத்தே வேட்கைசென்று போன தலைவனாகவும், அத்தும்பி வருத்தத்தை நிகழ்த்துவனவாய்த் தம்மிற் பகைத்த புலியையும் யானையையுந் தனக்குத் தேனைத் தரும் வேங்கைப்பூவாகக் கருதிச் சுழல்கின்றதன்மை †நம்மேல் அன்பின்றி இருக்கவும் தனக்கு இன்பமுளதாகக் கருதிப் பகற்குறியும் ‡ இரவுக்குறியும் பெறுதற்கு ||மறுகுகின்ற தன்மையாகவும் உள்ளுறையுவமங்கொள்க. இது வினையுவமப்போலி.

"பின்முறை=யாக்கிய" என்ற (க) சூத்திரத்து, 'தொன்முறை மனைவி' என்றதனால், தொன்முறை மனைவி யுண்மையும் உணர்க.

'நயனுடி நட்பாக்கும் வினைவர்போல்' என்ற ஏனையுவமம் உள்ளுறையுவமத்தைத்தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக்கொடுத்துத் தானும் உள்ளுறை யுவமம்போற் றிணையுணர்தலைத் தள்ளாது நின்றது.

கo (உ)ஏறிரங் கிருளிடை யிரவினிற் பதம்பெறூஅன்
மாறினை னெனக்கூறி மனங்கொள்ளுந் தானென்ப
(ங)கூடுதல் வேட்கையாற் ×குறிபார்த்துக் (ச)குரனெச்சிப்
பா(ரு)டோர்க்குஞ் செவியோடு பைதலேன் யானாக

எ-து: யான் தன்னைக் கூடுதற்கணுளதாகிய வேட்கையினாலே யான் பகற்குறியைத் தள்ளின நிலைமையை என்பிழைப்பாக மனத்தான் நோக்கி

க. தோல். கற். சூ. ௩க.

உ. (அ) "ஏறிரங்............யானாக" என்னும் பகுதி, வந்தவழி யெள்ளுத லென்பதற்கும்,(தோல். கள. சூ.உo.இள;)(ஆ)இருவகைக்குறிபிழைப் பாகிய விடத்துத் தலைவிக்குரிய கிளவி நிகழ்ந்ததற்கும் (தோல். கள: சூ. கசு. நச்.), (இ) "ஏறிரங்கிருளிடை" என்னும் பகுதி, இரங்குத லென்பது இசைப்பொருளில் வருதற்கும்(தோல். உரிச். சே. சுஉ; நச் சூ. சுo; தெய். சூ. சஎ; இ - வி. சூ. உஅசு.)மேற்கோள்.

ங. தலைவி, தன் நாணும் மடனும் நீங்கிய திறத்தைக் குறிப்பா னன்றிக் கூற்றாலும் அறிவித்தற்கு, "கூடுதல் வேட்கையாற் குறிபார்த்து...... ............யானாக" என்பது மேற்கோள்; தோல். கள. சூ. கக. நச்.

ச. குரல் - பூங்கொத்து; பெரும்பாண். கககஉ. குறுந். கஙஅ. கார். ௩கூ. சிலப். கச: அஎ.

ரு. ஓர்த்தல் - கருதுதல்; முருகு. கசு; முல்லை. அஅ. கேட்டலுமாம்; மலை. உங; புறம். சுஅ: கஎ,கநிஎ: கஉ, உஅo:சு; பு-வே. வெட்சி. கொளு. ௬.

(பிரதிபேதம்) * மறுத்தருமென்க, † தம்மேல், ‡ இரவிற்குறியும், || மறுகின்ற. = ஆகிய, × குறிப்பார்த்து.

இரவிற்குறி யேற்றுக்கோடற்கு யான் கொத்திலையுடைய(க)நொச்சிப்பூ விழுகின்ற ஓசையை அவன் குறியோவென்று கருதுஞ்செவியோடே வருத்தத்தையுடையே னாகாநிற்க, தான் உருமேறு இடிக்கின்ற இருளையுடைய நடுவாகிய இராப்பொழுதினது செவ்வியைப் பெறுனுப் பகற்குறியையும் யான் மாறினேனென்று கூறி இனி மனத்தே கொள்ளாநிற்கும்; எ - று.

மனத்தின்வினையைச் செவிமேல் ஏற்றினார்; அதுகருவியாக உணர்தல் *நோக்கி.

கச அருஞ்செல வாரிடை யருளிவந் தளிபெறுஅன்
வருந்தினெ னெனப்பல வாய்விடூஉந் தானென்ப
நிலையுயர் (உ)கடவுட்குக் கடம்பூண்டு தன்மாட்டுப்
பலசூழு மனத்தோடு பைதலேன் யானாக

எ-து: யான் நிற்கின்ற நிலைமை உயர்தற்குக் காரணமான கடவுளுக்கு வரைவு முடிந்தாற்செய்யுங் கடன்களை மேற்கொண்டு தான் குறிபெறுமையிற் றன் மாட்டு நிகழும்வருத்தம் பலவற்றையுஞ் சூழும்மனத்தோடே வருத்தத்தையுடையேனாகாநிற்க, தான் அரிய செலவினையுடைய வழியிடத்தே நம்மை அருள் செய்து வந்து நம்முடைய அளியைப் பெறுனுப் பகற்குறியும் பெறுமல் வருந்தினெனன இனிப் பலவார்த்தையுங் கூறுநிற்கும் ; எ - று.

நிலையுயர்தல், வரைந்துகொண்டாலுயர்தல்.

---

க. (அ)"கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே, ........மயிலடி யிலையமாக்குர னொச்சி, யணிமிகு மென்கொம் பூழ்த்த, மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே" நற்றி. கக௩அ. (ஆ) "வியலூ ரெயிற்புற நொச்சியினுழ்மலர் வீழ்தொ றெண்ணி, மயலூர் மனத்தொடு வைகினன் யான்றஞ்சை வாணன் வெற்பர்,புயலூரிருட்கங்குல் வந்தவ மேகின்று போயினரென், றயலூர் நகைக்குமென் னேயென்ன பாவங்கொலாக்கினவே" தஞ்சை. உ0க. (இ) "நொச்சிப் புதுமலர் வீங்கிருள் வீழ்வன நோக்குதுமே" தணிகை. களவு. ௫௭௫. (ஈ) "நொச்சிப் பூவுதிர் நள்ளிரு ணடுநாள்" கல். உ. (உ) "நொச்சிமென் போது வீழுமிருளின்" கூர்ம. இராமன்வனம். ௬உ.

உ. "குன்றக் குறவன் காதன் மடமகண், மன்ற வேங்கை மலர்சில கொண்டு, மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித், தேம்பலிச் செய்த வீர்நறுங் கையள்" (ஐங். உ௫௯.) என்பதும் இந்நூற்பக்கம் உஉஉ. ௩ - ஆம் குறிப்பில்இதற்குப் பொருந்துவனவும் நோக்குக.

(பிரதிபேதம்) *நோக்கி என்பவென மூன்றுதாழிசையிலும் வந்தன இசைநிறையாய் நின்றன, அருஞ்செலலாரிடை.

௧௮ (௧)கனைபெய னடுநாள்யான் (௨)கண்மாறக் குறிபெறாஅன்
புனையிழா யென்பழி நினக்குரைக்குந் தானென்ப
(௩)*துளி(௪)நசை வேட்கையான் மிசைபாடும் புள்ளிற்றன்
னளி†நசைஇ யார்வுற்ற வன்பினேன் யானாக

எ-து: மழை தன்னைப் புரக்க நச்சுதன்மேலுள்ள வேட்கையினாலே வானத்தைப்பாடும்வானம்பாடிபோல இருவகைக்குறியிலும் தான் அளிக்கின்ற அளியை நச்சுதலாலே தன்மேல் நிறைவுற்ற அன்பினையுடையேனாகாநிற்க, தான் நெருங்கின மழையையுடைத்தாகிய பாதிநாளிலே யான் இடமாறப் பகற்குறியையும் பெறானாய்ப் பூணப்பட்ட இழையினையுடையாய்! என்னிடத் துண்டாகிய பழியை நின்க்குச் சொல்லாநிற்கும்; எ-று.

‡தான் யான் ஆக அருளாக்குமென்பன (?) எதிர்காலத்து நிகழ்கின்ற நிகழ்வு. என்பவென மூன்றுதாழிசையிலும் வந்தன இசைநிறையாய் நின்றன.

---

௧. "கனைபெயல்......அன்பினேன் யானாக" என்பது (அ) குறியினெப்புமை மருடற்கும், (தொல். கள. சூ. ௨௦. இள.) (ஆ) தலைவன், தலைவிசெய்குறியைப் பிழைத்தலாற் புலந்தவழித் தோழிசொல்லெடுப்புதற்குத் தலைவி சிறுபான்மை கூறுதலு முண்டென்பதற்கும் (தொல். கற். சூ. ௧௬. நச்.) மேற்கோள். (இ) "கனைபெயல்" இந்நூற்பக்கம் ௨௭௩. ௩ - ஆம் குறிப்புப் பார்க்க.

௨. கண்மாறல் - இடமாறுதல். குறுந். ௧௨௫. புறம். ௧௪௩: ௪.

௩. (அ) ''துளிநசைப் புள்ளினின் னளிநசைக் கிரங்கி'' புறம். ௧௬௮: ௨௫. (ஆ) "மேகப் புள்வயிற் பிறந்த புட்போ லொன்றலா துரைத்த றேற்றார்" -(இ) 'வானம்பாடி மேகத்துப் பிறந்த துளியையே நச்சிப் பாடுமாறுபோல அரசனுள்வயிற்பிறந்த அளியொன்றமல்லாதனவற்றை உரைத்தலறியாத தேவியர்' சீவக. ௨௮௬௭. (ஈ) "பாகையுந் தேனையும் போன்மொழியார்..............எழிலியை நோக்கியிரங்குபுள்...... ......போனின்ற வாதனியேயிந்தச்சோலையிலே" தஞ்சை. ௫௮. என்பவைகளும் (உ) "தற்பாடிய தளியுணவிற், புட்டேம்பப் புயன்மாறி, வான்பொய்ப்பினும்" பட். ௩ - ௫. என்பதும் (ஊ) "மலையுறை பகைத்து வானுரைக்கணக்கும், புட்குலஞ் சூழ்ந்த பொருப்பு" (எ) "அளிகார்ப் பாடுங் குரனீர் வறந்த, மலைப் புட்போல நிலைக்குர லணங் தாங், குணவுளங் கருதி யொளியிசைபாட" கல். ௫௩: ௧௦ - ௧௧, ௧௫: ௧௧-௧௩. என்பவைகளும் கலி. ௧௪௬: ௫௨-௩. ஆம் அடியின் குறிப்புக் களுட் பொருந்துவனவும் இங்கே அறிதற்பாலன.

௪. நசைவேட்கை- முதுமொழிக். ௬௧.

(பிரதிபேதம்) * துளிநசைஇ.† நசையார் வுற்ற,‡ தான் யானருளாக்கு மென்பன நிகழ்வு, என்வாங்கு எ - து. ஆங்கசை கலந்தநோய்.

எனவாங்கு

எ-து: என்று *இவள்கூறும்படியாக ; எ - று.

உரு. கலந்தநோய் கைம்மிகக் (க)கண்படா வென்வயிற்
(உ)புலந்தாயு நீயாயிற் பொய்யானே வெல்குவை
யிலங்குதா ழருவியோ டணிகொண்ட நின்(ங)மலைச்
சிலம்புபோற் கூறுவ கூறு
மிலங்கே ரெல்வளை யிவளுடை நோயே

எ-து: †இவளைக் கலந்த நோய்‡இவள்ஒழுக்கத்தை மிகுக்கையினாலே அது கண்டு கண்துயிலாத என்னிடத்தே நீவெறுத்தாயுமாய்க் கூறுவகூறும் எல்வளையையுடைய இவளுடைய நோயை இவள் ஆற்றும்படியாக ஒரு பொய் மொழி கூறியாயினும் வெல்வாய் நீ உரைத்ததே இவட்கு உரையாமென ஆற்றாமைகூறி வரைவுகடாயினாள்.

(ச) அருவியாலே அழகுகொண்ட நின்மலையின் பக்கமலை கூறுவனவே கூறமாறுபோல நீகூறுவனவற்றையே கூறும் இலங்குகின்ற அழகினை யுடைய எல்வளையென்க. எல், ஒளி.

---

க. "காதலிமாட், டுள்ளம்வைப் பார்க்குந் துயிலில்லை" நான்மணி. கூ.

உ. "புலந்தாயும் ..............வெல்குவை" என்பது களவில் தலைவிகுறிப் பினால் தோழி கூறியதற்கு மேற்கோள். தொல். கற். சூ. கசு. நச்.

ங. (அ) "குரல்கேட்ட கோழி குன்றதிரக் கூவ, மதநனி வாரண மாறுமா றதிர்ப்ப, வெதிர்குதி ராகின் றதிர்ப்பு" (ஆ)"மணிமரு ணன்னீர்ச்சினை மடமயி லகவக், குருகிலை யுதிரக் குயிலினங் கூவப், பகர்குழல் பாண்டி லியம்ப வகவுநர், நாநவில் பாடன் முழவெதிர்ந் தன்ன, சிலம்பிற் சிலம்பிசை யோவா தொன்றார்க், கடந்தட்டான் கேழிருங் குன்று" பரி. அ: கக - உக; கரு: சO - சரு. (இ) "அரையிலங்கு மேகலை யார்ப்பி னயல, வரையிலங்கு மேகலை மாறே நின்றார்க்கும், புரையிலங்கு பொற்சிலம்பு தான்சிலம்பும் போழ்தி, னிரை யிலங்கு பொற்சிலம்பு நேரே சிலம்பும்" (ஈ) "கொங்குண் குழலார் குழலேர் மணிமழலை, தங்கி னவைகொண்டு தானு மெதிர்மிழற்று, மங்க ணவர்செய்வ செய்தசதி யாடின்றே, செங்க ணெடியான் கடி காவிற் செய்குன்றே" சூளா. சுயம். கூசு, கள.

ச. "மலையை அருவி அழகுறுத்துமென்பதை, "மணிவரை மருங்கி னருவி போல,வணிவரம் பறுத்த" (கலி.கOங: கO-கக) என்னும் பகுதியாலும் அதன் குறிப்பாலுமுணர்க.

(பிரதிபேதம்) * அவள். † என்று இவள்கூறும்படியாக இவளை, ‡ அவளொழுக்கத்தை மிகுகையினாலே,

அல்லகுறிப்பட்டு மீண்டதனை என்பிழைப்பாகக் கருதும் அவனெனக் கவன்று ஆற்ருளா மென்றதனுலும் "தன்குறி தள்ளிய............தழீஇத் * தேறினும்" என்னும் (க) சூத்திரத்திற்குப் 'பகற்குறியென்றே' பொருளாதலானும் இவ்வாறே பொருள்கூறவேண்டு மென்றுணர்க.

தாழிசைகளில் தோழி சொல்லெடுப்புதற்குத் தலைவி சிறுபான்மை கூறுதலை, "புலத்தலு மூடலுமாகிய விடத்துஞ், சொலத்தகு கிளவி தோழிக் குரிய" (உ)என்பதனுற் கொண்டவாறுணர்க.

இதனுல், தலைவற்கு அசைவுபிறந்தது.

இஃது ஒன்பதடித் தரவும் நான்கடித் தாழிசையும் தனிச்சொல்லும் †ஐயடிச் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (௬௦)

(சஎ.) ஒன்று, இரப்பான்போ லெளிவந்துஞ் சொல்லு முலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போ
னல்லார்கட் டோன்று மடக்கமு முடைய
௫ னில்லோர் புன்க ணீகையிற் றணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையு முடைய
னன்னா ளொருவன்றன் ஞண்டகை விட்டென்னைச்
சொல்லுஞ்சொற் கேட்டீ சுடரிழாய் பன்மாணும்;

௬ நின்னின்றி யமையலேன் யானென்னு மவனுயி
னன்ஞன்சொ னம்புதல் யார்க்குமிங் கரிதாயி
னென்னுற்ற பிறர்க்குமாங் குளகொல்லோ நறுநுதால்;

௧௨ அறியாய்நீ வருந்துவல் யானென்னு மவனுயிற்
றமியரே துணிகிற்றல் பெண்டிர்க்கு மரிதாயி
னளியரோ வெம்போல வீங்கிவன் வலைப்பட்டார்;

௧௫ வாழலேன் யானென்னு நீநீப்பி னவனுயி
னேழைப ரெனப்பலர் கூறுஞ்சொற் பழியாயிற்

க. தொல். களவு. சூ. உ௦.

உ. தொல். கற். சூ. ௧௬. இச்சூத்திரவுரையில் (அ) "கலந்தநோய்........நோயே" என்பதனை மேற்கோள் காட்டி 'இது களவு' என்பர் இளம்பூரணர்; (ஆ) "கலந்தநோய்...........வெல்குவை" என்பதனைக் குறிபிழைத்துழிப் புலந்ததற்கு மேற்கோள் காட்டுவர் நச்சினர்க்கினியர்.

(பிரதிபேதம்) * தேறியவென்னும், தேறலுமென்னும், † ஐந்தடிச்.

சூழுங்கா ணினைப்பதொன் றறிகலேன் வருந்துவல்
சூழுங்கா னறுநுதா ன்ம்முளே சூழ்குவம்;

கசுூ அவனை;

நாணடப் பெயர்த்த னமக்குமாங் கொல்லாது
பேணின ரெனப்படுதல் பெண்மையு மன்றவன்
வெளவினன் முயங்கு மாத்திரம் வாவெனக்
கூறுவென் போலக் காட்டி
மற்றவன் மேஎவழி மேவாய் நெஞ்சே.

இது தலைமகற்குத் குறைநேர்ந்த தோழி அவன் றன்மையும் அவன் தனக்குக் கூறுவனவும் அக்கூற்றுத் தன்னாற் பொறுக்க வொண்ணாதவாறும் அவன் கருத்தும் தலைவிக்குக் கூறி அவன் குறைநயப்பத் தன்னுள்ளே சொல்லியது.

இதன்பொருள்.

ஒன்று, இரப்பான்போ *லெளிவந்துஞ் சொல்லு (க)முலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போ
னல்லார்கட் டோன்று (உ)மடக்கமு முடைய
ரு (ங)னில்லோர் புன்க ணீகையிற் றணிக்க
வல்லான் போல்வதோர் †வண்மையு முடைய
(ச)னன்னா னொருவன்றன் னாண்டகை விட்டென்னைச்
சொல்லுஞ்சொற் கேட்டீ சுடரிழாய் பன்மாணும்

க. (அ) "வையம் புரவூக்கு முள்ளத்தேன்" கலி. கசுக: கஉ - ங. (ஆ) "விசும்புதைவரு வளியும்..................போல..................வலியுந் தெறலு மளியுமுடையோய்" புறம்: உ:ங - அ. (இ) "வினை வலியுந் தன் வலியு மாற்றான் வலியுந், துணைவலியுந் தூக்கிச்செயல்" குறள். சுஎக.

உ. "இளையா னடக்க மடக்கங், கிளைபொரு, ளில்லான் கொடையே கொடைப்பய - னெல்லா, மொறுக்கு மதுகை யுரனுடை யாளன், பொறுக்கும் பொறையே பொறை" நாலடி. சுரு. என அடக்க முத லியவை ஒருவாறு சேரக் கூறப்பட்டிருத்தல் காண்க.

ங. (அ) "வண்கையாற் கலிமாற்றி" சீவக. கருஅ. (ஆ) "ஈந்தே கடந்தா னிரப்போர் கடல்" கம்ப. அரசியல். ரு.

ச. "சிறுமைப்பொருள் பெருந்தொழில்செய்தலும் பெருமைப்பொருள் சிறுதொழில்செய்தலும் வியப்பாம் எனக்கொள்க" என்றுகூறி "அன்னா

(பிரதிபேதம்) * இளிவந்தும். † வண்மையும்.

எ-து: விளங்குகின்ற இழையினையுடையாய்! என்னிடத்து ஒருகாரியத்தை (௧)இரந்துநிற்பான்போலே தன்னைப் பிறரால் இகழப்பட்டு எளியராந் தன்மை *தோன்றியுஞ் சிலமொழி கூறும். அங்ஙனங் †குறையிரந்துநிற்பினும் உலகத்தையெல்லாம் பாதுகாப்பான்போலே இருப்பதொரு வலியுமுடையன், மெய்ப்பொருள் கூறும் நூல்களைக் கூற வல்லவர்களை வழிபட்டு நின்று அப்பொருளை(௨)அறிந்தான்போலே நன்மக்களைக் கண்டாற்றேன்றும் மன அடக்கமுமுடையன், வறியோர் வறுமையைக் கொடையினாலே போக்க வல்லான்போலே இருப்பதொரு வலியுமுடையன், அத்தன்மையையுடையான் ஒரு தலைவன் தனக்குரிய ஆளுந் தகைமையைக் கைவிட்டு என்னைநோக்கிக் கூறும்(௩)பலகாரியங்களும் மாட்சிமைப்படுஞ் சொல்லைக் கேட்பாயாக; எ-று.

"மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவு, நினையுங்காலைப் புலவியு ளுரிய" (௪) என்பதனுள், நினையுங்காலை ‡ என்றதனாற் றோழியுயர்வுங் கிழவோன் பணிவும் || கொள்கவென்றலால், தோழி இங்ஙனங் கூறினாள். "உயர்மொழிக் கிளவியு முரியவா லவட்கே"(௫)என்பதனால்'உலகம்,புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்' என்றாள்.

---

ஞெருவன்................சுடரிழாய்" என்பதை மேற்கோள்காட்டி, "இது பெரியோன் சிறு தொழில் கூறலின் வியப்பாயிற்று" என்பர். பே; தோல். மெய்ப். சூ. எ; இ-வி. நூலாரும் இதனையேபின்பற்றுவர். இ - வி. சூ. ௫எ௮.

௧. இந்நூற்பக்கம் ௫௩: ௧ - ஆம் குறிப்பிலுள்ள, இரப்பாரைப் பிற ரிகழ்வா ரென்னும் பொருளையுடைய செய்யுட்கள் இங்கே அறிதற்பாலன.

௨. "கற்றறிந்தார் கண்ட தடக்கம்".

௩. பன்மாணென்பது, பலகாலென்னும் பொருளில் பரி. உ: எ௩, ௮: அ௫, க௩: ௬உ; கலி. ௬௨: ௫௬, க௪௪: உ, க௪௬: உ௪; அகம். ௪௧: ௧, க௫௦: ௪; புறம். க௬௦: க௮, ௩௬௫: ௧. இவற்றில் வந்துள்ளது. இவ் வுரைகாரரும் "மா[னு](ணு)ம்" என்னும் இடைச்சொல், 'படியும்' என்னும் பொருட்டாய் நிற்றற்கு "சுடரிழாய் பன்மா[னு](ணு)ம்" என்பதை, தோல். எச்ச. சூ. ௬எ - இல் மேற்கோள்காட்டியிருக்கிறார். இதனைத் தாழிசையோடு சேர்த்தால் இப்பொருள் பொருந்தும். பதிற். அ௩: ௬ - இல் பன்மாவென்பது இப்பொருளில் வந்துள்ளது.

௪. தோல். பொருளி. சூ. ௩௩. இதனுரையிலும், "ஒன்றிரப்பான்போல் ............பன்மாணும்" என்பதனை, கற்பினுள் புலவிக்காலத்துத் தலைவன் இரந்துரைக்கத் தலைவி அதனையேற்றுக்கொண்டதற்கு மேற் கோள் காட்டியுள்ளார் இவ்வுரையாசிரியர்.

௫. தோல். பொருளி. சூ. ௪௬. இதனுரையிலும், "உலகம்.............. முடையன்" என்பது, தோழி தலைவனை உயர்த்திக் கூறியதற்கு இவ் வுரையாசிரியரால் மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.

(பிரதிபேதம்) * தோன்றவும், † குரைந்து நிற்பினும், ‡ என்பதனால் || கொள்ளப்படுதலால்,

உம்மைகளெல்லாம் (க)ஐயவும்மை.

சொல்லுமென்றது (உ)பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றி இளிவரல் பிறந்தது; அவன் இவ்வாறு * ஒழுகல் நமக்கு இளிவரலெனக்குறிப்பாற் கூறிக் குறை நயப்பித்தலின்.

கூ (ங)நின்னின்றி யமையலேன் யானென்னு மவனுயி
ரன்னுன்சொ னம்புண்டல் யார்க்குமிங் கரிதாயி
னென்னுற்ற பிறர்க்குமாங் குளகொல்லோ நறுநுதால்

எ-து: நறிய நுதலினையுடையாய்! அவன் †நின்னையின்றி யான் உயிர் ‡வாழேனென்று கூறாநிற்குமாயின், இங்ஙனம் இறந்துபடுந் தன்மையை யுடையவன் கூற்றை நம்புதலைச் செய்தல் இவ்விடத்து யாவர்க்கும் அரிதாயிருக்குமாயின், || இந்நிலைமைக்கண் என்னைச் சேர்ந்த வருத்தங்கள் பிறர்க்கும் உளவோ? இல்லையன்றே! எ-று.

கஉ அறியாய்நீ வருந்துவல் யானென்னு மவனுயிற்
றமியரே துணிகிற்றல் பெண்டிர்க்கு மரிதாயி
னளியரோ வெம்போல வீங்கிவன் வலைப்பட்டார்

எ - து: அவன் யான் வருந்துவல்; நீ அதனை அறியாயோவென்று கூறி நிற்குமாயின், தமக்கு(ச)உயிர்போலச்சிறந்ததோழியரோடு உசாவித்துணியாமற் றமியராயிருந்தே துணிதல் மகளிர்க்கும் அரிதாயிருக்குமாயின், இந்நிலைமைக் கண் ÷இவன் வலையிலே அகப்பட்டார் சிலர் எம்மைப்போல அளிக்கத்தக்காரா யிருப்பாரோ? வலியராயிருப்பரன்றே! எ - று.

---

க. "ஒன், றிரப்பான்போல்..............வண்மையு முடையன்" என்புழி உம்மை இன்னுனென்று துணியாமைக்கண் வருதலின் ஐயவும்மை யென்பர், சேனாவரையரும்; தொல். இடை. சூ. எ. சே; நச். இ - வி. நூலாரும் இவ்வாறே கூறுவர். இ - வி. சூ. உருசு.

உ. "ஒன்றிரப்பான்போ லெளிவந்துஞ் சொல்லும்" என்பது, அவன் இவ் வாறொழுகுதல் நமக்கு இளிவரவாமென்னுங் குறிப்பினாற் கூறிக் குறைநயப்பித்தமையின், பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிவந்த இளிவரலாமென்பர், பேராசிரியரும்; தொல். மெய். சூ. சு. இ - வி. நூலாரும் இதனையே பின்பற்றுவர். இ - வி. சூ. இளஅ.

ங. "இன்றி யமையேனென் றின்னவுஞ்சொல்லுவாய்" கலி. ககo: உக.

ச. (அ) "நின்னுவி யன்னவள் முன்னுக வன்றி நிலையலையே" (ஆ) "நெஞ்சே,யினியேதுசென்றெய்துமாறென்று நீநின்றிரங்கலென்னே,

(பிரதிபேதம்) * ஒழுகைநமக்கு, † நின்னையன்றி, ‡ வாழ்வதிலனென்று, வாழலே னென்று, || அந்நிலைமைக்கண் ÷ அவன் வலையிலே,

கரு வாழலேன் யானென்னு நீநீப்பி னவனுயி
* னேழைய ரெனப்பலர் கூறுஞ்சொற் பழியாயிற்
சூழுங்கா னினைப்பதொன் † றறிகிலேன் வருந்துவல்
சூழுங்கா னறுநுதா னம்முளே சூழ்குவம்

எ - து: அவன் நீ அருளாதொழியின் யான் உயிர்வாழேனென்னுமாயின், குடிப்பிறந்தார்(க)பேதையராயிருப்பரென்று நன்மக்கள்அவரைச் சிறப்பித்துச் சொல்லுஞ்சொல் நீ (உ) முதுக்குறைமை பூண்டிருத்தலின் நினக்குப் பழியாயிருக்குமாயின்,இந்நிலைமைக்குச் செய்யலாவதொரு காரியத்தை ஆராயுங்கால் நினைப்பதொரு காரியத்தை அறியேனாய் வருந்தாநின்றேன்; இந்நிலைமை ஆராய்ந்துபார்க்குங்கால் நறிய நுதலினையுடையாய் ! நம்முள்ளே ஆராய்ந்து பார்ப்பேம்; ‡ எ - று.

கசூ, அவனே

(ங)நாணடப் பெயர்த்த னமக்குமாங் கொல்லாது
(ச)பேணின ரெனப்படுதல் பெண்மையு மன்றவன்
வெளவினன் முயங்கு மாத்திரம் வாவெனக்
|| கூறுவென் போலக் காட்டி
மற்றவன் ÷மேஎவழி மேவாய் நெஞ்சே

---

கனியே யிதழ்வஞ்சி கண்சொன்ன வாருயிர் கண்டுவந்தே" (இ) "கண்ணு குவைநினக் கங்குயி ராவள் கனங்கு ழையே" அம்பிகா. எ0, அக, க0க; (ஈ) "இங்கே யுயிரன்ன பாங்கியு நீயுமெழுந்தருளே" திருவாநூர்க். சுசு. (உ) "பொருப், பிணையே யிணைக்கொங்கை யாயின்ன நாமின்ப மெய்தவுயிர்த், துணையே துணைவர நீவரு வாயிந்தச சோலையிலே" மாறன்கோவை. எரு.

க. (அ) "நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும்பேதை மைத்தே" இறை. சூ. உங. நன். பெயர். சூ. அ. மயிலை. இ - வி. சூ. கசுஎ. மேற். (ஆ) "பெண்ணறி வென்பது பேதைமைத்தே" சிலப். உக: உச. (இ) "நுண்ணுணர் வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும்பேதை மைத்தே" நன். பெயர். சூ. அ. வி. மேற். (ஈ)"நுண்ணறி வுடைய ராகி நூலொடு பழகி னும், பெண்ணறி வென்ப தெல்லாம் பேதைமைத் தாதல்" திருவிளை. பன்றிக்குட்டிக்கு. ஙச: (உ) "பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்" (ஊ) "எண்ணற வோதி யெழுத்தறக் கற்கினும், பெண்ணறி வென்பது பெரும்பேதை மைத்தே"

உ. முதுக்குறைமை யென்பதற்கு, முதுமைக்கண் உறைகின்ற நிலைமை யென்றும் பேரறிவுடைமையென்றும் பொருள் கூறுவர்.

ங. "நாணடப் பெயர்த்தல்" கலி. சு0: ஙஉ.

ச. "பெண்ணன் றுரைத்த னமக்காயின்" கலி. ஙஎ: கூ.

(பிரதிபேதம்)* ஏழையரர், † அறிகலேன், அறிகிலன், ‡ என்றுள். || கூறுவனபோல, ÷ மேவழி மேயழி மேஎ நெஞ்சே, மேவாய் மேவாய் மேஎ நெஞ்சே.

எ - து: நம்மை நாண் வருத்துகையினலே அவனைப் போக்குதல் நமக்கும் அவன் இறந்துபடுகின்ற நிலைமைக்கட் பொருந்தாது, அவன் இறந்துபடுகின்றவனைப் பேணினரென்று நன்மக்கள் புகழ்ந்துகூறப்படுதல் நின் கருத்தாற் பெண்மையுமன்றாயிராநின்றது; இங்ஙனமாகவும், அவன் நின்னை முயங்குமளவைத் தன் நெஞ்சாலே கைக்கொண்டுவிட்டான்; அதற்கு நீ*மேவுகின்றிலை,இதற்கு யான் இனிக் கூறுவதொன்றின்றெனத் தலைவிக்குக் கூறி, பின்னைத் தோழி தன்னெஞ்சோடு முன்னிலைப் புறமொழியாகக் † கூறுவாள் குறியிடத்தேவாவென்று ‡கூறுவாள்போலே அவனுக்குஒரு பொய்க்குறியைக் காட்டி அவன் மேவின வழியிலே நெஞ்சே மேவுவாயாக என்றாள் ; எ - று.

இதனல், தலைவிக்குச் சூழ்ச்சி பிறந்தது.

(க)இஃது ஒன்றெனச் சொற்சீரும் அவனெயெனத் தனிச்சொல்லும் || பெற்று, தாழிசையுள்ஏனைமூன்றடியாக ஒன்றுநான்கடியாய் வந்தமையிற் கொச்சகக்கலியாயிற்று. (கக)

(சஅ.) ஆமிழி யணிமலை யலர்வேங்கைத் தகைபோலத்
தேமூசு நனைகவுட் டிசைகாவல் கொளற்கொத்த
வாய்நில்லா வலிமுன்பின் வண்டூது புகர்முகப்
படுமழை யடுக்கத்த மாவிசும் போங்கிய
கடிமரத் துருத்திய கமழ்கடாந் திகழ்தரும்
பெருங்களிற் றினத்தொடு வீங்கெருத் தெறுழ்முன்பி
னிரும்புலி மயக்குற்ற விகன்மலை நன்னாட;

அ வீழ்பெயற் கங்குனின் விளியோர்த்த வொடுக்கத்தால்
வாழுநாட் சிறந்தவள் வருந்துதோட் டவறுண்டோ
தாழ்செறி கடுங்காப்பிற் றாய்முன்னர் நின்சார
லூழுறு கோடல்போ லெல்வளை யுகுபவால்;

---

க. வெண்கலியுறுப்பு நிலையொத்துப் பாவேறுபடுங் கொச்சகத்துக்கு இச்செய்யுளை மேற்கோள்காட்டி, இது தரவும் கொச்சகமும் சுரிதகமும் முறையானே வந்து ஆசிரியச் சுரிதகத்தான் இற்றது என்று கூறி இவற்றையும் எழுதுவர் பே, 'இது ஒன்றெனவும் அவனெனவுஞ் சொற்சீருந் தனிச்சொல்லும் வந்து இடைநிலைப்பாட்டினுள் ஒன்றோரடிமிக்கு ஒருபொருண்மேல் மூன்றுவருதலின் ஒத்தாழிசையாகாது கொச்சகமாய்க் கலிவெண்பாட்டின் வேறாயிற்று' என்பர். நச்; தோல். செய். சூ. கருரு.

(பிரதிபேதம்)* மேவுகின்றிலை, † கூறுவாளாய்க்குறியிடத் ‡ கூறுவன போலே, || பெற்று ஒன்று மூன்றடியாக ஒன்று நான்கடியாய்.

கஉ இனையிரு ளிதுவென வேங்கிநின் வரனசைஇ
நினைதுய ருழப்பவள் பாடில்கட் பழியுண்டோ
வினையளென் றெடுத்தரற்று மயன்முன்னர் நின்சுனைக்
கனைபெய னீலம்போற் கண்பனி கலுழ்பவால்;

கசு பன்னாளும் படரடப் பசலையா லுணப்பட்டாள்
பொன்னுரை மணியன்ன மாமைக்கட் பழியுண்டோ
வின்னுரைச் செதும்பரற்றுஞ் செவ்வியு ணின்சோலை
மின்னுகு தளிரன்ன மெலிவுவந் துரைப்பதால்;

ஏனவாங்கு;

உக பின்னீதல் வேண்டுநீ பிரிந்தோணட் பெணநீவிப்
பூங்கண் படுதலு மஞ்சுவ ளுங்கிய
வருந்துய ரவலந் தூக்கின்
மருங்கறி வாரா மலையினும் பெரிதே.

இது வரையாது வந்து ஒழுகுந் தலைவற்குத் தோழி தலைவியாற்றமையும் இவ்வொழுக்கம் புறத்தார் அறியப்படுகின்றமையும் கூறி வரைவு கடாயது.

இதன் பொருள்.

(க) ஆமிழி (உ)யணிமலை (ஙு)யலர்வேங்கைத் தகைபோலத்
தேமூசு நனைகவுட் டிசைகாவல் கொளற்கொத்த
வாய்நில்லா (ச)வலிமுன்பின் (ரு)வண்டூது புகர்முகப்
படுமழை யடுக்கத்த மாவிசும் போங்கிய
கடிமரத் துருத்திய (சு)கமழ்கடாந் திகழ்தரும்

---

க. ஆம் - நீர். ஐங்குறு. உஉஙு.

உ. நீர்வீழ்ச்சி, மலைக்கு அழகுசெய்யு மென்பதனை, கலி. கOஙு: கO-கக. ஆம் அடிகளாலும் அவற்றின் குறிப்பாலும் உணர்க.

ஙு. (அ)"தும்பி.........வேங்கையஞ் சினையென.........பூம்பொறியானைப் புகர்முகங் குறுகியும்" கலி. சசு: உ - சு. (ஆ) "போதி யென்றான் பூத்த மரம்போற் புண்ணுற் பொலிகின்றான்" கம்ப. சம்பு. சஙு.

ச. "வலிமுன்பின்" கலி. ச: க.

ரு. வண்டு யானை மதத்தில் மொய்க்குமென்பது "வரிவண், டோங்குய ரெழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்ற, மாங்கவை விருந்தாற்றப் பகலல்கி" கலி. சுசு: உ - ச என்னும் பகுதியாலும் அதன் குறிப்பாலும் உணரலாகும்.

சு. இந்நூற்பக்கம் ககக: ஙு- ஆங்குறிப்புப் பார்க்க.

(க)பெருங்களிற் றினத்தொடு வீங்கெருத் தெறுழ்முன்பி
(உ)னிரும்புலி மயக்குற்ற விகன்மலை நன்னாட

எ-து: எட்டுத்திசையுங் காத்தற்றொழிலை மேற்கோடற்குப் பொருந்தின வாய்ப் பகைத்தவை எதிர்நில்லாத மிக்கவலியினையும் விளக்கத்தைத் தருகின்ற கமழ்கின்ற மதத்தான் நனைந்த கவுளினையும் நீர் வீழ்கின்ற அழகினையுடைய மலையிடத்துத் தேனினம் மொய்க்கும் பூக்களையுடைய வேங்கையினது அழகுபோல வண்டுகள் ஊதுகின்றபுகரினையுடைத்தாகிய முகத்தினையுமுடைய சொரியும் மழையையுடைத்தாகிய (ரு) பக்கமலையிடத்தனவும் பெருமையையுடைய விசும்பிலேவளர்ந்த மிகுதியையுடைத்தாகிய மரங்களையுடைய ஆற்றிடைக்குறையிடத்தனவுமாகிய,பெரிய(ச)யானைத்திரள்களோடே வீங்கின கழுத்தினையும் மிக்க வலியினையுமுடைய பெரியபுலி மாறுபாட்டாலே போர்செய்தலுற்ற மலையினையுடைய நல்ல நாடனே; எ-று.

---

க. "வேழக் குரித்தே விதந்துகளி றென்றல், கேழற் கண்ணுங் கடிவரையின்றே"(தொல். மரபு. சூ. ருச) என்பதனாலும் "களிறுமேல் கொள்ளவும்" (புறம். சுக: க.) என்பதனாலும் அதனுரையாலும், "கோட்டுமாவூரவும்" (சிலப். கரு: கஅ) என்பதனுரையில் மேற்கோளான இப் பகுதியில், களிறென்பது பன்றி யென்று தடைவிடைகளால் நிறுவப் பெற்றிருப்பதாலும் களிறென்பது பன்றியையு முணர்த்தும். அதனினீக்குதற்கு யானையை, "பெருங்களிறு" என்றுகூறினர்.

உ. சிறுபுலி சிறுத்தையெனப்படுதலின் வேங்கையை இரும்புலி யென்றார். இதனை "வேங்கை யிரும்புலி போன்ற" கள்வழி. ககூ. என் பதனாலும் பெரும்புலி என்னும் வழக்காலு முணர்க.

ரு. கிரிசரம், நதிசரம் வனசரமென யானை மூவகைப்படுமென்பர். அது (அ) "முத்திறத்தன வெண்ணலப்பிறப்பின மூரிவெங் களியானை", (ஆ) "மூவகை யானையர்" (வில்லி. சூதுபோர். எக, பதின்மூன்றாம். சூ) எனவருதலாலும் அறியப்படும். அவற்றுள் இங்குக் கூறப்பெற்றன கிரிசரமும் நதிசரமுமாம்.

ச. யானையும் புலியும் ஒன்றோடொன்று பொரல் இயல்பு: (அ) "குரூஉப் புலி பொருத புண்கூர் யானை" மலை. ருகஎ.(ஆ)"பூம்பொறி யுழுவைப் பேழ்வா யேற்றை, தேங்கமழ் சிலம்பிற் களிற்றொடு பொரினே", (இ) "வயக்களிறு பொருத வாள்வரி வேங்கை" நற்.கoச: க-உ; உருரு: ச. (ஈ) "புகர்முகக் களிற்றொடு புலிபொரு துழக்குநின், னகன்மலை" (உ) "வாயிழி கடாஅத்த வான்மருப் பொருத்தலோ, டாய்பொறி யுழுவை தாக்கிய பொழுதின்" கலி. சரு. கஉ-ரு: சகூ. ரு-ச. (ஊ) "புலியொடு பொருது சினஞ்சிறந்து வலியோ, டிரவுக் களிறு துங்கிய மருங்கு"(எ)"குயவரி யிரும்போத்துப் பொருத புண்கூர்,

திசைகாவல்கொளற்கொத்த என்றதனால் உலகைத் தாங்குதற்கு உரிய னென்றும் வலிமுன்பின் என்றதனன் மிக்க வலியினையுடையனென்றும் நனைகவுள் என்றதனுற் செல்வச்செருக்குடையனென்றும் வண்டூதுபுகர்முகம் என்றதனுற் பலர்க்கும் பயன்படுகின்றுனென்றும் இருவகைச் சுற்றத்திற்கும் ஏற்றுக. இருவகைச்சுற்றமாவன: தலைவியுடைய தந்தைசுற்றமுந் தாய்சுற்றமு மாம். இருவகையவாகிய களிற்ருேடே புலிமயக்குற்ற என்றதனன் இரு வகைச் சுற்றத்தாருடனே ஊரிலுள்ளார் தலைவியை அலர்கூறிப் பகைக்கின்று ரென உள்ளுறையுவமங்கொள்க. இது வினையுவமப்போலி.

அ (௧)வீழ்பெயற் *கங்குனின் விளி(உ)யோர்த்த வொடுக்கத்தால்
வாழுநாட் சிறந்தவள் வருந்துதோட் டவறுண்டோ
தாழ்செறி கடுங்காப்பிற் ருய்முன்னர் நின்சார
லூழுறு (௩)கோடல்போ லெல்வளை யுகுபவால்

எ-து: †தாழிட்டு அடைத்தாற் போலுங் கடிய காவலையுடைய தாய் முன்னே நின்னுடைய மலைச்சாரலிலே‡முறைமையையுற்ற கோடல் உகுமாறு போலே ஒளியினையுடைய வளைகள் உகுவனவாய் இராநின்றன; இங்ஙன மாதற்கு, இடைவிடாது வீழ்கின்ற மழையையுடைய இராக்காலத்து நின் னுடைய குறியால் அழைக்கின்ற அழைப்பினைச்(௪)செவிகருவியாகஓர்த்ததனு லுண்டான மனவொடுக்கத்தாலே உயிர்வாழ்கின்ற நாள் மிக்கவளுடைய வருந்துகின்ற தோளிடத்து அவை நினக்குச்செய்த தப்பு உண்டோ? இல்லையே; ||எ - று.

உகுப,அகரவீற்றுப்பலவறிசொல்;படுத்தலோசையாற்பெயராய்நின்றது(?)

---

துயங்குபிடி தழீஇய மதனழி யானை" அகம். உ௧௧: ௬ - எ, ௩௧௮ உ௨-௩. (ஏ) "வரிவயம் பொருத வயக்களிறு போல, வின்னு மாறாது சினனே" புறம்: ௧௦௦:எ-அ.(ஐ) "புலிகலாங் கொள்யானைப் பூங்குன்ற நாட" பழ. ௧௫எ. (ஒ) "புலியொடு பொருஉம் புகர்முக வோதையும்" சிலப். உ௫: உ௧. (ஓ) "நீடு பிணைப்பகட் டுடனே, வல்லி யம்பொரு மாறென" வில்லி. பதின்மூன்ரும். ௩௧.

௧. தலைவன் தன்வரவு அறிவிக்குங்குறி மயங்குதலால், அல்லகுறிப்பட்ட தோழி தலைவற்குப்பிற்றைஞான்று அதனைக்கூறியதற்கு "வீழ்பெயற் ..........உகுபவால்" என்பது மேற்கோள்; தொல். கள. சூ. ௪உ. நச்.

உ. ஓர்த்தல் இந்நூற்பக்கம் உ௮உ: ௫ - ஆங் குறிப்புப்பார்க்க.

௩. வளையுதிர்தற்குக் கோடற்பூ உதிர்தல் உவமையாதலை, கலி. எ-ஆம் பாட்டின் ௧௫ - ௬. அடிகளின் குறிப்பாலுணர்க.

௪. "நொச்சிப் பாடோர்க்குஞ் செவி" என்பதன் விசேடவுரையில் 'நொச்சிப்பூ விழுகின்ற ஓசையை...........கருதுஞ்செவி'என்று உரை

(பிரதிபேதம்) * கங்குலின், †தாளிட்டு,‡முறைமையுற்ற, ||என்றுள்.

கஉ இனையிரு ளிதுவென வேங்கிநின் வரனசைஇ
நினைதுய ருழப்பவள் *பாடில்கட் பழியுண்டோ
†வினையளென் றெடுத்தரற்று மயன்முன்னர் (க)நின்சுனைக்
கனைபெய னீலம்போற் கண்பனி கலுழ்பவால்

எ - து: இவ்வாறே ஒரு களவொழுக்கமுடையளென்று உயர்த்துக் கூப்பிடுகின்ற அயலார்முன்னே நின்னுடைய சுனையிடத்துச் செறிந்த மழையையேற்ற நீலம்போலே கண்கள் நீர் சொரிவனவாயிராநின்றன; இங்ஙனமாதற்கு இது யாம் வருந்துதற்கு ஏதுவாகிய இருளென்றேங்கி நின் வருதற்றொழிலை நச்சி நினைத்தலாலுண்டான வருத்தத்திலே வருந்துகின்றவளுடைய துயிலில்லாத கண்ணிடத்து அவை நினக்குச்செய்த பழிகளுண்டோ? இல்லையே; ‡எ-று.

கசு பன்னாளும் படரடப் (உ)பசலையா லுணப்பட்டாள்
(ங)பொன்னுரை மணியன்ன மாமைக்கட் பழியுண்டோ
வின்னுரைச் (ச)செதும்பரற் றுஞ் செவ்வியு ளின்சோலை
மின்னுகு தளிரன்ன மெலிவுவந் துரைப்பதால்

எ-து: நுரைகளையுடைய இனிய சின்னீர் வந்து ஆரவாரிக்கும் இளவேனிற்காலத்தே நின்னுடைய(ரு)சோலையில்ஒளிகெட்டதளிரையொத்த நிறக்கேடு வந்து பலர்க்குங் கூறுவதாயிராநின்றது; இங்ஙனமாதற்குப் பலநாளும் நினைவு வருத்துகையினாலே பசலையாலே நுகரப்பட்டவளுடைய பொன்னை

யெழுதி, 'மனத்தின் வினையைச் செவிமேல் ஏற்றினர்; அது கருவியாக உணர்தல்நோக்கி'என இலக்கணமும் இவ்வுரையாசிரியரே எழுதியிருத்தல் ஈண்டறிதற்பாலது; கலி. சகூ. கஉ - ங.

க. (அ) "கூடற் குடாஅது, பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய, வொடியா விழவி னெடியோன் குன்றத்து, வண்டுபட நீடிய குண்டு சுனை நீலத், தெதிர்மலர்ப் பிணைய லன்னவிவ, ளரிமதர் மழைக்கண்" (அகம். கசக. சச-கக) என்பதும் (ஆ) இந்நூற்பக்கம் உஎசு: உ-ஆங் குறிப்பும் ஈண்டறிதற்பாலன.

உ. பசலையா லுணப்படல்: கலி. கரு: கங.

ங. (அ) "மணிமிடை பொன்னின் மாமை" நற். ங0ச: சு. (ஆ) "காசு நிழற் காட்டு மாசின் மாமை" பெருங். (க) ச0: உஉஎ.

ச. (அ) "புனற்செதும்பு நின்றலைக்கும் பூங்குன்ற நாட" நாலடி. கஉஅ. (ஆ) "செதும்பற் றாமரைச் செவ்விதழ் போல" (இ) "செதும்புபரந் தெங்குஞ் சேற்றிழுக் குடைத்தாய்" (ஈ) "செருத்தற் றீம்பால் செதும்புபடப் பிலிற்றி" பெருங்:(க) ச0: ஙஉங; சக: உஅ, ககஉ.

ரு. "நீணிழற் றளிர்போல நிறனாழ்த்தல்" கலி. உ0: கஎ.

(பிரதிபேதம்) * பாடிலள்கட், † வினையருளென், ‡ என்றுள்.

யுரைத்ததொரு மணியுண்டாயின் அதனையொத்த பசலை பரந்த * மாமைநிறத்தின்கண் அது செய்த பழிகளுண்டோ ? இல்லையே; †எ-று.

ஏனவாங்கு, ‡அசை.

உக (க)பின்னீதல் வேண்டுநீ பிரிந்தோணட் பெனநீவிப்
பூங்கண் படுதலு மஞ்சுவ ருங்கிய
(உ)வருந்துய ரவலந் தூக்கின்
(ங)மருங்கறி வாரா மலையினும் பெரிதே.

எ-து: அவள் அங்ஙனமான இடத்து அவள் பூப்போலுங் கண் பாடின்மையை நீவிப் படுதற்கும் யான் அஞ்சுவேன்; அதற்குக் காரணமென்னெனில், அத்துயிலிடை||நினைத்து வருந்தத்தக்க கனவாற் பின்னர்த் தாங்கிய அரிய வருத்தத்தால் உற்ற கேட்டைத் தூக்கிப்பார்க்கில் அஃது எல்லையறியவொண்ணாத மலையினும் பெரிதாயிராநின்றது; இனி இவ்வருத்தம் உறாதபடி நீ வரையாமற் பிரியப்பட்டாளோடு கொண்டஉறவு பின்னுதலை நீ கொடுத்தல் வேண்டும்; ÷எ-று.

"பின்னுதல் பின்னெனநின்றது. × பின்னியதொடர்[நிலை](நீவி)" (ச) என்றார்பிறரும். துயில்கொள்ளாமையைத் = துடைத்து என்க.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

இது தரவும் தாழிசையும் தனிச்சொல்லும் சரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (கஉ)

(சகூ.) கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு
நெடுவரை மருங்கிற் றுஞ்சும் யானை
நனவிற்றான் செய்தது மனத்த தாகலிற்
கனவிற் கண்டு கதுமென வெரீஇப்

---

க. "பின்னீதல் ..............பெரிதே" என்பது துஞ்சிச்சோர்த லென்னும் மெய்ப்பாட்டிற்கு மேற்கோள்; தொல். மெய்ப். சூ. உங: பே.

உ. "அருந்துய ரவலமொடு" தொல்.களவு.சூ. கக. நச். மேற். 'எண்ணியது'

ங. (அ) "வரையளந் தறியாப் பொன்படு நெடுங்கோட், டிமையம்" புறம். ஙகூ: கச - ரு. (ஆ) "மலையே; அளக்க லாகாப் பெருமையு மருமையு, மருங்ககல முடைமையு மேறற் கருமையும்,பொருந்தக்கூறுப" தொல். சிறப். நச்.மேற். (இ) "அகலத் தெல்லையு மாழ்ச்சிய தந்தமு, முயர்பினேக்கமு முணர்த்தற் காகா, விஞ்சையம் பெருமலை" பெருங்: (க)ருக: சுூ - அ. (ஈ) "அளக்க லாகா வளவும் பொருளும் ..................... மலைக்கே" நன்.

ச. கலி. ருடு: கஅ.

(பிரதிபேதம்) * மைநிறத்தின் † என்றுள் ‡ ஆங்கு. அசை. || துயரகத்தனவாற் பின்னர்த் ÷ என்றுள் × பின்னீதொடாநிலை = துடைத்து, இதனாற்றலைவற்கு,

க

ரு புதுவதாக மலர்ந்த வேங்கையை
யதுவென வுணர்ந்தத னணிநல முருக்கிப்
பேணு முன்பிற்றன் சினந்தணிந் தம்மரங்
காணும் பொழுதி னேக்கல் செல்லாது
நாணி யிறைஞ்சு நன்மலை நன்னாட;

க0 போதெழின் மலருண்க ணிவண்மாட்டு நீயின்ன
காதலை யென்பதோ வினிதுமற் றின்னாதே
மின்னேருங் கண்ணுக விடியென்னுப் பெயலென்னு
யின்னதோ ராரிடை யீங்குநீ வருவதை;

கச இன்புற வளித்தனை யிவண்மாட்டு நீயின்ன
வன்பினை யென்பதோ வினிதுமற் றின்னாதே
மணங்கமழ் மார்பினை மஞ்சிவ ரடுக்கம்போழ்ந்
தணங்குடை யாரிடை யீங்குநீ வருவதை;

கஅ இருளுற ழிருங்கூந்த லிவண்மாட்டு நீயின்ன
வருளினை யென்பதோ வினிதுமற் றின்னாதே
யொளிறுவேல் வலனேந்தி யொருவன்யா னென்னுது
களிறியங் காரிடை யீங்குநீ வருவதை;

அதனால்;

உரு இரவின் வார லைய விரவுவீ
யகலறை வரிக்குஞ் சாரற்
பகலும் பெறுவையிவ டடமென் றோளே.

இது *நீரிவ்வாறு வருகின்ற வரவு எமக்குத் துன்பத்திற்குக் காரண †மாகாநின்றதெனக் கூறி இரவுவருவானைத் தோழி பகல்‡வருகவென்றது.

இதன்பொருள்.

(க)கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு
நெடுவரை மருங்கிற் றுஞ்சும் (உ)யானை

க. யானை புலியைக்கொல்லுமென்பது இந்நூற்பக்கம், உருக: க-ஆங் குறிப்பால் உணரலாகும்; கொன்று மலையிற் றுயிலுமென்பதை, கலி. சஉ: க – ரு-ஆம் அடிகளால் உணர்க. 'கொடுவரி, பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; ஆகுபெயருமாம்' புறம். கரு௯.

உ. யானை வேங்கைமரத்தைச் சினங்கொண்டு சிதைக்கு மென்பதனை, (அ) "கதம்வாய் வேழ, மிருங்கேழ் வயப்புலி வெரீஇ யயலது, கருங்

(பிரதிபேதம்) * நீஇவ்வாறு. † ஆய்நின்றதென, ‡ வாவென்றது.

(க)நனவிற்றான் செய்தது மனத்த தாகலிற்
கனவிற் கண்டு கதுமென (உ)*வெரீஇப்
ரு (ங)புதுவ தாக (ச)மலர்ந்த வேங்கையை
யதுவென†வுணர்ந்தத னணிநல முருக்கிப்

---

கால் வேங்கை யூறுபட மறலிப், பெருஞ்சினந் தணியுங் குன்ற நாட" நற். உகஎ: உ-ரு. (ஆ) "மறப்புலிக் குழூஉக்குரல் செத்து வயக்களிறு, வரைசேர் பெழுந்த சுடர்வீ வேங்கைப், பூவுடைப் பெருஞ்சினை வாங்கிப் பிளந்துதன், மாயிருஞ் சென்னி யணிபெற மிலைச்சி" பதிற். சக: எ - கO. (இ)"உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக், கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை" கலி. ங அ: சு - எ. (ஈ) "புலிக்கேழ் வேங்கைப் பூஞ்சினை புலம்ப, முதல்பாய்ந் திட்ட முழுவலி யொருத்தல்" அகம். உ௨எ: அ - கூ. (உ)"உருமி னார்த்துடன் றெதிரெறு முழுவையோ டும்பல், பொருத முற்றொழில் கனவலிற் பொருக்கென வெழுந்தங், கருகு நின்றவொள் வீயிணர் வேங்கையை யலைக்கு, மருவு வெஞ்சின மூண்டெழி வகுத்தறி யார்போல்" தணிகை. திருநாட்டு. சஉ. என்பவையும் வலியுறுத்தும்.

க. "நனவினு னலம்வாட நலிதந்த நடுங்கஞர், கனவினு லழிவுற்றுக் கங்குலு மாற்றாக்கால்" கலி. ருங: கஅ - கூ. என்பதும், "கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி, பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவு, மாரியர் துவன்றிய பேரிசை யிமையம்" (பதிற். கக: உக-ங.) என்புழி 'அருவியொடு நரந்தங்கனவுமென்றது, அவ்வாரியரா லியானேபிற விலங்கானும் மக்களானும் வருத்தமின்றிப் பகற்காலத்துத் தான் நுகர்ந்த அருவியையும் நரந்தத்தையுமே கனவினுங் காணுமென்றவாறு' என எழுதியிருக்குமுரையும் இங்கே அறிதற்பாலன.

உ. யானை தன்னைத் தாக்கும் புலிக்கு வெருவுமென்பது: "பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை, வெரூஉம் புலிதாக்குறின்" குறள். ருகூகூ.

ங. புதுமையென்னும்பண்படியாகப்பிறந்த புதிதென்னுஞ்சொல் வழக்கிலுள்ளது. அஃதன்றியும் 'புதுவது' என்று வருதலை. மலை. உஅ; கலி. உஉ: ச, உச: ச, சுகூ: க, கஉஅ எ; அகம். உரு: ரு, உஉக: ரு, ஙருஉ: கசு; புறம். சஉ: சு, எசு: உ; சிலப். ஙO: கசO; சீவக. கஙசங; பெருங். (உ) க.: கசுஎ, எ: கசுங, (ச) ச: கOரு; பாகவதம். (கO) அக்குரூரன். ஙO. இவற்றில் வந்திருத்தலாலறிக. முதுமையென்னுஞ் சொல்லடியாக முதுவது என்று ஒருசொல், அருகிவருகின்றது.

ச. மலர்ந்த வேங்கைமரம் புலிபோற்றோன்றுமென்பது இந்நூற்பக்கம் உOகூ: உ, (இ - ஃ) குறிப்பால் உணரலாகும்.

(பிரதிபேதம்) *வெரீஇ, †உணர்ந்துதன்.

பேணு முன்பிற்றன் (க)சினந்தணிந் தம்மரங்
காணும் பொழுதி னுேக்கல் செல்லாது
(உ)நாணி யிறைஞ்சு நன்மலை நன்னாட

எ - து: வளைந்தவரியினையுடைய புலி வந்து போர்செய்கையினாலே அதனை வென்ற வருத்தத்தோடே நெடிய மலையிடத்தே துயில்கொள்ளும் யானை மெய்யானகாலத்தே தான் பொருதுவென்றது மனத்திடத்தேகிடக்கை யாலே*அதனைப் பொய்யான காலத்தே கண்டு கடுகவெருவி எழுந்திருந்து புதிதாக மலர்ந்துநின்ற வேங்கைமரத்தைப் புலியென்றுணர்ந்து அம்மரத்தி னுடைய அழகிய நலத்தைக் கெடுத்துத் தன் வலியினாற் பேணாத சினம் மாறி அவ்வேங்கையைக் காணுங்காலத்து அதனைப்பார்த்தலைச் செய்யாமல் நாணிக் கவிழ்ந்துபோன நன்றாகிய மலைநாடனே ! எ - று.

புலியினைவென்று துயிலும் யானை அயலார்கூறிய அலரைச் சுற்றத் தார்க்குப் பொய்யெனத் தேற்றி மனைக்கட்டுயில்கின்றதலைவியாகவும், கனவிற் கண்டு வெருவினதன்மை அத்தலைவி நனவில் தான் அங்ஙனஞ் செய்த தெல்லாம்†தன்மனத்ததாகலின் அச்செயலைக்கனவினுங்கண்டு அவள்வெருவின தன்மையாகவும், வேங்கையை நலங்கெடுத்தமை தோழி அவனது களவொழுக் கத்திற்குடம்பட்டுக்கொடுமைசெய்து ஒழுகுகின்றாளென்று தலைவிதோழியை வருத்தியதாகவும், அது சினந்தணிந்ததன்மை தோழிகருத்தறியாமல் அவளைக் கொடுமைகூறினேமென்று தலைவி உட்கொண்டதன்மையாகவும், அஃது அதனைநோக்காதுஇறைஞ்சுகின்றதன்மை யாமும் இவள் வருந்த இங்ஙனங் கூறினேமென்று எதிர்முகமாக மகிழ்ந்து நோக்காது தலைவி நாணி இறைஞ்சியிருக்கின்றதன்மையாகவும் உள்ளுறையுவமங்கொள்க. இது வினையுவமப் போலி.

கo போதெழின் மலருண்க ணிவண்மாட்டு நீயின்ன
காதலை யென்பதோ (௩)வினிதுமற் றின்னாதே
மின்னேருங் கண்ணாக(ச)விடியென்னாய் பெயலென்னா
யின்னதோ ராரிடை யீங்குநீ வருவதை

---

க. "வரிவயம் பொருத வயக்களிறு போல, வின்னு மாறாது சினனே" (புறம். கOO: எ - அ.) என்பதனால், சினந்தணிதல் அருமையென்று இங்ஙனங் கூறினார்.

உ. நாணி யிறைஞ்சுதல் குறள். கOகூஉ, கOகூ௩. பரிமேலழக ருரை.

௩. "இனிதுமற் றின்னாதே" கலி. அO: கரு.

ச. (அ) "நினைத்தொறுங் கலுழுமா லிவளே கங்குல்...............களிறும், வலியிற் றப்பும் வன்கண் வெஞ்சினத், துருமுஞ் சுரும்................ குழுமலை விடரக முடையவா லெனவே" (குறிஞ்சி. உருக - உசுக.) (ஆ) "தலைமகன் இரவுக்குறி ஒழுகாநின்ற நிலைமைக்கண், 'எம்பெரு மான் வரும்வழி........ வெண்கோட்டி யானையும்......உருமும்........

(பிரதிபேதம்)* இதனை, †தன்மத்ததாகிலெனச்செயலை.

எ - து: (௧)அலரும் பருவத்ததாய் அழகினையுடைத்தாகிய மலர்போலும் மையுண்கண்ணினையுடைய இவளிடத்து நீ இன்றியமையாதகாதலையுடையை யென்று கூறுகின்ற வார்த்தையோ இனிது;*இஃதொழிய வழியை ஆராய்ந்து பார்க்கும் கண் மின்னாக இடியென்று கருதாயாய் மழையென்று கருதாயாய் இப்பெற்றித்தானதோர் அரிய வழியிலே இவ்விடத் தேற நீ வருகின்றநிலைமை எமக்கு இன்னாது; எ - று.

௧௪ இன்புற வளித்தனை யிவண் மாட்டு நீயின்ன
வன்பினை யென்பதோ வினிதுமற் றின்னாதே
மணங்கமழ் மார்பினை (௨)மஞ்சிவ ரடுக்கம்போழ்ந்
(௩)தணங்குடை யாரிடை யீங்குநீ வருவதை

எ-து: இவள் இன்புறும்படி அளித்தாயாகையினாலே இவளிடத்து நீ இன்றியமையாத அன்பினையுடையையென்று கூறுகின்ற வார்த்தையோ இனிது, அஃதொழிய மணம் நாறுகின்ற மார்பினையுடையையாய் மஞ்சு பரக்கின்ற பக்கமலையை ஊடறுத்து, (௪)சூரரமகளிரையுடைய அரிய வழியிலே இவ்விடத்தேற நீ வருகின்ற நிலைமை எமக்கு இன்னாது; எ - று.

---

வரையரமகளிருமுடைத்து; மற்றும் தெய்வங்கள்வெளவும்வண்ணத்தன; ஏதம் நிகழ்வதுகொல்லோ' எனவேறுபடும்" (இறை. சூ. உ௯. உரை) என்பவை இத்தாழிசைகளுடன் ஒப்புநோக்கற்பாலன.

௧. "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" குறள். ௧௨௨௭. என்பதனால் போதென்பதன் பொருளைத்தெளிக.

௨. இந்நூற்பக்கம் உ௪௫: உ-ஆங் குறிப்புப்பார்க்க.

௩. (அ) "அணங்குடை நெடுவரை" அகம். ௨௨ : ௧. (ஆ) "அணங்குடை நெடுங்கோடு" புறம். ௫௨: ௧.

௪. (அ) "சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்,சூரர மகளி ராடுஞ்சோலை" முருகு. ௪௦-௪௧. (ஆ) "அருவியான்ற பெருவரை மருங்கிற், சூர்ச்சுனை துழைஇ" (இ) "அணங்குடைச் சிலம்பிற், கவிரம் பெரிய வுருகெழு கவாஅ, னேர்மலர் நிறைசுனை யுறையுஞ், சூர்மகண் மாதோ வென்னு மென்னெஞ்சே" (ஈ) "சூர்புக னனந்தலை, மாயிருங்கொல்லி" அகம். ௯௧; ௩ - ௪, ௧௯௮: ௧௪-௭, ௩௦௩: ௫ - ௬. (உ) "வரையர மங்கையர் வெளவுத லஞ்சதும் வாரலையோ" யா - வி. சூ. ௭௬. மேற்கோள். என்பவையும் (ஊ) "சூரர மகளிரி னின்ற நீமற், றியாரை யோவெம் மணங்கியோ யுண்கென" அகம். ௩௨:௭-௮. என்பதும்அதன்குறிப்பில், 'சூரரமகளிரைப்போல வென்றான் தன்னை வருத்துதலான்' என்று விளக்கியிருத்தலும் ஈண்டறிதற்பாலன.

(பிரதிபேதம்) * இதுவொழிய.

௧அ (௧)இருளுற ழிருங்கூந்த லிவண்மாட்டு நீயின்ன
வருளினை யென்பதோ வினிதுமற் றின்னாதே
ஒளிறுவேல் வலனேந்தி யொருவன்யா னென்னாது
(௨)களிறியங் காரிடை யீங்குநீ வருவதை

எ - து: இருளோடே மாறுபடுகின்ற கரிய கூந்தலையுடைய இவளிடத்து நீ இன்றியமையாத அருளினையுடையையென்று கூறுகின்ற வார்த்தையோ இனிது, அஃதொழிய விளங்குகின்ற (௩)வேலை வலக்கையிலே எடுத்து யான் ஒருவனென்று கருதாதே யானை உலாவுகின்ற அரிய வழியிலே இவ்விடத்தேற நீ வருகின்ற நிலைமை எமக்கு இன்னாது; எ - று.

ஒருவனென்றது இவ்வுலகத்துக்குத் தலைவனென்றது.

அதனால், அசை.

௨௩ (௪)இரவின் வார *லைய விரவுவீ
பகலறை †வரிக்குஞ் சாரற்
(௫)பகலும் ‡பெறுவைமிவ டடமென் றோளே

எ - து: அவ்வின்னாமையால் எமக்குத் துன்பம் வருதலின், ||ஐயனே! இராக்காலத்து வாராதேகொள்; இவளுடைய பெருமையையுடைய மெல்லிய தோள்களை விரவிய பூக்கள் அகன்ற பாறையிலே கோலஞ்செய்யும் மலைச்சாரலிடத்தே பகற்காலத்தும் பெறுவை; ÷எ - று.

இதனால், தலைவற்குச் ×சூழ்ச்சி பிறந்தது.

இது தரவிற் குறைந்த சுரிதகம்பெற்ற ஒத்தாழிசைக்கலி. (௧௩)

---

௧. (அ) "இருளுற ழிருங்கூந்தன் மகளிரோடு"(ஆ)"இருளுறழ் கூந்தலாள்" கலி. ௧௨௨: ௧௨, ௧௪0: ௩௩.

௨. (அ) "வான்றோய் வெற்ப சான்றோ யல்லையெங், காமங் கனிவ தாயினும் யாமத், திரும்புலி தொலைத்த பெருங்கை யானை, வெஞ்சின வுருமி னுராறு, மஞ்சுவரு சிறுநெறி வருத லானே" நற். ௩௫௩: எ-௧௧. (ஆ) "கடுங்களிறு விட்டுழிச் செல்லார்" சிறுபஞ்ச. அ0.

௩. "யானையோ நுங்கைவே லஞ்சுக" யா - வி. சூ. எ௬. மேற்.

௪. "இரவின் வார லைய............ மென்றோளே" என்பது தோழி பகற்குறி நேர்வாள்போல இரவுக்குறி விலக்கியதற்கும் (தொல். கள. சூ. ௨௩. நச்.) கிழவோன் றன்னை வாரலென்றதற்கும் (தொல்.பொருளி. சூ. ௧௬. நச்) மேற்கோள்.

௫. காலமென்னு முறுப்பிற்கு, "பகலும் பெறுவைமிவடடமென்றோளே" என்பதை மேற்கோள்காட்டி இஃதெதிர்காலமென்பர், பே; நச். இருவரும்; தொல். செய். சூ. ௨0௨.

(பிரதிபேதம்) * ஐஇய, † விரிக்கும், ‡ பெறுகுவை. || ஐயவென இராக், ஐயஇனி இராக், ÷ என்று இரவுவருவானைத்தோழி பகல் வாவென்றாள். × சூட்சி,

(௫0.) வாங்குகோ ணெல்லொடு வாங்கி வருவைகன்
மூங்கின் மிசைந்த முழந்தா ளிரும்பிடி
தூங்கிலை வாழை நளிபுக்கு ஞாங்கர்
வருடை மடமறி யூர்விடைத் துஞ்சு
மிருடூங்கு சோலை யிலங்குநீர் வெற்ப;

௬ அரவின் பொறியு மணங்கும் புணர்ந்த
வுரவுவின் மேலசைத்த கையை யொராங்கு
நிரைவளை முன்கையென் றோழியை நோக்கிப்
படிகிளி பாயும் பசுங்குர லேனல்

௧0 கடிதன் மறப்பித்தா யாயி னினிநீ
நெடிதுள்ள லோம்புதல் வேண்டு மிவளே
பல்கோட் பலவின் பயிர்ப்புறு தீங்கனி
யல்கறைக் கொண்டூ ணமலைச் சிறுகுடி
நல்கூர்ந்தார் செல்வ மகள்;

௧௫ நீயே, வளியி னிகன்மிகுந் தேருங் களிறுந்
தளியிற் சிறந்தனை வந்த புலவர்க்
களியொடு கைதூ வலை;

அதனால்;

௧௬ கடிமா கடவுறாஉங் கோல்போ லெனைத்துங்
கொடுமையிலை யாவ தறிந்து மடுப்பல்
வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி
யுழையிற் பிரியிற் பிரியு
மிழையணி யல்குலென் றோழியது கவினே.

இது "புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற்கண்"(௧)தோழிகூறியது. அது தோழியிற்கூட்டம் நிகழ்ந்தபின் முற்காலத்துப் பணிந்து பின்னின் றேனைத் தோழி தானே பணிந்தொழுகுதலாம்.

இதன் பொருள்.

வாங்குகோ ணெல்லொடு வாங்கி வருவைகன்
(௨)மூங்கின் மிசைந்த(௩)முழந்தா ளிரும்பிடி

---

௧. தொல். களா. சூ. ௨௩.

௨. மிசைதல் தின்றலென்னும் ஒருவினைப் பொருளில் வந்ததற்கு இவ்வடி மேற்கோள். தொல். கிளவி. சூ. ௪௬. நச். பெரும்பா. ௨௬௨.

௩. "முழந்தா ளிரும்பிடி" குறுந். ௩௯௪.

(க)தூங்கிலை வாழை *நளிபுக்கு ஞாங்கர்
(உ)வருடை மடமறி†யூர்விடைத் துஞ்சு
(௩)மிருடேங்கு சோலை யிலங்குநீர் வெற்ப

எ-து: தானே விளைகின்ற (ச)மூங்கிலின்கோலை நெல்லுடனே வளைத்துத் தின்கின்ற முழந்தாளையுடைய கரிய பிடி ‡அம்மலைக்கட் செறிந்த இலையினை யுடைய வாழைசெறிந்த இடத்தே||புகுந்து, ஆங்கண் வருடைமானினது மடப் பத்தையுடைய மறிபரந்துதிரிகின்ற இடத்தே,ஞாயிறுதோன்றுகின்ற விடியற் காலத்தே, துயில்கொள்ளும் இருள்செறியுஞ் சோலையினையும் விளங்குகின்ற நீரினையுமுடைய வெற்பனே; எ - று.

---

க. (அ) "தழையிலை வாழை" ஐங். சசு0. (ஆ) "அள்ளிலை வாழை" பெருங். (க) ச0: கஉ.

உ. வருடை, மலையில்வாழும் விலங்கு; இது: (அ) "மழையாடு சிமய மால்வரைக் கவாஅன், வரையாடு வருடை" பட்டினப். க௩அ - கூ. (ஆ) "கருங்கலை, கடும்பாட்டு வருடையொடு தாவன வுகளும், பெரு வரை" (இ) "அவன்மலைப், போருடை வருடையும் பாயாச், சூருடை யடுக்கத்த" நற். ககக: சு - அ, ௩௫கூ: எ - கூ. (ஈ) "நெடுவரை மிசை யது குறுங்கால் வருடை" ஐங்குறு. உஅஎ. (உ)"வரைவாழ் வருடைக், கோடுமுற் றிளந்தகர்" அகம். ௩எஅ: சு - எ. (ஊ)"வரைபாய்வருடை" என்பவற்றாலும் அறியலாகும். இது முதுகிடத்தே காலையுடையதென நச்சினார்க்கினியர் கூறியுள்ளார். கவையடியை யுடையதென்பர் கூர்மபுராணமுடையார். இதன் குழவி மறியென்றும் கூறப்படுதல் "செவ்வரைச் சேக்கை வருடை மான்மறி" குறுந். கஅஎ. என்பதனாலு முணரலாகும். எண்கால் வருடையென்பதும் இதுவேபோலும்.

௩. "வெயிலொளி யறியாத விரிமலர்த் தண்கா" (கலி. ௩0: எ) என்பதும் அதனடிக்குறிப்புக்களும் இங்கு ஒப்புநோக்கற்பாலன.

ச. யானை மூங்கின் மிசைதல்: (அ) "நெற்கொ ணெடுவெதிர்க் கணந்த யானை" குறிஞ்சி. ௩௫. (ஆ) "இருவெதி ரீன்ற வேற்றலைக் கொழு முளை, சூன்முதிர் மடப்பிடி நாண்மேய லாரு, மலை" நற். ககசு: ச-சு. (இ) "பசுங்கழை தின்ற கயவாய்ப், பேதை யானைசுவைத்த, கூழை மூங்கில்" குறுந். கஎகூ.(ஈ) "மழகளிறு மிகீஇத்தன்,கான்முளை மூங்கிற் கவர்கிளை" பதிற். அச: கக - உ. (உ) "பைங்கண் யானை, முற்றா மூங்கின் முளைதரு பூட்டும்" (ஊ) "முளைமேய் பெருங்களிறு" (எ) "முளைவளர் முதல மூங்கின் முருக்கிக், கிளையொடு மேய்ந்த கேழ்கிளர் யானை" அகம். அ௫: எ-அ, கசஅ: க௩, ௩௩உ: க-உ; (ஏ) "கழைதின் யானை" (ஐ) "பசித்துப்பணைமுயலும் யானைபோல" புறம்: எ௩: கூ. அ0: எ. என்பவற்றால் அறியலாகும். இதனெல், தோரையென்றுஞ் சொல்லப்படும்.

(பிரதிபேதம்) * நணிபுக்கு. †ஊரிடை, ‡அம்மலைக்குச், ||புகும்வருடை,

மூங்கில் மிசைந்தபிடி தம்மிடத்துத்தாழ்ந்த அரியதலைவனை அன்புடனே பெற்று நுகர்ந்த தலைவியாகவும், பின்னர் அது வாழைச்செறிவிலே புகுந்து அப்பழத்தை நுகர்ந்ததன்மை அவன் வரைந்து கொண்டுழி அவன் மனைக்கண் நலிவற இருந்து அவனை நுகர்ந்ததாகவும்,புலிமுதலியனவின்றிமறியூரிடத்துத் துயிலுதல் அலர்கூறுவாரின்றி அவன் சுற்றத்திடை இல்லறம் நிகழ்த்தித் தங்குந் தன்மையாகவும் உள்ளுறையுவமங் கொள்க. இது *வினையுவமப்போலி.

௬ (௧)அரவின் பொறியு (௨)மணங்கும் புணர்ந்த
வுரவுவின் †மேலசைத்த கையை யொராங்கு
நிரைவளை முன்கையென் ‡றோழியை நோக்கிப்
(௩)‖படிகிளி பாயும் (௪)÷பசுங்குர லேனல்

---

௧. (அ) "புணர்ந்தபி னவன்வயின் வணங்கற் கண்ணும்" என்பதற்கு, 'மேற்சொல்லப்பட்ட மூவகையானும் புணர்ச்சியுண்மை பொருந்திய பின் தலைவன்கட் டாழநிற்றற் கண்ணும்' என்று பொருள்கூறி "அது நீ கருதியதுமுடிக்கற்பாலை யெனவும் நீ இவளைப் பாதுகாத்தல் வேண்டுமெனவும் இவ்வகை கூறுதல்" என்று விளக்கி, "அரவின் பொறியும்..........ஓம்புதல் வேண்டுமெனவும், கடமா கடவுறாஉங் ........சவினே யெனவும் வரும்" என்பர் இளம். (ஆ) நச்சினார்க்கினியரும் இதனையே தழுவுவர். தொல். கள. சூ. ௨௩.

(இ) "அரவுற ழஞ்சிலை" குறிஞ்சி. ௧௫௮. (ஈ) "யரவின்றோற்றமே போலும் சிலைகளும்" சீவக. ௨௧௫௮. என வில்லுக்கு அரவு உவமமாய் வருதலும் காண்க.

௨. (அ) "அழறிகழ்ந் திமைக்கு மஞ்சுவரு நெடுவேல்" (ஆ) "உரவுச்சினங் கனலு மொளிதிகழ் நெடுவேல்" சிறுபாண். ௬௪, ௧௦௨; என்பவற்றினுரையாலும், (இ) "வென்றிமங்கை வேடர்வில்லின் மீதுமேவு பாதம்" பெரிய. கண்ணப்ப. ௬௧ என்பதனாலும், படைக்கலங்களில் கொற்றவை யுறைவதாகக் கூறுதல் மரபென்று அறியப்படுதலின் இங்கும் 'அணங்கு' என்பதற்குக் கொற்றவை என்று பொருள் கொள்ளலுமாம்.

௩. "படிகிளி... .....வேண்டும்" என்பது குற்றியலுகரம் ஒற்றொடுவந்து நேரசையானதற்கு மேற். தொல். செய். சூ ௯. 'குற்றியல்' இளம்.

௪. எனல் பசுந்தினையாதலின்: "பசுங்குரலேனல்" என்றார். இதனை (அ) "அமைந்த, திவட்காயிற் செந்தினைகா ரேனல்" (திணைமாலை. ௮) என்பதும் (ஆ) எனலென்பதற்குப் பசுந்தினையென்று (ஐந் - ஐம். ௧௨.) உரை யெழுதப்பெற்றிருப்பதும் வலியுறுத்தும்.

(பிரதிபேதம்) * உவமப்போலி அரவின். † மேலசைஇய, ‡ தோழி நெறிநோக்கி, ‖ படுகிளி. ÷ பைங்குரல்.

*கடிதன் மறப்பித்தா யாயி னினிநீ
நெடிதுள்ள லோம்புதல் வேண்டு மிவளே
(௧)பல்கோட் பலவின் †பயிர்ப்புற(௨)தீங்கனி
யல்கறைக் ‡கொண்டு ணமலைச் (௩)சிறுகுடி
(௪)நல்கூர்ந்தார் செல்வ மகள்

எ-து:(௫)பாம்பின்பொறிபோலும் பொறிகளும் பகைவரை வருத்துதலுங் கூடினவலியினையுடைய வில்லின்மேலேவைத்த கையினையுடையையாய்நின்று நிரைத்த வளையணிந்த முன்கையையுடைய என் றோழியைக் காமக்குறிப்பு அவட்கு நிகழும்படி நோக்கி, படிகின்ற(௬)கிளிகள் பரக்கும் பசிய கதிரை

---

௧. (அ) "முழவொ டாகுளி.........பதலையும் பிறவும், கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப, நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்" (ஆ) "கீழு மேலுங் கார்வாய்த் தெதிரிச், சுரஞ்செல் கோடியர் முழவிற் றூங்கி, முரஞ்சுகொண் டிறைஞ்சின வலங்குசினைப் பலவே" மலை. ௩-௧௩, ௧௪௨-௪. (இ) "செவ்வேர், சினைதொறுந் தூங்கும் பயங்கெழு பலவின்" நற். ௭௭: ௪-௫. (ஈ) "வேரு முதலுங் கோடு மோராங்குத், தொடுத்த போலத் தூங்குபு தொடரிக், கீழ்தாழ் வன்ன வீழ்கோட் பலவின்" குறுந். ௨௫௭.

௨. (அ) "பழுமீக் கூறும் பலாஅப் போல" பெரும்பாண். ௪0௮. என்பதனுரையில் 'பழத்தின் இனிமையால் மேலாகச்சொல்லும் பலாமரத்தையொக்க' என்று இவரெழுதி யிருத்தலும் (ஆ) "செங்காற் பலவின்றீம் பழம்" நற். ௨௩௨: ௫. (இ) "தீம்பழப் பலவின்சுளை" அகம். ௧௮௨: ௩. (ஈ) "தீஞ்சுளைப் பலவின் பழம்" புறம். ௧0௯: ௫. எனவருதலும் காண்க.

௩. "சிறுகுடியீரே" கலி. ௩௯: ௧௧.

௪. (அ) "நல்கூர்ந்தார் செல்வமகள்" கலி. ௫௬: ௧௨. (ஆ) "தம்பொருளென்பதம் மக்கள்" குறள். ௬௩. (இ) "பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற், றென்னுடைய ரேனு முடையரோ - வின்னடிசில், புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ்செய்யவாய், மக்களையிங் கில்லா தவர்" நள. கலிதொடர். ௬௬. (ஈ) "மக்களைப் பெறுத லில்லா வறுமையொன் றுற்றான் மன்னன்" விநாயக. பிந்தியமயூரேசர். ௩.

௫. "பைத்தபாம்பின் றுத்தியேய்ப்பக், கைக்கசடிருந்த...........றடாரி" பொருந. ௬௯-௭0. என அரவின்பொறி தடாரிக்குக் கூறுதலுங் காண்க

௬. தினைகவரக் கிளிவந்துவீழ்தலும் அவற்றைக் கொடிச்சியர்கடிதலும்: (அ) "நற்கோட் சிறுதினைப் படுபு ளோப்பி, யெற்பட வருதியரெனநீ விடுத்தலிற்...........தழலுந் தட்டையுங் குளிரும் பிறவுங், கிளிகடி மரபின வூழூழ் வாங்கி...........கிள்ளை யோப்பியும்" குறிஞ்சி.

(பிரதிபேதம்) * கடிகின், † பயிற்புறு, ‡ கொண்டுணமலை.

புடைய புனத்திற் கிளியைக் கடிதலை ஒருபடிப்பட மறப்பித்து, நின்வயத்தா ளாக்கியே விட்டாயாயின், இனி நீ*இடையிடாது நினைத்தலைப் பாதுகாத்தலை இவள் விரும்பும்; இவள் பல குலைகளையுடைய †பலாவினது பிசினையுடைத் தாகிய இடத்தையுடைய இனிய பழம் வீழ்ந்துகிடந்த பாறையிடத்தே எடுத்துக்கொண்டு உண்ணும் ஊணினையும் பெருஞ்சோற்றுத் திரளையுமுடைய சிறிய குடிவிலிருக்கும் பிள்ளையான் மிடிப்பட்டாருடைய செல்வத்தையுடைய மகள்; ஆதலான் நின்னைப் பிரிந்து வருந்துதலாற்றாள்; எ-று.

---

௩அ - ௪௦௧, (ஆ) "தேம்படு சாரற் சிறுதினைப் பெருங்குரல், செவ் வாய்ப் பைங்கிளி கவர நீமற், றெவ்வாய்ச் சென்றனை யவணெனக் கூறி, யன்னை யானுள் கழற", (இ) "துய்த்தலைப் புனிற்றுக்குரல் பால்வார் பிறைஞ்சித், தோடலைக் கொண்டன வேன லென்று, துறு கன் மீமிசைக் குறவன குழீஇச், செவ்வாய்ப் பாசினங் கவருமின் றவ்வாய்த், தட்டையும் புடைத்தனை கவணையுந் தொடுக்கென, வெந் தைவந் துரைத்தன னாக", (ஈ) "வாரன் மென்றினைப் புலவுக்குரன் மாந்திச், சாரல் வரைய கிளையுடன் குழீஇ, வளியெறி வயிரிற் கிளி விளி பயிற்று, ளியிருஞ் சிலம்பி னன்மலை நாடன்", (உ) "தந்தை வித்திய மென்றினை பைபயச், சிறுகிளி கடிதல் பிறக்கியா வணதோ, குளிர்படு கையள் கொடிச்சி செல்கென", (ஊ) "பைந்தினை, பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரும்", (எ) "பைந்தாட் செந்தினை, வரை யோன் வண்மை போலப் பலவுடன், கிளையோ டுண்ணும் வளைவாய்ப் பாசினம்", நற். ௧௩௭: ௨ - ௫, ௨௦௬: ௧ - ௬, ௩௦௪: ௧ - ௪, ௩௦௬: ௧ - ௩, ௩௪௭: ௩ - ௪, ௩௭௬: ௨ - ௪. (ஏ) "பொன்போற் சிறுதினைக், கிளிகுறைத் துண்ட கூழை யிருவி", (ஐ) "செந்தினை..........பைங் குரற், படுகிளி கடிகஞ் சேறும்", (ஒ) "ஏனற், படுகிளி கடியுங் கொடிச்சி" (ஓ) "பெருங்குர லேன, லுண்கிளி கடியுங் கொடிச்சிகைக் குளிரே" குறுந். ௧௩௩, ௧௯௮, ௨௯௧, ௩௬௦. (ஔ) "சாரற் புறத்த பெருங்குரற் சிறுதினைப், பேரமர் மழைக்கட் கொடிச்சி கடியவுஞ், சோலைச் சிறுகிளி யுண்ணுநாட" (ஃ) "வன்கட் கானவன் மென் சொன் மடமகள், புன்புல மயக்கத் துழுத வேனற், பைம்புறச் சிறு கிளி கடியு நாட" (அஅ) "தினையாய் கிள்ளை" (ஆஆ) "மெல்லியற் கொடிச்சி காப்பப், பல்குர லேனற் பாத்தருங் கிளியே" (இஇ) "கொ டிச்சி யின்குரல் கிளிசெத் தடுக்கத்துப், பைங்குர லேனற் படர்தருங் கிளியெனக், காவலுங் கடியுநர் போல்வர்" ஐங்குறு. ௨௮௨, ௨௮௩, ௨௮௭, ௨௮௮, ௨௮௯. (ஈஈ) "சிறுதினைப் படுகிளி கடீஇயர் பன்மாண், குளிர்கொ டட்டை மதனில புடையா" (உஉ) "தழலை வாங்கியுந் தட்டை யோப்பியு,...............குறமகள் காக்கு மேனல்" (ஊஊ) "பெருங்குர லேனல், கிளிபட விளைந்தமை யறிந்துஞ் செல்கென,

(பிரதிபேதம்) * இடையிட்டு, † பலாவின் பசினை,

இவளென்றது, படர்க்கையை முன்னிலையாகக் கூறியது,*"ஊன்சோற் றமலை பாண்கடும் பருத்தும்" (க)என்றார் பிறரும்.

கடு நீயே, (உ)†வளியினியன்மிகுந் தேருங் களிறுங்
தளியிற் சிறந்தனை வந்த ‡புலவர்க்
களியொடு (௩)கைதூ வலை

அதனால்

கக. கடுமா கடவுறூஉங் கோல்போ லெனைத்துங்
கொடுமையிலை யாவ தறிந்து (ச)மடுப்பல்

---

நம்மவண் விடுநள் போலாள் கைம்மிகச், சில்சுணங்கணிந்த செறிந்து வீங் கிளமுலை, மெல்லிய லொலிவரும் கதுப்பொடு, பல்கா ணோக்கு மறனில் யாயே" அகம். ௩உ: ரு - சு, கஅஅ: கக - ௩, ௩0உ: க0-கரு. (எஎ) "சூழ்கிளி சுமக்கலாற்ரு, மாலையந் தினைகள் காய்க்கும் வண் புனம்" சீவக. கஉ௩உ. (ஏஏ) "வேயோங்கு சாரல் விளைபுனங் காவல் கொண், டாயோ வெனமொழியு மம்மழலை யின்னிசையாற், போ யோங்குபூஞ்சோலை வாழும் புனக்கிளிகண், மாயோன்மடந்தைமார் கூவி மகிழ்விப்பார்" சூளா. சுயம்வர. க0ச. (ஐஐ) "தட்டை குளிர் தழலைத் தாங்கித் தினைப்புனத்தைக், கிட்ட லுருவண்ணங் கிளிமுதற் புள் ளோட்டினளே" கந்த. வள்ளி. ருஉ.

க. புறம். ௩௩: கச.

உ. "கால் கிளர்ந்தன்ன வூர்தி" (பதிற். 'இருங்கண்') (ஆ) "காலுறழ் கடுந் திண்டேர்"(கலி.௩௩:௩க.)(இ)"காலிய னெடுந்தேர்" (தமிழ்நெறி மேற்கோள்.) எனவும், (ஈ) "கால்கிளர்ந் தன்ன வேழம்" (முருகு. அஉ.) (உ) "காற்றி னிமிர்ந்த செலவிற்றாய்............களிறு" (முத்தொள்.) (ஊ) "காற்றென..............தோன்றிய தடலருங் கடாக்களிறு" (எ)"காற்றெனக்..............குஞ்சரங் கொண்டுபுக் கானரோ" (சீவக. கூள௩. கஅ௩எ)(ஏ) "காற்றன்றேற் கடுமை யென்னும்..............மத்த யானை" (கம்ப. அதிகாயன் உககூ.)(ஐ) "பாகன், காற்றென.........., தாண்டினன் குவலயா பீடம்" (பாகவதம். (க0) கஞ்சனைக்கொன்ற. கச)எனவும் தேருக்கும் யானைக்கும் வளி உவமையாய்வருதல் காண்க.

௩. (அ) "விருந்தொடு கைதூவா வெம்மைபு முள்ளாய்" (ஆ) "ஊணொலி யரவமொடு கைதூவாளே" (இ) "கள்விலை யாட்டியுங் கைதூ வாளே" (ஈ) "கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும், பெருமையிற் பீடுடையதில்" (உ) "கரும மறுத்த கைதூ வமையத்து."

ச. "முந்தி" என்பதற்குக் கொடுப்பவும் அடுப்பவுமின்றித் தானே முற் பட்டு என்று எழுதியிருக்கும் அரும்பதவுரைக் குறிப்பு ஈண்டறிதற் பாலது. சிலப். உக: ௩க.

(பிரதிபேதம்) *ஊண்சோற்றமலை, †வளியினிகன், ‡ புலவற்கு.

(௩)வழைவளர் சாரல் *வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி
யுழையிற் பிரியிற் பிரியு
மிழையணி யல்குலென் றோழியது கவினே.

எ-து. நீ காற்றினுங்காட்டிற் †போதற் றொழிலிலே மிக்குச்செல்லுங் (௨) தேரையுங் களிற்றையும் நின்பால்வந்த புலவர்க்குக் கொடுத்தலாற்கை யொழிந்திருத்தலிலையாய்(௩)மழையினும்அருள்சிறந்தாய்;ஆகையினலேயானும் சுரபுன்னை வளர்ந்த மலைச்சாரலிற் றிரியும் வருடையாகிய நல்ல மானின் மறியை வளர்ப்பாரைப்போலே ‡முன்னர் நீங்காமற் பாராட்டி, அவளிடத்து நின்றும் பிரிவையாயின் மேகலையணிந்த அல்குலையுடைய என்றோழியது கவினும் நீங்கும்; அதற்காகக், கடிதாகிய மாவைப் பின்னுங்கடிதாகச் செலுத்துந் ‖தாற்றுக்கோல்போலே சிறிதுங் கொடுமையையுடையையல்லையாந் தன்மை அறிந்திருந்தும் அவளை நின்னிடத்தே சேர்த்துவேன்; × எ-று.

இதனல், தலைவற்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது ÷ தரவும் வெண்பாட்டொன்றும் அதன் பின்னர் ஐஞ்சீர் அடுக்கிய குறுவெண்பாட்டொன்றும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்ற கலிவெண்பாட்டு.

(கச)

---

க. "வழையமை நறுஞ்சாரல்" கலி. ௫௩: க. என்பதும் அதன்குறிப்பும் பார்க்க.

௨. பரிசிலர்க்குத் தேரும் யானையுங் கொடுத்தல் மரபென்பது (அ) "உயர்மருப்பியானை........ பரிசிலர்க் கீய,வுரவு வேற்காளையுங் கைதூவானே" புறம். ௩௩௪.(ஆ)"சிறுகண் யானையொடு பெருந்தே ரெய்தியாமவ ணின்றும் வருதும்" சிறுபாண். கச௨ - ௩. (இ) "நாளீண்டிய நல்லகவர்க்குத், தேரோடு மாசிதறி" மது. ௨௨௩ - ௪. (ஈ) "களிறுந் தேரும், வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீசி" (உ) "களிறு கலிமான் றேரொடு சுரந்து, நன்கல னீயு நகைசா லிருக்கை" பதிற். ௨0: க௫- ௬. 'வந்தனென்' (ஊ) "தேரோ டொளிறுமருப் பேந்திய செம்மற், களிறின்று பெயரல பரிசிலர் கடும்பே" (எ) "காணிய சென்ற விரவன்மாக்கள், களிறொடு நெடுந்தேர் வேண்டினுங் கடவ" புறம். ௨0௫: க௨ - க௪. ௩க௩: ௩ - ௪ என்பவைகளா லறியலாகும்.

௩. (அ) "மாரி பொய்க்குவ தாயினுஞ், சேர லாதன் பொய்யல னசையே" பதிற். க௮: கக - ௨. (ஆ) "புரவெதிர்ந்து, வான நாண வரையாது சென்றோர்க், கானு தீயுங் கவிகை வண்மைக், கடுமான் கோதை"

(பிரதிபேதம்) * வரிவளை நன்மான். †போர்த்தொழிலிலே.‡முன்னீநீங்காமற் பாராட்டிய அவளிடத்து, ‖தாறுகோல், × எனத்தோழி பணிந்துகூறினள். ÷ தரவுவெண்பாட்டு மைஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டு.

(௫௧.) (௧)(௨)*சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினு மாடு
(௩)மணற்சிற்றில் காலிற் சிதையா†வடைச்சிய
(௪)கோதை பரிந்து (௫)வரிப்பந்து கொண்டோடி
(௬)நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்நா

---

புறம். ௫௪:௫-அ. (இ) "நின், சுரத்தலும் வண்மையு மாரியுள" பரி. ௪: ௨எ. (ஈ) "வள்ளியோரின் வழங்கினமேகமே" கம்ப. ஆற்று. ௪. (உ) "வையம் புரக்குமான் மன்னவரின் கைக்காரும், பொய்யின்றி வானிற் பொழிகாருங் – கையா,மிருகார்க்கு மில்லைப் பருவ மிடிக்கு,மொருகார் பருவ முடைத்து" தண்டி. சூ. ௩௭. மேற். (ஊ) "பொன்னனங் குன் றின்மேலவன்கொடை போன்மெனப் பொழிந்த"நைடத. நாட்டுப். ௨.

௧. இச்செய்யுளின் ஆட்சியை இந்நூற்பக்கம் ௩௧௨: ௩-ஆம் குறிப்பிற் காண்க.

௨. (அ)"அஃறிணைப்பெயர் ஆகுபெயராய் உயர்திணைக்கண் வந்து விளி யேற்குமிடத்து உயர்திணைப் பெயராம்" என்பதற்குச் சேனாவரையரும் (ஆ)"அஃறிணைப்பெயர் அன்மொழியாய் உயர்திணைக்கண் வந்து விளி யேற்குமிடத்து உயர்திணைப் பெயராம்" என்பதற்கு நச்சினார்க்கினிய ரும், (தொல். விளி. சூ. ௩) (இ) "அன்மொழித்தொகை ஒரு சொன் னீர் மைத்தாய்ப் பெயர்த்தன்மையெய்த், முடிக்குஞ் சொல்லோடு புணர்ந்துழி விளியாய் அல்வழிப் புணர்ச்சியாம்" என்பதற்கு இ - வி. நூலாரும் (இ - வி. சூ. ௫௪.) "சுடர்த்தொடீ கேளாய்" என்பதை மேற்கோள் காட்டினர். அன்மொழித் தொகையும் ஆகுபெயருள் ஒருவகையென்பது முன்னோர் கொள்கை.

௩. (அ)"முற்றிலைப்பந்தைக் கழங்கைக்கொண்டோடினை முன்னும்பின்னு, மற்றிலை தீமை யவைபொறுத் தோந்தொல்லை யாலினிளங், கற்றிலை மற்றுயில் வேங்கடவா வின்றுன் கான்மலராற, சிற்றிலைத் தீர்த்ததற் குப் பெருவீட்டினைச் செய்தருளே" திருவேங்கடத். ௬எ. (ஆ) "முற்றி லான் மணற்கொழித்து மொய்த்தசிறு மியரிழைத்த, சிற்றிலா னவையவர்கள் சினந்தலறச் சிதைத்திட்டார்" திருவானைக்காப். கோச் செங்கணார். ௧அ௬.

௪. (அ) "கோதை வரிப்பந்து கொண்டெறிவார்" பரி. ௬: ௪எ. (ஆ) "இவனிவ ளைம்பால் பற்றவு மிவளிவன், புன்றலை யோரி வாங்குநள் பரியவும்" குறுந். ௨௨௯.

௫. (அ)"வரிப்பந்துகொண்டொளித்தாய் வாள்வேந்தன் மைந்தா" பு-வெ. பாடாண். ௫௦. "வரிப்பந்தசைஇ" பெரும்பாண். ௩௩௩.

௬. (அ)"அகப்பட்டி யாவாரைக்காணின்" (குறள்.௧௦எ௪) என்பதன் உரை யில் அகப்பட்டி யென்பதற்குத் தன்னிற் சுருங்கிய பட்டியெனப்

(பிரதிபேதம்) * சுடர்த்தொடீ, † அடர்ச்சிய.

ரு ளன்னையும் யானு மிருந்தேமா *வில்லிரே
(க)யுண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
யடர்பொற் சிரகத்தால் (உ)வாக்கிச் சுடரிழா
யுண்ணுநீ ரூட்டிவா வென்றா ளெனயானுந்
தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை
கo (ங)வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டன்னா யிவனொருவன் செய்ததுகா †ணென்றேனா
வன்னை யலறிப் படர்தரத் தன்னையா
னுண்ணுநீர் விக்கினா‡னென்றேனா வன்னையுந்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்

---

பொருளும், அகமாகிய பட்டியென இலக்கணவியையும், பட்டி போன்று வேண்டியவாரேயொழுகலின் பட்டியென்றாரென விளக்கமுமெழுதி "நோதக்க செய்யுஞ் சிறுபட்டி" என்பதனை மேற்கோள் காட்டினர் பரிமேலழகர். (ஆ) "சிறுபட்டி" (கலி. அச: உo) (இ) "திருந்திய காவலர் தீரப் பட்டியாய்,முருந்திள முறுவல்வே ,சையரின் முன்னிநீ, யருந்தன மனைத்தையு மழிவு செய்தனை" விநாயக. சோமகாந்தன் றீவினைப். அ.

க. (அ)உண்ணல் பொதுவினை யென்பதற்கு "உண்ணுநீர் வேட்டேனென வந்தாற்கு" என்னும் பகுதி மேற்கோள். (தொல். கிளவி. சூ. சரு. 'எண்ணுங்' தெய்.)(ஆ)"உண்ணுநீர் வேட்டசைந்தே னெனவுரைப்ப" சீவக. கரு கூஉ.

உ. வாக்குதல் - வார்த்தல்: (அ) "வாக்கவுக்க தேக்கட்டேறல்" புறம். ககரு: ங. (ஆ) "வடியுறு தீந்தேறல் வாக்கு" பு - வே. வெட்சி. கக, (இ) "மணிவள்ள நிறையவாக்கி, யின்மதுப்பலியும்... ........எந்தி" சீவக. சஎக. (ஈ) "சீருணத் தசும்ப ரொன்றில், வாக்கிய வுலைப்பெய் தேற்றி மரபில்வா லரியுள் ளிட்டான்" கந்த. வில்வலன்வாதாவி வதை. கங.

ங. (அ)"இடைசெறேர் தெருவிற் கதுமெனக் கண்டென்,பொற்றொடி முன்கை பற்றின னாக, வன்னா யென்றனெ னவன்கைவிட் டனனே, தொன்னசை சாலாமை நன்னன் பறம்பிற், சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய, கற்போ லுவினே னாகி மற்றது, செப்பலென் மன்னல் யாய்க்கே" அகம். ஙருஅ. ரு-கக. (ஆ) தலைவி நாணும் மடனும் நீங்கிய சொல்லைத் தோழிக்குக் கூற்றாற் கூறியதற்கு "வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்டு" என்பது மேற்கோள். தொல். களவி. கக. நச்.

(பிரதிபேதம்) * இல்லிலே † என்றேனுக்கன்னை ‡ என்றேனலன்னையும்.

கரு *கடைக்கணாற் கொல்வான்போ னேக்கி நகைக்கூட்டஞ்
(க)செய்தானக் †கள்வன் மகன்.

இது "புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப், பகாஅ விருந்தின்
பகுதிக்கண்" (உ)தலைவி தோழிக்குக் கூறியது.

இதன் பொருள்.

ஒளிபொருந்தின வளையினையுடையாய்! ஈதொன்றைக் கேளாய், தெரு விடத்துநாம்(ந)உண்டிகளை ஆடும்மணலாற் செய்த சிற்றிலைக் காலால்அழித்துக் கூந்தலிலே அடைவித்த கோதையை அறுத்து வரியினையுடைய பந்தை எடுத்துக்கொண்டு ஓடி நாம் நோவத்தக்க தொழில்களைச் செய்யுஞ் சிறிய னாகிய காவலில்லாதவன் முன்னொரு நாளிலே, அன்னையும் யானுஞ் சேர இருந்த அளவிலே, இல்லில் உறைகின்றவர்களே! உண்ணப்படுந் தண்ணீரை வேட்டேனெனச் சொல்லி வந்தவனுக்கு, அன்னை விளங்குகின்ற பூணினை யுடையாய்! உண்ணுநீரைத் தகட்டுப்பொன்னாற்செய்த கரகத்தாலே வார்த்து உண்ணப்பண்ணுவித்து வாவென்று சொன்னாள்; என்று சொல்கையினாலே யானும் சிறுபட்டியாயிருக்கின்ற தன்னை அறியாதே சென்றேன்; சென்ற பின்னை அவன் என்னுடைய வளையணிந்த முன்கையைப் பிடித்து என்னை நலிகையினாலே‡அலமந்து,தாயே! இவனொருவன் செய்ததோர் செயலைப் பாரா யென்றேனாக; அத்தாயும் கூப்பிட்டு ஓடிவருதலைச்செய்ய, அதனை மறைத்து ||அங்ஙனஞ் செய்ததனை யான் உண்ணுநீர் விக்கி வருந்தினான்காணென்று ஓர் பொய்யைக் கூறினேனாக,அத்தாயும் தன்னைமுதுகைப் பலகால்அழித்தழித்துத் தடவப் பின்னை என்னைத் தன் கடைக்கண்ணாலே கொல்வான்போலே பார்த்துத் தன் மனமகிழ்ச்சியைத் தருங் கூட்டத்தை அக்கள்வனாகியமகன் செய்தான்; இதுகாண் நிகழ்ந்தது; ÷என - று.

இதனைக் கேட்டுழித் தலைவி இருவகைக் குறியும் பிழைத்தலின், "காணு வகையிற் பொழுதுநனி ×யிகப்பினுந், தானகம்புகாஅன் பெயர்தலின்மையிற்,

க. வெண்கலியுள் இறுதிக்கண் முச்சீரடி வருமென்பதற்கு, "செய்தானக் கள்வன் மகன்" என்பது மேற்கோள் (தொல். செய். சூ. ௭௦. பே.)

உ. தொல். கள. சூ. ௧௬. இப்பகுதியுரையிலும் இவ்வுரையாசிரியால் இச்செய்யுள் இவ்விஷயத்திற்கு மேற்கோளாகக் காட்டப்பெற் றிருக்கிறது.

ந. (அ) "திருந்தாத விளங்குதலை யாயமொடு புறம்போந்து சிறூர்க்குச் சிற்றில், விருந்தாக மணற்சிறுசோ றட்டும்" திருவிளை. தடாதகை.௩௨. (ஆ) "பார்வார் மணற்சோ றொளித்தினிது படைப்பே மடிகட் கது குறவர், பாவை படைத்த மாவாமோ" திருவிடைக்கழிமுருகர். சிற்றிற். ௧௦. (இ) "அடுமணற்சோ றையவுண்கவென" அம்பல. சிற்றிற. உ.

பிரதிபேதம். * கடைக்கண்ணாற், † கள்வமகன். ‡ அலம் வந்து, || அங்ஙன், ÷ எனஅவனுங் காட்சியான்வந்தமை கூறினாள், × யிகந்துகாட்சி

காட்சி யாசையிற் களம்புக்குக்கலங்கி" (௧) கையற்றூர்போலத்தலைவனும் இருவகைக்குறியும் பிழைத்தலிற் றலைவியைக் காணாய்க் காட்சியாசையிற் கலங்கி வேட்கையின் மயங்கினனாதலின் நம் மனைக்கண்ணே உண்டிக்காலத்தைக் கருதி வந்து தன் ஆற்றாமை மிகுதியான் இவளை முன்கைபற்றி நலிந்தான், இவளும் அதனை மறைத்துவிட்டாள், இனி இவட்கும் அவனைக்கூடுதல் கருத்தாயிருந்தது. இனி*அவனைக்.† கூடுவளெனத் தோழி கருதுவளாதலின் வேறுமொருபொருள் நுதலிவந்ததாயிற்று.‡

நோதக்கசெய்யுஞ் சிறுபட்டியென்றதனான் ஒருநிலமாயிற்று. (௨) கடைக்கணாற் கொல்வான்போ னோக்கி யென்றதன்கட் கண்ணிற்குக் கொலைத்தொழில் கூறிற்று. இது வினையுவமத்தின்வகை.

இதனால், தோழிக்குநினைத்தல் பிறந்தது.

"ஒருபொரு ணுதலிய வெள்ளடி யியலால்" (௩)என்பதனுள் இயலென்றதனாற் பன்னீரடியின் இகந்து ஒருபொருணுதலிவருங் கலிவெண்பாட்டும் உளவென்று கோடலின், இது பன்னீரடியின் இகந்து ஒருபொருணுதலிவந்த ||கலிவெண்பாட்டு. (௧௫)

(௫௨.) முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று
மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்

---

௧. தொல். களா. சூ. ௧௬.

௨. வினையுவமத்தின் ஒருவகைக்கு, "கடைக்கணாற் கொல்வான்போ னோக்கி" என்பதை மேற்கோள் காட்டினர் பேராசிரியரும்; தொல். உவம. சூ. ௧.

௩. தொல். செய். சூ. ௧௫௩. நச். (அ) இச்சூத்திரவுரையில் இவ்விஷயத்திற்கும், (ஆ) தொல். செய். சூ. ௧௬௦. பேர். உரையில் ஒருபொருணுதலிப் பதினாறடியான் வந்த கலிவெண்பாட்டிற்கும், (இ) தொல். செய். சூ. ௧௬௦. நச். உரையில் ஒருபொருணுதலிப் பதினாறடியான் வந்த சீர்வகைக் கலிவெண்பாட்டிற்கும், (ஈ) யா - வி. சூ. ௧௫, ௮௫. உரையில் கலிவெண்பாவின் நேரீற்றியற்சீர்வந்ததற்கும், (உ) வெள்ளோசைகொண்டு ஒருபொருண்மேல் வெள்ளடியால் வந்த கலிவெண்பாவுக்கும், (ஊ) யா-கா. செய். ௧௧. உரையில் வெண்டளைதட்டு வெள்ளோசை தழுவி ஒரு பொருண்மேல் வந்த கலிவெண்பாவுக்கும், (எ) வீர. யாப்பு. ௮. உரையில் நேரிசை வெண்பாவே போன்று அதனினீண்டுவந்த கலிவெண்பாவுக்கும், (ஏ) இ - வி. சூ. ௭௩௮. உரையில் வெண்டளை தட்டுவந்த கலிவெண்பாவிற்கும் இச்செய்யுள் மேற்கோள்.

(பிரதிபேதம்) * அவனை, † கூட்டுவலென, கூடுதலென ‡ இதனால் || கலிவெண்பாட்டாயிற்று. நோதக்கசெய்யுஞ்...............இது வினையுவமத்தின்வகை.

குறங்கறுத் திடுவான்போற் கூர்நுதி மடுத்ததன்
னிறஞ்சாடி முரண்டீர்ந்த நீண்மருப் பெழில்யானை
மல்லலறை மறஞ்சாய்த்த மால்போற்றன் கிளைநாப்பட்
கல்லுயர் நனஞ்சாரற் கலந்தியலு நாடகேள்;

எ தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉ
மணங்கென வஞ்சுவர் சிறுகுடி யோரே ;

கக ஈர்ந்த ணுடையை யெல்லி மாலையை
சோர்ந்துவீழ் கதுப்பினுள் செய்குறி நீவரி
னொளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்
களிறென வார்ப்பவ ரேனல்கா வலரே;

கரு ஆர மார்பினை யண்ணலை யளியை
யைதக லல்குலாள் செய்குறி நீவரிற்
கறிவளர் சிலம்பில் வழங்க லானாப்
புலியென் றோர்க்குமிக் கலிகே ழூரே ;

எனவாங்கு;

உ0 விலங்கோரார் மெய்யோர்ப்பி னிவள்வாழா ளிவளன்றிப்
புலம்புக ழொருவ யானும் வாழேன்
அதனாற், பொதியவிழ் வைகறை வந்துநீ குறைகூறி
வதுவை யயர்தல் வேண்டுவ லாங்குப்
புதுவை போலுநின் வரவுமிவள்
வதுவைநா ணொடுக்கமுங் காண்குவல் யானே.

இஃது இரவுக்குறிவந்த தலைவனை எதிர்ப்பட்டுத் தோழி இரவுக்குறியது ஏதமும் ஏதத்தால்வருந் துன்பமும் தன் னுள்ளத்து விழைவும் கூறி வரைவு கடாயது.

இதன் பொருள்.

முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று
மறந்தலைக் கொண்ட (க)நூற்றுவர் தலைவனைக்

---

க. (அ) "நூறு மைந்தரி னுதிப னுகிய நூன லந்திகழ் மார்பனை யாருயி, ரீறு கண்டிட லாமவ னுருவை யேறு புண்பட வேயெதிர் மோதிலே" (ஆ) "ஞான பண்டிதன் வாயுகு மாரனு நார ணன்பணி யாலினை

குறங்கறுத் திடுவான்போற் கூர்நுதி மடுத்தத
(க)னிறஞ்சாடி முரண்டீர்ந்த நீண்மருப் பெழில்யானை
(உ)மல்லரை மறஞ்சாய்த்த மால்போற்றன் (ங)கிளைநாப்பட்
கல்லுயர் (ச)நனஞ்சாரற் கலந்தியலு நாடகேள்

---

யோன்மொழி, மோன வண்குறி தானுண ராவெதிர் மோதினன்கதை" (இ) "ஊறு மிஞ்சிய பேருட லோடெதி ரோடி வன்றொடை கீறிட மாறடும், வீறு கொண்டக தாயுதம் வீசினன் வீர னம்புவி மீதுற வீழவே" (ஈ) "அரிப்ப தாகனு ரகப்ப தாகனை யதிர்த்து மேலுற வடர்ததுநீ;டுருப்பினேடெதி சயிக்க வூருவை யொடிக்கவே"(உ)"உடல், கம்பி யாவிழ வூருவின் மோதுதல் கண்ட போதென தாருயிர் போனதே" (வில்லி. பதினெட்டாம். கஅஉ: கஅச, கஅரு: கஅசு, கசுக.) என்பவற்றால் வீமசேனன் கதைகொண்டு துரியோதனன் றொடையை மோதி யொடித்தா னென்பதே அறியப்படுகின்றது. அப்பொருளை நோக்க, குறங்கிறுத்தலென்று இருக்கலாமெனினும் ஏடுகளில், குறங்கறுத்த லென்றே காணப்படுதலாலும் (ஊ) "மறங் கெழுவேந்தன் குறங் கறுத் திட்டபின்" (பாரதம்.) (எ) "குருகுல வேந்தனைக் குறங்கறுத்த ஞான்று" (தொல். புறத். சூ. கஎ. நச். உரை.) என இச்செய்தி கூறுமிடத்தும் (ஏ) "காடுதேர் மடப்பிணை யலறக் கலையி, னேடுகுறங் கறுத்த செந்நா யேற்றை" (அகம். உஅரு. ரு – சு) என்னுமிடத்தும் பிறவிடத்தும் குறங்கறுத்த லென்றே ஒரு தொடர் காணப்படுதலாலும் இறுத்தலென்ற பொருளில் அறுத்தலென்றே ஒரு சொல் பண்டு வழங்கி யிருக்குமென்று கருதி, குறங்கறுத்த லென்றே பதிப்பிக்கலாயிற்று.

க. (அ) "நிறம் - மருமத்தான மெனப்படும் உயிர்நிலை: "வெள்ளமா னிற னேக்கிக் கணைதொடுக்குங் கொடியான்" கலி. கஉ0: கக. (ஆ) "கோ றெரிந்து, வரிநுதல் யானை யருநிறத் தழுத்தி" அகம். கஎஉ; எ-அ. (இ) "செந்தொடைப் பகழி வாங்கிச் சினஞ்சிறந்து, கருங்கைக் கானவன் களிற்றுநிறத் தழுத்தலின்" தொல்: செய். சூ. கூரு. பே. மேற்கோள்.

உ. (அ) பெருமித வுவமத்திற்கு, "மல்லரை.........நாடகேள்" என்பது மேற்கோள்; தொல். உவம. சூ. ககூ. பேர். (ஆ) "மல்லரை மறஞ்சாய்த்த மலர்த்தண்டா ரகலத்தோன்" கலி. கஙச: க. (இ) "மல்லர்க் கடந்தா னிறம்போன் றிருண்டு" ஐந்திணையைம்பது. க.

ங. (அ) "கிளைபா ராட்டுங் கடுநடை வயக்களிறு" அகம். உகஅ: க. (ஆ) "கொல்களிறு.........கிளைபுகலத் தலைக்கூடியாங்கு" புறம். கஎ: கஎ-கூ.

ச. "நனஞ்சாரல்" கலி. சச. க; சரு. கூ.

எ-து: (க)முறம்போலுஞ் செவியாகிய(உ)மறைப்பிடமாகவந்து பாய்ந்து மாறுபாடுசெய்த புலியைக் கோபித்து, மறத்தைத் தம்மிடத்தே கொண்ட நூற்றுவர்க்குத் தலைவனாகிய துரியோதனனைக் குறங்கில் உயிரைப் போக்கு கின்ற பீமசேனனைப்போலே தன்னுடைய நீண்ட கோட்டினுடைய கூரிய முனையாலே குத்திப் புலியினது மருமத்தைத் திறந்து மாறுபாடு தீர்ந்த அழகினையுடைய யானை,(௩)மல்லரை மறத்தைக்கெடுத்த(ச)திருமால்போலே கல்லுயர்ந்த அகற்சியையுடைய சாரலிற் றன் சுற்றத்திற்கு நடுவே கூடித் (ரு)திரியும் நாடனே! யான் கூறுகின்றதனைக் கேட்பாயாக; எ - று.

(சு)முறஞ்செவி...செற்றென்பதுஉறுப்பறைபற்றிய வெகுளி.(எ)மால்போ லென்பது பெருமிதம்பற்றிய உவமம். செவிமறைப்பப் பாய்ந்த புலியைச் செற்றதன்மை தமது களவொழுக்கமிடமாக அலர்கூறிய அயலாரைக் கோபித்ததாகவும், அதனைக் குத்தி மாறுபாடு தீர்ந்த யானை தலைவன் வரைந்து *கொண்டால் அயலாரைத்தாம்வென்றதன்மையாகவும் யானை கிளைநாப்பட் †கலந்தியலுதல் இனித்தலைவன்சுற்றத்தாரிடைப் பொருந்தியிருந்து இல்லறம் நிகழ்த்துந் தன்மையாகவும் உள்ளுறையுவமங் ‡கொள்க. இது வினையுவமப் போலி. குறங்கறுத்திடுவான்போல் மால்போலென்பனஎனையுவமம். அவையும் உள்ளுறையுவமத்திற்குச் சிறப்புக்கொடுத்து உள்ளுறையுவமம்போலத் திணை யுணர்தலைத் தள்ளாவாய் நின்றன.

---

க. யானையின் செவிக்கு முறம் உவமை கூறப்படுதலை, "முறஞ்செவி வாரணம்"(கலி. சஉ. உ.) என்பதனாலும் அதன் குறிப்பாலும் அறிக.

உ. புலி யானையைக்கொல்ல மறைந்துபாய்தல்: "களிற்றிரை செரீஇய பார்வ லொதுக்கி, ஞெளித்தியங்கு மரபின் வயப்புலி போல" (அகம். உஉ: கச - கரு.) என்பதனாலும் அறியப்படும்.

௩. தொல். வேற் - மயங்கு. சூ. ௫. சே; நச். உரைபார்க்க.

ச. "காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப், பாம்பணைப்பள்ளி யமர்ந் தோன்" (பெரும்பாண். ௩எஉ - ௩.) எனத் திருமாலுக்கு யானை உவமையாகக் கூறப்பட்டிருத்தலும் காண்க.

ரு. (அ) "மங்கல மழகளி றனைய செல்கையன்" (ஆ) "நாகமு நாண நடந் தான்" (இ) "நன்னெடுங் களிமால் யானை நாணுற நடந்து வந்தான்" எனவும் (ஈ) "ஏறுபோற் பீடுநடை" எனவும் இதற்கெதிராக ஆடவர் நடைக்கு யானை நடை உவமையாய் வருதலும் காண்க.

சு. பேராசிரியரும் (தொல். மெய்ப். சூ. க௦;) இ - வி. நூலாரும் (இ - வி. சூ. ௫௭அ.) உறுப்பறையான் வந்தவெகுளிக்கு இதனையே மேற்கோள் காட்டினர்.

எ. இதன் பக்கம் ௩கச: உ. (அ) குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * கொண்டலால், † கலந்தியலுநீ தலைவன், ‡ கொள்க குறங்கறுத்து.

எ (௧)தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
*நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉ
(௨)மணங்கென வஞ்சுவர் †சிறுகுடி யோரே

---

௧. (அ) பிற்சென்று தலைமகனைப் பாங்கிவரவு விலக்கற்கு, "தாமரைக் கண்ணியை ........காவலரே" என்பது மேற்கோள்; நாற். சூ. ௧௱௮. (ஆ)பார்ப்பான்உரிப்பொருட்டலைவனுகவருதற்கு"தாமரைக்கண்ணியை .........மாலையை" என்பது மேற்கோள். தொல். அகத். சூ. உ௪. நச். (இ)"மாயோன்மேயமன்பெருஞ் சிறப்பிற்,ருவாவிழுப்புகழ்ப்பூவைநிலை யும் என்றது: மாயோன் விழுப்புகழ் - மாயனுடைய காத்தற்புகழை யும், மேயபெருஞ்சிறப்பிற் ருவாவிழுப்புகழ் - ஏனோர்க்கு உரியவாய் மேவிய பெரிய தலைமையிற் கெடாத படைத்தல், அழித்தல் என்னும் புகழ்களையும், மன் பூவைநிலையும் - மன்னர் தொழிலுக்கு உவமை யாகக்கூறும் பூவைநிலையும்; என்றது ஒன்றனை ஒன்றுபோற் கூறுந் துறை. மன்எனப் பொதுப்படக் கூறியவதனுன் நெடுநிலமன்னர்க்கும் குறுநிலமன்னர் முதலியோர்க்கும் கொள்க. பெருஞ்சிறப்பு என்ற தனுற் படைத்தலுங் காத்தலும அழித்தலுமன்றி அவரவர் தாமாகக் கூறலும் முருகன் இந்திரன் முதலியோராகக் கூறலுங்கொள்க" என்றுகூறி உரிப்பொருட்டலைவனை முருகனுகக்கூறியதற்கும் (தொல். புறத். சூ.ரு.நச்)(ஈ)தோழி தலைவனை உயர்த்துக் கூறியதற்கும்(தொல். பொருளி. சூ. ௭௬. இளம்; நச்.) (உ) "நாடு மூன்றும்...........தோன்றிய கிளவியொடு" என்னும் பகுதியின் உரையில் 'நாடுமுதலாயின சுட்டித் தலைவன் மாட்டுத்தோன்றுங் கிளவி.............அவற்றின் மிகுதிபடக் கூறுதல்' என்றுகூறி, பிறப்புப்பற்றி வந்ததற்கும் (தொல். கள. சூ. உரு. இளம்) (ஊ) தலைமகன்குலங் கூறியதற்கும் (நாற்கவி. சூ. ௧௬௬.) (எ) மருதத்திணைக்குரிய தாமரைப்பூக் குறிஞ்சித் திணைக் கண்வந்து மயங்கியதற்கும் (இ - வி. சூ. ருகு௪) "தாமரைக்கண்ணியை ............சிறுகுடியோரே" என்பது மேற்கோள்.

௨. இதன் முன்குறிப்பில் (இ) என்பதன் இறுதியிலுள்ள வாக்கியத்தால் இங்கு அணங்கென்றது முருகனை யென்று அறியப்படும், இப்பகுதி யோடு (அ) "குறியிறைக் குரம்பைநம் மனைவயிற் புகுதரு, மெய்ம்மலி யுவகைய னந்நிலைகண்டு, முருகென வுணர்ந்து முகமன் கூறி, யுருவச் செந்தினை நீரொடுதூஉய்,நெடுவேட்பரவு மன்னை"(அகம். உ௭உ: ௧௧-௫) (ஆ)"கடம்புசூடி யுடம்பிடி யேந்தி,மடந்தைபொருட்டால்வருவதிவ்வூ, ராறுமுக மில்லை யணிமயி லில்லை, குறமக ளில்லை செறிதோ ளில்லை, கடம்பூண் டெய்வ மாக நேரார், மடவர் மன்றவிச் சிறுகுடியோரே" (சிலப். உ௪.) என்பவை ஒப்புநோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * நேரிதட் கோதை, † சிறுகுடி வாழநரே.

எ - து. தாமரைப்பூவாற் செய்த கண்ணியை*யுடையையாய்த் தண்ணிய நறிய சந்தனத்தை†யுடையையாய் ஒத்த இதழாற் கட்டின கோதையையுடையாள் செய்த குறியிடத்தே நீ வருவையாயின் மணம் நாறுகின்ற நாற்றத்தை ‡யுடையவாய மலைக்கண்ணே நின்று பலியைக் கொள்ளும் அணங்குகளிலே ஓர் அணங்கென்று கருதிச் சிறுகுடியிலுள்ளோர் அஞ்சுவர்; எ - று.

(க)தாமரைப்பூக் குறிஞ்சிக்கண் வந்தது.

கக ஈர்ந்த ணுடையை யெல்லி மாலை
சோர்ந்துவீழ் கதுப்பினாள் செய்குறி நீவரி
னொளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்
களிறென வார்ப்பவ ரேனல்கா வலரே

எ - து: பகற்காலத்துத் தீர்த்தமாடுகின்ற நின் ஒழுக்கத்திற்கேற்ற ஈரத்தினுற்றண்ணிதாகியஆடையையுடையையாய் இராக்காலத்துப்புணர்ச்சிக் குரியனவற்றை அணிகின்ற இயல்பினை ||யுடையையாய் நீ வரைந்து கோடலைக்குலைந்து ஆயத்தார்விரும்புகின்றமயிரினையுடையாள்செய்தகுறியிலே வருவையாயின் நீ கோடுமுதலியவற்றைக் குறித்துச் செய்யுங் குறிகளாலே ஒளிவிளங்குகின்ற குறைக்கொள்ளியையுடையராய்க் கல்லெறியுங் கவணையுடையராய் வில்லினையுடையராய்க் களிறு வந்ததென்று கருதித் தினைப் புனத்தைக் காக்கின்றவர்கள் ஆரவாரிப்பார்கள்; எ - று.

மாலைமுதலியன பாரத்தாற் குலைந்து வீழ்கின்ற கதுப்புமாம்.

கஉ ஆர மார்பினை யண்ணலை யளியை
யைதக லல்குலாள் செய்குறி நீவரிற்
(உ)கறிவளர் சிலம்பில் ×வழங்க லானாப்
புலியென் றோர்க்குமிக் கலிகே ழூரே

எ - து: ஆரமணிந்த மார்பினையுடையையாய்த் தலைமையையுடையையாய் அருளுடையையாய்மெல்லிதாயகன்றவல்குலையுடையாள்செய்தகுறியிலே

க. (அ)தாமரை மருதத்துக்குரியபூவாகலின் இவ்வாறுகூறினார். இதனைத் "தாமரைக் கண்ணியை............நீவரின்" என்றபகுதியை (தொல். அகத் சூ. கக. உரையில்) மேற்கோள்காட்டி இவரேவிளக்கியிருத்தலானறிக. (ஆ) "செந்தாமரை மலருஞ் செய்வயனல்லூர" (இ) "தாமரை தன்னையர்பூ" திணைமொழி. ௩சு: ௬0. (ஈ) "போதவிழ் தாமரைப் பூந்துறையூரனை" கைந்நிலை. கசு. என்பவற்றாலும்தாமரைமருதத்துக்கு உரிய பூவென்பது விளங்கும்.

உ. (அ) "கறிவளரடுக்கத்து" திருமு உஅஅ. புறம். கசுஅ: உ. (ஆ) "கறிவளர் சிலம்பில்" ஐங். உசா௩. சிலப். உஅ: ககச. (இ) "கறியிவர் சிலம்பின்" அகம். கஈஉ: கசு. (ஈ) "கறிவளர் பூஞ்சாரல்" திணைமாலை. எ.

பிரதிபேதம்; * † உடையாய், ‡ உடையமலை || உடையாய் × செறிதலானு.

நீ வருவையாயின் நின்னைக் கண்டு விலங்குமுதலியன வெருவி ஓடுகின்ற ஓசையாலே *மிளகு வளர்ந்த மலையிலே உலாவுதலை அமையாத புலியென்று இந்தச் செருக்குப் பொருந்தின வூர் ஓராநிற்கும்; எ - று.

எனவாங்கு, அசை.

உ0 விலங்கோரார் மெய்யோர்ப்பி னிவள்வாழா ளிவளன்றிப்
புலம்புக †ழொருவ யானும் வாழேன்
அதனாற், (க)‡பொதியவிழ் (உ)வைகறை வந்துநீ குறைகூறி
(ங)வதுவை யயர்தல் வேண்டுவ லாங்குப்
புதுவை போலுநின் வரவுமிவள்
வதுவைநா ணொடுக்கமுங் காண்குவல் யானே

எ - து: யாவரும் அறிவைப் புகழப்படும் ஒப்பில்லாதவனே! அங்ஙனம் அவர் வேறாகஓராராய் மெய்யாகஓர்ப்பராயின் இக்களவொழுக்கம் அறிந்தாரென்று இவள் உயிர்கொண்டிராள்; இவளையொழிந்து யான் உயிர்வாழேன்; ஆகையினாலே நீ நின் காரியத்தினைப் பலர்க்குக் கூறி அவர் உடன்பட்ட பின்பு(ச) பூக்கள் அலர்கின்ற விடியற்காலத்திலே வந்து வரைந்துகொள்ளுதலை விரும்பாநின்றேன்; அதற்குக் காரணம் என்னெனில், அப்பொழுது நீ புதியாய்போல வரும் நின் வரவையும் இவள் ||கலியாணத்திற்றோன்றிய நாணால் ஒடுங்கியிருக்கும் ஒடுக்கத்தையும் யான் காண்பேனுதலாலென்றாள்; எ - று.

ஏகாரம் பிரிநிலை.

---

க. "கமலப், பொதியினை நகுவன புணர்முலை" கம்ப. நாட்டு. சச.

உ. "விடியல்வைகறை" தொல்.அகத்.சூ. அ. மேற்.கந்த. இந்திரனரு. உகூ.

ங. (அ)"வரையி னெவனோ வான்றோய் வெற்ப, கணக்கலை யிருக்குங் கறியிவர் சிலம்பின், மணப்பருங் காமம் புணர்ந்தமை யறியார், தொன்றியன் மரபின் மன்ற லயரப், பெண்கோ ளொழுக்கங் கண்கொள நோக்கி, நொதுமல் விருந்தினம் போலவிவள், புதுநா ணொடுக்கமுங் காண்குவம் யாமே" அகம். கஉஉ; கங - கக; (ஆ) "நலந்துறை போகிய நனிநாணொடுக்கத்து" (இ) "தத்தரி நெடுங்கண் டகைவிரல்புதைஇப், புதுமண மகளிரிற் கதுமெனத் தோன்று, மதுர மழலை மடவோர்க் காண்மின்" (ஈ) "வதுவைக் கோலத்து வாசவதத்தை, புதுமைக் காரிகை புதுநாண் டினைப்ப" பெருங். (க) ஙங: ககரு, ச0: ங0அ-க0; (உ) எ: கசுச - ரு. என்பவைகளும் (உ) "வதுவைநாட் கலிங்கத்து ளொடுங்கிய, மாதர்கொண் மானோக்கின் மடந்தை" கலி. சுக: ங - ச. என்பதும் அதன் குறிப்பில் இவ்விடத்துக்குப் பொருந்துவனவும் "நாணொடுக்கம்" சிறுபாஞ்ச. சரு. என்பதும் ஈண்டு ஒப்புநோக்கற்பாலன.

ச. "பூநாறு வைகறை" அகம். ஙஎச: க0.

(பிரதிபேதம்) * கறிவளர்ந்த, † ஒருவன் யானும் ‡ போதவிழ், || கல்லியாணம்,

(க) "பூப்பொதி யவிழ்ந்தன நடையன" கம்ப.

* இவர்கள்முன்னர்க் களவொழுக்கம் ஒழுகியவாறும் அக்காலத்து அவன் புதியனாக நடித்தவாறும் இவள் ஒடுங்கியிருந்தவாறும் பிறர் அறியாராதலின், இத்தாழிசைகள் "பொழுது மாறுங் காப்புமென் †இவற்றின்" என்னும் (௧) பொருளியற் சூத்திரத்திற் கூறிய ‡காப்பின்வழுவுணர்த்தியன.

இதனால், தலைவற்குச் || சூழ்ச்சி பிறந்தது.

"எவன்மரபி னேனோரும்" என்னும்(௨)சூத்திரத்தில் நால்வகை வருணத் தாருங் களவொழுக்கத்திற்கு உரியரென்றலின்(௩)அந்தணன் களவொழுக்கங் கூறினர்.

இது தரவும் ÷ தாழிசையென்றற்குஞ் சிறிதுபொருந்திய இடைநிலைப் பாட்டும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (௧௬)

(௫௫.) வறனுற லறியாத வழையமை நறுஞ்சாரல்
விறன்மலை வியலறை வீழ்பிடி யுழையதா
மறமிகு வேழந்தன் மாறுகொண் மைந்தினாற்
புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல
வுயர்முகை நறுங்காந்த ளாடோறும் புதிதீன
வயஙந்தி யணிபெற வருவியார்த் திழிதரும்
பயமழை தலைஇய பாடுசால் விறல்வெற்ப;

அ மறையினின் மணந்தாங்கே மருவறத் துறந்தபி
னிறைவளை நெகிழ்போட வேற்பவு மொல்லுமா
னயலலர் தூற்றலி னாய்நல னிழந்தகண்
கயனுமிழ் நீர்போலக் கண்பனி கலுழாக்கால்;

௧௨ இனியசெய் தகன்றுநீ யின்னாதாத் துறத்தலிற்
பனியிவள் படலைனப் பரவாமை யொல்லுமா

௧. தொல். பொருளி. சூ. ௧௬. இச்சூத்திவுரரையில், "ஈர்ந்த ணுடையை .........எனல்கா வலரே" என்பதனைக் காப்பான் வழுவுணர்த்தியதற்கு மேற்கோள்காட்டி......அன்புபற்றிக்கூறலின் அமைந்ததென்பர், நச்.

௨. தொல். அகத். சூ. ௨௪. இதன்பக்கம், ௩௧௬: ௧. (ஆ) குறிப்புப்பார்க்க.

௩. (அ) "பங்கயத்துப் பாத்துவன்" கம்ப. மீட்சி. ௨௪௨. (ஆ) "செங் கமலப், படலை சூடிய பழமறை யந்தணர்க் கெல்லாம்" பாக. (௧௦) சிசுபாலனை. ௭. என அந்தணர்க்குத் தாமரைக்கண்ணி கூறப்படுதல் காண்க.

(பிரதிபேதம்) * இவர்களவொழுக்கம், † இவற்றுள், ‡ காப்பினுன்வழு. || சூட்சி ÷ தாழிசைக்குஞ் சிறித.

றூரலர் தூற்றலி னொளியோடி நறுநுதல்
பீரல ரணிகொண்டு பிறைவனப் பிழவாக்கால்;

௧௬ அஞ்சலென் றகன்றுநீ யருளாது துறத்தலி
னெஞ்சழி துயரட நிறுப்பவு மியையும
னனவினா னலம்வாட நலிதந்த நடுங்கஞர்
கனவினா லழிவுற்றுக் கங்குலு மாற்றாக்கால்;
எனவாங்கு;

௨௧ விளியாநோ யுழந்தானா வென்றோழி நின்மலை
முளிவுற வருந்திய முளைமுதிர் சிறுதினை
தளிபெறத் தகைபெற் றாங்குநின்
னளிபெற நந்துமிவ ளாய்நுதற் கவினே.

இஃது ஒருவழித்தணந்து வந்த தலைவற்குத் தோழி தலைவியாற்றமையும் ஆற்றுவித்தலதருமையுஞ் சொல்லி வரைவுகடாயது.

இதன் பொருள்.

வறனுற லறியாத (௧)வழையமை நறுஞ்சாரல்
(௨) விறன்மலை வியலறை (௩)வீழ்பிடி யுழையதா
மறமிகு (௪)வேழந்தன் மாறுகொண் மைந்தினாற்
புகர்நுதல் புண்செய்த (௫)புய்கோடு போல
வுயர்முகை நறுங்காந்த ணாடோறும் புதிதீன

௧. (அ) "வழையமைசாரல்" மலை. ௧௮௧; (ஆ) "வரைசேர் பெழுந்த...... ......வழையமல் வியன்காடு" பதிற். ௪௧: ௭ - ௧௧; (இ) "வழையம லடுக்கத்து" அகம். ௩௨௮: ௧; (ஈ) "சிலம்பின் வழையொடு" புறம். ௧௫௮: ௨௧.

௨. விறன்மலை: புறம். ௩௩௬: ௮; நாலடி. ௩௪௮. இந்நூற்பக்கம் ௫௮: ௫-ஆம் குறிப்பு.

௩. வீழ்பிடி. இந்நூற்பக்கம் ௨௩௬: ௧-ஆம் குறிப்புப்பார்க்க.

௪. (அ) "முரண்மிகச் சினைஇக், கொன்ற யானைக் கோடுகண் டன்ன, செம்புடைக் கொழுமுகை யவிழ்ந்த காந்தள்" (நற். ௨௧௪.) என்பதும் (ஆ) "கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப், புலிவிளையாடியபுலவுநாறு வேழத்தின், றலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்த" (நற். ௩௧: ௪-௬.) (இ) "வேல்போற் சிவந்து நெறிமுறைகோடிய வேந்தன்வெய்ய, கோல்போற் கொடியன வாங்கொலை யானையின் கோடு" (தஞ்சை. ௬௮.) என்பவைகளும் இங்கே அறிதற்பாலன.

௫. இந்நூற்பக்கம், ௨௧0: ௨-ஆம் குறிப்புப் பார்க்க.

வயனந்தி யணிபெற வருவியார்த் திழிதரும்
பயமழை *தலைஇய பாடுசால் விறல்வெற்ப

எ - து: வற்கடமுறுதலை அறியாத சுரபுன்னை நெருங்கின நறிய பக்கமலையினையும் விறலினையுமுடைய மலையிடத்து அகற்சியையுடைய பாறையிடத்தே உறையுந் தான் விரும்பினபிடி தன்னிடத்தேயாகையினாலே தனக்கு (க)மாறாகியயானையைத்தன்னெஞ்சிடத்தேகொண்ட வலியினாலேஅதன்புகரையுடைய நுதலைப் புண்ணாக்கின மறமிகுகின்ற வேழங் குத்திவாங்கின கொம்புபோல உயர்ந்தமுகையினையுடைய நறிய காந்தள் நாடோறும்†புதுமையையுண்டாக்கப் பள்ளங்களெல்லாம் நீர் நிறைந்து அழகுபெறும்படி அருவிகள் ஆரவாரித்துக் குதித்தற்குக்காரணமானபயனைத்தரும்‡மழையையிடத்தேகொண்ட பெருமை யமைந்த வெற்றியையுடைய வெற்பனே! எ - று.

நறியகாந்தள்,குத்திவாங்கின கொடியகொம்புபோல நாடோறும் அரும்புஈன என்றதற்கு நற்குணமுடைய நீ வரையாதிருத்தலிற் கொடியையாய்த் தோன்றாநின்றாயென்றும், அயல் நந்தி அணிபெறும்படி ||அருவியார்த்துஇழிதற்குக் காரணமான மழைதழீஇய வெற்பென்றதற்கு அயலாரிடத்தே நிலைபெறும்படி அலராகாநின்றது, நீ இங்ஙனம் வந்து செய்கின்ற தலையளியென்றும் உள்ளுறையுவமங்கொள்க. இது பயவுவமப்போலி.

கோடுபோல ∴வென்ற வினையுவமம் உள்ளுறையுவமத்திற்குச் சிறப்புக்கொடுத்து உள்ளுறையுவமம் போலத் திணையுணர்தலைத் தள்ளாதாகி நின்றது.

அ (உ)மறையினின் மணந்தாங்கே ÷மருவறத் துறந்தபி
னிறைவளை நெகிழ்போட வேற்பவு மொல்லும
னயலலர் தூற்றலி னய்நல னிழந்தகண்
கயனுமிழ் நீர்போலக் கண்பனி =கலுழாக்கால்

எ - து: × அயலிலுள்ளார் அலர்தூற்றுகையினாலே கண்கள் **ஆய்ந்த தன்னலத்தை இழந்தன,அவ்வளவிலேநில்லாதேபின்னர்க்கண்கள்கயல்காலுகின்ற நீர்போல நீர்விழாத காலத்துக் களவிடத்துக் கூடி அக்களவொழுக்கத்தை நிகழ்கின்றகாலத்தே †† மருவுதலறும்படி நீ அருமைசெய்தயர்த்தபின்னர்

க. "மருப்பிறக் களிறு குத்தி வயிரந்தான் கழிந்ததன்றே", "நித்தில மணிவண்டென்னு நெடுமதக்களிறுபாய | முத்துடை மருப்பு வவ்வேயுடைந்து" சீவக. உஉஎ௫ - ௬. என்பவற்றால் யானை தனக்கு மாறானயானையினுறுப்பில் தன் கோடு புக்குமுறியும்படி பொருமென்று கூறியிருப்பது இங்கே அறியத்தக்கது.

உ. மறை - களவொழுக்கம். நாற்கவி. ௬. ௩௯.

(பிரதிபேதம்) * தழீஇய †புதுமையுண்டாக்க. ‡ மழையிடத்தே, || ஆர்த்திழிதல். ∴ எனவேனையுவமம், ÷ மருவுற, = கலுழ்பவால், × அயலுள்ளார் ** ஆய்ந்தவலத்தை இழந்தன, †† மருவுதலுறும்படி.

இறையிற் கிடக்கின்ற வளைகள் நெகிழ்ந்து கழலாநிற்க அவ்வருத்தத்தை ஏற்றுக்கொண்டிருக்கவும் பொருந்தும், அதனாற்பெற்றதென்? * அக்கண்கள் அதற்கு இயைகின்றனவில்லையே; எ - று.

மன், ஒழியிசை.

கஉ (க)இனியசெய் தகன்றுநீ யின்னாதாத் துறத்தலிற்
(உ)பணியிவள் படரெனப் பரவாமை யொல்லுமோ
வூரலர் தூற்றலி னொளியோடிநறு(ங)நுதல்
பீரல ரணிகொண்டு பிறைவனப் பிழவாக்கால்

எ - து: ஊரிலுள்ளார் அலர்தூற்றுகையினாலே நறியநுதல் ஒளிகெட்டுப் பீர்க்கம்பூவினது அழகைத் தான் கொண்டு பிறையினது அழகை இழவாத காலத்து இயற்கைப்புணர்ச்சியிடத்துத் தெளிவகப்படுத்து இட்டுப்பிரிதலையுஞ் செய்து பின்னர் இன்னாதாம்படி நீ அருமைசெய்தயர்த்தபின்னர் இவள் வருத்தம் தெய்வத்தால் வந்ததோர் நடுக்கமென்று தெய்வத்திற்குப் பரவுக்கடன் பூணுமையும் பொருந்தும், அதனாற் பெற்றதென் ? † அந்நறுநுதல் அதற்கு இயைகின்றதில்லையே; எ - று.

அமர்ந்தென்பதும் பாடம்.

கங அஞ்சலென் றகன்றுநீ யருளாது துறத்தலி
னெஞ்சழி துயரட நிறுப்பவு மியையுமோ

---

க. "இனிதுமற்றின்னாதே" கலி. சஉ: கக, கரு, கஉ; அ0: கரு, கஉ, உங.

உ. பனித்தல் - நடுங்குதல், முருகு. ஙoங. மலை. அக, உஅஉ. ஙகூஅ. அகம். ரு: உக, எஉ: அ; புறம். சஉ: ரு, கசரு: க. சிலப்: ச: கூ, ரு: ககஎ.

ங. (அ) "பிரிந்தவர் நுதல்போலப் பீர்வீய" (ஆ) "பீரல ரணிகொண்ட பிறைநுத லல்லாக்கால்" (கலி. ஙக: ச. கஉச: அ.) (இ) "பிறைபுரை வா ணுதல் பீரரும்ப" (பு - வெ. கைக்கிளைப். ரு.) (ஈ) "பீரேர்வண்ண முஞ் சிறுநுதற் பெரிதே" (யா - வி. சூ. ருங. 'மீன்றேர்ந்து' மேற்கோள்.) என்பவை இங்கே ஒப்புநோக்கற் பாலன; பசத்தனுக்கு பீர்க்கம்பூவை உவமைகூறுதல் மரபென்பதை, (உ) "நுண்கொடிப் பீரத்தி னூழுறுபூவெனப், பசலையூரும்" நற். ஙஉசு: கூ - எ. (ஊ) "இன்னளாயின ளன்னுத லென்றவர்.......................மாரிப்பீரத் தலர்சில கொண்டே" (குறுந். கூஅ) (எ) "மென்றோ ளாய்கவின் மறையப், பொன்புனை பீரத்தலர்செய் தன்றே" (ஐங். சருஉ.) (ஏ) "மாரிப்பீரத்தலர்வண்ண மடவாள்" (சிலப். எ: ஙஅ.) (ஐ) "நறுநுதலா ணன்னலம் பீர்பூப்ப" (ஒ) "நன்னலம் பீர்பூப்ப நல்கார் விடுவதோ" பு-வெ. பெருந்திணை. இருபாற். க, கஅ. என்பவையும் வலியுறுத்தும்.

(பிரதிபேதம்) * கண்கள் அதற்கு † நன்னுதலதற்கு. நன்னுதலாக்கு.

(க)னனவினு னலம்வாட நலிதந்த (உ)நடுங்கஞர்
கனவினு லழிவுற்றாக் கங்குலு மாற்றாக்கால்

எ - து: பகலிடத்தே அழகுகெடும்படி எம்மை நலிதலைத் தந்த நடுங்குதற்குக் காரணமான வருத்தம் * கங்குலிற் கனவின்கண்ணும் வந்து வருத்த முறுத்தி இவள் ஆற்றாதகாலத்து இயற்கைப்புணர்ச்சிக்கண் தெளிவகப்படுத்தி இட்டுப்பிரிதலைச்செய்து பின்னர் நீ அருளாதே அருமைசெய்தயர்த்தபின்னர் இவள்நெஞ்சழிவதற்குக் காரணமான வருத்தம் இறந்துபாடெய்துவியாநிற்கவும் உயிரைப் போகாமல் நிறுத்தவும் பொருந்தும், அதனைப் பெற்றதென்? †அக்கனவின் ஆற்றல் அதற்கு இயைகின்றதில்லையே; எ - று.

‡எனவாங்கு

எ - து: என்று யான் கூறும்படியாக; எ - று.

ஆங்கு, அசை.

(௩)விளியாநோ யுழந்தானு வென்றோழி நின்மலை
முளிவுற வருந்திய முளைமுதிர் சிறு(௪)தினை
தளிபெறத் தகைபெற் றாங்குநின்
னளிபெற (௫)நந்துமிவ ளாய்நுதற் கவினே

---

க. "நனவிற்றான் செய்தது மனத்ததாகலிற், கனவிற் கண்டு" (கலி. ௪௬: ௩ - ௪.) என்பதும் அதன்குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

உ. "நடுங்கஞர்" குறள். ௧௦௮௬.

௩. "விளியா வெவ்வம்" அகம். ௨௧௨: ௨௩.

௪. (அ) "பெயினந்தி வறப்பிற் சாம் புலத்திற்குப் பெயல்போல்யான், செலினந்திச் செறிற்சாம்பு மிவளென்னுந் தகையோதான்" கலி. ௭௮: ௧௯ - ௨௦. (ஆ) "ஈனல் செல்லா வேனற் கிழுமெனக், கருவி வானந் தலைஇ யாங்கு" புறம். ௧௫௯: ௧௮ - ௯. (இ) "வறனுழக்கும் பைங்கூழகத்து வான்சோர் வினிதே" இனியது. ௧௯. (ஈ) "மேதினி யிடத்தைபைங் கூழ்கள், கரிந்தன தளிர்ப்ப வெள்ளிவீ ழன்ன கணமழை பொழிவது கடுப்ப" நைடதம்., அன்னத்தைத்தூது. ௫. (உ) "மழை பொழிய வேனிலின்முன் வாடிய பைங்கூழ்போல மறையினீங்கி... ........மகிழ்ந்து"; விநாயக. மயூரேசர். ௩௭. என்பவையும் (ஊ) "கார்பெற்ற புலமேபோற் கவின்பெறும்" (கலி. ௩௮: ௧௨) என்பதும் (எ) அதன்குறிப்பில் இவ்விடத்துக்குப் பொருந்துவனவும்(ஏ) "வானந், துளிமாறு பொழுதினிவ் வுலகம் போலுநின், னளிமாறு பொழுதினிவ் வாயிழை கவினே" கலி. ௨௫: ௨௭-௮. என்பதும்ஒப்புநோக்கற்பாலன.

௫. "நந்துமென் பேதை நுதல்" கார். ௪௦.

(பிரதிபேதம்)* தங்குதலிற, † அக்கனவினு லதற்கு, ‡ எனவாங்கு அசை விளியா.

எ - து: *கொடாதநோயாலே வருந்தி அமையாத † என்றேழி மலையிடத்து முளிதலுறும்படி வருந்திய முளைத்தல் மிக்க சிறியதினை மழையைப் பெற அழகுபெற்றாற்போல இவள் ஆய்நுதற் ‡கவின் நின்னளியைப்பெற அழகுபெறும்; எ - று.

இட்டுப்பிரிவிரங்கலையும் அருமைசெய்தயர்த்தலையும் பின்பு நூல்செய்தோர் (க)ஒருவழித்தணத்தலென்று பெயர்கூறியவாறு காண்க.

இதனால், தலைவர்க்கு அசைவு பிறந்தது.

இது தரவும் தாழிசையும் தனிச்சொல்லும் சுரிதகமும்பெற்ற ஒத்தாழிசைக்கலி. (கஎ)

(௫௪.)(உ)கொடியவுங் கோட்டவு நீரின்றி நிறம்பெறப்
பொடி(ங)யழற் புறந்தந்த பூவாப்பூம் பொலன்கோதைத்
தொடிசெறி யாப்பமை யரிமுன்கை(ச)யணைத்தோளா
(௫)யடியுறை யருளாமை யொத்ததோ நினக்கென்னா
௫ (சு)நரந்தநா றிருங்கூந்த லெஞ்சாது நனிபற்றிப்

---

க. ஒருவழித் தணத்தலென்னும் பெயர் நாற்கவி. சூ. ௩௧. முதலியவற்றிற் காணப்படுகின்றது.

உ. (அ) "கோட்டவுங் கொடியவும் பூப்பல பழுனி" ஐங். சகச. (ஆ) "கொடியவு மிளந்தளிர் குழைத்த கோட்டவுங், கடிமலர் குடைவன" பிரமோத். பிரதோஷபூசை. உ௫. (இ) "கொடியவுங் கோட்டவும் பல்லவந் தீண்டில்" தணிகை. களவு. ௩0அ.

ங. (அ) "எரியகைந் தன்ன வேடி ருமரை" பொருந. கருக. (ஆ) "ஒள்ளழற் புரிந்த தாமரை" (இ) "அழல் புரிந்தவடர்தாமரை, யைதடர்ந்த நூற்பெய்து, புனைவினைப் பொலிந்த பொலனறுந் தெரியல்" (ஈ) "கேணி பூவா, வெரிமரு டாமரைப் பெருமலர் தயங்க" புறம். கக: கசு, உகூ: க-ங, ௩சுச: உ - ங.

ச. (அ) அணைத்தோளென்பது பயவுவமைக்கு மேற்கோள். (தொல். உவம. சூ. க. பே) (ஆ) "அணைத்தோளாய்" கலி. அஎ: கூ. (இ) "அணைமென்றோள்" (கலி. சுசு: கூ.) என்பதும் அதன்குறிப்பும் பார்க்க.

௫. (அ) "ஆந்தை யடியுறை யெனினே" (ஆ) "அடிநிழற் பழகிய வடியுறை" புறம். சுஎ: கஉ, ககஅ: உசு. (இ) "காவலற் குறுகி யடியுறை யருண்மொழி யான்பணிந் துரைப்ப" பெருங். (க) சஎ: எ - அ.

சு. (அ) "நரந்த நாறுங் குவையிருங் கூந்தல்" குறுந். ௫உ. (ஆ) "நரந்த வார்குழல்" பிரமோத். உருத்திராக்க. சஎ. என்பவையும் (இ) "காவே,

(பிரதிபேதம்) * என்றியான் கூறும்படியாகக் கொடாத †என்றேழிநின்மலை, ‡ கவினானின், கவின் நின்றலையளியைப்பெற வழகுபெறுமென வுரைவுகூடாவினுள்.

பொலம்புனை (க) மகரவாய் நுங்கிய சிகழிகை
நலம்பெறச் சுற்றிய குரலமை யொருகாழ்
*விரன்முறை சுற்றி (உ)மோக்கலு மோந்தன
(௩)னறுஅ வவிழ்ந் தன்னவென் மெல்விரற்போது கொண்டு
௧0 (ச)செறுஅச் செங்கண் புதைய வைத்துப்
(௫)பறுஅக் குருகி னுயிர்த்தலு முயிர்த்தனன்
றொய்யி லிளமுலை †யினிய தைவந்து
தொய்யலந் தடக்கையின் (௬)வீழ்‡பிடி யளிக்கு
(எ)மையல் யானையின் மருட்டலு மருட்டினன் ;

---

சுரும்பிமிர்தாதொடு தலைத்தலை மிகூஉ, நரந்தநறுமலர்நன்களிக்கும்மே" பரி. க௯: க௪ – ௫. என்புழி நரந்தநறுமல ரென்பதற்கு நரந்தம்போலும் நறியமலர் என்று பரிமேல் எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

க. (அ) "மகரப் பகுவாய் தாழ மண்ணுறுத்துத், துவரமுடித்த துகளறு முச்சி" முருகு. உ௫–௬. (ஆ) "சுறவுவாயமைத்த சுரும்புசூழ்சுடர்நுதல்" பெரும்பாண். ௩அ௫. (இ) "எறி மகர வலய மணிதிகழ் நுதலியர்" பரி. க0. எஎ. (ஈ) "எறிகதிர் மகரவாய் பொறித்த, திலதமேலிடத்துச் செங்கதிர் தொடர்ந்த சேயொளி யரவென நாற்றி" திருவானைக்காப். அகிலாண்டநாயகி. உ௬.

உ. "மோக்கலு மோந்தனன்" "உயிர்த்தலு முயிர்த்தனன்" "மருட்டலு மருட்டினன்" என்பவற்றொடு, "உண்ணலு முண்ணேன் வாழலும் வாழேன்" (கலி. உ௩: எ.) என்பதும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற் பாலன.

௩. "நறுவிதழ் கண்டன்ன செவ்விரற் கேற்ப" கலி அ௪: உஉ.

௪. "செறுஅச் செங்கண்" பரி. க௩: ௫எ.

௫. (அ) "ஊதுலைக் குருகி னுள்ளுயிர்த்தசைஇ" அகம். ௫௫: எ. (ஆ) "காதலர்ப் பிரிந்த மாதர் நோதக, வூதுலைக் குருகி னுயிர்த்தனர்" (இ) "காதலிதன்னொடு கானகம் போந்ததற், கூதுலைக் குருகினுயிர்த்தனன் கலங்கி" (ஈ) "காதலற் கெடுத்த நோயோ டுளங்கனன், றூதுலைக் குருகி னுயிர்த்தனள்" சிலப். ௪: ௫அ – ௬, க௩: ௪௪–௫, உஉ: க௫க-உ. (உ) "ஊதுலைக் குருகி னுயிர்த்து" (ஊ) "பறுஅக் குருகி னுயிர்த்தவன் போயபின்" மணி. உ: ௪௩. கக: உஅ. (எ) "அதட்டுருத்தியி னுயிர்ப் பேற" கம்ப. ஊர்தேடு உக0; (ஏ) "சிவையின்வா யென்னச் செந்தீ யுயிர்ப்புறச் சிவந்தமூக்கன்" கம்ப. கும்பகருணவதை: க௪.

௬. வீழ்பிடி இந்நூற்பக்கம் உ௩௬: க–ஆம் குறிப்புப்பார்க்க.

எ. (அ) "மையல் வேழம்" குறிஞ்சி. க௬௫, பெருங். (உ) ௬; ௬க: கந்த. திருக்கல்யாண. உஅ, (ஆ) "யானை, மையலங் கடாஅஞ் செருக்கி"

(பிரதிபேதம்) * தொன்முறை, † இனிது, ‡ பிடிக்களிக்கு,

(க)அதனால்;
(உ)அல்லல் களைந்தனன் றோழி நந்நக
ரருங்கடி நீவாமை *கூறி னன்றென
நின்னொடு சூழ்வ றோழி நயம்புரிந்
தின்னது செய்தா ளிவளென
(௫)மன்னா வுலகத்து †மன்னுவது ‡புரைமே.

---

அகம். ௩0௭: ௭ - ௮. (இ) "மையல்யானை" புறம். ௨௬௪: ௭, சீவக. ௨௩௬௫, பெருங். (க) ௪௩: ௮௧, (ஈ) "மையன் மதயானை" சீவக. ௫௮௬, (உ)"மையன்மாக்களி" கந்த. துணைவர்வரு. ௩௨.(ஊ)"மையன் மத வெங்களியானை" நைடத. அன்னத்தைத்தூது. ௧௨௮.

௧. "அதனால், அல்லல் களைந்தனன் றோழி" என்பது கைப்பட்டுக் கலங்கிய வருத்தத்தைக் களைந்தனனெனத் தலைவி உரையெனத் தோழிக்கு உரைத்தற்குமேற்கோள்: தொல். களா. சூ. ௨0. நச்.

௨. "துணைச்சுட்டுக்கிளவி கிழவியதாகும்" என்புழி, செவிலிக்கு உரைப்பாயாக வென்று தோழிக்குத் தலைவிகூறியதற்கு இச்சுரிதகம் மேற்கோள். தொல். களா. சூ. ௩௨. நச்.

௮. (அ)"மன்னா வுலகத்து மன்னுவது புரைமே" என்பது மன்னென்னு மிடைச்சொல் நிலைபேற்றின்கண் வந்தமைக்கு மேற்கோள். (நன். இடைச். சூ. ௧௩. மயிலை.வி. இரா) (ஆ) "நில்லா வுலகத்து நிலைமை தூக்கி" (இ) "தொலையாநல்லிசை யுலகமொடுநிற்ப" (ஈ) "கெடாஅ நல்லிசை நிலைஇ" (உ) "நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்து" (ஊ) "மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர், தம்புகழ் நிறீஇத்தா மாய்ந்தனரே" (எ) "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற் பொன்றாது நிற்ப தொன்றில்" (ஏ) "மண்ணியன் ஞாலத்து மன்னு புகழ்வேண்டி" (ஐ) "நிலையிலாவுலகி னின்றவண்புகழை" (ஒ) "ஒருவன திரண்டி யாக்கை யூன்பயி னரம்பின்யாத்த, வுருவமும் புகழுமென்றாங் கவற்றி னூழ்காத்துவந்து, மருவிய வுருவமிங்கே மறைந்துபோமற்ற யாக்கை, திருவமர்ந் துலகமேத்தச் சிறந்து பின்னிற்குமன்றே" (ஓ) "என்று நிற்கு மிரும்புகழ்" (ஔ) "நின்ற புகழொழிய நில்லா வுயிரோம்பி, யின்றுநாம் வைக விழிவாகும்" (ஃ) "இன்றுளார் நாளை மாள்வர் புகழுக்கு மிறுதியுண்டோ" (அஅ) "மன்னா வுலகத்து மன்னிய சீர்த் தஞ்சை வாணன்" (ஆஆ) "சாதல்வந் தடுத்த காலுந் தனக்கொரு சாத லின்றிப், பூதல மிருக்குங்காறும் புகழுடம்பிருக்கும்"

(பிரதிபேதம்)*கூறினன் நின்னொடுஞ், † மன்னியது. ‡ புரைமோ புரிமே புரிமோ. புகழே.

(க)இது கைப்பட்டுக்கலங்கிய வருத்தத்தைக் களைந்தேனென உரையெனத் தோழிக்கு உரைத்தற்கண்தலைவி *கூறியது. அது நொதுமலர்வரைவிற்கு மணமுரசு இயம்பியவழி ஆண்டானும் †பிறவாண்டானுந் தோழிக்கு இன்னவாறு கூட்டம் நிகழ்ந்ததெனக்கூறி, அதனை ‡நமர் அறியக் கூறல் வேண்டுமென்றும் தலைவற்கு நம்வருத்தம் அறியக் கூறல்வேண்டுமென்றும் தலைவி ||கூறுதற்கண் நிகழ்வது.

## இதன் பொருள்.

கொடியி லுள்ளனவும் கோட்டி லுள்ளனவு மாகியபூவாக நீரின்றுயிருக்க நிறம்பெறும்படி பொடியினையுடைய நெருப்பாற்பண்ணப்பட்ட பொற்பூவாற்செய்த கோதையினையும் தொடிசெறிந்த (உ) கட்டுவடங்கள் அமைந்த அழகினையுடைய முன்கையினையும் அணைபோலும்மெல்லிய÷தோளையுமுடையாய்! நின் அடியிலே யான் உரைத்தற்கு நீ அருளாதிருத்தல் நினக்குப் பொருந்தினதொன்றோவென்று கூறிப் பொன்னாற்செய்த மகரவாயாகச் சமைந்த தலைக்கோலம் விழுங்கிக் கிடந்த ×நரந்தம்பூ நாறுங் கரியகூந்தலின் முடியை ஒழியாமல் மிகப்பிடித்து அதிலே நன்மைபெறும்படி கட்டின பற்றமைந்த ஒருமாலையை விரலாலே முறையாகச்சுற்றி அதனை மோந்துபார்த்தலையுஞ் செய்தான்; அதுவே=யன்றி நறவம்பூஅலர்ந்தாற்போன்ற என்னுடைய மெல்லிய விரலையுடைய கையைத் தாங்கிக்கொண்டு அருளையுடைய தன் சிவந்த கண் மறையும்படி வைத்துச் சொல்லன் உலைமூக்கு வெவ்விதாய் உயிர்க்குமாறுபோல உயிர்த்தலையுஞ் செய்தான்; அதுவேயன்றித் தொய்யில் எழுதின இளையமுலையைஇனியவாகத்தடவி(௩)அத்தொய்யிலைக் கொண்டுவந்த

---

க. "உரை யெனத்தோழிக் குரைத்தற்கண்" என்பதன் உரையில் இச் செய்யுளை மேற்கோள் காட்டிக் கைப்பட்டுக் கலங்கிப் புணர்ச்சி நிகழ்ந்தமை கூறி அருங்கடி நீவாமைகூறின் நன்றெனத்தமர்க்குக் கூறுமாறு தோழிக்குத் தலைவிகூறினள். சுரிதகத்து இருகால் தோழியென்றாள் நாணுத்தளையாக மறைகரந்தவாறு தீரத் தோழிக்கு முகமனாக என்பர் நச்சினார்க்கினியர்; தொல். கள. சூ. உக.

உ. "கட்டுவடவிணை" பெருங், (உ) கக: கஅக.

௩. (அ) "நயன வாரியின், றொய்யல்வெஞ் சுழியிடைச் சுழிக்குமேனியள்" எனத் தொய்யலென்பது வெள்ளமென்னும் பொருளில் வருதலாலும் (ஆ) "மையலுற் றிழிமத மழைய றமையாற் றொய்யலைக் கடந்தில குழி யானையே" (இ) "குழி யானை மதம்படு தொய்யலின்" என யானை மதத்தையொட்டி அதன் பெருக்கிற்கு வருதலாலும், 'தொய்யலந் தடக்கை' என்பதனை மத நீரினையுடைய அழகிய வளைந்த கையென யானைக்கு ஆக்குதலுமாம். (ஈ) "தாழ்பெருந் தடக்கை.........யானை"

(பிரதிபேதம்) * கூறியது; என்றது நொதுமலர் † பிறண்டானும் தோழிக்கன்னவாறு, ‡நாமறிய || தலைவிகூறுதற் கண்ணுமென்றவாறு, ÷ தோளினையுமுடையாய் × நாரத்தம்பூ = அன்றிநாரம்பூ வலர்ந்தாற்,

தடக்கையினாலே தான் விரும்பின(க)பிடியை அருள்செய்யும் மயக்கத்தை*யுடைய யானைபோல(உ)மெய்ம்முழுதினையுந்தடவுதலையுஞ்செய்தான்; அச்செயலாலே யான் கைப்பட்டுக் கலங்கிய வருத்தத்தைத் தோழி போக்கினேன்; இனித், தோழீ! நீயும் யான் விரும்பிய விருப்பத்தின் மனம்புரிந்து நின்மகள் நங்குடிக்கு வடுவாகாமற்(ந)கற்புக்கடம்பூண்டாளென்றுநம்முடையமனைக்கண் நிகழ்கின்ற அரிய மணம்(சு)அவனைவிட்டுநீங்காமல் யாய்க்கு அறத்தொடுநிலை வகையாற் கூறின் அது நமக்கு நல்லதொன்றென்று கருதி நின்னோடு†உசாவுவேன்; நீ இங்ஙனங் கூறின் நிலைநில்லாத உலகத்திலே நிலைநிற்பதோர் புகழ் நமக்குப் ‡பொருந்தும்; எ – று.

(ரு)இது தலைவி கைப்பட்டுக்கலங்கிப் புணர்ச்சிநிகழ்ந்தமை தோழிக்குக் கூறினாள் அவள் அறத்தொடுநிற்றல்கருதி. ||இஃது (சூ)உண்மைசெப்பலென்னும் அறத்தொடுநிலையாம்.

---

(உ)"நிழறூழாம் யானை" (ஊ) "மடிக்கினு மண்ணுறுகையது" (எ) "எழுறுப்புந் திண்ணிலந்தோய்வ"என்றுவருபவற்றின் பொருள்கருதி, தொய்யலென்பதற்கு நிலந்தோய்தலென்று பொருள்கொள்ளலுமாம்.

க. இந்நூற்பக்கம் எசு: க–ஆம் குறிப்புப்பார்க்க.

உ. மடப்பிடி............கழைதின் யாக்கை விழைகளிறு தைவர" அகம். நஉஅ: கக – ந.

ந. (அ) "கடுங்கதிர் வெம்மையிற் காதலன் றனக்கு, நடுங்குதுய ரெய்தி நாப்புலர வாடித், தன்றுயர் காணாத் தகைசால் பூங்கொடி, யின்றுணை மகளிர்க்கின்றி யமையாக், கற்புக்கடம் பூண்ட வித்தெய்வ மல்லது, பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்" (ஆ)"கற்புக் கடம்பூண்டு, காதலன் பின்போந்த, பொற்றொடிநங்கைக்குத் தோழிநான்கண்டீர்" சிலப். கடு: கஙக - கசச, உக; 'தற்பயந்தாள்' (இ) "கற்புக்கடன் பூண்டு நுங்கடன் முடித்த" மணி. உகூ; அ. (ஈ) "பொற்றொடிப் பணைத்தோண் முற்றிழை மாதரை, யிற்பெருங்கிழமையொடு கற்புக் கடம் பூட்ட, வரையும் வாயி றெரியுஞ் சூழ்ச்சியுள்" பெருங். (ந) உக; கூ–அ.

சு. (அ) "அயன்மண மொழியரு ளவர்மண மெனவே" 'கயிலைநன்' (ஆ) "பெறுகநன்மணம்விடு பிழைமண மெனவே" 'குறமக' சிலப். உசு.

ரு. (அ) இச்செய்யுளைக் கைப்பட்டுக் கலங்கியதற்கு மேற்கோள் காட்டி 'இதனுட்கைப்பட்டுக் கலங்கிய வாறும், அருமறை யுயிர்த்த வாறும், இவ்வாறு செய்யாக் கால்இறந்து படுவெனென்னுங் குறிப்பினளாய் 'மன்ற, வுலகத்து............புரையும்' எனக்கூறியவாறுங் காண்க. என்பர் இளம் பூரணர்.(ஆ)நச்சினார்க்கினியரும் இதற்கு இச்செய்யுளை மேற்கோள் காட்டுவர். தொல். கள. சூ. உ0.

சூ. "எளித்த லேத்தல் வேட்கையுரைத்தல், கூறுத லுசாத லேதீடு

(பிரதிபேதம்) * உடையயானை. †உசாவு வேனீங்ஙனங் கூறினால். ‡ பொருந்து மெனத்தலைவி கைப்பட்டுக்கலங்கிய || இது.

இதனால், தலைவிக்குக் கைம்மிகல் பிறந்தது.

(க)சுரிதகத்து இருகாற் றோழியென்றாள் நாணுத்தலையாக் மறைகரந்தவாறு †காத்த தோழிக்கு முகமனாக.

(உ) விரல், ஆகுபெயர். பறாஅக் குருகு - பறவாக்குருகு, வெளிப்படை; விகாரம். புரையும், (௩)ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங்கெட்டது.

(ச)இஃது‡அதனாலெனத்தனிச்சொற்||பெற்று, அடக்கியலில்லாச் சுரிதகத்தோடு அடிநிமிர்ந்தோடிய ÷பாநிலைவகைக் கொச்சகக் கலிப்பா. (கஅ)

(௫௫) மின்னொளி ரவிரற லிடைபோழும் பெயலேபோற்
பொன்னகை தகைவகிர் வகைநெறி வயங்கிட்டுப்
போழிடை யிட்ட கமழ்நறும் பூங்கோதை
யின்னகை யிலங்கெயிற்றுத் தேமொழித் துவர்ச்செவ்வாய்
நன்னுதா னினக்கொன்று கூறுவாங் கேளினி;

௫ நில்லென நிறுத்தா னிறுத்தே வந்து
நுதலு முகனுந் தோளுங் கண்ணு
மியலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ
யைதேய்ந் தன்று பிறையு மன்று
௧0 மைதீர்ந் தன்று மதியு மன்று
வேயமன் றன்று மலையு மன்று
பூவமன் றன்று சுனையு மன்று
மெல்ல வியலு மயிலு மன்று
சொல்லத் தளருங் கிளியு மன்று;

எனவாங்கு;

---

தலைப்பா, ஒண்மை செப்புங் கிளவி" (தோல். பொருளி. சூ. க௩.) என அறத்தொடு நிற்றல் எழுவகையாம்.

க. இந்நூற்பக்கம் ௩உஎ: க-ஆம் குறிப்பின் இறுதிபார்க்க.

உ. விரலென்பது ஆகுபெயராய்க் கை யென்னும் பொருளுணர்த்தலை, "படைகொ ணோன்விரல்" (முல்லை. எஎ.) என்பதனுரையா லறிக.

௩. தோல். வினை. சூ. சக. உரைபார்க்க.

ச. "பாநிலை வகையே" என்னும் சூத்திரவுரையில் இச்செய்யுளை மேற்கோள் காட்டி இக்குறிப்பையும் எழுதுவர் பே, நச், இருவரும்; தோல். செய். சூ. க௫௫.

(பிரதிபேதம்) * என்ற ளுணுத்தலையாக,† இரந்தோழிக்கு. ‡ அதனானென. || பெற்றடக்கிய ÷ பாநிலவகை.

௧௬ அனையன பலபா ராட்டிப் பையென
வலைவர் போலச் சோர்பத னொற்றிப்
புலையர் போலப் புன்க ணோக்கித்
தொழலுந் தொழுதான் றொடலுந் தொட்டான்
காழ்வரை நில்லாக் கடுங்களி றன்னோன்
௨௰ றொழூஉந் தொடூஉமவன் றன்மை
யேழைத் தன்மையோ வில்லை தோழி.

இது "பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி, யொருமைக் கேண்மையி னுறுதுறை தெளிந்தோ, ளருமை சான்ற நாலிரண்டு வகையிற், பெருமை சான்ற வியல்பின்கண்"(௧) தலைவி கூறியது. என்றது, "ஒருமைக் கேண்மையின் உறுதுறை—தான் அவளென்னும்(௨) வேற்றுமையில்லாத நட்பினாலே தோழி தனக்கு வந்து கூறிய துறையை, பொறியின் யாத்த புணர்ச்சிநோக்கித் தெளிந்தோள்—முன்னர்த் தெய்வப்புணர்ச்சிநிகழ்ந்தமைநோக்கி அதுகாரணத்தான் முடிப்பதாகத்தெளிந்த தலைவி, அருமை சான்ற நாலிரண்டுவகையில்—தான் *முன் அருமையமைந்துநின்றநிலையாற் றலைவன்கண் நிகழ்த்திய மெய்தொட்டுப்பயிறன்முதலிய எட்டினாலே, பெருமைசான்ற இயல்பின்கண்ணும்—தனக்கு உளதாம் பெருமைகூறுதற்கு அமைந்ததோர் இயல்பின் கண்ணும், எ-று:" இதனாற் போந்த பொருள் தலைவன் இத்துணை இளிவந்தன செய்யவும் யான் நாணும் மடனும் நீங்கிற்றிலேனென்று தன்பெருமை தோழிக்குக் கூறுதலாயிற்று.

இதன் பொருள்.

(௩)மின்னொளி ரவிரற விடைபோழும் பெயலேபோற்
பொன்†னகை தகைவகிர் வகைநெறி வயங்கிட்டுப்
‡போழிடை யிட்ட கமழ்நறும் பூங்கோதை

---

௧. தொல். கள. சூ. ௨௰. இந்நூற்பக்கம் ௩௩௩: ௩-ஆம் குறிப்புப்பார்க்க.

௨. "வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்கால்" நாலடி. ௭௫.

௩. (அ) "மின்னுமிழ்ந் தன்ன சுடரிழை யாயத்துத், தன்னிறங் கரந்த வண்டுபடு துப்பி, னொடுங்கீ ரோதி" பதிற். அக: ௨௬ - அ. (ஆ) "எஃகிடை தொட்டகார்க் கவின்பெற்ற வைம்பால்போன், மையற விளங்கிய துவர்மண லதுவது, வைதாக நெறித்தன்ன வறலவிர் நீளம்பா, லணிநகை யிடையிட்ட வீகையங் கண்ணி"கலி. ௩௨: ௧-௪. (இ) "திருந்து நானக்குழல்.........வரும் பொன்மாலை" (௲) "பொன்னரிமாலை பூண்டு"(௨)"பண்ணுரை மகளிர் மாலை பைந்துகில் கவர்ந்து கொள்ளக், கண்ணுரை மகளிர் சோர்ந்து காரிருட் டிவளு மின்போற்,

(பிரதிபேதம்) * முன்னரருமை, † அகைத்தகைவகை வகிர்வகை நெறி, † பொழியிடை, பொழிலிடை

(௧)மின்னகையிலங்கெயிற்றுத் தேமொழித் (௨)துவர்ச்செவ்வாய்
நன்னுதா னினக்கொன்று கூறுவாங் கேளினி

எ - து: ஒளிர்கின்ற மின்னினது விளங்குகின்ற அறுதிகள் இடையே பிளந்தோடும் மேகங்கள்போலே பொன்னைக் கூறுபடுத்தின அழகினையுடைய வகிர்களை (௩)ஐந்துபகுதியையுடைய நெறித்தமயிரிட்டுத்தேவிளங்கவிட்டுப்*பின்னால் (௪)தாழம்பூ வகிர்ந்தவற்றையும் இடையிலேயிட்டு முடித்த மிகவும்நாறுகின்ற பூமாலையினையும் இனிய நகையினையும் இலங்குகின்ற எயிற்றினையும் இனிய மொழியினையும் இயல்பான சிவப்பாற் சிவந்த வாயினையுமுடைய நன்றாகிய நுதலினையுடையாய்! நினக்கு ஒருவார்த்தை கூறுவேம்; அதனை இப்பொழுது †கேள்; எ - று.

இட்டென்னுஞ் செய்தெனெச்சம் இட்டவென்னும் பெயரெச்சத்தோடு முடிந்து அது நன்னுதலென்னும்பெயரோடு முடிந்தது. கூறுவாமென்றது (௫)உயர்த்துக்கூறல்; (௬)உளப்பாடன்று, வயங்க, விகாரம்.

---

பெண்ணுரைப் பிடிக்கைக்கூந்தற் பொன்னரிமாலைதாழ" சீவக. ௩௪௧ ௨௫௩௮. ௨௬௬௩. (ஊ) "பொன்னரி மாலையுந், தாழ்தரு கோதையுந் தாங்கி முடிமிசை" சிலப். ௬: ௧௦௬ - ௮. அடியார்க்கு. மேற். (எ) "பின்னிடைச்சேர்ந்த பொன்னரிமாலை" (ஏ) "மின்னிருங் கூந்தன் மேதகப் புனைந்த, பொன்னரிமாலை" (ஐ)"புல்லகம் பொருந்திய மெல்லெ ஞேதிப், பொன்னரி மாலை பொலிந்த பூமுடி இ" (ஒ) "நன்னுதன் மாதர் பின்னிருங் கூந்தற், பொன்னரி மாலாய்" பெருங். (௧) ௪௦: ௩௧ - ௪௦, ௩௪௧ - ௫௦, (௨) ௩: ௭௨ - ௩, ௧௧: ௭௫-௬.

௧. "இலங்கெயிற் றின்னகை மாதர்" கலி. ௧௩௧: ௨௮.

௨. "துவர்த்தொண்டையஞ் செவ்வாய்" சீவக. ௧௦௭௪.

௩. ஐம்பகுதியின்பெயர்கள் இந்நூற்பக்கம் ௧௭௪: ௧-ஆம் குறிப்பிலுள்ளபடி நச்சினார்க்கினியராலும் சுருள், குரல், அளகம், துஞ்சுகுழல், கொண்டையென்று பு - வே. உரையாசிரியராலும் கூறப்படுகின்றன.

௪. (அ) "கண்ட லவிர்பூங் கதுப்பினாய்" சிறுபஞ்ச. ௧௪. (ஆ) "எதிர்பூஞ் செவ்வி யிடைநிலத் தியாத்த, முதிர்பூந் தாழை முடங்கல் வெண்டோட்டு" சிலப். ௮: ௪௮ - ௯.

௫. "ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி..........வழக்கி னாகிய வுயர்சொற் கிளவி" (தொல். கிளவி. சூ. ௨௭) என்பது இங்கே அறியத்தக்கது.

௬. அம், ஆம் என்பன முன்னின்றாரையும் தமராயவழிப் படர்க்கையாரையும் உளப்படுக்குமென்பவாதலால், ஈண்டு உளப்பாடன்றென விளக்கினார்.

பிரதிபேதம்) * பின்னற்றாழம்பூ வகிர்ந்தவற்றையும், † கேளென்றுகூறி இட்டென்னும்.

௬ நில்லென நிறுத்தா னிறுத்தே வந்து
நுதலு முகனுந் தோளுங் கண்ணு
மியலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ
(௧)யைதேய்ந் தன்று பிறையு மன்று
௧௦ மைதீர்ந் தன்று மதியு மன்று
வேயமன் றன்று மலையு மன்று
(௨)பூவமன் றன்று சுனையு மன்று
(௩)மெல்ல வியலு மயிலு மன்று
சொல்லத் (௪)தளருங் கிளியு மன்று

என வாங்கு

௧௬ அனையன பலபா ராட்டிப் பையென
(௫)*வலைவர் போலச் சோர்பத †னொற்றிப்

---

௧. (அ)உவமப்பொருளாலே சொல்லுவான் குறிக்கப்பட்டபொருளைக்கூறு பாட்டியலால் தெளியும்பக்கமு முண்டென்பதற்கு, "ஐதேய்ந்தன்று .........கிளியுமன்று" என்பதை மேற்கோள்காட்டி, 'இவ்வாறு கூறிய வழித் துணியாது நின்றன, நுதலும் முகனும் தோளும் கண்ணும் சாயலும் மொழியுமெனத் துணிந்தவாறு கண்டுகொள்க' என்பர், இளம்; தோல். உவம. சூ. ௨௦. (ஆ) "தெரிநிலை யென்பது: ஒரு பொருளை ஐயப்படுதலும் துணிதலுமின்று ஆராயு நிலைமை" என்று கூறி, "ஐதேய்ந்தன்று...........மதியுமன்று" என்பதை மேற்கோள் காட்டினர், தெய். தோல். இடை. சூ. ௭.

௨. "பூவமலுதல்" கலி, ௬௨: ௪.

௩. (அ) "மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு" (ஆ) "பீலி மஞ்ஞையி னியலி" (இ) "நன்மா மயிலின் மென்மெல வியலி" (ஈ) "மணிபுரை யெருத்தின் மஞ்ஞை போல..............எகுதி மடந்தை" (உ) "அணி மயி லன்ன வசைநடைக் கொடிச்சியை" (ஊ) "கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த, சில்வளை விறலியும்" (எ) "கலவ மஞ்ஞையிற் காண் வர வியலி" (ஏ) "வருநல மயிலன மடநடை மலைமகள்" (ஐ) "மயி லெனப்போந்து" (ஒ) "கானிறி மயிலிற் கவின்பெற வியலி" (ஓ) "மயில்கள் போலவரு மடநலீர்"

௪. "தளரியற் கிள்ளை" அகம். ௩௨௪: ௩.

௫. (அ)"இல்வழங்கு மடமயில் பிணிக்குஞ்,சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே" புறம். ௨௫௨: ௪ - ௫. (ஆ) "வலைவர்க்கு" கலி. ௨௩: ௧௭.

(பிரதிபேதம்) * வலையர். † ஒற்றியென் னெஞ்சு நெகிழ்ந்த செவ்வி கா[illegible]உப்புலையர்.

புலையர் போலப் புன்க ணோக்கித்
(௩)தொழலுந் தொழுதான் றொடலுந் தொட்டான்
(௨)காழ்வரை நில்லாக் கடுங்களி றன்னோன்
றொழூஉந் தொடூஉமவன் றன்மை
யேழைத் தன்மையோ வில்லை தோழி

எ - து: நீ போகாதே நில்லென்று என்னை நிறுத்தினன்; நிறுத்தி அணுக வந்து நுதலையும் முகத்தையும் தோளையும் கண்ணையும் சாயலையும் சொல்லையும் நோக்காநின்று உவமைமையைக்*கூறநினைந்து, நுதல் வியப்பையுடைத்தாய்த் தேய்ந்தது, ஆயினும் பிறையுமன்று; முகம்மறுவற்றது, ஆயினும் மதியுமன்று; தோள்வேயின்றன்மை † நெருங்கிற்று, அது பிறக்கும் இடமன்று; கண் பூவின் றன்மை நெருங்கிற்று, அது பிறக்குமிடமன்று; சாயலிருந்தபடி மெத்தென நடக்கும், மயிலுமன்று, சொல்லுச்சொல்லத் தளரும்,ஆயினுங் கிளியுமன்று, என்று அவ்விடத்து அத்தன்மையனவாகிய உறுப்புக்கள் பலவற்றையும் பொய்பாராட்டி, வலையர் அம்மாக்களின் சோர்வைப் பார்க்குமாறு போல என்னெஞ்சழிந்த செவ்வியைப் பார்த்துப் புலையர் நோக்குமாறுபோல வருத்தமுண்டாக நோக்கித் தொழுதலைச்செய்தான்; தீண்டுதலையுஞ் செய்தான்; மதத்தான் அறிவிழந்து‡பரிக்கோலெல்லையில் நில்லாத கடிய களிற்றையொப்பான் பலகாலும் தொழுவதுஞ்செய்யும்; தீண்டுவதுஞ் செய்யும்; ஆதலால், தோழீ ! அவன் குணத்தில் அறியாமையாகிய குணமோ இல்லை; எ - று.

இவன் இங்ஙனமாகவும் யான் நாணும் மடனும் நீங்காமை நின்றே ||னெனத் தலைவி தன் பெருமைசான்ற இயல்புகூறினள்.

(௩) இதனுட் பாராட்டியெனப்பொய்பாராட்டலும் சோர்பதனொற்றியென நெஞ்சு நெகிழ்ந்த செவ்விகூறினமையிற்கூடுதலுறுதலும் புலையர்போல நோக்கியென நீடுநினைந்திரங்கலும் தொழலுந்தொழுதானென்ன இடம்பெற்றுத் தழாலும் தொடலுந் தொட்டானென்ன மெய்தொட்டுப் பயிறலும் களிறுபோல அறிவினெல்லையி னில்லாதவனெனத் தீராத் தேற்றமும் ஒரு வாற்றாற் கூறியவாறு காண்க.

---

௧. "உண்ணலு முண்ணேன் வாழலும் வாழேன்" (கலி. ௨௩: எ) என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறியத்தக்கன.

௨. "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்" (கலி. ௨: ௨௬) என்பதும் இந்நூற்பக்கம் ௨௧. ௧-ஆம் குறிப்பும் பார்க்க.

௩. "பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி, யொருமைக் கேண்மையி னுறுகுறை தெளிந்தோ,ளருமை சான்ற நாலிரண்டுவகையிற்,பெருமை சான்ற வியல்பின் கண்ணும்" என்பதனுரையிலும் இச்செய்யுளை மேற்கோள்காட்டி, 'இதனுட் பாராட்டியென...............மெய்தொட்டுப்

(பிரதிபேதம்) * கூறநினைந்து. † நெருங்கினும்அது. ‡ வரிக்கோல், || எனத்தன்பெருமை.

இதனால்,தோழிக்கு நினைத்தல் பிறந்தது.

"உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை" (க)என்னுஞ்சூத்திரத்துஉள்ளுங் காலையென்றதனாற் பிறையுமன்று, மதியுமன்று, மயிலுமன்று, கிளியுமன் றென்பன மறுத்தனவென்று கொண்டவுவமம். "முதலுஞ் சினையுமென் றாயிரு பொருட்கு, நுதலிய மரபி னுரியவை யுரிய"(உ)என்னுஞ்சூத்திரத்தில் நுதலிய மரபினென்றதனான் மலையுமன்று சுனையுமன்றென்பன, மலையோடுஞ் சுனையோடும் உவமைகருதாது மலையுள் வேயெழும்இடத்தையும் சுனையுட் பூவெழும் இடத்தையும் நோக்கி வேயையும் பூவையும் மறுத்துநிற்றலின், தோளையுங் கண்ணையும் உணர்த்திநின்றவென்று கொண்ட உவமம்.

இது தனிச்சொல்லும் ஆசிரியச்சுரிதகமும்பெற்று, *"பாநிலைவகையே" (௩)என்பதனால் அகப்பொருளின்கண்வந்த தரவிணைக் கொச்சகம். (கக)

(ருசு.) ஊர்க்கா னிவந்த பொதும்பரு ணீர்க்காற்
கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை
சுவன்மிசைத் தாதொடு தாழ வகன்மதி

---

பயிறலும் அவன் நிகழ்த்தியவாறு கூறி, மதத்தாற் பரிக்கோலெல்லையி னில்லாத களிறுபோல வேட்கைமிகுதியின் அறிவினெல்லையில் நில்லாதவனெனத் தீராத் தேற்றமும் ஒருவாற்றாற் கூறி; தனக்குப் பெருமை சான்ற இயல்பைப் பின்னொருகால் (தலைவி) தோழிக்குக் கூறியதென்பர். இவ்வுரைகாரர்; தொல். களா. சூ. உ௦.

க. தொல். உவம. சூ. ௩. இச்சூத்திர வுரையிலே பேராசிரியர் "நுதலு முகனும்...............கிளியு மன்று" என்பதனை மேற்கோள்காட்டி "இவற்றுள், மலையுஞ்சுனையும் உவமையின்மையின் அவற்றைப் பிறை யோடும் மதியோடும் உடன்வைத்து உவமைபோலக்கூறி எதிர்மறுத் தது என்னை? எனின், அவையாமாறு 'முதலுஞ் சினையும்' என்புழிச் சொல்லுதும்" என்பர்.

உ. தொல். உவம. சூ. சு. இதன் பேராசிரிய ருரையிலும் "வேயமன் றன்று மலையுமன்று" என்ற வழியும் மலைநோக்காது மலையுள்வே யெழுமிடங்கருதி அவ்விடமன்றென்ற வாறெனக்கொள்க. "பூவமன் றன்று சுனையுமன்று" என்பதற்கும் இஃது ஒக்கும்; என்னுங் குறிப்புக் காணப்படுகின்றது.

௩. தொல். செய். சூ. கருரு. இதனுரையில் பே. நச். இருவரும் இங்ஙன மே இச்செய்யுளைத் தனிச்சொல்லும் ஆசிரியச்சுரிதகமும் பெற்ற தரவிணைக் கொச்சகத்துக்கு மேற்கோள் காட்டியுள்ளார்.

(பிரதிபேதம்) * பாநிலவகையி னென்பதனால்.

௫ தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்
தீங்கே வருவா ளிவள்யார்கொ லாங்கேயோர்
வல்லவன் றைஇய பாவைகொ னல்லா
ருறுப்பெலாங் கொண்டியற்றி யாள்கொல் வெறுப்பினால்
வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொ லாண்டார்

௧௦ கடிதிவளைக் காவார் விடுதல் கொடியியற்
பல்கலைச் சில்பூங் கலிங்கத்த ளீங்கிதோர்
நல்கூர்ந்தார் செல்வ மகள் ;

இவளைச், சொல்லாடிக் காண்பேன் றகைத்து ;

நல்லாய் கேள்;

௧௫ ஆய்தூவி யனமென வணிமயிற் பெடையெனத்
தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினலம்
மாதர்கொண் மானோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப்
பேதுறூஉ மென்பதை யறிதியோ வறியாயோ ;

௧௯ நுணங்கமைத் திரளென நுண்ணிழை யணையென
முழங்குநீர்ப் புணையென வமைந்தநின் றடமென்றோள்
வணங்கிறை வாலெயிற் றந்நல்லாய் நிற்கண்டார்க்
கணங்காகு மென்பதை யறிதியோ வறியாயோ ;

௨௩ முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த குரும்பையெனப்
பெயறுளி முகிழெனப் பெருத்தநின் னிளமுலை
மயிர்வார்ந்த வரிமுன்கை மடநல்லாய் நிற்கண்டா
ருயிர்வாங்கு மென்பதை யுணர்தியோ வுணராயோ ;

எனவாங்கு;

௨௮ பேதுற்றாய் போலப் பிறரெவ்வ நீயறியா
யாதொன்றும் வாய்வாளா திறந்தீவாய் கேளினி
நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமருந் தவறிலர்
நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறையறைந் தல்லது செல்லற்க வென்னா
விறையே தவறுடை யான்.

இது "காமஞ் * சாலா விளமை யோள்வயி,னேமஞ் சாலா விடும்பை யெய்தி, நன்மையுந் தீமையு மென்றிரு திறத்தாற், றன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்துச், சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல், புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே" என்பதனால்,(௧)தருக்கிச்சொல்லிச் சொல்லெதிர்பெறான் இன்புற்றது.

இதன் பொருள்.

(௨) ஊர்க்கா ணிவந்த பொதும்பரு ணீர்க்காற்

கொழுநிழன் ஞாழன்(௩)முதிரிணர் கொண்டு

கழும முடித்துக் கண்கூடு கூழை

சுவன்மிசைத் தாதொடு தாழ வகன்மதி

௫ தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்

(௪)தீங்கே வருவா ளிவள்யார்கொ லாங்கேயோர்

---

௧. தொல். அகத். சூ. ௫௦. நச். இச்சூத்திரவுரையில் இச்செய்யுளை இளம்பூரணரும் இதற்கு மேற். காட்டினர். தொல். அகத். சூ. ௫௩. இளம்.

௨. "ஊர்க்கா ணிவந்த பொதும்பர்" என்பது (அ) கால் என்னும் சொல் ஏழாம் வேற்றுமைப் பொருட்கண் வந்ததற்கும் (தொல். இடை. சூ. ௨. சே) (ஆ) "கண், கால் முதலியன இட வேறுபாடு உணர வரின் உருபு புலப்படாது பொருள் உணரவரும்" என்று கூறிக் காலென்பது ஊரை யடுத்தலாகிற பொருண்மேல் வந்ததென்பதற்கும் (தொல். வேற். சூ.௨௦.'கண்கால்' தெய்)(இ)கால்என்பது இடப்பொருளைக்காட்டும் உருபாய்வந்ததற்கும்(நன். பெயர். சூ. ௪௫.மயிலை.தோன். ௬௨)(ஈ)கால் என்பது இடப்பொருளாக வேற்றுமைசெய்யும் உருபாய் வந்ததற்கும் (உ) கால் கண்ணுருபின் பரியாய நாமமென்பதற்கும் (நன். பெயரி. சூ.௪௫. விருத்தி. இரா) (ஊ)ஏழாம் வேற்றுமைப்பொருளும் ஏழாம் உருபேற்ற சொல்லின் ஏகதேசமுமாகிய காலென்பது மாறி நில்லாது வந்ததற்கும் (பிரயோக. காரக. ௬) (எ) காலென்பது ஏழாவதன் பொருட்டாய் வந்ததற்கும் (இ-வி. சூ. ௨௫௧) மேற்கோள். (ஏ) "ஊர்க்கால்" என்பது கால் உருபாய் வந்ததற்கு மேற்கோள்.

௩. "முதிரிணர்" (கலி. ௪௪: ௪) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௪. "தடுமாறு வரலுங் கடிவரைவின்றே" என்பதற்கு, 'உவமைக்கட் டடுமாறு வருதல் நீக்கப்படாது; தடுமாறுதலாவது ஐயமுறுதல்; எனவே ஐயநிலையுவமமுங் கண்டுகொள்க" என்றுகூறி 'ஈங்கே வருவாளிவள் ..............கூற்றங்கொல்' என்ற பகுதியை. மேற்கோள் காட்டினர். இளம்; தொல். உவமை. சூ. ௩௭. 'தடுமாறு'

பிரதிபேதம்) * சாலவிளமை
(

(க)வல்லவன் றைஇய பாவைகொ (உ)னல்லா
ருறுப்பெலாங் கொண்டியற்றி யாள்கொல் வெறுப்பினால்

---

க. "சித்ரே நிவேஸ்ய பரிகல்பித ஸத்வயோகா, ரூபோச்சயேந விதிநா மநஸா க்ருதா நு" சாகுந்தலம். "உலக மூன்றினு ணல்லெழி லொருங்கெடுத் தினிதின், மலரின்மேலை யோன் மனத்தினால் வகுத்தவோ வியங்கொல், சிலைகொள் வேனில் வே ளினியதெள் ளமுதினிற் றீட்டி, நலநிறைந்தபூங் கொடிகொன்மற் றெனவுள நயந்தான்" காசி. கங்காளகேது. கக.

உ. (அ) "நல்லார்கணல் லவ்வுறுப் பாயின தாங்க ளுங்க, ளெல்லாமுட னுதமென் றன்ன வியைந்த வீட்டாற், சொல்வாய்முகங் கண்முலை தோளிடை யல்குல் கைகால், பல்வார்குழ லென்றிவற் றுற்படிச் சந்த மானாள்" (தொல். உவம. சூ. உச. 'உவமப்' இளம். மேற்கோள்.) (ஆ) "அருங்கல மகளிர்க் கேற்ற வழகெலாந் தொகுத்து மற்றோ, ரிருங் கலி யுலகங் காணப் படைத்தவ னியற்றினான்கொ, லொருங்கலர்ந் துலகின் மிக்க மகளிர துருவ மெல்லாம், பெருங்கல வல்கு றன்பாற் புகுந்துகொல் பெயர்ந்த தென்றான்" (சூளா. கல்யாண. கசுக) என் பவைகளும்: (இ) "காயுமனைத்து நீர், யாருள்ளி நோக்கினீ ரென்று" (குறள் கஙஉ௦:) என்புழி 'என் அவயவமனைத்தும்நோக்கினீர், அவற்ற தொப்புமையான் எம்மகளிரை நினைந்து என்று சொல்லி வெகுளா நிற்கும்' எனப்பொருளும் 'யான் எல்லா அவயவங்களாலும் ஒருத்தி யோடொத்தல் கூடாமையின் ஒன்றால் ஒருவராகப் பலரையும் நினைக்கவேண்டும். அவரெல்லாரையும் யானறியச் சொல்லுமின்' என்னுங் கருத்தால் "அனைத்து நோக்கினிர் யாருள்ளி" என்றாள். என விசேடவுரையும் எழுதியிருத்தலும் (ஈ) "கரும்பேதேனே" (சீவக. உசுருங) என்புழி, தேனென்பதற்கு 'நல்லாருறுப்பெல்லாங் கொண் டியற்றலிற்றேன்' என்றுவிசேடவுரைஎழுதியிருத்தலும்(உ) "ஆரிடைச் சென்றுங் கொள்ளவொண்ணிலா வழகு கொண்டாள்"(ஊ) "இழைகுலா முலையி னானை யிடையுவா மதியி னேக்கி, மழைகுலா வோதி நல்லார் களிமயக் குற்று நின்று, குழைகுலா நயனத் தார்மாட் டொன் றொன்றேவிரும்பற் கொத்த, தழகெலா மொருங்கேகண்டால் யாவரே யாற்ற வல்லார்" (எ) "பெண்களா னார்க்கு நல்ல வுறுப்பெலாம் பெருக்கினீட்ட,வெண்களாலளவாமானக்குணந்தொகுத்தியற்றினானை" கம்ப நீர்விளையாட்டுப். கஎ. கோலங்காண் உ௦; மாயாசனக. ரு; (ஏ) "திருவு மாரவே ளிரதியுந் திலோத்தமை யென்ன, மருவு தையலு மோகினியென்பதோர் மாது, மொருதனித்திருவடிவுகொண்டாலென வுலகிற், பொருவின் மாயவள் பேரழ குருக்கொடு போனாள்" கந்த. மாயைப். கங.(ஐ) "உருவெழில் வனப்புவாய்ந்தவொருத்தியைத் தருவா

(க)வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொ லாண்டார்
கடிதிவளைக் காவார் விடுதல் கொடியியற்

---

னெண்ணிப், பெருகிய வுலகின் மாந்தர் பிறங்கெழில் வேறு வேறு, மருவிய வழகிற் காமர் மலிந்தன திலத்தின் வாங்கித், திருவினு முருவ மிக்குத் திகழ்தரச் சிறப்பிற்செய்தான்" வேதாரண்ய. பிரமதீர்த்த. ௩. என்பனவைகளும் ஈண்டு ஒப்புநோக்கற்பாலன.

க. (அ)"பண்டறியேன்கூற்றென்பதனை யினியறிந்தேன், பெண்டகையாற் பேரமர்க் கட்டு" (குறள். ௧௦௮௩) என்பதும் அதன் பரிமேல். உரையும் (ஆ)"மன்னவன் செங்கோன் மறுத்த லஞ்சிப், பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்ற, மாண்மையிற் றிரிந்துதன் னருந்தொழி றிரியாது, நாணுடைக் கோலத்து நகைமுகங் கோட்டிப், பண்மொழி நரம்பிற் றிவவியாழ் மிழற்றிப், பெண்மையிற் றிரியும் பெற்றியு முண்டென" (இ)"வலைவாழ்நர் சேரி வலையுணங்கு முன்றின்மலர்கையேந்தி, விலைமீனுணக்கற் பொருட்டாக வேண்டுருவங் கொண்டுவேறோர், கொலைவேனெடுங்கட் கொடுங்கூற்றம் வாழ்வ, தலைநீர்த்தண் கான லறியேனறிவேனே லடையேன் மன்னோ" (சிலப். ௭: ௨௧அ - ௨௩, எ: ௧௦) (ஈ) "கன்னி [நீர்] ஞாழல் கமழ்பூங் கானல் யான்கண்ட, பொன்னங் கொடியை யீன்றோ ரில்லை போலுமான், மன்னன் காக்கு மண்மேற் கூற்றம் வரவஞ்சி, யின்ன தொன்று படைத்த தாயி னெவன் செய்கோ" (தொல். செய்யுளி. சூ. ௧௫௫: பே. மேற்கோள்) (உ) "கோமக ளுருவமாய்க் கூற்றம் போந்தது, போமினும் முயிருயக் கொண்டு" (சீவக. ௨௪௫௧.) (ஊ) "வண்ண மேகலைத் தேரொன்று வாணெடுங், கண்ணிரண்டு கதிர்முலை தாமிரண், டெண்ணி வந்த நகையுமுண் டாமெனி, லெண்ணுங் கூற்றினுக் கித்தனை வேண்டுமோ" கம்ப. மிதிலைக்காட்சி. ௧௪௪. (எ) "பெண்ணோ வலளல்லள் பெண்ணுருவு கொண்டிருந்து, மண்ணோர் களையெல்லா மாய்க்க வருங்கூற்றே" இராமா. திக்குவிசயப். ௧எ௬. (ஏ) "வெண்ணிலாக் கதிர்கள் விழுதுவிட் டொழுகும்பிறைவடஞ் சுமந்தற வீக்கி, வண்ண மென் சுணங்கு பூத்தெழுந் தோங்கும் வனமுலைப் பொறையினி லந்தோ, நுண்ணிடை முரியு முரியுமென் றேங்கி நூபுர மரற்றவெங் கூற்றம், பெண்ணுருக் கொண்டு வருதல்போற் பெட்பின் மேனகை யவ்வழிப் பேர்ந்தாள்" கூர்ம. இராமணவதரித்த. ௬௬. (ஐ) "பெண்ணுருக்கொடுயிர்களைப் பெட்பொடு, முண்ணக் கூற்ற மொளியிட் டுறைந்ததே" காசி. காசிப்படலம். ௨௭. என்பனவும் ஒப்புநோக்குக. (ஒ) உருபென்பதன்றி உருவென்பதே வடிவை யுணர்த்திவருமென்பதற்கு, "வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொல்" என்பது மேற்கோள்; தொல். கிளவி. சூ. ௨௪. நச்.

பல்கலைச் சில்பூங் கலிங்கத்த *(க)ளீங்கிதோர்
(௨)நல்கூர்ந்தார் செல்வ †மகள்

எ - து: ஊரிடத்தே வளர்ந்த இளமரக்காவினுள் நீரோடுகின்றகாலிடத்தே நின்ற கொழுவிய நிழலையுடைய ஞாழலினது முதிர்ந்தகொத்துக்களைப் பறித்துக்கொண்டு,பூவும் மயிரும் தம்முண்(௩)மயங்கும்படிமுடித்து வாரிமுடிக்கும்படி தலைகூடினமயிர் தோட்கட்டிலே,தாதோடே சிறிது குலைந்து வீழ, நிறைந்த (௪)மதி இனிய கதிர்களை விட்டாற்போல முகம் ஒளிபொருந்தி,யான் நிற்கின்ற இவ்விடத்தே வருவாளாகிய இவள் யார்தான்? (௫) கொல்லிமலையிலே வல்லவனாலே பண்ணப்பட்ட ஒப்பில்லாத பாவையோ? அன்றி அய

---

க. (அ)காதற் சொல்லுக்கு"ஈங்கிதோர்நல்கூர்ந்தார்செல்வமகள்"என்பதை மேற்கோள்காட்டி, இதனுள் 'இது வென்பது காதல் பற்றிவந்தது' என்பர் தெய்வச்சிலையார்; தொல். கிளவி. சூ. ௫௫. 'குடிமை'

௨. "நல்கூர்ந்தார் செல்வமகள்" கலி. ௫0: ௧௪.

௩. தொல். உரி. சூ. ௫௩. உரையில் இவ்வுரைகாரர், "கழுமமுடித்துக் கண்கூடு கூழை" என்பதனை மேற்கோள் காட்டி, கழுமென்னும் உரிச்சொல் திரட்சியை உணர்த்துதல், 'கூறிய கிளவி' என்பதனாற் கொள்க வென்று வேறு பொருளெழுதி யிருக்கின்றார். இ - வி. உரைகாரரும் திரட்சிஎன்னும்பொருளில்வருதற்கே மேற்.காட்டினர். இ-வி.சூ.௨௬0.

௪. "மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற், காதலை வாழி மதி" (குறள். ௧௧௧௮) என மாறிவருதலுங் காண்க.

௫. (அ) "கொல்லிக் குடவரைப், பூதம் புணர்த்த புதிதியல் பாவை, விரிகதி ரிளவெயிற் றோன்றி யன்னநின், ஞெய்நலம்" நற். ௧௯௨: ௮ - ௧௧. (ஆ) "கொல்லிக், கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய, நல்லியற் பாவை யன்னவிம், மெல்லியற் குறுமகள்" (இ) "கொல்லிக் குடவரைப், பாவையின் மடவந்தனளே" குறுந். ௮௯, ௧00. (ஈ) "கொல்லி, யொளிறுநீ ரடுக்கத்து வியலகம் பொற்பக், கடவுளெழுதிய பாவையின், மடவது மாண்ட மாஅ யோளே" (உ) "கொல்லி, நிலைபெறு கடவுளாக்கிய, பலர்புகழ் பாவை யன்னநின்னலனே" அகம். ௬௨: ௧௩-௧௬, ௨0௯: ௧௫-௭. என்பவற்றாற்கொல்லிப்பாவை தன் பேரழகினால் அழகிய மகளிர்க்கு உவமைகூறப்படுதல் தெற்றென விளங்கும். (ஊ) "செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை, செல்சுடர்ப் பசுவெயிற் றோன்றியன்ன, செய்யர்" மது ௪௧0, ௧௨. (எ) "தாவி னன்பொன் றைஇய பாவை, விண்டவ ழிளவெயில் கொண்டுநின் றன்ன, மிசுகவினெய்திய..........அரிவையை" அகம். ௨௧௨: ௧ - ௮. என்பவற்றிற் குறித்த பொற்பாவையும் (ஏ) "பாவை யன்னவென் னாய்தொடி மடந்தை" ஐங். ௩௮௬. (ஐ) "பாவை யன்ன மகளிர்" பதிற். ௮௮: ௨௬. (ஒ) "பாவை யன்ன பலராய் மாண்கவின், பண்டையிற் சிறக்கவென்

(பிரதிபேதம்) * இங்கிதோர் † மகள் இவளைச்...........நல்லாய்கேள்எ-து. ஊரிடத்தே,

னாலே நல்லமகளிருடைய உறுப்புக்களெல்லாவற்றையும் ஒருங்குகொண்டு ஒரு வடிவாகப் பண்ணப்பட்டாளொருத்தியோ ? அன்றி ஆடவர்மேலுள்ள வெறுப்பாலே தன்னைக்கூற்றமென்று அறியாதபடி மறைத்துப் பெண்வடிவுகொண்டு வந்ததோர் *கூற்றமோ ? இந்நிலையை ஓர்ந்துபாராய்; கொடிபோன்ற நடக்கத்தினையும்(௧)எண்கோவையாகிய மேகலையையும்சிலபூத்தொழிலையுடையகலிங்

---

மகட்கென" அகம். ௬௮: ௧௨ - ௧௩.(ஏ)"பாவை யன்ன குறுந்தொடி மகளிர்" புறம். ௨௫௧: ௨. என்பவற்றிற் குறித்த பாவையும் இதுவே போலும். (ஔ) இப்பாவை தெய்வத்தாற் செய்யப்பெற்றதென்பது இக்குறிப்பில் (அ, ஆ, ஈ, உ) என்பவற்றின் பின்னுள்ளவற்றாலும் (ஃ) "தெய்வப்பாவை"என்பதற்கு 'தெய்வத்தாற் செய்த கொல்லிப்பாவை' (சீவக. ௬௫௭) என்று எழுதியிருக்கும் உரையாலும் அறியலாகும். (அஅ) "பாவையிற், போத லொல்லாளென் னெஞ்சத்தானே" நற். ௨௦௧: ௧௧ - ௧௨. (ஆஆ) "ஒப்பரும் பாவைபோன்று உறையும் - அவனுக்குக் கொல்லிப்பாவைபோலே தங்கும்; வேறு கருத்துச்செல்லாமல் தன்னையே கருதுவித்தலின் பாவையென்றார்" (சீவக. ௧௬௭) (இஇ) "வாக்கமை பாவையொப்பார் - நீங்கலாகாமையிற் கொல்லியம்பாவையன்னாராய்" சீவக. ௬௬௭. என்பவற்றால் இது கண்டவர் மனத்தைக் கவரும் இயல்பினதென்பது புலனாகும். (ஈஈ)இப்பாவை காமுகரைக் கொல்லும் இயல்புடைமையாற் கொல்லியெனவும் இஃதிருக்கு மலை கொல்லிமலையெனவும் முன்பு பெயர்பெற்றதென்றும பின்பு இம்மலையே கொல்லியெனப் பெயர்பெற்றதென்றும் பெரியார் கூறுவர். (உஉ) "கொல்லிப்பா வைக்கிணையாய் நின்றதெவன் கோகனக, வல்லிப்பா வைக்கிணையா வாய்" (மாறனலங்காரம். மேற்கோள். ௨௦௨) என்புழி, கொல்லிப்பாவை என்பதற்கு, காமுகரைக் கொல்லும்பாவை என்று எழுதியிருக்கும் உரையும் ஈண்டறிதற்பாலது. (ஊஊ) "கொல்லித், தெய்வங்காக்குந் தீதுதீர்நெடுங்கோட், டவ்வெள் ளருவிக் குடவரை யகத்துக், கால்பொரு திடிப்பினுங்கதழுறைகடுகினு, முருமுடன்றெறியினுமூறுபல தோன்றினும், பெருநிலங் கிளரினுந்திருநலவுருவின், மாயா வியற்கைப்பாவையின்" என்பதனால் இதன் வியக்கத்தக்க பெருமை அறியப்படும். (எஎ) "செருவெங் கோல மவுணர் நீங்கத், திருவின் செய்யோ ளாடிய பாவையும்" (சிலப்: ௬: ௬௦ - ௧) என்பதற்கு 'அவுணர் வெவ்விய போர்செய்தற்குச் சமைந்த போர்க்கோலத்தோடு மோகித்து வீழும்படி கொல்லிப்பாவை வடிவாய்ச் செய்யோளாகிய திருமகளால் ஆடப்பட்ட பாவையென்னும் ஆடலும்' என்று எழுதியிருக்கும் உரை இப்பாவையின் அழகாற்றலை நன்கு அறிவிக்கும்.

௧. கலை யென்பதை மேகலையென்பதன் முதற் குறையாகக்கொண்டு எண்கோவையாகிய மேகலையென்றார் போலும்; (அ) "எண்கோவை

பிரதிபேதம்) *கூற்றமோவென வையுற்று இந்நிலையை

-கத்தையுமுடையளாயிருந்தாளாதலால் இவ்வூரிடத்துப் பிள்ளையால்*மிடிப்பட்டாருடைய செல்வத்தையுடைய மகள்சாண்; இவளைக் காத்துப்போந்தவர்கள் இப்பொழுது காவாராய்ப் புறப்படவிடுதல் †கொடிது; எ - று.

(க)இவளைச், (உ)சொல்லாடிக் காண்பேன் றகைத்து
நல்லாய் கேள்

எ - து: இனி இவளை நல்லாய்! யான் கூறுகின்றதனைக்கேள் என்று போகாமல் தடுத்து வார்த்தைசொல்லிப் பார்ப்பேன்; எ - று.

இஃதுஐயுற்றுத்துணிந்து நெஞ்சொடு கூறியது.(௩)மேகலையானும்கலிங்கத்தானும் ஐயம் நீங்கி மகளென்று துணிந்தான், ‡மனைக்கிழத்தியாக யான் கோடல்வேண்டுமெனக்கருதி. (௪) மருந்துபிறிதில்லாப் பெருந்துய ரெய்தினு ளுதலின் இங்ஙனம் ஐயமும்நிகழ்ந்தது. இவ்வகை உவமைகள் "வேறுபட வந்த வுவமத்தோற்றங், கூறிய மருங்கிற் கொள்வழிக் கொளாஅல்"(௫) என்பதனாற்

---

மேகலை காஞ்சி யெழுகோவை, பண்கொள் கலாபம் பதினாறு - கண் கொள், பருமம் பதினெட்டு முப்பத் திரண்டு, விரிசிகை யென்றுணரற் பாற்று" (ஆ) "எண்கோவை மேகலை காஞ்சி யிருகோவை, பண்கொள் கலாபமிரு • பத்தொன்று - கண்கொள், பருமம் பதினன்கு முப்பத் திரண்டு, விரிசிகை யென்றுணரற் பாற்று" என்னும் வெண்பாக்களுள் ஒன்று இதற்கு ஆதாரமாகுமெனினும், (இ)"எண்கோவை காஞ்சி யெழு கோவை மேகலை, பண்கொள் கலாபம் பதினாறு-கண்கொள், பருமம் பதினெட்டு முப்பத் திரண்டு, விரிசிகை யென்றுணரற் பாற்று" என்னும் வெண்பாவை (புறநா. கசு. உரை.) மேற்கோள்காட்டி, அந்த முறையையே பிறவிடத்தும் வற்புறுத்தும் இவர் கருத்துக்கு மேகலை எண் கோவையுடைய தென்பது மாறுக உள்ளது.

க. "இவளைச் சொல்லாடிக் காண்பேன் றகைத்து" என்பது பாட்டிடை வைத்த பொருட்குறிப்பாகிய உரைவகை நடைக்கு மேற்கோள். தொல். செய். சூ. கசுசு: 'பாட்டிடைவைத்த' இளம்.

உ. "சொல்லாடச் சோர்வுபடும்" குறள். ௪௦௫.

௩. (அ) "நாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழை............சூரர மகளிர்" முருகு. க௮ - ௪௧. (ஆ) "அழ லோடாப்பொற் பூணுமில்.........விளக்கனை யார்க்கிடம் வேறில்லை மேதினியே" திருவாவடுதுறை. ௩. என்பவையும் (இ) "கோபத்தன்ன தோயாப்பூந்துகில்" முருகு. கரு என்பதும் காண்டறியத்தக்கன.

௪. "மருந்துபிறி தில்லையா னுற்ற நோய்க்கே" நற். ௮௦: க.

௫. தொல். உவம. சூ. ௩உ.

(பிரதிபேதம்) * மிடிபட். † கொடிது; இனி இவளைநல்லாய்............சொல்லிப் பார்ப்பேனென்றுநெஞ்சொடுகூறினன். மேகலையசங்காய். ‡ மனைக்கிழத்தியாகக்கோடல்

கொண்டாம்.“அவ்வ*மாக்களும் விலங்கு, †மன்றிப், பிறவவண்வரினுந் திறவதி னுடித், தத்த ‡மியலின் மரபொடு முடியி,னத்திறந் தானே துறையெனப்படு மே” (க)என்பதனால், ஞாழன்முடித்தானெனநெய்தற்றலைவி ||போலவும்ஊர்க் காணிவந்தபொதும்ப ரென்றதனன் மருதத்துக் கண்டான் ÷போலவுங் கூறிக் குறிஞ்சிப் பொருளாகிய புணர்த =னிமித்தம் பொருளாக முடித்தான் ∴இவ்வாறு மயங்கினும் குறிஞ்சித்துறைப்பாற்பட்ட துறையுறுப்பான் வந்த தென்க.

கரு (உ)ஆய்தூவி யனமென வணிமயிற் பெடையெனத்
(௩) ×தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினல

---

க. தோல். செய். சூ. உ௦௧. இச்சூத்திரத்துப் பேராசிரியருரையினும் நச்சினார்க்கினியருரையினும் (இ - வி. சூ. ௫அ௩.) இலக்கண விளக்க வுரையினும் இச்செய்யுளேமேற்கோளாக இவ்விசேடக்குறிப்பு, சிறிது வேறுபட வரையப்பெற்றிருக்கின்றது.

உ. (அ) “உரிப்பொருளல்லன மயங்கவும்பெறுமே” என்புழி, “ஆய்தூவி ..................அறியாயோ” என்பதை மேற்கோள் காட்டி, இது நிலம் வரையாது வந்த கைக்கிளை; இதனைக்குறிஞ்சியிற் கோத்தார் புணர்ச்சியெதிர்ப்பாடாகலின்; என (தோல். அகத். சூ. க௩. நச்.) நச்சி னார்க்கினியரும். (ஆ) ஒருதலைக் காமம் விரவியும் வரூஉம் என்புழி இதனை மேற்கோள்காட்டி, ‘குறிஞ்சித்திணையோடு கைக்கிளைமயங்கி வந்தது’ என (இ - வி. சூ. ௩௧௫.) இ-வி. உரைகாரரும், எழுதியிருப் பன ஈண்டறியத்தக்கன. (இ) “ஆய்தூவி யன்னம்” கலி. ௬௧: ௬. (ஈ) “ஆய்தூவிமடவனமே” நைடத. அன்னத்தைத் தூது. ௧௦. ௧௦௭.

௩. (அ)எனவெனெச்சத்தால் உவமம் வந்ததற்கு, “தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினலம்” என்பது மேற்கோள் (தோல். உவம. சூ. ௧௧. பேர்)(ஆ)“தூதுணம் புறவொடு” பட். ௫அ.(இ)“பொறி வரிப் புறவின் செங்காற் சேவல், சிறுபுன் பெடையொடு சேட்புலம் போகி, யரிமண லியவிற் பரறேர்ந் துண்டு” அகம். உ௭௧: ௧ - ௩. (ஈ) “கல்லுண்டு கடிய வெம்புங் கானுறை புறவ மெல்லாம்” சீவக. ௧௪௩௦. (உ) “நுண்பொறிப் புறவின் செங்காற் சேவல், வெண்சிறைப் பெடையொடு விளையாட்டு விரும்பி, வன்பாலார்ந்த வயிற்ற வாகி” பெருங். (௧) ௫உ: ௪௬-அ. (ஊ) தூதுணம் புறவைக தேண் டோ வறக், காதலந் துணையொடு கழுமிப் புல்லுவ” (எ) “கல்லிரை தேரி னும்வீழ்துணை நீங்கிற் கபோதகரோ, யல்லிரையோத மனையது” தணிகை. திருநாட். ௫உ, களவுப். ௬௦௧. (ஏ) “கல்லிரை தேருவ

(பிரதிபேதம்) * மக்களும் † இன்றிப் பிறவரைவரினும் ‡ இயலான் || போலக்கூறி ஊர்க்கா, ÷ போலக்கூறிக்குறிஞ்சி, = நிமித்தமும் பொருளாக ∴ அவ்வாறு. × தூதுணும்.

(க)மாதர்கொண் மானோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப்
பேதுறூஉ மென்பதை யறிதியோ வறியாயோ.

எ-து: கண்டார் காதல்கோடற்குக் காரணமாகிய மான்போலும் நோக்கத்தினையும் மடப்பத்தினையுமுடையநல்லாளே! சூட்டுமயிரினையுடைய (உ)அன்னமென்ன, அழகினையுடைத்தாகிய *பெடையினையுடையமயிலென்ன, கல்லையுண்கின்ற அழகிய புறவென்ன, நடையும் சாயலும் மடப்பமுமாகியநலம் நெருங்கின நின்னுடைய இவ்வெழில் நின்னைக் கண்டவர்களை மயக்கமுறுத்துமென்னும் நிலைமையை நீதான் அறிவையோ? அறியாயோ? எ - று.

இது நிலம்வரையாது வந்த கைக்கிளை. மயிலும் †பிறவுஞ்சினையொடுசினையுவமம்.

௧௬ நுணங்கமைத் திரளென நுண்ணிழை யணையென
முழங்குநீர்ப் புணையென வமைந்தநின் றடமென்றோள்
வணங்கிறை வாலெயிற் றந்நல்லாய் நிற்கண்டார்க்
கணங்காகு மென்பதை யறிதியோ வறியாயோ

எ-து: வளைந்தமுன்கையினையும் வெள்ளிய எயிற்றினையுமுடைய அழகிய நல்லாளே!(௩)நிறத்தாலுந் திரட்சியாலும் புகரினது நுண்மையையுடைய மூங்கிலென்ன, (௪)மென்மையால் நுண்ணிய துகிலினையுடைய அணையென்ன, (௫) காமக்கடலைநீந்துதற்குத் தெப்பமாதலான் முழங்குநீரைக்கடக்கும் (௬) வேழங்

கபோத கங்களே" திருவானைக்கா. நாட்டுப். ௧௪௧. (ஐ) "சிறுகல்லிரை தேரும்................புறாவினமே" விநாயக. திருநாட்டு. ௪௪. (ஒ) "ஒண்ஙேதை யுண் புறவீர்"

க. (அ)மாதர் என்பது காதலென்னுங் குறிப்பினை யுணர்த்தற்கு, 'மாதர் கொண் மானோக்கின் மடநல்லாய்" என்பது மேற்கோள்; தொல். உரிச். சூ. ௩. நச். நன். உரி. சூ. ௧அ. இரா. இ - வி. சூ. ௨௬0. (ஆ) "மாதர் கொண் மானோக்கின் மடந்தை" கலி. ௬௧: ௪.

உ. (அ) "மடவன நடையுங், களிமயிற்சாயலும்" சிலப். அ: அ௬-எ. (ஆ) "புறாவை வென்றொளிர் பொற்புடைப் பூமகள்"விநாயக.அங்காரக.௬.

௩. "இளவேய் நிறத்தானு மேய்க்கும்...........அரியேறுகைப்பா டோள்" தண்டி. சூ. ௩௧. மேற்கோள்.

௪. (அ) "அணை புரைமென்மை யமைபடு பணைத்தோள்" பெருங். (உ) ௧௫: எஉ. (ஆ) "வேயினைக் கரும்பை மெல்லணையைச், சருவிடப் பசந்து திரண்டுமென்மையவாய்த் தழைத்தெழில் பிறங்கியதோளாள்" சீறா. நுபுவ்வுத்துக். தசைக்கட்டியைப் பெண்ணுரு, உ௬,

௫. "கொடியஞரை...........காம, நீத்துநீர்க் கடலை நீந்தும் புணையென விடுத்தல் செல்லார்" சீவக. உஅ0௪.

௬. (அ) "வேழ வெண்புணை தழீஇ" (ஆ) "வேழத்துப் புணை துணையாகப், புனலாடு மேகண்மை யனைத்தே" அகம். ௬: அ; ௧அ௬: அ - ௬.

(பிரதிபேதம்) * பெடைமையினையுடைய † புறவுஞ்சினையொடு,

கோலாற்செய்த தெப்பமென்ன, பொருந்தின நின்னுடைய பெருமையை யுடைய மெல்லிய(௧)தோள்கள் நின்னைக்கண்டவர்களுக்குவருத்தமாமென்னும் நிலைமையை நீதான் அறிவையோ? அறியாயோ? எ - று.

௨௩(௨)முதிர்கோங்கின்(௩)முகையெனமுகஞ்செய்தகுரும்பையெனப்
பெயலுளி முகிழெனப் பெருத்தநின் னிளமுலை

---

௧. "தோளுமுடைய வாலணங்கே" நற்.39:11

௨. (அ) வேறுபட வந்த வுவமத் தோற்றத்துக்கு "முதிர்கோங்கின்......... இளமுலை" என்பதனை மேற்கோள் காட்டி, முதிர்கோங்கும் முற்றிய குரும்பையும் பெரியவாகலின் அவைபோலப் பெருத்த நின் இளமுலை யென்றல் ஒத்தது, பெயலுளி முகுளஞ் சிறிதாக இவற்றோடு அதனை உடன்கூறி அப்பெயலுளி முகுளத்திற் கில்லாத பெருமைக்குணம் பொருட்குப் பின்னர் விதந்து கூறுதலின் அதுவும் வேறுபட வந்த வுவமை யாயிற்று என்பர் நச்; தொல். உவம. சூ. ௩௨, (ஆ) கலியடி பதினேழெழுத்தான் வந்ததற்கு "முதிர்கோங்கின்........... குரும்பையென" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. ௫௫. 'அளவடி' இளம். (இ) "முதிர்கோங்கின் முகை" என்பது குற்றுகர வீறு இன்பெற்று வருதற்கு மேற்கோள். (தொல். குற். சூ. ௭௮.) (ஈ) "யாணர்க் கோங்கி னவிர்முகை யெள்ளிப், பூணகத் தொடுங்கிய வெம்முலை" சிறுபாண். ௨௫ - ௬. (உ) "முலையேர் மென்முகை யவிழ்ந்த கோங்கின்" நற்). ௪௨. (ஊ)"கோங்குமுகைத்தன்ன குவி முலை" அகம். ௨௪௦: ௧௧. (எ)கோங்கின் முழுவனைப் பெய்திய முற்று விளமுலை" புறம். ௩௩௬: ௯-௧௦.(ஏ) "கோங்கரும் பன்ன முலையாய்" நாலடி. ௪௦௦,(ஐ) "கோங்கேர்முலைப் பூந்திருவே" சிறுபஞ்ச. ௪௫.(ஒ) "அரும்பெறற்காதலோ டணிநமக் காகிய, மருங்குலுமாக்கும்வருந்தப் போந்த, கருங்கண் வெம்முலை யரும்பினழித்து, வண்பொற் றட்ட மலர்ந்தவாதலி, னண்பிற் கொத்தில நம்மோ டிவையெனக், கோங்கங் குறுகல் செல்லாரியல" பெருங். (௨) ௧௨: ௧௦௦ - ௫. (ஓ) "மின்னிகர் மருங்குற் பிறைநுதற் கனிவாய் வெண்ணகைக் கருங்குழலவடான், பன்னிரு பருவ மடைந்துபைங் கோங்கின் பனிமுகை யெனமுலை முகிழ்த்தாள்" பிரமோத்தர. உமாமகேசுவரபூசை. ௩. (ஔ)"யாணர்க் கோங்கின் மென்முகிழ்முலை" பாக. (௧௦) கோவியர். ௧௩. (ஃ) "யாணர்க் கோங்கின் குவிமுகையெள்ளிப், பூணகத் தொடுங்கியமுலை" ஞானமிர்தம்...... (அஅ)"கோங்கிற் குவிந்து பணைத்தமுலை" உத்தர கோச. தீர்த்தச்சிறப்பு. ௨௯. (ஆஆ) "அலர்முலை யதரநே ரான கோங்கமு, மிலவமு மெல்லடி யினைவுறுவகைத், தலைவனோடவ்வுழிச் சார்ந்தின்புற, நிலைபெறு பஞ்சியி னெறிக ரேர்க்குமே" திருவானைக்கா. திருநாட்டு. ௧௦௮.

௩. "முலைமுகஞ் செய்தன" அகம். ௭: ௧.

(௧)மயிர்வார்ந்த வரிமுன்கை மடநல்லாய் நிற்கண்டா
ருயிர்வாங்கு மென்பதை யுணர்தியோ வுணராயோ

எ - து: மயிர்நேரிதானவரிகளையுடைய முன்கையினையும்மடப்பத்தினையு முடைய நல்லாளே! முற்றின கோங்கமரத்தினது இளையமுகையென்ன, *அடிவரைந்துகட்புலனுன(௨)குரும்பையென்ன, பெய்தற்றொழிலையுடையமேகத்தின் றுளியாலுண்டான(௩)மொக்குளென்ன, பெருத்த நின்னுடைய இளைய முலைகள் நின்னைக் கண்டவர்களுடைய உயிரை வாங்கிக்கொள்ளுமென்னும் நிலைமையை நீதான் அறிவையோ? †அறியாயோ? எ - று.

எனவாங்கு

எ - து: என்று யான் கூறுகிற்க; எ - று.

ஆங்கு, அசை.

௨அ (௪)பேதுற்றாய் போலப் பிறரெவ்வ நீயறியா
‡யாதொன்றும் (௫)வாய்வாளா திறந்தீவாய் கேளினி
(௬)நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமருந் தவறிலர்

---

௧. "மயிர்வார் முன்கை" ஐங்குறு. ௨௧௮.

௨. (அ) "குரும்பை மென்முலை" அகம். ௨௫௩. ௨௨. (ஆ) "குரும்பையங் கொங்கைநாகர் கோதையர்" கம்ப. களியாட்டுப். ௨. (இ) "குரும்பை மென்முலையார்" நைடதம். நாட்டு. ௧௧. (ஈ) "குரும்பைமுலை வள்ளி" திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்.........(உ) "குரும்பை போற்கிளர் குவிமுலைக் கௌசியோடு" உத்தரகோச. பார்ப்பதிதவம். ௫௬.

௩. "கோங்கரும்பு பந்து கொலைச்சூது தாளமொக்குள்" இரத்தினச். ௧௭.

௪. (அ) "பேதுறலஞ்சி" அகம். ௪: ௧௧; (ஆ) "பாவை பேதுற" சீவக. ௧௩௬௪; (இ) "பேதுறவு மொழிந்தனள்" (ஈ) "பெரும்பே துற்றதும்" சிலப். ௧௨: ௫௧, ௧௩: ௬௬; (உ) "பெரும்பேதுற்று விளியும்" பெருங். (௨) ௨௦: ௨௮.

௫. (அ) "வாய்வாளா நின்றாள், செறிநகை" பரி. ௨௦: ௪௬ - ௭; (ஆ) "வாய்வா ளேனிற்ப" கலி. ௬௫: ௧௫.

௬. (அ) "நீயுந்தவறிலை..........தவறுடையான்" என்பது சொல்லுவான் குறிப்பினாற் பொருளறிய வந்தமைக்கும் (நன். பெயரியல். சூ. ௧௨. மயிலை) (ஆ) "நீயுந்தவறிலை ..... .....தவறிலர்" என்பது திணையும் பாலும்விளங்கலில்லாதசொற்களுள் நீயென்பது குறிப்பாற்பெண்பாலுணரநிற்றற்கும் (தொல். பெயரி. சூ. ௩௧. நச்; சூ. ௩௭. 'இன்ன பெயரே' தெய்.) மேற்கோள். (இ) "நீயுந் தவறிலை நின்கை யிதுதந்த,

(பிரதிபேதம்) * வடிவு வரைந்து. † அறியாயோ ஆங்கசை பேதுற்றாய். ‡ யாதொன்று மலவாதிறந்தீவாய்,

(௧)நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
(௨)பறையறைந் தல்லது செல்லற்க வென்னா
விறையே தவறுடை யான்

எ-து:*நீ மயக்கமுற்றாய்போலே பிறருடைய வருத்தத்தை அறியாயாய்க் கேட்டார்க்கு யாதொன்றுஞ் சொல்லாயாய்க் கழிந்துபோகின்றவளே! இப்பொழுது யான் கூறுகின்றதனைக் கேள்; நீயும் குற்றமுடையையல்லை; நின்னை இற்புறத்தே புறப்படவிட்ட நம்முடைய சுற்றத்தாரும் குற்றமுடையரல்லர்; குற்றமுடையான் யாவனென்னில்,(௩)நிறையழிந்தகொல்கின்ற(௪)யானையை நீர்க்குவிட்டாற் பறைசாற்றிச் செல்லுமாறுபோல, பறைசாற்றிச் செல்வ

---

பூவெழிலுண்க ணவளுந் தவறிலள், வேனிற் புனலன்ன நுந்தையை நோவார் யார், மேனின்று மெள்ளி யிதுவிவன் கைத்தந்தா, டான் யாரோ வென்று வினவிய நோய்ப்பாலேன், யானே தவறுடையேன்" கலி. ௮௪: ௩௬ - ௪௧. (ஈ) "வந்தோன் கொடியனு மல்லன் றந்த, நீதவ றுடையையு மல்லை நின்வயி, ஞெ வரும்படர் செய்த, யானே தோழி தவறுடை யேனே" அகம். ௭௨: ௧௯-௨௨.

௧. "நிறையழி யானை நெடுங்கூ விளியும்" மணி. ௭: ௬௭.

௨. (அ) "வெரூஉப் பறை நுவலும் பரூஉப் பெருந் தடக்கை, வெருவரு செலவின் வெகுளி வேழம்" பொருந. ௧௭௧ - ௨. (ஆ) "தெண்கிணை முன்னர்க் களிற்றி னியலி" புறம்: ௭௯: ௩. (இ) "பாகும் பறையும் பருந்தின்பந்தரு,மாதுல மாக்களுமலவுற்றுவிளிப்ப" மணி. ௪:௪௧-௨. (ஈ)"பறை நிறை கொல்யானை" (உ)"அறைபறை யானை" முத்தொள். (ஊ) "பறைவன் களிற்றுப்......பாஞ்சாலர்க்கு" வில்லி. சூது. ௨௨௫.

௩. யானைக்கு நிறையுடைமையாவது: "இருநிலநனைப்பவிழிதருகடாத்துக் கைம்மிகக் களித்த கவுள தாயினுஞ், செயிர்கொண் மள்ளர் செருவிடத் தல்ல, துயிர்நடுக் குறாமை" பெருங். (௧) ௩௮: ௧௧௮ - ௧௨௧. யானை நிறையழிதல்: "காழோர் கையற மேலோரின்றிப், பாகின் பிளவையிற் பணைமுகந் துடைத்துக், கோவியன் வீதியுங் கொடித்தேர் வீதியும், பீடிகைத் தெருவும் பெருங்கலக்குறுத்து................பாகும் பறையும் பருந்தின் பந்தரு, மாதுல மாக்களு மலவுற்று விளிப்ப, நீல மால்வரை நிலனொடு படர்ந்தெனக், காலவேகங் களிமயக்குற்றென" "நீல யானை மேலோ ரின்றிக், காமர்செங்கை நீட்டிவண்டுபடு, பூநாறு கடாஅஞ் செருக்கிக் கால்கிளர்ந்து, நிறையழி தோற்றமொடு தொடர" என (மணி.௪: ௩௫-௪௪, ௧௯: ௨௦-௨௩.) வருவனவற்றால்அறியலாகும்.

௪. "கையது கையோ டொருதுணி கோட்டது, மொய்யிலைவேன் மன்னர்முடித்தலை-யைய, வுயர் பொய்கை நீராட்டிச் செல்லுமே யெங்கோன், வயவெம்போர்மாறன் களிறு" தொல். புறத். சூ.௧௭. நச்.மேற்.

(பிரதிபேதம்) * என்றியான் கூறுநிற்க நீ மயக்க,

தல்லது பறைசாற்றுமற் செல்லாதொழிகவென்று சொல்லாத இறைவனே யென்க; எ - று.

இதனால், தலைவற்கு அசைவென்னும் அழுகை பிறந்தது.

இது புணர்த நிமித்தமாதலிற் *குறிஞ்சியுட்கோத்தார். இது தான் உயிர்கொடுத்தானாகத் தனது நன்மைகூறி அவள் † தீங்குங் கூறினான்.

இது முன் ஒரு நெடுவெண்பாட்டும் ஓர் அம்போதரங்கமும் தனிச்சொல்லும் ‡ தாழிசையும் பின்னும் ஒரு தனிச்சொல்லும் வெள்ளைச்சுரிதகமும் பெற்றுவந்த கொச்சகக்கலிப்பா. (உ௦)

(௫௭.)வேயெனத் திரண்டதோள் வெறிகமழ் வணரைம்பான்
மாவென்ற மடநோக்கின் மயிலியற் றளர்பொல்கி
யாய்சிலம் பரியார்ப்ப வவிரொளி யிழையிமைப்பக்
கொடியென மின்னென வணங்கென யாதொன்றுந்
தெரிகல்லா விடையின்கட் கண்கவர் பொருங்கோட
வளமைசா லுயர்சிறப்பி னுந்தைதொல் வியனக
ரிளமையா னெறிபந்தோ டிகத்தந்தாய் கேளினி ;

அ பூந்தண்டார்ப் புலர்சாந்திற் றென்னவ னுயர்கூடற்
றேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற வமருண்க
ணேந்துகோட் டெழில்யானை யொன்னாதார்க்கவன்வேலிற்
சேந்துநீ யினையையா லொத்ததோ சின்மொழி;

கஉ பொழிபெயல் வண்மையா னசோகந்தண் காவினுட்
கழிகவி னிளமாவின் றளிரன்ன யதன்றலைப்
பணையமை பாய்மான்றே ரவன்செற்றார் நிறம்பாய்ந்த
கணையினு நோய்செய்தல் கடப்பன்றோ கனங்குழாய்;

கசு வகையமை தண்டாரான் கோடுயர் பொருப்பின்மேற்
றகையிணர் ரிளவேங்கை மலரன்ன சுணங்கினாய்
மதவலி மிகுகடாஅத் தவன்யானை மருப்பினுங்
கதவவாற் றக்கதோ காழ்கொண்ட விளமுலை ;

எனவாங்கு;

உக இனையன கூற விறைஞ்சுபு நிலநோக்கி
நினையுபு நெடிதொன்று நினைப்பாள்போன் மற்றாங்கே
துணையமை தோழியர்க் கமர்த்த கண்ணள்
மணையாங்குப் பெயர்ந்தாளென் னறிவகப் படுத்தே.

---

(பிரதிபேதம்)* குறிஞ்சி யுடனே, † தீங்கு கூறினான். ‡ தாழிசையும் வெள்ளைச்

இதுவும் அது.

**இதன் பொருள்.**

(க)வேயெனத் திரண்டதோள் வெறிகமழ் வணரைம்பான்
(உ)*மாவென்ற மடநோக்கின் †மயிலியற் றளர்பொல்கி
(ங)யாய்சிலம் பரியார்ப்ப வவிரொளி யிழையிமைப்பக்
கொடியென மின்னென ‡வணங்கென யாதொன்றுந்
தெரிகல்லா (ச)விடையின்கட் (ரு)கண்||கவர் பொருங்கோட
÷வளமைசா லுயர்சிறப்பி னுந்தைதொல் வியனக
ரிளமையா னெறிபந்தோ டிகத்தந்தாய் கேளினி

எ-து:(கூ)மூங்கிலென்னும்படி திரண்டதோளினையும்மணம்நாறுகின்றகடைகுழன்ற ஐம்பாலினையும் மானோக்கினைவென்ற மடப்பத்தையுடையநோக்கினையும் மயில்போன்ற சாயலினையுமுடையையாய், அழகிய சிலம்பு உள்ளிடுமணி ஆரவாரிப்ப,விளங்குகின்றஒளியினையுடையகலங்கள்விளங்க,(எ)நுடக்கத்தாற்

---

க. இச்செய்யுள் உள்ளப்புணர்ச்சியுற்ற தலைமகன் வரைதல்வேண்டிப் பாங்கற்குரைத்தற்கு மேற்கோள்; தொல். கள. சூ. எ. இளம்.

உ. (அ)'மாவென்ற மடநோக்கின்' என்பது வினைபயன் மெய்யுருவென்ற வற்றுக்கு உரியனவென்று பாகுபடுத்துணர்த்தப்பட்ட சொற்களன்றி மரபினுன்வரு முவமச்சொல்லுக்கு மேற்கோள். தொல். உவமை. சூ. கஎ. இளம். (ஆ) "மானோக்கின்" (இ) "மாதர்கொண் மானோக்கின் மடந்தை" (ஈ) "மானோக்கி" கலி. ஙo: கo, கூக: ௪, அஎ: சக, (உ) "மானேர் நோக்கின் வளைக்கை யாய்ச்சியர்" தண்டி. சூ. கக. மேற்கோள். (ஊ) "மானேர் நோக்கம்" சிலப். எ: ௪௪. (எ) "மானி னோக்கி" சீவக. ஙருக.

ங. "ஆய்சிலம் பெழுந்தார்ப்ப வஞ்சில வியலுகின்" கலி. ருக: எ.

௪. "இடைவனப்பும்" ஏலாதி. எரு.

ரு. (அ)"கண்கவர் காரிகை" இறை. சூ. எ. மேற்கோள். 'பையுண்மாலைப்' (ஆ)"கண்கவர் வனப்பின்" (இ)"கண்ணுங் கவர்ந்திட வனப்புவாய்ந்த, வொண்டொடி" நைடத. அன்னத்தைத்தூது. கஉ, போர்புரி. ரு.

கூ. (அ) "வேயிற் றிரண்டதோள் வேற்கண்ணாய்" பழ.ங௪.(ஆ) "வேயே திரண்மென்றோள்" (இ) "வேயழத் திரண்டமென்றோள்" சீவக. கூருஉ. உகஉங.(ஈ) "வேயெனத் திரண்டதோள் விளங்குமேனியாள்" சூளா. கல்யாண. உஉo.

எ. "கொடியென நுடங்கி வேளெனக் கரந்து.................மின்னெனப் பிறங்குநுண் ணுசுப்பை" காஞ்சிப். மாசாத்தன். கரு.

(பிரதிபேதம்) * மான்வென்ற. † மயிலியலாற்றளர். ‡ அணங்கென வியாதொன்றும், || கவர் பெருங்கோட. கவர்பெழுந் தேர்ட ÷ வள்மையாலுயர்.

கொடியென்ன (க) விளக்கத்தான் மின்னென்னக் கட்புலனுகாமையின் வருத்தமென்ன யாதொன்றுந்தெரியாத இடையிடத்தே கண்கள்விரும்பிச் சேர ஓட, நின்னுடைய இளமைப்பருவத்தாலே செல்வம் அமைந்த உயர்ந்த தலைமையினையுடைய (உ) நுந்தையுடைய பழமையுடைத்தாகிய அகற்சியை யுடைய மனையினின்றும் அடிக்கின்ற பந்தோடே தளர்ந்து ஒதுங்கிப்புறப் படுதலைச் செய்தவளே! இப்பொழுது யான் கூறுகின்றதனைக் கேள்; எ - று

அ (௩)*பூந்தண்டார்ப் புலர்சாந்திற் றென்னவ னுயர்(௪)கூடற்
றேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற வமருண்க
ணேந்துகோட் டெழில்யானை யொன்னுதார்க் கவன்(௫)வேலிற்
சேந்துநீ யினையையா லொத்ததோ (௬)சின்மொழி

எ - து: சிலவான மொழியினையுடையாய்! பூவினையுடைய குளிர்ந்த மாலையினையும் புலர்ந்த சந்தனத்தினையுமுடைய பாண்டியனது உயர்ந்தமதுரை யிடத்துத் தேன்பரக்கும்படி அவிழ்ந்த நீலத்தினது அலரைவென்ற போரை யுடைய கண்கள் தலையேந்தின கோட்டையும் அழகினையுமுடைய யானை யினையுடைய பகைவர்க்கு அப்பாண்டியன் வேல் மனம் வருத்துமாறுபோலச்

---

க. "மின்னென நுடங்கு மருங்குலும்" (தொல். களா. சூ. கக. மேற்கோள் 'கண்ணொ') என மின், நுடக்கத்தாலும் உவமைகூறப்படுமாயினும் கொடிக்கு நுடக்கங் கூறப்பட்டமையின் விளக்கமட்டுமே கூறினர்.

உ. நுந்தையென்பது முறைப்பெயர் இடமும் நகரம் பற்றுக்கோடும் ஆக வரும் மொழிமுதற் குற்றியலுகரச்சொல்லென்பதும் இதன் முதலே இதழ்குவியாது குறையக் கூறல்வேண்டுமென்பதும் இதழ் குவித்துக் குறுகாதபடி முற்றக் கூறியவழியும் பொருள் வேறுபடாதென்பதும் தொல். மொழி. சூ. ௩௪ - ௫. இள. நச்; உரைகளால் அறியலாகும்.

௩. "பூந்தண்டார்............சின்மொழி" என்பது முன்னோர் கூறிய காமக்குறிப்பினும் செந்துறைப் பாட்டின்கண்வரும் வண்ணப்பகுதி வரைதலில்லையென்பதற்கு, மேற்கோள். தொல். புறத். சூ. உ௨. 'வழங் கியன்' இளம்.

௪. இந்நூற்பக்கம் உ௬௫: க - ஆம் குறிப்புப்பார்க்க.

௫. (அ) "அடுமுரண் முன்பிற் றன்னைய ரேந்திய, வடிவே லெஃகிற் சிவந்த வுண்கண்" புறம். ௩௫0: அ - ௯. (ஆ) "அடையார்த் துரந்த வருந்திற லயிலவன், படைத்தலை பெயர்த்த கறையெஃகம் போலக், கடைசிவந் தனவே கருங்கயன் மழைக்கண்" நாற். சூ. கசள. மேற் கோள்; 'வாள்போழ்' (இ) "புண்டலை வேலினுங் கண்சிவப் பார" (ஈ) "வென்றி வேல்போற்சி வந்து" தஞ்சை. ௬௩, ௬அ.

௬. "சின்மொழி" இந்நூற்பக்கம், கருக: க-ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * பூந்தண்டார் புலர்.

சிவந்து வருத்தஞ்செய்து நீ இத்தன்மையையா யிரா நின்றாய், இது நின் இளமைக்குத் தக்கதோ ; எ - று.

கண்சேர்ந்தினையையென்றது, சினைவினை முதலொடுமுடிந்தது.

கஉ *பொழி(க)பெயல் வண்மையா னசோகந்தண் காவினுட்
கழிகவி னிளமாவின் றளிரன்ன பதன்றலைப்
பணையமை பாய்மான்றே ரவன்செற்றார் நிறம்பாய்ந்த
கணையினு நோய்செய்தல் கடப்பன்றோ கனங்குழாய்

எ - து: பொன்னாற்செய்த குழையினையுடையாய்! பொழிகின்ற பெயல் போலுங் கொடையினையுடைய பாண்டியனது அசோகமரத்தினையுடைய குளிர்ந்த பொழிலிடத்துநின்ற மிக்க அழகினையுடைய இளைய (உ)மாவினது தளிரை யொத்த நிறத்தினையுடையையாய் அங்ஙனம் வருத்துதற்கு மேலே பந்தியிலே நிற்றலமைந்த பாய்ந்துசெல்லுங் குதிரைபூண்ட தேரையுடைய பாண்டியனாற் செறப்பட்டவர்கள் மருமத்தே தைத்த அம்பினுங்காட்டில் நோவைச்செய்தல் உலகிற் கொடுமைகளின் மிக்ககொடுமையன்றோ ? எ - று.

கசு வகையமை தண்டாரான் கோடுயர்(ந)†பொருப்பின்மேற்
றகையிண ரிள(ச)வேங்கை மலரன்ன சுணங்கினாய்

---

க. (அ) "பெயன்மழைத் தடக்கைப்,...............நல்லியக் கோடனை" சிறுபாண். கஉச - கு. (ஆ) "மழைசுரந் தன்ன வீகை நல்கி" மலைபடு. ருஅO. (இ) "அவன், வண்கைபோல் வானம் பொழிந்தநீர்" பரி. உஉ: எ - அ. (ஈ) "வானத்தன்ன வண்மையும்" (உ) "மாரியன்ன வண்மைத், தேர்வேளாயை"(ஊ)"வரையா மரபின் மாரிபோல... ..பேகன், கொடைமடம் படுதலல்லது" (எ)"மாரி யீகை மறப்போர் மலையனும்" (ஏ) "மாரியன்ன வண்மையிற் சொரிந்து" புறம். ருரு: கரு, கஙௗ: கு-எ, கசஉ: ந - ரு, கருஅ: எ, நகூஎ: கசு. (ஐ) "மாரியி னேற்பார்க் கவைநல்கி" (ஒ) "மாரிமழை வள்ளல்" சீவக. நகுரு, ருOO. (ஓ) "கார்நிகர் வண்கை" நன். சிறப்பு. என்பவைகள் ஈண்டறிதற்பாலன.

உ. (அ) "மாவி, னவிர்தளிர் புரையு மேனியர்" மூருது. கசந - ச, (ஆ) "தேமா மேனி" சிறுபாண். கஎகு. (இ)"மாந்தளிரே மாமேனி" சீவக. குருஉ. (ஈ) மாவி னிளந்தளி ரன்ன நயத்தகு மேனியும்" (உ) "மாந் தளிர் மேனியும்"(ஊ)"மாந்தளிர் மேனி"நைடத.அன்னத்தைத். உந.

ந. பொருப்பென்பது பொதியின் மலையின் பெயராதலை இந்நூற்பக்கம் ககூரு: க - ஆம் குறிப்பால் உணர்க.

ச. வேங்கைமலர் சுணங்குக்கு உவமையாதல், "வேங்கைவீ முற்றெழில் கொண்ட சுணங்கணி பூணாகம்" (கலி. குச: உகு - எ.) என்பதனாலும் அதன்குறிப்பாலும் அறியலாகும்.

(பிரதிபேதம்) * மொழிபெயல் † பரப்பின்.

மதவலி *மிகுகடாஅத் தவன்(க)யானை மருப்பினுங்
(உ)கதவவாற் றக்கதோ காழ்கொண்ட விளமுலை

எ-து: (௩)வகுப்பமைந்தகுளிர்ந்ததாரினையுடையபாண்டியனது(ச)சிகரங் களுயர்ந்த (ரு)பொதியின்மலையிடத்து அழகினையுடையகொத்துக்களையுடைய இளைய வேங்கைப்பூவையொத்த சுணங்கினையுடையாய்! முத்துவடத்தைத் தன்னிடத்தேகொண்ட நின்னுடைய இளையமுலைகள் இப்பருவத்திலும் அப் பாண்டியனுடைய மிகுதியையுடைய வலியினையும் மிகுகின்ற கடாத்தினையு முடையயானையினுடையகொம்புகளிலுங்கோபத்தினையுடைய வாயிராநின்றன, இக்கொடுமை இ†பருவத்திற்குத் தக்கதோ? எ-று. ப்

எனவாங்கு

எ-து: என்று; எ-று. ஆங்கு, அசை.

உக இனையன கூற விறைஞ்சுபு †நிலநோக்கி
‡நினையுபு நெடிதொன்று நினைப்பாள்போன் மற்றுங்கே
துணையமை தோழியர்க் கமர்த்த கண்ணள்
மனையாங்குப் பெயர்ந்தா(கூ)ளென் னறிவகப் படுத்தே

---

க. (அ) "கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப், புலிவிளை யாடிய புலவு நாறு வேழத்தின், றலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின், கண்ணே கதவ வல்ல" நற். ௩௧: ௪-எ. (ஆ) "கொடியனவாங்கொலை யானையின் கோடு" தஞ்சை. ௬அ.

உ. (அ) கதத்தினையுடைய வென்னும் பொருளில் 'கதவ' என அஃறிணைப் பன்மைவினைக்குறிப்பு வகர வீற்றான்வந்ததற்கு, "கதவவாற் றக்கதோ காழ்கொண்டவிளமுலை" என்பது மேற்கோள்; தொல்: வினை. சூ. உ௪. கல். நச். (ஆ) "தொடலை தைஇய மடவரன் மகளே, கண்ணினுங் கதவநின்முலையே" ஐங். ௩௬௧.(இ)"கண்ணே கதவவல்ல"நற்.௩௧:எ.

௩. (அ) "வகைத்தார் மார்பன்" பெருங். (௪) ௪: அ. (ஆ) "முறிமிடை படலைமாலை" - 'வகைமாலை' சீவக. ௧அ௮௯. (இ) "பூவார் முறிமிடை படலைமாலை" சூளா. துறவு. உ௩ என்பவைகள் இங்கே ஒப்புநோக்கற் பாலன.

௪. (அ) "எற்றரு நெடுஞ்சிமைப், புகலரும் பொதியில்" அகம். ௩உஉ: க௩ - ௪. (ஆ) "ஓங்குயர் மலையத்து" மணி. ௧: ௩. (இ) கோடுய ரடுக்கத்து" தமிழ்நெறி. மேற்கோள்.

ரு. (அ) "பொதியில், வேங்கையுங் காந்தளு நாறி" குறுந். அ௪. (ஆ) "அடுக்கத்த, விடர்வரை யெரிவேங்கை யிணர்" கலி. ௪ரு: க௬-எ.

௬. "என்பால, வென்னைவிட்டிகத்தர விறந்தீவாய்" கலி. ௫௯: அ - ௯.

(பிரதிபேதம்) * கமழ்கடா அத்தவன். † நிலனோக்கி ‡ நினைகுபு, நினைவன.

எ-து: *இத்தன்மையனவற்றை யான் நெடிதொன்றுநினையாநின்று கூற அதற்கு ஒன்று கூறாதே கவிழ்ந்து நிலத்தைப்பார்த்துப் பின்னை அவ்விடத்தே தோழியரை நினைப்பாள்போலே துணையாயமைந்த தோழியர்க்குப்பொருந்தின கண்ணையுடையளாய் என் அறிவைத் தன்னிடத்தே அகப்படுத்திக்கொண்டு †தன்மனையிடத்தே மீண்டுபோனாள்; எ - று.

இஃது எமஞ்சாலாவிடும்பையெய்திக் கூறினது.

நெடிதொன்று நினையாநின்றென்றது தான் சிறிதுநாட் சென்றால் வரைந்துகோடலை நினையாநின்றென்றதாகக்கொள்க. நினைப்பாள்போலென்றதனால் அவன் கூற்றினையும் இதுவுமொன்றெனச் சிறிதுகொண்டமையுந் தோன்றிற்று.

இதனால், தலைவற்கு அசைவென்னும் உவகை பிறந்தது.

‡இஃது ஏழடித்தரவும் நான்கடித்தாழிசையுந்தனிச்சொல்லும்நான்கடிச் சுரிதகமும்பெற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. (௨௪)

(ரு௮.) வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோட்
பேரெழின் மலருண்கட் பிணையெழின் மானோக்கிற்
காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதற்
கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரையு நுசுப்பினாய்
நேர்சிலம் பரியார்ப்ப நிரைதொடிக்கை வீசினை
யாருயிர் வௌவிக்கொண் டறிந்தீயா திறப்பாய்கேள்;

௭ உளனாவென் னுயிரையுண் டுயவுநோய் கைம்மிக
இளமையா னுணராதாய் நின்றவ றில்லானுங்
களைநரி னோய்செய்யுங் கவினறிந் தணிந்துதம்
வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்;

௧௧ நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் னலியுநோய்
மடமையா னுணராதாய் நின்றவ றில்லானு
மிடைநில்லா தெய்க்குநின் னுருவறிந் தணிந்துதம்
முடைமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்;

௧௫ அல்லல்கூர்ந் தழிவுற வணங்காகி யடருநோய்
சொல்லினு மறியாதாய் நின்றவ றில்லானு
மொல்லையே யுயிர்வௌவு முருவறிந் தணிந்துதஞ்
செல்வத்தாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்;

எனவாங்கு;

---

(பிரதிபேதம்) * என்றித்தன்மையன † தன்னிடத்தே மீண்டுபோனா ளெனவேமஞ்சாலா விடும்பை யெய்திக்கூறினான். நெடி ‡இது ஏழடி.

ஒறுப்பினியா னுறுப்பது நுமரையான் மற்றிந்நோய்
பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் பொலங்குழாய்
மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி
நிறுக்குவென் போல்வல்யா னீபடு பழியே.

**இதுவும் அது.**

**இதன் பொருள்.**

(௧) வாருறு (௨)வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோட்
பேரெழின் மலருண்கட் (௩)பிணையெழின் மானோக்கிற்
(௪)*காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு †சுடர்நுதற்
கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரையு நுசுப்பினாய்
நேர்சிலம் பரியார்ப்ப ‡நிரைதொடிக்கை வீசினை
யாருயிர் வௌவிக்கொண் டறிந்தீயா திறப்பாய்கேள்

எ-து: கோதுதலுற்றகடைகுழன்ற(௫)ஐம்பாலினையும்வளைந்தஇறையினை யுடைய நெடிய மெல்லிய தோளினையும் பெரிய அழகினையுடைய ||மலர் போலுங் கண்ணினையும் மான்பிணையினது அழகினையுடைய வெருவின நோக்குப்போலும் நோக்கினையும் மழையைப்பெற்ற தளிர்போலும் நிறத்தினை யும் அழகுபெறுகின்ற பிறைபோன்ற நுதலினையும் (௬) விழுந்தெழுந்த கூரிய

---

௧. "வாருறு வணர்கதுப் புளரி" நற். ௮௨.

௨. (அ) "வணரைம்பால்" கலி. ௫௭: ௧. (ஆ) "வணர்சுரி யைம்பாலோய்" சிலப். ௭: ௩௧.

௩. (அ) "பிணையெழின் மானோக்கின்" (கலி. ௨௭: ௩) என்பதும் அதன் குறிப்பும்(ஆ)"மான்பிணையன்ன மகிழ்மடநோக்கே"(புறம். ௩௫௪: ௧௦.) என்பதும் ஈண்டறிதற்பாலன.

௪. "தளிபொழி தளிரன்ன வெழின்மேனி" கலி. ௧௩: ௧௧.

௫. (அ) "நெய்யிடை நீவி மணியொளி விட்டன்ன, வைவகை பாராட்டி னைம்மற்றெங் கூந்தற், செய்வினை பாராட் டினையோ வைய" (ஆ) "இளையவ ரைம்பால் போல்" கலி. ௨௨: ௧௨-௪, ௨௯: ௬.

௬. (அ)"போழுறு பகுவாயிற் பொலிதரு மெயிறேடும், வீழுறுநகையாலும் விரிகுரு தியினாலும், தாழுறு மதிதன்னைத் தாரகை நிரைசூழ, வூழுற வமர்செவ்வா னொத்ததவ் வுழியன்றே" கந்த. முதனூட்பானு. ௧௪௮.

(பிரதிபேதம்) * காரெதி ரொளிர்மேனி, † பிறைநுதற், ‡ நிரைதொடி வீசினை, || மலர் போலும் அழகிய மான்போலும் கண்ணையும் மேகமறைத்தலாற் சுடரெதிர் தோன்று மிந்திரதநுப்போலும் அழகிய நுதலினையும் வெள்ளிய பல்லினையு முடைய,

எயிற்றினையும் விழுந்தெழாத முகைபோலும் வெள்ளிய பல்லினையுமுடைய கொடியையொக்கும் இடையினையுடையாய்! காலுக்குப்பொருந்தினசிலம்பின் உள்ளிடுமெணி ஆரவாரிப்ப நிரைத்த தொடியையுடைய கையை வீசினையாய்ப் பெறுதற்கரிய என்னுயிரைக்கொண்டு இளமையாற் கைக்கொண்டதனை அறியாதே போகின்றவளே! யான் கூறுகின்றதனைக் கேள்; எ - று.

எ (க)உளனாவென் னுயிரையுண் (உ)டுயவுநோய் *கைம்மிக
விளமையா னுணராதாய் நின்றவ றில்லானுங்
கிளைநரி னோய்செய்யுங் கவினறிந் தணிந்துதம்
வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்

எ-து: வருத்தத்தினையுடைய(ங)காமநோய்கைம்மிகும்படியாகயான்சிறிது உயிருடனே இருக்கும்படி என்னுயிரை வாங்கிக்கொண்டு நின் இளமைப் பருவத்தாலே அறியாமற் போகின்றவளே! நின்னிடத்துத் தப்பில்லையாயினும் (சு)நின்னையொழியப் போக்குவார் பிறர் இல்லாத நோயைச்செய்யும் அழகை யறிந்துவைத்தும் அதன்மேலே (ரு) ஒப்பித்துத் தஞ் செல்வச்செருக்காலே புறம்படவிட்ட நும்முடைய சுற்றத்தாரைத் தவறுடையரல்லரென்று கூறலாமாகிற் கூறு; †அஃது அரிது; எ - று.

கக நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் னலியுநோய்
மடமையா னுணராதாய் நின்றவ றில்லானு

---

(ஆ) "முளையெயிறு நிரம்பா விளமைப் பருவத்து" தமிழ்நெறி. மேற்கோள். (இ)"முன்ப லரும்பிய பானாறு செவ்வாய்ப், புன்றலை மகாஅர்" ஆசிரியமாலை.

க. (அ) "உண்ணின்ற நோய்மிக வுயிரெஞ்சு துயர்செய்தல், பெண்ணன்று" கலி. சுo: சு - எ. (ஆ) "இலனென்று தீயவை செய்யற்க" (குறள்.உoரு) என்புழி இலன்என்பதில் அன் விகுதி தனித்தன்மையில் வந்ததென்பதற்கு, "உளனாவென் னுயிரையுண்டு" என்பதை மேற்கோள் காட்டினர்; பரிமேலழகர்.

உ. (அ) "உயவுநோய்க் குயிர்ப்பாகி" (ஆ) "உயவுநோய்க் குய்யுமாறுரைத்துச்செல்"கலி. ருரு: உஉ, ககங: ங. (இ) "உயாவே யுயங்கல்" தொல். உரி. சூ. எக.

ங. "காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோ"

சு. (அ) "நின்முகங் தான்பெறி னல்லது கொன்னே, மருந்து பிறிதியாது மில்லேல்" கலி. சுo: உo - உக. (ஆ) "பிணிக்கு மருந்து பிறமனணியிழை, தன்னோய்க்குத் தானே மருந்து" குறள். ககoஉ.

ரு. ஒப்பித்தல் - அலங்கரித்தல்.

(பிரதிபேதம்) * கைமிக, † அது அரிது (தாழிசை மூன்றினுரையிலும்).

(க)மிடைநில்லா தெய்க்குநின் னுருவறிந் தணிந்துதம்
முடைமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்

எ - து: (உ)அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி என்னும் ஒழுக்கந் தேய்ந்து மறத்தலை எனக்கு உறுத்தி நாடோறும் என்னை நலிதற்குக் காரணமான நீ செய்த நோயை நினது மடப்பத்தாலே அறியாமற் போகின்றவளே! நின்னிடத்துத் தப்பில்லையாயினும் நிற்கமாட்டாதே இளைக்கும் இடையையுடைய *நின் வடிவை அறிந்துவைத்தும் அதன்மேலே ஒப்பித்துத் தஞ்செல்வச்செருக்காலே புறப்படவிட்ட நும்முடையசுற்றத்தாரைத் தவறுடையரல்லரென்று கூறலாமாகிற் கூறு; அஃது அரிது; எ - று.

கரு அல்லல்கூர்ந் தழிவுற வணங்காகி யடருநோய்
சொல்லினு மறியாதாய் நின்றவ றில்லானு
மொல்லையே யுயிர்வௌவு முருவறிந் தணிந்துதஞ்
செல்வத்தாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்

எ - து: நெஞ்சழிந்து வருத்தமிக்குக் கெடும்படி வருத்தமாகி மேன்மேலும் அடர்ந்துவருகின்றகாமநோயைக் குறிப்பான் †அறிதலன்றிச்சொல்லிக் காட்டினும் அறியாதவளே! நின்னிடத்துத் தப்பில்லையாயினும் ஒழுக உயிரைவாங்காது விரைய உயிரைவாங்கும் நின் வடிவை அறிந்துவைத்தும் அதற்குமேலே ஒப்பித்துவைத்துத் தஞ் செல்வச்செருக்காலே புறப்படவிட்ட நும்முடைய சுற்றத்தாரைத் தவறுடையரல்லரென்று கூறலாமாயிற் கூறு; அஃது அரிது; எ - று.

ஆயினும், ஆனுமெனக் குறைந்து‡நின்றது. அழிபுகவென்றும் பாடம்.
எனவாங்கு, அசை.

உ0 ஒறுப்பின்யா னொறுப்பது நுமரையான் மற்றிந்நோய்
(௩)பொறுக்கலா வரைத்தன்றிப் பெரிதாயிற்(ச) பொலங்குழாய்

க. "பிணையேர்மடநோக்குநாணுமுடையாட், கணியெவனோ வேதிலதந்து" (குறள். க0அக.) என்பதற்கு, பரிமேல் எழுதிய உரையும், 'இவட்குப் பாரமாதலும் எனக்கு அணங்காதலுங் கருதாமையின், அணிந்தார் அறிவிலரென்பதாம்' என்னும்விசேடவுரையும் இங்கே அறிதற்பாலன.

உ. அறிவு முதலியவற்றின் பொருள், இந்நூலிறுதியிலுள்ள அகராதியில் விளக்கப்பெறும்.

௩. (அ) "பொறைநில்லா நோயோடு" (ஆ) "உரிதென் வரைத்தன்றி யொள்ளிழை தந்த, பரிசழி பைதனோய்" கலி. ௩: ௬; க௩அ: உ0 - உக.

ச. "பொன்னென் கிளவி" (தொல். புள்ளி. சூ. சுக) என்னும் சூத்திரமும் அதற்கு இளம். நச். எழுதியுள்ள உரையும் நோக்குக.

(பிரதிபேதம்) * நின்னையறிந்து, † அறிதலின்றி ‡ நின்றது எனவாங்கு ஆங்கலை ஒறுப்பின்.

மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி
நிறுக்குவென் போல்வல்யா னீபடு பழியே

எ - து: யான் ஒறுத்துக்கூறில் ஒறுப்பது புறத்துப்போதவிட்ட நும்முடைய சுற்றத்தாரை; நின்னையன்று; பின்னை இக்காமநோய் பொறுக்கலாம் அளவையுடைத்தன்றி மிகுமாயிற் பொன்னாற்செய்த குழையினையுடையாய்! யான் இங்ஙனம் வருந்துகின்றநிலைமையைப் போக்கி இவ்வூரின் மன்றத்தின் கண்ணே மடலையேறி நீ எய்துவதொரு பழியை யான் உனக்கு நிறுத்துவேன் போலே இராநின்றேன், நீ அதனை *அறி; எ - று.

இது சொல்லெதிர்பெறாஅன் சொல்லியின்புற்றது.(க)

அவளுந் தமருந் தீங்குசெய்தாராக அவளொடு தீங்கைப் புணர்த்தும் தான் ஏதஞ்செய்யாது உயிர்கொடுத்தானாகத் தன்னொடு நன்மையைப் புணர்த்தும் கூறியவாறு காண்க.

அவன் இங்ஙனம் மிகுதி கூறுவான்; மடலேறுவேன் போல்வலென ஐயுற்றுக்கூறினான்.

இதனால், தலைவற்கு அசைவென்னும் உவகை பிறந்தது.

†இஃது ஆறடித்தரவும் நான்கடித்தாழிசையும் பொருள்பெறாத தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (௨௨)

(௫௯.) தளைநெகிழ் பிணிநிவந்த பாசடைத் தாமரை
முளைநிமிர்ந் தவைபோலு முத்துக்கோ லவிர்தொடி
யடுக்கநா றலர்காந்த ணுண்ணேர்தண் ணேருருவிற்
றுடுப்பெனப் புரையுநின் றிரண்டநே ரரிமுன்கைச்
௫ சுடர்விரி வினைவாய்ந்த தூதையும் பாவையும்
விளையாட வரிப்பெய்த வழகமை புனைவினை
யாய்சிலம் பெழுந்தார்ப்ப வஞ்சில வியலுநின்
பின்னுவிட் டிருளிய வைம்பால்கண் டென்பால
வென்னைவிட் டிகத்தர விறந்தீவாய் கேளினி;

---

க. தொல். அகத். சூ. ௫௦. இச்சூத்திர வுரையில் இப்பாடலை மேற்கோள் காட்டி, தான் உயிர்கொடுத்தானாகத் தனது நன்மை கூறி, அவளது தீங்கெல்லாங் கூறுவான் மடலேறுவேன் போலுமென்று ஐயுற்றுக் கூறியவாறு காண்க. அவளைச்சொல்லுதலே தனக்கு இன்பமாதலிற் "சொல்லியின்புறல்"என்றார். என்பர். நச்.இ-வி. உரைகாரரும் இ-வி. ௫௪௯-ஆம் சூத்திரவுரையில் இதனை மேற்கோள்காட்டி இறுதி வாக்கியத்தை எழுதினர்.

(பிரதிபேதம்) * அறியெனச் சொல்லெதிர் பெறான் சொல்லி யின்புற்றான் அவளும். † இது ஒத்தாழிசைக்கலி.

௧௦ மருளியான் மருளுற விவனுற்ற தெவனென்னு
மருளிலே யிவட்கென வயலார்நிற் பழிக்குங்கால்
வையெயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ
தையினீ ராடிய தவந்தலைப் படுவாயோ;

௧௪ உருளிழா யொளிவாட விவனுண்ணோ யாதென்னு
மருளிலே யிவட்கென வயலார்நிற் பழிக்குங்காற்
பொய்தல மகளையாய்ப் பிறர்மனைப் பாடிநீ
யெய்திய பலர்க்கீத்த பயம்பயக் கிற்பதோ;

௧அ ஆய்தொடி யைதுயிர்த் திவனுண்ணோ யாதென்னு
நோயிலே யிவட்கென நொதுமலர் பழிக்குங்காற்
சிறுமுத்த னைப்பேணிச் சிறுசோறு மடுத்துநீ
நறுநுத லவரொடு நக்கதுநன் கியைவதோ;

எனவாங்கு;

௨௩ அனையவை யுளையவும் யானினக் குரைத்ததை
யினையநீ செய்தது வாயாயிற் சேயிழாய்
செய்ததன் பயம்பற்று விடாது
நயம்பற்று விடனில்லை நசைஇயோர் திறத்தே.

இஃது இரந்துகுறையுற்றுப் பின்னின்ற தலைவன் ஆற்றனாய்த் தலைவியைநோக்கி இங்ஙனம் வருந்துவையாயின் நீ செய் தவம் இன்றமெனக் கூறியது.

இதன் பொருள்.

தளைநெகிழ் பிணிநிவந்த பாசடைத் (க)தாமரை
முளை*நிமிர்ந் தவைபோலு முத்துக்கோ லவிர்தொடி
(உ)யடுக்கநா றலர்காந்த †ணுண்ணேர் தண் ணேருருவிற்
(ரு)றுடுப்பெனப் புரையுநின் றிரண்டநே ரரிமுன்கைச்

---

க. "தாமரை, முளைநிவந் தவைபோலு முத்துக்கோ லவிர்தொடி" என்பதை, குறிப்பு மொழியுள் விகாரத்திற்கு மேற்கோள் காட்டி, கோலமென்பது கோலெனக் கடைக்குறைந்து வந்ததென்பர். மயிலைநாதர்; நன். பெயர். சூ. கஉ.

உ. (அ) "சிலம்புடன் கமழு மலங்குகுலைக் காந்தள்" குறுந். உருக. (ஆ) "நறுந்தண் சிலம்பி னறுகுலைக் காந்தள்" ஐங். உஉசு.

ரு. (அ) "துடுப்பெனப்..............விளையாட" என்பது, ஒரு வேற்றுமையுருபு தொடர்ந்தடுத்துவந்த சொற்கள் ஒரு முடிக்குஞ் சொல்லால்

(பிரதிபேதம் * நிவந்தவை. † தண்ணே ரேருருவிற்.

ரு சுடர்விரி * வினைவாய்ந்த (க) தூதையும் பாவையும்
விளையாட அரிப்பெய்த அழகமை புனைவினை
(உ)யாய்†சிலம் பெழுந்தார்ப்ப வஞ்சில வியலுநின்
பின்னுவிட் டிருளிய வைம்பால்கண் டென்பால
வென்னைவிட் டிகத்தர விறந்தீவாய் கேளினி

எ - து: ‡முறுக்கு அவிழ்ந்ததும் அரும்புகள் நீருக்குமேலேஓங்கின பசிய இலையினையுடையதுமான தாமரையினது வளையம் வளர்ந்தவையிற்றை யொக்கும் (௩) முத்தை அழுத்திச்செய்த திரட்சியையுடைய விளங்குகின்ற தொடியினையுடைய, அடுக்கமெல்லாம் நாறுகின்ற கூரிய அழகினையுடைத்தாகிய அலர்களையுடைய காந்தளினது குளிர்ந்த (௪)எழுச்சியையுடைத்தாகிய வடிவினையுடைய துடுப்பென்று கூறும்படியாக ஒக்குந் திரண்ட தம்மில் இணையொத்த மெல்லிய முன்கையினாலே(ரு)இங்குலிகம் எழுதின ஒளிவிரிந்த

---

முடிந்ததற்கு மேற்; தொல். வேற் - மயங். சூ. கக. நச். (ஆ)"காந்தளந் துடுப்பிற் கவிகுலை யன்ன, செறிதொடி முன்கை" பட். கரு௩ - ௪. (இ)"காந்த ணறுங்குலை யன்ன, நலம்பெறு கையினென் கண்புதைத் தோயே" ஐங். உகரு. (ஈ) "கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்" பரி. கக: எசு.(உ)"பஃறுடுப் பெடுத்த வலங்குகுலைக் காந்த, ளணிமலர் நறுந்தாதூதுந் தும்பி, கையாடு வட்டிற் றோன்று, மையாடு சென்னிய மலைகிழ வோனே" அகம். கo௮: கரு - க௮. (ஊ)"காம்பமை சிலம்பிற் கடிநாட் காந்தட், பூந்துடுப் பன்ன முன்கையின்" (எ) "காந்தட், பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை" பெருங். (உ) கரு: எ௩ - ௪; (௪) கக: எ௮ - க. (ஏ) "கைவிரிந்தன காந்தளும்" சூளா. நாடு. கக.

க. "மண்டேதை யாக்கிய சோறீந் திட மகிழ்ந்தார்" மறைசையந். உரு.

உ. "இன்மணிச் சிலம்பிற் சின்மொழி யைம்பாற், பின்னொடு கெழீஇய தடவரல்" கலி. கஉரு: கசு-எ

௩. (அ) "கைக்குவான்முத்தின் சரிவளைபெய்து" திருவாநூர்த்திருவிசைப் பா. க. (ஆ)"துணிகதிர் முத்திற் செய்த வங்கதந் தோளிற்பூட்டி"(இ) "நிலவுமிழ் மணியிற் செய்த வங்கத நெடுந்தோள் சாத்தி" காஞ்சி. திருமண. ௩சு, ௪௮.

௪. "எராவது எழுச்சி; அது எழுகின்ற நிலைமையென நிகழ்காலமே குறித்துநிற்கும்" என்பது (தொல். பொருளி. சூ. ரு௩. நச்.) ஈண்டும் நோக்கற் பாலது.

ரு. இங்குலிகம் - சாதிலிங்கம்.

(பிரதிபேதம்) * வரிவாய்த்த, வரியாய. † சிலம்பரி யார்ப்ப வஞ்செலவியலும், சிலம்பரி பெழுந்தார்ப்ப. ‡ தளைநெகிழ் தாமரை- முறுக்கவிழ்ந்த தாமரை, பிணிநிவந்த பாசடைத்தாமரை - அரும்புகள் நீருக்குமேலே யோங்கின பசிய விலையினை யுடைய தாமரை; தாமரைவளையம் வளர்ந்த.

தொழில்களையுடையவாகிய வாய்களையுடைய மரத்தாற்செய்த சிறுபானை யாலும் பாவையாலும் விளையாடுதற்கு, உள்ளிடுமெணியிட்ட அழகமைந்தபுனைந்த தொழில்களையுடைய அழகிய *சிலம்புகள் மிக ஆரவாரிப்ப அழகினையுடைய சில அடியிடாநடக்கும் நின்னுடைய இளமை நீங்குதலாற் பின்னுதல் விட்டு இருண்ட ஐம்பாலைக்கண்டு என்னிடத்துண்டாகிய(க) அறிவுமுதலியனஎன்னை விட்டுப் போம்படியாகப் போகின்றவளே! யான் கூறுகின்றதனை இப்பொழுது †கேள்; எ - று.

தளைநெகிழ்தாமரை, பிணிநிவந்தபாசடைத்தாமரையென்க.

௧௦ மருளி(உ)யான் மருளுற விவனுற்ற தெவனென்னு
மருளிலை யிவட்கென வயலார்நிற் பழிக்குங்கால்
வைஎயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ
(௩)தையினீ ராடிய தவந்தலைப் படுவாயோ

எ - து: யான் மயக்கமுறுகையினாலே அதுகண்டு தானும் மருண்டு இவனுற்ற நோய் யாதுதானென்று கேட்கும் அருள் இவட்கு இல்லை யென்று யான் ‡கூற, அதுகேட்டு அயலார் நின்னைப் பழிக்குமளவிற் கூரிய

---

க. "மனையாங்குப் பெயர்ந்தாளென் னறிவகப் படுத்தே" கலி. ௫௪: உ௪.

உ. "ஆருயிர் யாதொன் றிடருறு மாங்கதற், கோருயிர் போல வுருகி யுயக் கொள்ள, நேரி னதுமுடி யாதெனி னெஞ்சகத், தீர முடைமை யருளி னியல்பே" சூளா. துறவு. ௧௭௦.

௩. நீராடலும் தவமென்பது (அ) "நீஇ ராடல்..............எற்ற தவத்தி னியல்பென மொழிப" (தொல். புறத்திணையியல். சூ.௨௦. மேற்.) (ஆ) "தவநதி போகு மருமறைத்தாபதர்" கல்: ௬: ௧௧. (இ) "சங்கையி னதி கண் முற்று மாடிய தவத்தின் பேறும்" திருவிளை. தலவிசேடப். ௧௧. என்பவற்றால் அறியலாகும். (ஈ) "தையினீராடுதல் மகளிர்க்கு உரிய தென்பது, "இன்று இவ்வூராரெல்லாந் தைந்நீராடுப" என்பது உயர் திணைக்கண் தொழிலிற் பிரிந்த ஆணொழி மிகுசொல்லுக்கும் (தொல். கிளவி. சூ. ௫௦. இள;) உயர்திணை ஆணொழி வினைக்கும் (நன். பொது. சூ. க. மயிலை) (உ) "இவ்வூர்மக்களெல்லாம் தைந்நீராடினர்" என்பது பெண்பாலென வினையினாற்பொருள்விளங்கிற்றென்பதற்கும் (தொல். கிளவி. சூ. ௫௧. 'அவற்றுள் வினைவேறு' தெய்.) (ஊ) "இன்று இச் சேரியார் தைந்நீராடுவர்" என்பது உயர்திணையிடத்துத் தொழிலிற் றோன்றும் ஆணொழி மிகுசொல்லுக்கும் (நேமி. சொல். ௧௧. உரை) (எ) "மருவூரார் தைந்நீராடினார்" என்பது வினைச்சொல் உயர்திணை ஆணையொழித்து வந்ததற்கும் (நன். பெயரி. சூ. ௧௨. மயிலை.) மேற் கோள்களாகக் காட்டப்பெற்றிருத்தலால் விளங்கும். அவருள்ளும்

(பிரதிபேதம்) * சிலம்புமிக் காரவாரிப்ப, சிலம்புகள் மிக்காரவாரிப்ப, † கேள். மருளியான், ‡ கூறுவது கேட்டவயலார்.

எயிற்றினையுடைய இளையமகளிர்க்கு நடுவே வகுப்புடைய கோலத்தாலே பொலிவுபெற்று நீ தைத்திங்களில் நீராடிய(௧) நோன்பின் பயனைப் பெறுவை யோ? பெறாய்காண்; எ - று.

௧௪ உருளிழா யொளிவாட விவனுண்ணோ யாதென்னு
மருளிலை யிவட்கென வயலார்நிற் பழிக்குங்கால்
பொய்தல மகளையாய்ப் பிறர்மனைப் பாடிநீ
யெய்திய *பலர்க்கீத்த பயம்பயக் கிற்பதோ

எ - து: தலையிற் கிடந்து அசையுந் (௨) தலைப்பாளையையுடையவளே! ஒளிகெடும்படி இவன்மனத்தில் உண்டாகிய நோய் யாதென்று கேட்கும் அருள் இவட்கு இல்லையென்று யான்†கூற அது கேட்டு அயலார் நின்னைப் பழிக்குமளவில் நோன்பாகிய விளையாட்டினையுடைய மகளாந்தன்மையை யுடையையாய்ப் பிறர் மனையின்கண்ணே ஐயமேற்றுப் பாடி நீ ஆண்டுப் பெற்ற வையிற்றைப் பிறர்க்குக் கொடுத்ததனாலுள்ள பயன் நினக்குப் பயன் தருவதொன்றோ? தாராதுகாண்; எ - று.

பொய்தல, அகரஞ் செய்யுள் விகாரம்.

௧௮ ஆய்தொடி யைதுயிர்த் திவனுண்ணோ யாதென்னு
நோயிலை யிவட்கென நொதுமலர் பழிக்குங்காற்
(௩)சிறுமுத்த னைப்பேணிச் சிறுசோறு மடுத்துநீ
‡நறுநுத லவரொடு நக்கதுநன் கியைவதோ

எ-து: ஆராய்ந்திட்ட தொடியினையுடையாய்! நீதான் ஐதாக உயிர்த்து இவன்மனத்திலுண்டாகிய நோய் யாதென்று கேட்கும் நோய் இவட்கு இல்லை யென்று யான் || கூற அதுகேட்டு அயலார் நின்னைப்பழிக்குமளவிற் சிறிய

---

கன்னியர்க்கே உரியதென்பதை, (ஏ) "நறுவீ யைம்பான் மகளிராடுந், தைஇத் தண்கயம் போலப், பலர்படிந்து" (ஐங். அ௪.) (ஐ) "தாயருகா நின்று தவத்தைந்நீ ராடுதல்" (பரி. ௧௧.௯௧.) என்பவை வலியுறுத்தும்.

௧. நோன்பின் பயன், சிறந்தவனைக் கணவனாகப் பெறுதலென்ப.

௨. "நடுச்சிகை முத்துத்தாமம்" (சீவக. ௨௪௩௧) என்பதற்கு, 'சிகைநடு விற் றலைப்பாளை' என்று இவ்வுரையாசிரியரும் "தொய்யகம்" (சிலப். ௬: ௧0௭.) என்பதற்கு, 'தலைப்பாளை' என்று அரும்பத வுரையாசிரிய ரும் 'பூரப்பாளை' என்று அடியார்க்கு நல்லாரும் எழுதியிருப்பவை இங்கே அறிதற்பாலன.

௩. "குறுநிலக் கோமா னந்த, முத்தனை யன்றிப் பின்னை யாரையே முதன்மை செய்தான்" வில்லி. சூதுபோர். ௧௪.

(பிரதிபேதம்) * பலர்க்கீய்த்த, † கூறுவது கேட்டு அயலார், ‡ நறுநுதனலவரொடு நக்கான்கு || கூறுவதுகேட்டு அயலார்.

குழமகனைப் பேணி வளர்த்து அவனுக்கு வேறொருத்தியுடைய (க) *பெண் மகனைக் கோடற்குச் சிறுசோற்றைச் சமைத்து ஆயத்திற்கு இட்டு நீ நறிய நுதலையுடைய மகளிரோடே மகிழ்ந்த நோன்பின் பயன் நினக்கு வந்து பொருந்துமோ? பொருந்தாது †காண்; எ - று.

எனவாங்கு

எ-து: என்று; எ-று. ஆங்கு, அசை.

உரு. அனையவை (உ)யுளையவும் யானினக் குரைத்ததை
‡யினையநீ செய்தது வாயாயிற் சேயிழாய்
செய்ததன் பயம்பற்று விடாது
||நயம்பற்று விடினில்லை நசைஇயோர் திறத்தே

எ - து: ÷நீ நெஞ்சுளையவும் யான் நினக்குக்கூறியது சேயிழாய்! நின்னை நச்சினோர் திறத்தே வருந்தும்படி நீ செய்த கொடுமைக்கு நீ ஓர் உதவிசெய்யா யாயின் நீ செய்த (ரு)அத்தீங்கினாலுள்ள பயன் நின்னைப் பற்றுதல் விடாது,

---

க. இச்சொல், "பெண்மையடுத்த மகனென் கிளவி" (தோல். பெயரி. சூ. கூ, க0) என்றும் "மகடூஉ மருங்கிற் பாறிரி கிளவி" (தோல். பெயரி. சூ. ௬0) என்றும் ஆசிரியரால் வழங்கப்பெறுதலும் "பெண்மையடுத்த மகனென் கிளவி" (தோல். பெயரி. சூ. க0) என்பதற்கு, 'புறத்துப் போய் விளையாடும் பேதைப்பருவத்துப் பெண்மகளை மாறோகத்தார் இக்காலத்தும் பெண்மகனென்று வழங்குப' என்று சேனாவரைய ராலும் 'கட்புலனாயதோர் அமைதித்தன்மை யடுத்து நாணுவரை யிறந்து புறத்து விளையாடும் பருவத்தாற் பால்திரிந்த பெண்மக னென்னும் பெயர்ச்சொல்' என்றும் 'பெண்மகனென்பது அத் தன்மையாரை அக்காலம் அவ்வாறே வழங்கினாராயிற்று' என்றும் இவ்வுரையாசிரியராலும் விளக்கம் எழுதப்பெற்றிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

உ. "உளைய வுரைத்து விடினு முறுதி, கிளைகள்வாய்க் கேட்பது நன்றே" பழமொழி. உகூக.

ரு. (அ) "உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா" நாலடி. க0௬. (ஆ) "வேண் டினும் வேண்டா விடினு, முறற்பால, தீண்டா விடுத லரிது" நாலடி. க0கூ. பழ. கூஉ. (இ) "வினைப்பகை, வீயாது பின்சென் றடும்" (ஈ) "உறற்பால, வூட்டா கழியு மெனின்" (உ) "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந் துறும்" குறள். உ0எ, ருஎஅ, ருஅ0. (ஊ) "ஒளிப்பினு மூழ்வினை யூட்டாது கழியாது" இறை. சூ. உ. உரை. மேற்கோள். (எ)"ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉம்" சிலப். பதி. ருஎ.

(பிரதிபேதம்)* பெண் மணலைய. † காண் ஆங்கசை. ‡ இனையைநீ || நயம்பத்றி ÷ என்றுநீ

அதுவேயுமன்றி (க) நீ அருளைப் பற்றுவிடுவையாயின் நினக்கு அணையவை பயன் தருதலில்லை; *எ - று.

நச்சினேரெனத் தன்னைப் பிறர்போற் கூறினன். நயம் - அருள். அணையவையென்றது, (உ) தைந்நீராடன் முதலியவற்றை.

இதனல், தலைவற்கு இழிவுபிறந்தது; தலைவிக்குச் †சூழ்ச்சிபிறந்தது.

‡இஃது ஒன்பதடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (௫௯)

(௬௰.) சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட நறுநுதன்
மணங்கமழ் நறுங்கோதை மாரிவீ ழிருங்கூந்த
லுணங்கெழி லொண்டித்தி நுழைநொசி மடமருங்குல்
வணங்கிறை வரிமுன்கை வரியார்ந்த வல்குலாய்;
௫ கண்ணார்ந்த நலத்தாரைக் கதுமெனக் கண்டவர்க்
குண்ணின்ற நோய்மிக வுயிரெஞ்சு துயர்செய்தல்
பெண்ணன்று புனையிழா யெனக்கூறித் தொழூஉந் தொழுதே
கண்ணுநீ ராக நடுங்கின னின்னகா
யென்செய்தான் கொல்லோ விஃதொத்தன் றன்கட்
௰ பொருகளி றன்ன தகைசாம்பி யுள்ளு
ளுருகுவான் போலு முடைந்து;
௧௨ தெருவின்கண், காரண மின்றிக் கலங்குவார்க் கண்டுநீ
வாரண வாசிப் பதம்பெயர்த்த லேதில
நீநின்மேற் கொள்வ தெவன்;
௧௫ அலர்முலை யாயிழை நல்லாய் கதுமெனப்
பேரம ருண்கணின் றோழி யுறீஇய
வாரஞ ரெவ்வ முயிர்வாங்கு
மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ;
௧௯ நின்முகங் காணு மருந்தினே னென்னுமா
னின்முகந் தான்பெறி னல்லது கொன்னே

---

க. (அ) "நல்லாற்ற னாடி யருளாள்க பல்லாற்றுந், தேரினு மஃதே துணை" (ஆ) "அருளற்ற, ரற்றார்" குறள். ௨௪௨, ௨௪௮; (இ) "அறனு, மருளுடையான் கண்ணதேயாகும்" (ஈ) "நெகிழ்ந்த, வருளின ஞகு மறம்" சிறுபஞ்ச. ௩, ௩௫.

உ. "தைஇத் திங்கட் டண்கயம் படியும், பெருந்தோட் குறுமகள்" (நற். ௮௰: எ-அ.) எனவருதலும் காண்க.

(பிரதிபேதம்) *ஆகலினென்றான் †சூட்சி, ‡ இது ஒத்தாழிசைக்கலி.

மருந்து பிறிதியாது மில்லேற் றிருந்திழா
யென்செய்வாங் கொல்லினி நாம்;
பொன்செய்வாம்;

உச ஆறு விலங்கித் தெருவின்க ணின்ருெருவன்
கூறுஞ்சொல் வாயெனக் கொண்டதன் பண்புணராந்
தேற லெளிதென்பா நாம்;
ஒருவன் சாமா றெளிதென்பா மற்று;

உஅ சிறிதாங்கே, மாணூஉ ரம்ப லலரி னலர்கென
நாணு நிறையு நயப்பில் பிறப்பிலி
பூணாக நோக்கி யிமையா னயந்துநங்
கேண்மை விருப்புற் றவனை யெதிர்நின்று
நாணடப் பெயர்த்த நயவர வின்றே.

**இது தலைமகற்குத் துறைதேர்ந்த தோழி தலைமகளோடு உறழ்ந்து அவனது துறைநயப்பக் கூறியது.**

**இதன் பொருள்.**

(க)சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட நறுநுதன்
மணங்கமழ் நறுங்கோதை (உ)மாரிவீ ழிருங்கூந்த
லுணங்கெழி *லொண்டித்தி நுழை(ரு)நொசி மடமருங்குல்
வணங்கிறை வரிமுன்கை வரியார்ந்த வல்குலாய்

---

க (அ) "சுணங்கணி யாகத், தீர்க்கிடைப் போகா வேரிள வனமுலை" பொருந. ருகு - ருசு. (ஆ) "பொன்பெறு பூஞ்சுணங்கின் மென்முலை யாய்" சீறுபஞ்ச. சஅ.

உ. "மாரிவீழிருங்கூந்தல்" கலி. கச: ச; கருக: உக. "தத்த மரபிற் றோன்றுமன் பொருளே" என்னுஞ் சூத்திரவுரையில், 'மரபு என்பது பயிற்சியை; இதனுனே நூல்செய்கின்றகாலத்து வினைமுதலாகிய பொருள்கள் ஓதிய வாய்பாட்டான்வருதல் பெருவழக்கென்று கொள்ளப்படும்' என்று கூறி வினை முதலியவற்றுக்குப் பாகுபடுத் துணர்த்தப்பட்ட சொற்களன்றி மரபாற் பிறசொல் வந்ததற்கு, 'மாரிவீ ழிருங்கூந்தல்' என்பதை மேற்கோள்காட்டினர் இளம்பூரணர்; தொல். உவம. சூ. கஎ.

ரு. நொசிவு நுண்மையுணர்த்துதற்கு (அ) "நொசி மருங்குல்" என்பது மேற். தொல். உரி. சூ. எஅ. சே.(ஆ)"நொசிந்த மருங்குலள்" பெருங். (க) ருச: சுப. (இ) "நுழைநொசி மருங்குல்" நைடத. சுயம்வர. கசஉ. (பிரதிபேதம்) * ஒண்டேத்தி.

எ - து: *சுணங்கு அணிந்த அழகையுடைய முலையினையும்(க)பிறையின் றன்மையைக்கொண்ட நறிய நுதலினையும் நறிய மாலையினையுடைய மணம் நாறுகின்ற மழை விரும்புங் கரிய கூந்தலினையும் † கூர்மையையுடைய அழகினையும்(உ)நோக்கினர் கண் சென்று நுழைந்துபார்க்கும் நுண்மையாலே அவர்க்கு அறியாமையைக் கொடுக்கும் மருங்குலையும் 'வணங்குகின்ற இறையினையுடைய வளையணிந்த முன்கையினையுமுடைய ஒள்ளிய‡ தித்தியாகிய வரி நிறைந்த அல்குலையுடையவளே ; எ - று.

௫ (௩)கண்ணார்ந்த நலத்தாரைக் கதுமெனக் கண்டவர்க்
குண்ணின்ற நோய்மிக வுயிரெஞ்சு துயர்செய்தல்
பெண்ணன்று புனையிழா யெனக்கூறித் தொழூஉந் தொழூதே
||கண்ணுநீ ராக நடுங்கின னின்னகா
(௪)யென்செய்தான் கொல்லோ (௫)விஃதொத்தன் றன்கட்
௧௦ பொருகளி றன்ன தகைசாம்பி யுள்ளு
ளுருகுவான் போலு முடைந்து

எ - து: இனிய நகையினையுடையாய்! நின்னைநோக்கித் தொழூஉம்; ÷தொழுதபின்,புனையிழாய்!என்னைநோக்கி, × உலகத்திற்கண்ணுக்குநிறைந்த நலத்தினையுடைய மகளிரைக் கண்டவர்களுக்கு உண்ணின்ற காமநோய் மிகும்படி கடுக உயிர்போந் துயரைச்=செய்தல் அவர்க்குப்பெண்டன்மையன்றெனக் கூறிக் (௬) கண்ணும் உருகநின்று நடுங்கினன்; நடுங்கி இவனொருத்தன் தன்

---

க. "சுடர்நுதல்" (கலி. ௫௮: ௩.) என்பதற்கு எழுதிய வுரையும் நோக்குக.

உ. "நோக்கு நுழைகல்லா நுண்மைய" பொருந. ௮௨.

௩. "கண்ணார் கண்ணி" பொருந. ௧௪௮; சிறுபாண். ௬௫.

௪. "என்செய்தான் கொல்லோ............உடைந்து" எனத் தோழி கூறிய வழி, 'தெருவின்கட் காரணமின்றிக் கலங்குவார்க்கண்டு' எனவும் 'அலர்முலை.........(நாம்' எனத் தோழிகூறியவழி) 'பொன்செய்வாய்' எனவும் தலைவி உறழ்ந்துகூறினளென்றுகூறி 'இது தலைவன் வருத்தங் கூற அதனை யேற்றுக்கொள்ளாது உறழ்தலின் வழுவாய் நாண்மிகுதியாற் கடிதின் உடம்படாமையின் அமைந்தது' என்பர் நச். (தொல். பொருளி. ௬. ௪௪.)

௫. "இஃதொத்தன்" கலி. ௬௪: ௮; என்பதும் அதன் குறிப்பும்பார்க்க.

௬. (அ)"மெய்யுருகிக் கண்ணுருகி நெஞ்சுருகிக் காம வெயில் வெண்ணெய்ப் பாவைபோன் மெலிகின்றாரே" சீவக. ௬௮௨. (ஆ) "கண்புனலூருமென் காதல்" தஞ்சை. ௩௬௫.

(பிரதிபேதம்) * சுணங்கணிந்தழகிய முலை. † கூரிய. ‡ துத்தியாகிய. || கண்ணினீராக. ÷ தொழுதபின்னர் என்னைநோக்கி, × உலகத்திற்குக்கண்ணுக்கு. = செய்தவர்க்குப்பெண்.

ணிடத்துப் பொருகின்ற களிற்றையொத்த தன்மைகெட்டு மனமுடைந்து உள்ளேயுள்ளே உருகுவான்போலே இராநின்றான்; இவன் ஈண்டு வந்து என்ன காரியஞ்செய்தான்கொல் என்றாள்; எ - று.

ஒருத்தனென்பது இடைக்குறைந்துநின்றது.

கஉ (க)தெருவின்கண், காரண மின்றிக் கலங்குவார்க் கண்டுநீ
வாரண வாசிப் பதம்*பெயர்த்த லேதில
நீ நின்மேற் கொள்வ தெவன்

எ - து: அதுகேட்ட தலைவி நீ நம்மாற் றமக்கு நிகழ்ந்ததோர் காரண மின்றியிலே தெருவின்கட் கலங்குவார் சிலரைக் கண்டு நினக்கு ஏதிலவா யிருப்பனவற்றை நீ நின்மேல் ஏறட்டுக்கொள்கின்றதன்மை வாரணவாசியி லுள்ளார் பெறும் அருளுடைமையாகிய பதத்தை நீ நின்னிடத்தே ஏறட்டுக் கோடல்காண்; இது நமக்கு என்னாய் விளையும் ? †எ - று.

(உ) பிறர்வருத்தந் தம்வருத்தமாகக் கொண்டு ஒழுகுவதனை வாரணவாசி யென்னும் ஊரிலுள்ளார் ‡பதமென்றாள்.

இது "கூறிய வாயில் கொள்ளாக் காலை" (ங) தலைவிகூறியது.

கரு அலர்முலை யாயிழை நல்லாய் கதுமெனப்
(ச)பேரம ருண்க||ணின் றோழி யுறீஇய
(ரு)வாரஞ ரெவ்வ முயிர்வாங்கு
(சு)மற்றிந்நோய் தீரு மருந்தருளா ×யொண்டொடீ

க. "தெருவின்கண்............கொள்வதெவன்" என்பது (அ) தோழி, தலைவற்குக் குறைநேர்ந்து வாயிலாகிக் குறைநயப்பக் கூறியவழி, தலைவி அவள்கூற்றினை யேற்றுக்கொள்ளாது மறுத்ததற்கும் (தோல். களவி. சூ. உ0. நச்.) (ஆ) பாங்கியைத்தலைவிமறைத்தற்கும் (நாற்கவி. சூ. கசஎ) மேற்கோள்.

உ. "மலயத்து நின்றும்' (கோவையார். கஙக) என்புழி 'மலயத்து வாழ் வார் பிறர்க்கு வருத்தஞ் செய்யாராகலின்' என்று குறிப்பு எழுதி யிருத்தலும் ஈண்டு அறிதற்பாலது.

ங. தோல். கள. சூ. உ0.

ச. "பேரம ருண்கண்" கலி. கசசு: எ.

ரு. "நேரிறை வளைத்தோ ணின்றோழி செய்த, வாரஞர் வருத்தங் களை யா யோவென" தோல். கள. சூ. உங. நச். 'நெருநலு' மேற்.

சு. (அ) "மற்றிந்நோய்தீரு மருந்தருளாயொண்டொடீ" "நின்முகங்காணு மருந்தினே னென்னுமால்" என்புழி நோய் தீர்தற்குக் காரணமாகிய

(பிரதிபேதம்) *பெயர்தலேத்தில.† என்றாள் அலர் ‡ பிறர்பதமென்றார் இது || என்றோழி
× ஒண்டொடீ நின்முகங்கா ணு................எ-து அதுகேட்ட.

(க)நின்முகங் காணு மருந்தினே னென்னுமா
னின்முகந் தான்பெறி னல்லது கொன்னே
(உ)மருந்து பிறிதியாது மில்லேற் றிருந்திழா
யென்செய்வாங் கொல்லினி நாம்

எ – து: அதுகேட்ட தோழி அடிபரந்த முலையினையும் ஆராய்ந்த பூணி னையுமுடைய நல்லாய்! பெரிய அமர்த்த உண்கண்ணினையுடைய நின் தோழி

மருந்தெனவருங் காரணத்தைக் கருவிக்கண்ணும், நின்முகத்தைக் காண்டல் காரணமாக அதன் காரியமாகப் பிறந்த அருளை மருந்தாதற் றன்மையாக உடையனென வருங் காரியத்தை ஒன்றென முடித்தற் கண்ணும் அமைத்துக் கொள்க. என்பர். நச். தொல். வினை. சூ. ௩எ. (ஆ) "மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ யென்புழி, நோய்தீர்தற் கேதுவாகிய மருந்தென்னும் ஏதுப்பொருண்மை கரு விக்கண் அடங்கும்" என்பர் இ – வி உரைகாரர் ; இ – வி. சூ. உ௫௩. (இ) 'நோய்தீருமருந்து.........என்னும்ஏதுப்பொருண்மை கருவிக் கண் அடங்கும்' என்பர், சேனாவரையர்; தொல். வினை. சூ. ௩எ. (ஈ) "அகலிருவிசும்பு" பெரும்பாண். க. என்பதற்கு, 'தன்னை யொழிந்த நான்கு பூதமும் தன்னிடத்தே அகன்று விரிதற்குக் காரணமாகிய பெரிய ஆகாயம்' என்றுபொருள்கூறி அதற்கும்(உ)"அரசிருந்து பனிக் கும்பாசறை" முல்லை. எ௯. என்பதற்கு,'பகையரசிருந்து நடுங்குதற்குக் காரணமான பாசறை' என்று பொருள்கூறி அதற்கும், (ஊ) "புண் டாங்குவேல்" சீவக. உஉ. என்பதற்கு 'பகைவர் புண்ணைத் தாங்குவ தற்குக் காரணமான வேல்' என்று பொருளும் 'வினைத்தொகை; ஏதுப் பொருள்கருவிக்கண் அடங்கும்' என்று இலக்கணமும்எழுதி அதற்கும் "மற்றிந்நோய் தீருமருந்து" என்பதை இவ்வுரையாசிரியர் மேற்கோள் காட்டியுள்ளார். அன்றியும்(எ)உயர்ந்தபால்என்பதற்கு, 'ஒருகாலைக்கு ஒருகால் அன்பு முதலியன சிறத்தற்கு ஏதுவாகிய பால் வரை தெய்வம்' என்று பொருள்கூறி, 'உயர்ந்த பாலை நோய்தீர்ந்த மருந்து போற் கொள்க' என்றும் எழுதியிருக்கிறார். (தொல். களவி. சூ. உ.) (ஏ)"திருந்தடி மேல்வீழ்ந்திரக்குநோய் தீர்க்கு, மருந்து நீயாகுதலான்" கலி. ௬௩: ௯ – ௧௦. என்பது ஒப்புநோக்கற்பாலது.

க. (அ) "நின்முகங் காணு மருந்தினே னென்னுமாலென்புழிக்காட்சியை மருந்தென்றானதலின், காணுமருந்தென்பது வினைப்பெயர் கொண்ட தாம்" என்பர். சேனா; தொல். வினை. சூ. ௩எ. (ஆ) இ - வி. உரை காரரும் இதனையே பின்பற்றுவர்; இ – வி. சூ. உ௫௩.

உ. (அ) "மருந்துபிறி தில்லையா னுற்ற நோய்க்கே" நற். ௮௦: ௯.(ஆ) "மருந்துபிறி தில்லாப் பெருந்துய ரெய்தி" .........(இ) "மந்திர மில்லை வேறோர் மருந்தில்லை மையனோய்க்குச், சுந்தரக்குமுதச்செவ்வா யமுதலா லமுதச் சொல்லீர்" கம்ப. மாயாசனக. ௧௯.

உழுத்தின பொறுத்தற்கரிய மனக்கவற்சியைச் செய்யும் வருத்தம் கதுமென உயிரைவாங்கும்; அஃது உயிரைவாங்காதபடி ஒண்டொடீ! பின்னை *இந்நோய் தீர்தற்குக் காரணமான மருந்தை அருளாய்; அம்மருந்துதான் மிகவும் †அரிதன்று; நின்முகங்காண்டல்காரணமாக அதன்காரியமாகப் ‡ பிறந்த அருளை ||மருந்தாதற்றன்மையாக உடையேனென்று கூறுநின்றான் ; ஆதலால் அவன் றான் நின்முகத்தை இக்காலத்தே பெறின் அது மருந்தாவதல்லது வேறு சிறிதும் மருந்தில்லையாயிருக்குமாயின், =திருந்திழாய்! இனி நாம் என்செய்யக் கடவேமென்றாள் ; எ - று.

நின்முகங் ÷ காணு மருந்தினேனென்றது தலைவியைக்கருதி. மற்று, வினைமாற்று. கொன், காலமுணர்த்திற்று. கொல், ஐயம்.

பொன்செய்வாம்

எ - து: அதுகேட்ட தலைவி பொன்செய்வாம் என நகைக்குறிப்புக் கூறினாள்.

அஃது "இசைதிரிந்திசைப்பினும்"என்னும்(க)பொருளியற்சூத்திரத்துக் ×கூறினாம்.

உச ஆறு விலங்கித் தெருவின்க ணின்றொருவன்
கூறுஞ்சொல் வாயெனக் கொண்டதன் ∴பண்புணராந்
தேற லெளிதென்பா ாாம்

எ - து. அவள் நகைக்குறிப்புக் கூறிப் பின்னரும் உலகவொழுக்கத்தைத் தப்பி ஒருவன் தெருவின்கண்ணேநின்று கூறுங்கூற்றை உண்மையென்று கொண்டு அதன் உண்மையை உணராமாய் நாம் அதனைத் தெளிதல் எளிதென்று சொல்லக்கடவேமென்றாள்; எ -று.

நாமென்றது உயர்த்துக்கூறியது. உளப்பாடுமோம்.

ஒருவன் (உ)சாமா றெளிதென்பா மற்று

எ - து: அதுகேட்ட தோழி பின்னை நின்கருத்து இதுவாயின் ஒருவன் சாந்தன்மை எளிதென்று கூறக்கடவேமென்றாள்; எ - று.

என்பாம், உளப்பாடு.

---

க. தொல். பொருளி. சூ. க. இச்சூத்திரத்திற் கூறியது, 'இயலா' என்றதனால், 'என் செய்வாமென்ற' வழிப் 'பொன் செய்வா 'மென்றாற்போல வினாவிற் பயவாது இறைபயந்தாற் போலநிற்பனவுங்கொள்க'என்பது.

உ. (அ) "ஈத லிரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலிற், சாதலுங் கூமோ மற்று" கலி. சுக: கக-உ. (ஆ)"பகையகத்துச் சாவா ரெளியர்" குறள். எஉ௩. (இ)"சாவ தெளிதரிது சான்றாண்மை" ஏலாதி. சு௦.

(பிரதிபேதம்) * இன்னோவைத் தீர்த்தற்கு † அரிதென்று நின்முகங்கொண்டல்காரண ‡ பிறந்தவளை || மருந்தாகற், = திருந்திழாய் நாம் ÷ காணின்மருந்தினனென்றது, × அடக்கினும் ∴ பண்புணராத்தேறல்.

௨௮ சிறிதாங்கே, மாணாவூ ரம்ப லலரி *னலர்கென
நாணு நிறையு நயப்பில் பிறப்பிலி
பூணாக நோக்கி யிமையா னயந்துநங்
கேண்மை விருப்புற் றவனை யெதிர்நின்று
(௧)நாணடப் பெயர்த்த நயவர வின்றே.

எ-து: அதுகேட்ட தலைவி மாட்சிமைப்படாத இவ்வூரில் † அம்பல் இனி (௨)அலரினாலே அலர்வதாக வென்று கருதி நாணையும் நிறையையும் விரும்புதலில்லாத, குடிப்பிறப்பிற்குரிய ஒழுக்கம் ‡ நெஞ்சிலில்லாதவனுக்கு அவன் இறந்துபடுமென்று கூறுகின்ற அத்தன்மையே மிக இன்று காணென்றாள். அது கேட்ட தோழி நின் பூணாகத்திற் புணர்ச்சியை மனத்தாற் கருதி இரவுந் துயில்கொள்ளானாய் நங் கேண்மையை||நயந்து நம்மை விருப்புற்றவனை நாண் அடுகையினாலே எதிர்நின்று மீட்ட நயப்பாடு ∴வருதலின்று, அதற்குத்தக்கது அறிவாயென்றாள்; எ - று.

“சினனே பேதைமை நிம்பிரி ÷நல்குர, வனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே” (௩)என்பதனான் ‘நாணு நிறையு நயப்பில் பிறப்பிலி’ எனச்சினம்பற்றி × வரினும்அஃது அவன்காதலைச்சிறப்பித்துவருதலின் அமைந்தது. பிறப்பிலி, பெயர்மாத்திரையாய் இல்லாதவென்னும் பெயரெச்சமறைக்கு முடிவாய் நின்றது. பிறப்பிலிக்கு ஆங்கே சிறிதென மாறிப் பொருளுரைக்க.

ஆங்கேயென்ற எகாரம், தேற்றம்.

“உயர்மொழிக் குரிய வுறழுங் கிளவி” (௪)என்றதனால், தலைவி உறழ்ந்து கூறினாள்.

இதனால், தலைவிக்கு விருப்பமுற்று நினைத்தல் பிறந்தது.

இது தரவும் தளைவிரவி ஐஞ்சீரடி[யும்] வந்த நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டும் இடையே முச்சீரடிவந்த கொச்சகமும் வெண்பாவும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் ஓரடியானென்றும் ஐஞ்சீரடி

௧. “நாணடப் பெயர்த்தல்” கலி. ௬௭: ௨௦.

௨. (அ) “அலரெழ வாருயிர் நிற்கும்” (ஆ) “கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற், றவ்வென்னுந் தன்மை யிழந்து” (இ) “காமம், வெளிப்படுந் தோறு மினிது” குறள். ௧௧௪௧, ௧௧௪௪, ௧௧௪௫.

௩. தொல். பொருளி. சூ. ௫௧. இச்சூத்திர வுரையிலும் இப்பகுதி மேற்கோளாக இக்குறிப்பு எழுதப்பெற்றுள்ளது.

௪. தொல். பொருளி. சூ. ௪௪. இதன் பக்கம் ௩௬௪: ௪ - ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * அலர்க்கென † அம்பலினத லரினாலே ‡ நெஞ்சில்லாத வனுக்கு || நயந்து விருப்புற்றவனை, ∴ வருதலினதற்கு, ÷ நல்குரவெனநால் × வரினுமவனன் காதலைச்சிறப்பித்தலினிதுவமைந்தது

வந்த (௧) போக்கிலக்கணமில்லா* நிலைமண்டில வாசிரியச்சுரிதகமும் பெற்று வந்தஉறழ்கலி. † "மண்டிலங் குட்ட மென்றிவை யிரண்டுஞ், செந்தூக் கியல வென்மனார் புலவர்" (௨)என்பதனான் ‡ மண்டிலங்கொள்க. (௨௪)

(௬௧.) எல்லா விஃதொத்த னென்பெறான் கேட்டைக்காண்
செல்வங் கடைகொளச் சாஅய்ச் சான்றவ
ரல்லல் களைதக்க கேளி ருழைச்சென்று
சொல்லுத லுற்றுரைக் கல்லா தவர்போலப்
பல்லூழ் பெயர்ந்தென்னை நோக்குமற் றியானேக்கின்
மெல்ல விறைஞ்சுந் தலை;

எ எல்லாநீ, முன்னத்தானென்று குறித்தாய்போற் காட்டினை
நின்னின் விடாஅ நிழற்போற் றிரிதருவா
யென்னீ பெறாஅதீ தென்;

௧௦ சொல்லின், மறாஅதீவான் மன்னோ விவள்;
செறாஅது, ஈத லிரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலிற்
சாதலுங் கூடுமா மற்று;

௧௩ இவடந்தை, காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள்
யாதுநீ வேண்டியது;

௧௫ பேதாய், பொருள்வேண்டும் புன்கண்மை யீண்டில்லை யாழ
மருளி மடநோக்கி னின்றோழி யென்னை
யருளீயல் வேண்டுவல் யான்;

௧அ அன்னையோ, மண்டம ரட்ட களிறன்னான் றன்னையொரு
பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ;

௨௦ ஒண்டொடீ, நாணிலன் மன்ற விவன்;

ஆயின் ஏஎ;

௨௨ பல்லார்நக் கெள்ளப் படுமடன் மாவேறி
மல்லலூ ராங்கட் படுமே நறுநுத
னல்காள்கண் மாறி விடினெனச் செல்வானு

---

௧. இச்செய்யுள் போக்கிலக்கணமில்லாதஆசிரியச்சுரிதகம்பெற்ற உறழ் கலிக்கு மேற்கோள்; தொல். செய். சூ.௧௫௬. பேர். நச்.

௨. தொல். செய். சூ. ௧௧எ.

(பிரதிபேதம் *நிலைமண்டல †மண்டலங்குட்ட ‡மண்டலங்கொள்க,

மெள்ளி நகினும் வரூஉ மிடையிடைக்
கள்வர்போ னோக்கினு நோக்குங் குறித்தது
கொள்ளாது போகாக் குணனுடைய னெந்தைதன்
னுள்ளங் குறைபடா வாறு.

இது தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி அவனோடு உறழ்ந்து சொல்லி அவனது நீக்கத்துக்கண் அவன்குறை *மறுமைக்கு ஏற்பன சொல்லித் தலைமகளைக் குறைநயப்பித்தது.

இதன் பொருள்.

(௧) எல்லா (௨) விஃதொத்த னென்பெறான் கேட்டைக்காண்
(௩)செல்வங் கடைகொளச் சாஅய்ச் (௪)சான்றவ
ரல்லல் களைதக்க கேளி ருழைச்சென்று
(௫)சொல்லுத லுற்றுரைக் கல்லா தவர்போலப்
(௬)†பல்லூழ் பெயர்ந்தென்னை நோக்குமற் றியானோக்கின்
மெல்ல விறைஞ்சுந் தலை

---

௧. (அ) "எல்லாவிஃதொத்தனென்பெறான் கேட்டைக்காண்" என்பது எல்லா வென்பது பெண்பான் மேல்வந்ததற்கும் (தொல். பொருளி. சூ. ௨௪. 'முறைப்பெயர்' இளம்;) (ஆ) "எல்லா விஃதொத்தன்" என்பது இடைக்குறையாகிய ஒத்தன் என்பது ஒருத்தன் எனக் குறிப்பானறியவந்ததற்கும்(நன். பெயரி. சூ. ௧௨. மயிலை) மேற்கோள்.

௨. "'இஃதொத்தன்" (கலி. ௬௪: அ) என்பதன் குறிப்புப்பார்க்க.

௩. "நல் கூர்ந்துஞ் செல்வ ரிரவாதார்" நாலடி. ௨௭0.

௪. "புனத்தே வருவர்நல் லோர்குறை போலப் புகலவொன்று, மனத்தே யெழுஞ் சொல்ல மாட்டார் வருந்துவர் வண்டலம்ழகொண், டினத்தே பிரிந்த கலைவின வாநிற்ப ஈங்கிவர்தா, நினைத்தே யுழல்கின்ற தென்னறி யேனென்று நேரிழையே" அம்பிகா. அஅ.

௫. "கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார்" (குறள்.௧0௫௩)என்புழி, கடனறித லென்பதற்கு மானமறிதலென்று பொருளிசைத்து, 'அதனையறிதல் - சொல்லுத லுற்றுரைக்கலாகாமைக் கேதுவாய அதனியல்பினை யறிதல்' என இச்சொற்றொடரை முதற்சார்த்தி விளக்கமெழுதியிருத்தல் இங்கே அறிதற்பாலது.

௬. (அ) "கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கம்"(ஆ)"நோக்கினா ணோக்கி யிறைஞ்சின ளஃதவள், யாப்பினு ளட்டிய நீர்" (இ) "யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற், றானோக்கி மெல்ல நகும்" குறள். ௧0௯௨. ௧0௯௩. ௧0௯௪. (ஈ) "தன்னையான் முகத்தை நோக்கிற் றான் மூலை முகத்தை நோக்கும்" சீவக. ௧௬௨௬.

(பிரதிபேதம்) * மறுமைக்கேற்பன † பல்லூழ்ப்பெயர்ந்து.

எ - து: எடா! இவனொருத்தன் என்குறைபெறுதவன்? *இவன் கேட்டைப் பாராய்; (க)அறிவுடையோர் தம்முடைய செல்வம் முடிவை அடைகையினாலே மிடித்துத் தம்முடையவருத்தத்தைக் களைதல்தக்க (உ.)உறவானவரிடத்தே சென்று தங்குறையை அவர்க்கு வாய்விட்டுச் சொல்லத்தொடங்கிப் பின்னை அதனை முடியச் சொல்லமாட்டாதிருப்பாரைப்போலத் தான் (௩)கூறக் கருதியதனைக் கைவிட்டு என்னைப் பலமுறையாகப் பார்க்கும்; †பின்னையான் தன்னைப்பார்க்கின் தான் மெத்தெனத் தலையிறைஞ்சி ‡நிற்கும்; எ - று.

இது தலைவன் தம்மிடத்து வருகின்றமைகண்டு தலைவிக்குக்கூறிப், பின்னர் அவனெதிர்சென்று அவனை || நோக்கிக் கூறுகின்றாள்.

எ (ச) ×எல்லாநீ, முன்னத்தா னென்று குறித்தாய்போற்காட்டினை
(ரு)நின்னின் விடாஅ (௬)நிழற்போற் றிரிதருவா
யென்னீ **பெறாதநீ தென்

எ - து: எடா! நீ குறிப்பாலே எம்மோடு ஓர் நட்புச்செய்யக் குறித்தாய் போல எமக்கு அறிவித்தாயாய் நின்னைவிட்டு நீங்காத நிழற்போல என்னை விட்டுநீங்காமற்றிரி தருகின்றவனே! நீ பெறாத குறை ††யாது? அதனை இது வென்று ‡‡கூறு; எ - று.

இது குறையுறவுணர்தல்.

---

க. "இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந், திண்மையுண் டாகப் பெறின்" குறள். ௬௮௮.

உ. (அ) "செழுங்கேளிர் நிழல்சேர"..........(ஆ) "பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல், சுற்றத்தார் கண்ணே யுள" குறள். ௫௨௧.

௩. "கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக், கரந்த காமம்" அகம் ௧௬௮.

ச. (அ)"எல்லாநீ..............பெறாதநீ தென்" என்பது தோழிதலைவனை விளித்துக்கூறலின் வழுவாய் அமைந்தது" என்பர், நச். (தொல். பொருளி. சூ. உ௬.) (ஆ) விளியேற்குமென எடுத்தோதாதனவற்றுள் இருபாற்கும் பொதுவாகிய ஆகார வீறாகிய எல்லாவென்பது எடா வென்னும் பொருளில் வருதற்கு "எல்லாநீ முன்னத்தா னென்று குறித்தாய்போற்காட்டினை" என்பது மேற். தொல்.விளி. சூ. ௧௨. நச்.

ரு. "நின்னின் விடாஅ..............பெறாதநீதென்" என்பது குறையுறவுணர்தற்கு மேற்கோள்; தொல். களவு. சூ. ௩௬. நச்.

௬. "நிழறன்னை, வீயா தடியுறைந் தற்று" குறள். உ0௮.

(பிரதிபேதம்) * இவனுடையகேட்டை. † பின்யான், ‡ நிற்குமெனத் தோழி தலைவியை நோக்கிக்கூறினாள் இது, || நோக்கி மேற்கூறுகின்றாளென்று கொள்க, × எடாநீ **பெறாததென் ††யாதுதான் அதனை, ‡‡ கூறென்றாள்.

௰ சொல்லின், மறுதீவாண் மன்னோ விவள்

எ - து: *யான் என் குறையைச்சொல்லின் இவள் மிகவும் மறுதிருவ் யாளோ ; † எ - று.

இது தலைவன் தன் நெஞ்சோடுசொவினது. "ஐயக் கிளவி யாடூஉவிற் குரித்தே" (௧)என்பதனுன் ஐயக்கிளவி தலைவற்குரித்தாய் வந்தது.

மறுதீவாள், வினைத்திரிசொல். ஓகாரம், வினு.

௧௧ (௨)செறுஅது, (௩)ஈத லிரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலிற் சாதலுங் கூடுமா மற்று

எ - து: அங்ஙனம் உசாவித் தம்பால் இரந்தவர்களுக்கு ‡யாதானு மொன்றைமுகமாறாது ஈதலைநடத்தாதுஉயிர் || வாழலிற்பின்னைச்சாதலுங்கூடு மென்றான் ; எ - று.

௧௩ (௪)இவடந்தை, காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள் யாதுநீ வேண்டி யது

---

௧. தொல். பொருளி. ௬. ௪௪. இச்சூத்திரவுரையில் இச்செய்திக்கே "சொல்லின்............விவள்" என்பது மேற்கோள்.

௨. (அ) "உயர்ந்தேந்து மருப்பிற் கொல்களிறு பெறினுந், தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலெ னுவந்துநீ, யின்புற விடுதி யாயிற் சிறிது, குன்றியுங் கொள்வல்" (ஆ) அகனக வாரா முகனழி பரிசி, லாளி லாளர் வேளா ரல்லர்" (இ) "உண்ணெகிழ்ந் தீயிற் சிறிதெனினுங் குன்றுபோற் கூடும் பயன்" (ஈ) "இல்லார் மொழிந்தவை, மென் மொழியா லுண்ணெகிழ்ந் தீவானேல் விண்ணோரா, வின்மொழியா லேத்தப்படும்" (உ) "நகை முகமே நாண்மலரா, வின்மொழியின் வாய்மையே தீங்காயா-வண்மை, பலமா நலங்கனிந்த பண்புடையார்"

௩. (அ) "இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்காற், றன்மெய் துறப்பான் மலை" கலி. ௪௩: ௨௬ - ௨௭. (ஆ) "கருங்கட லுடுத்த மல்லன் ஞாலத்துச், செம்மையின் வழாஅது கொடைக் கடன் பூண்டு, வாழ்வது பொருந்தா தாகிற், சாவது மினிதவர் வீவது முறு மே" யா-வி. ௬. ௫௩. (இ)"மள்கலில் பெருங்கொடை மருவி மண் ணுளோ, ருள்கிய பொருளெலா முதவி யற்றபோ, தெள்கலி லிரவ லர்க் கீவ தின்மையால்,வெள்கிய மாந்தரின்" கம்ப. கார்காலப் ௧௦௩.

௪. (அ) "காமஞ்சாலா விளமை யோள்வயின்" என்னும் சூத்திரவுரையில் "புல்லித்தோன்றுங் கைக்கிளைமெனவே காமஞ்சான்ற இளமையோள் கண் நிகழுங்கைக்கிளை இத்துணைச் சிறப்பின்றாயிற்று; அஃது 'எல்

(பிரதிபேதம்) *அதுகேட்ட தலைவன்யான் † எனத் தன்னெஞ்சொடுசாவினான், இது "ஐயக் கிளவியாடவர்க்கு, ‡யாதானுமொன்று முகமறாது, ||வாழ்தலின்.

எ-து: அது கேட்ட தோழி இவள் தந்தைஇரப்பார்மேலுள்ள*காதலினால் இரவலர்யார்க்குஞ் சீரிய †பொருள்களைக் கொடுக்கும், நீவேண்டியபொருள் ‡ யாதுதானென்றாள்; எ - று.

இஃது "உயர்மொழிக் குரிய வுறழுங் கிளவி, யையக் கிளவியாடூஉவிற் குரித்தே" (க)என்பதனால், தோழி உறழ்ந்துகூறினாள்.

௧௫ பேதாய், பொருள்வேண்டும் புன்கண்மை யீண்டில்லை யாழ
மருளி மடநோக்கி(உ)னின்றோழி யென்னை
யருளீயல் வேண்டுவல் யான்

எ - து: அதுகேட்ட தலைவன் கூற்றின் குறிப்பறியாதவளே! என்னிடத்துப் பொருளை இரக்கும் மிடியில்லை. மருண்டு மடப்பத்தையுடைத்

---

லாவிஃதொத்தன்' என்னுங் கலியுள் 'இவடந்தை, காதலின்யார்க்குங் ..........வேண்டுவல்யான்" எனவரும். இது கைகோளிரண்டினுங் கூறத்தகாத வாய்பாட்டாற் கூறலிற் கைக்கிளை யென்றார். குறிப் பென்றதனாற் சொல்லியின்புறினும் தலைவன்றன் குறிப்புநிகழ்ந்தது புறத்தார்க்குப் புலனாகாதென்பதூஉம் அகத்து நிகழ்ச்சியறியும் மனை வியர்க்காயிற் புலனாமென்பதூஉங் கொள்க" என்பர் நச்; தோல். அகத். சூ. ௫௦. (ஆ) "வைகல் வைகலை யவ் விவ்வழிக், கையுறையேந்தி னிர் வருதிர் மற்றஃ, தறிகலம் யாமெமக் குரைப்பிற், பெறுகுவி ரெந்தை பெருவண்மையனே" தமிழ்நெறி. மேற்கோள்.(இ)"வேண்டுவ கொடுக்கும், போதல் வேண்டா பொருட்குறை வுண்டெனி, னேத மில்லை யிவணி ராமின்" பெருங். (௩) சூ: ௧௮௧ - ௩.

க. தோல். பொருளி. சூ. ௪௪. 'உயர்மொழிக்குரிய வுறழுங் கிளவி' என் புழி உறழ்ந்து கூறலை நால்வகைப்படுத்தி, "ஈத லிரந்தார்க்கொன் றாற்றுதுவாழ்தலிற், சாதலுங் கூடுமாமற்று" எனத் தலைவன் கூறிய வழி, "இவடந்தை காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள், யாதுநீ வேண்டியது" எனவும், ("பேதாய் பொருள்வேண்டும்........ வேண்டுவல் யான்" எனத் தலைவன் கூறியவழி) "மண்டமரட்ட களி றன்னான் றன்னையொரு, பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ" எனவும் தோழி உறழ்ந்து கூறினாளென்று கூறி, 'இஃது அவன் வருத்தத்தில் எதிர் கூறத்தகாதன கூறலின் வழுவாய்த் தலைவி கருத்தறிந்து உடம்படவேண்டுமென்று கருதுதலின் அமைந்தது' என்பர். நச்.

உ. "இருளுறழ் கூந்தலா ளென்னை, யருளுறச் செயினுமக் கறனுமா றதுவே" கலி. ௪௦: ௩௩ - ௩௪.

(பிரதிபேதம். *காதலினால் யார்க்கும் †பொருள்கள்கொடுக்கும் ‡யாதுதானென்றாள் பேதாய்.

தாகிய நோக்கினையுடைய நின் தலைவி என்னை அருளுதலை யான் * இரப்பேனென்றான்; எ - று.

௧௮ அன்னையோ,

எ-து: † அத்தன்மையையோ? எ - று.

இஃது அதுகேட்ட தோழி இவனிடத்துக் களவொழுக்கம் அறியாள் போன்றுகூறியது.

(௧)மண்டம ரட்ட களிறன்னான் றன்னையொரு
(௨)பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ

எ-து: ‡மிக்குச் செல்கின்ற போரிலே பகைவரைக்கொன்ற களிறுபோல்வான்றன்னை ஒரு மகளாயிருக்கின்றவள் அருளும்படியாகக் கிடந்த குறை எத்தன்மையதோதான்; ||எ - று.

இது தோழி தலைவன் நீங்கியபின்னர்த் தலைவியோடுசொவியது.

௨௦ ஒண்டொடி, நாணிலன் மன்ற விவன்

ஆயின் ÷ஏஎ;

௨௨ (௩)பல்லார்நக் கொள்ளப் படுமடன் மாவேறி
மல்லலூ ராங்கட் படுமே நறுநுத

---

௧. "மண்டமர் முருக்குங் களிறனை யார்க்குப், பெண்டிர் கூறும் பேறறிவுண்டோ" மணி. ௧௮: ௧௩௦-௩௧.

௨. பெண்டிரென்பத னீற்றிலுள்ள 'இர்' என்னு மிடைச்சொல் முன்னிலையிலன்றி 'ர்' 'அர்' என்பவைபோலப் படர்க்கைப் பன்மையிலும் வரும் விகுதிபோலும்; மகளிர், கேளிர், வேளிர், புத்தேளிர் முதலியவற்றில் இவ்விகுதி வருதலும் இச்சொல் "பெண்டிரும் வாழாரோ" (நாலடி. ௧௧௪) "பெண்டிராயிற் பிறர் நெஞ்சு புகாஅர்" (மணி. ௨௨: ௩௬) "பெண்டிர் மதியார்" (வளையாபதி) எனப் பன்மைவினைபெற்று முடிதலும் இக்கருத்தை வலியுறுத்தும்; இங்கே இதனை, "பத்தினிப் பெண்டிர்" (மணி. ௧௭: ௧) என்புழிப்போல ஒருமையில் மயங்கிவந்ததென்று கொள்க.

௩. (அ) "மாவென மடலுமூர்ப பூவெனக், குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப, மறுகினார்க்கவும்படுப,பிறிதுமாகுப காமங்காழ்கொளினே" குறுந். ௧௭. (ஆ) "மாவென் றுரைத்து மடலேறுப மன்று தோறும், பூவென் றெருக்கி னிணர்சூடுப புண்மை கொண்டே, பேயென்

(பிரதிபேதம்) * இரப்பேனென்றான். இது உயர்மொழிக்குரிய வுறழுங்கிளவி.............. யுரித்தே என்பதனாற் றேருழியுறழ்ந்து கூறினன் அன்னையோ † அதுகேட்ட தோழி அத்தன்மையோவென்றிவனிடத்துக்களவொழுக்கமறியாளபோன்று கூறினாள் மண்டமரட்ட. ‡ அதுகேட்டுத் தலைவன் நீங்கிய பின்னர் மிக்குச் செல், ||எனத்தலைவியொடுசொவினாள். ஒண்டொடி ÷ஏஎ

னல்காள்(க)கண் மாறி விடினெனச் செல்வானு
மெள்ளி நகினும் வரூஉ மிடையிடைக்
(உ)கள்வர்போ னோக்கினு நோக்குங் குறித்தது
கொள்ளாது போகாக் குணனுடைய னெந்தைதன்
னுள்ளங் குறைபடா வாறு

எ - து: *ஒண்டொடீ! இவன் எந்தைதன் உள்ளங் குறைபடாதபடி வேண்டுவன †கொடுத்துத் தான் குறித்ததொன்று கைப்பற்றுமற் போகாக் குணத்தையுடையன், அதனால் நீ அருளினுந் தாழ்வில்லை; அவன்றான் குறையுற்றுநிற்கின்ற காலத்து யான் தன்னை இகழ்ந்து சிரித்தாலும் பலகாலும் வரும்; அக்குறையுறவுக்கு நடுவேநடுவே கள்வர் தாங்குறித்த‡பொருளை நோக்காது நோக்குமாறுபோல நின்னை மனநோக்காதுநோக்கும்; அதனான் இவனுயின் அறுதியாக என! || நாணமிலன். நாணமின்மையால் இவன் போகின்ற போக்குப்பலருஞ் சிரித்து இகழப்படு மடன்மா யான் ஏறும்படி நறிய நுதலினையுடையாள் அருளாளாய் அருளைமாறியேவிடின் அவளோடு என்னிடை நிகழ்ந்தது ஊரிடத்தே அலராமேயெனக் கருதிச்செல்வான் ÷ போலேயிருந்தது; எ - று.

இஃது உசாவியபின், தோழி அவளை நோக்கி, மேல் இதற்குத்தக்கது நீ அறிந்து செய்யெனக் குறைநயப்பித்தது.

(௩)எள்ளிநகினும்வருமென்றது தன் கண்நிகழ்ந்த எள்ளல்பொருளாகநகை பிறந்தது. எறி,எற.(௪)எந்தைஎன்றது,தலைவிதந்தையை. நோக்கினுமென்றது

றெழுந்து பிறரார்ப்பவு நிற்ப காம, நோய்நன் கெழுந்து நனிகாழ் கொள்வ தாயினக்கால்" வளையாபதி.

க. (அ) "பிறனைக், கொலையொக்குங் கொண்டுகண் மாறல்" நான். அ. (ஆ) "கொண்டுகண் மாறல் கொடுமையிற் றுவ்வாது" பழ. ௩எ. (இ) "கண்மாறி நீங்கினன்" மணி. ௩: ௬0 - ௬௧.

உ. வினைபயன் மெய்யுரு வுவமை கட்குரிய வென்ற பாகுபடுக்கப்பட்ட உவமச்சொற்களன்றி மரபான் வருவனவு முண்டென்பதற்கு, 'கள்வர் போனோக்கினு நோக்கும்' என்பது மேற்கோள்; தொல். உவமை. சூ. கஎ. இளம்.

௩. தொல். மெய்ப். சூ. ௬. பேர். உரையிலும் இப்பகுதி இதற்கே மேற்.

௪. "அன்னை யென்னை யென்றலு முளவே" என்புழி உம்மையாற் பிறவு முளவென்றுகூறி, தோழி தலைவிதந்தையை எந்தை யென்றுகூறிய தற்கு 'எந்தைதன், னுள்ளங் குறைபடா வாறு' என்பதை மேற்கோள் காட்டுவர் நச்; தொல். பொருளி. சூ. ௫உ.

(பிரதிபேதம்) * உசாவியபின்னும் அவளைநோக்கி ஒண்டொடீ † கொடுத்துய்த்தான் குறித்த ‡பொருளை நோக்குமாறு ||நாணமிலன் இந்நாணமின்மையால்இவன் ÷ போல விருந்ததுமேல்இதற்குத்தக்கது நீயறிந்துசெய்யெனக்குறைநயப்பித்தாள்எள்ளி.

நோக்கனோக்கம். ஏஎ! இகழ்ச்சிக்குறிப்பு, "முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச்சொ, னிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே." (க)என்பதனான், எல்லாவிஃதொத்தன் எல்லாவென இருபாற்குமாய்நின்றது.

இதனால், தலைவிக்கு நினைத்தல் பிறந்தது.

இது கைகோள் இரண்டினுங் கூறத் தகாதனவாகப், பொருள் யாது நீ வேண்டியதென்றும், அருளியல் வேண்டுவல் யானென்றுங், கூறலிற் "காமஞ் சான்றவிளமையோ" (உ)ளாக நிகழ்ந்த கைக்கிளையாம்.

இது தனிவிரவின நெடுவெண்பாட்டும்ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டும் ஓரடியானென்றும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டு மூன்றும் கொச்சகமும் ஓரடியானென்றும் தனிச்சொல்லும் வெள்ளைச்சுரிதகமும் பெற்ற கொச்சகக்கலி. (௨௫)

(௬௨.) ஏஎ யிஃதொத்த னாணிலன் றன்னொடு
மேவேமென் பாரையும் மேவினன் கைப்பற்று
மேவினு மேவாக் கடையு மஃதெல்லா
நீயறிதி யானஃ தறிகல்லேன் பூவமன்ற
௫ மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய் நின்னையான்
புல்லினி தாகலிற் புல்லினெ னெல்லா
தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று;

௬ சுடர்த்தொடீ, போற்றாய்களைநின்முதுக்குறைமைபோற்றிக்கேள்
வேட்டார்க் கினிதாயி னல்லது நீர்க்கினிதென்
றுண்பவோ நீருண் பவர்;

௧௨ செய்வ தறிகல்லேன் யாதுசெய் வேன்கொலோ
வைவா யரவி னிடைப்பட்டு நைவாரா
மையின் மதியின் விளங்கு முகத்தாரை
வௌவிக் கொளலு மறனெனக் கண்டன்று;

௧௬ அறனு மதுகண்டற் றாயிற் றிறனின்றிக்
கூறுஞ்சொற் கேளா னலிதரும் பண்டுநாம்
வேறல்ல மென்பதொன் றுண்டா லவனொடு
மாறுண்டோ நெஞ்சே நமக்கு.

---

க. தொல். பொருளி. சூ. ௨௬. இவருரையில் இதற்கு இப்பகுதிகள் மேற்கோள். இந்நூற்பக்கம் ௩எ௦: க. (அ) ௩எக: ௪. குறிப்புப்பார்க்க.

உ. தொல். அகத். சூ. ௫௦. இந்நூற்பக்கம் ௩எ௨: ௪.(அ) குறிப்புப்பார்க்க.

இஃது "ஏறிய மடற்றிறம்" என்னும்(க)சூத்திரத்து மிக்க காமத்து மிட லென்றதனால்,தலைவனுந் தலைவியும் உறழ்ந்துகூறித் தலைவி கூடக் கருதிய பெருந்திணை.

இதன் பொருள்.

(உ)எல யிஃதொத்த னணிலன் றன்னொடு
மேவே*மென் பாரையு மேவினன் கைப்பற்று
மேவினு மேவாக் கடையு மஃதெல்லா
நீயறிதி யானஃ தறிகல்லேன் (௩)பூவமன்ற
௫ மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய் நின்னையான்
புல்லினி தாகலிற் புல்லினென (௪)†னெல்லா
தமக்கினி தென்று வலிதிற் (௫)பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று

---

க. தொல். அகத். சூ. ௫க. இச்சூத்திரத்தின் நச்சினார்க்கினியருரையில் "எல இஃதொத்தன்...............நன்றாமோ மற்று" என்பது மிக்க காமத்து மிடலுக்கு மேற்கோள்.

உ. (அ) எல இஃதொத்த னணிலன்றன்னொடு" என்பது எல யென்பது இசைநிறையாய் வந்ததற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. உ௪. நச். இ-வி. சூ. உ௭அ. (ஆ)செறற் சொலென்பது செறலினாற் கூறுஞ்சொல் என்று கூறி, 'எல யிஃதொத்தன்' என்றவழி இஃதென்பது செறல் பற்றி வந்ததென்றும் (தொல். கிளவி. சூ. ௫௫. 'குடிமை') (இ) ஈரள பிசைக்கு மிறுதியிலுயிர் அளபெடை பெற்றவருங் காலத்திற் பொருள்வேறபடுமென்றகூறுழி எ, அளபெடுத்துவருதற்கு "எல இஃதொத்தன்" என்டதைமேற்கோள்காட்டி எல இகழ்ச்சியை யுணர்த்திற் றென்றும் (தொல். இடை. சூ. ௩உ. 'ஈரளபு') கூறுவர்; தெய். (ஈ) எல இசைநிறையாய் வந்ததற்கு, சேனாவரையர் உரையிற் காணப்படும் "எல இஃதொத்தனென்பெறான் கேட்டைக்காண்" என்பதில் பின் இரு சீரும் கலி. சுக-ம் பாடலில் உள்ளவை; எழுதுவோரால் மயங்கிச் சேர்த்தெழுதப்பட்டனபோலும்; தொல். இடை. சூ. உ௪.

௩. "பூவமன் றன்று சுனையு மன்று" கலி. ௫௫: கஉ.

௪. எல்லா வென்பது ஆண்பான்மேல் வருதற்கு "எல்லா............மற்று" என்பது மேற்கோள்; தொல். பொருளி. சூ.உ௪. 'முறைப்பெயர்'இளம்.

௫. (அ) "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" குறள். ௩கக, (ஆ) "பிறர்க்கின்னா செய்தலிற் பேதைமை யில்லை" அறநெறி. க௫.

(பிர திபேதம்) * என்பாரைமேவினன் †எல்லாந்தமக்கினி.

எ - து: *இவனொருத்தன் தன்னோடுபுணர்ச்சிக்குறிப்பின்றிநிற்பாரையும் தான் புணர்ச்சிக்குறிப்புடையனுய்க் கையாலே வலிதிற் பிடித்துக்கொள்ளும், ஆதலால் எள நாணிலனுயிருந்தானெனத் தலைவி கூறினாள்; அதுகேட்ட தலைவன் அப்புணர்ச்சிக்குறிப்பினது பகுதியாகிய மெய்ப்பாடெல்லாம் நின்னிடத்துப்பொருந்துதலைச் செய்யினும் பொருந்தாத இடத்திலுமுள்ள நன்றுதீது நீ அறியக்கடவை; யான் புணர்ச்சிக்குறிப்பை அறிதலைச்†செய்யேன்; பூநெருங்கின மெல்லிய கொத்துநீங்காத கொடியையொப்பாய்! நின் மேனி புல்லுதற்கு இனிதாயிருக்கையினாலே நின்னை யான் புல்லினேனென்றான். அது கேட்ட தலைவி எடா! தமக்கு இனிதாயிருக்குமென்று கருதிப் பிறர்க்கு இன்னாதனவற்றை வலிதிற் ‡செய்வது இன்பத்தைத் தருமோவென்றாள்; எ - று.

எள, இகழ்ச்சிக்குறிப்பு.

இது "வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல், || மரீஇய மருங்கினுரித்தென மொழிப" (க) என்பதனான் அடியோன் தலைவனுயவழித் தலைவி வேட்கைமறுத்து உரைத்தது.

சுo ÷சுடர்த்தொடீ;(உ)போற்றாய்களைநின்முதுக்குறைமைபோற்றிக்
வேட்டார்க் கினிதாயி ×னல்லது நீர்க்கினிதென் [கேள்
றுண்பவோ நீருண் பவர்;

கஉ செய்வ தறிகல்லேன் யாதுசெய் வேன்கொலோ
(ந)வைவா யரவி ∴னிடைப்பட்டு நைவாரா

க. தொல். பொருளி. சூ. கஎ. இச்சூத்திரத்தின் நச்சினார்க்கினியருரையில் "தமக்கினிதென்று..............மற்று" என்பது இச்செய்திக்கு மேற்.

உ. "போற்றாய் .........நீருண்பவர்" என்பது தீக்காமம் இழிந்தோர்க்குரிமையின் அடியோர் தலைவராய்வந்த கைக்கிளைஎன்பது, தொல். அகத். சூ. உந இவ்வுரையிற்காணப்படுகின்றது. இந்நூற்பக்கம்நஅo: உ (அ) குறிப்புப்பார்த்தால் இஃது இளம்பூரணர் கருத்தை மறுத்ததென்பது விளங்கும். இதற்கு மாறாக இச்செய்யுளின் உரை முதலிறுதிகளில்இதுபெருந்திணையென்றுள்ளது. இவைஆராய்தற்பாலன.

ந. ஐவாயரவு: (அ) "ஐவா யரவுற்ற தன்னவின் ஞவிட ராற்றியென்போ, லெவ்வா றிருந்திர்நீ ரெல்வளையீர்" தஞ்சை. உருஅ. (ஆ) "ஐவாய் வயநாகம்" சளவழி. உசு. (இ)"வருவரையு, ளைவாய நாகம்" திணைமாலை. கந. (க) (ஈ) "ஐவாயரவி னவிராரழல் போன்று சீறி" சீவக. உநசரு. (உ)"ஐந்தலை நாக மழல வெகுட்டி" பெருங். (உ) அ: உக. (ஊ) "ஐந்தலையரவு தன்வா யைந்துடன் கவர்ந்தநஞ்சிற், றன்ப மோர் கடிகையல்லாற் றஞ்சினேற் றொடர்ந்தி டாவாம்" மேரு. கநஅ.

பிரதிபேதம்) *எள இகழ்ச்சிக்குறிப்புஇவனொரு†செய்யேன்; முகைநெருங்கின ‡ செய்தது இன்பத்தைத் தருமோவென்றாள் இது || மரீமருங்கின். ÷ சுடர்த்தொடீஇ. × அல்லந்த. ∴ இடைப்பாடு.

(க)மையின் மதியின் விளங்கு முகத்தாரை
*வெளவிக் கொளலு மறனெனக் †கண்டன்று

எ - து: அதுகேட்ட தலைவன் சுடர்த்தொடீ! நின் முதுமைக்கண் உறைகின்ற நிலைமை ஈண்டுப் போற்றாது கைவிடு; யான் கூறுகின்றதனைப் பேணிக் கேள்; நீருண்பார்சிலர் தண்ணீரை விரும்பினர்க்கு அஃது இனிதாயின் உண்ணுமதல்லது ‡அந்நீர்க்கு இனிதாயிருக்குமென்று கருதி உண்பரோ உண்ணார் காணென்றான்; என்று பின்னும் ஐந்துவாயினையுடைய பாம்பினது பார்வையிலே அகப்பட்டு வருத்தம்வந்து மேற்செய்யுங் காரியம் அறிகல்லேன்; இனி யாதுசெய்வேன்கொல்லென நெஞ்சொடுகிளந்து, மறுவில்லாத மதி போல விளங்கும் முகத்தினையுடைய மகளிரை வலிதிற்புணர்தலும் (உ) ஒரு மணமென (ந) நூல்கண்டதெனத் துணிந்துகூறினான்; எ - று.

ஐவாயரவென்றது தலைவியை.

கசு அறனு மதுகண்டற் றாயிற் றிறனின்றிக்
கூறுஞ்சொற் கேளா னலிதரும் (ச)பண்டுநாம்

(எ) "ஐந்தலை நாக மகன்முழை கண்டஞ்சுமன்று" திருவாவடுதுறைக் கோவை. கசுo.

க. "அவிர் மதிக்குப் போல, மறுவுண்டோ மாதர் முகத்து" குறள். கககஎ.

உ. (அ) ஒருமண மென்றது இராக்கத மணத்தை; அஃது: ஒருதலைவன் ஒரு தலைவியை அவளானும் அவளுடைய தமரானுமன்றி வலிதிற் பெறுதல். (ஆ) "மலிபொற்பைம் பூணுளை மாலுற்ற மைந்தர், வலிதிற் கொண் டாள்வதே யென்ப - வலிதிற், பராக்கதஞ் செய்துழலும் பாழி நிமிர்தோ, ளிராக்கதத்தார் மன்ற லியல்பு" தொல். களா. சூ. க. மேற்கோள்.(இ)"மாதர் தங்களை வன்மையிற் பற்றுத லரக்கர்,நீதி" பேரூர். முசுகுந்தன். ருக.

ந. நூலென்றது வேதத்தை; "மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுள்" (தொல். களா. சூ. க.) "அந்தண ரருமறை மன்ற லெட்டனுள்" (இறை. சூ. க.) என்பவையும் அவற்றினுரையும் பார்க்க.

ச. (அ)"பண்டுநாம்...............நமக்கு" இது மறுத்தெதிர்கோடற்குமேற் கோள். நாற்கவி. சூ. கஉஎ. (ஆ) "ஒன்றி யுயர்ந்த பால தாணையி, னொத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப" (தொல்.களவியல். சூ.உ. நச்) என்பதும் அதன் உரையும் (இ) "வீரியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா, ரளியின்மை யாற்ற நினைந்து" (குறள். கஉoகு.) என்பதும் அதன் பரிமேல். உரையும்(ஈ) "திட்டி விடமுண நின்னுயிர் போநாட், கட்டழ லியத் தென்னுயிர் சுட்டே, னுவவன மருங்கி னின் பாலுள்ளங்,

(பிரதிபேதம்) *வைஇக்கொளலும். †காண்டன்று கொண்டன்று ‡ அந்நீர் இனிதாயிருக்கும்.

வேறல்ல மென்பதொன் றுண்டா லவனொடு
மாறுண்டோ நெஞ்சே நமக்கு

எ-து: அதுகேட்ட தலைவி நூல் உயர்ந்த மணத்தைக்கூறப்பட்டு(௧)உலக ஒழுக்கமும் அத்தன்மைத்தாயிருக்குமாயின், அவனும் யான் மறுத்துக்கூறுஞ் சொல்லைக் கொள்ளாது திறனன்றி நலியுமாயின், அவையேயன்றி அவன் மனத்து முற்பிறப்பில் யானும் அவளும் வேறல்லமென்பதொன்று அவனிடத் துண்டாயிருக்குமாயின், நெஞ்சே அவனோடு நமக்கு இனி மாறுபாடுண்டோ வெனப் புணர்ச்சிக்கு உடம்பட்டுக்கூறினாள்; எ - று.

அறனுமதுகண்டற்றென்பது ஆங்குநெஞ்சழிதல். தான்மறுத்துரைப்பவும் தன்மேல் அவன் விருப்பஞ்செய்தமை கண்டு பண்டு நாம் வேறல்லமென்ப தொன்று அவனிடத்துண்டாலென்றாள். (௨)இது தீதாமாதலான் அடியோர் தலைவராகவந்த பெருந்திணை.

---

தவிர்விலை னாதலிற் றலைமக டோன்றி” (௨) “நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉ, மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம், பண்டும் பண்டும் பல்பிறப் புளவாற், கண்ட பிறவியே யல்ல காரிகை” மணி. ௨௧: ௧௧-௧௪. ௨௯-௩௨. என்பவைகளும் ஈண்டு ஒப்புநோக்கற்பாலன.

௧. (அ) “விட்டுவிளங்கு மணிமுடியாய் வேதஞ்சொன்ன பிரமாதி, யெட்டு மணத்தி லொருமணமா மரக்கர்குலத்தி னியல்பறிவை, கட்டுமரிய காவலையுங் கலக்கிப் புக்குக் கன்னியரை, முட்டி யவரைக் கொடு போந்து வேட்கை முறையே யென மொழிந்தாள்” இராமா. திக்கு விசயப். ௧௩௮. (ஆ) “கையின் மாலை யிவற்கெனக் கன்னியர், வெய்ய நெஞ்சொடு மின்னென வந்தவர், வைய மன்னன் வயநிலைநோக்கியே, யையமுற்றன ரன்புறு காதலார்; - ஏனை வேந்த ரெதிரிவரைப்பெருந், தானை சூழ்மணிச் சந்தனத் தேற்றியே, சேனை மாமதஞ் சோருங் கடதட, யானை யென்ன விளவலொ டேகினான்; - முறையினாலன்றி மொய்ம்பிற் கவர்வதெந், குறையினாலெனக் கோக்குலங் கூடிவந், திறைவனோடெதி ரேற்றவில் வீரரைப், பிறைமுகக்கணை யாற்பிளந் தோட்டினான்; ..........- அம்பிகைக்கு மம் பாலிகைக்கும்பதி, யெம்பி யேயெழி லாலென் றிசைவுறத், தம்பி தன்னைத் தனஞ்சயன் றன் னெதிர், வம்பினான்மிகு மாமணஞ் சேர்த்தினான்” வில்லி. குருகுல. ௧௨௩- ௧௨௮. (இ) “சூழ்படை கிழியத்தெய்வச் சுடர்மணிப் பொலந்தேர் தூண்டி, யாழ்கட லவனியாளு மரசருங்காண வாங்குப், போழ்படு திங்களன்ன புதுநிலாக் கற்றைதூற்றும், காழிள முலையினாளைக் கவர்ந் தனன் கமலக் கண்ணன்..............ஆழிதரு மின்னமுத மன்னவளை வேட்டான்” பாக. (௧௦) உருக்குமிணி மணத்திற முரைத்த. ௫௨-௭௩.

௨. (அ) “எவன் மரபின்” என்னும் சூத்திரவுரையில் இச்செய்யுளை மேற்கோள் காட்டி, இதனுள் வெளவிக் கொளலு மறனெனக் கண்டன்று

இதனுல் இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது தளைவிரவின நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டும் கொச்சகமும் வெள்ளைச்*சுரிதகமும் பெற்று வந்த கொச்சகக்கலி. (உசு)

(சுa.) நோக்குங்கா ணேக்கித் தொழூஉம் பிறர்காண்பார்
தூக்கிலி தூற்றும் பழியெனக் கைகவித்துப்
போக்குங்காற் போக்கு நினைந்திருக்கு மற்றுநாங்
காக்கு மிடமன் றினி;

எல்லா வெவன்செய்வாம்;

௫ பூக்குழாய் செல்ல லவனுழைக் கூஉய்க்கூஉய்
விரும்பியான் விட்டேனும் போல்வலென் றோண்மேற்
கரும்பெழுது தொய்யிற்குச் செல்வலீங் காக
விருந்தாயோ வென்றாங் கிற;

௧0 அவனின்; திருந்தடி மேல்வீழ்ந் திரக்குநோய் தீர்க்கு
மருந்துநீ யாகுத லான்;

௧௨ இன்னும்; கடம்பூண் டொருகானீ வந்தை யுடம்பட்டா
ளென்னுமை யென்மெய் தொடு;

௧௪ இஃதோ வடங்கக்கேள்;

நின்னொடு சூழுங்கா னீயு நிலங்கிளையா
வென்னொடு நிற்ற லெளிதன்றோ மற்றவன்
றன்னொடு நின்று விடு.

இது தலைமகற்குத் துறைநேர்ந்த தோழி அவனிலைமை தலைமகட்குக் கூறி அவளுரைத்த மாற்றத்தால் அவள் குறிப்பறிந்து இவ்வகையான தலைவற்குக் கூறேன அவளுடன் நகையாடிக் கூட்டமுண்மை தான் அறிந்தமை தோற்றுவித்தது.

இதன் பொருள்.

---

எனவும் 'நீர்க்கினிதென் றுண்பவோ நீருண்பவர்' எனவும் தலைமகன் கூறுதலானும் தலைமகள் முனிந்துரைத்தலானும் ஊடியுணர்வாள் போல அரிதாகத் தலைமகளுடன் பட்டமையானும் இஃது உயர்ந்தோர் மாட்டுவந்த கைக்கிளை என்பர், இளம்; தோல். அகத். சூ. உசு. (ஆ) அகப்புறக் கைக்கிளை தலைமைப்பாடில்லாதவர்க் குரித்தாய்வந்ததற்கு நாற்கவி. உரைகாரரும் (நாற்கவி. சூ. உசஉ.) (இ) மிக்க காமத்து மிடலுக்கு இ-வி. உரைகாரரும் (இ-வி. சூ.௫௯௧) மேற்கோள்காட்டுவர்

(பிரதிபேதம்) *சுரிதகமும் வந்த.

(௧)*நோக்குங்கா னோக்கித் தொழூஉம் பிறர்†காண்பார்
தூக்கிலி தூற்றும் பழியெனக் (௨)கைகவித்துப்
போக்குங்காற் போக்கு நினைந்திருக்கு மற்றுநாங்
காக்கு மிடமன் றினி;
எல்லா வெவன் ‡செய்வாம்

எ-து: தான் தொழுகின்ற தன்மையைப் பிறர் காண்பாராக மனத்தாற் றூக்குதல்இல்லாதவன்(௩)நாம்பார்க்குங்கால் நம்மைநோக்கித்தொழாநிற்கும்; இங்ஙனந் தொழுது நமக்குப் பழியைத்தூற்றுமென்று கருதித் தொழுதலை விலக்கிப் போகவிடுங் காலத்து அப்போக்குத் தனக்குச் செய்யும் வருத்தத்தை நினைத்துப் போகாதிருக்கும்; ஆதலால் இனி நாம் அவனை நம்பால் வாராமற் காக்கும் (௪)காலமன்று, ||பின்னை எடீ! இங்ஙனங்காத்தற்கு அரிதானநிலைமை கண்டு மேல் என்செய்யக்கடவேங் கூறாய் ; ÷எ - று.

அதுகேட்ட தலைவி அதற்கு மறுமொழிகொடாது உடம்பட்டமை குறிப்பான் உணர்ந்தமையிற் பின்னுந் தோழி கூறுகின்றாள்.

௬ பூக்குழாய் செல்ல லவனுழைக் கூஉய்க்கூஉய்
விருப்பியான் விட்டேனும் போல்வலென் (௫)றோண்மேற்

௧. "நோக்குங்கா னோக்கித் ..............எவன் செய்வாம்" என்பது நாண மிக்கவழித்தோழியொடு உசாவியதற்கு மேற்கோள்; தொல். கள சூ. ௨0. இளம்.

௨. (அ) "கைகவிதேறல்"பொருந. கடுஎ-அ.(ஆ)"தோழியைக் கைகவியா" கலி. ௪௨.: ௨௧) (இ) "கைகவி நறுநெய்"சீவக. ௪00.

௩. "குறவர் மகட்குச் சலாமிடற் கேக்கறு குமரனை" மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், காப்பு. ௪.

௪. இடமென்பது காலமென்னும் பொருளில் வருதலை இடையென்பது, அப்பொருளில் பயின்று வருதலான் உய்த்துணர்க; புறம். ௫௪: ௨; மணி. ௪: ௧அ; சீவக. ௧௧எ௫. இல்வழி யென்பதற்கு இல்லாத காலத்தே யென்று பொருள் கூறி 'இடபொருள் காலத்தோடு மயங்கிற்று' (சிலப். ௪: ௧௧.) என அடியார்க்கு நல்லாரெழுதி யிருத்தலும் இங்கே அறிதற்பாலது.

௫. (அ) நற்றோ ளிழைத்த கரும்புக்கு" (ஆ) "தெரிவேய்த்தோட் கரும் பெழுதி" (இ) "நடாஅக் கரும்பமன்ற தோளாரை" (ஈ) "அன்றுதா னீர்த்த கரும்பணி வாடவென், மென்றோண் ஞெகிழ்த்தான் றுறை" (உ) "நெடுமென்றோட், பெய்கரும் பீர்க்கவும் வல்லன்" கலி. ௬௪:௧௧,

(பிரதிபேதம்)*நோக்கினல், † காண்பான், ‡ செய்வாநாம். || பின்னை இங்ஙன ம் ÷ என்றாள் பூக்குழாய்.

கரும்பெழுது தொய்யிற்குச் செல்வலீங் காக
*விருந்தாயோ வென்றுங் கிற;

கO அவனின், திருந்(க)தடி மேல்வீழ்ந் திரக்கு(உ)நோய் தீர்க்கு
மருந்துநீ யாகுத லான்

†எ-து: பூங்குழையினையுடையாய்! வருத்தத்தையுடைய அவனிடத்துநீ கூடுங்கூட்டத்தை யான் விரும்பி நின்னைப் பலகாலும் அழைத்தழைத்துக் கொண்டுபோய் விட்டேன்போலேயுமிருப்பேன், அவற்கு அது தோன்றாதபடி யான் அவனிடத்தே(ங)நீஎன் தோண்மேற்கரும்பாகஎழுதுங்குழம்பிற்கென்று செல்வன், நீ ஆண்டு வந்து இவ்விடமே நினக்கு இருப்பிடமாகக் கருதி இருந்தாயோவென்று என்னைத் தேடிவந்தாயாகக் கூறி அவ்விடத்தினின்று குறியிடமே போ, அப்பொழுது அவன் நோய்தீர்க்கும் மருந்து நீயாகையினாலே ‡நின்னுடைய நன்றாகிய அடிமேலேவீழ்ந்து நின்னை இரந்துகொள்ளும்; ||எ-று.

கஉ இன்னும், (ச)கடம்பூண் டொருகானீ வந்தை யுடம்பட்டா
ளென்னுமை யென்(ரு)மெய் ÷தொடு;

எ-து: அதுகேட்ட தலைவி நீ வாராய், இன்னமும் ஒருகால் அவனிடத்தே சென்று உன்குறைமுடித்தலைத் தனக்கு கடனாக அவள் ஏறட்டுக்கொண்டு கூட்டத்திற்கு உடம்பட்டாளென்று அவர்க்குக் கூறாமைக்கு என் (ச) மெய்யைத்தொட்டுச் சூளுறவாயாகவென்றாள்; எ-று.

×வாவென்றது வந்தையெனத் திரிந்தது.

---

எகூ: கரு, ககஉ: கூ. கஙக: உக - ஙO. கசங: ஙக - உ. (ஊ) "கரும்பும் வல்லியும் பெருந்தோ ளெழுதி" சிலப். உ: உக.

க "நீண்டிலே ஞயி னுய்யேன், சீரடி பரவவந்தே னருளெனத்தொழுது சேர்ந்து, நாறிருங் குழலி னாளை...........புல்லி" சீவக. உOகூஉ.

உ. "மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ" கலி. கூO: கஅ.

ங. (அ) "தூமணிக்கொழுந்து மென்றோட்டியெல்வர வெழுதினளே" சீவக. உசசஉ. (ஆ) "கழைத்தோட் கேற்பக் கழையெழுதி.................... வளையுஞ் செறித்தனரால்" வாயு. பார்ப்பதி திருமண. கஎ.

ச. "புலத்தை" (குறள். கஙOக.) என்பதற்கு, பரிமேலழகர் புலப்பாயாக வென்று பொருள் கூறி "புலத்தையென்புழி ஐகாரம் 'கடம்பூண் டொருகானீ வந்தை' என்புழிப்போல முன்னிலைவினைவிகுதி" என்று எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலது.

ரு. "மெய்தொடுகு" கலி. கூரு. உச, "அடிதொட்டேன்" (கலி. கூச: ஙகூ) என்பதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்)* இருந்தாயே,†எ-து: அதுகேட்டதலைவி அதற்குமறுமொழிகொடாது உடம்பாடுடைமைகுறிப்பான் உணர்ந்தமையிற் பின்னும்தோழி பூங்குழை. ‡ நின்னுடையவடிமேலே||என்றாள் இன்னும். ÷தொடு இ∴தோவடங்கக்கேன் எ-து, × வந்தை வாவென்றது திரிந்தது நின்றெடு. வந்தை வாராயென்றது திரிந்து நின்றது நின்றெடு.

௧௪ இஃதோ வடங்கக்கேள்;
நின்னொடு சூழுங்கா னீயு நிலங்கிளையா
வென்னொடு நிற்ற லெளிதன்றோ மற்றவன்
றன்னொடு நின்று விடு

எ-து: அதுகேட்ட தோழி யான் கூறிய குற்றம் *இதுவோ? இனி இது செய்யும்படியைச் சுருங்கக்கேள்; நின்னோடு யான் இதனை ஆராயுங்காலத்து நீயும் (க)நாணத்தால் நிலத்தைக்கீறி என்னுடனே வேறுபட்டுநின்றநிலை செய்தற்கு எளிதன்றோ? இந்நிலையைப் பின்னை அவன் தன்னுடனே நின்று பார்த்து நின்னுற்செய்தலரிதன்றோ? என்றாள்; எ-று.

இஃதோவென்றாள், "உடம்பட்டா ளென்னுமை யென்மெய் தொடு" என்றதனை. ஓகாரம், இது குற்றமன்றென மறையுணர்த்திற்று.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை தோன்றிற்று.

†இஃது, எல்லா வெவன்செய்வாமெனவும்இஃதோ வடங்கக்கேளெனவும் வழியசைபுணர்த்த சொற்சீரடிகள் வந்து ஐஞ்சீரடுச்கிய வெண்பாக்களும்வந்த வெண்கலிப்பாட்டு. (உஎ)

(௬௪.) அணிமுக மதியேய்ப்ப வம்மதியை நனியேய்க்கு
மணிமுக மாமழைநின் பின்னொப்பப் பின்னின்கண்
விரிநுண்ணூல் சுற்றிய வீரித ழலரி
யரவுக்கண் ணணியுற ழாரன்மீன் றகையொப்ப
வரும்படர் கண்டாரைச் செய்தாங் கியலும்
விரிந்தொலி கூந்தலாய் கண்டை யெமக்குப்
பெரும்பொன் படுகுவை பண்டு;

அ ஏஎ! எல்லா, மொழிவது கண்டை யிஃதொத்தன் றொய்யி
லெழுதி யிறுத்த பெரும்பொன் படுக
முழுவ துடையமோ யாம்;

உழுதாய்;

---

க. (அ) "களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா, நாணிநின்றோள்" அகம்.௧௬: ௧௫-௬. (ஆ) "சரணப் பெருவிரலா லொல்கிநின்று நிலங் கீறி, மைத்த குழலாண் மற்றவன்முன் மலர்மேன் மடந்தை யென நின்றாள்" இராமா. வரையெடுத்த: ௬. (இ) "கெண்டை யுண்கணும் புறவடி நோக்கமண் கிளைத்துமின் னெனநின்றாள்" திருவிளை. திரு மணப். ௨௩.

(பிரதிபேதம்) * இதுவே இனி † இது எல்லாவெவன் செய்வாமென வழியசைபுணர்த்த சொற்சீரடியும் வந்து,

கஉ சுரும்பிமிர் பூங்கோதை யந்நல்லா யானின்
றிருந்திழை மென்றோ ளிழைத்தமற் றிஃதோ
கரும்பெல்லா நின்னுழ வன்றோ வொருங்கே
துகளறு வாண்முக மொப்ப மலர்ந்த
குவளையு நின்னுழ வன்றோ விகலி
முகைமாறு கொள்ளு மெயிற்று யிவையல்ல
வென்னுழுவாய் நீமற் றினி;

ககூ எல்லா, நற்றோ ளிழைத்த கரும்புக்கு நீகூறு
முற்றெழி னீல மலரென வுற்ற
விரும்பீர் வடியன்ன வுண்கட்கு மெல்லாம்
பெரும்பொன்னுண் டென்பா யினி;

உங நல்லா யிதனைகேள்;
ஈங்கே தலைப்படுவ னுண்டான் றலைப்பெயின்
வேந்துகொண் டன்ன பல;

உசு ஆங்காக வத்திற மல்லாக்கால் வேங்கைவீ
முற்றெழில் கொண்ட சுணங்கணி பூணாகம்
பொய்த்தொருகா லெம்மை முயங்கினை சென்றீமோ
முத்தேர் முறுவலாய் நீபடும் பொன்னெல்லா
முத்தி யெறிந்து விடற்கு.

இஃது அருமைசெய்தயர்த்த தலைவன் வந்துழித் தலைவி எள்ளின இடத்துத் தலைவன் அவளோடு உறழ்ந்துகூறி நகையாடிக்கூட்டத்திற்கு உடம்படுவித்தது. இதற்கு விதி 'உயர்மொழிக்குரிய வுறழுங் கிளவி' (க)என்பதனுள் தலைவன் உயர்மொழிக்குத் தலைவி உறழ்ந்து கூறுமென்றார்.

இதன் பொருள்.

அணி(உ)முக மதியேய்ப்ப வம்மதியை நனியேய்க்கு
மணிமுக மாமழைநின் பின்னொப்பப் பின்னின்கண்

---

க. தொல். பொருளி. சூ. சச. இச்சூத்திரவுரையில் இவர் கூறியது, "அணிமுக............விடற்கு; இது தலைவன் உயர்மொழிக்குத் தலைவி உறழ்ந்து கூறியது. இது நகையாடிக் கூட்டத்தை விரும்பிக் கூறிய மொழிக்கு உறழ்ந்துகூறலின் வழுவாய் அவளோடு நகையாடிக் கூறலி னமைந்தது" என்பது.

உ. "திங்கண் முகிலோடுஞ் சேணிலங்கொண்டென; ........முகத்திற்கும் குழலுக்கும் திங்களும்புயலும் உவமை" சிலப். சஅ: ஙக.

விரிநுண்ணூல் சுற்றிய வீரித ழலரி
யரவுக்கண் ணணியுற ழாரன்மீன் றகையொப்ப
வருபடர் கண்டாரைச் செய்தாங் கியலும்
விரிந்தொலி *கூந்தலாய் கண்டை யெமக்குப்
பெரும்பொன் படுகுவை பண்டு

எ-து: நினது அழகினையுடைய முகம் மதியையொப்ப, மணிகள்விளங்கும் நின்பின்னின் மயிர் அம்முகத்துக்கொப்பாகியமதியை மிகவும்பொருந்துங் கருமையையுடைய மழையையொப்ப, அப்பின்னின் மயிர்க்கண்ணே கிடந்து அலர்ந்த நுண்ணிய நூலாற் கட்டின தேனல் ஈரமான இதழையுடைய பூக்கள் (க)பின்னுக்கொப்பாகிய கரும்பாம்பிடத்தே கிடந்து அதன் கரியநிறத்தோடே மாறுபடுகின்ற கார்த்திகையென்னும் மீனினது அழகையொப்ப, மனத்தான் ஒப்புக்கண்டவர்களை அவ்விடத்தே அரிய வருத்தத்தைச்செய்து போகின்ற பரந்து தழைத்த கூந்தலையுடையாய்! நீ என்னை எள்ளும் நிலைமையைக் கைவிட்டு யான் கூறுகின்றதனை மனத்தான் ஆராய்ந்து†பார்; நீ பண்டு எம் பொருட்டுப் பெரிய ‡பொன்னுண்டாவை ; எ-று.

இது முன் நீ இடைவிடாமற்(௨)கூடிய கூட்டத்தால், தோற்றப்பொலிவு எய்தினையெனக் கூறி, ஈண்டு நிகழ்ந்த அருமைசெய்தயர்த்ததனுற் பிறந்த வருத்தத்தை நீக்கிற்றும்; அஃது எமக்கு நீபெரிய பொன்கடவையென்பதோர் நகைப்பொருளுந் தோன்ற நின்றது.

அலரி பூவென்னுமாத்திரையாய் நின்றது. ஒப்பவென்னுஞ் செயவெனெச்ச உவமவுருபுகள் கண்டாரென்னுந்தொழிற் பெயரிற் றொழிலொடு ||முடிந்தன.

அ ஏஎ! எல்லா, மொழிவது கண்டை (௩)யிஃதொத்தன் றெப்பி
லெழுதி யிறுத்த பெரும்பொன் படுக
முழுவ துடையமோ ×யாம்

---

க. (அ) "கோளுண்ட திங்கண் முகத்தாள்" கம்ப. பூக்கொய். ௧௪. (ஆ) "பின்னும் வேணிவார் குழலெனுங் கரியபே ரரவம்" பிரபுலிங்க. மாயைபூசை. எ.

௨. "தேசு மொளியுந் திகழ நோக்கி" (பரி. ௧௨: ௨௧.) என்புழி 'தேசு - செயற்கை யழகு, ஒளி - கலவியால்வந்த நிறம்' என்று எழுதியிருக்கும் உரையும் இந்நூற்பக்கம் ௨௧௨: க-ஆங்குறிப்பில் இவ்விடத்திற்குப் பொருந்துவனவும் ஒப்புநோக்குக.

௩. (அ) இஃதொத்தன் கலி. ௬௦: ௯, ௬௧; க, ௬௨: க, அ௪: ௧அ. அஅ: ௧௦, ௧௦௩: ௩௧, ௭௩அ: ௧௦. (ஆ) இஃதொத்தன் என்பதை இடைச்சொல்

(பிரதிபேதம்) *கூந்தல்கண்டை †பாரது.நீ ‡பொன்னுண்டாவை என்றுன் என்றது முன்நீர் இடைவிடாமல் ||முடிந்தன ஏஎ இகழ்ச்சிக்குறிப்பு எல்லா, × யாம்உழுதாய் எ - து: இவன்,

எ-து: இவனொருத்தன் தன்னாற் றோற்றப்பொலிவு எய்தினேமெனக் கூறுகின்ற கூற்றைப் பாராயென நெஞ்சொடு * கூறி, நீ என் றோண்மேற் றொய்யிலெழுதிக் கனவுபோல ஒரொருகாற் றங்கின நிலையாலுண்டான† தோற்றப்பொலிவு உண்டாவேம்;அதுவன்றிஎம்(க) முலையால்நின்மார்பிடத்து இடைவிடாது உழுத நல் ‡வினையை உடையேமோ? அஃதின்றே; எ-று.

எள, இகழ்ச்சிக்குறிப்பு.

|| இது தொய்யிலெழுதி முடித்ததனாலுண்டான பொன்கடவேம்; அதுவன்றி நின்கீழ் உழுத நிலைமையையுடையேமோவென ஒரு நகைக் குறிப்புத் ÷தோன்றநின்றது.

கக உழுதாய்;

சுரும்பிமிர் பூங்கோதை யந்நல்லா யானின்
(உ)றிருந்திழை மென்றோ ளிழைத்தமற் றிஃதோ
கரும்பெல்லா நின்னுழ வன்றோ வொருங்கே
துகளறு வாண்முக மொப்ப மலர்ந்த
குவளையு நின்னுழ வன்றோ விகலி
முகைமாறு கொள்ளு மெயிற்று யிவையல்ல
வென்னுழுவாய் நீமற் றினி

எ-து: சுரும்புகள் ஒலிக்கின்ற பூவாற்செய்த கோதையினையுடைய அழகினையுடைய நல்லாய்! நீ × உழுதாய்; பின்னை இக்களவொழுக்கத்திலும் இந்தத்

---

ஈறுதிரிந்த தென்று கல்லாடரும் (தொல். இடைச். சூ. ௩.) (இ) இஃதொத்தன் என்பது இவனொருத்தனென 'இஃதென்ற அஃறிணைப்பொருளை உணர்த்திய சுட்டு உயர்திணைப்பொருளை யுணர்த்தி நின்றதென்று நச்சினார்க்கினியரும் (தொல்.கிளவி.சூ.௩எ) இவ்வாறே வேறுரை காரரும். (தொல். கிளவி. சூ. ௩அ.) கூறுவர். (ஈ) இந்நூற் பக்கம் ௩௭௬: உ. (ஆ) குறிப்பும் பார்க்க.

க. (அ) "பஞ்சி மேன்மிதிக் கிற்பனிக் குந்தகை, யஞ்சி லோதிய ரம்முலை நாஞ்சிலா, மஞ்சு தோய்வரை மார்ப மடுத்துழத், துஞ்ச லோவுந் தொழிலின னுயினன்" சூளா. சீயவதை. ௩௧. (ஆ) "முலையாலுழப் பட்டும்" சீவக. க௩அக.

உ. "திருந்திழை மென்றோள்" கலி. க௩க: உ.

(பிரதிபேதம்) * கூறினாள். அங்ஙனம் கூறி நீஎன். † தோற்றம்பொலிவு. ‡ வினையையாம் உடையேமோ அது எமக்குஇன்றே என்றாள்இது || இதனால் ÷தோன்றி நின்றது சுரும்பிவர்பூங் × உழுதாய்என்றதனான்நீகருத்திடைவிடாது............... ...காணென்றான் என்றதனாற்பயன்..............உழுதாயென்றும்நகைக்குறிப் பும்தோன்றிநின்றது மற்று. வினைமாற்று பின்னை,

திருந்தின இழையையுடைய மென்*றோளிலே யான் எழுதின கரும்பின் றோற்றப் பொலிவெல்லாம் நின் முலைகள் இடைவிடாமற் புணர்ந்ததனாலுண்டான பயனல்லவோ? அதனோடேகூடப் பழுதறுகின்ற ஒளியினையுடைய முகமானது குவளையோடு இகலிப் புணர்ச்சிதோறும் பொலிவு பெறும்படி பூத்த கண்களின் றோற்றப்பொலிவு நீ இடைவிடாமற் புணர்ந்ததனாலுள்ள பயனல்லவோ? (௧)முல்லைமுகையோடு மாறுபாடுகொள்ளும் எயிற்றினை † யுடையாய்! இத்தோற்றப்பொலிவுகளன்றி வேறே தோற்றப்பொலிவுண்டாக நீ புணர்வா ‡யென்றான்; எ-று.

என்றதனால், நின்கருத்து இடைவிடாது முயங்குதலேயாயின் இனி நீ இடைவிடாமல் முயங்கினைகாணென்றான். அதன் பயன் இனி வரைவேனென்றதாம். || இது நீ என்கீழ் உழுதாயென நகைக்குறிப்புத்தோன்ற நின்றது. மற்று, வினைமாற்று. குவளையென்றது, கண்ணை.

இதனால் அருமைசெய்தயர்த்ததுமில்லையென்றான். இதனால் நீ கரும்புங் குவளையுமன்றி வேறு என்னுழுவாயென ஒரு நகைக்குறிப்புத் ÷ தோன்றிற்று.

௧௯ எல்லா, நற்றோ ளிழைக்க கரும்புக்கு நீகூறு
முற்றெழி னீல மலரென வுற்ற
(௨)விரும்பீர் வடியன்ன வுண்கட்கு மெல்லாம்
பெருந்தோ ளுவந்தேன் பெரிது

எ-து: அதுசேட்ட தலைவி எடா! என் அவயவங்களில் தோற்றப்பொலிவு உண்டாகக் கூறாமல் என்றோள்களில் நீ எழுதப்பட்ட கரும்பிற்குத் தோற்றப் பொலிவுண்டென்று நீ கூறு; அதற்கு இயைந்தேன்; இனி அலர்ந்த செவ்வி குலைந்து முற்றின அழகையுடைய நீலமலரென்று பிறர் கூறும்படியாக

---

௧. (அ) "நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த, செறிமுறை" (ஆ) "முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன, பல்லும்"

௨. (அ) "இரும்பீர் வடிபொத்து மைவிளங்குங் கண்ணொளி" பரி. எ: ௫அ. (ஆ) "எஃகுறு, திருவேறு பெரியது வனப்பின், மாவி னறுவடி போலக்காண்டொறு, மேவ நண்டாமகிழ்நோக்குண்கண்" அகம் ௨௯. ௫-அ (இ) "மாவடு வகிரன்ன கண்ணாள்" திருவாச. அடைக்கலப். அ. (ஈ) "வடுப்பிளவனைய கண்ணாள்" சீவக. ௧௫௭௩. (உ) "சூதவடுப், பகுத்தே பதித்ததெனவென்னை வாழ்வித்த பாதகக்கண்" அம்பிகா. ௧௨௨. (ஊ) "வடுவகிரனைய வுண்கண்" (எ) "வடுவகிர் நெடுங்கண்" (ஏ) "வடுவகிர் நெடுங்கணார்" நைடத. நளன்றூது. ௧௩௩, சுயம்வரப். ௧௬அ, புனல். ௯. என்பனவையும் (ஐ) "இளமாங்காய் போழ்ந்தன்ன கண்" கலி. ௧௦அ: உஅ. என்பதும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

(பிரதிபேதம்)* தோளிலேஎழுதின † உடையாய் நீ இனித்தோற்றப் ‡ என்றான்குவளை || இதனால்நீ ÷ தோன்றநின்றது.

*வருத்த முற்ற (க)இரும்பு ஈர்வடியன்ன உண்கட்கும் மற்றுமுள்ள எல்லா உறுப்புக்கட்கும் பெரிய பசப்புண்டென்று சொல்லுவாயாக; †எ-று.

இதனால் அவன் அருமைசெய்தயர்த்திலேனென்றதற்கு அக்காலமெல்லாம் யான் வருத்தமுற்றேனென்றாளாயிற்று. கரும்பு அவயவமன்றி எழுதப்பட்டதாகலின், தோற்றப்பொலிவு உண்டென்றாள். கூட்டத்தாற் பொலிவு பெறாது இளமைப்பருவத்தும் இரும்புஈர்ந்த(உ)வடுவகிரை யொத்திருத்தலுள்ளதாகலின் இரும்பீர்வடியன்ன வுண்கட்குமென்றாள். இது கண்ணென்னும் பெயர்மாத்திரையாய் நின்றது. இதனால் அவன் அருமைசெய்தயர்த்திலேனென்றதனாகக் ‡கூறிய(௩)பொன்னிறத்தைப்பசப்பாக்கி அக்காலமெல்லாந் தான் வருந்தும்படி தன் நலத்தை அவன்கொண்டமை கூறினாளாயிற்று.

உ௩ நல்லாயிருளோய் கேள்;
ஈங்கே தலைப்படுவ னுண்டான் றலைப்பெயின்
வேந்துகொண் டன்ன பல

எ-து: அதுகேட்டதலைவன் நல்லாய்! ||இருளோயே! யான்கூறுகின்றதனைக் கேள்; அரசனைச் சேர்ந்து அவன் செல்வத்தை நுகர்ந்தானொருவன் அவன் வயத்தனாய் நின்று காரியத்தாற் றலைமைப்பாடு எய்துவனாயின். அவ்வேந்தன் அவனானுள்ள பயனைக்கொண்டாற் போன்ற பலபயனையும் யான் இவ்விடத்தே எய்துவேனென்றான்; எ-று.

---

க. (அ) "இரும்புமேல் விடாது நிற்பார்" (ஆ) "இரும்பு மேய்ந்தொழிந்த மிச்சில்வரை மார்பன்" (இ) "இரும்புண்டு மிகுத்த மார்பின்" (ஈ) "இரும்பெச்சிற் படுத்த மார்பின்" சீவக. ௭௮௨, ௧௭௬௦, ௨௨௮௪, ௨௩௫௨.

உ. (அ) "வடிக்கணிவை" (சேனாவரை. ௩௨)என்பதற்கு வடுவகிர்போலுங் கண்களும் இவையே என்று பொருள் கூறி 'வடியென்பது வடுவகிருக்கு ஓர் பெயர்' என்று எழுதியிருக்கும் பொருள்விளக்கம் இங்கே அறிதற்பாலது. இச்சொல் வடுவகிருக்கேயன்றி வடுவுக்கும்பெயராய்வழங்கும்; அதனை "நறுவடி மாவின் பைந்துணர் ருழக்கி" (கலி. ௪௧: ௧௪.) என்பதனானும் அகன்குறிப்பாலும். (ஆ) "கொக்கி னறுவடி விதிர்த்த" (பெரும்பாண். ௩௦௯) (இ) "நறுவடிமாவின்"(மலை. ௫௧௨.) என்பவற்றாலும் உணர்க வடுவகிரென்னும் பொருளில் வடுவென்பதும் வரும்.

௩. (அ) "பூப்போ லுண்கண் பொன்போர்த் தனவே" (ஆ) "மேனி பொன்போற் செய்யு மூர்கிழவோனே" ஐங். ௧௬, ௪௧. என்பவைகளும் (இ) "வயங்கு பொன்னின்ற" (சீவக. ௧௫௩௦) என்புழி, 'பொன் - பசப்பு' என்று எழுதியிருக்கும் விளக்கமும் இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * வருத்தமுற்றஉண்கட்கு † என்றான்இதனால் ‡ கூறியது பொன்னிறத்தை யொப்புப் போக்கியகாலமெல்லாம் || இளையோளே,

என்றது கூட்டத்தாற் செயற்கைநலம்பெற்ற நின்னை வரைந்துகொண்டு நின்னாற் பெறும் பயனெல்லாங் கொள்வேனென்றதாம். இனி அரசனுடைய பொருளை நுகர்ந்தவன் எதிர்ப்படில் அவ்வரசன் அவனிடத்து வருத்தமுறுத்திக் கொண்டாற்போன்ற பலபயன்களையும் யானும் இங்கே கொள்வேனென ஒரு நகைக்குறிப்புத்தோன்றி*நின்றது.

௨௬ ஆங்காக

எ-து: அதுகேட்ட தலைவி நீ அருமைசெய்தயர்த்ததனைப் பொய்யாக்கி அன்பின்றி நின்றதன்மை நீங்கி எம்மிடத்து அன்புடையையான காலத்து நீ கூறியவாறே ஆவதாகவென உடம்பட்டுக்கூறினாள்; எ-று.

அத்திற மல்லாக்கால் (க)வேங்கைவீ
முற்றெழில் கொண்ட சுணங்கணி பூணாகம்
பொய்த்தொருகா லெம்மை முயங்கினை சென்றீமோ
(உ)முத்தேர் முறுவலாய் நீபடும் பொன்னெல்லா
முத்தி யெறிந்து †விடற்கு.

---

க. (அ) "ஒதி, நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக், களிச்சுரும்பரற்றுஞ் சுணங்கிற் சுணங்கு பிதிர்ந்து,..............பூணகத் தொடுங்கிய வெம் முலை" சிறுபாண். உஉ - உ௬; (ஆ) "வேங்கை வென்ற சுணங்கின்" ஐங். ௩உ௪; (இ) "வேங்கை, யூழுறு நறுவீ கடுப்பக் கேழ்கொள, வாகத் தரும்பிய மாசறு சுணங்கின்" (ஈ) "பொன்வீ வேங்கைப் புது மலர்புரைய, நன்னிறத்தெழுந்த சுணங்கணி வனமுலை" அகம். கஎ௪; க௦ - கஉ, ௩கக: அ-௬; (உ) "நாகிள வேங்கையிற், கதிர்த்தொளி திகழு நுண்பல்சுணங்கின், மாக்கண்மலர்ந்தமுலையள்" புறம். ௩௫உ.கஉ-க௪; (ஊ) "குறயனைவேங்கைச் சுணங்கொடணங்கலர் கூட்டுபவோ" கோவையார். ௬௬.(எ)"வாரிரு புடையும் வீக்கி வடஞ்சுமந்தெழுந்து வேங்கை, யேரிருஞ் சுணங்கு சிந்தி யெழுகின்ற விளமென் கொங்கை" (ஏ) "நறவேங்கை யவிர்சுணங்கின் மடவார்" சூளா. சீய. க அ அ, கல்யாண. உ௦அ; (ஐ) "முலைத்தலைச் செஞ்சுணங்கு வேங்கை மலரோ, டலைத்தன வம்பொற்பிதிர்" யா - வி. சூ. அ௪. மேற்கோள். (ஒ) "அணங்கரவல்கு லரிவையரரத் தனமருப்புச், சுணங்கலர் வேங்கைத் துணர்மலை நாட" அம்பிகா. ௩௫.

உ. (அ) "முத்தேர் முறுவலாய்" என்பது அன்னவை பிறவுமென்பதனாற் கொள்ளப்படும்உவமையுணர்த்துஞ்சொற்களுள் ஏர்வந்ததென்பதற்கும் (தொல். உவமை.சூ. கக. இளம்) (ஆ) உருவுபற்றிய பண்புவமத்தின் கண் ஏர் வந்ததென்பதற்கும் (இ - வி. சூ. ௬௪உ.) மேற்கோள்.

(பிரதிபேதம்) * நின்றது அதுகேட்டதலைவி நீ அருமை..............உடம்பட்டுக்கூறினால் ஆங்காக. †விடற்கு எ-து. அதுகேட்டதலைவன்,

எ-து: அதுகேட்ட தலைவன் நீ இங்ஙனம் வெறுத்துக்கூறிய கூறுபாடு நீங்கியகாலத்து, முத்தையொக்கும் முறுவலையுடையாய்! நீ முன்பு உற்ற பசப்பெல்லாம் இனி ஒருகாலமும் உறாதபடி கழித்துவிடுதற்கு வேங்கைப்பூவினது முற்றின அழகைக்கொண்ட சுணங்கணிந்த பூணினையுடைய ஆகத்தாலே பொய்த்தாகிலும் ஒருகால் முயங்கினையாய்ச் செல்வாயென்றான்; எ-று.

பொன்னெல்லாம் உத்தியெறிந்துவிடவென்றதனால் வரைவேனென்றான்; இதனால் நீ கடவ பொன்னெல்லாம் பெற்றேனென்று கழித்துவிடுவேனென ஒரு நகைக்குறிப்புத் தோன்றிநின்றது.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை தோன்றிற்று.

இது தரவும் ஐஞ்சீரடுக்கித் தளைவிரவின குறுவெண்பாட்டும் தனிச்சொல்லும் நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடுக்கிய நெடுவெண்பாட்டும் * வழியசைபுணர்த்த சொற்சீரடியும் குறுவெண்பாட்டும் வெள்ளைச் சுரிதகமும் பெற்று வந்த கலிவெண்பாட்டு. இதனுள் நிரையீற்றியற்சீர்ப்பின்னர் நிரைமுதல் வெண்சீரும் நேர்முதல்வெண்சீரும் வருதலின் அணிமுக மதியேய்ப்ப வம் மதியைநனியேய்க்கு(?)மென்பதுகட்டளையன்றாயிற்று. "நிரைமுதல் வெண்சீர் வந்து நிரை †தட்பினும், வரைநிலை யின்றே யவ்வடிக் கென்ப"(க) என்பதனால் உணர்க. (உஅ)

(௬௫.) திருந்திழாய் கேளாய்நம் (உ)ஊர்க்கெல்லாஞ் சாலும்
பெருநகை யல்க னிகழ்ந்த தொருநிலையே
(௩)மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்கு
லந்துகிற் போர்வை யணிபெறத் தைஇநம்

---

(இ) "முத்தேர் முறுவலாய்" கலி. கூ௩: கஉ, கூஎ: கூ. (ஈ) "முத்தேர் முறுவலார்" இனியது. உ.

க. தொல். செய். சூ. கூ௦. இதனுரையிலும் "நிரையீற்றியற்சீர்ப் பின்னர் நிரைமுதல் வெண்சீரும் நேர்முதல்வெண்சீரும் முதல்வந்து பின்னர் வெண்சீரடுக்கிய வெண்டளை வரினும் சிறிது துள்ளலோசை பிறத்தலின் அதனைச் சீர்வகையடியென்றுணர்க" என்றுகூறி அதற்கு 'அணிமுக..............பின்னின்சண்' என்பதை மேற்கோள் காட்டியிருக்கிறார் இவ்வுரையாசிரியர்.

உ. "உலகத், துள்ளோர்க் கெல்லாம் பெருநகை யாகக், காமங் கைம்மிக வுறுதர" அகம். உ௫அ: கஉ-ச.

௩. "துஞ்சூர் யாமத்தும்" ஐங்குறு. க௩. (ஆ) "துஞ்சூர் யாமத்து" அகம். ௩கூ௦: கஉ.(இ)"மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா, வென்னல்ல தில்லை துணை" குறள். ககூஅ. (ஈ) "ஊர்மடி கங்குல்" சிலப். ககூ:

(பிரதிபேதம்) *வழியசைப் புணர்த்த †தட்டல்வரை,

௫ (௧)மின்சாயன் மார்பன் குறிநின்றேன் யானாகத்
தீரத் தறைந்த தலையுந்தன் கம்பலும்
காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநஞ்
சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்
தோழிநீ போற்றுதி யென்றி யவனாங்கே
௧0 பாரார்க் குறழாப் பணியாப் பொழுதன்றி
யாரிவ *ணின்றீ ரெனக்கூறிப் பையென
வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது
தையா றம்பலந் தின்றியோ வென்றுதன்
(௨)†பக்கழித்துக் கொண்டீ யெனத்தர லும் யாதொன்றும்
௧௫ (௩)வாய்வாளா னிற்பக் கடிதகன்று கைமாறிக்
கைப்படுக்கப் பட்டாய் சிறுமிநீ மற்றியா
னேனைப் பிசாசரு ளென்னை நலிதரி
னிவ்வூர்ப் பலிநீ பெறுஉமற் கொள்வே
னெனப் பலவுந் தாங்காது வாய்பாடி நிற்ப
௨0 முதுபார்ப்பா னஞ்சினனாத லறிந்தியா னெஞ்சா
தொருகை மணற்கொண்டு மேற்றூவக் கண்டே
கடிதரற்றிப் பூச றொடங்கினனாங்கே

---

௨0எ. (ஐ) "பழவிறல் மூதூர் பாயல்கொ ளடுநாள்" (ஊ) "ஊர்துஞ் சியாமத் தொருதனி யெழுந்து" மணி. எ: சுந, ௨0: கூச. (எ) "பல்லுயிர் மடிந்த நள்ளென் யாமத்து" (ஏ)"ஊர்மடி கங்குல்" பெருங். (௨) கூ: சஉ, (௩) ௨௩: ௫௬.

௧. (அ) "சாயலின் மார்பன்" (ஆ) "சாயலின் மார்பு" கலி. ச௨: ௩0, கூச: ௩அ. (இ) சாயலென்பதற்கு ஐம்பொறியால்நுகரும் மென்மையென்று பொருள் கூறி அம்மென்மை ஊற்றிற்கு வந்தமைக்கு 'சாயன் மார்பு' என்பதை மேற்கோள்காட்டி யிருத்தல் ஈண்டறிதற் பாலது. தொல். உரி. கு. உஎ. நச். சீவக. அ. உரை.

௨. "அவ்வரை யருந்த மந்தி பகர்வர், பக்கிற் றோன்று நாடன்" (ஐங்குறு. உஎக.) என்பதற்கு, 'அவ்வரையைநிறையத்தின்றமந்தி பண்டவாணிகர் பைபோலத்தோன்று நாடன்' என்றெழுதியிருக்கு முறையால் 'பக்கு' என்பது பையென்று துணியலாகும்.

௩. "வாய்வாளாது" கலி, ௫௬: உக. "வாய்வாளாநின்றாள்" பரி. ௨0:சகூ.

(பிரதிபேதம்) *நின்றுயெனக், † பைக்கழித்து.

யொடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்க
(௧)ணிரும்புலி கொண்மார் நிறுத்த வலையுளோ
உரு ரேதில் ஞ்றுநரி பட்டற்ருற் காதலன்
காட்சி யழுங்க நம்மூர்க் கெலாஅ
மாகுவமாகி விளைந்ததை யென்றுந்தன்
வாழ்க்கை *யதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்
†வீழ்க்கைப் பெருங்கருங் கூத்து.

இஃது இரவுக்குறி அலராமென்றஞ்சித் தலைவனை ‡ நீக்கி நிறுத்தக் கருதிய தோழி "அல்லகுறிப் படுதலு மவள்வயி னுரித்தே, யவன்குறி மயங்கிய வமைவொடு வரினே" என்னும் (௨) சூத்திரத்தான் அல்லகுறிப்படுதல் தனக்கும் உரித்தாகலின், அவன்செய்த ‖ குறியறிதற்குப் புறத்துச் சென்ற வழி, ஆண்டுப் பிறந்ததோர் செய்தியாக ஒரு பொய்யை(௩)நாடகவழக்கும் உலகியல்வழக்குமாகப்புனைந்துரைவகையாற்படைத்துக்கொண்டு,பிற்றை ஞான்று தலைவன் சிறைப்புறமாகத் தலைவிக்குக் கூறியது. இதனை, "இரந்து குறை யுற்ற கிழவனைத் தோழி, நிரம்ப நீக்கி, நிறுத்த லன்றியும், வாய்மை கூறலும் பொய்தலைப் பெய்தலு, நல்வகை யுடைய ÷நலத்திற் கூறியும், ×பல்வகை யானும் படைக்கவும் பெறுமே"(௪) =எனப்பொருளியற்சூத்திரத்துப் பொய்தலைப் பெய்தலையும் படைக்கவும்பெறுமென வழுவமைத்த வாற்றுற் கொள்க.

---

௧. (அ) "கூனுடை வெஞ்சிலைக் குன்ற வாணர்தா, மானுடன் புலிபட வளைத்த வார்வலை" சேது. கந்தமாதன. ௬0. என்பதும் (ஆ) "மலர்க், கருங்கண்ணி கங்கையின் மென்றூவி யன்னங் கருதிவைத்த, பெருங்கண்ணி யிறபுனற் 'காக்கைபட் டாக்குப் பிறர்நமதின், மருங் கண்ணி வந்தன ரென்பது கேட்டின்னு மாய்ந்திலமே" வேங்கைக் கோவை. உஉகூ. என்பதும் இங்கே அறிதற்பாலன.

௨. தொல். களவு. சூ. ௪௨.

௩. நாடக வழக்கென்பது உள்ளோனுவது இல்லோனுவது தலைவனுகச் சிலசெய்திகளைப் புனைந்துரைத்தல். இச்செய்திகளில் யாண்டும் எஞ்ஞான்றும் இல்லன கூருது உலகத்தோர்க்கு நன்மை பயத்தற்கு நல்லோர்க்குள்ளனவற்றை ஒழிந்தோர் அறிந்தொழுகுதல் அறமெனக் கருதி சிறிது இல்லனவுங் கூறப்படுமென்ப.

௪. தொல். பொருளி. சூ. ௪௩. இதனுரையில் இச்செய்யுளை வரைந்து கோடற்குப் பொய்யுரை படைத்ததற்கு இவரும், கலிவெண்பாட்டு

(பிரதிபேதம்) *வாட்கை, †வீட்கை. ‡நீங்கிநிறுத்த, ‖ குறிப்பறிதற்குப் ÷நபத்தில். × பல்வகையாகவும், =என வழுவமைத்த

## இதன் பொருள்.

திருந்தின இழையினையுடையாய்! தன்னுடைய மயிர் நீங்குதலாற் றட்டையான தலையினையும் படாத்தினையு முடையனாய்க் கருங் குட்டத்தாலே காலுங் கையுங் குறைந்து கடமைத்துறைப்பட்டு வந்து நந் தெருவினின்றும் போகாமல் ஒளித்துத்திரியும் முடமாகிய முதிர்ந்த பார்ப்பானைத் தோழி நீ பேணுவாயாகவென்று பலகாலுங் கூறுவை; அதனைப் பேணாதே (க)உயிர்ப்பன்மைகளெல்லாஞ் சேரத்துயில்கொண்டகங்குலிலே அழகிய துகிலாற் போர்த்த போர்வையை வாங்கி அழகுபெற உடுத்து நம்முடைய மென்மையினிய மார்பையுடையவன் செய்யுங் * குறியை உற்றுநின்றேனாக அப் பார்ப்பானாலே இராக்காலத்தே பெரிய நகைநிகழ்ந்தது; அந்நகை ஊர்க்கெல்லாங் கொண்டாடுதற்கு அமைந்திருக்கும்; அது நிகழ்ந்த படியைக் கேளாய்; அவன் அவ்விடத்தே குனிந்துபார்த்து மகளிர் நிற்குங் காலம் அன்றாக இவ்விடத்து நின்ற † நீர் யாரென்று முற்படக்கூறி, சிறியவளே! நீ என்னாலே அகப்படுத்திக்கொள்ளப்பட்டாயென்று கூறிப் பையெனப் பணிந்து வைக்கோலைக் கண்ட முதிய எருதுபோலே என்பக்கத்தினின்றும் போகாதே நின்று தையால்! தம்பலந் தின்பாயென்று தன் பாக்கிடும்பையைக் குலைத்து நீ எடுத்துக்கொள்ளென்று தந்த அளவிலே யான் அங்கு ஒருவார்த்தையும் வாய்திறந்து சொல்லேனாய் நிற்கையினாலே, தான் அஞ்சி முன்புகொண்டுநின்ற ஒழுக்கத்தைக் கைவிட்டுக் கடிதாக நீங்கிப் பின்னை யான் பெண்பாற்பசாசாகிய நின்னையொழிந்த ஆண்பாற் பசாசு; எனக்கு அருள்; அங்ஙனம் அருளாது என்னை வருத்துதலைச் செய்வையாயின் இவ்வூரில் நீ பெறும்(உ)பலியை நீ பெறாமல் யான் எடுத்துக்கொள்வே னென்று பல வார்த்தைகளையும் பேணாமல் வாயாற் சொல்லிநிற்க, முதியபார்ப்பான் என்னைப் பெண்பசாசென்று கருதி அஞ்சினாதலை யான் அறிந்து ஒருகையாலே மணலை அள்ளிக்கொண்டு ஒழியாது அவன்மேலே தூவக்கண்டு அவ்விடத்தேநின்று கடிதாகக் கதறி ஊர்க்கெல்லாங் கேட்பக் கூப்பிடத் தொடங்கினான்; எந்நாளுந் தன் தொழில் அவ்வாறு தனிநிற்கும் மகளிரைக்கண்டால், தன் காம வேட்கையாலே மேல்விழுதலாகக்கொண்ட முதியபார்ப்பானுடைய விரும்பு

---

இருபத்தொன்பதடியான்வந்ததற்குப் பேராசிரியரும் இவரும் (தொல். செய். சூ. ௧௬௦.) மேற்கோள்காட்டியுள்ளார்.

க. மன்பதை - உயிர்ப்பன்மை; புறம். ௭௧: ௧௭, ௨௧௦: ௧. இது மக்கட் பன்மை குறித்தும்வரும். இச்சொல் மன்பது என்றும் அருகிவழங்கும்.

உ. (அ) "பலிகொண்டு பெயரும் பாசம் போல" பதிற். ௭௧: ௨௩. (ஆ) "ஈற்றிளம் பெண்டி ராற்றுப் பாலகர், கடுஞ்சூன் மகளிர் நெடும்பு ணுற்றோர், தந்துயர் கெடுக்கு மந்திர மாக்கண், மன்றப் பேய்மகள் வந்து கைக் கொள்கென, நின்றெறி பலியி னெடுங்குர லோதையும்" மணி. ௭: ௮௧-௮௫.

(பிரதிபேதம்) * குறியை ஐயுற்று, † நீயாரென்று.

தலையுடைய பெரிய தண்ணிய நாடகம் நங் காதலர் நம்மைக் குறியிடத்து வந்து காணுங் காட்சி கெடும்படியாக நமக்கு வருத்தமாய் விளைந்தது; இது *விளைந்தபடி ஒன்றற்குங் கெடாத வலியினையும் வளைந்த வரியினையுந் தறு கண்மையினையுமுடைய புலியாலுள்ள பயனைக் கொள்ளுதற்கு நிறுத்தின வலையிலே அதன் றெழிற்கு வேறாகியதோர் குறுநரி அகப்பட்ட †தன்மைத் தாயிற்று; ஆதலால் இனி இரவிற் குறிநிகழ்ச்சியின்றுபோலுமென்றாள்; எ-று.

வீழ்க்கை வாழ்க்கைபோல் நின்றது. காரக்குறைந்தது அக்குச்சாரியை. ‡குறழாப் பாராவென்க.

வைகாண் முதுபகடெனவே காம இன்பம் நுகர்தலாற்றாமை காட்டி நின்றது. ஏனைப்பிசாசெனவே அவள் பெண்பாற்பசாசும் தான் ஆண்பாற் பசாசுமென்பது உணர்த்திற்று. அருளெனப் பிரிக்க. ஆங்கே || கடிதரற்றி நம் மூர்க்கெலாம் பூசறொடங்கினனென மாறுக.(க)தம்பலம், தாம்பூலமெனும்வட மொழித்திரிவு. தின்றியோ, ஓகாரம் அசை.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

இஃது ஒருபொருணுதலாது அடியிகந்து தளைவிரவி வந்த கலிவெண் பாட்டு. (உகூ)

÷குறிஞ்சிக்கலி முற்றும்.

---

க. தாம்பூல மென்பது (அ) "ஒருவர் வாயுமிழப்பட்ட தம்பல மொருவர் வாய்க்கொண்டு" சீவக. உஅஉக. என இவ்வாறே திரிந்து வருதலு மன்றி, (ஆ)''வெள்ளிலைத் தம்பல்கண்டார்''(இ)"வெள்ளடைத் தம்பற் குப்பை" (கம்ப. வரைக்காட்சி. சகூ, கார்கால. உஅ) என ஈறுகுறைந் தும் வரும்.

(பிரதிபேதம்) *விளைந்தபடி புலிகொண்மார் நிறுத்தவலையிற்குறுநரி பட்டதன்மைத்தாயிறறு, ஆதலால் இனிஇரவிற்குறிநிகழ்ச்சி இன்று போலுமென்றாள் ஒன்றற்கும், †தன் மைத்தாலென்க. வீழ்க்கை, ‡குழறுப்பாரா, || கடிந்தரற்றி நம். ÷ குறிஞ்சிக்கு நச்சினார்க்கினியான்செய்த வுரைமுடிந்தது நன்றாக.